Vol VIII 1930—1931



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

## எட்டாம் சிலம்பு

இதழாசிரிய கூட்டத் தலைவர்:

கா. சுப்பிரமணியபிள்ளை

எம்.ஏ., எம்.எல்., அட்வகேட்.

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

லிமிடெட்

சுக்கில௵ - பிரமோதூத௵

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tinnevelly & Madras



[Price Rs. 4-8

---

The Progressive Printers, 2/17 Coral Merchant Street, Madras.

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்டவைகள் இத்தொகுதியில் முடிவு பெறாது தொடர்வன.]

## படங்கள்



# அறிவிப்பு

இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் இதுகாறும் அச்சிடப் பெற்ற 130 நூல்களும், வேறு வெளிப்பதிப்பு நூல்களும் முறையே தொகுப்பாய்க் கிடைக்கப்பெறும். நூல் நிலையங்கட்கும், பரிசளிப்புக்கும், கல்லூரிகட்கும், வேண்டிய எல்லாவகைத் தமிழ் ஆங்கில நூல்களும் ஒரு சேரக் கிடைக்கப்பெறும்.

விரிவான புத்தக விலைப்பட்டி இனமாய் அனுப்பப்படும்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
6, பவளக்காரத்தெரு, சென்னை.

# செந்தமிழ்ச் செல்வி

## பைண்டுத் தொகுதிகள்

இது காறும் வெளிவந்த எட்டு ஆண்டு செல்வித் தொகுதிகள் அழகியனவாய்க் கட்டிடஞ் செய்யப்பட்டிருக்கின்றன.

இதன்கண் அரும் பெருந் தமிழ்ப் புலவர்களால் எழுதப்பட்ட தமிழ்இலக்கணம், இலக்கியம், மொழியாராய்ச்சி, சைவசமயம், திருமுறை, பிற சமயங்கள், புராணம், இதிகாசம், நுண்ணூல் (science) களின் சாரம், வியப்பு மொழிகள் (wits & Humours), உவகை மொழிகள், சீர்திருத்த அறிவுரைகள், அறவுரைகள் முதலியன வெளிவந்திருக்கின்றன. தமிழ்க் கல்வி விரும்புவார் இத்தொகுதிகளை ஒரு முறை கற்பின் சிறந்த புலமை எய்துவர் என்பது திண்ணம்.

நூல் நிலயங்கட்கு

இன்றியமையாது வேண்டப்படுவனவாகும்.

| | | |
|---|---|---|
| 1 முதல் 4 தொகுதிகள் தனித்தனி | விலை ரூ | 3—8—0 |
| 5 முதல் 8 ,, | விலை ரூ | 4—8—0 |
| 8 தொகுதிகளுக்கும் மொத்த | விலை ரூ | 28—0—0 |
| நமது கையொப்ப நண்பர்கட்கு | விலை ரூ | 26—0—0 |

---

செந்தமிழ்ச் செல்வி நிலயம்,
6, பவளக்காரத் தெரு, சென்னை.

ஓம

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு அ | மெய்கண்டான்யாண்டு-எாஎ தைத் திங்கள்<br>1930ஹு ஜனவரிமூ—பிப்ரவரிமூ | பரல் க |


திருச்சிற்றம்பலம்

துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்<br>
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே [தம்மை<br>
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் போய்போ<br>
அன்பர்க் கணியன காண்கவை யாற னடித்தலமே. [ருந்தா

அப்பர்.

உரை:

தோணித்தொழில், படகு ஓட்டுந் தொழில்; பூண்ட, மேற்கொண்ட; 'கரை முகத்து' என்பதில் 'முக' மெனுஞ் சொல் அத்துச் சாரியை யியைந்து ஏழாம் வேற்றுமைப் பொருண்மைக்கண் வந்தது. இன்னோ ரன்னவற்றை உருபெனலாகா தென்பது சேனாவரையர் கருத்து (தொல், வேற்றுமையியல், உக); முகத்தென்பது முகந்தென நின்றது, மெலித்தல். 'மாற்றயல்' ஆகுபெயராய் இரும்பு முதலான மாற்றற்ற பொருள்களைக் குறியாநின்றன; மாற்றுக்கு அயலவாகும் இரும்பு முத லானவை யென்று விரித்துரைக்க. என்றது மாசு மூடிய உயிர்களை. அன்றிக் குறைந்து மாற்று உள்ள செம்பு முதலான பொருள்களெனலு மாம்; அங்ஙனமாயின் 'செய்யும்' என்பதை முற்றெனக் கொள்ளல் வேண்டும்; முன்னதற்காயின் 'செய்யும் அன்பர்' என எச்சப் பொரு

ளுரைத்துக் கொள்க. பொன் பட்டு, பொன்னுகி; ஒழுக, ஒளி ஒழுக; அகரச் சுட்டுத் தொண்டர்தம்மைக் குறியாகின்றது. அணியன அண்மையிலுள்ள 'ஐயாறன் அடித்தலம் தேற்றும் திறத்தன: அன்பர்க்கு அணியன' வென்க.

களித்துக் கலந்ததோர் காதற் கசிவோடு காவிரிவாய்க்
குளித்துத்தொழுதுமுன் னின்றவிப் பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற னடித்தலமே.

'இப்பத்தரை,' இத்தகைய அன்பரை; முன், திருக்கோயில் முன்; திருவையாற்றிற் காவிரிக்கால் திருக்கோயிற்கு மிக அண்மையிலிருத்தல் கருதற்பாலது. கோது இல் செந்தேன், மலமயக்கம் அற்றதூய திருவருள். சுவையமுது, பண்புத்தொகை; அளித்து, மேலுலகப்பேறு அளித்து; பெருஞ் செல்வமாக்கும், பேரின்பப்பேறு விளக்குமென்பது.

திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்துச் செறுத்துடலை
வருத்திக் கடிமலர் வாளேடுத் தோச்சி மருங்குசென்று
விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட் டிகையிடுமால்
அருத்தித் தருந்தவ ரேத்துமை யாற னடித்தலமே.

'மலமயக்கங்களில் நெகிழ்ந்தோடுங் கருத்தினை அவ்வாறு செல்லவொட்டாமல் திருத்தி உறுதியாய் நிலைக்கச் செய்து, முன் நெகிழ்ந்து சென்றமைக்கு ஏதுவான உடம்பின் எழுச்சியைத் தவத்தால் வருத்தி ஓரளவில் அடக்கிக், காமன் உய்க்கும் மணமிக்க மலரம்புகளை யெடுத்து அப்புறமெறிந்து அருந்தவமுடையோர் அருள் வேண்டி வழுத்தும் ஐயாறன் அடித்தலங்கள் மருங்கு சென்று, மேம்பாட்டுக்கு முயலவல்ல; மெய்யடியார்கட்கு அவ் வடித்தலங்கள் மேலுலகம் அளிக்கு'மென்பது.

'உடலை வருத்திச் செறுத்து' என்க :செறுத்து அடக்கி; ஓச்சுதல், ஈண்டு அப்புறம் எறிந்து விடுதல்; இஃதிப் பொருட்டாதல், "செழியன் செண்டெடுத்துந்தியன் ரோச்சலும் (நகர, சுஎ) என்னுங் காஞ்சிப்புராணத்திருமொழியிற் காண்க. விருத்தி, மேம்பாடு; ஆவது முன்னேற்றமென்பது; உழத்தல், இடர்ப்பாடுகளிடையிற் புறங்காட்டாமல் முயலல்; பட்டிகை, இடம்; விண்பட்டிகை யென்றமையின் மேலுலக மெனப்பட்டது; ஆல், அசை; அருத்தித்தல், வேண்டல்.

பாடும் பறண்டையு மாந்தையு மார்ப்பப் பரந்துபல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கோட்டக் குறுநரிகள்
நீடும் குழல்செய்ய வைய நெளிய நிணப்பிணக்காட்
டாடுந் திருவடி காண்கவை யாற னடித்தலமே.

பறண்டை, ஒரு புள், 'பல்பேய் பரந்து' என மாற்றுக: குவிதல் கவிழ்ந்த கொட்டமுடைய குறுநரிகள் என்க. ஆவது குவிதல் இல்லை யான பொல்லாங்கு மிக்க குள்ளநரிகள், 'தனித்தனியாய்ச் சிதறி நின்ற குள்ள நரிக'ளென்பது. குள்ள நரிகள் நீண்ட ஒலியோடு ஊளையிடுதலை, ஈண்டு நாயனர் 'நீடுங்குழல் செய்ய' வென்னும் மங்கலச் சொற்களாற் கூறி மகிழ்ந்தார்.

நின்போ லமரர்கள் நீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட விலையு முகையு மெல்லாம்
அம்போ தெனக் கொள்ளு மையனை யாற னடித்தலமே.

'நின்போ லமரர்கள்' என்றது; மலரவன் கடலவன் முகிலவன் முத லானரை: சாய்த்து நிமிர்த்தலாவது வணங்கி யெழுதல். உழக்கி மிதித்து; இதற்கு இப்பொருள், "அண்ணலங் குன்றின்மேல் வருடை பாய்ந் துழக்கலின்" (விமலையா, கக) என்னுஞ் சீவகசிந்தாமணி யடிக்கு நச்சினார்க்கினிய ருரைத்த உரையினும் பெறப்படும். நான்முகன் முத லானர் தலை வணங்கி யெழுந்து உகுத்த நறுமலர்களை மிதித்துக் கசக்கு தலால் ஐயாற்றிறைவன் திருவடிகள் துலங்கித் தமது பவள நிறம் விள ங்கி ஒளிர்வன வென்க. பாங்கு, திருவருட் குறிப்பு; தேவர்கள் உகுக் கும் நறுமண மலர்களெல்லாம் அவ்வாறு மிதியுண்டு கசங்கிக் கழியத் திருவருட்பாங்கு அறியாத என் போலிகள் இடுவன இலையாயும் முகை யாயு மிருப்பினும் அவற்றை அந் நறுமண மலர்களினும் அழகிய மலர் களாக எம் இறைவன் இணையடிகள் ஏற்று அணிந்து கொள்ளும் என் பது. கொள்ளுமென்பதை முற்றென்று உரைத்தலே சிறப்பு.

இளவழகனர்.

---

# உரைமயக்கம்.

(திரு. எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளையவர்கள் பி. ஏ., எல். டி.)

சில குறளடிகளுக்குப் பெரிய உரைகாரரும் வலிந்து பொருள் கொள்வதாகத் தோன்றுகின்றது. நேரான பொருள் வெளிப்படையாயிருக்க அங்ஙனஞ் செய்தல் உலகவழக்கிலுள்ள சில சொற்றொடர்களின் கொடுமை யென்றே கூறலாம். நத்தம் என்ற மொழிக்கு நத்தை, ஊர், சங்கு, வாழை அனைய பொருள்கள் பலவிருக்க 'நந்து' என்பதன் திரிபு 'நத்து' என்றாகி அது 'அம்' சாரியை பெற்று 'நத்தம்' என்றாயிற்றென்றும் அதற்குப் பொருள் அக்கம், கேடு என்றும் உரைகாரர் கூறுவது வியப்பாயிருக்கின்றது. 'நத்தம் புறம் போக்கு' என்ற தொடரில் அம்மொழி ஊர் என்ற பொருளிலமைந்துளது.

(1) 'நத்தம்போற் கேடு முளதவாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது'

'ஆக்கம் போற்கேடு' என்பது பழமொழி. 'ஆக்கம்' என்ற பொருளை யமைத்தற்கு விகாரப்பட்ட இலக்கண வுரை எழுத நேர்ந்தது போலும். பரிமேலழகர் 'புகழுடம்பிற்கு ஆக்கமாகுங் கேடும்' புகழுடம்புளதாகுஞ் சாக்காடும் சதுரப்பாடுடையார்க் கல்லதில்லை' என்று பொருள் வரைந்துளர். 'புகழ்' என்ற அதிகாரத்தில் நுதலிய குறள் வருவதால் புகழ் வருவிக்கப்பட்டுள்ளது. நத்தை, சங்கு, வாழை என்ற பொருள்களை அமைத்து உரைவரையின் பொருள் எளிது விளங்குகின்றது. 'நண்டு, சிப்பி, வேய், கதலி நாசமுறுங் காலமது கொண்ட கருவழிக்கும்' என்றனர் ஆன்றோரும். இவற்றிற்கு அழிவு நேரிடும் பொழுது இவை கருகிக் கொள்ளும் கருவளர வளர இவை கேடுறும், முடிவில் அழியும். அது போன்று சதுரப்பாடுடைய, திறமை வாய்ந்த அறிவாளிகள், வீரர்கள், அன்னாருக்குப் புகழ்க்காதலுண்டாகும் பொழுது, புகழாகிய கருத்து மனத்திலுண்டாகும் பொழுது, உடற் சுகம் நாடாமல் நாட்பட

நாட்பட அதற்குக் கேடு வருவதையும் உன்னுமல் புகழ் வெற்றி மாய்கின்றனர், உயிர் துறக்கின்றனர். தற்காலத்தில் பெயர்களின் முன்னும் பின்னும் பட்டங் குறிக்கும் தலைவாலெழுத்துக்கள் போடுவதற்காக எத்துணைப் பெயர்கள் கருந்தனமிழந்தும், செம்மானமிழந்தும், அரிய உடல் நலம் விடுத்தும் உயர் பதவிகளிலமைந்துளார் பின் கை கட்டி வாய் பொத்திச் சேவகஞ் செய்கின்றனர். அந்தோ, பரிதாபம்.

புதல்வரைப் பெறுதல் அல்லது மக்கட் பேறு என்ற அதிகாரத்தில்

(2) 'தம் பொருளென்பதம் மக்கள் அவர்பொருள்
தத்தம் வினையால் வரும்'

என்ற குறளுக்குப் பரிமேலழகர்! தம் புதல்வரைத் தம் பொருளென்று சொல்லுவர் அறிந்தோர். அப்புதல்வர் செய்த பொருள் தம்மை நோக்கி அவர் செய்யும் நல் வினையானே தம் பால் வரும் ஆதலான்' என்று உரை பகர்ந்துளர். அன்றியும், பொருள் செய்த மக்களைப் பொருளென உபசரித்தார் என்றும், 'தத்தம் வினை' என்புழித் தொக்கு நின்ற ஆறும் வேற்றுமை 'முருகனது குறிஞ்சி நிலம்' 'என் புழிப்போல உரிமைப் பொருட்கண் வந்தது' என்றும் குறிப்புரை கூறியுளார். இவ்வுரையால் விளங்கும் பொருள்யாது? அறிந்தோரன்றி அறியாதாரும் பெற்றோரனைவரும், தம் பிள்ளைகளைத் தமக்குப் பொருளென்று கூறுதல் வழக்கம். ஏனெனில் அழியும் புறப்பொருளை அது அழியினும் மீண்டும் ஈட்டித்தருபவர் மக்களென்பர். அறிவும் பண்புமுடைய மக்களிருக்கும் வரை தாய் தந்தையர்கட்கு வறுமை வாராது, புகழ் வருமென்பது திண்ணம். 'அவர் பொருள்' எவர் பொருள்? இத் தொடருக்குப் பொருளென்னை? பெற்றோருக்குப் பொருள் மக்கள் ஆதலின் 'அவர் பொருள்' என்பதற்கு அப்பெற்றோர் பொருள், அதாவது அம் மக்களேயாகும். அன்றெனில் 'அம்மக்களுக்கு மக்கள்' எனக் கொள்ளலாம். 'தத்தம் வினை' யென்பது 'தம் தம் வினை'யின் திரிபு. 'தம்' என்பது யாரைக் குறிக்கின்றது? அறிந்தோர், பெற்றோர?

அல்லது 'மக்களா;? 'வினை' என்பது 'தற்காலத்திற் செய்யும் வினை (தொழிலா) யா? பழவினை, ஊழ்வினைமுற்பிறப்பில் செய்த வினையா? இந்துக்களாகிய நாம் பல பிறப்பு உண்டென்றும் ஒவ்வொரு பிறப்பும் பழ வினைப் பயனென்றும் கொள்வது இயல்பு. "முயற்சி திருவினையாக்கும்'. முயற்சிக்குப் பயனுளது. நல்வினைக்கு நற்பயனும் தீவினைக்குத் தீய பயனும் விளையும். அவரை போட்டால் துவரை முளையாதென்னுமுலகம். பெற்றோர்கள் செய்த நல்வினையால் அறிவும் பண்பு மிக்க மக்கள் பிறக்கின்றனர் என்பது ஒரு சாரார் கொள்கை. மக்களுக்கு மக்கள் பிறப்பதுவும் அங்ஙனமே. அவையன்றி அவர்களாக்கும் பொருள் தம்மை நோக்கிச் செய்யும் அறத்தால் வருவ தென்பதெங்ஙனம்? தவங்கிடந்து பெற்ற பிள்ளை என்பதால் பெற்றோர்களின் அறச் செயல் பிறங்கும். குறளாசிரியரே 'இவன் தந்தையென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்' என்று கூறியுளார். நோன்மை விரதம் பூண்டு பெற்ற பிள்ளைகள் புகழுடைய பிள்ளைகளாவர். பெற்றோருக்குப் பிள்ளைகளும், பிள்ளைகளுக்கு மக்களும் தவங்கிடந்து வரின் பெருஞ் செல்வங்களென மதிக்கப்படுவர். அறச் செயல்களின்றியமையாது நன்மக்கட் பேறு என்பது வலியுறுத்தப் படுகின்றதன்றோ?

(3) தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

இதனுக்குப் பரிமேலழகர் 'பிறதெய்வந் தொழாது தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று(தொழுது) துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும், தெய்வந்தானேவல் செய்யு மென்பதாம், என்று விரிவுரை கூறியுளார்: இதனாற் கற்புடையவளதாற்றல் கூறப்பட்டது. வேறு உரைகாரர் 'திருநாட்களில் வெளிவரும் தெய்வ வுருவங்களைத் தொழ மாட்டாள் என்பதனால் கருத்தினிற் கடவுளைத் தொழுவாள் என்பது வெளிப்படை' என்பர். அந்தரங்கத்தில் தெய்வ பக்தியுடைய மனைவி தன்கொண்டானுடன் பள்ளியிற் றுயின்றுவிழித்தவுடன் கணவ னலங்கருதி அவனுக்காகவும் ஆதியை வணங்கி அதன்

பின் அமளியினின்று வெளிவருவாள். அவள் தான் மனத்தின் கன் வணங்குந் தெய்வத்தை ஏவ அது அவள் விழையும் மழையைப் பெய்விக்கின்றது. கற்பினாற்றலை விளக்குவான் வேண்டி 'நாஸ்திக முடையளாயினும்' என்ற மயக்கத்தையுண்டு பண்ணுவதால் பயனென்னை ? காதலனும் காதலியும் சமவுறவிற்குரியரலரோ ? அடிமைத் தன்மை மனைவிக் குரிமை யாகுமா ? இருவரும் ஒத்தவுரிமையராம் ஒற்றுமைப்பட்டு இல்லறமாகிய வான் சகடத்தை ஈர்த்தாலன்றி அது செல்லாது தெற்றி நிற்கும் என்றனர். அறிஞரும் எதிர்மறைப் பொருட் சொற்கள் நேர் பொருளும் பெறுமல்லவோ? (தொழாஅள்—தொழாதவள், தொழுகின்றவள்)

"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்"

பரிமேலழகர் உரை வருமாறு. 'இவர் நடுவு நிலைமையுடையர், இவர் நடுவு நிலைமையிலரெனும் விசேடம் அவரவருடைய நன் மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும் தக்கார்க் கெச்சமுண்டாதலும் தகவிலார்க்கில்லையாதலும் ஒரு தலையாகலின்' இரு திறத்தாரையும் அறிதற்கு அவை குறியாயின.' இவண் எச்சம்' என்பதற்கு 'மக்கள்' என்று காட்டப் பட்டுளது. மககளுண்மையும் இன்மையும் அவரவர் தகைமை தகைமையின்மையைப் பொறுத்துளதா என்பது ஆராயற் பாலது. புண்ணிய வசத்தால் நல்லபிள்ளைகளைப் பெறுகின்றனரா? பாவதண்டனை நிமித்தம் நன்மக்கட்பெருக்கு நிகழ்கின்றதா ? மேற்கூறிய குறள் நடுவு நிலைமையென்ற அதிகாரத்தில் வருவதால் தக்கா ரென்பதற்கு நடுவு நிலைமையுடையரெனப் பொருள் கொண்டது வெளிப்படை. தகவிலராகிய நடுவுநிலைமையிலாருக்கு நன்மக்களின்மையா மக்களேயின்மையா என்பதும் ஆயத்தக்கது. நடுவு நிலைமையுடையாருக்கு நன் மக்களும் நடுவு நிலைமையிலாருக்குப் புன்மக்களு முளராதலின் அதனல் இரு திறத்தாரின் வேறுபாடு விளங்கும். எச்சம் என்ற மொழிக்கு உண்மை, பிள்ளை, பறவை, மலம், குறை, காரியம், யாகம்

எனப் பல பொருள்களுள. உண்மை என்ற பொருளுரைப்பின் அதுவும் பொருந்து மன்றோ ? உண்மை, மெய், சத்தியம் ஒரு பொருட்பன்மொழி, காரியம் என்பதும் பொருத்தமுடையதே. அவரவர் செய் காரியத்தால் ஒருவருடைய பெருமையும் சிறுமையுந் தோன்றுமன்றோ ? யாகம், வேள்வி என்ற பொருள்களும் அமையும். அவரவர் செய்கின்ற வேள்வி, விருந்தோம்பலாதிய செய்கைகளால் பிரித்தறியப்படும். குறை என்பது இவண் பொருந்துமாவெனின் அவரவர் விட்டகுறை தொட்டகுறையாலறியலாகு மெனலாம். நாயனரும்,

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீ எச்சம் போலத் தெறும்'

என்ற குறளில் இருபொருட்பட்ட எச்சும் வந்துள்ளது, தொழில், பகை என்ற இரண்டினது குறையும் ஆராயுங்கால் (அவிந்த பின் நின்ற) நெருப்பின் குறையைப் போல (வளர்ந்து) கெடுக்கும்' என்பது முதலிய குறளின் பொழிப்பாகும்.

ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு'

என்றகுறளில் எச்சம் என்பது (ஊணும் உடையும்) இவை ஒழிந்த பிறவும் என்ற பொருளில் வருகின்றது. அது போன்றே

'எச்ச மென்றென் றெண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படா தவன்'

அதாவது ஒருவராலும் விரும்பப்படாத செல்வமுடையவன் தான் இறந்த பிறகு ஒழிந்து நிற்பதாக எதைக் கருதுவானே, என்ற குறளிலும் எச்சமென்பதற்கு மீந்தது என்ற பொருள் வருவதைக் காணலாம்.

'வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்'

இக்குறளில் எச்சம் என்பதற்குப் பயன், பிள்ளை என்ற இருபொருளும் கொள்ளுமாறு வழங்கப்பட்டிருக்கிறது.

'செப்பமுடையவ னாக்கம் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

இதன்கண் 'எச்சம்' தன்வழி நின்றார், சந்ததி என்ற பொருளிலமைந்துளது.

(5) பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

பரிமேலழகர் 'ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்ய வல்லவனாயின் அவன் பிறவறங்களைச் செய்யாமையே செய்யாமையே நன்று. அடுக்கிரண்டனுள் முன்னது இடைவிடாமை மேற்று, ஏனையது துணிவின் மேற்று. பலவறங்களையுமேற்கொண்டு செய்தற் கருமையால் சில தவறிற் குற்றப்படுதலின், அவை யெல்லாவற்றின் பயனையுந் தானே தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நன்றென்பார், செய்யாமை செய்யாமை நன்றென்றார். இதனை இவ்வாறன்றிப் பொய்யாமையைப் பொய்யாமற் செய்யின் பிறவறஞ் செய்கை நன்றெனப் பொழிப்பாக்கி, பொய் கூறிற் பிறவறஞ் செய்கை நன்றாகாதென்பது அதனாற் போந்த பொருளாக்கி உரைப்பாருமுளர். பிறவறங்களெல்லாந்தரும் பயனைத் தானே தருமாற்றலுடைத்தென மறுமைப்பயனது மிகுதி(வாய்மை அதிகாரத்தில் 5,6,7, ஆகிய) இவை மூன்று பாட்டாலுங் கூறப்பட்டது' என்று தம்முரையையும் வேறொருவுரையையும் தந்துளார்:

இக்குறளில் வரும் அடுக்குச் சொற்களின் பொருள் முறையே இடைவிடாமை துணிவு பற்றியதா, வேறுளதா என்று ஆய்தல் அறிவாகும். மனஞ் சான்றாகப் பொய்யுரையா திருத்தல் மனமாரப் பொய்யிலாத ஒழுக்கத்தை உண்டு பண்ணக் கூடுமாயின் அதுவே அறமாகும். அவ்வறமொன்றுமே எல்லா நன்மையையும் விளைவிக்கக்கூடியது ஆதலின் அதுவொழிந்த

பொருள் செல்வஞ் செய்யாமையும், இன்பஞ் செய்யாமையும் நலம். முன்னடுக்கு மொழி பொய்யா மொழியையும், பொய்யா வொழுக்கத்தையும் குறிக்கும். பின்னடுக்கு எண் மேற்றதாய், பொருள், இன்பம் இவை இரண்டினையும் ஆக்குவது அவசிய மில்லை இவையிரண்டினையும் அவ்வொருவறமே (பொய்ம்மை நினை யாமை யுரையாமை ஒழுகாமையே) செய்ய வல்லது ஆனது பற்றி வீண்முயற்சி வேண்டற்பாற்றன்று; இவையிரண்டினையும் தேடமுயலாதிருத்தல் நலம் என்ற பொருளைத் தருமெனின் அது பொருத்தமிலதோ? நன்று என்ற முடிவுச் சொல் இப் பொருட்கோட்கு இடையூறுயிருக்கின்றது.

'பிற' என்பதற்குப் பொருளும் இன்பமுமென்று கொள்ளு தல் அறத்துப்பாலுக்குப் பொருத்தமாமோ வென்றையுறுவாரு முளர். அதற்கு அறத்திற்கு எதிரிடையான மறமென்று கொள் ளலாம். பொய்யாமை செய்யாமை, அதாவது, பொய் கூறுதல் மறச் செயலாகும். அந்த மறச்செயலைச் செய்யாமை நன்று எனின் பொருளுதைப்பில்லை. ஆகையால் பொய்யாமனம் பொய்யா வொழுக்கத்தைத் தருமாயின் பொய் கூறுதலாகிய மறச் செயலைச் செய்யா திருத்தல் நன்று என்பது நுதலிய குற ளின் பொழிப்பாகும்.

---

## தலைமைப் பேருரை *

அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறும்
குறியது உடைத்தாய், வேதாகமங்களின் குறியிறந்து, அங்கு
அறிவினில் அருளால் மன்னி, அம்மையோடு அப்பனுகி
செறிவொழி யாதுநின்ற சிவன்அடி சென்னி வைப்பாம்.

சிவஞானசித்தியார்.

சைவ சித்தாந்தச் செந்நெறியில் நின்றொழுகும் பெரியோர் களே! உங்கள் திருவடிகட்கு வணக்கம் எல்லாம் வல்ல இறை

---

* இது அத்துக்குடி சைவசித்தாந்த சபை 46-வது ஆண்டு விழா வில் அவைத் தலைமைபூண்ட சித்தாந்த ஆசிரியர் திரு. ம. பாலசுப்பிர மணிய முதலியார் B.A., B.L. அவர்களால் நிகழ்த்தப்பட்டது.

வன் திருவருள், சென்ற ஆண்டு என்னை இங்கு வரச்செய்ததுமன்றி, இரண்டு சொற்பொழிவுகளும் நிகழ்த்தும்படி செய்தது. இவ்வாண்டு இப் பேரவைக்குத் தலைமை பூணுமாறு யாதேனுமறியா வெறுந்துரும்பனேற்கு அத்திருவருள் கட்டளையிட்டதை உன்னுந்தோறும் உன்னுந்தோறும் என் மனம் பெரிதும் வியப்புறுகின்றது. அத் திருவருள் வழி நின்ற இச்சபையினர் என்னைத் தலைமை வகிப்பதற்குத் தேர்ந்தெடுத்ததின் காரணம் என்னே என்னே என்று பன்முறை நான் ஆராய்ந்ததுண்டு. அவ்வாராய்ச்சியில் போதிய அறிவு, ஆற்றல், அநுபவம் முதலிய தகுதிகள் எவையும் என்பாலில்லை என்பது புலனாயிற்று. சமயத்துறையில் பணி செயல் வேண்டுமென்று என்னை ஆட்டுவிக்கும் பேரவாவுக்குப் பற்றுக்கோடாகவுள்ள சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் எனக்குள்ள தொடர்பே இச் சபையினர் என்மீது வைத்துள்ள கருணைக்குக் காரணம் என்று ஒருவாறு முடிவு செய்தேன். இம்முடிவு எனக்குப் பெரு மகிழ்ச்சியை விளைவிக்கின்றது. ஏனெனில் இச்சபையினர் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் மீது வைத்துள்ள நம்பிக்கையும் அச்சமாஜம் இயற்றிவரும் அரும்பணிகட்குத் தாங்கள் துணையாக விருக்க முனைந்து வரும் ஆர்வத்தையும் இஃது இனிது குறிக்கின்றது. ஆகவே எனக்குச் செய்த நன்றியைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்துக்குச் செய்ததாகவே கருதுகின்றேன். அச்சமாஜத்துக்கே அர்ப்பணம் செய்கின்றேன்.

எனது அருமைச் சகோதரி சகோதரர்களே! உங்கள் சபையில் நிமித்த காரணராக நின்று எல்லாக் காரியங்களையும் நடத்தி வரும் சைவப் பெரியார் எனக்குப் பெரியதொரு கட்டளையைக் கொடுத்துள்ளார், அஃதாவது, எனது தலைமைப் பேருரை, சைவ சித்தாந்தத்தின் உண்மையையும், ஒப்புயர்வற்ற சிறப்பையும், இக்காலத்துக்கேற்றவாறு விளக்குவதோடு, அவைகளை இச் செந்தமிழ் நாட்டினரும், பிறரும் ஐயந்திரிபற உணர்வதற்குரிய வழிகளையும் தெளிவாக உரைக்கவேண்டுமென்பதே. கற்றுத் துறை போய பேரறிஞர்கட்கே இது பெருஞ் சுமைபாகத் தோன்றுமாயின் யானோ இச் சுமையைத் தாங்க வல்லேன்? உங்

களுக்குத் தெரியாத பொருள் ஏதோ புதியதாய்ச் சொல்லி விடப் போகிறேன் என்று நீங்கள் எண்ணினல் இறுதியில் ஏமாற்றமடைவீர்களென்று இப்போதே எச்சரிக்கை செய்கிறேன். உங்களுக்குத் தெரிந்தவற்றையே யான் அறிந்த மட்டில் தொகுத்துக் கூற எண்ணியுள்ளேன்.

மேல்நாட்டு அறிவியல் நூலுணர்ச்சியும் அதன் வழி வந்த விஷய சுகம் என்ற இன்ப நுகர்ச்சியும் உச்சியிற் பழுத்துள்ள இக்காலத்தில், கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் என்று தாயுமானருடன் கதறவேண்டி யிருக்கிறது. ஏனெனில் கற்றும் அறிவில்லாதவர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. கல்லாத பேர்கள் உள்ளத்தில் சமயவுணர்ச்சி வேரூன்றி யிருக்கிறது. எத்தகைய புறச் சமயப் புயல்களும் அவ் வாணிவேரை அறுக்க இயலவில்லை. ஆனல் ஆங்கிலக் கல்வி பயின்ற நிபுணர்கள் உள்ளத்தில் இச்சமயவுணர்ச்சி என்ற வேர் ஒரங்குல மேனும் பதிந்துளதோ என்பதே ஐயத்துக்கிடமாகின்றது. அவ்வாறு பதிந்திருப்பினும் புறச் சமயத்தாக்குதல் அவ் வேரையறுத்தெறிந்து அந்த நிபுணர்களை வீழ்த்துகின்றது. இக்காலத்தில் ஆங்கிலம் கற்றவர்கள் உலக இன்ப நுகர்ச்சியில் தலை சிறந்து விளங்குவதால் ஏனைய மக்கள் பல வழிகளிலும் அவர்களைப் பின் பற்றுகிறார்கள். சமயத் துறையிலும் அவர்களைப் பின்பற்றத் தொடங்கினல் நம் தமிழ் மக்கள் சமூகத்துக்கே பெருங்கேடு விளையுமென்பதில் எட்டுணை ஐயமுமில்லை. ஆகையால் ஆங்கிலம் கற்றவர்கள் கூறும் கடாக்களை ஆராய்ந்து அவர்கள் உள்ளத்தில் சைவ சித்தாந்தத்தை நிலைபெறச் செய்தால் இத்தமிழ் நாட்டுக்குப் பெரும் பயன் கைகூடுமென்று நம்பி இரண்டொரு விஷயங்கள் சொல்லலாம் என்று எண்ணியுள்ளோம்.

முதலாவதாக ஆங்கிலக்கல்வி பயின்றோர் பலர் கூறுவது யாதெனில் தங்களுக்குச் சமயம் என்ற ஒன்றே தேவை யில்லை என்பது. நல்லொழுக்க வாழ்க்கைக்குக் கடவுள் உண்டென்ற சமயம் இன்றியமையாதது என்று நாகரிக முள்ள நாட்டுப் பேர

றிஞர்களெல்லாம் ஒருங்கே உரைக்கின்றார்கள். வாழ்க்கைக்கு ஆன்ம விலக்கணமா யிருப்பது சமயம் ("Religion is the spiritual quality of life") என்று ஒரு மேல் நாட்டு அறிஞர் கூறுகின்றார். மக்கள் வாழ்க்கைக்குச் செம்பொருள்களாகவுள் ளவற்றைக் காத்து அதிகரிப்பதே சமயம் ("Religion is the systematic human effort to conserve and enhance social values") என்கிறார் மற்றொரு ஆங்கில ஆசிரியர். இவ்வாறே பற்பலர் கூறுகிறார்கள். இவைகளை யெல்லாம் பெருக்கி விளக்கப்போதின்மைக்கு வருந்துகின்றேன்.

ஒவ்வொரு சமயமும், அதையனுட்டிக்கும் மக்களால், செம்பொருள்களாகத் தங்கள் வாழ்க்கையில் போற்றப்படும் பொருள்களை யெல்லாம் சேகரித்து, உயர்த்திக் காத்து வந்திருப்பதைச் சரித்திர வாயிலாக அறியலாம். மிகத் தாழ்ந்த நிலைமையிலுள்ள ஆஸ்திரேலியா கண்டத்துப் பழங்குடி மக்கள் அனுட்டிக்கும் இன்டிசியூமா கிரியைகளில் ("intichiuma religious cermonies") கூட பழமை பேணல், ஒத்துழைத்தல், அன்பர்பணி என்ற செம்பொருள்கள் காக்கப்பட்டு வருகின்றன, (tradition of past culture. cooperation and social service) என்று ஆசிரியர் மலினௌஸ்கி (Mr. B. Malinowski) கூறுகின்றார். ஆப்பிரிக்கா கண்டத்து பகாண்டா (Bagandas) மக்கள் சமயச் சடங்குகளில் மேற்கூறிய செம்பொருள்களே யன்றித் தன்னலம் கருதாமை, அரசனாணைவழி நிற்றல், தேசபக்தி முதலிய செம்பொருள்களும் காக்கப்படுவதாக சரித்திரம் கூறுகிறது, (conservation of self sacrifice, loyalty, obedience, patriotism and other social values). இவ்வாறே நெடுக ஆராய்ந்து சென்று, இப்போது மிகச் சிறந்த நாகரீக முடையவர்களாகக் கருதப்படும் மேல் நாட்டினர் சமய மாகிய கிறிஸ்தவத்தின் செம்பொருள் யாதெனவினவில், அச் சமய வல்லுநர்கள் அறவொழுக்கத்திலும் உளம் பழுத்தலே செம்பொருள் என்றும், அது இயேசு கிறிஸ்துவின் ஆன்மா மூலம்தான் கிடைக்குமென்றும் கூறுகின்றனர். (Ethicalin wardness is the Supreme Christian value; it can be gained through the personality of jesus

Christ) கிறிஸ்துவ சமய வல்லுனர்கள் இவ்வற வொழுக்கத்தில் உளம் பழுத்தல் என்ற செம்பொருளை மூன்று பாகு பாடுகளாக் கியும் விளக்குகிறார்கள். முதலாவதாகக் கிறிஸ்தவம் இல்லற வாழ்க்கையின் தூய்மையையும், ஆணும் பெண்ணும் உறவாடும் தூய்மையையும் வற்புறுத்துகிறதாம். (Christianity has stood emphatically for the purification of home life and of the relations between the sexes) இரண்டாவ தாக ஆருயிர்ப்பணியை வற்புறுத்துகிறதாம். (Christianity stands for humanitarianism). மூன்றாவதாகச் சமுகச் சம தர்ம நீதியை வற்புறுத்துகிறதாம் (Christianity stands for social justice). இத்தகைய செம்பொருளை வாழ்க்கையில் அமைத்துக் கொள்வதற்குக் கிறிஸ்தவ சமயம் ஒரே உபாயம் கூறுகின்றது. அஃதியாதோவெனில் இயேசு கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரத்தைக் கொண்டு வாழ்க்கையை நடத்துதல் (Christianity sets before men the matchless personality of Jesus Christ, a personality wherefrom they may gain a fuller appreciation of social values and realise them in their lives) சுருங்கச் சொல்லில் ஒரு அடியார் சரிதை யைக்கொண்டு ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கையின் ஒழுக லாற்றைத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும் என்பதே. மேல் நாட்டு முறையில் ஆராய்ச்சி செய்து கிறிஸ்தவ சமயத்தின் மேன்மையைக் கூறும் மேல் நாட்டு ஆசிரியர் வில்லியம் கெல்லி ரைட் (William Kelley Wright) என்பவர் இயற்றிய நூல் ஒன்றில் இவைகளெல்லாம் உள்ளன.

எனதருமைச் சகோதரி சகோதரர்களே ! இங்கே சற்றுக் கவனியுங்கள். நாகரிகம் முதிர்ந்த கிறிஸ்து சமயச் செம்பொருள் களையும் அவைகளைக் கைப்பற்றும் சாதன முறையையும் நமது சைவ சித்தாந்த சமயத்தோடு ஒப்பிட்டுப் பாருங்கள். அற வொழுக்கத்தில் உளம் பழுத்தல் (i. e. ethical inwardness) நமது சமயத்தில் செம்பொருளாகக் காணப்பட வில்லையா ? இல்லறத் தூய்மையும் ஆண் பெண் தூய்மையும் நமது சமயத்

தில் வற்புறுத்தப் படவில்லையா? ஆருயிர்ப் பணி ஓம்பப் படவில்லையா? சமநீதி ஓதப் படவில்லையா? இச் செம்பொருள்களை வாழ்க்கையில் அமைத்துக்கொள்ள ஒரு அடியவரல்ல, அறுபத்து மூன்று அடியவர்களின் திவ்விய சரித்திரங்கள் எடுத்துக் காட்டாக விளங்க வில்லையா? அன்றியும் சாதனங்கள் எத்தனை வகையாகப் படிப்படியாக அமைக்கப்பட்டுள்ளன? செம்பொருள்கள் எத்தனை நூற்றுக் கணக்காக நுணுகி நுணுகிப் போதிக்கப்பட்டுள்ளன? பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன், என நான்கு கூறுகவுள்ள நமது சமய நூல்களில் என்ன போதிக்கப்படவில்லை? இவைகளைக் கற்க நமக்கு அறிவில்லையா, அவகாசமில்லையா, அல்லது ஆவல்தானில்லையா? உடுக்கும் உடைக்காக நாட்டுச் சரக்கை விடுத்துக் கப்பல் சரக்கை வாங்குகிறோம். உண்ணும் உணவிலும் பசும்பாலை விடுத்து கிளாக்ஸோ (Glaxo), லாக்டோஜன் (Lactogen), ஹார்லிக்ஸ் பால் (Horlicks Malted Milk) முதலிய உணவுப் பொருள்களை நமது குழந்தைகட்குத் தருகிறோம். பெப்பர் மிண்டு (Pep permint), சாக்லேட் (Chocolate), பிஸ்கோத் (Biscuit), டீ (Tea), காபி (Coffee), கொக்கோ (Cocoa) முதலிய கப்பல் சரக்குகளை உட்கொள்ளுகிறோம். நமது நடையுடை பாவனைகளையும் கிராப், நெக்டை, காலர், நிஜார், சாக்ஸ், பூட்ஸ் என்ற மேல் நாட்டு முறையில் வைத்திருக்கிறோம். இவைகளெல்லாம் போதாவென்று சமயத்துறையிலுமா நமது கொள்கைகளையும் செம்பொருள்களையும் கைவிட்டு விட்டுக் கப்பற் சரக்கைக் கைக்கொள்ள வேண்டும்?

மெய்யன்பர்களே! சற்று யோசித்துப் பாருங்கள். திருக்குறளோடு பற்பல அற நூல்களும் சமய நூல்களும் ஞான வொழுக்க நூல்களும் சேர்ந்த ஒரு சமயம் சிறந்ததா? திருக்குறளில் சில அதிகாரங்களை மட்டும் போதிக்கும் ஒரு சமயம் சிறந்ததா? கவனியுங்கள். எதைக் கைவிடுவது சுயமரியாதையின்மை, எதைக் கைப்பற்றுவது சுயமரியாதை என்பதைக் கூறவும் வேண்டுமோ?

எனதருமைச் சகோதரி சகோதரர்களே ! இக்காலத்தின் கொடுமையால், கடவுள் ஒருவர் உண்டென்பதையும் நிரூபிக்க வேண்டி யிருக்கிறது. இதற்கு உந்தி களிறு உயர் போதம் சித்தியில் கூறப்பட்ட பிரமாணங்களைக் கூறினால் இந்நாளில் செவி மடுப்பார் இல்லை; மேல் நாட்டுப் பிரமாணங்களைக் கூறியே உங்களை மகிழ்விக்கிறேன். இவைகளை ஆங்கில ஆசிரியர்கள் எழு பிரமாணங்களாக்குகின்றனர்.

1. The Teleological and Evolutionary Argument—இயற்கை யமைப்புப் பிரமாணம்.

2. The Religious Experience Argument—சுவாநுபவப் பிரமாணம்.

3. The Moral Argument—அறநெறிப் பிரமாணம்.

4. The Idealistic Argument—குறிக் கொள்வகைப் பிரமாணம்.

5. The pragmatic Argument—தொழிற் படுமுறைப் பிரமாணம்

6. The Realistic Argument—புறத்தோற்ற வுண்மைப் பிரமாணம்.

7. The Right to Believe Argument—நம்பிக்கை யுரிமைப் பிரமாணம். என எழுவகையாக இவைகள் விளக்கப்படடுள்ளன. இப்பிரமாணங்களைச் செவ்வனே ஓதி யுணர்கின்றவர்கள் கடவுள் இல்லை யென்று மறந்தும் புறங்கூறுர்.

தத்துவ நூலாசிரியர்களெல்லாம் கடவுள் படைப்பனைத்தையும் (universe) அகம் (subjective), புறம் (objective) என்று இரண்டாகப் பிரித்திருக்கிறுர்கள். எங்கும் உள்ள கடவுள் இவ்விரண்டு பகுதிகளிலும் இருக்கிறுர். அகத்தில் கடவுளின் தன்மை, கடவுள் உறவு முதலியவற்றைத் தெளிவிப்பது

சமயம் (religion). புறத்தில் கடவுளின் தன்மை, உறவு முதலியவற்றைத் தெரிவிப்பது தத்துவ சாத்திரம் (philosophy). அகத்தில் கடவுள் திருவிளையாடல்களைக் கூறுவது ஒரு கொள்கை (the doctrine of immanence). புறத்தில் கடவுள் அற்புதத் தனியரசைக் கூறுவது ஒரு கொள்கை (the doctrine of transcendence). இவ்விரு கொள்கைகளும் ஒன்றை யொன்று தழுவியும் இரண்டும் சேர்ந்தவிடத்து முழுவுண்மையை விளக்கியும் நிற்கின்றன. "விறகிற்றீயினன் பாலிற்படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" என்பன போன்ற வாக்குகள் அகக் கொள்கையைத் (the doctrine of immanence) தெரிவிக்கும். "இருநிலனும் விசும்பும் விண்ணும் ஏழுலகும் கடந்து அண்டத்தப்பால் நின்ற பேரொளியை" என்பன போன்ற வாக்குகள் புறக்கொள்கையைத் தெரிவிக்கும் (the doctrine of transcendence.)

மெய்யன்பர்களே! திரிச்சிராப்பள்ளியில் அர்ச். யோசேப்புக் கல்லூரியைச் சேர்ந்த சில ஆசிரியன்மார் இந்திய கத்தோலிக் உண்மைச் சங்கம் (the Indian Catholic Truth Society) என்று ஒன்றை நிறுவி இந்துக்கள் சமயத்திலுள்ள குளறுபடைகளை (self contradictions) விளக்குவதாகச் சில நூல்கள் எழுதி யுள்ளார். அவைகளுள் "A Tangled Web" அல்லது "சிக்குற்ற குளறு படை" என்பது ஒரு நூலின் பெயர். அதை இயற்றியவர் நமது சமயக் கொள்கைகளைக் குளறுபடையாகவே காண்கிறார். உதாரணமாக மேற்கண்ட அகப் புறக் கொள்கைகள் இரண்டும் ஒரு சமயத்தில் ஒருங்கே உண்மையாக யிருத்தல் முடியாது என்கிறார். அப்படிக் கிருந்தால் அது குளறு படையாம். நண்பர்களே! சற்று யோசித்துப் பாருங்கள்! அகம், புறம் என்ற இரண்டு பாகுபாடுகள் உள்ள வரைக்கும், கடவுள் எங்கு முள்ளவரென்று ஒப்புக்கொள்ளும் வரைக்கும் இவ்விரு கொள்கைகளும் (The doctrines of immanence and transcendence) ஒருங்கே இருத்தல் அவசியம். இக் கொள்கைகள் ஒன்றற்கொன்று மாறுபட்டன வல்ல, ஒன்றை யொன்று தழுவியுள்ளன (not contradictory but

supplemental) இரண்டும் சேர்ந்ததே முழுவுண்மை. இஃதே போல் அவ்வாசிரியர் (Theism, Pantheism and Creationism, Personal God and Impersonal God) அதாவது கடவுள், இயற்கைக் கடவுள், படைப்புக் கடவுள், சகுணக் கடவுள், நிற்குணக் கடவுள் என்பன போன்ற ஒன்றற்கொன்று மாறுபட்ட கொள்கைகள் இந்துக்கள் சமயத்திலிருப்பதால் அச் சமயம் பொய் யென்று வாய் கூசாமல் சொல்லுகிறுர். என்னே இவர் மதியின்மை! ஒன்றற்கொன்று பற்றிய உறவைக் கொண்டல்லவோ இக் கொள்கைகளெல்லாம் மாறு பட்டனபோல் காணப் படுகின்றன. (apparent contradictions involved necessarily in describing the Infinite Absolute in terms of finite relationships) இயற்கைக்கு நிமித்தக் காரணுக வுள்ள கடவுளே இயற்கை யென்றே கொள்வதில் என்ன இழுக்கு இருக்கின்றது? ஷேக்ஸ்பியர் மகா கவியைப் படித்தறிவதென்ருல் அவர் முகத்தையும் உறுப்புக்களையும் படித்தறிவதோ? அவரியற்றிய இயற்கையைப் படித்தறிவதோ? அவர் இயற்றிய இயற்கையைப் படித்தவர்கள் அவரைப் படித்ததாகத் தானே கூறுகின்றனர்? ஆகவே "உலகெலா மாகி வேருய் உடனுமாய் ஒளியாய்" என்ற வாக்கில் அடங்கியுள்ள வியாபகன் (pantheism), அதீதன் (transcendence), அந்தர்யாமி (immanence) என்ற கொள்கைகள் தம்முள் மாறுபட்டன வல்லவே? இவைகளில் ஒன்றைமட்டும் கொள்வது மதியின்மையா? அன்றி மூன்றையும் ஒருங்கே கொள்வது மதியன்மையா? இத்தகைய ஆசிரியன்மார் பிரசாரத்தை மெய்யென்று நம்பி நமது கொள்கைகளைப் புறங்கூறுவோர் எத்தனை பேர்? உண்மை உணராமல் ஏமாற்ற மடைவோர், புறச்சமயம் புகுவோர் ஒவ்வொராண்டுக்கு எத்தனை ஆயிரம்? போதின்மையால் ஏனையவற்றை விரிவஞ்சி விளக்காது விடுத்தலை நீங்கள் பொறுப்பீர்கள்.

(தொடரும்)

---

# கருமை.

(திரு-கபசம் எழுதியது)

எ-ம் சிலம்பு ௯௯௬-ம் பக்கத் தொடர்ச்சி

சாவா மருந்துண்டு ஓவாவின்ப நுகர வெண்ணிய தேவர்கள், பாற்கடல் கடையப் பாம்பை நாணுகப் பூட்டினர். கயிற்றை வளைத்துக் கட்டுவதுபோல் பாம்பையும் ஒரு திண்ணிய பொருளைச் சுற்றிப் பூட்டலாமென்ற கருத்தால் மாத்திரமிப் புராண மெழுந்ததன்று. உலகவின்பங்களை யிடைவிடாது மென்மேலும் விழைகின்றவர், நச்சரவுடன் பயிலும் பேதை மாக்களை யொத்தவரென்பதற் கிதைவிட வேறு சான்று தேட வேண்டியதில்லை. கருத்தைப் புலன்கள் செல்லும் வழியிற் செலுத்தி வாழ்க்கை நடாத்துவோர் நாளாவட்டத்தில் உயிருணர்ச்சியற்று இருளால் விழுங்கப்படுவரென்பதை யுயிரறிவுள்ளோர் மறுத்துரையார். மண்ணிலும் பெண்ணிலு மாழ்தல் நஞ்சு போலுயிரைக் கொல்லும். ஐம்புல நுகர்ச்சி பெறுதலைத் தவிர்த்தும் பிறிதொரு பயன் மக்கட் பிறவிக்கில்லை யென்று கூறும் உலோகாயதக் கொள்கையை யொத்த வொரு நினைவால் தேவர்கள் தூண்டப்பெற்றுப் பாற்கடல் கடையு முயற்சியி லீடுபட்டனரென்று கூறுதல் தகுதியோ வன்றோ வென்பதை நேயர்கள் முடித்துக்கொள்க. திருவாசகங் கூறிய பெரியார்க்கு உலோகாயதக் கொள்கையின் பயன் பாம்பின் கடுவேபோல் தோன்றிற்று.

'உலோகாயதன் எனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபேதத்த கடுவிட மெய்தி'

(போற்றித் திருவகவல்).

போகத்திலழுந்தி இருள் வாய்ப்பட்டுத் தவிக்கு முயிர்களின் நிலைக்கிரங்கி,

"பாலுண்குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண்மருந்து தாயுண்டாங்கு"

(சிதம்பர மும்மணிக் கோவை)

இறைவன் ஆன்மாக்களின் வினைப்பயனையுண்ணுதலே, பாற்கடல் கடைந்த ஞான்று பாம்புமிழ்ந்த நஞ்சைச் சிவனார் விழுங்கியதாகும். முக்கணனார் கழுத்திற் கருமை தோன்றிய தன் கருத்திதனாலறியப்படும்.

பாற்கடல் கடையப் பாம்பை நாணாகப் பூட்டியதற்கு வேறு காரணமுமுண்டு போலும். பாம்பே போகத்திற்கோ, ரறிகுறியாகு மென்பதற்குச் சான்றுண்டு. சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப் பாடலில், புகார் நகரத்தின் பெருமை சாற்றப் புகுந்த இளங்கோவடிகள்.

நாக நீணகரொடு நாகநாடதனொடு
போக நீள் புகழ் மன்னும் புகார் நகரது தன்னின்,

என்றார். "சுவர்க்கம் பவணமென்னும் இவற்றிற்குள்ள புகழும் போகமும் நிலைபெற்ற அப்புகாரென்னு நகரின்கண்" என்பது இதற்கு அடியார்க்கு நல்லார் கூறுமுரை. நாகநாடு=பவணம்= நாகலோகம். "சுவர்க்கத்திலும் நாகலோகம் போகத்திற் சிறந்ததென்பது சைன நூற்றுணிபு" என்றொரு குறிப்பு மிதற்கிருக்கிறது.

சைன நூலோர்க்கேயன்றிப் பிறர்க்கு மித்தகைய கொள்கை வுண்டென்பது காட்டுதும். துரியோதனன் வீமனுக்கு நஞ்சூட்டியாற்றி லெறிந்தகாலை யவன் நீரிலாழ்ந்து நாகலோக மடைந்தானென்றும், அங்குள்ள பாம்புகளவனைக் கடித்த போது, முன்னுண்ட நஞ்சினுரத்தாற் பாம்புகளின் விடமவனைச் சற்றுந் துன்புறச் செய்யவில்லை யென்றும், இது கண்டு வியப்பெய்திய வரவங்கள் தங்களரசன் முன்னவனைக் கொணர, வாசுகியெனு மவ்வரசன் வீமனுக்கமுதூட்டி யளிசெய்தானென்றும் பாரதம் பகர்கின்றது.

வாசுகி தனக்கிவன் வரவு ணர்த்தலு
மாசுகன் மதலையென் றறிந்து மற்றவன்
றேசுறு பொற்குடந் தெரிந்து பத்தினா
லேசறு மமுதெலா மினிதி னூட்டினான்.

வில்லிபாரதம் - ஆதிபர்வம் 15.

பாற்கடல் கடைந்தபோது மத்தாக நின்ற மலையைச்சுற்றி நாணாகப் பூட்டப்பட்ட வாசுகி பாம்புலக மன்ன னென்பதோடு அவனிடங் குடங்குடமா யமிர்தமிருந்த தென்பது மீண்டறியக் கிடக்கின்றது. இவ்வமிர்தம் உடலுரத்தைக் கொடுக்குந் தன் மையதென்றுஞ் சொல்லியுளது. வீமன் பல்லாயிர யானைகளின் வலிபெற்று வையகத்திற்குத் திரும்பினன். இங்ஙனம் கடவு மிழ்ந்த வாசுகிபால், போகந்தருமமிர்தம் வந்து கூடிற்று. இஃ தன்றிப் புராணங்களிலெல்லாம் வையகத்து மக்கள் நாக கன் னிகைகளை மணந்து நலம்பெற்ற செய்தி சொல்லப்படுகின்றது. புராணத்துக்கு வெளியே, பத்துப்பாட்டு ளொன்றாகிய பெரும் பாணாற்றுப்படையுரையில், "நாகபட்டினத்துச் சோழன் பிலத் துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாக கன்னிகையைப் புணர்ந்த காலத்து, அவள் யான் பெற்ற புதல்வனை என் செய் வேனென்ற பொழுது, தொண்டையை அடையாளமாகக் காட்டி, கடலிலேவிட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரச வுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின், திரையனென்று பெயர் பெற்ற கதை கூறினர்" என்ற ஒரு வர லாறு காணப்படுகிறது.

'அல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையற் படர்குவி ராயின்'

(பெரும்பாணாற்றுப்படை. 36—37)

என வருமடிகளுக்குரை காணுங்கால் நச்சினார்க்கினியர் மேற் குறித்த கதையைக் கூறுகின்றார். பாம்பு போகத்திற் சிறிகுறியா மென்பதற்கிவை சான்றாகும்.

இனி அரவே கருமையின் பாற்படுமென்பதை விளக்குதும். பாம்புகள் பொதுவாகப் பொந்துகளிலுங் குழிகளிலு மறைந்து வாழும் விலங்குகளாவதாலும், பெரும்பாலு மிரவில் வெளிவந் திரைதேடி யோடித் திரிவதாலும், உயிர்குடிக்கும் நஞ்சையுள் வைத்திருப்பதாலும், பார்ப்பதற்கும் நினைப்பதற்கும் வெறுப்பை யு மச்சத்தையும் விளைப்பதாலும், இவை இருளை யொட்டியவை

யென்று சொல்வது பொருந்தும். புராணத்தின்படி பாம்புகள் கீழுலகத்தில் வாழ்வனவாம். மேலுலகம், வையகம், கீழுலக மென்றுலகங்களை மூன்றாக வகுத்து, இவற்றில் முறையே, தேவர், மக்கள், நரகரென்ற வுயர்திணைப்பகுதியுயிர்கள் வதிகின்றன வென்று நவில்வது இலக்கணமரபு. நரகர் என்ற மொழிக்கும் நாகர் என்ற சொல்லுக்கு மெழுத்து வடிவத்திலும் பொருளிலு மொற்றுமை மிகுதி யென்பதுற்றுணரத்தக்கது. நரகர் வேறு, நாகர் வேறென்று கொள்வோமாயினும், இருவருங் கீழுலகத் தினரே யென்பதை மறுக்கவியலாது. மேலுலக மொளி நிறைந் தது; கீழுலக மிருள் செறிந்ததென்றறைய எவருந் தடைசெய் யார். ஒளியளிக்கு ஞாயிறுந்திங்களு மீனினங்களும் விண்ணில் விளங்குகின்றமையால் மேலுலக மொளிக் குறைவிடமாகும். இதனால்,நிலத்தின், கீழிருக்குமோருலக மிருள் நிறைந்ததாயிருக்கு மென்பது சொல்லாமலே பெறப்படும். மேலே புராணத்திலிருந் தும் பிறவற்றிலிருந்துங் கூறியவற்றுள் நீரின் வழியாகவும் பிலத்துவாரவழியாகவும் மக்கள் நாகலோகத்தை யடைந்தன ரென்று சொல்லப்படுவதால் கீழுலகமே நாகலோகமென்று கரு தப்பட்ட தென்பதற் கையமின்று. இக்கருத்தேபற்றி யிந்நானி லம் ஆதிசேடன் எனும் பாம்பால் தாங்கப்படுகிறதென்ற கொள் கை யெழுந்ததுபோலும். நரகமென்றவோரிடம் பூமிக்குக் கீழி ருப்பதாகக் கூறப்படுவதை இக்கட்டுரையின் தொடக்கத்தி லாராய்ந்தோம். அது கருமையின் பாற்படுவதுபோல் நாக லோகமும் படுமென்பதோடு இதை விடுக்குதும்.

பாம்பால் தேவர்களுக்கு விளைந்த தீங்கைப்பற்றிப் பேசிய பின், கிறித்தவநூலாகிய விவிலியத்திற் பாம்பைப்பற்றிக் கூறி யிருக்குமொன்று நினைவிற்கு வருகிறது. உலகந்தோன்றிய பின் கடவுளொருமகனையு மவனுக்குத் துணையாக வொரு மகளையும் படைத்து, மிகவெழில் வாய்ந்த தோட்ட மொன்றிலிருவரையும் வைத்து, அத்தோட்டத்திலுள்ள கனிதரு மரங்கள் பலவற்று ளொன்றன் பழத்தை மாத்திர முண்ணாதிருக்கக் கட்டளையிட்ட னர். முதன் மகனு மகளுமிக் கட்டளை கடவாது சிலகாலம் வாழ்ந்தபின்னர், இவர்களை நன்னெறியினின்றும் விலக்கித் தீ

நெறியிற் செலுத்தவேண்டுமென்று நன்மைக்குப் பகைவனாகிய சாத்தான் (Satan) நினைந்தான். தன் கருத்தை முற்றுவிக்கும் பொருட்டிவன் பாம்புருவங்கொண்டு தோட்டத்திலிருந்த மகள் முன் தோன்றி, "கடவுளால் விலக்கப்பட்ட கனியை நீ உண்ணு வையாயின் நல்லறிவு பெற்றுக் கடவுள் போலாவாய்" என்று நயம் பெற உரைபகர, நஞ்சு தலைக்கேறியவர்போல் மயக்க முற்ற வப்பெண், கனியைத் தானுண்டதோடமையாது தன் கணவனுக்கு மூட்டினாள். இவ்வகையில் முதலினுலகிற் றீமை பிறந்ததென்று விவிலியம் விளம்புகிறது. இதுவும் புராண முறையைத் தழுவிய வரலாறென்பது வெளிப்படை.

இது கொண்டு கிறித்தவ நூல்களிலெல்லாம் பாம்பென்பது தீமைக்கோரடையாளமாக நிற்கின்றது. பாம்பின் நஞ்சு உதிரத்தினூறி யுடலிலேறுவதுபோல் தீய நினைவுகளு மூயிரைப்பற்றியதைக் கறைப்படுத்து மென்றவுண்மையை மேற்காட்டிய வரலாற்றிற் காணலாம். கடுவாலறிவு மயங்கும், தீமையா லுயிர் மயங்கும். மயக்கந்தருவதாகிய நஞ்சை யொளித்து வைத்திருக்கும் பாம்பை உயிரினொளியை மழுங்கச்செய்யுந் தீமைக் கடையாளமாகக்கொண்டதிலோ ரியைபுண்டென்று தெரிகிறது. முதன் மகளினுளத்திலுள்ள ஒளியை யவித்தமை பற்றிப் பாம்பை இருளின்பாற்படுத்துவது மேனாட்டு வழக்கம். இக்கருத்து நமது நாட்டிலுமுண்டு.

வாசுகி நஞ்சைக் கக்கிய பின் தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக்கடந்து, அமிர்தமெடுத்து, அதை யவுணர்கட்களியாது தாமே யுண்ணலாயினர். இதையறிந்த வரக்க ரிருவர் தேவருருக்கொண் டமிர்தத்தை வாங்கியுண்ணுந்தருவாயில், ஞாயிறுந் திங்களு மிச்செய்தியை, அகப்பை பற்றியமிர்தத்தைப் பங்கிட்ட திருமாலுக்குரைப்ப, அவரரக்க ரிருவரையும் புடைத்தனர். ஆயினு மமிர்தமவர்களுடலிற் புகுந்ததன் பயனாக அவர்கள் மாண்டிலர். ஞாயிறுந்திங்களுந் தமக்கிழைத்த பெருந்தீங்கை நினைந்து தணியாச் சினங்கொண்ட வரக்கரிருவரு மிராகுகேதெனும் பாம்புகளாக மாறி வானிலெழுந்து, தம்மைக் காட்டிக்கொடுத்த பகலொளியையு மிரவொளியையும் பிடித்து விழுங்குந்தொழிலி

விறங்கினர். வெங்கதிருந் தண்மதியும் வடுப்படுதலை (கிரகணம்) விளக்கு மிச்செய்தியை நம்புகின்றவர் இன்னு முளர். ஈண்டு அவுணரே யரவங்களாக மாறி ஒளிக்கு முரண்பட்டு நிற்கின்றனர். அவுணரோடு அரவுங் கருமையைச் சார்ந்து தோன்றுதல் காண்க.

(தொடரும்)

---

# புறநானூறும் பழந்தமிழ் நாடும்

[இளவழகனுர்]

நூல்வரலாறு:

நம் தமிழ் மக்கள் செய்த அருந்தவப் பேற்ருல், அரிய சில பழந்தமிழ் நூல்கள் பண்டைக் காலத்தில் தோன்றி, இப்போதும் நின்று நமது தமிழகத்தில் உலவுகின்றன. அவற்றைக் காணுந்தொறும், ஆராயுந்தொறும், ஆராய்ந்து அரும் பேருண்மைகளை உணருந்தொறும், அவ்வுணர்ச்சியை இடையிடையே உன்னுந்தொறும் பேருணர்ச்சியும் பெருவியப்பும் பேரின்பமும் ஒருங்கே தோன்றுகின்றன. பண்டைக்காலமென்று இங்கே கூறப்படுவது தமிழகத்திற் பண்டு நிகழ்ந்த சங்க காலத்தையேயாம்; இச்சங்க காலம் என்பது, தலைச்சங்கம் எழுந்த நாள் தொட்டுக் கடைச்சங்கம் இற்ற நாள் ஈருக முச்சங்கங்கள் நடைபெற்ற தனித்தமிழ்க் காலமாகும். தலைச்சங்க காலத்துக்கு முன் நம் தமிழகம் எவ்வாறிருந்த தென்பதை அறிந்து கொள்ளுதற்கு நமக்குச் சான்றுகள் கிடையா. தலைச் சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என இம்முச்சங்கங்களும் நிகழ்ந்த மொத்தக்காலம் கி. மு. முப்பத்தொன்பதாம் நூற்ருண்டின் நடுவு துவங்கிக் கி. பி. இரண்டாம் நூற்ருண்டின் நடுவுகாறுஞ் சென்ற நாலாயிரம் ஆண்டுகளாகும்; சங்க காலமான இந்நாலாயிரம் ஆண்டுகளே தமிழகத்தில் தமிழுக்கு ஆக்கமான நற்காலமாய் விளங்கா நின்றது. அதன் பின் ஒரு முந்நூறு ஆண்டுகள் புத்த காலமாகவும், அதற்கடுத்த முந்நூறு

ஆண்டுகள் சமணகாலமாகவும், பின் அறுநூறு ஆண்டுகள் சைவ வைணவ காலமாகவும், நானூறு ஆண்டுகள் பார்ப்பன காலமாகவும், கடைசி இருநூறு ஆண்டுகள், ஆங்கிலகாலமாகவும் காலம் மாறி விட்டது. சங்க காலத்தை அடுத்து நிகழ்ந்த புத்த காலம் முதல் இந்நாளளவில் நம் கண்ணெதிரிற் காணப்படும் ஆங்கில காலம் ஈறாக ஒன்றன்பின் ஒன்றாய் அடுத்தடுத்து வந்த காலங்களிலெல்லாம் நம் அருமைச் செந்தமிழணங்கு மாறி மாறிப் பட்ட அரும்பாடு மிகவும் அஞ்சத்தக்கதாகவே இருக்கின்றது. சஙக காலத்தில் அருமை பெருமையாய்ப் பாராட்டப்பட்ட நம் ஆருயிர்த் தமிழ்த்தாய் இக்காலங்களில், நினைத்தாலும் நெஞ்சம் நீராகும் வகையாய், எண்ணினாலும் எண்ணம் ஏங்கியழியும்படி யாய்ச் சீர் மாறுபட்டு நிலைகுலைவதாயிற்று; இவ்வளவிற்கும் ஏது நம் செந்தமிழ் மக்கட்குள்ள கவலையின்மையேயாகும்.

நம் அருமைத் தமிழ்மொழியின் உண்மையியல்பையையும், பெருமையையும், அதன் கொள்கை நுட்பங்களையும் வாழ்வையும் நாம் அறிந்து கொள்ள வேண்டுமானால், மேற் காட்டிய ஆங்கில காலம், பார்ப்பன காலம், சைவ வைணவகாலம், சமணகாலம், புத்தகாலம் என்னும் ஏணிப்படிகளைக் கடந்து மீதேறிச் சங்க காலம் என்னும் அரண்மனை மேடையுள் நுழைதல் வேண்டும். அங்குச்சென்றால் மட்டுமே நம் சீரிய செந்தமிழன்னையின் திரு வோலக்கத்தைக் காணப்பெறலாம். பளபளவென்று பளிங்கு போல் நிழலாடி மின்னும் சங்கப்புலவர்களின் உள்ளமென்னும் மணியிருக்கையின் மீது, ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பி யம் என்னும் பொன் நாணில் எண்ண எண்ண இன்பவூற்றெடுக் கும் 'பத்துப்பாட்டு' 'எட்டுத்தொகை' 'பதினென் கீழ்க்கணக்கு களின்' செந்தமிழ்ப்பாட்டுகள் என்னும் முத்தும் பவளமும் சங்குமான ஒளி மணிகள் கோத்தெடுக்கப்பட்ட மணிமாலையணி களை அணிந்து அமர்ந்து, மங்கைப்பருவ மெய்திய மங்கல வாழ் வுடன் அங்கு அரசிளங்குமரியாய் நம் தனிப் பெருந் தமிழ்த் தேவி வீற்றிருப்பாள். அங்குச் சென்று பார்க்குந் தவத்திரு உடையாரே அத்தமிழ்த் தேவியின் அருட்டிருவுடையராவர். சங்க காலத்துக்கு முன்னெல்லாம் நம் தமிழ்ச்செல்வி பேதைப்

பருவமுடையவளாயிருந்திருக்கின்றனள். சங்க காலத்தில் அவள் கவின் மிக்க மங்கைப்பருவ மெய்தி மங்கல வாழ்வுடன் நாலாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்கின்றனள். இன்னும் அவள் இளமையுடையவளாகவே இருக்கின்றாளென்றாலும், கடந்த ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளாகத் தன் தமிழ் மக்கள் ஊக்கங் குறைந்தமையை எண்ணி, அவர்கட்கு அவ் ஊக்கச்சுடர் உண்டாகுங் காலத்தை எதிர்பார்த்துத் தனது மங்கல வாழ்வை துறந்திருக்கின்றனளென்றே கூறல் வேண்டும்.

ஆராய்ந்து பார்க்குங்கால், எல்லையில்லாத தனிப் பேரழகு வாய்ந்த தன் இளமைப்பருவத்தில் அவ்வழகையையும் இளமையையும் ஒரு பொருட்படுத்தாமல் வெறுத்து, அனைவருங் கண்டு நெஞ்சுருகுமாறு துறவு பூண்ட மாதவி மகள் மணிமேகலை அங்ஙனந் துறவு பூண்ட காலம் சங்ககாலம் இறுதியுற்ற காலமே யாகுமென்பது நன்கு விளங்கும். அழகு மிக்க மணிமேகலை இளமையில் துறவு பூண்டதைக் கண்டே, தாவா அழகு மிக்க நம் தனிப்பெருந்தமிழ் மங்கையும் அவளுக்குத் துணையாய் அவளுடன் துறவு பூண்டனள் போலும். எனவே நம் தமிழ் மகள் துறவு பூண்டு சங்ககாலம் இறுதியுற்றமைக்கு ஏது, மணிமேகலையின் துறவுக்கு ஏதுவாக அஞ்ஞான்று நம் தமிழகத்தில் நிகழ்ந்த கண்ணகியின் கற்பு நிகழ்ச்சியேயாம் என்பது இனிது பெறப்படும். ஆ! நம் பண்டைத் தமிழ் வீரப் பெண்டெய்வமாகிய கண்ணகித்தாயின் கற்புச்சீற்றமே, அச்சீற்றத்தின் நுண்பேராற்றலே, கடந்த ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளாகத் தமிழ்ப்பெருந் தேவி கொடும்பெருந்துறவு பூண்டமைக்கும்; தமிழ்ப்பெருநாடு சீரற்றகேடு உற்றமைக்கும் உரிய ஏதுவாகும் என்பது மெய்யே போலும்! மெய்யே போலும்!! எனவே பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் சிறிது நினைவு மாறிச் செய்த தவறிய செயலால், நம் அருமந்த தனித்தமிழ்நாடு கற்புத்தெய்வமான கண்ணகி நல்லாளின் கடுஞ் சீற்றத்துக்கும் இளந்திரு வாய்ந்த பேரழகுச் செல்வியான தனித்தமிழ்த்தாயின் கொடுந்துறவுக்கும் உள்ளாகி, இடைக்காலங்களிற்பட்ட அல்லல் அம்மம்ம போதும்! போதும்!! கண்ணகித்தாயின் சீற்ற நுண்

ணூற்றல் சிறிது தணிவுற்றதோ என்னவோ தெரிய வில்லை; தனித்தமிழ்த்தேவியின் துறவுள்ளமுஞ் சிறிதுமாறி மங்கலத் தனி வாழ்வில் நுழைவுற்றது போலும்! பழையசங்ககாலத்தின் விளக்கம் சில ஆண்டுகளாக இப்போது விளக்கமுற்று வரக்காண்கின்றோம்; அது மெய்யேயாயின் அஃதொரு நற்குறியென்றே கருதி நாம்நல்வரவேற்று முனைப்புடன் கடமையாற்றுவோமாக!

இனிச் சங்ககாலமெனப்படும் பழைய நாலாயிரம் ஆண்டுகளில் தலைச்சங்கம் நிகழ்ந்த முதற்காலத்திலும் இடைச்சங்கம் நிகழ்ந்த இடைக்காலத்திலும் கடைச்சங்கம் நிகழ்ந்த இறுதிக் காலத்திலும் ஆசிரியர் தொல்காப்பியனார் முதலாகச் சிறந்த நல்லிசைப்புலவர் பலர் தோன்றி, அரிய நூல்கள் பலவும் பாட்டுகள் பலவும் இயற்றியிருக்கின்றனர். அவற்றுள் தலைச்சங்க இடைச்சங்ககாலங்களில் எழுந்த அளவிறந்த நூல்களுள் பாட்டுக்களுள் இலக்கணநூல் தொல்காப்பியமும் ஏனைச் சில தனிப்பாட்டுகளும் நீங்கலாக ஏனையவெல்லாம் நம்கண்ணுக்குக் காணமல் மறைந்து போயின. அதுமட்டுமன்றி, இறுதியாய்த் தோன்றிய கடைச்சங்க காலத்துநூல்களுள்ளும் இப்போது நமக்குக் காணப்படாதன பல. ஆனல் கடைச் சங்ககாலத்தார் தங்காலத்தெழுந்த நூல்களையும் பாட்டுகளையும் தொழில், அளவு, பாட்டு, பொருள் என்பனவாக ஒவ்வோரியைபு பற்றிச் சிலபிரிவுகளாகத் தொகைப்படுத்திப் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்னும்பெயர்களால் வழங்குவாராயினர்; அவற்றுட் பத்துப்பாட்டு என்பன:

“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து”

என்னும் வெண்பாவால், திருமுருகாற்றுப்படை, பொருநாற்றுப் படை, சிறுபாணுற்றுப்படை, பெரும்பாணுற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்துப்பாட்டுகளாகும் என்பது தெரிகின்றது.

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறு நூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை"

என்னும் மற்றொரு வெண்பாவால் எட்டுத்தொகையாவன: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாமென்பது பெறப்படும். இங்ஙனமே பதினெண்கீழ்க்கணக்கு நூல்களாவன. நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னாநாற்பது, இனியவை நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணையைம்பது, திணைமொழியைம்பது, ஐந்திணையெழுபது, திணைமாலைநூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்ச மூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்பனவா மென்பது,

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைசொற் காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"

என்னும் வெண்பாவால் தெளியப்படும். இம்மூவகைப் பிரிவுகளுள் எட்டுத்தொகையெனத் தொகுக்கப்பட்டிருக்கும் நூல்களுள் ஒன்றுதானும் ஓராசிரியராற் செய்யப்பட்டதாய்க் காணப்படவில்லை; ஒவ்வொன்றும் பண்டை நல்லிசைப்புலவர் பலராற் செய்யப்பட்ட பாட்டுகளின் தொகுதியாய் விளங்குகின்றன. இங்ஙனமாகக் கடைச்சங்கத்துப் புலவன்மார் அரிய பழம்பாட்டுகளைத் தொகைப்படுத்து வைத்திராராயின், இச்சில நூல்களையும் நாம் இக்காலத்தில் காணப்பெறாமல் அலமந்துபோயிருப்போம்.

இனி இங்குக்காட்டப்பட்ட இச்சங்கநூல்கள் எல்லாமும் பழந்தமிழ்நாட்டின் உண்மைகளை நன்குதெரிவிப்பனவேயாகும்; ஆயினும் இந்நூல்கள் அகமெனவும் புறமெனவும் பகுத்துணரப்படும் பண்டைப் பொருளிலக்கணத்தின் வழியவாய் இயற்றப்பட்டிருத்தலின், நாட்டினியல்புகளை விரித்துரை செய்வனவான

புறப்பொருளிலக்கணத்தைப் பற்றி யெழுந்த நூல்களே, பழந்தமிழ் நாட்டின் உண்மைகளை நன்கு தெரிந்துகொள்வதற்குப் பெரிதும் பயன்படுவனவாம். எனவே இச்சங்க நூல்களில் அங்ஙனம் புறப்பொருள்வழிப் பற்றி யெழுந்த சிலவற்றுள்ளும் புறநானூறு' என்னும் நூலே தலையானதாகும். இந்நூல் 'புற' மெனவும் 'புறப்பாட்' டெனவுமே வழங்குதலு முண்டு. 'பதிற்றுப்பத்து' என்னும் வேறொரு தொகை நூலும் இவ்வாறே புறப்பொருளிலக்கணம் பற்றி யெழுந்து நாட்டினியல்பை நன்கு புலப்படுத்துவதேயாயினும், அது சேர அரசர் பதின்மரைப் பற்றிமட்டும் பாடுதலுடைமையின், சேர சோழ பாண்டிய ரென்னும் மூவகையரசர்களையும், அம்மூவகைநாட்டுப்பெருமக்களையும் நிரம்பவும் பாடுதலுடைய புறநானூற்றைப்போல் ஈண்டுப் பெரிதும் பயன்படுவதாகாது; 'பத்துப்பாட்' டிற் 'பொருநாற்றுப்படை' முதலான சிலபாட்டுகள், சோழ பாண்டிய அரசர்களைம் ஏனைச்சிலரையுமே பாடா நின்றன; ஏனை நூல்களிலுஞ் சில இவற்றையொப்பனவேயாகும். எஞ்சிய தொகை நூல்களெல்லாம் பொதுவாகப் பொருளிலக்கணத்தின் இயல்புகளைப் பெயர் கூறாமல் ஓதி விளக்கிச் செல்வனவாயிருக்கின்றன. ஆனாற் 'புறநானூ' றோவெனின், சங்ககாலத்திலிருந்த சேர சோழ பாண்டியர்களான முடியுடையரசர்களில் எத்தனையோ பலரையும் அங்ஙனமே சிற்றரசர், குறுநிலமன்னர், வள்ளல்கள், புலவர்கள், அமைச்சர், சேனைத்தலைவர், வீரர் முதலானவர்களிற் பலரையும் பெயர்விளங்கக் குறித்தோதி அவர்களுடைய வரலாற்றுண்மைகளை உள்ளவாறே விளக்குதலோடு, அவர்களிற் பலரை முன்னிலைப் படுத்தியோதும் பாட்டுக்களையும் மிகுதியாக உடையதாயிருக்கின்றது.

மேலும் இந்நூலில் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் அதாவது தலைச்சங்ககாலத்திற் பாடப்பட்ட அரிய பழம் பாட்டுகளுந் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இந்நூற் கடவுள் வாழ்த்துப்பாட்டை அடுத்து, 'மண்டிணிந்த நிலனும்' என்னும் முரஞ்சியூர் முடிநாகராயர் பாட்டு முதலிற் காணப்படுகின்றது. இது சேரமான் பெருஞ் சோற்றுதியஞ் சேரலதனை முன்னிலைப்ப

டுத்துப் பாடிய அருந்தமிழ்ப்பாட்டாகும். சேரமான் உதியஞ் சேரலாதன் என்னுஞ் சேரமன்னன் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் எனச் சிறப்பிக்கப்பட்டதன் வரலாறு, அவன் 'பாண்டவர்' ஐவர்க்கும் 'கௌரவர்' நூற்றுவர்க்குமிடையே பண்டு நிகழ்ந்த பாரதப்போரில் அவ்விருதிறத்தார் படைகட்கும் அப்போர் நிகழ்ந்த பதினெட்டுநாட்களிலும் பெருஞ்சோறு வழங்கினமையேயாகுமென்பது.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" *

என்று அம்'மண்டிணிந்த நிலனும்' என்னும் புறப்பாட்டிலேயே முரஞ்சியூர் முடிநாகராயர் இதனை நன்கெடுத்துக்காட்டுமாற்றால் இனிது புலனாகின்றது. உதியஞ் சேரல் பாரதப் போரிற் பெருஞ்சோறு படைத்த இம்மெய் வரலாறு,

"உதியஞ் சேரல் பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" †

என மாமூலனாராலும்,

"ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் றிறம்பாடிக்
கார்செய் குழலாட வாடாமோ வூசல்" ‡

என்று இளங்கோவடிகளாலுங் கூறப்படும் ஏனைப் பழந்தமிழ் நூற்சான்றுகளானும் உறுதியாய்த் துணியப்படுகின்றது; ஆதலால் அங்ஙனம் பெருஞ்சோறு கொடுத்த சேரமான் உதியஞ் சேரலாதனும் அவனை முன்னிலைப்படுத்துப் பாடிய நல்லிசைப்புலவர் முரஞ்சியூர் முடிநாகராயரும் இந்நாட்டிற் பண்டு பாரதப்போர் நிகழ்ந்த காலத்தில் இருந்திருக்கின்றாரென்பது இனிது தெளியப்படுகின்றது.

---

* புறம், ௨. † அகம், ௨௩௩. ‡ சிலப், வாழ்த்துக், 'ஓரைவர்'

இனி இப்பாரதப்போர் நிகழ்ந்தகாலம் இன்னகாலமெனத் துணிதலில் இக்காலத்து வரலாற்று நூலாசிரியன்மார் பலரும் பலவாறு கூறுநிற்பர். 'தத்தர்' என்னும் ஆசிரியரொருவர் பாரதப் போர் கி. மு. ௩௨௰௰-ம் ஆண்டில் நிகழ்ந்ததெனக் கட்டுரைப்பர்; 'வேலந்தைக் கோபால ஐயர்' என்பார் ஒருவர் அற்றன்று அது கி. மு. ௧௧௬௪-ம் ஆண்டிலேயே நிகழ்ந்ததாகுமென நிறுத்துக் கூறுவார்; வேறு சிலர் கி. மு. ஆயிரத்திற்றான் அது நிகழா நின்றதெனப் பிடித்துப் பேசுவர். ஆனல் இன்னோரன்ன வற்றையெல்லாம் பெரிதாராய்ந்து அக்கால அளவையைச் சில உண்மைச் சான்றுகளாற் றுணிந்த அறிஞர் வைத்தியர் M. A.; L L B; என்பவர் அப்பாரதப்போர் நிகழ்ந்தது கி. மு. மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னராம் என்று மெய்ம்மை நிறுவிப் 'பாரதப்போரின்' காலம் * என்னும் ஒரு கட்டுரையில் நடுவு உரையா நின்றார். இறையனாரகப் பொருளின் முதல் நூற்பா உரையில் முச்சங்கவரலாறு உரைக்குமிடத்தில் இப்பாரத காலத்து நல்லிசைப் புலவரான முரஞ்சியூர் முடிநாகராயர் தலைச் சங்க காலத்திலிருந்தாரென்று கூறப்பட்டிருத்தலானும் அவ்வுரையிலேயே ஆண்டெடுத்துக் காட்டப்பட்ட சங்கப்புலவர்களின் தொகைப்படி கணக்கெண்ணுங்கால், பண்டு நடைபெற்ற தலைச் சங்ககாலம் அறிஞர் 'வைத்தியர்' என்பவர் ஆராய்ந்து காட்டிய பாரத காலக்கணக்குக்கு ஒத்து நிற்றலானும் அவர் காட்டும் பாரதப் போரின் காலக்கணக்குப் பண்டைத்தமிழ்நூற்சான்றுகளோடும் ஒத்து உண்மையேயாய் முடிதல் நன்குணரப்படுகின்றது. ஆகவே இவ்வாற்றாற், பாரத காலத்துச் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனை முன்னிலைப்படுத்துப் பாடிய அவன் காலத்துப் புலவரான முரஞ்சியூர் முடிநாகராயரென்பவர் தலைச் சங்க காலத்திலிருந்தாராதலும், எனவே புறநானூற்றின் முகப்பிற் காணப்படும் 'மண்டிணிந்த நிலனும்' என்னும் அவரது பாட்டுத் தலைச்சங்க காலத்தெழுந்த பழம்

---

* 'The Date of the Bharata Fight' in The Students' Brotherhood Quarterly Vol. VII, No. 4, Bombay.

பாட்டாதலும், அவ்வாற்ருல் அத்தலைச் சங்க காலத்தெழுந்த மிகப் பழைய பாட்டுகளும் புறநானூற்றில் தொகுக்கப்பட்டிருக்கின்றனவெனப் படுங்கோள் உண்மையேயாதலும் இனிது பெறப்படுதல் காண்க.

இன்னும் இத்தென்றமிழ் நாட்டின் தென்பாலிற் பண்டு விரிந்து கிடந்த குமரி நிலப்பரப்பின் கண்ணதான பஃறுளியாறு கடல் கொள்ளப்படுமுன், அவ்யாற்றின் மணலைச்சுட்டி அஞ்ஞான்று அந்நிலப்பரப்பை அரசாண்டுவந்தோனை பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி யென்பானை,

> "முந்நீர் விழவின் நெடியோன்
> நன்னீர்ப் 'பஃறுளி' மணலினும் பலவே"*

என்று கூறி வாழ்த்திசைக்கும் நெட்டிமையாரது பாட்டும் இப்புறநானூற்றிற் காணப்படுகின்றது. இவர் பாட்டுகள் வேறு சிலவும் இந்நூலில் தொகுக்கப்பட்டிருக்கின்றன.† இனிக் காரிகிழார், நெடும்பல்லியத்தனுர் என்னும் நல்லிசைப்புலவர்கள் வேறிருவரும் இவர் காலத்திலிருந்து அப்பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியையே பாடிய அரிய பாட்டுக்களும் இப்புறநானூற்றிற் காணப்படுகின்றன.‡ 'பஃறுளியாறு' கடல்வாய்ப்புக்கது கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரா மென்பது சிறந்த பல மெய்ச்சான்றுகள் கொண்டு இற்றைஞான்றை வரலாற்று நூலாசிரியர்களால் நன்கு துணியப்பட்டிருத்தலின்○ புறநானூற்றின்கண் தொகுக்கப்பட்டிருக்கின்ற 'நெட்டிமையார்,' காரிகிழார்,' 'நெடும் பல்லியத்தனுர்' என்னும் புலவர் பெருமக்களுடைய அருந்தமிழ்ப்பாட்டுகள் கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன், அதாவது ஈண்டுச் சங்க காலமெனப்படும் நாலாயிரம் ஆண்டுகளின் முற்பாதிக்கண் எழுந்தனவாதல் இனிது தெளியப்படும்; எனவே இவை கொண்டு 'புறநானூ'றென்னும் அரிய கடைச் சங்கநூலில், அக்கடைச் சங்க

---

* புறம், க. † கஉ, கடு. ‡ கூ; கூச.

○ மாணிக்கவாசகர் காலம், பக், சஎஅ.

காலத்துக்கு முற்பட்ட மிகப் பழைய பாட்டுகளும் ஒருங்கு தொகுக்கப்பட்டிருக்கின்றன வென்னும் உண்மை சிறிதும் ஐயுற வின்றித் துணியப்படு மென்க.

இவ்வாறு இப்புறநானூற்றின்கண் நுவலப்பட்டுள்ள பாட்டுடைத்தலைவர்களும் பாட்டுரை புலவர்களும் ஏனையோரும் சங்க கால நாலாயிரம் ஆண்டுகளில் வேறு வேறு காலத்தவராயிருத்தலுமன்றி, அவரனைவரும் வேறு வேறு சாதியாராயிருத்தலும் நினைவு கூரற்பாலது. பாட்டு கூறும் புலவர்களிற் பெண்பாலாரு முளர். மேலும் இந்நூலிற் காணப்படும் ஒவ்வொரு பாட்டும் அரியதோர் ஆராய்ச்சியுரையாய், இனிய இலக்கியச்சிறப்பும், இலக்கண விளக்கமும், இயல் பொருணுட்பமும், பழைய தமிழ் நாட்டின் அளவுந் தோற்றமும், அதன் அரசியல்வகையும், மக்கள் வாழ்க்கை முறையும், புலவர்க்கும் புரவலர்க்கு மிடைப்படும் நன்கு மதிக்கற்பாடும், பழந்தமிழரின் ஒழுக்கப்பேறும், கடவுட் கொள்கையும், மகளிர் மாண்பும், அரும் பெரும் பழக்க வழக்கங்களும் நன்கெடுத்துரைப்பனவாய்க் காணப்படுகின்றன; அவையெல்லாம் இனி இதையடுத்துவரும் ஒவ்வொரு கட்டுரையிலும் முறையே யெடுத்து விளக்கமாய் ஆராயப்படும். ஆகையால் இன்று நங்கண்ணுக்குக் காணப்படுஞ் சங்க நூல்களெல்லாவற்றுள்ளும், ஏனை யெல்லாத்தொகை நூல்களையும்விடப் புறநானூறு என்னும் இந்நூல் ஒன்று மட்டுமே பழைய சங்க காலமான நாலாயிரம் ஆண்டுகளின் பழந்தமிழ் நாட்டுண்மைகளை நன்குதெரிந்து கொள்ளுதற்கு ஏற்ற கருவியாய் நிற்கின்றமை தேறப்படு மென்பது.

———

# புறநானூற்றிற் கண்ட சில் பழைய வழக்குகளும், வரலாறுகளும்

(பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்)

சங்கப் புலவர்களாலே பாடித்தொகுக்கப்பெற்று நமக்கு எய்ப்பினில் வைப்பாகக் கிடைத்திருக்கும் எட்டுத் தொகையுள் ஒன்றாகிய புறநானூற்றை ஆராயின் எத்தனையோ பல வழக்குகளும் வரலாறுகளும் காணப்படுகின்றன. அவற்றுட் சில இங்கே காட்டப்படும்.

காரிகிழார் என்னும் புலவர் முதுகுடுமிப்பெருவழுதி என்னும் பழைய பாண்டி வேந்தனை நோக்கி.

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே"

என அறிவுறுத்ததிலிருந்து, அக்காலத்து வேந்தர்கள் கண்ணுதற்பெருமான் திருக்கோயிலை வலம்வரும்பொழுது தம் குடையைத் தாழச் செய்வர் என்பது புலனாகின்றது. அரசர்கள் படைக்கலங்களுக்கு நெய்பூசி மயிற்றோகை அணிந்து மாலை சூட்டி வைப்பரென்பது, அதியமான் அஞ்சியிட மிருந்து தொண்டைமானுழைத்தூது சென்ற ஒளவையார் அவன் படைக்கலக் கொட்டிலைப் பார்த்து.

"இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்தி நெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே"

என்று கூறியதனாற் பெறப்படும். தமிழ் மன்னர்கள் தம் வீர முரசினை மலரணை பொருந்திய கட்டிலில் வைத்திருப்ப ரென்பதும், அம்முரசினை மயிற் பீலியும் உழிஞைமாலையும் முதலியவற்றால் அலங்கரித்து நீராட்டி வருவரென்பதும் பெருஞ்சேரலிரும் பொறையை மோசிகீரனார் பாடிய ௫௰-ம் புறப்பாட்டில்.

"ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னை"

என வருவதால் அறியலாகும். அரசர்கள் போரில் இறவாது நோயால் இறப்பின் அவர்கள் துறக்கம் புகவேண்டிய அன்னவருடம்பைத் தருப்பையிற் கிடத்தி வாளாற் பிளந்து அடக்கஞ் செய்தல் மரபென்பது ஔவையார் அதியமானைப்பாடிய 'திண் பிணி முரசம்' என்னும் பாட்டில்

"திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்"

எனக் கூறப்படுதலால் அறியலாகும். போரிலிறந்த வீரனது பெயரும் பீடும் எழுதிய நடுகல்லை நிறுவி அதற்கு மயிற் பீலி சூட்டி, அவ்விடத்துப்புடைவையாலே சிறிய பந்தர் போடுவித் தலுண்டென்பது, 'வளரத்தொடினும்' என்னும் பாட்டிலே

"பெயரே
மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
இடம் பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே"

என்று கூறப்படுதலாற் போதரும். இறந்தோனுக்கு அவன் மனைவி கோமயத்தால் மெழுகிய சிறிய இடத்தில் தருப்பையின் மேற் பிண்டம் வைப்பளென்பது 'நோகோயானே' 'கதிர் மூக் காரல்' என்னும் பாடல்களால் அறியப்படுகின்றது. "அருநரையுருமின்" என்பதனல் இடி வெண்ணிற முடையதென்னும் கொள்கையும்,

"பொய்யா வெழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்
சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்ப"

என்பதனால் எறும்பு முட்டை கொண்டு திட்டையேறின் மழை பெய்யுமென்னும் கொள்கையும், "கடவுளாலத்து" "கள்ளி நீழற் கடவுள்" என்பவற்றால் ஆலமரத்தின் கண்ணும் கள்ளி நிழலி லும் தெய்வ முறையுமென்னும் கொள்கையும் அந்நாளிலிருந் தமை பெறப்படும்.

"புதல்வர் பூங்கண் முத்தி"

என்பதனால் குழந்தைகளின் கண்களில் முத்தமிடுதலுண் டென்பதும்.

"புதல்வன்......அழக்கண்டு
மறப்புலியுரைத்து மதியங்காட்டியும்"

என்பதனால் புலிவருகின்றதெனக் கூறி அச்சுறுத்தியும் அம்புலி காட்டியும் குழந்தைகளின் அழுகை தீர்ப்பரென்பதும் பெற்றாம்.

சூலுற்ற மகளிர் மண்ணினை விரும்பி யுண்ப ரென்பது

"வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா அருமண் ணினையே"

என்பதனாலும், குறவர்கள் நன்னாளிலே தினை விதைத்தலும், முற்பட விளைந்த கதிரை நன்னாளிற் கொய்துவந்து புதிதுண்ட லும் உடைய ரென்பது

"நன்னாள் வருபத நோக்கிக் குறவர்
உழா அது வித்திய பரூஉக்குரள் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்"

என்பதனாலும் விளங்கும். இளஞ்சிறார்கள் நீருக்கணித்தாகப் படிந்த மரக்கோட்டிலேறி ஆழமாகிய மடுவிற் பாய்ந்து முழுகி மணலைக் கொணர்ந்து காட்டி விளையாடுவரென்பது

"நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிக்க
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை"

என்பதனாற் பெறப்படும். குறவர்கள் கடவுட்குப் பலி தூவி

வழிபட்டு மழையை வேண்டும் பொழுது அழைத்தலும் வேண்டாவழி ஒழித்தலுஞ் செய்வரென்பது

"மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரியான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர்"

என்பதனாற் போதரும்.

"விளைபதச் சீறிட நோக்கி"

என்னும் பாட்டால் புலி இடப்பக்கத்து வீழ்ந்த விலங்கினை உண்ணாதென்னுங் கொள்கையும்,

"போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப்பயிரும்"

என்பதனால் பேராந்தை செத்தோரை அழைக்கு மென்னுங் கொள்கையும் உடைய ரென்பது பெறப்படும். படைக்கலப் பயிற்சி செய்வோர் முருக்க மரத்தாற் செய்த தூணினை இலக்காக நிறுத்தி அதிற் படக்கலங்களை வழங்கிப் பயில்வரென்பது

"இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலின ரெறிந்த அகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போல"

என்பதனால் அறியப்படும். இன்னும் வடக்கிருத்தல், இறந்தோரைச் சுடுதல், தாழியாற் கவித்தல், கணவனையிழந்தமகளிர் தீப்பாய்தல், கைம்மை நோன்பு நோற்றல் முதலாய பல வழக்கங்கள் புறப்பாட்டுக்களால் அறியப்படுகின்றன. அவற்றால் அறியப்படும் வரலாறுகள் பின்வரும்.

---

# சிவலிங்கம்

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ.)

சைவசமய உண்மைகளில் சிவலிங்கத்தைப் பற்றிய உண்மை ஒரு அரும் பெரும் உண்மையாகும். அவ்வுண்மையானது சைவாகம நூல்களிலும் தமிழ்மறை நூல்களிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்த உண்மையை முறைப்படி கற்றுங் கேட்டும் அறியாத சிலர் இப்பொழுது தங்களுடைய மனதின்கண் தோன்றித் தடிப்புண்டாயிருக்கிற கருத்துக்களை நூலறிவுக்குப் பொருத்தமில்லாமலும் ஆராய்ச்சி அறிவுக்குப் பொருத்தமில்லாமலும் தாங்களாகவே அவ்வுண்மைக்கு ஏற்றிப் பழிப்புரைகள் செய்தலில் விருப்புள்ளவர்களாகப் பிழைப்புரைகள் கூறியும் எழுதியும் வருகிறார்கள். ஆதலின் நான் தமிழ்மறைகளை யோதி அறிந்தவாறு என்னாலியன்றவரை அந்த உண்மையை விளக்குகின்ற சிறிய கட்டுரை ஒன்று இதனடியில் எழுதுகின்றேன்.

சிவலிங்கம் என்னும் தொடர்மொழியானது சிவம் லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையாலாகியது. அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள்படும். "சிவம் நன்மை குறுணி முத்தி" என்பது சூடாமணி நிகண்டு. "எல்லா உயிர்களுக்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவம்" என்று திருக்கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (௩௫அ வது பாட்டு.) உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள் எக்காலத்தும் இல்பொருள் ஆகாமல் உள் பொருளாய் அழிவின்றி நிலைபெற்றுள்ளதாயும் தான் எப்பொருளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப்பற்றாக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவுமயமாயிருந்து எல்லா

உயிர்களுடைய அறிவை விளக்குமோ அது சிவம்; எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என்பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத்தை உண்மை அறிவினாலேதான் சிவத்தை நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறியமுடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அச்சிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக் குறிகள் அமைந்திருக்கின்றன. அக்குறிகள் பின்வருமாறு:—

சிவன் எட்டு உருவினன். (அட்டமூர்த்தி) அவன் நீர், நிலம், தீ, கால், வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப்பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத்தைக் காட்டுங் குறியாயுள்ளது. உலகம் சிவத்தினது குறியாயிருத்தலால் அது 'அண்டலிங்கம்' என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாகிய உயிர்களது உடலும்-ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்ட லிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க

உடலின்கண்ணுள்ள உயிரும் (ஆன்மாவும்) சிவத்தினுடைய எட்டு உருவங்களில் ஒன்றுதலால் அதுவும் சிவத்தைக் காட்டும் குறியாகின்றது. ஆதலின் அந்த உயிர் 'ஆன்மலிங்கம்' என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானுர்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச்சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

சிவத்தினது அருள் விளங்கப்பெற்ற அடியார்கள் சங்கம லிங்கங்கள் ஆவார்கள். அவர்கள் சிவனாக வணங்கப்படுதற்கு உரியர்கள்.

தெள்ளத் தெளிந்ததும் மாசற்றதுமான மனமானது உயிரினது தன்மையை விளக்கும் கருவியாயிருத்தலால் அதுவும் சிவலிங்கம் என்று கூறப்படும். அவ்வுண்மை

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டி
பூசனை யீசனுர்க்குப் போற்றவிக் காட்டினோமே.

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்திற் கூறியிருத்தல காண்க.

முத்தான் மாக்களிடம் விளங்கும் சிவசத்தியே சதா சிவ மூர்த்தியாகும். இந்த சதா சிவமூர்த்தி சிவத்தைக் காட்டுங் குறியாயிருத்தலின் அது சதாசிவலிங்கம் என்று கூறப்படும். அவ்வுண்மை

தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் றற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

இந்தச் சதாசிவலிங்கமே சிவன் கோயிலில் மூலத்தானத்தில் நிறுவப்பட்டிருக்கும் தாபர லிங்கமாமென்று கூறப்படுகின்ற சிவலிங்கமாகும்.

தாபர சிவலிங்கம் அவ்வியத்தலிங்கம் வியத்தா வியத்தலிங்கம் வியத்தலிங்கம் என மூவகைப்படும். அவற்றுள் மூலத்தானத்திற் காணப்படுஞ் சிவலிங்கம் அவ்வியத்தலிங்கம். அது பீடமும் இலிங்கமுமாயிருப்பது. அந்தச் சிவலிங்கமே முகம் கண்களுடன் பொருந்தியிருக்குமானால் அது வியத்தாவியத்தலிங்கம் ஆகும். முகம் கருணையைக் குறிக்கும், கண்களிரண்டும் சூரிய சந்திரர்களைக் குறிக்கும். எல்லா உறுப்புகளுடனுங் கூடியிருக்கும் சந்திரசேகரர் முதலிய மாகேசுர வடிவங்கள் இருபத்தைந்தும் வியத்தலிங்கங்களாம். வியத்தலிங்கம், சகளலிங்கம் அல்லது உருவலிங்கம் எனவும் வியத்தா வியத்தலிங்கம் நிஷ்கள சகளலிங்கம் அல்லது அருவாவுருவலிங்கம் எனவும் அவியத்தலிங்கம் நிஷ்களலிங்கம் அல்லது அருவலிங்கம் எனவும் கூறப்படும்.

இன்னும் கோயில்களில் கோபுரம் விமானம் முதலியன அசலலிங்கம் எனவும் தூபி தூலலிங்கம் எனவும் உள்ளே எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் சூக்குமலிங்கம் எனவும் நந்திக்கு முன்னுள்ள பலிபீடம் பத்திரலிங்கம் எனவும் கூறப்படும். இவைகளெல்லாம் சிவத்தைக் காட்டுங் குறிகளே. ஆன்மார்த்த லிங்கவகைகளும் பலவுள. அவற்றை இங்கே விரிப்பிற் பெருகும்.

சதா சிவலிங்கம் குறிக்கின்ற சதாசிவ மூர்த்தி அருவாவுருவ மூர்த்தியாயிருப்பதால் மேலே அருவ மூர்த்தியாய் சத்தி மூலமாய்ச் சிவத்துடன் தொடர்பு மட்டும் கீழே மகேஸ்வரன் உருத்திரன் திருமால் பிரமன் ஆகிய இவர்களுடனும் தொடர்பு பட்டும் உயிர்களுக்கு அருள் செய்கின்றான். இவ்வாறு கடவுள் ஒருவனாயிருந்தாலும் அவன் பலவகைத் தகுதிகளை யுடைய உயிர்களுக்கு அருள் செய்கிறதற்காக பிரமன், திருமால், உருத்திரன், மகேஸ்வரன், சதா சிவன், பிந்து, நாதம், சத்தி, சிவம்

என்னும் ஒன்பது வடிவங்களாய் விளங்குகின்றான். முதல் நான்கும் உருவம்; நடுவிலுள்ள சதாசிவம் அருவா உருவம்; அதற்குப் பின்னுள்ள நான்கும் அருவம். இவ்வுண்மை

மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே

என்று திருமந்திரத்தில் கூறியிருத்தல் காண்க.

இந்தச் சதாசிவலிங்கம் காட்டுகிற ; அருவுருவச் சதாசிவ மூர்த்தி தான் மேலே கூறப்பட்ட ஒன்பது மூர்த்திகளுள் உலகில் உயிர்களுக்கு அருள் செய்யும் படியான கடவுளாய் விளங்குகின்றான். இவ்வுண்மையை

வேதா நெடுமா லுருத்திரன் மேலீசன்
மீதான வைம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே

என்றும் திருமந்திரம் கூறுகின்றது. (தொடரும்)

---

# நாமகள் தாலாட்டு

(யாழ்ப்பாணத்து நவாலியூர் திரு. க. சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் பாடியது)

இதன் உரிமை ஆக்கியோர்க்கே யுரியது.

(காப்பு)

சீர்பூத்த நாமகள்மேற் செந்தமிழ்த்தா லாட்டுரைக்கக்
கார்பூத்த வைங்கரத்துக் கற்பகத்தைக் கைதொழுவாம். 1
செந்தமிழ்ச் செல்விதிருத் தாலாட்டுச் செப்புதற்குக்
கந்தமுருகன் கழலிணைகள் காப்பாமே. 2

நந்தாத் தமிழ்முதல்வி தாலாட்டு நாட்டுதற்கு
வந்தாண்டு கொண்டகுரு மாணடிகள் வாழ்த்துவமே. 3

வெள்ளைக் கலையாளே வெண்டா மரையாளே
தெள்ளுதமிழ்த் தாலாட்டுச் செப்பவருள் செய்யுமம்மா. 4

செஞ்சொற் பசுங்கிளியே தீங்குயிலே பூங்கொடியே
நெஞ்சத் திருந்து நினைவருளிச் செய்யுமம்மா. 5

பாவேறு நாவிற் பயில்வதுபோ லென்பழகா
நாவேறி வீற்றிருந்து நன்மை புரியுமம்மா. 6

நூல்

ஆராரோ ஆரிவரோ ஆராரோ ஆரிவரோ
ஆராரோ ஆரிவரோ ஆராரோ ஆரிவரோ

தென்பொதிய மாமலைவாழ் தெய்வக் குடமுனிக்கு
நம்பனுல குய்யவருள் ஞானச் செழுஞ்சுடரோ 1

குன்ற மெறிந்த குமரமுனி வாய்க்கொடுப்ப
வென்ற புலமுனிவன் வேண்டுகலை வெண்மதியோ 2

மூடத்தை யுண்டழியா மூதறிவைக் காலுகின்ற
சேடர்செழு நாவிலெழும் செந்தீயின் தெய்வதமோ 3

செந்தா மறைமுதல்வன் செம்பொற் கரம்பிடித்த
வந்தா மரமே லமர்ந்தருளு மோதிமமோ 4

ஆருயிர்க ளுவசைக்க வங்கிருந்து காலசைக்குஞ்
சீருயிர்க்கும் பொற்றாவித் தெய்வ மடமயிலோ 5

ஆழித் துகிலசைக்கு மம்புவியோ ரஞ்செவியி
னேழிசையின் செந்தேன் சொரியு மிளங்குயிலோ 6

அஞ்ச முயர்த்தோ னணிமணிநாப் பஞ்சரத்துட்
செஞ்சொற் பழமறைகள் செப்பியருள் சாரிகையோ 7

தீட்டுங் கலைத்திமிடோர் செல்வர்கள்செந் நாவினிசைப்
பாட்டும் பயனும் பகரும் பசுங்கிளியோ 8

வித்தைப் பெருங்கடலில் மேலோர் குளித்தெடுத்த
சுத்தச் சுரிமுகமீ சோதிமுத்து மாமணியோ 9

கல்விக் கிரியரித்துக் கற்றவர்கள் கண்டெடுத்த
வில்லிட் டொளியுமிழும் வெள்ளைவயி டூரியமோ 10

வெள்ளைக் கலைமதித்து மெய்ப்புலவர் வாரியள்ளி
உள்ளக் கவலைகெட உண்டுவக்குந் தெள்ளமுதோ 11

அன்பா ரழக்குழைவிட் டான பொருளரும்பி
இன்ப மணம்மலர்ந்த ஞானமருள் கற்பகமோ 12

வெந்தாபஞ் சோகம் வெறுமைபிணி வீட்டுகின்ற
மந்தாரதெய்வ மரத்தில் வைத்த கோற்றேனோ 13

சிந்தா குலமுந் திரைநரையும் மூப்புமழி
சந்தான கற்ப தருவருள்சஞ் சீவினியோ 14

மைக்கட்டு நீக்கும் மதித்தேவ தாரமதில்
கைக்கெட்ட வந்து கனிந்த நறுங்கனியோ 15

ஆசையெட்டும் முட்டி யறிவுமனம் வீசுகின்ற
தேசு மலிபாரி சாதச்செழுமலரோ 16

மேவேழ் பிறவியினு மேமாப் பிணிப்பருளும்
பாவாழ் கலைத்தேனு பாலித்த பாலமுதோ 17

பொல்லாக்கல் லாமை பொறாமையின்மை போக்கியென்றுஞ்
செல்லாத செல்வமருள் சிந்தா மணிக்குவையோ 18

எங்கெங்குச் சென்றாலு மின்பஞ் சிறப்புடனே
சங்க நிதியுமருள் சங்கத் தனிநிதியோ 19

பூமணக்குந் தாரும் புகழ்மணக்கும் புத்துளவும்
பாமணக்குஞ் சீரம் பரிந்துதவும் பங்கயமோ 20

வெள்ளமுந் தீயும் விறல்வேந்து மொன்னலரும்
கொள்ள முடியாத் குறையா நவநிதியோ 21

திங்கள் மிலைந்த சிவனார் மடிமீதில்
மங்கையுமை கண்குளிர வந்துலவும் வான்குருந்தோ 22

பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பச்சை முகின்மேனி
மாற்கரிய கேண்மை மருவும் மருமகளோ 23

ஆறுமுகங் கொண்டவெங்க ளையற் கிளையவளோ
கூறுவள்ளி யானைமிகக் கொண்டாடும் மைத்துனியோ 24

பூமிக்கு ணில்லாப் பொருளருளும் பொன்னனை
மாமிக்கு நெஞ்சம் மகிழா மருமகளோ 25

அஞ்சு கணைக்கிழவற் காறு தலைபருளும்
வஞ்சி யிடையிரதி வாழ்த்துகின்ற முன்னவளோ 26

வெண்டா மரைத்தவிசில் வீற்றிருந்தே யேழுலகுங்
கொண்டாட ஞானமுடி கொண்டாளுங் கோமகளோ 27

மங்குலுறை வேங்கடமும் வான்குமரிப் பேராலும்
பொங்கு கடலுமிடைப் பூமிசெய்த புண்ணியமோ 28

சேரன் குலக்கொழுந்தோ சென்னி தவக்கொழுந்தோ
பாரப்பூ ணாரமணிப் பாண்டியனார் பாக்கியமோ 29

மேரு மலைகுனிய வெள்ளிமலை மெய்வெளுக்க
ஆரப் பொதியமலை யாளு மரசியரோ 30

தென்றல் கவரியிடச் செஞ்சாந்து பூச்சொரிய
வென்றி முனிமடியில் வீற்றிருக்கும் மெல்லியளோ 31

நாட்டும் புகழ்வைகை ஞானசம் பந்தனிட்ட
ஏட்டிற் றவழ்ந்தெதிரே யேறு மிளங்கொடியோ 32

ஏடகப்பொற் பஞ்சணையிற் வைகை யெழினுதலாள்
ஆடகக்கை யாயிரத்தா லாட்டவள ராரணங்கோ 33

வஞ்சச் சமணரெல்லாம் வான்கழுவின் மேலேற
மஞ்சத்தீ யேறி மகிழ்ந்திருந்த மங்கையரோ 34

தீமலர்ந்த சாம்பரொரு சேயிழையாய்ச் சேர்ந்துவர
வாய்மலர்ந்து வண்டமிழை மந்திரித்த வாணுதலோ 35

பாட்டும் பொருளும் பரமசிவ னென்றவர்க்கு
காட்டுங் கருணைக் கடலோ கடலமுதோ 36

நெஞ்சிரக்க மொன்றுமிலா நீசர்களங் நாட்கொடுத்த
நஞ்சினிக்கு நல்லமுத மாக்குசித்த நாயகியோ 37

கற்றுணையாய்க் கட்டிக் கடலிலெறி பட்டவர்க்குச்
சொற்றுணையாய் நின்றருளுந் தோன்றாத் துணைவியரோ 38

மேதமைத்தாழ் நீக்கிப்பெருஞ்சோதி காட்டுதல்போல்
பேதமைத்தாழ் நீக்கி வெளிகாட்டும் வித்தகியோ 39

தொண்டனுக்கு நள்ளிரவிற் றூதாகப் போக்கியெங்கள்
அண்டர்பிரான் றன்னை யடிப்படுத்த வாயிழையோ 40

தண்டா மரைக்குளத்தில் தங்குங் கராமொருநாள்
உண்ட பசுங்குழவி யோடிவரச் சொன்னவளோ 41

வாதித்த புத்தர்கடம் வாய்பொத்திக் கைவிரிக்க
ஓதித் திருச்சாழல் ஊமைசொல்ல வைத்தவளோ 42

உள்ளபொரு ளோர்நாலு மொன்றுங் குறையாமல்
வள்ளுவன் வாயால் வழங்கியருள் மாதரசோ 43

முன்மொழிந்த வாயிரத்து முன்னூற்று முப்பதையும்
பின்னொருபா மூன்றடியிற் பேசிவைத்த பெண்மணியோ 44

பட்டபனந் துண்டமொன்று பங்குக்கு மூன்றுபழம்
இட்டப் படிகொடுக்க வேவியருள் ஏந்திழையோ 45

கொஞ்சத் தினைக்காகக் கூழைப் பலாத்தழைக்கச்
செஞ்சொன் முதற்பாவைச் செப்பியரு டேன்மொழியோ 46

ஓரமிறை வன்பொருளுக் குள்ள விலையுரையைக்
கீரன் மதிவாய்க் கிளத்துங் கிளிமொழியோ 47

ஆரியம் நன்று தமிழ்த்தீ தெனவுரைத்தோன்
ஆருயிர் வெளவி யருளா லளித்தவளோ 48

வாய்ச்சதமிழ்க் கம்பனன்று வாய்சோர்ந் துரைத்தமொழிக்
காய்ச்சியாய்ச் சாட்சி யறைந்தருளு மம்மணியோ 49

கம்ப னளித்தவெள்ளைக் காப்பிரண்டுக் காசைகொண்டு
செம்பொற் சரணத் திருச்சிலம்பொன் றீந்தவளோ 50

கூளி புரட்டுங் குடிசைநெடும் பித்திகையை
நாழி பெறுவித்து நடுவித்த நங்கையரோ 51

ஈட்டிக்கும் கூத்தன் எறிவித்த செந்தலைகள்
கூட்டி யுயிர்கொடுத்த கூடன் மலைமருந்தோ 52

வெள்ளக் கலைபொழிந்த மேகமர சோடிருந்து
கொள்ளைக் கவிசொரியக் கூருங் குலக்கொடியோ 53

ஆள்கண் டெதிர்த்த வதிமதுரங் கைப்படையக்
கோள்கொண்டு காலகண்டங் கூறிவென்ற கொற்றொடியே 54

பாமாரி தேக்கிப் பயனுதவான் நாடுமண்ணின்
மாமாரி யாலழிய வார்த்தைசொன்ன மைவிழியோ 55

பொய்யா மொழிமொழிக்குப் போற்றுமே ழேழ்புலவர்
துய்ய முடிதுளக்கச் சூழ்ச்சியொன்று சொன்னவளோ 56

ஞானக் கடன்முழுதும் நான்மூன்று சூத்திரத்தில்
ஆன குழவி யடக்கவரு ளாரணங்கோ 57

ஆனநான் மூன்றினையு மாயவறி வாற்பெருக்கி
ஞானமுனி தண்டுறையில் நாட்ட நயந்தவளோ. 58

சீர்மன்னு மோர்பத்துச் செய்யதமிழ் கேட்டுடனே
போர்மன்னன் பாடை புகட்டியருள் பூங்குழையோ. 59

போற்றும் பொருட்டுறையிற் பொன்போற் கலித்துறைகள்
நூற்றுக்கு நான்மடங்கு நூறுநவல் நுண்ணிழையோ. 60

மாறுரூத் தூதவையிற் காட்டமலர்ச் சண்பகத்தில்
ஆறுகால் காட்டியரு ளம்பா லழகியரோ. 61

மின்ன லிடையாளோ வேத மொழியாளோ
சொன்ன சிவகலைக்குட் சோதியாய் நின்றாளோ. 62

ஓசை யொலியாளோ ஓங்கார நாயகியோ
பேசுவிந்து நாத வடிவமைந்த பெய்வளையோ 63

வன்ன வடிவாளோ மந்திர வாசகியோ
சொன்ன பதமும் பொருளுமாஞ் சுந்தரியோ 64

வண்டரற்றுங் கூந்தன் மதிநுதலோ வண்டமிடேர்
தொண்டரற்ற நீக்கி யருள்சுரக்குஞ் சொன்மகளோ 65

காவி விழியாளோ காமர் மொழியாளோ
ஆவி புகுத்தி யணிந்தெழுது மோவியமோ 66

ஐந்தியலு மைம்பொறியாய் நாற்பொருளும் வேய்த்தோளாய்
அந்தமிலா ஞானம் அடியிரண்டு மானவளோ 67

நூலா லறம்பொருளும் யாழால் நுவலுமின்பும்
மாலையால் வீடும் வழங்குமருள் வான்வடிவோ 68

மூவேந்தர் சீர்த்தியெனும் முத்துமணித் தொட்டிலிலே
பாவேந்தர் தாலாட்டக் கண்வளரும் பாரதியோ 69

(தொடரும்).

---

# * உடைப் பகட்டு

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

இளநலஞ் செறிந்த இளைஞர்களே, எழினல மிகுந்த காளையர்களே! மேனி மினுக்குவான் வேண்டிப் பெரும் பொருட் செலவு செய்து பகட்டான ஆடைகளை யுடுத்திக் கோள்ளுதல் வெறுத்தற்குரியதோர் பழக்கமாகும். இப்பழக்கந்தானும் பதினாறாண்டு கழிந்த ஒவ்வொரு ஆடவர் மாட்டும் மகளிர்மாட்டும் பெரிதும் காணப்படுவதொன்றாகும். நல்லொழுக்கத்தின் பாற்படாத இவ் விழுக்கத்திற்கு ஏதுவாயமைந்தது வீண் பெருமையே யாதலின் அதை ஒவ்வொருவருங் குறிக்கொண்டு தடுத்தல் நேரிதாம். தெருவிடைத் திரிதரும்போதெல்லாம் எதிர்ப்படுவோர் யாவரும் உங்களையே உற்று நோக்கி, நீங்கள் உடுத்திருக்கும் உடைத்திறத்திற் கேற்றவாறு உங்கள் பண்பு நிலையை மதிக்கிறார்கள் என்று கருதும் ஒரு தவறான கொள்கையே வீண்பெருமைக்கு அடிப்படையாகிப் பகட்டுடை யுடுக்கும் தீய பழக்கத்திற் செலுத்துகின்றது. நல்லறிவு படைத்த எவனொருவனும் உடைத்திற நோக்கி உயர்நல முணர முற்ப

---

* இஃது உவில்லியம் காபெட் என்பவரது 'இளைஞர்ப் புகட்டு' என்ற நூலைத் தழீஇயது.

டான்; அன்றி இத்தவறான பழக்கத்தைக் கைக்கொண்ட பிறரோ வெனில் "ஓகோ, இவ் அறிவிலி, நம்மினுங் காட்டிற் சிறக்கவன்றோ பகட்டப்பார்க்கிறான்?" என ஏதுவின்றி உங்களை வெறுக்கத் தொடங்குவர். செல்வந்தர்கள் சீ எனப் புறக் கணிப்பர். வறிஞரோ உளத்தெழுந்த அழுக்காற்றினாலோ அன்றி உங்களை யொத்து உடன் பகட்ட இயலாமையாலோ எட்டியுஞ் சுட்டியும் எள்ளிநகையாடுவர். பகட்டுடை யணிவ தாற் பெறும் பயன் இதுவே யாமெனின் அதைக்கண்டு ஏமாறு வோரு முளர் கொல்?

இனி, ஒவ்வொருவரும் தத்தந்தொழின் முறைக் கேற்றவாறு உடையணிதலே சிறிது. வழக்கறிஞரொருவர் வாட்காரனைப் போலும் அடைப்பக்காரன் அறுவை வணிகன்போலும் உடுத்துச் செல்லல் நகைப்பிற்கிடமேயாகும். குற்றேவல் புரிவோரும் சிறுமுதல் வைத்துப் பல பண்டம் பகரும் கடைக்காரரும், மெய் வருந்த உழைத்தாலன்றி உணவிற்கு வேறு வழியில்லாத உழைப்பாளிகளும் உப்பிற்கு முதவாத வீண்பெருமை கருதிப்பெரும் பொருட்செலவு செய்து பகட்டான உடைகளை வாங்கி யணியக் கருதல் பெருந்தவறெனக் கூறாமலே விளங்கும். அஃது அப்படி யன்று, "இரக்கப் போனாலுஞ் சிறக்கப்போ" என்பது மூதுரை யாதலின் எத்தொழில் புரிந்தாலும், எப்பாடு பட்டாலும் சிறந்த உடை யணிந்து சென்றால் அதற் கேற்ற மிகுபலனை யளியாமற் போகாது என்று கூறினாலோ வெனின் விளக்குதும். வெளிப் பகட்டைக் கண்டு ஏமாறுவோர் பலரல்லர். செயற்கரிய செய்யும் ஆற்றலையும் செய்திறனையுங் கண்டு பிறர் ஒருவரை நன்கு மதிப்பரே யன்றி அணியும் ஆடையின் விலையுயர்வு தாழ்வை நோக்கி மதிப்பாரல் லர். பிறர் நன்மதிப்பு ஒருபுற மிருக்கட்டும், மாதரார் நட்பை யாவது பெறலாகாதோ வெனின், பேதாய், இயற்கை யறிவு அருகிய ஒரு சில பேதையர்கள் ஒருகால் வெளிப் பகட்டைக் கண்டு ஏமாறுவது எளிதாயினும், இயற்கையறிவு செவ்வனே வாய்க்கப்பெற்ற பெரும் பகுதியான பெண்மக்கள் உள்ளீடற்ற வெளிப் பகட்டைக் கண்டு மயங்குவாரல்லர். அன்றி யப்படியே

ஒரு சிலர் ஏமாறுவதாகக் கொண்டு வீண் பகட்டுடையினல் மகளிரை மனைவிகளாகப் பெறுதல் எளிதென ஒத்துக் கொண்டால், அவ்வாறு பெறும் அவர்கள் மாட்டுச் சிக்கனத்தையும், நல்லொழுக்கத்தையும், அன்பையும், அவையாவற்றினுஞ் சிறந்த கற்பையும் எதிர்பார்க்க ஒல்லுமோ? இயற்கை எழில் நலம் மாதரார் மாட்டுப் பெருமதிப்பை யளிக்கு மென்பதிற் றடையில்லை. அஃதவ்வாருக அதனைச் செயற்கை நலமான உடை புனைந்து பகட்டுவது மிகையேயாகும். இயற்கையெழினலம் உணர்ந்து கொள்வதிற் பெண்மக்கட்கு இயற்கையாகவே நல்ல கூர்மையான ஆற்றல் வாய்ந்துளது. மயிரடர்ந்து வளர்ந்து மெய்ம்முழுதும் புழுதி படிந்து கந்தை யுடுத்தித் தளர் நடையுடன் வரும் ஒருவனையும் அவன் நல்ல கட்டழகு வாய்ந்தவனுயின் அதைப் பெண்மக்கள் எளிதில் உணர்ந்து கொள்வார்கள். முடிந்தது முடித்தலாக நாம் உணரக் கிடப்பதோர் உண்மை யென்னவெனின் பெண்மக்கள் நல்லுடை யணிந்து நல்லணி புனைந்து தம்மைத் தாமே பகட்டிக் கொள்ள எத்துணையோ விழையினும், அப்பகட்டை ஆடவர் மாட்டுக் கண்ட விடத்து இகழ்ந்து ஒதுக்குகின்றுர்கள் என்பதே.

எனவே அணியும் உடை வெறுப்பை யளிக்குமாறு அலங்கோலமானதொன்றுயில்லாமல் தூய்மையும் பகட்டில்லாததும் விலைமிகுதியில்லாததாயும் இருத்தலே நல்லதாகும். தூய்மையான மலிந்த உடையே சிறந்ததொன்று. பொன்னும் பட்டுங் கலந்த உடையைக் கண்டு மயங்குவோர் அறிவாளிகளல்லர்.

---

# சிவராத்திரி புராணம்.

[S. அனவரத விநாயகம் பிள்ளையவர்கள், M.A., L.T.,]

சிவராத்திரி விரதம் சைவ சமயிகட்கு விதிக்கப்பட்ட விரதங்களுள் தலை சிறந்தது. மகாசிவராத்திரி விரதம் மாசித் திங்களில் தேய் பிறைச் சதுர்த்தசியிலே அநுட்டிக்கப்படுவது. மாதந்தோறும் ஒரு சிவராத்திரியுண்டு.

சிவராத்திரி மகிமை ஸ்காந்த புராணத்தினொரு பகுதியாகிய பிரமோத்தர கண்டத்துள் இரண்டு அத்தியாயங்களானுரைக்கப் பட்டது. பிரமோத்தர கண்டத்திற்கு வரதுங்கராமபாண்டியர் இயற்றிய தமிழ்மொழிபெயர்ப்பு உண்டு.

வடமொழியில், சிவராத்திரி மகிமை சிவமஹாபுராணத்தில் ஞானசங்கிதையுள் நான்கு அத்தியாயங்களாலும், ஸ்காந்த புராணத்தில் பிரமோத்தர கண்டத்துள் இரண்டு அத்தியாயங்களாலும், உபதேசகண்டத்துள் ஒரு சருக்கத்தாலும் உரைக்கப்பட்டது. இவற்றுள் சிவ மஹாபுராணத்தைத் தமிழ்ப் பண்டிதர் ஈக்காடு. இரத்தினவேலு முதலியார் வசனவடிவாக மொழிபெயர்த்துள்ளார்; பிரமோத்தர கண்டத்தைத் தமிழ் செய்யுளாக எழுதியவர் வரதுங்கராமபாண்டியர். அச்சிட்டு வழங்கும் உபதேசகாண்டம் கோனேரியப்ப முதலியார் செய்யுள் வடிவாக மொழிபெயர்க்கப்பட்டது. வேறு நூல்களிலும் சிவராத்திரி மகிமை ஆங்காங்கே யுரைக்கப்பட்டுள்ளது.

சிவராத்திரி புராணம் 'யாழ்ப்பாணத்துச் சுன்னுகத்தில் எழுந்தருளிய காசி: சு. வரதராஜ பண்டிதர் இயற்றிய'து. 'வல்வை இயற்றமிழ்ப் போதகாசிரியர் ச. வயித்தியலிங்க பிள்ளையால் கரலிகித வழுக்களைந்து தஞ்சாவூர் - சதாவதானம் சுப்பிரமணிய ஐயரது வித்திபாவர்த்தனி அச்சுக்கூடத்தில்' சென்னபட்டனத்தில் விசுவருஷம் ஆவணிமாதம் [1881] பதிப்பிக்கப்பட்டது. இதற்குச் சிறப்புப் பாயிரந் தந்தோர் யாழ்ப்பாணம் மயில்வாகனப்புலவர், யாழ்ப்பாணம் சின்னத்தம்பிப் புலவர், யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை என்பவர்கள். இந்நூல் காப்பு-1, கடவுள் வாழ்த்து 20, பாயிரம்-3. சிவராத்திரியுற்பவச் சருக்கம்-80, சிவராத்திரி மான்மியச் சருக்கம்-52, சுகுமாரச் சருக்கும்-188, அங்குலச் சருக்கம்-104; சவுமினிச் சருக்கம் 62, கன்மாட பாதச் சருக்கம் 81, விபரிசச் சருக்கம்–38, குபேரச் சருக்கம்–47, சாலிகோத்திரச் சருக்கம்–39, எனப் பாயிரமும் ஒன்பது சருக்கங்களும் பாயிரச் செய்யுளுட்பட 715 விருத்தங்களுங் கொண்டது.

இந்நூல் தோன்றிய ஆண்டிலேயே அது வெளிப்பட்ட ஆவணிக்கு அடுத்த புரட்டாதி மதியில் நெல்லை நாதர் இயற்றிய சிவராத்திரி புராணம் வெளிவந்தது. 'இதனைச் சில பிரதி ரூபங்களைக் கொண்டு திருத்தி அதிரிகித்தவா (?) யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டை நா. சிவசுப்பிரமணிய ஐயர் முத்திரிப்பித்துப் பிரசரித்தவர் மேற்படியூர் வே. சதாசிவம் பிள்ளை சென்னபட்டணம்: கிரேவ்ஸ் கூக்ஸன் அண்டு கம்பெனியாரின் ஸ்காட்டிஷ் யந்திர சாலையிற் பதிப்பிக்கப்பட்டது.'

சுன்னாகம் அ. குமாரசுவாமிப்புலவர் தம் தமிழ்ப்புலவர் சரித்திரத்தில் வரதபண்டிதர் வரலாறுரைக்குமிடத்து அவர் சிவராத்திரிபுராணஞ் செய்தவரென் றுரைத்து, நூலிறுதியில் பெயர் மாத்திரையாற் குறித்த புலவருள் நெல்லைநாதர் பெயரையுங் குறித்தார். வரதபண்டிதர் யாழ்ப்பாணத்துள்ள சுன்னாகத்திலே காசிமா நகர வேதியர் குலத்திலே ஏறக்குறைய இருநூறு வருடங்களுக்கு முன்னிருந்த வரகவியென்றும், இப்புராணத்தையன்றி ஏகாதசிப்புராணம், அமுதாகரம் (வைத்திய நூல்), கிள்ளை விடு தூது, பிள்ளையார் கதை முதலிய பிரபந்தங்கள் இயற்றியவரென்றும் அறிகிறோம். சிவராத்திரி புராணப் பாயிரத்தில் இவர்

கந்தமலர்ப் பொழில்புடைசூழ் தில்லைவனத் தறிஞர்திருக்
கடைக்க ணோக்கி
முந்தவுரைத் தனர்பலரு மாயினுநீ யாகமநூன்
மொழிவ ழாமற்
பந்தமறுத் திடுஞ்சிவராத் திரிவிரத சரிதைதனைப்
பாடு கென்னச்
செந்தமிழி னுயர்விருத்தப் பாவதனுற் றிரட்டியொன்றாச்
செப்ப லுற்றேன்

என்றுரைத்தலால் சிதம்பரத்திலே யுள்ள அறிஞர் கேட்டுக்கொள்ள இவர் இப்புராணஞ் செய்தனரென ஏற்படுகின்றது. நெல்லைநாதர் முந்தவுரைத்தவருள் ஒருவர் போலும்?

நெல்லைநாதர் புராணத்திற்குச் சிறப்புப்பாயிரமியற்றியவர் புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார். அவர்

நிலப்பொறை யாற்றும் நெடுமொழி யாநந்தன்
வலத்தினி லான்ற வளம்பொதி சொற்றமிழ்
வல்லோ னென்னு மாயிருஞ் சீர்த்திசால்
நெல்லை நாதப் பேர்கொளு நிபுணன்
வாய்ந்த சீர்விரவும் காந்தமா புராண
மாதிய பன்னூ லாய்ந்தனன் திரட்டி
மூதுல குள்ளோர் மேதக வுணர்ந்தாங்
கொலிவார் திரைக்கண் வளர்வான் கணையாச்
சலியாப் பராரைத் தமனிய மால்வரை
தவராத் திரிபுரந் தழற்றிய பெருமான்
சிவராத் திரிமான் மியமுனாட் டெளிதர
விருத்தச் செய்யுளின் விளம்பின னென்ப

என்று நூலாசிரியரைப் பற்றித் தாம் கேட்டறிந்ததை யுரைத்தனர். இந்நூல் பாயிர அத்தியாயம் - 16, விட்டுணு வராகமாய் உதித்த அத்தியாயம் - 76, அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம் - 70, சூதுகுமாரன் பதவிபெற்ற அத்தியாயம் 90, இயமனுக்குச் சிவனுபதேசித்த அத்தியாயம் - 51, ஆகப்பாயிர முட்பட ஐந்து அத்தியாயங்களும் பாயிரச் செய்யுளுட்பட 303 திருவிருத்தங்களுமுடையது. பாயிரத்துள் 'நூலாசிரியன்' என்ற தலைப்பின்கீழ் ஒரு விருத்தங் காணப்படுகின்றது:

மறைதொ முஞ்சிவ ராத்திரி மான்மியம்
அறிவின் மிக்க அருந்தவர்க் காரிய
முறைசொல் சூதன் மொழிந்தன னற்றமிழ்த்
துறையி லோதினன் சூழ்நெல்லை நாதனே.

வரத பண்டிதர் புராணத்துள் பாயிரம் கடவுளர்க்குத் துதியுரைப்பதோடு சமய குரவர் நால்வர்க்கும் சண்டேசுரர்க்கும் சிவனடியார்க்கும் துதிகளுரைப்ப, இந்நூலுள் விநாயகர் தில்லைவாணன் சுப்பிரமணியர் என்னும் கடவுளர்க்கும் மட்டுமே துதியுரைக்கப்பட்டது. இந்நூலுள் வரும் இரண்டு கதைகளும் மற்றைப் புராணத்தில் அங்குலச் சருக்கத்திலும் சுகுமாரச் சருக்கத்திலும் காணப்படுபவையே. முதலத்தியாய மாகிய விட்டுணுவராகமாய் உதித்தது மற்றையதில் உற்பவச் சருக்கத்

தில் உரைத்த வரலாறே. பிரமனும் விட்டுணுவு மிகலியபொழுது ஒரு சிவராத்திரியன்று சிவபெருமான் ஒளியுருவாய்த் தோன்ற விட்டுணு அடியைத் தேட வராக உருவெடுத்ததைக் குறித்தது அத்தியாயப் பெயர். இறுதியதாகிய இயமனுக்குச் சிவனுபதேசித்த அத்தியாயம் மாபாதகங்கள் புரிந்த சுகுமாரன் ஆவியை இயமதூதர் கவர வொட்டாது சிவகணங்கள் பரகதியுய்த்தமையால் மனங்கவன்ற இயமன் சிவசந்நிதிக்கண் எய்தித் தனக்குப் பெருமான் முற்காலத்துத் தந்த முத்திரையைத் திருமுன் வைத்து அரசாட்சி வேண்டா வென்று விண்ணப்பிக்கப் பெருமான் சிவராத்திரிப் பெருமையை யியம்பி அவனை மகிழ்வித்துத் தன்னூர் போக விடுத்த வரலாற்றை யுரைக்கும்.

1908-ல் சிவராத்திரி மான்மியம் என ஒரு கத்திய நூல் யாவருக்கும் எளிதிலே பயன்படும் பொருட்டு, கொழும்பில் நடைபெறும் சைவபரிபாலன சபைத்தாபகர் யாழ். சி. செல்லையாப்பிள்ளையால் செய்து, சென்னை; ரிப்பன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.' இதனுள் சிவராத்திரிவரலாறும் அவ்விரதம் அநுட்டிக்குமுறையாதிகளும், சிவராத்திரி விரத மநுட்டித்து முத்திபெற்றோராகிய குருத்ருஹன்: விபரிசன்: கன்மாடபாதன், சவுமினி (ஒரு ஸ்திரீ) சுகுமாரன்: அங்குலன், குபேரன், சாலிகோத்திரன் என்றின்னோர் சரித்திரங்களும் உரைக்கப்பட்டுள்ளன.

சாதாரண ஹ ஆடிமீ [1910] வரதபண்டிதர் சிவராத்திரி புராணம் 'பிரம ஸ்ரீ திரு. சிவாநந்த சாகர யோகீசுரரவர்கள் மாணாக்கர்...மா. நமசிவாயம்பிள்ளையவர்கள் இயற்றிய அரும் பிரயோகவுரையும் வசன மு' ங்கொண்டு வெளிவந்தது.

---




திருஞான சம்பந்த சுவாமிகள்

# திருத்தாலாட்டு.

இது

ஸ்ரீகாழி திருஞான சம்பந்தக் கண்ணுடைய வள்ளலார் ஆதீனத்துப் பிரதம ஞானசாரியராய் விளங்கிய ஸ்ரீமத் கண்ணுடைய வள்ளலார் இயற்றியருளியது:

ஸ்ரீகாழி வித்வான் மகா-௱-௱-ஸ்ரீ

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

அவர்களால் ஏட்டுப்பிரதிகளினின்று எழுதப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

காப்பு.

திருஞான சம்பந்தச் செல்வர்தமைத் தாலாட்டத்
திருவேழ மாமுகவன் சீர்ப்பதங்கள் காப்பாமே.

நூல்.

காழியினின் மேய கவுணியர்க டங்குலத்தி
லாழியுல குய்யவென்றே யன்றுதயஞ் செய்தாரோ. 1

பிறவிக் கடன்மூழ்கும் பேயனையே யாளவென்று
புறவத் திருப்பதியிற் பொற்கோலங் கொண்டாரோ. 2

அருஞானப் பாலமுதை யம்மைதர வுண்டருளித்
திருஞான சம்பந்தச் சீர்ப்பெயரும் பெற்றாரோ. 3

கற்றார் தொழுங்கோலக் காவரனை ரைப்பாடிப்
பொற்றாளம் வாங்குமலர்ப் பொற்கையினில் வைத்தாரோ. 4

அரத்துறையி லீச னடிக்கமல முன்னி
வரக்கருணை முத்தின் மணிச்சிவிகை பெற்றுரோ. 5

குவிகை சென்னி கொண்டடியார் கூத்தாட முத்தின்
சிவிகையினி லேறித் திசைவிளங்க வந்தாரோ. 6

விடையமரு மண்ணலருள் வெண்கதிர்சேர் முத்தின்
குடைநிழற்ற ஞானக் குருமணியாய் வந்தாரோ. 7

பொற்காளம் நற்காழிப் புண்ணியன்வந் தானென்னுஞ்
சொற்கூற வெங்களருட் டோன்றலென வந்தாரோ. 8

பரசமய கோளரிவந் தானென்று பண்பாட
லுரைசெயும்பொற் சின்னம்விடை யோனருளாற் பெற்றுரோ. 9

தாரையோ தாதுணர்ந்த சம்பந்தன் வந்தானென்
றேர்பெருக வூத வெழுந்தருளி வந்தாரோ. 10

கயலகன்மா கண்ணுள்மெய்க் கன்றியவெந் தீயா
முயலகன்றீர்த் தேயவட்கு மோட்ச மளித்தாரோ. 11

கொடிமாடச் செங்குன்றூர்க் கொம்பொருபா கற்பணியு
மடியார்க்கு மந்நாட் டவர்க்குமிடர் தீர்த்தாரோ. 12

கந்தரமா காளம்வைத்த கண்ணுதல்பட் டீசர்முத்தின்
பந்தருள் செய்யப் பணிந்தேற்றுக் கொண்டாரோ. 13

ஆயிரஞ்செம் பொற்கிழிதென் னுவடுதண் டுறையரனைச்
சேயவா யாற்பதிகஞ் செப்பியே பெற்றுரோ. 14

மருகனகர் தன்னில் வணிகற் பணிதீண்டப்
பொருகனக வில்லாரைப் போற்றியுயிர் தந்தாரோ. 15

வீழி மிழலையிறை விண்ணிழிகோ யிற்சிவனர்
காழியிற்கோ லத்துடன்பொற் காசுதரப் பெற்றுரோ. 16

மதுரமொழி மன்னர்திரு வாக்காற் கபாடஞ்
சதுர்மறை யென்றிசைத்தே தாழ்காப்புச் செய்தாரோ. 17

திருவாய்மூ ரத்தன் றிருக்கோலங் கண்டருளிப்
பெருவாய்மை மன்னவர்க்குப் பின்காட்டிச் சென்றுரோ. 18

தென்னனெடு மாறனுறுந் தீயவெப்புக் கூனகலப்
பன்னுதமிழ் மந்திரத்தாற் பானீற்ருற் றீர்த்தாரோ. 19

போகமார் நற்பதிகம் பொற்றிருக்கை யாலெடுத்து
மாகம்பார் போற்றவங்கி வைத்தெடுத்துக் கோத்தாரோ. 20

வையைநெடு மாறனவை மாமுறையா மேடதனை
யையபா கன்னருளா லாற்றெதிரே விட்டாரோ 21

புண்ணரு நாறுதலைப் புன்சமண வஞ்சகரை
யெண்ணா யிரங்கழுவி லேற்றவென்று வந்தாரோ 22

கொள்ளம்பூ தூர்நதியாற் கூடுமன்ப ரைப்பிறவி
வெள்ளமொழித் தோடமெனு மேல்வீடு வைத்தாரோ. 23

புத்தர்களை வென்றுகொடும் புல்லறிவு தீர்த்தவரை
மெய்த்தவரா கக்கருணை மேருவென வந்தாரோ. 24

காயாப் பனையையன்பர்க் காக்காய்க்கப் பண்ணுவித்து
வீயாம லப்பனைக்கு வீடு மளித்தாரோ. 25

ஆலங்காட் டப்ப ரயர்த்தனையோ பாடவென்று
கோலங்காட் டப்பதிகம் கூறித் தொழுதாரோ. 26

அங்கமதைப் பூம்பாவை யாமயிலாப் பூரிலருட்
சங்கரர்பே ரன்பாலித் தாரணியிற் கண்டாரோ. 27

வருமணத்தா மல்லிறப்பு வாராம னல்லூர்ப்
பெருமணத்தா ரன்பர்க்குப் பேரின்பந் தந்தாரோ. 28

வாழி திருஞான சம்பந்தர் வாக்கரசர்
வாழிநம்பி யாரூரர் வாதவூர் மன்னவரே. 29

வாழிதொண்டர் சீர்பரவு வார்சேக்கி ழார்முனிவர்
வாழி சிவனடியார் வாழி சிவதலமே. 30

திருத்தாலாட்டு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் கோளறு பதிகம், திரு
நீலகண்டப்பதிகம் முதலிய திருப்பதிகங்களைப்பாடி ஆண்

பெண் பாலாருடைய துன்பத்தை நீக்கிப் பரமானந்தப் பெரு வாழ்வை யருளியது கருதி, அந்நாயனர்மேல் இந்தத் திருத் தாலாட்டை ஸ்ரீ காழிக்கண்ணுடைய வள்ளலார் யாம் ஓதியுணர்ந்து உய்தற்பொருட்டும், தாய்மார் தமது இளங்குழந்தைகளைத் தாலாட்டி அச்சிசுக்களுக்கு நேரிடும் பாலாரிஷ்டம் முதலிய தோஷங்களை நீக்கிச் சுகசரீரத்தோடு வளர்த்தற் பொருட்டும் பாடியருளினர்.

---

# செந்தமிழ்ச் செல்வி வாழ்த்து

தெய்வ மொலிக்கு மோர்பக்கஞ்
செஞ்சொ லொலிக்கு மோர்பக்கந்
திகழுஞ் சைவ நன்னயங்கள்
செறிந்திங் கொலிக்கு மோர்பக்கம்
உய்யும் நெறிசேறுல கொழுக்கம்
உணர வொலிக்கு மோர்பக்கம்
உயரும் நீதி நியாயமொழி
யோங்கி யொலிக்கு மோர்பக்கம்
வய்ய நிகழ்ச்சி பலவாக
மாண்பி னொலிக்கு மோர்பக்கம்
வானத் துயருஞ் சைவமட
வளங்க ளொலிக்கு மோர்பக்கம்
பொய்வம் பில்லாப் பழந்தமிழின்
புலமை யொலிக்கு மோர்பக்கம்
போற்றுஞ் செல்வி சிலம்பின்கட்
புகழ்கால் பரல்கள் பண்பிவையே.

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை.

சீர்காழி 3—2—30

# மாயாவதி

[திரு. எம். பி. எஸ். வேலாயுதம்.]

(இது "மாடர்ன் ரெவியூ" வில் வெளிவந்துள்ள 'Base Metal' என்ற நவீனத்தின் மொழி பெயர்ப்பு. சில விடங்களில் கூட்டியும், சில விடங்களில் குறைத்தும் பெயர்களை மாற்றியும் தமிழ் நாட்டுக்குத் தக்கவாறு தழுவி எழுதப்பட்டுள்ளது.)

மாரி காலம் கடந்து நீலவானம் தோன்றியது. சென்னை நகரில் சிற்சில மேகங்கள், பனிபனைய வெண்மையுடையன வாய், கண்களுக்கின்பமளிக்கத் தக்கனவாய்ப் போய்க் கொண் டிருந்தன. இத்தகைய நாளில் வீட்டிற்குள் அடைபட்டிருப் பது முடியாது. சென்னையில் மாரிகாலம் எத்துணை இடைஞ் சல்களை விளைக்கிறதென்பதை சென்னையில் வதிபவர்களே உணர முடியும். இன்று சென்னையிலுள்ள எவரும் வீட்டிற்குள்ளிருக்க விரும்பவில்லை.

ஓர் சிறு வீட்டின் முன் பக்கத்து அறையில் இரு வாலிபர் கள் அளவளாவிக் கொண்டிருந்தார்கள். அவ்வீடு நகரின் முக் கிய தெருக்களி லொன்ருகிய தங்கசாலைத் தெருவில் அமையப் பெற்றது. அவர்களில் ஒருவனுக்கு வயது இருபத்தைந்து ஆண்டுகள் நிரம்பியிருக்கலாம். அடுத்தவன் சிறிது மூத்தவன்.

'நீ கொடுக்கும் தேயிலைப் பானத்துக்காக எவ்வளவு நேரங் காத்துக் கொண்டிருக்கிறது. நான் இப்போதே வெளியே போகவேண்டும்'' என்ருன் இளையோனுகிய சொக்கநாதன்.

'பொறு, பொறு, நீ பொறுமையாயிருக்க இன்னும் கற்றுக் கொள்ளவேண்டும். பொறுமையிடனிருந்தால் அதற்குத் தக்க பலன் கிடைக்கும்' என்று தன் நண்பனைத் தட்டிக் கொடுத் தான் கார்த்திகேயன்.

சொக்கநாதன்: எனக்கு ஒரு பலனும் வேண்டாம். தேயிலைப் பானம்தான் இப்போது வேண்டும். ஏ! கார்த்திகேயா! நீ பெரிய ஏமாற்றுக் காரனுகவல்லவோ இருக்கிருய். ஜனவரிமீ சந்தான்

வெளியில் செல்வதற்கு ஏற்ற காலமென்று நீ எழுதியிருந் தாய். நானும் வந்துவிட்டேன். நீயோ உன் அறையை விட்டு வெளியே அசைய மாட்டேனென்கிருயே. நான் உன்னை நம்பி யது முட்டாள்தனம்.

கார்த்திகேயன்: "நான் கடவுளுமல்ல, அல்லது தட்ப வெப்ப நிலை இலாகாத்தலைவனுமல்ல. வழக்கமா கமாரி காலம் ஜனவரி யில் ஓய்ந்து விடும், இவ்வாண்டில் அவ்வாறில்லாவிட்டால் நானே அதற்குப் பொறுப்பாளி? இன்னும் ஜனவரிதானே? நீ வந்து ஒருவாரங்கூட ஆகவில்லையே." இச்சமயத்தில் தேயிலையும் வந்து விட்டதால் அவர்களுடைய வாய்ச் சண்டையும் நின்றது:

சோக்கநாதன்: மதுரையில் ஓர் தனவானுடைய தத்துப் புதல்வன். அவனுடைய சொந்தத் தந்தையும் இறந்து விட்டார். அவனைத் தத்தெடுத்தவரும் காலமானர். அவனுடைய தாயார் மட்டும் உயிருடனிருக்கிருள்.

அவர்கள் தேயிலைப்பான மருந்தி விட்டு நல்ல ஆடைகளை யணிந்து கொண்டு வெளியே புறப்பட்டுவிட்டார்.

"எங்கே போக? "என்று வெளியில் வந்தவுடன் கார்த்தி கேயன் கேட்டான்

சோக்கநாதன்:—"எனக்கு அதெல்லாந்தெரியாது நடந்தே போவோம். நான் பட்டணத்தைப் பார்க்க வேண்டும்?

கார்த்திகேயன்:—"பல ஆண்டுகட்கு முன் உன் தந்தை இவண் போந்திருந்த காலை பலருடன் நட்புரிமை பூண்டிருந் தார். அவர்களில் சிலர் இன்னும் உயிருடனிருக்கலாம். இங்கே யேயிருப்பார்கள். அவர்களைச் சந்திக்க வேண்டுமென்று உன க்கு விருப்ப மிருந்தால், உன்னை இட்டுக் கொண்டுபோய் அவர் களுக்கு அறிமுகஞ் செய்து வைக்கிறேன்."

சோக்கநாதன்:—"மூடன் போல் உளராதே. இருண்ட அறைகளிலுட்கார்ந்து சாயங்காலத்தில் கிழங்களுடன் பேசிக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. அந்தக் கடமைகளுக்கெல்

லாம் காலமிருக்கிறது. பசியால் திரும்ப நேரிடுகிறவரை நான் சுற்றிக் கொண்டிருக்கப் போகிறேன்.''

கார்த்திகேயன்:—அப்படியானால் சரி, நடுராத்திரிவரை சுற்றிக்கொண்டிரு. ஏனென்றால் வீட்டைவிட இங்கேயே விடுதிகளில் நல்ல உணவு கிடைக்கும். என் தவசுப்பிள்ளை சமைத்த உணவை நீ ஏற்கனவே உண்டு ருசி பார்த்திருக்கிறாய். பசியிருந்தால்தான் உண்பதற்கும் விருப்பமேற்படும். இங்கே பல வகை உணவுகளும் கிடைக்கும் நளபாக மாகவுமிருக்கும், அதிகச் செலவுமில்லை.

சொக்கநாதன்:—“இல்லை, இல்லை. நான் என் தாயாரிடம் விடுதிகளில் உணவருந்துவதில்லையென்று வாக்குறுதிகொடுத்து வந்தேன். ரயிலில் கூட நான் பழவர்க்கங்கள் தவிர பிறிதொன்றும் நான் தொடவில்லை.''

சொக்கநாதனுடைய (தத்துத்) தாயார் பெரிய வைதீகம். பழைய வழக்கங்களை விடாத ஓர் கிழ அம்மையார். தன்கணவன் உயிருடனிருக்கையிலேயே எல்லாரையும் திட்டப்படுத்தி வைத்திருந்தாள். கைம்பெண்ணான பிறகோ கேட்கவேண்டியதில்லை. அம்மையாரைக் கண்டாலே உற்றாருக்கும் வேலைக்காரருக்கும் நடுக்கம்.

கார்த்திகேயன்:—அடபோ! உன் தாயார் இதனையெல்லாம் எப்படித்தெரிந்து கொள்வாள்? நீ செல்கிற விடமெல்லாம் உன்னைத் தொடர்ந்து துப்பறிய ஆளனுப்பியிருக்கிறாளென்று நினைக்கிறாயா? நீ இங்கு உல்லாசமாயிக்க வந்திருக்கிறாய். நான் சொன்னபடி செய்யின் பல விநோதங்களை நீ உணரலாம்.''

சொக்கநாதன்:—“உனக்குத்தெரியாது. அந்த அரைப்பைத்தியங்களை நான் நம்பமாட்டேன். என் சொந்தத்தாயாகவிருப்பின், நான் சிறிதும் பொருட்படுத்த மாட்டேன். நான் தவறிழைப்பதை அவள் கண்டு கொண்டாலும், சில நாட்களுக்குத்

தான் என்னைத் திட்டிக் கொண்டிருப்பாள். ஆனால் இவர்களோ! ஒரு மகனை விலைக்கு வாங்கும் பெண் மகள், அவனை வெளியில் துரத்திவிடவுங்கூடும். சட்டம் இதற்கு இடங்கொடுக்கிறது. பணத்திற்காக நான் என் பெற்றோரையும் என் பெயரையும் கைவிட்டு விட்டேன், நான் கவலையின்மையாய் நடந்து அந்தப்பணத்தையும் இழந்து விடப்போவதில்லை."

கார்த்திகேயன்:—"அவ்வளவு தூரம் நீ பயப்படுகிறதாயின் நான் உன்னை வற்புறுத்தமாட்டேன். ஆனால் ஈண்டு எவரும் உன்னைக்கண்டு கொள்ள மாட்டார்கள். அவள் உன்னைப்பற்றி அவ்வளவு ஐயுறுகிறாளா?"

சோக்கநாதன்:—"ஆம், ஆம்: ஒருவாறு ஐயுறுகிறாள்: மதுரையில் எப்போழ்தும் அவளுடைய ஆட்கள் என்னைப்பின் தொடர்ந்தே வருவார்கள். இத்துணை தூரம் யாரும் வந்திருக்கிறார்களா வென்பது உனக்குத் தெரியவில்லை."

கார்த்திகேயன்:—"ஆனால் இது பொறுக்க முடியாதது. நானாயின் ஒரு வாரத்திற்குள் ஒடி விடுவேன். இது பணத்திற்காக உன்னை விற்று விடுவதாக வல்லவாவிருக்கிறது?"

சோக்கநாதன்:—நீ சொல்வது சரிதான், ஆனால் பணமல்லவோ! நீ ஒரு தரம் செல்வவானாய் விட்டாய், பின்னால் அதனை விட்டுவிடுவது முடியவே முடியாது. பணஞ்சம்பாதிக்க வேறு வழியில்லாவிட்டால் உன் ஆன்மாவையுங் கூட விற்றுச் சம்பாதிக்க வேண்டியது தான்."

இவ்வாறு பேசிக்கொண்டே இருநண்பர்களும் நடந்து சென்றார்கள். வழியிலுள்ள கடைகளும் வீடுகளும் மின் சார விளக்குகளால் பல விதமாய் அலங்கரிக்கப்பட்டுக் கண்களைக் கவரும் விதமாய்க் காணப்பட்டன. சொக்க நாதனுக்கோ ஈதெல்லாம் புதிதாய்த் தோன்றியது.

"என்ன எங்கு பார்த்தாலும் விளக்குகள் மயமாயிருக்

கின்றன? பட்டப்பகல் போல நிலா வடிக்கையில் விளக்குகள் எற்றுக்கு!" என்றான் சொக்கநாதன்.

கார்த்திகேயன்:—நீ நாட்டுப் புரத்தான் என்பது சரியா யிருக்கிறது. இஃது ஜனவரி மாசமென்பதை நீ அறியாயோ? பலவூர்களிலிருந்தும் வேடிக்கை பார்க்க மக்கள் திரள் திரளாய் இந்நகருக்கு வந்திருக்கிறார்களே. அவர்களும், நீயும் மகிழ்ச்சி யடைய வேண்டுமென்று தான் இதெல்லாம் செய்யப்பட்டிருக் கிறது. ஈதோபார். முனிசிபல் கட்டிடம் இவ்வாண்டில் தான் இம்மாதிரி விளக்குகளால் ஒளி பெற்று விளங்குகிறது."

சொக்கநாதன்:—"போதும், போதும், நிறுத்து உன் வாய் மாரியை. எனக்குத் தாகமாயிருக்கிறது. ஒன்றல்ல, இரண்டு தமிழர் தேயிலைப்பானம் எனக்கு வேண்டும்."

கார்த்திகேயன்:—"நான் தான் அப்போதே சொன் னேனே! நான் சொன்னபடி செய்தால் நீ உடனே தாகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். அதோ விருக்கிறது சிற்றுண்டிச் சாலை. வா, போய்த் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம்."

சொக்கநாதன்:—உள்ளே பார்த்தான். இடம் சுத்தமாகத் தானிருந்தது. அங்கே ஆட்களிருந்த போதிலும் அவ்வளவு கூட்டமில்லை. "சரி வா, உள்ளே போய் ஏதாவது குளிர்ச்சி யான பானம் செய்து வரலாம். அந்தக் கிழவி இதற்கெல்லாம் எதிர் மொழி சொல்லமாட்டாள். மதுரையிலுங் கூட நான் இரண்டொரு தடவைகளில் இவ்வாறு செய்ததுண்டு. அப் போதெல்லாம் அவள் ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆனல் ஒரு நாள் நான் கறி தின்பதைப் பார்த்து விட்டாள். பிரம்பெடுத்து என்னை அடிக்க வந்து விட்டாள்" என்றான் சொக்கநாதன்.

(தொடரும்)

## வாருடாபிஷேக விழா

திரு. திருநெல்வேலி, N. இராமலிங்கம் பிள்ளையவர்கள் இல்லத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் சித்தவிநாய கப் பெருமானுக்கு 1105-ம் ஆண்டு தைமீ 22-ம் நாள் (4-2-30) செவ்வாய்கிழமை யன்று வருடாபிஷேகம் அல்லது ஆண்டுக்

குடம் நீராட்டு விழா நடைபெற்றது: அன்று மாலை 6-மணிக்கு லால்குடி, திருவாளர் அ. மு. சரவணமுதலியார் அவர்கள் 'கண்ணப்பர்' என்னும் பொருள் பற்றியும், நாகர்கோயில் திரு. கே. ஆறுமுகம் பிள்ளையவர்கள் 'தொண்டர்கள்' என்னும் பொருள் பற்றியும் சொற்பொழிவுகளைக் கேட்டார்ப் பிணிக்குந் தகையனவாய் நிகழ்த்தினார்கள். திருவாளர் N. இராமலிங்கம் பிள்ளையவர்களுடைய பேரருட் செய்கை பெரிதும் பாராட்டற்குரியது.

## மதிப்புரைகள்

ஆசார ஒழுக்கமுறை. இது திருவாளர் திருநெல்வேலி பரமசிவன் பிள்ளையவர்களால் இயற்றப்பட்டதோர் அரிய உரைநடை நூலாகும். 'செய்வன' 'தவிர்வன,' 'நித்திய கருமானுட்டானம்' 'சிவாலய தரிசனம்' 'திருமுறைப் பாராயணவிதி' 'விவாகம்' என்னுந் தலைப்புகளால் இந்நூல் ஆக்கப்பட்டிருக்கின்றது. சான்றோர்கள் தமது மெய்யுணர்ந்த பழக்கத்திற் கண்டு வைத்த அருங்கருத்துக்களெல்லாம் இதன்கண் மிகவும் விளக்கமாய் விரித்துரைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளெல்லாம் இக்காலத்திற் பழக்கத்தில் வரல்வேண்டுமென்னும் முனைந்த உணர்ச்சியுடனேயே இந்நூலை இதன் ஆசிரியர் இயற்றியிருக்கின்றாரென்பதும் நன்கு புலனாகின்றது. யாவரும் அறிந்து கொள்ளுதற்குரிய நடையில் உரிய இடங்களில் தகுந்த மேற்கோள்களுடனும் இஃதெழுதப்பட்டிருத்தல் அறியற்பாலது. நூறு பக்கங்களுள்ள இந்நூலின் விலை அணா ஐந்துதான். ஆதலால் இந்நூலைத் தமிழ் மக்கள் அனைவருங் கட்டாயம் வாங்கிப் படித்து, உண்மை தெரிந்து அதற்குத்தக ஒழுகுதல் இன்றியமையாத கடனாகும்.

திருக்குறட் சாரம்: இப்பெயர்கொண்டதொரு நூலும் மேற்கூறிய ஆசிரியரவர்களாலேயே எழுதப்பட்டிருக்கின்றது. தெய்வத் திருவள்ளுவர் அருளிச்செய்த திருக்குறட் கருத்துகளை ஒருவகையாலேனும் மக்கள் அறிந்துகொள்ளல் கருதி, அந்நூலின் அறப்பால் பொருட் பால்களில் ஒவ்வோரதிகாரத்திலும் ஒவ்வோரரிய திருக்குறளை யெடுத்து ஆசிரியர் பரிமேலழகர் எழுதிய உரையைப் பெரும்பாலுந்தழுவியே விரிவான விளக்க உரை வரைந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு திருக்குறளும் பெரும்பாலும் அது நிற்கும் அதிகாரத்தின் ஏனைத்திருக்குறள்களின் பிழிவாயிருத்தல் பெரிதும் அறிந்து மகிழற்பாலதாகும்; பெரும்பான்மையும் மாணவர்க்கு இது நன்கு பயனாகும். தமிழ் நன் மக்கள் இதுபோன்ற அரிய நூல்களை நன்கு போற்றிப் பயன் பெறுதல் வேண்டும். உ௬௰ பக்கங்கள் கொண்டு முழுக்கலிக்கோ கட்டிடத்துடன் அமைந்த இந்நூல் 10 அணாவே விலையுள்ளதாயிருக்கிறது.

மேற்காட்டிய இவ்விரண்டு நூல்களையும் விரும்புவோர் 'திருவாளர் தி. சா. பரமசிவன் பிள்ளையவர்கள், ஞான சம்பந்த நிலையம், ௨௨, பார்த்தசாரதி நாயுடு தெரு, திருவல்லிக்கேணி, சென்னை' என்னுமிடத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்வாராக!

---

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு ௮ } மெய்கண்டான்யாண்டு-௭௱௭ மாசித் திங்கள் 1930௵ பிப்ரவரி௴—மார்ச்சு௴ { பரல் ௨

திருச்சிற்றம்பலம்

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனேநீ வாழுநாளுந் [வான்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு மேரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா
[மன்றே.

சுந்தரர்.

உரை.

மடித்து, மாறுபட்டு ; ஆடும், உடனிருக்கும்; 'சலதியொடாடி' யென்னுமிடத்து அதன் உரைகாரர் அடியார்க்குநல்லார் "ஆடுதல் உடையனாதல்" என்று உரைத்தமை காண்க. மடிமை, சோம்பல்: 'சோம்பலில் நிற்றலேயல்லாமல், மனனே, நீ அதனினின்றும் நீங்கி உலக வாழ்வில் முயற்சியுற்று வாழு நாட்களிலும் கூற்றுவன் தமர்கள் நின் வாழ்வைத் தடுத்து அலைத்துச் செக்கிலிட்டு ஒறுக்குங்கால் புலியூர்ச் சிற்றம்பலத் தெம்பெருமான் தடுத்தாட் கொள்வான் என்க. விரைந் தாடு கரதலம் ஈண்டுக்'கடுத்தாடு கரதல' மெனப்பட்டது. தமருகம், உடுக்கை; இது நாதத்துக்கு அறிகுறியாம். 'எரியக' வென்பது எரி,

யெரியும் அகல்; புலியூர், தில்லை புலிக்கால் முனிவர் வழிபட்ட ஊராக லின் அஃது அப்பெயர் பெறுவதாயிற்று. பெற்றுமென்னும் பன்மை தன்னோடு மனனத்தைக் கூட்டியுரைத்தவாறும்.

பாரூரு மரவல்கு லுமைநங்கை யவள் பங்கன் பைங்க ணேற்ற
னூரூரன் றருமனூர் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கோள்வா
ணூரூரன் றம்பிரா னாரூரன் மீகோங்கி லணிகாஞ் சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்று மன்றே.

'ஊர் ஊரன்', சிவபெருமான், பிச்சைக்காக ஊரூராய்த் திரிபவ னென்பது. 'ஆரூரன்றம்பிரா' னென்ற விடத்து, ஆரூரன் என்றது, நம் பியாரூரர் தம்மைக் கூறிக்கொண்டபடியாம். பின்னா ஆரூரன் என்பது திருவாரூரன் என்றற்கு ; ஆவது திருவாரூரின்கண் எழுந்தருளியிருக் குஞ் சிவபிரா னென்க. மீ, மேற்கென்னும் பொருட்டு, கொங்கு. ஒரு நாடு; இப்பாட்டில் ஆரூரும் கொங்கும், காஞ்சியும், பேரூரும் புலியூரு டன் கூறப்பட்டன. காஞ்சி யென்றது, நீட்டல் முற்பாட்டில் வந்த மனனே' என்பதை ஈண்டுங் கொள்க.

செடியேன் றீவினையிற் றடுமாறக் கண்டாலும்
அடியா னுவவெனு தொழித றகவாமே
முடிமேன் மாமதியும் மரவும் முடன்றுயிலும்
வடிவே தாமுடையார் மகிழுங்கழிப் பாலையதே.

செடியேன் தீயேன் ; ஆவ, வியங்கோள்; மேம்படுக வென்பது, எனுது நீங்குதல் தகவாகுமோ என்க; இவ்வேகாரம், வினு : ஏனையிரண் டும் அசைகள். கழிப்பாலையது என்பதில், அது பகுதிப்பொருள் விகுதி; கழிப்பாலையது ஒழிதல் தகவாமே என்று வினைமுடிக்க ; பொருட் டன்மை அது நிகழும் இடத்தின்மேல் ஏற்றிக் கூறப்பட்டதாகும்.

இத்தனை யாமாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

இத்தனையாமாற்றை இவ்வளவாகும் வகையை; என்றது சுந்தரர் தாம் திருக்குருகாவூரை நோக்கி வழிக்கொண்டு பசியாலுந் தாகத்தா

லும் வருந்துங்கால் இறைவன் தமக்குக் குளிர்ம்பந்தரமைத்துத் தண்ணீரும் பொதி சோறும் அருளிச்செய்த அருட்டிறங்களை யெல்லாமென்க. சிவபிரான் பித்தராகா ரென்றற்குப் 'பித்தரே யென் றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்' என்றார். 'முத்தினை மணிதன்னை' யென்பனவெல்லாம் படர்க்கை முன்னிலை வழுக்கள். உள்ளுருகிக் கூறுமிடங்களில் இவ்வாறு நேர்தல் மரபேயாம், வெள்ளடை அத்திருப்பதியிலிருக்குந் திருக்கோயிலின் பெயர்.

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனுக வுண்பலிக் குழல்வானே
காடுநின் னிடமாகக் கடுவிரு ணடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

'பசிதீர்ப்பா' யென்றது மேற்காட்டிய வரலாற்றைக் கருதியென்க; பலி, பிச்சை; கடுவிருள், மிக்கவிருள். ஆவது நள்ளிரா வேடன், நடமாடுந் திருக்கோல முடையவ னெனினுமாம்.

வளங்கனி பொழின்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே.

வளங்கனி, தசைகொழுவிய பழம்; விளங்கொளி, வினைத்தொகை; உறையான், வினையாலணையும் பெயர்; கிளை, வகை; இளமைப் பருவ வகையையுடைய ஆரூரன் என்க; அன்றிக் கிளை, ஒளியுமாம்; வனப்பகை, யேயர்கோன்கலிக்காம நாயனார் திருமகள்; அவள், பகுதிப்பொருள் விகுதி: ஏ, அசை.

இளவழகனார்.



# தலைமைப் பேருரை

(௧௮-ம் பக்கத் தொடர்ச்சி)

கடவுள் உண்டென்ற சமயங்களெல்லாம் அவரைக் குறியீடாகவும் மக்கள் சாயலாகவுமே அமைத்துள்ளன (i.e., the Conception of God is symbolical and anthropomorphic). எந்தத் துறையில் சென்று பார்த்தாலும் மொழிகளால் வெளியிடுவதென்றால் மக்கள் சாயலாகத்தான் பேச இயலும் (i.e., Human expression is inevitably anthropomorphic) என்று ஆசிரியர் வில்லியம் கெல்லி ரைட் கூறுகிறார். மலையின் உச்சி, ஊசியின்கண், புத்தகத்தின் காது, ஆற்றின் முகத்துவாரம், கெடியாரத்தின் கைகள், நாற்காலியின் கால்கள், மலையின் அடிவாரம் (i.e , the eye of a needle, the ears of a book, the mouth of a river, the hands of a clock, the legs of a chair and the foot of a mountain) என்றெல்லாம் மக்கள் உறுப்புக்களை வைத்து நாம் சொல்வதுதானே வழக்கம். நாற்காலியின் கால்களைக் குறிப்பிடுதற்குக் "கால்கள்" என்ற சொல்லைத் தவிர வேறே எந்தச் சொல்லும் எந்த மொழியிலும் வழங்கப்படுவதில்லை. அறிவியல் துறையில் பார்த்தால் ஓர் அணு மற்றொன்றை "அமுக்குவ"தாக (i.e., presses)த் தானே கூற முடியும். ஆகையால் கடவுள் படைப்பில் எந்தப் பொருளையும் அளப்பதற்கு மனிதனே அளப்பவனுமாகிறான், அளவுகோலுமாகிறான் (i.e., man is both the measurer and the measure of the Universe). ஆகையால் கடவுளை மக்கள் சாயலாகத்தான் வைத்து அறியமுடியும். வேறு வழியில்லை. எனவே, கடவுளை எண்குணத்தராகக் குறியிட்டிலும் மக்கள் போன்றவராக உருவத்திலும் வழிபடும் நமது சமயக் கொள்கைக்கு இழுக்கென்னை? உருவ வழிபாடு கூடாதென்று கூறும் மேதாவிகட்கு நான் ஒன்று கூற விரும்புகிறேன். உருவ வழிபாடு கூடாதென்னும் ஆங்கில பிராடெஸ்டண்டு கிறிஸ்தவர்கள் யூனியன் ஜாக் என்னும் கொடியை வணங்குகிறார்கள். ஏன்? அந்தக் கொடி ஒரு குறியீடாகயிருக்கிறது. வெள்ளையும் சிவப்

பும் நீலமும் கலந்த ஒரு முழம் துணி என்றெண்ணி ஆங்கில மக்கள் அதை வணங்கவில்லை. தங்கள் தேசத்தின் பெருமையையும் உரிமையையும் இன்னும் பலவற்றையும் அது குறிப்பதாகவே நினைந்து வணங்குவதுமன்றி அக்கொடி நிலைப்பதற்காகப் போர்க்களத்திலும் ஆயிரக் கணக்கானவர் உயிர் துறக்கின்றனர். "A flag is a symbol. Taken literally, a national flag is only a bit of brightly coloured bunting; but vast libraries of history and constitutional law only imperfectly express what the flag symbolises" என்று ஆசிரியர் ரைட் கூறுகிறார். உருவ வழிபாடு கூடாதென்கிற சுயமரியாதை வீரர்கள் தங்கள் மகாநாடுகளில் மட்டும் கொடியேற்று விழாவை என் நடத்த வேண்டும்? அப்படிச் செய்துவிட்டுத் திருக்கோயில் கொடியேற்று விழாவை ஏன் தூற்றவேண்டும்? இங்கிலாந்து தேசத்துக்குச் செல்லும் வேற்று நாட்டரசர்களும் பிரமுகர்களும் செனெடாப் (the Cenotaph) என்ற கல்லறையில் பேரூரில்லாத வீரன் சமாதிக்கு (the tomb of the unknown warrior)த் தவறாமல் புஷ்பார்ச்சனை செய்கின்றனர் (laying wreaths). பேரூரில்லாத வீரனுக்கா அந்த அர்ச்சனை? அல்ல அல்ல. தேசபக்தியின் மேலீட்டினால் அவன் உயிர்துறந்த தியாகபுத்தியின் மேன்மைக்கே அந்த அர்ச்சனை நடக்கிறது. அத்தகைய அரிய செம்பொருளுக்கு அவ்வெளிய கல்லறையே குறியீடாக நிற்கின்றது. அக்கல்லறைக்கே அர்ச்சனை, திருவிளக்கேற்றுதல் முதலிய உபசாரங்கள் நடக்கின்றன. ஆனால் கல்லறைக்குச் செய்த உபசாரம் அது குறிக்கும் செம்பொருளைப் போற்றுவதாகத் தான் எல்லா மக்களாலும் கருதப்படுகின்றது.

அஃதேபோல் உலகத்திலுள்ள எல்லாச் செம்பொருள்களுக்கும் உறைவிடமாகவுள்ள கடவுளுக்கு உருவ வழிபாடு உண்டு. புலாலுண்டு, கள் குடித்து, தோள்வலிபெற்ற ஒருவன் குதிரை யேறிய மதுரைவீரனுக்குப் புலால், கள் முதலியன கொடுத்து அவனைக் கடவுளாக வணங்குகிறான். சிவலிங்க வழிபாடு செய்யும் பேரறிஞர் மதுரைவீரனைக் குறைவாகவே

எண்ணுவர். அஃதே போல் மதுரை வீரனைத் தொழுவோர் சிவலிங்கத்தை ஆண்குறி பெண்குறியாகவே எண்ணுவர். ஏனெனில் மீன மேஷ ரிஷபங்களைத் தின்னும் அப்பெரியார்கட்கு மிதுனத்துக்கு மேம்பட்ட தத்துவங்கள் புலப்படா. அறவொழுக்கத்தில் சிறந்து, இருவினை யொப்பு, மலபரிபாகம் கைவரப் பெற்றவர்கட்கே அச் சிவலிங்கம் திருவைந்தெழுத்தின் திருவுருவமாகவும், கடவுள் படைப்பிலுள்ள எல்லாத் தத்துவங்களையும் தன்னுள்ளடக்கிய சிறந்த ஒப்புயர்வற்ற குறியீடாகவும் காணப்படும். "இருஞ்சுரபிக் கெங்கும் உருக்காணவொண்ணாத பால் முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவன் அன்பர்க்கே" என்ற எங்கள் சித்தியார் வாக்குப்படியே அச் சிவலிங்க உருவம் அருள் பாலிக்கும்.

இஃதே போல் ஆராய்ந்து சென்றால் சமயச் சடங்குகள், மந்திரங்கள், சின்னங்கள், ஜெபம், முறையீடு முதலியவைகளின் உண்மையும் உட்கருத்தும் நன்கு விளங்கும். இவ்வாராய்ச்சிக்கு ஆசிரியர் ரைட் எழுதிய "A Student's Philosophy of Religion" என்ற நூலும், அவரைப் போன்ற வேறுபல நல்லாசிரியர்கள் நூல்களும் பெரிதும் துணை செய்கின்றன. இவ்விடத்தில் பாவம், பாவத்துக்குத் தண்டனை யென்பதைப் (i.e., the problem of evil)பற்றி இரண்டொரு வார்த்தைகள்கூற விரும்புகிறேன். நமது சமயத்தில் பாவ மன்னிப்பு கிடையாதென்றும், கர்மவிதி மிகக் கொடியதாகவிருக்கிறதென்றும் (i.e. the law of Karma is inexorable) பலர் எண்ணுகிறார்கள். இது பெருந்தவறு.

"எத்தன்மை குற்றம் இயற்றிடினும் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னருளும் அன்றோ பராபரமே"

என்றும்,

"அழிப்பு இளைப்பாற்றல்"

என்றும்,

“ மண்ணுளே சில வியாதி மருத்துவன் அருத்தியோடுந்
திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாங்
கண்ணிய கட்டிப் பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலும் இன்ப துன்பம் அருத்தியே வினையறுப்பன்”

என்றும்,

“ குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழல் அடைந்தேன்”

என்றும்,

“ இவனுலகில் இதம்அகிதம் செய்த வெல்லாம்
இதம்அகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும்
அவன் இவனாய் நின்றமுறை ஏகனாகி
அரன் பணியில் நின்றிடவும் அகலும்குற்றம்
சிவனும் இவன் செய்தியெலாம் என் செய்தியென்றும்
செய்தது எனக்கு இவனுக்குச் செய்ததென்றும்
பவம் அகல உடனாகி நின்றுகொள்வன் பரிவால்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே ”

என்றும் அழுத்தம் திருத்தமாக விளக்கும் ஆன்றோர் வாக்குகள் நிறைந்த திருவருள் நெறி ஊற்றெடுத் தோடும் சைவசித்தாந்த சமயத்தில் கர்மவிதி மிகக் கொடிதென்றும், பாவ மன்னிப் பில்லையென்றும் பிதற்றுவாரின் பேதைமை ஞாலத்தின் மாணப்பெரிது.

என தருமைச் சகோதரி சகோதரர்களே! இதுகாறும் கூறியவாற்றால் உலகத்திலுள்ள எல்லாச் செம்பொருள்களும் நமது சைவசித்தாந்த சமயத்தில் உள்ளனவென்றும், அச்சமய நெறி உண்மைநெறி யென்றும் மக்கள் சென்று பயன் பெறுதற்குரிய செந்நெறி யென்றும் கண்டோம். இதைச் செந்நெறி யென்று காணும்வரை இதில் கூறியுள்ள வழிபாடு, கொள்கை, சின்னம் முதலியவைகளை ஏன் கைக்கொள்ள வேண்டும் என்று பட்டப் பெயரை நீத்த பெரியார்களும் திருநீற்றைக் கைவிட்ட் துறவிகளும் கேட்கின்றார்கள். இவர்கட்கு ஆசிரியர் ரைட்டையே விடைகூற ஏவுகின்றேன். உண்ணும் உணவு எவ்வாறு ஜீரண

மாகி இரத்தமாக மாறுகிறது என்ற முறையின் நுட்பங்களை உணர்ந்தார் இவ்வுலகத்துள்ள மக்களுள் கோடிக்கு எத்தனை யாக இருப்பார்கள்? மிகக் குறைவே யென்பது வெளிப்படை. ஆனால் அந்த நுட்பங்களை யறிந்தே உண்ணுவோம் என்று சபதங்கூறி உண்ணுவிரதம் கைக்கொள்ளுவோர் எத்தனைபேர்? ஒருவருமே யில்லை ("Would it be intellectually dishonest for a man to continue to eat food until he had definitely decided the question of digestion? In any event, food is digested and he needs it to support life--the theoretical question can be solved at his leisure or never at all"). இச் சுயமரியாதைத் துறவிகள் மற்றொரு வாதமும் செய்கின்றனர். அதாவது ஒவ்வொருவனுக்கும் தனக்கிஷ்டமான மதக்கொள்கையைக் கடைப்பிடிக்க உரிமை யுண்டென்பது (i.e., freedom of thought.) இதற்கும் ஆசிரியர் ரைட்டே விடை கூறுகிறார். "Whenever a student consulted me privately, I advised him to continue in the religious faith and associations in which he had been brought up, unless he had formed deep and rationally grounded convictions that rendered this impossible, which was very rarely the case." அதாவது சுருக்கமாக மதக்கொள்கைகளை மாற்றக்கூடா தென்பதே. இக்கரைக்கு அக்கரை பச்சை என்று மாறுவது விலங்குகளின் தொழில், ஆறறிவுடைய மக்கள் தொழிலல்ல. தன் சொந்த வீட்டை விட எதிர் வீடு நன்றாக யிருக்கிற தென்று மாறினால் எதிர் வீட்டுக்காரன் அடிக்கிறான். தன் மனைவியாளை விட எதிர் வீட்டுப் பெண் அழகி யென்று கைப்பற்றினால் அவள் தலைவன் கொல்லுகிறான். சமயக் கொள்கைகளை மட்டும் சட்டைகளை மாற்றுவதுபோல் மாற்றினாலும் ஏன் ஒருவரும் கேட்கிறதில்லை?

முன்காலத்தில் சமயத்தலைவர்கள் இருந்தார்கள், கேட்டார்கள். இக்காலத்திலோ அத்தலைவர்களின் மடங்களும் அவைகளின் திரண்ட பெருநிதியும் மட்டும் உள்ளன. தலைவர்களைக் காணோம். தலைவர்கள் ஆணைவழி நின்று சமய போதனை

செய்த ஆன்றோர்களையும் காணேம். ஐம்புலன்களை வென்று ஆண்டவர்களைக் காணேம். அவர்கள் இருந்த இடத்தில் ஐம் புலன்களுக்கு ஏவல் செய்யும் அடிமைகளே யிருக்கிறார்கள். இத் தலைவர்களின் பெருநிதி சமய போதனைக்கே அக்காலத்தில் வழங்கப்பட்டது. இக்காலத்திலோ இப்பெருநிதி, முகமன் புறங்கூறும் நேயர்கட்கும், துர் நாரியைச் சேர்ப்பிக்கும் தூயர் கட்கும், லாவென்று சதிகூறும் லாயர்கட்கும், மன்பதையை வஞ்சிக்கும் மாயர்கட்கும், தான் தேடாப் பொன்னுக்கு மாற்று மில்லை உரையுமில்லை யென்ற முறையில் வாரி வாரி இறைக்கப் படுகின்றது. வாங்குங் கவளத் தொரு சிறிது வாய்தப்பின் தூங்குங்களிறோ துயருறுது. சிந்திய கவளச் சிதைவைத் தின்ற ஆயிரம் சிற்றெறும்புகள் இன்புறும். இம்முறையிலேயே இம் மடங்களில் சிந்தும் பொருளைக் கொண்டு சமய போதனை செய் யலாம் என்று சிற்சில அன்பர்கள் உண்மையாகவே எண்ணி யுள்ளார்கள். இதைவிட மானக்குறைவு வேறொன்றுண்டோ? அந்தோ! கொடிது!! கொடிது!! அரசனில்லாத நாட்டுக்கு அரசியற்றலைவரைத் தேர்ந் தெடுப்பது போலவே, இப்போலித் தலைவர்களைச் சட்ட முறைப்படி தொலைத்து சீரிய தலைவர்களைத் தேர்ந்தெடுக்குமட்டும் சைவ சமயிகள் ஈடேறுவது இயலாது என்பதைக்கற்றுத் துறை போய ஒழுக்கச் சீலர்களாகிய உங்கள் முன்பு மிகத் தாழ்மையுடன் விண்ணப்பம் செய்து கொள்ளு கிறேன். சேற்றின் நடுவில் செந்தா மரை திகழ்வதைப்போல் இம் மடாதிபதிக் குழுவில் இரண்டொரு சீலர்களும் உளர். எனினும் சீர்திருத்தம் நடந்தே தீரவேண்டும்.

மெய்யன்பர்களே! மதக்கொள்கைகளை மாற்றுவது தவறென்று கண்டோம். இவ்விடத்தே ஆங்கிலக் கல்வி முதிர்ந்த பெரியார்கட்கு ஒன்று கூறுதும். "இராமன் ஆண் டாலென்ன, இராவணன் ஆண்டாலென்ன?" என்ற பழமொழி இத்தமிழ் நாட்டில் வழங்குகின்றது. இதன் பொருள் இவ்விரு வரும் செங்கோல் செலுத்திய முறையில் வேற்றுமை யொன்று மில்லை யென்பதல்ல. யார் ஆண்ட போதிலும் குடிகள் தங்கள்

ஒழுக்கங்குன்றாது ஒழுகுவார்கள் என்பதே இதன் பொருள். நம் இந்திய தேசத்திலுள்ள ஏழு லக்ஷம் கிராமங்களிலும் நடைபெற்று வரும் ஒழுக்கம் இலேசாக மாறுவதில்லை. ஆகவே கிராமச் சீர்திருத்தம் (rural reconstruction) செய்யவேண்டுமென்று வாய்ப்பறையறையும் ஆங்கிலக் கல்வியாளர்கள் கிராமத்தில் காணப்படும் ஒழுக்க மாறுபாடின்மையை (conservatism in culture and tradition) முதலில் கற்றுக்கொள்ள வேண்டும். இலேசாக நாளுக்கு நாள் கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் மாற்றக்கூடாது. காலஞ் சென்ற திரு. ம. ரா. குமாரசுவாமிப் பிள்ளையவர்கள் இத்தமிழ் நாட்டில் எத்தனை உயிர்க்கோணலோ அத்தனை மயிர்க்கோணல்கள் உள்ளன என்று நகைச் சுவை ததும்பக் கூறுவார்கள்.

வேறொரு எச்சரிக்கையும் செய்யக் கடமைப்பட்டுள்ளேன். ஆங்கிலம் கற்றவர்கள் நமது சமய நூல்களை முறைப்படி கற்று, மேல் நாட்டு அறிவியல் நூல்களையும், தத்துவ, சமய நூல்களையும் பயின்றால் நமது சமய நூல்களிலுள்ள உண்மைகளெல்லாம் மிக நன்றாய்ப் புலப்படும் என்ற கொள்கையில் எனக்குத் திடமான நம்பிக்கையுண்டு. ஆனால் இவைகளை மிக ஆழ்ந்து கற்று ஆராய வேண்டும். இன்றேல் மேல் நாட்டவர் கொள்கைகளே மேம்பட்டவை என்றாவது, அவர்கள் கொள்கைகளுக்கும் நமது கொள்கைகளுக்கும் பேதமில்லை யென்றாவது தோன்றும். இது ஆழ்ந்து சிந்திக்காததினால் நேரும் குறைபாடு. மேல் நாட்டு நூல்களைக் கற்கும் சிலர் சைவசித்தாந்தம் மேல் நாட்டுக்குச் சென்று விட்டது என்று கூறுகின்றார்கள். இவ்வாறு கூறுவது சைவ சமயத்தின் தற்கொலையேயாகும். மேல் நாட்டினர் நமது பஞ்சைக்கொண்டு போய்ப் பஞ்சவர்ணச் சேலைகளாக்கி நமக்கே ஒன்றுக்குப் பத்தாக விற்கிறார்கள். இப்பஞ்ச வர்ணங்களும் நமது கண்ணையும், பொன்னையுமே யன்றி மண்ணையும் பெண்ணையும் கூடக் கவருகின்ற சக்தியுடையனவாயிருக்கின்றன. ஆனால் உண்மையிலே, இப்பஞ்சவர்ணமானது இத்தேசத்திற் குடிகொண்டுள்ள பஞ்சத்தின் வர்ணத்தையே

குறிக்கின்றது. அஃதே போல் மேல் நாட்டவர்கள நமது சமயக்கொள்கைகளையும் கொண்டு போய் அவர்கள் சமய இயந்திரத்திற் கொடுத்துப் புதுப்பித்து வேறு கொள்கைகளாகவே நமக்கு வழங்குகிறார்கள். ஒரே சிறு உதாரணம் கூறுவேன். ஆசிரியர் ரைட் என்பார் முத்தியைப் பற்றிக் கூறும்போது பாஷாணவாதம், ஐக்கியவாதம், சமவாதம், விவேகமுத்தி முதலியவைகளை யெல்லாம் புறக்கணித்துக் கூறுவது எனக்குப் பெரும் வியப்பை விளைவித்தது. அவரை அம்மட்டில் உண்மை ஞானியாகவே கருதுகின்றேன். "What the author favours, then is an immortality in which separate individuals shall persist, know one another, and enjoy a mutual society; but that this existence shall be in God, and not as souls separated from Him and from one another by physical bodies as is now the case." இவ்வாறு கூறப்பட்டுள்ளதே சைவசித்தாந்தமுத்தி யென்று உடனே முடிவுகட்டி விடக் கூடாது.

"ஆதவன்தன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோல்—நாதாந்தத்து
அண்ணல் திருவடியில் ஆன்மா வணைந்துஇன்பக்
கண்ணில் அழுந்தியிடுங் காண்"

என்ற உண்மைவிளக்கச்செய்யுளிலுள்ள உவமையே மற்றெல்லா உவமைகளை விடச் சைவசித்தாந்தம் கூறும் பத முத்தியை மிகத் தெளிவாகத் தெரிவிக்கிறதென்று எனது சிற்றறிவிற்குப் புலனாகின்றது. இத்தகைய முத்திக்கும் ஆசிரியர் ரைட் கூறும் முத்திக்கும் உள்ள வேற்றுமையை நன்குணர வேண்டும். இவ்வாறு மேன் மேலும் பெருக்கிச் செல்லலாம். விரிவஞ்சி விடுக்கின்றேன்.

ஆகவே, நமது சமயக்கொள்கைகளை மேல் நாட்டவர் எவ்வாறு கையாளுகின்றனர் என்பதிலிருந்து, நமது கொள்கைகளின் நுட்பங்களைக் கூர்ந்த மதி கொண்டு அறிய வேண்டும். கையாளப்பட்டு, மாற்றப்பட்டு, மீண்டும் வெளிவரும் கொள்கை

களை நமது கொள்கைகளாகவே மீண்டும் காணுதல், நான் முற் கூறியபடி நமது சமயத் தற்கொலையாகவே முடியும்.

எனது அருமைச் சகோதரி சகோதரர்களே! முடிந்தது முடித்தலாக ஒன்றே கூறுகின்றேன். உங்கள் சமயக்கொள் கைகளையும் ஒழுக்கங்களையுஞ் சடங்குகளையும் வழிபாடுகளையும் எக்காரணங் கொண்டும் மாற்றாதீர்கள். மேல் நாட்டு அறிவியல், தத்துவ நூல், சமய நூல் முதலியவற்றின் துணைகொண்டு இக் கொள்கைகளும், ஒழுக்கங்களும், சடங்கு வழிபாடுகளும் எவ் வாறு மேல் நாட்டு நாகரிகத்துக் கேற்பத் திரிந்து அந்நாட்ட வர் வாழ்க்கைக்கு விழுப்பம் நல்குகின்றன என்பதை நுணுகி நுணுகி ஆராய்ந்துணருங்கள். அவ்வாராய்ச்சியை உண்மைச் சம யப்பற்றோடு ஆங்கிலக் கல்வியாளர்கள் நடத்துங்கள். உங்கள் சமயத்துக்கு அவ்வழியில் புத்துயிரும் புதுவன்மையும் தேடுங் கள். உங்கள் சமயப் போலித்தலைவர்களைச் சட்ட முறைப்படித் தொலைத்து அவர்கள் பெருநிதியை சமயப் பணிக்கே உரிய தாக் குங்கள்: உங்கள் முன்னோர்கள் காலத்தில் உங்கள் சமயத்துக்கு வந்த இடர்களைக் களைந்து காத்த சமயகுரவர்களைப் போற்றுங் கள். தூற்றாதீர்கள். பால்மணம் மாறாத எங்கள் ஞானச்சேயைப் புலால் மணம் மாறாத ஈனப்பேய்களே கொலை பாதகனென்னும். பரத்தையரைப் புணரும் பாமரமாக்களே, எங்கள் பரவைமணாள னைக் குறை கூறும். எங்கள் மணிவாச கனருளிய திருவாசகம் ஒரு வாசகத்துக்கும் உருகாத மனப்பாறைகட்கேறுமோ? தலை யெழுத்தின் துணை பிடித்துப் பிறவிக்கடலில் தடுமாறும் உயிர் கள், ஐந்தெழுத்தின் புணைபிடித்து வஞ்சகரிட்ட நீலநிறப்பெருங் கடலும், யார்க்கும் நீந்துதற் கரிதாம் எழுபிறப்பெனுங்கடலும் நீந்த பிரானடியை எவ்வாறு உணரும் ?

அறவொழுக்கத்தில் உளம் பழுத்தல் என்ற செம்பொருளை வாழ்க்கையில் பதித்துக் கொள்ள இயேசு கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம் ஒன்றே சாதனம் என்று ஆசிரியர் ரைட் கூறுவதை நினையுங்கள். உங்கள் சமயத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு சாதனங்கட்கு நான்கு சமய குரவர்

களின் உண்மைச் சரிதைகளே யன்றி அறுபத்து மூன்று நாயன்மார்களின் உண்மை ஜீவிய சரிதைகளும் உள்ளன. அவைகளைப் பயின்று அவர்கள் சென்ற திருவருள் நெறியே செல்லுங்கள். சிவலிங்க வழி பாட்டைக் கைவிடாதீர்கள். திருக் கோயில் வழிபாடு அறிவு குறைந்தவர்கட்கே யன்றிக் கற்றறிந்த மேதாவிகட்குத் தேவையில்லை யென்று எண்ணாதீர்கள். கற்றதனாலாய பயன் வாலறிவன் நற்றாள் தொழல் என்பதை மறவாதீர்கள். "செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ மாலற நேய மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்ற உபதேசம் முற்றத்துறந்த முனிவர்கட்கும் கூறப்பட்டதே.

" பாசபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கி அது விடும்பொழுது பரக்கு,
மாசுபடுமல மாயை யருங்கன்ம மனைத்தும்
அரனடியை யுணரும் போதகலும் பின்னணையும்,
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையிது வேயாதும்"

என்ற எங்கள் சித்தியார் வாக்கை நினைவு கூருங்கள். உங்களுக்குப் பூசை செய்ய விருப்பமில்லாவிடில் பூசை செய்வோரை அழுக்கு மூட்டைகள் என்று ஏசாதீர்கள். பூசை, இறைவனிடம் முறையீடாகிய இவைகளால் மக்கள் அளவற்ற புதிய சக்தியைப் பெறுகிறார்கள் என்றும், ஒரு சமயத்தின் தத்துவ நுட்பங்களை அறியா விட்டாலுங் கூடப் பூசை முறையீடு செய்து இச் சக்தியைப் பெறலாம் என்றும் ஆசிரியர் ரைட் கூறுகிறார். ("We all possess considerable reserve powers of subconscious energy. One means of approach to such reserve powers is found through the agency of prayer. The efficacy of prayer is not dependent on the worshipper's understanding of the philosophy and psychology of the process. The efficacy of prayer is a matter of immediate experience; the existence and nature of God are difficult philosophical questions upon which it is

unnecessary for the worshipper to make up his mind in order to receive the benefits of prayer.")

சமயவுண்மைகளையும் ஒழுக்கங்களையும் நீங்கள் கற்பதோடு உங்கள் வயிற்றிற் பிறந்த பிள்ளைகட்கும் இளமையிலேயே கற்பியுங்கள். பெண்களுக்கும் சமய போதனை கொடுங்கள். மக்கள் சமூகத்தில் ஒரு பாதி பெண்ணல்லவா? ஒரு பாதியை மறந்தால் மற்றொரு பாதியின் கதி என்னாகும்?

கற்பதோடும் கற்பிப்பதோடு மட்டும் நிற்காதீர்கள். கற்றதற்குத் தக ஒழுகுவதே கல்வியின் பயன். "வாய் வாழைப் பழம் கை கருணைக் கிழங்கு" என்றொரு பழமொழி நமது நாட்டிலுண்டு. தேனொழுகத் தத்துவம் பேசுவதும் சமயப் பணிக்கென்று எவரேனும் பொருள் கேட்டால் மற்றொரு சமயம் வாருங்கள் என்று கூறுவதும் எத்தனை பிரபுக்களின் வழக்கமாக விருக்கிறது! உண்மையான சமயப் பணிக்கு "வேண்டுவார் வேண்டுவதே ஈ(வே)ன் கண்டாய்" என்று ஒவ்வொரு செல்வனும் பறையறைதல் வேண்டும். இவ்வுண்மையே அறுபத்து மூன்று நாயன்மார்கள் திவ்விய சரித்திரங்களிற் கிடைக்கும் செம்பொருள். சமயப்புரட்டர்கள் நமது சமயக் கொள்கைகளைத் திரித்தும் தாக்கியும் கூறினால், தாக்ஷண்யத்துக்காகவோ, தன்னலத்துக்காகவோ வாளாவிருக்காதீர்கள். பெறுதற்கரிய பதினாறு பேறுகளுள் சைவ நிந்தனை பொறுமனம் தலைசிறந்தது. வாளா விருப்பின் சைவ நிந்தனை யென்ற குற்றமே, உடன்பாடான உங்களையும் சாரும். இக்குற்றம் கொடிது, கொடிது, இதற் காளாகாதீர்கள். உங்கள் சமயத்தை விளக்குவது உங்கள் கடமையாயிருப்ப, அதையும் செய்யாது, மாற்றான் உங்கள் சமயத்தைக் குறை கூறுங்கால் அதையும் மறுக்காது வாளா விருந்தால் உங்கள் அறிவையும் செல்வத்தையும் எற்றுக்கோ பயன் படுத்துவது?

சிவஞானச் செல்வம் கைவரப் பெற்ற விழுமியோர்களே! தொன்று தொட்டு வரும் முறையை விடுத்து ஆங்கில முறை பற்றி யான் பேசியதற்கு மன்னியுங்கள். ஆங்கிலக் கல்வி நிரம்

பிய பெரியோர்களே! உங்கள் மனம் புண்படக்கூடிய வகையில் யான் ஏதேனும் கூறியிருப்பின் மன்னியுங்கள். அது நான் அறியாது எண்ணுது செய்த குற்றமாகும். என தருமைச் சகோதரி சகோதரர்களே! இது காறும் செவி மடுத்து அன்போடு என் புன்மொழிகளை யேற்ற உங்கள் பொறுமைக்கு மெச்சினேன். என்னையுமோர் பொருளாக்கி இங்கு அமர்த்திய உங்கள் பெருந்தகைமைக்கும் மெச்சினேன். அறிவின்மையாலும் போதின்மையாலும் வேறு பலபொருள்களை விளக்காது விடுத்தமைக்கு வருந்துகிறேன். எல்லாம் வல்ல இறைவன் திருவருள் நம் மெல்லோரையும் காத்தருள்வதாக. சைவ நன்னெறி தாந்தழைத்தோங்குக. தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

"தென்னுடைய சிவனே போற்றி
எந்நாட்ட வர்க்கும் இறைவா போற்றி."

---

# மரமும் புலவரும்.

[திருவாளர் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை B.A.,L.T.]

## 1. ஆலமரம்.

புலவர் பலமரத்தை உவமானமாக உண்மைப் பொருள் வெளியிடற் பொருட்டு வழங்கி யிருக்கின்றனர். தென்னாட்டில் மிகுதியாகக் காணப்படும் மரம் ஆலமரம். ஆல மரம் பரந்த நிழலைத்தரும். அதில் "அண்ணல் யானை அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு மன்னர்க் கிருக்க நிழலாகும்மே" என்றனர் நறுந் தொகையாரும்; ஆல மரத்தின் விழுதுகள் பல தரையிற் பதிந்து மரக் கிளைகளைத் தாங்கும் தூண்கள் போல் விளங்கும். பெற்ற தாய் வயது முற்றித் தளர்த லடையுங்கால் தாய்க்குத் துணையாகிக் குடும்பத்தைக் காப்பாற்றும் பிள்ளைகளை ஒப்பன விழுதுத் தூண்கள். பூவாதே காய்க்கும் கோளி யெனும் இம் மரத்தின் கனிகள் பல்லாயிரக் கணக்காயுள.

அவை பல்லாயிரம் பறவைகட்கு உணவாகின்றன. ஆலும் வேலும் பல்லுக் குறுதி யென்ற முது மொழியால் ஆலம் விழ்து பற்பொடியாகச் செய்யப்பெற்று உபயோகப் படுத்தினல் கருவேல மரம் பட்டையினின்று தயாராகும் பற் பொடி போன்று பல்லுக்கு உறுதி கொடுக்கு மென்பதே. ஆலம் பழத்திலுள்ள வித்து சிறு மீன் சினையினும் நுண்ணியதே யாயினும் அதினின்று முளைத்து வரும் கண்மரமாகிப் பல கிளைகளைத் தாங்கிப் படர்ந்த நிழலையளிக்கு மாதலின் சிறு செய்கையால் பெரும் பயனடையலா மென்ற உண்மை அறியற் பாலது. 'உருவு கண்டெள்ளாமைவேண்டும்' என்றனர் புலவரும். ஆலமரத்தில் தெய்வம் உண்டென்பர். ஆலிலையின் மீது திருமால் மேவியுளரென்ற கொள்கையும் உளது. பாண்டியன் பெருவழுதியைக் கூறு முகத்தான் காரிக்கண்ணனர் ஆலமரத்தின் பெருமையை யெடுத்தோதி யுள்ளார்.

"முழு முதல் தொலைந்த கோளியா லத்துக்
கொழு நிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது
நல்லிசை முது குடி நடுக்கறத் தழீஇ
இளைய தாயினும் கிளையரா வெறியும்
அருநரை யுருமிற் பொருநரைப் பொருச்
செருமாண் பஞ்சவர் ஏறே"

பெரும்பதுமனர் பாண்டியன் நன்மாறன் வண்மையை விளக்குங்கால் ஆலமரத்திற்குப் புள்ளினம் நாள்தொறும் மாறி மாறிப் போதலைக் கூறியுளார்.

'கடவு ளாலத்துத் தடவு சினைப்பல் பழம்
நெருநல் உண்டனம் என்னுது பின்னும்
செலவா னுவே கலிகொள் புள்ளினம்
அனையர், வாழியோ இரவலர்.'

அதே பாண்டியனுடைய செல்வத்தை வடம வண்ணக்கன் பெரிய சாத்தனர் ஆல மர உவமையால் வெளிப் படுத்திய அடி ஈண்டு வருவ தாகும்.

'ஆலமர் கடவு ளன்னநின் செல்வம்
வேல்கெழு குரிசில் கண்டேன்'

ஆலிலையின்கண் மேவிய திருமால்போலும் நின்னுடைய செல்வத்தை யெல்லாம் வேலையுடைய தலைவ, கண்டேன். மற்றோர் உரையாவது ஆலின்கீழ் அமர்ந்த முக்கட் செல்வனாகிய கடவுளை யொப்ப என்றும் நிலைபெற்றிருப்பேன் என்றிருக்கின்றனன் என்பது.

புள்ளெலாம் சென்றணுக ஆலமரம் பயன்பட்டு நின்றாற் போன்று இவனும் தன் சுற்றத்தாரும் பிறரும் நாட்டாரும் நுகரும்படி நின்றனன்.

'முன்னூர்ப் பழுனிய கோழியா லத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென் மகன் வளனும்.

பின் வருவது கூகைக் கோழியார் கூற்று.

'நிலம் பசுவீழ்ந்த அலங்கல் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென இயம்பும்
கூகை கோழி யான'

ஊன் பொதி பசுங்குடையாரும

'பழுமர முள்ளிய பறவை போல
ஒண்படை மாரிவீழ் கனிபெய்தெனத்
துவைத்தெழு குருதி நிலமிசை பரப்ப'

என்றனர்.

## 2. உன்ன மரம்.

பாலையில் உண்டாகும் உன்னமரம் நாட்டகத்துக்குக் கேடு வருங்கால் உலறியும், கேடுவராத காலம் குழைந்தும் நிற்குமென்பது கொள்கை. இதற்குத் தொல்காப்பியத்தில் உன்ன நிலை யென்று உவமித்துளர். நச்சினார்க்கினியர் உரை வருமாறு:—'வேந்தன் கருத்தா னன்றி அவன் மறவன். வேந்தற்கு நீ வெற்றி கொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வலெனப் பரவுதலும், எம் வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக்கோடு பொதுள்க எனவும் பகை வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக்கோடு படுவதாக எனவும் நிமித்தம் கோடலும் என இரு

வகைத் தெய்வத் தன்மை அஃது உடைமையான் அடுக்கிய உன்னமென்றார்.

‘வாடா வள்ளி வயவ ரேத்திய
ஓடாக் கழல்நிலை யுளப்பட ஓடா
உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்’

உன்னங் கண்டு கூறினாற் போலப் பூவையை (காயாம்பூ)க் கண்டு நாட்டெல்லை காடாதலின் அக்காட்டிடைச் செல்வோர் கூறுவர்.

‘மன்னரும்
ஈடெலாந் தாங்கி இகல் அவிந்தார் நீயுநின்
கோடெலா முன்னங் குழை’

“மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோர்
உன்னஞ் சிறக்கும் ஒள்வினை நினை”

“முன்னங் குழையவும் கோடெலா மொய்தளிர்
உன்னம் குழையொலித் தோங்குவாய்”

உன்னமரம் மறவர் தம் அம்பை விடுதலால் பட்டோரது உடல் மூடிய புதிய கற்குவையின் மேல் வைக்கப்படுவதும், அதன் மேல் நல்ல சிறகினையும் வளைந்த வாயினையு முடைய பருந்து இருந்து வருந்துமென்பர் புலவர்.

“செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்
உன்ன மரத்தது உன்னருங் கவலை.”

இஃது இரும்பிடர்த் தலையார் பெரும்பெயர்வழுதியை நோக்கிக் கூறியது.

### 3. தகர மரம்.

இது சுனைநீர்ப் பக்கமுள தென்றும், அதன் குளிர்ந்த நிழலில் கவரி மாவும் பிணையும் தங்கு மென்றுங் கூறுவர் முடமோசியார். இது வடமலைப் பக்கமுள தென்பர்.

“நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி, அயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்
வடதிசை யதுதவ வான்தோன் இமயம்”

## 4. தெங்கு, பனை.

தெங்கு அல்லது பனை மரமும் புலவராற் பாராட்டப் பட்டது. "தாளுண்ட நீரைத் தலையாலே தான் தரும்" என்பது புலவர் கூற்று. தேங்காய் விளைந்தபின் பல வகையாக உபயோகப் படுகின்றது. அதனைக் கறி வகைக்கு வழங்குவது மன்றி அதினின்று எண்ணெயும், புத்துருக்கு நெய்யும் எடுக்கின்றனர். இளங்காயிலுள்ள நீர் பானத்திற்குதவும். அதனருமை கோடை காலத்தில் தெரியும். இளநீர் பருகுதலும் வழுக்கையைத் தின்னலும் வேனிற் பருவத்தில் நண்பகலில் வெய்யோன் கொடுமை மிகும் நாளில் வழக்கம். தேங்காயெண்ணெய் யந்திரங்கட்கும் சோப்புச் செய்வதற்கும் உபயோகப்படுத்தப் படுகின்றது, குலைகள் அலங்காரத்திற்கும் உதவும்.

பழமையான துறை முகமாகிய தொண்டியைப் புனந் துரையும் புலவர் 'குலை யிறைஞ்சிய கோட்டாழை'யு முள தென்றனர். நுளையர் மகளிர் முந்நீர் பருகுவ ரென்று கூறியதில் இளநீரும் ஒன்றாகும்.

இரும்பனைக் குரும்பை நீரும் பூம் கரும்பின் தீஞ்சாறும்
ஓங்கு மணல், குவுத்தாழைத் தீ நீரோடு உடன்விராஅய்
முந்நீ ருண்டு முந்நீர் பாயும் தாங்கா உரையுள் நல்லூர்
சோழன் நலங்கிள்ளியின் படைவீரர்.

" ஒழிமடல் விறகிற் சுழிமீன் சுட்டு
வெம் கள்தொலைச்சியும் அமையார் தெங்கின்
இளநீர் உதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றன ருவக்கும் நின்படை கொன் மாக்கள்.'

என்று முதுகண்ணன் சாத்தனார் வரைந்துளர்.

உழவரின் சிறார் தெங்கின் பழத்தை வெறுப்பது தந்தையர் பக்கம் புடைக்கத் தின்று நெற்கூடு வைக்கத் தடுமாறுவதைக் கண்டு கூடு அடையும்போது விசைத் தெழுந்து செழிப்பாயுள்ள பனையின் குலையைத் தொடும் விருப்பத்தா லென்பர்.

" புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறையாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி
நீடுகதிர்க் கழனிச் சூடு தடுமாறும்
வன்கை வினைஞர் புன்தலைச் சிறாஅர்
தெங்குபடு வியன் பழம் முனையில் தந்தையர்
குறைக்கண் நெற்போர் ஏறிவிசைத் தெழுந்து
செழுங்கோள் பெண்ணை (பனை)ப் பழந் தொடமுயலும்.'

## 5. பலா, மூங்கில், ஆசினி.

பலா மரமும் பூவாமலே காய்க்கும் கோளி எனப்படும். மலை நாட்டில் உழவர் முயற்சியின்றி விளைகின்ற நான்கு பொருள்களில் இஃது ஒன்றென்பர். இதன் தீஞ்சுளை தின்னப்படும் ஆண் மந்தி பெண் மந்திக்கு அதனைக் கொடுக்கும். பலாமரம், ஆசினி, மூங்கில் போன்ற மரங்களுடன் மலையி லுண்டாகும் பழத்தின் முதுகில் முள் போன்றிருக்கும்.

" விசும்புறக் கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
ஆசினி கவினிய பலவின் ஆர்வுற்று'

" முட்புற முதுகனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்.'

இரவலர் பலாமரத்தின் பெரிய கிளைகளில் தங்களுடைய மத்தளத்தைத் தூக்கி வைப்பார்கள். அதன் கண்ணைப் பலாப் பழமென்று கருதி மந்தி அதனைத் தட்டும். அவ்வொலியைக் கேட்டு அன்னமும் ஒலிக்கும் என்பர் புலவர்.

மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனி செத்தடிப்பின்
அன்னச் சேவல் மாறெழுந் தாலும்.

குறத்திகள் மூங்கில் குழாய்களி லடைக்கப் பெற்ற முதிர்ந்த மதுவை யுண்டு மகிழ்ந்து குரவைக் கூத்தாடும் தீஞ்சுளைப் பலா மர முடைய பெரிய மலைக்கு அரசன் ஆயெனும் அண்டிரன்.

' தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன் ஆ அயண்டிரன்'

நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய கருவூர் கதப்பிள்ளை வள்ளுவன் இத்தகைய னென்று கூறுகின்றனர்.

‘ தீஞ்சுளைப் பலவின் நாஞ்சிற் பொரு நன்
துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையன்’

6. முருக்க மரம்.

இதன் இலை அகன்றதென்றும் இதன் பெரிய மரத்தால் செய்யப்பட்ட தூண மாகிய இலக்கில் பலகோசர் படைக்கலங் கற்பார் மாறுபட்டெறிவா ரென்றும் கூறுவர் புலவர்.

‘ இளம்பல் கோசர் விளங்கு படைக்கன்மார்
இகலினர் எறிந்த அகலிலை முருக்கின் பெருமரக் கம்பம்’

தொலையாத அக்கம்போல உன் வெற்றியும் வாழ்க என்று பிட்டங்கொற்றனைக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியுளர்.

7. வேங்கை, வேம்பு.

வேங்கை வேறு, வேம்பு வேறு. வெப்புன விளைந்தவேங்கை என்றும் கருங்கால் வேங்கை மலரின் நாளும்பொன்னன்ன வீ(பூ) சுமந்த தென்றும், அதனடியில் குறத்திகள் குரவை யாடுவரென்றும் அதன் பூ கரிய இதழை யுடைய ஒளி சிறந்த தென்றும், பூக்க ளுதிர கோவலர்கள் அதன் தழை செறிந்த கொம்புகளைக் கழிப்ப ரென்றும், (இது போல அறிவுடையாளன் இறக்க மகளிரும் இழை களைந்தனர்.) அழகுள்ள முற்று மூல வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின் முளகா போன்றதென்றும், மங்கையின் நுண்பல் நாகிள வேங்கையிற் கதிர்த் தொளி திகழுமென்றும், செந் நெல் போர் கடுங்கண் வேங்கை பழுகண்டார் போலு மென்றும், வேங்கை மார்பன் பாண்டிய னென்றும் புலவர் கூறுவர்.

வேம்பு கரிய கோட்டையுடையது. வேம்பின் ஒளியுள்ள தளிர் உழிஞைக் கொடியால் மாலையாகக் கட்டப்படும். அதனைச்

சூடுவன் வழுதி, கரிய கொப்பை யுடைய வேம்பு மாரும் போந் தையும் மலைந்த சென்னியர். வேம்பு மன்றத்தில் நிற்கும்.

'மன்ற வேம்பின் ஒண் பூ'

—லோகோபகாரி.

---

# சிவலிங்கம்

(திரு. M. V. நெல்லையப்பபிள்ளையவர்கள் பி. ஏ.)

(சஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

15. சிவலிங்கம் இரண்டு பகுதிகளையுடையது. அவை ஆவுடையாள் இலிங்கம் என்பன. ஆவுடையாள் அடியில் பீட மாயிருப்பது. அது சத்தியைக் குறிக்கிறது. இலிங்கம் ஆவுடை யாளுக்கு மேலே இருப்பது. அது சிவத்தினது உண்மைச் சொரூபமாகிய பரவெளியைக் குறிக்கிறது. இந்தப் பரவெளி முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்துள்ளது. இது ஞானு காசம் என்றுங் கூறப்படும். இந்தப் பரவெளியைத் தான் தாயு மான சுவாமிகள் "சமயாதீதப் பழம் பொருளைக் காட்டும் வெளி" என்று கூறுகின்றூர். இந்தப் பரவெளி சிதம்பரம் என வும் திரு அம்பலம் எனவும் சிற்றம்பலம் எனவும் கூறப்பெறும். இந்தப் பரவெளியிலே கூத்தப் பிரான்(நடராஜமூர்த்தி) உயிர்கள் உய்யும் பொருட்டு எப்பொழுதும் ஐந்தொழில் நடனஞ் செய் கின்றுன். இந்த நடன தரிசனம் சிதம்பரத்தில் ரகசிய தரி சனம் என்று இப்பொழுது கூறப்படுகிறது. இந்தப் பரவெளி யில் கூத்தப்பிரான் செய்யும் நடனத்திஞலேதான் உலகில் எல்லா உயிர்களும் எல்லா உயிரில்லாப் பொருள்களும் இயங்குகின்றன. அவன் இவ்வாறு உலகை இயக்குகிறதினுல் இயவுள் என்று பழைய தமிழ் நூல்களிற் கூறப்படுகின்றுன். இந்த நடனத்தா லுண்டாகும் அசைதற் சத்தி உயிர்களுடைய மலத்தைப் பாகம் பண்ணுகின்றது. இலிங்கம் ஆவுடையாளாகிய பீடத்தை ஊடுரு விச் சென்றிருப்பது பரவெளியாகிய நாதம் (சிவசொரூபம்) விந்துவை (சத்தி) ஊடுருவி வியாபித்திருக்கின்றது என்பதை

யும் ஒன்று மற்றென்றை விட்டுப் பிரியாதவேறுபாடின்றி (அபின்னமாய்) யிருப்பதையும் உணர்த்துகின்றது. ஆவுடையாளாகிய பீடம் இலிங்கத்தின்கீழ் அடங்கியிருத்தல் சத்தி சிவத்துக்குள்ளே அடங்கி தொழிற் செய்கின்றுன் என்பதைக் காட்டுகின்றுன். "எத்திறம் நின்றுனீசன் அத்திறமவளும் நிற்பள்" என்பது சிவஞான சித்தியார் கூற்று. ஆவுடையாளுக்குக் கீழே எண் கோணமாயும் எண் கோணத்துக்குக்கீழ் நாற்கோணமாயும் சிவலிங்கம் அமைந்திருத்தல் நான்கு திக்குக்களும் எட்டுக் கோணங்களுமாயிருக்கிற எல்லா அண்டங்களும் சிவசத்தியினுல் ஆக்கப்படுகின்றன என்பதை உணர்த்துகின்றது. ஆவுடையாளின் மேற்பாகத்தில் வெளியே நீண்டிருக்கும் கோமுகியானது சிவசத்தி உயிர்களுக்குச் செய்யுந் தண்ணளிக் கருணையைக் குறிக்கின்றது.

16. சிவலிங்கத்தினது மேல் பாகம் உருத்திரபாகம்; நடுப்பாகம் விட்டுணுபாகம்; அடிப்பாகம் பிரமபாகம் ஆகும். சிவலிங்கத்தில் ஐந்துகலைகளும் அடங்கியுள்ளன. உருத்திர பாகத்தில் சாந்தியாதீதக்கலையும் விட்டுணுபாகத்தில் சாந்தி கலையும் பிரமபாகத்தில் வித்தியாகலை பிரதிட்டாகலை நிவிர்த்திகலை ஆகிய மூன்று கலைகளும் அடங்கியுள்ளன.

17. சிவலிங்க வடிவம் பிரணவமாயிருக்கும் பிரணவ மந்திரமானது எல்லாத் தோற்றங்களுக்கும் முதலாயுள்ள ஒளியாகும். சிவலிங்க வடிவம் குறிக்கிற சதாசிவ மூர்த்தி எல்லாத் தோற்றங்களுக்கும்மூலகாரணரா யுள்ளவர். பிரணவ உறுப்புக்களாகிய அகரம் இலிங்கத்தினது கண்டம் என்றும் உகரம் இலிங்கத்திலுள்ள வட்டம் என்றும் மகாரம் விந்துநாதம் என்றும் திருமந்திரம் கூறுகின்றது.

1. இலிங்க நற்பீட மிசையு மோங்காரம்
இலிங்க நற்கண்டம் நிறையு மகாரம்
இலிங்கத் துள்வட்ட நிறையு முகாரம்
இலிங்க மகார நிறைவிந்து நாதமே.

2. விந்துவு நாதமு மேவு மிலிங்கமாம்
விந்துவதே பீடம் நாத மிலிங்கமாம்

அந்த இரண்டையு மாதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே.

18. நாம் வாழும் இவ்வுலகமே சிவலிங்கம் காட்டுகிற சத்திசிவம் நிறைந்துள்ள தன்மையை உடையது. சத்திசிவம் விளையாட்டினலே (activity) தான் இவ்வுலகம் நடைபெறுகின்றது. சத்திசிவத் தன்மையைத் தான் மேற்கு நாட்டுத் தூல உலக இயற்கை ஆராய்ச்சியாளர்கள் matter, energy என்றும் அவ்விரண்டும் ஒன்றை யொன்றும் பிரியாதிருந்து தொழிற்பாடு செய்தலினலே தான் உலகம் நடைபெறுகின்றது என்றும் தூல உலகத்திலே காணப்படுகின்ற சத்தி வேறு பாடுகளெல்லாம் ஒரே சத்தியினது தொழில் வேறு பாட்டு வகைகள் என்றும் தூல உலகினது இயற்கையைக் கூறுகின்றார்கள். சிவஞான சித்தியார்,

" சத்தியுஞ் சிவனுமாய தன்மை இவ்வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முயர்குண குணியுமாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்

என்ற பாடலே சத்தி சிவமாய தன்மையே பீட லிங்கத்தின் இயல்பு ஆகும் என்று கூறுகின்றது.

19. சிவலிங்க வடிவம் கடவுளது வழிபாட்டிற்கு ஏற்ற வடிவமாகும். ஒருவன் சிவலிங்கத்தில் கடவுளை வழிபடும் பொழுது மேலே கூறியவாறு அவ்வடிவப் பகுதிகள் விளக்குகிற உண்மைகளை மனதிலே சிந்தித்து வழிபடுதல் வேண்டும். உண்மைகளை நினைத்துஞ் சிந்தியாதுஞ் செய்யும் வழிபாடு பயனுடையதாகாது. கடவுள் வழிபாட்டைப் பற்றித் தவமுன கருத்துக்கள் இக்காலத்துப் பத்திரிகைகளில் எழுதப்படுகின்றன. வழிபாடெல்லாம் வழிபாடுசெய்யும் உயிர்கள் பயன் அடைதற்காகவன்றி கடவுளுக்காகச் சிறிதுமில்லை. கடவுளது பண்பையும் அப்பண்பை உயிர்களிடத்தில் அவன் காட்டும் முறையையும் முதலான உண்மைகளையும் உயிர்கள் அறிந்து வழிபட்டாலொழிய உயிர்கள் தங்களை அநாதியே அடைந்துள்ள மலங்களி

னின்று நீங்கி அவனைச் சார்ந்து அவனிடத்துள்ள நிறை பண்புகளை அடைந்து பேரின்பம் பெறுதல் முடியாது. ஒருவன் தன்னினு முயர்ந்த அறிவுடைய மற்றொருவனுடைய உயர்தரப் பண்புகளை அடைதல் வேண்டுமானால் அவன் அவ்வுயர்ந்தாரோடும் நீண்டகாலம் பழகி அப்பண்புகளை அறிதல் வேண்டும் என்பது உலகத்திற் கண்கூடான அநுபவம்.

20. கடவுள் உலகில் எல்லாப் பொருள்களினும் அணுவுக்கு அணுவாய் விளங்குகின்றானே அவனை உயிர்கள் அப்பொருள்களில் வழிபடுதல் கூடாதா? கோயிலில் வேறே சிவலிங்கமாய் குறி அமைத்து அதில் ஏன் அவர்கள் வழிபடல் வேண்டும் எனின் உலகில் விளங்கும் எல்லாப் பொருள்களுக்கும் தனித்தனி பெயர்களிருக்கின்றன. அப்பொருள்களை ஒருவன் கண்டபொழுது அப்பொருள்களது எண்ண முண்டாவதன்றி கடவுள் என்ற எண்ணம் உண்டாதலில்லை. பொதுவான உணர்ச்சியுடையார்க்கும் பார்த்த மாத்திரத்தே கடவுள் என்ற எண்ணம் உண்டாதற்குக் கோயிலும் கோயிலிலுள்ள குறிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் கோயிலிலுள்ள உருவங்களில் கடவுளுடைய பண்புகளை உணர்த்துதற் கென்றே அமைக்கப்பட்டிருக்கிற குறிகள் உலகிலுள்ள பொருள்களில் காணப்படுவன வில்லை. கோயிலில் ஒரே காலத்தில் பல அன்பர்கள் சேர்ந்து ஒரே கருத்துடன் வழிபடுதலினாலே உண்டாகிற பயன்களில் சிறிதும் வெளிப் பொருள்களை ஒவ்வொருவர் வேறு வேறு காலத்திற் கடவுள் என்ற எண்ணத்துடன் பார்ப்பதனாலும் உண்டாகாது. உலகப் பொருள்களில் மறைந்திருக்கிற கடவுளை எளிதில் நினைத்தற்கு ஏற்ற வழியில் கோயில்களும் கோயில்களில் பல குறிகளும் அடையாளங்களும் அமைந்திருந்தாலும் மக்கள் கடவுளை மறந்து அவனது அருளுக்கு மாறான தீவினைகளைச் செய்கிறார்களே, இந்த அருட் குறிகளில்லாத பொழுது அவர்களது மனம் கடவுளிடத்து எவ்வாறு செல்லும்? இக்கருத்துப் பற்றியே திருநாவுக்கரசு சுவாமிகள்,

குறிகளு மடையாளமுங் கோயிலும்
நெறிகளு மவர்நின்றதோர் நேர்மையும்

அறிய வாயிர மாரண மோதிலும்
பொறியிலீர் மனமென் கொல்புகாததே

என்று தேவாரத்திற் கூறியருளினர்.

சிவலிங்கத்தைப்பற்றி எனது சிற்றறிவுக்கு எட்டினவரையும் மேலே எழுதியுள்ளேன். இந்தக் கருத்துக்களில் ஏதாவது தவறான கருத்துக்களிருந்தால் அறிஞர்கள் அவைகளை எடுத்துக் காட்டுவார்களாக; இன்னு மிகுதியான கருத்துக்களையும் அவர்களெடுத்து உரைப்பார்களாக.

---

## காலத்தின் கோலம்

[காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

இக்காலத்தின் கோலத்தைக் கழறவு மியலுமோ? தத்தம் நிலையறிந்து நிலையினிற்றல் தலையாய சால்பு என்பது மாய்ந்து ஒழிந்தது போலும்! ஒவ்வொருவரும் தாமிருக்கவேண்டிய நிலையிலும் ஒன்றிரண்டுபடி உயர்ந்ததோர் நிலையிலிருப்பதாகவே கருதுகின்றார்கள். இப்பிறழ்ந்த உணர்வு ஏதுவாக ஒவ்வொருவரும் பெரும் பொருளுடைமை குறிக்கும் நிலக்கிழவர், நிதிக் கிழவர் போன்ற பட்டங்களையோ, அன்றி அரசாங்கத்தாரால் அளிக்கப்படும் பொருளற்ற வெறும் பட்டங்களையோ பெற உரிமை படைத்திருக்கின்றனர் என்னும் ஓர் கொள்கை விரைந்து வேரூன்றி வருகிறது. அத்தகைய பட்டங்களை யடைதற்குரிய தகுதியும் வாய்ப்பும் இல்லாதவர்கள்கூட மெய் வருந்தாமல் வாழ்வை எளிதாகவும் பகட்டாகவும் நடத்திச் செல்வதற்கு இக்காலத்தில் பிறப்புரிமை பெற்றிருக்கிறார்கள் என்ற கொள்கையும் நிலவி வருகின்றது. இழிவையும், அழிவையும் பயக்கக் கூடிய இப்பாழும் நினைவிற்குப் பெரும்பாலும் அடிப்படையாக இருப்பதாகக் கருதக்கூடியது முன்னேற்றம் என்ற பெயராற் போரிட்டுப் பெற விழையும் சீர்திருத்தங்களேயாம். இச்சீர் திருத்தங்கள் பெருகப் பெருக நாட்டின் கடனும் உடன் பெருகுகின்றது. கடன் மிகவே வரிகளும் மிகுகின்றன. இக்கடன் பெருக்கமும் வரிப் பெருக்கமுங்கூடி நாட்டில் பொருள் நடப்

யைத் தடைப்படுத்தி விடுகிறது. இத்தடையாகிய பொருள் முடை காலத்தில் எளிதிற் பொருளீட்டுவதே தொழிலா யமைந்துள்ள வட்டிக்குக் கடன் கொடுப்போர்களும், வேண்டுவோர்க்குக் கடன் வாங்கி யளித்துக் கைக்கூலி பெறுவோர்களுமாகிய வகுப்பினரின் தொகை மிகுதியாகிறது. மெய்யுழைப்பின்றியும் பண்டமாற்றும் பாடின்றியும் ஒன்று பத்தாகப் பொருளீட்டும் மறத்துறையாகிய இவ்வழி தொழில் புரிவதால் ஒரு சில நாளிற் பெருஞ் செல்வந்தராவோர் எத்துணையோர்? அன்றி உள்ள ஒரு சிறிதையுமிழந்து பிள்ளை பெண்ணுடன் ஐயம் புகுவோர் எத்துணைபேர்? அறக் கூழ்ச்சாலைக் கூவி யிரந்தோர் அரசோடிருந் தரசாளினும் ஆள்வர் என்றதும் பொய்யாமோ? குடை நிழலிலிருந்து குவைகள் குவித்தோர் நடை மெலிந்து அவரூர் துறந்து சென்றனராயின் அவரின் பிற்கால வாழ்வைப் பற்றிக் கருதவும் நினைப்போர் எவருமிலர். ஆனால் பொருள் நனிபெற்று உயர் நிலையடைந்தோர்களோ நாட்டின் முதற்படியில் வைத்தெண்ணப்படும் பெரியார்களின் நண்பர்களாகவோ அன்றி அப்பெரியார்களில் ஒருவராகவோ மாறி விடுகின்றனர். சென்ற திங்களில் அணைப்போரின்றி யிருந்தோரில் மறு திங்களில் பெருஞ் செல்வந்தராகி "அண்ணலே" என்றழைக்கப்பட்ட பலரை யறிந்திலமோ?

இவ்வாறாக அச்சுக்கெட்டு நிலைதடுமாறி யிருந்து வருமோர் நிலையில் விடாமுயற்சியையும், மெய்யுழைப்பையும், சிக்கனத்தையும், பொறுப்பேற்குந் தகைமையையும் யாரிடத்தேனும் எதிர்பார்த்தற் கூடுமோ? அவ்வளவேன்? மெய்வருந்தி வேலை செய்து வயிறு பிழைக்க வேண்டுமென்று எளிதில் முடிவுகட்டுவோர்களு மிருப்பார்களோ? சிறிதேயாயினும் அறத்தாற்றில் ஈட்டப்படுவதே நன்பொருளாகும் என்ற நீதி, நியதி யெல்லாவற்றையும் ஒதுக்கி வைத்து, உட்கார்ந்த நிலையிலேயே, இனிக்கப் பேசியோ அன்றி இடித்துப் பேசியோ பெரும் பொருள் சேர்க்கும் எளிய வழியையன்றோ யாவரும் பின்பற்ற விழைவார்கள்? எனவே உழைப்பு என்றமொழிக்கே பொருளுணர மாட்டாத பல்லாயிரவர் திரிதருவதை இன்றும்

காணலாம். அவர்களில் ஒவ்வொருவரும் தாமும் நாட்டுப் பெரியார்களில் ஒருவரென்றே கூறிக்கொள்கின்றனர். இஃதிவ்வாறாக, கல்வியிலும் தகுதியிலும் மேம்பட்ட ந்நாட்டுச் சிறுவர்கள் வேலையின்றித் திரிந்து பொருளீட்ட விழையும் வீணர்களை நோக்கித் தாமும் உழைப்பின்றி வாழ நினைப்பதும் இயல்பேயன்றோ ?

இஃதொரு புறமிருக்க, சென்ற பெரும்போர் ஏதுவாக, இவ்வெறும் பட்டதாரிகளின் தொகையும், குருடன் புதையலெடுத்தது போல் உழைப்பின்றிச் செல்வந்தரானவர்களின் தொகையும் ஒன்று பத்தாகப் பெருகிவிட்டது. எத்துணை "அண்ணல்கள்"! எத்துணை "அம்மைகள்"! சிறு முதல் வைத்துப் பண்டங்கள் விற்றுவந்த பலர் போரின்பின் நாட்டுப் பெரியார்களில் இடம் பெற்றதைக் கண்ட இளைஞர்கள் அவர்களைப் போலவே நடந்து கொள்ளக் கருதுகின்றனரே யன்றித் தத்தம் உண்மைத் தகுதிக் கேற்றவாறு வாழ வெள்குகின்றனர்.

இத் தகுதியில்லாத் தகுதியை நாடும் ஒரு புரைபட்ட நினைவிற்குச் சீர்திருத்தங்களே அடிப்படை யென்பது ஒருவாறு உண்மையாயினும், அது மக்கள்மாட்டு மெய்யுழைப்பையும், ஊக்கத்தையுங் கெடுத்து மடியை வளர்த்து வருவதால் அதை ஒரு தொத்துநோயென்றே கருதி விலக்கற் சால்புடைத்து. நாட்டிலுள்ள எல்லோருமே பட்டங்களைப் பெற்றுச் சிவிகையூர்ந்து செல்ல முயன்றால் அச்சிவிகை பொறுத்துச் செல்வோர்கள் வேண்டாவா ? மேலும் நாட்டு மக்களிற் பெரும் பகுதியினர் உழைத்தாலன்றி உணவு பெறமுடியாத பெற்றியரன்றோ? அறத்தாற்றி லீட்டப்படுவதே நன்பொருளெனக் கருதி அவ்வழி பொய்யுங்களவும் புனைசுருட்டுந் தவிர்ந்து பொருளீட்டி நாணயத்திற்கும், நேர்மைக்கும் எடுத்துக் காட்டாயிருந்து வந்த இந்நாட்டில், எக்காலத்தும் ஆகுல நீரவான வீண் பகட்டுகளை வெறுத்தொதுக்கி உள்ளீடமைந்த மெய்ப்பொருளையே பெரிதெனப் போற்றி வந்த இந்நாட்டில், இக்காலத்துள்ள இளைஞர்கள் பெரும்பாலர் தாமும் "பெருந்தகை"கள் போலப் பிறங்க வேண்டுமென்ற ஒரு புரைபட்ட உணர்வால் அரைப்பட்டினி கிடந்து

வருகிறார்களென்றே கூறலாம். இவ்வாறு அரைப் பட்டினி கிடப்பது தானும் மெய்வருந்தி உழைக்கமாட்டாமை யானன்று, மற்றெதனாலே யெனின் மெய்யுழைப்பைச் சிறுமையாகக் கருதும் தருக்கெனப்படும் ஒரு பொய்ப் பெருமையினாலே தான். இத் தருக்கினாலெய்த விருக்குங் கேட்டை நினைப்பின் அம்மம்ம நெஞ்சு நடுங்குகிறது! இளைஞர்கள் பெற்றோர்க்கு எய்ப்பினில் வைப்பா யிருப்பதுபோக மக்களுட் பதடியாய்மாற முயல்கின்றனர். இதுவுங் காலத்தின் கோலமே!

---

# புகழேந்தி-செந்தமிழ் நாடகம்.

(இதன் உரிமை யாக்கியோற் குரியது)

(திரு. அ. நடராஜ பிள்ளையவர்கள்)

(சிலம்பு-எ, ௬௩௬-வது பக்கத் தொடர்ச்சி)

மூன்றும்அங்கம்—முதற்காட்சி.

இடம்—சோழநாட்டுச் சிறைச்சாலைக்குப் பக்கத்தெரு.

நடர்—குலோத்துங்கன். ஒட்டக்கூத்தர், கம்பர், புகழேந்தி, ஆறுமுக வேளான் முதலிய மாணவர்கள், மந்திரி, பிரதானி யாழ்ப்பாணர் முதலியோர்.

காலம்—காலை.

(புகழேந்தியும் மாணவர்களும் சிறைச்சாலை மேற்றளத்தினின்றும் வேடிக்கை பார்க்க.)

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி:—(மாணவர்களை நோக்கி)

அன்ன மாவி னன்னிலை கைக்கொள்
மாணவ மதித்திறம் வாய்ந்தநற் புலவீர்!
காணவே யெளிதாய்க் கவினுறத் தோன்றுமித்

தெருவழி னேக்குமின் ! தேமா விலையொடு
வாழைநற் கமுகின் வாங்கிய குலையும்
செவ்விள நீரும், திகழ்கடிப் பகையும்
தூக்கிய தோரண வாயிலும், பூரண
கும்பமும், பாலிகை கொண்டநல் லெழிலும்,
கம்பமா ரெழிலும், கவினுறு மைந்தர்
சிந்தையின் மகிழ்ச்சியைத் தேக்கிடு முகமும்,
சந்தமார் மடந்தையர் தவளநன் னகையும்,
மாநில மக்கள் வாழ்க்கைக் குயிராம்
மேனில மன்னன் விடுத்தநற் றுணையெனு
நானிலக் காவலன் நற்பெருந் தெய்வந்
தமக்கெனக் கொண்ட தணிவிலா வரச
வன்பினை வானக மகன்றநன் மதியென
இன்புற விளக்கு மெழிலினை யுணர்மின்.

பெருமாள் பிள்ளை:—

கற்றோர் மணியே ! கவின்குலோத் துங்க
நற்றவ வள்ளல், நாட்பல விரவியின்
றோற்ற மின்றித் துலங்குநன் மதியும்
ஆற்றவுஞ் செறிந்த வழிபெரு முகிலான்
மறைந்திட மிகுபனி வாடையன் னேய்கள்
அடைந்திட வவதிபல் லடைந்திடு மக்களை
நிகர்த்தவிவ் வுறையூர் நெடுநகர் மக்களின்
அகத்தினிற் பருதியா யமர்ந்துநற் காட்சி
கொடுக்குமிவ் வேளையிக் குதூகல மாட்சி.
யடுப்பது தகவே.

(ஒட்டக் கூத்தர் முதலிய மந்திரி பிரதானிகள் குதிரை மீதேறிச் சூழ்ந்து வரக் குலோத்துங்கன் யானை மீது பவனிவர)

அங்கணஞசாரி:— அஃதோ ! காண்மின் !

உதயமா கிரியிடை யுதித்ததோர் கதிரென

மதமா மிசையே வதிதருந் துங்கன்
பச்சைப் புரவிசூழ் பவனியின் சிறப்பை.

(குறள் வெண் செந்துறை)

யாழ்ப்பாணர்:—

காமா மிசையே தோன்றிடுநற் கவினர்பருதி தனைநிகர்த்துப்
போர்மா வயங்கக் கைப்பாவிற் பொலியுந் துங்கன் சிறந்திடவே

2. திகிரி யெடுத்து வான்புக்குச் செழித்த கற்ப தருவினொடு
மகியே சிறக்க சாதமெனும் வல்லி கொணர்ந்த கண்ணனையே.

3. நிகர்த்துத் தென்னு டேபுகுந்து நிகரில் கற்ப வல்லியெனும்
அகத்தைக் கொணர்ந்த பெருவாழ்வேஅழகாய்வாழிவாழியவே

4. முந்நா டதனிற் சிறந்திடுநல் முளரிப் பொய்கை நிறைபதியாம்
நன்னாட் டதிபா! நாயகமே! நாளும்வாழி வாழியவே.

5. சோழ வளமா நாடதுவே சோறுடைத் தென்று துதிபுலவர்
வாழும் பெருமா நாட்டிறையே! வாழிநாளும் வாழியவே.

ஆறுமுகவேளான்:—

ஆ! கா! அரசனு மிதோவரு கனைந்தனன்.
மாகா திபர்நில வாய்த்தநாஞ் செவ்விதே
மேற்றளத் தமர்ந்து வீரனின் முகத்தருள்
காற்றது வீசக் காணுநம் பெருமை
அமரர் விண்ணகத் தமர்ந்தும் பொருந்தார்.

(குலோத்துங்கன் பவனியொடு சிறைச்சாலைக்குப் பக்கத்தில் வர)

வெள்ளையனுசாரி:—

பொருந்தார் பொருந்தார் பொருந்தவே பொருந்தார்
மருந்தினை யனையநம் மன்னனும் நெருங்கினன்
காண்மின் முகத்தின் களையினை, நிறைமதி
நாண்மீன் யாவும் நலனுறச் சேர்ப்பினும்
ஒவ்வா திந்த வொளியினைச் சிறிதும்.

புகழேந்தியும், மாணவர்களும்:—(குலோத்துங்கனை நோக்கி).

வாழி ! குலோத்துங்க வள்ளால் ! வாழி!
யூழிக் காலமிவ் வொண்மகிழ் சிறந்தே.

குலோத்துங்கன்:—(ஒட்டக்கூத்தரை நோக்கி)

முத்தமிழ் மதம்பொழி மத்தகக் களிறே !
இத்தலத் திருக்குமிவ் வரும்பெரும் பெரியார்
வெண்பா வரிப்புலி வேங்கையே யன்றோ?

ஒட்டக்கூத்தர்:—

கண்பா னல்கள்சூழ் கவின்மார் புடையாய் !
வேங்கை வரிப்புலி யானே அவன்கான்
பாங்கர்வாழ் புல்வாய்ப் பான்மைய னவன்.

(கலித்துறை)

மானிற்கு மோவிந்த வாளரி வேங்கைமுன்? வற்றிச் செத்த
கானிற்கு மோவிவ் வெரியுந் தணன்முன்? கனைகடலின்
மீனிற்கு மோவிந்த வெங்கட் சுறாமுனம்? வீசுபனி
தானிற்கு மோவிக் கதிரவன் றோற்றத்திற் றார்மன்னனே?

புகழேந்தி :—புகழா மலையிற் பொருந்திய துங்க.
இகழ்வா யிசைத்தவிக் கவிக்குத் தரமாய்ப்
பாடுதல் வேண்டினன். பாடிய பஞ்சைப்
பாட்டினை யொட்டிப் பாடவோ? வெட்டிப்
பாடவோ? செப்பீர்.

குலோத்துங்கன்:— பல்விதப் புலமை சால்.
திருவினை நிகர்ப்போய் ! திகழ்ந்தநங் குருவுங்
கருவினின் றெடுத்துக் கவினுற வளர்த்த
தந்தையு மாய மைந்தமை புலவர்
தந்தவாய் மொழியினை வெட்டிடல் தரியேன்;
ஒட்டிட வேண்டினன்: உயர்கவிப் புலவீர் !

புகழேந்தி :—அட்டியில் லாம லங்ஙனம் புரிவல்.

(கலித்துறை)

மானவ னனந்த வாளரி வேங்கையும், வற்றிச் செத்த
கானவ னனவ் வெரியுந் தனலாம், கனைகடலின்
மீனவ னனந்த வெங்கட் சுறவினம், வீசுபனி
தானவ னனக் கதிரவன் றோற்றநற் றூர்மன்னனே.

குலோத்துங்கன்:—

ஓ! கோ! இஃதோ வொட்டிடல்! அட்டையி
னொட்டு மிதனை யொவ்வா தாயினும்,
செருமுகத் தெவரே கிளையினைத் தெரிவர்?
செந்தமிழ்ச் செல்வியின் றிருநோக் குடைய
மைந்தரா மிருவிரு மிங்ஙன மாறிட
லிழுக்கே யாகும்;

கம்பர்:— இணையறு தமிழ்க்கே.

(பவனியப்பாற் செல்ல)

கண்ணன்:—(புகழேந்தியை நோக்கி)

அழுக்கினை யகற்றி யைந்தோ டைந்தரை
மாற்றப் பொன்னென வெங்களை மாற்றிய
ஆற்றலிற் பெரியீர்! அறிவிலாக் கூத்தனோ
டின்றே நாட்போ ரியக்கத் தொடங்கி
நன்றே வெற்றியு நமதாய்ப் பெற்றோம்.

புகழேந்தி :—ஆயினும், இதுநா மடைவதி லொருதுளி
தாயினும் பெரியதாய்க் கூத்தனைத் தழுவும்
அரசன தன்பினை யுணர்மின். ஆகலின்,
அரசன் முன்பி லணைந்திடு காலம்
நேரிடின் யாவரும் நிமிர்ந்துநம் மொழியால்
வீறிடின் மீள்வம்.

கருப்பஞசாரி:— மெய்யே யெம்முயிர்
போயினும் பின்னிடோம்; புலனர் மணியே.

(புகழேந்தி முதலோர் மேற்றளத்தை விட்டிறங்க)

(காட்சி முடிகிறது)

---

# நாமகள் தாலாட்டு

[திரு. க. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்]

(48-ம் பக்கத் தொடர்ச்சி)

சொன்மா மணிமதுரைச் சொக்கப் பிரானருளும்
கன்மாப் பலகைக் கனகமணித் தொட்டிலிலே 70
கன்மாப் பலகைக் கனகமணித் தொட்டிலிலே
சொன்மாலை யேழெழுவர் சூட்டவளர் தூமணியோ 71
முச்சங்க மென்னும் முழுவயிரத் தொட்டிலில்நாற்
பிச்ச நிழற்கீழ் வளர்ந்த பிராட்டியரோ 72
சீரா ரகத்தியமாஞ் செம்பவளத் தொட்டிலிலே
பாரார் பரவப் பயின்றருளும் பான்மொழியோ 73
கூருந்தொல் காப்பியமாங் கோமேதத் தொட்டிலிலே
பூரணனார் தாலாட்டக் கண்வளரும் பொற்கொடியோ 74
இச்சைப்பட் டார்க்கினிய ரேனுஞ் சேனாவரையர்
நச்சுபே ராசிரியர் நன்கிருந்து தாலாட்ட 75
நச்சுபே ராசிரியர் நன்கிருந்து தாலாட்ட
இச்சை யுடன்வளர்ந்த வெங்க ளிளம்பிடியோ 76
பாவலர்கள் நாவாகும் பச்சைமணித் தொட்டிலிலே
காவலர்கள் கைகொடுக்கக் கண்வளருங் காரிகையோ. 77
தொன்னூற்பா வாய்ந்து தொடுத்தபசுந் தொட்டிலிலே
நன்னா னுனுகிடையார் நாதச் சுதியெழுப்ப 78
நன்னா னுனுகிடையார் நாதச் சுதியெழுப்ப
பின்னா லணையி னுறங்கும் பிராமியரோ 79
விண்ணே புவியே விரிபுனலே காலேயெங்
கண்ணே மணியேநற் காட்சியே கண்வளராய் 80
தண்டாச் சிறப்புடைய சாவித் திரிமானே
கண்டே சுவையே கனங்குழையே கண்வளராய் 81

திங்கட் குடையான் திருக்கரத்திற் போய்க்குனியாச்
செங்கட் கரும்பூறுந் தேறலே கண்வளராய் 82
உண்டா லினிக்கு முதுபோலா தெஞ்ஞான்றுங்
கண்டா லினிக்குங் கலையமுதே கண்வளராய் 83
மாரிதாள் கூந்தன் மதிவெண் டிலதநுதற்
கூரிய நாசிக் குறுந்தொடியே கண்வளராய் 84
ஞானப் புவிக்குயிராய் நாட்டுங் குடிலையெனும்
மானப் பெருவாவி வட்டவடி வாயிருக்கும் 85
வட்டப் பெருங்குளத்து மாமருங்கு தோறுமங்கே
மட்டுவிரி கஞ்ச மலர்க்காடு பூத்திடுமே 86
மட்டுவிரி கஞ்ச மலர்க்காட்டு மத்தியிலே
வெட்ட வெளியிலொரு வெண்டா மரைமலரும் 87
வேத மரும்பி மிகுமா கமம்விரிந்து
போதக் கலைநாறிப் பொருட்டா திறைத்திடுமே 88
சேரா யிரமுகமுஞ் செந்தே னறிவொழுக்கி
ஓரா யிரமிதழ்கொண் டோங்குமந்த புண்டரிகம் 89
உண்டு பசிபோக்கி யோரே ழிசைச்சுருதி
வண்டு முரல மலர்ந்ததந்த புண்டரிகம் 90
பேச மலர்ந்த பிரசைவெண் டாமரைமேல்
வாச மணிப்பொகுட்டு மந்திரப்பொற் றெட்டிலிலே 91
மின்ன லிடையுடையார் வீழும் மொழியுடையார்
வன்ன வடிவுடையார் மங்கையர்முப் பானொருவர் 92
மங்கையர்முப் பானொருவர் வந்து புடைசூழ்ந்து
செங்கை குவித்துச் சிரம்வணங்கி மெய்காப்ப 93
எண்ணெண் கலையி லெடுத்தவெண் சாமரங்கள்
பண்ணென் மொழியார் பணிந்து பணிமாற 94
கீதக் கடற்பிறந்த கின்னரமங் கையர்கள்
நாதச் சுதிதூக்கி நல்வீணை வாசிக்க 95
நீரியலுஞ் சென்னி நிமலன் மனைப்பிறந்த
வாரிய மங்கை யருகிருந்து தாலாட்ட [illegible]

ஆரிய மங்கை யருகிருந்து தாலாட்டச்
சீரிய தென்சொற் றிருமகளே கண்வளராய் 97
மானே பிடியே மணிப்புறவே மாமலையிற்
றேனே குறையாத் திரவியமே கண்வளராய் 98
வஞ்சி யிடையாளே வாழைத் தொடையாளே
கொஞ்சு மொழியாளே கோமகளே கண்வளராய் 99
அன்னக் கொடியாளே யம்பூர வாகனியே
பொன்னுரைத்த மேனிப் புரிகுழலே கண்வளராய் 100
பத்தித் தருவிற் பழுத்ததே மாங்கனியே
சித்தத் தெளிவே சிவக்கொழுந்தே கண்வளராய் 101
முன்ன வினிக்கு முதுபாகே சர்க்கரையே
சின்னஞ் சிறுத்தவிடைத் தேன்குழலே கண்வளராய் 102
மாசு தவிர்த்த மதிவதனஞ் சோதிகுன்ற
ஓசை தழுதழுக்க வுன்னி யழவேண்டாம் 103
துண்டப் பிறைநுதலிற் சோதிமணி முத்தரும்பக்
கண்டம் பொருமக் கலைச்சி யழவேண்டாம் 104
கண்ணாடி யன்ன கதுப்புக் கவின்றொலைய
அண்ணாந்து வெம்பி யரசி யழவேண்டாம் 105
இல்லா ரிளமையென வேரார் முகம்வாடி
அல்லல் பெருக அரசி யழவேண்டாம் 106
காலனை வென்று கலையையரன் கைப்படுத்தும்
வேலை நெடுங்கண்கள் வெண்முத்தஞ் சிந்திடுமே 107
வேலை நெடுங்கண்கள் வெண்முத்தஞ் சிந்தியிடப்
பாலைப் பழித்தநிறப் பாவை யழவேண்டாம் 108
நஞ்சை யரன்களத்து நாட்டிக் கருங்குவளை
அஞ்ச மலர்விழிகள் ஆணிமுத்தஞ் சிந்திடுமே 109
அஞ்ச மலர்விழிகள் ஆணிமுத்தஞ் சிந்தியிடச்
செஞ்சொற் பெருமதுரைச் செல்வி யழவேண்டாம் 110
சேலெல்லாந் தென்மதுரைத் தேவிவிழி சென்றடைய
வேலெல்லாம் வென்றகண்கள் வெண்முத்தஞ் சிந்திடுமே 111

வேலெல்லாம் வென்றகண்கள் வெண்முத்தஞ் சிந்தியிட
நூலெல்லாம் போற்றுமெங்கள் நோன்பே யழவேண்டாம் 112

கோப விதழ்துடிக்க கோற்றேன் கடைதுளிக்கச்
சாப நுதனெரித்துத் தையா லழவேண்டாம் 113

நல்லுயிர் கோற லெதிர்ப்பட்டோன் நெஞ்சம்போல்
மெல்லிதழ்க டாந்துடிப்ப வெம்பி யழவேண்டாம் 114

பூவூ ரிதழ்துடிப்பப் பூங்குமுதப் பொற் பழித்த
வாயூறி மேனி வடிய வழவேண்டாம் 115

கற்புடையார்த் தூற்றுங் கயவன்சீர் போலுனது
பொற்பு நலனழியப் பூவை யழவேண்டாம் 116

முன்வா யரும்பிரண்டு தோன்ற முறுவலித்துப்
பின்வா யுதடு பிதுக்கி யழவேண்டாம் 117

கண்பாதி மூடிக் கடைவா யமுதொழுகப்
பெண்பாவை வெம்பிப் பெரிது மழவேண்டாம் 118

காமன் சிலைபழித்த கட்புருவங் குஞ்சித்துத்
தாம வடஞ்சுவைத்துத் தையா லழவேண்டாம் 119

வாக்குத் தழுதழுக்க மைக்கண் சிவப்பேற
மூக்குநீர் சிந்த முதல்வி யழவேண்டாம் 120

கையின் வளைபுலம்பக் காற்சதங்கை ஓலமிடச்
செய்ய விரல்சுவைத்துத் தேவி யழவேண்டாம் 121

ஊடன் முகத்தயனார் உச்சி மிசையுதைக்கும்
பாடகத் தாள்சுவைத்துப் பாவை யழவேண்டாம் 122

ஆச்சி யழவேண்டாம் அம்மா வழவேண்டாம்
வாய்த்த தமிழகத்து மாதா வழவேண்டாம் 123

பாலாற் குறையோபூம் பஞ்சணையாற் பஞ்சமுண்டோ
கோலமணிப் பூணுடை யிங்காட் குறைந்தனவோ 124

பாலன் குரல்கேட்டுப் பாற்கடலை யீந்தபிரான்
ஓலஞ் செவிகேட் டுனதுபசி தீரானோ 125

தேம்பி யழுத சிறுவனுக்குப் பால்சுரந்த
காம்பனதோ ளன்னை கருணை புரியாளோ 126

வானுறங்கும் மேனி வடிவழக னுன்மாமன்
தானுறங்கும் பாற்கடலைத் தந்துபசி தீரானே 127

பிள்ளைப் பிறையணிந்த பிஞ்ஞகனும் பேறுதவு
புள்ளி மயிலூரும் புலவர் பெருமானும் 128

வாரி குடித்த வரமுனியும் வாலறிவிற்
சீரியரு மோர்மூன்று தேனு வளர்த்தார்கள் 129

போற்றுங் கபாடபுரம் பொன்னூருந் தென்மதுரை
ஏற்ற மணிக்கூட லிம்முத் தொழுவினிலே 130

ஏற்ற மணிக்கூட லிம்முத் தொழுவினிலே
பேற்ற மொருமூன்று பேணி வளர்த்தார்கள் 131

வல்ல நாவாலே மதிவயலி லேசெதுக்கிப்
புல்லுநூ லூட்டிமிகப் பேணி வளர்த்தார்கள் 132

செல்வப் பசுமூன்றிற் றேடிக் கறந்தெடுத்த
நல்ல சுவையமுதம் நாங்களுனக் கூட்டிவைப்போம் 133

பத்துடனே எட்டும் பதினெட்டு மாகியநூற்
கொத்துக் கவியமுதங் கோல்வளையே யூட்டிவைப்போம் 134

தொண்டர் புராணத் தொடுகடலி லேயருளாற்
பண்டுகிழான் மொண்டுதவு பாலமுத மூட்டிவைப்போம் 135

கந்தன் கதைகடைந்து கச்சியப்ப னன்றெடுத்துத்
தந்த சுவைத்திரளைத் தையா லருந்திவைப்போம் 136

பேசுபுக ழேந்திகனி வெண்பாப் பிழிந்துகம்பன்
ஆசு கவியி லனேகமுடைத் துத்துருவிக் 137

கூத்த னுலாச்சுவையுங் கூட்டி யதிவீரன்
வார்த்தைச் செழுந்தேனும் வாக்கி வடித்தெடுத்து 138

அல்லமன் காதை யருங்கருப்பஞ் சாறாற்றி
வில்லி தனிகை வியன்கவித்தீம் பாலளவி 139

மெல்லியபா கட்டெடுத்து வேண்டும் படிதருவோம்
கல்லை யுருக்குமொழிக் கன்னி யழவேண்டாம் 140

பொன்னென்னும் மாமி பொறுது மனம்புழுங்கிக்
கன்னத் தடித்துவெகு கற்பனைகள் சொன்னாளோ 141

நாசித் துளையாலும் நாக்கு நுனியாலும்
பேசும் பரதேசிப் பெண்ணணங்கு தொட்டாளோ 142

ஆதரித்த மக்களெலா மவ்வணங்குக் காசைகொண்டு
காதரிக்கப் பேசியுனைக் கையுதறி விட்டாரோ 143

சிங்கள மாதியயற் றேயத்துப் பெண்மணிகள்
எங்களுக்கு நீயொப்பென் றில்லாத சொன்னாரோ 144

எல்லாத் திசையு மெறித்த விருஞ்சீர்த்தி
கல்லார் மனம்போலக் கங்குல்லாய்ப் பட்டதுவோ 145

வாயின்மத நூலொருகை வாளொருகை கொண்டுவஞ்சர்
தீயினவை வாரியிட்டுச் சேர வெரித்தனரோ 146

அஞ்சியொஞ் சிப்பதுங்கி யங்கங் குடைந்தவற்றைச்
செஞ்சிதலு மண்ணுஞ் சிதைத்தரித்து தின்றனவோ 147

செஞ்சிதலு மண்ணுஞ் சிதைத்தரியாச் சில்லணிகள்
வஞ்ச மனமுடையோர் மாட்டு மறைந்தனவோ 148

தக்கசில நூலணிக டாமுமணி யாருதவார்
வைக்கோன் ஞமலியர்பால் வந்தடைந்து மாண்டனவோ 149

போதனை சாதனையில் போற்றவைத்த சந்ததிகள்
மாதன சாதனையி லுன்னை மறந்தனரோ 150

வாகான மாபா டியமணியை வண்டுறையார்
ஆகாது கொல்லென் றறையில்வைத்துப் பூட்டினரோ 151

ஆரியை பெற்ற வணங்கென் றுன் னைச்சிலபேர்
காரிய மின்றிக் கழறக் கலங்கினையோ 152

உள்ள பெயரிருக்க வூரார் பெயர்சூட்டிக்
கள்ளத் திருவாண்டுங் கட்டி மொழிந்தாரோ 153

முச்சங்க வாழ்வும் முடிமன்னர் காவலும்போய்
அச்சத்தின் மேலும் அபப்பழியு மாயினவோ 154

ஆதரிப்பார் போனார்க ளாடைபணி யில்லையென்று
மாதரசி நொந்து மனக்கவலை கொள்ளுதியோ 155

உள்ளங் கவலற்க வுண்கண் பனியற்க
கொள்ளும் படிதெரிந்து கூறுவன கேட்டீமோ 156

சீரழிந்து கெட்டுச் சிதைந்து நிரைமாறிப்
பேரழிந்து பூஞ்சு பிடித்து பிடிபாகி 157

முன்பின் முரணி முழுதும் புழுவுழுது
கம்பை நடுமுரிந்து கட்டுவிட் டுச்சிதறி 158

மூலைக்கு மூலை முடங்கிமடங் கிக்கிடந்த
கோலத் திருவா பரணக் குவையெல்லாம் 159

கோலத் திருவா பரணக் குவையெல்லாம்
வாலறிவின் மேலோர் வருந்தி யெடுத்தார்கள் 160

ஊனுந் துயிலு முடற்சுகமுங் கைப்பொருளும்
நாணுங்கை விட்டவர்கள் நாடி யெடுத்தார்கள் 161

நாடி எடுத்து நலனழியா மற்றிருத்தி
நீடுலகி லெங்கும் நிறைய வளித்தார்கள் 162

எங்கு மளித்த வெழிலா யிழைகளெல்லாம்
மங்கா நிதிவழங்கும் வாழ்வே எடுத்தணிவேம் 163

ஆறுபே ரீரேழ் அணிமணிகள் வைத்திழைத்த
பேறுதவு ஞானப் பெருமகுடஞ் சூட்டிவைப்பேம் 164

நாவார வேத்தியிந்த நானிலத்தார் வாழ்வுபெறும்
தேவார முன்றன் திருக்கழுத்திற் பூட்டிவைப்பேம் 165

ஆணிப்பொன் னம்பலவன் கோத்தருளு நானூறு
மாணிக்கக் கோவைமணி மார்பி லணிந்திடுவேம் 166

நாவா யிரம்போற்று நன்மந் திரமாலை
மூவா யிரமுமெங்கள் மொய்குழலே யாமணிவேம் 167

தேவ ரிருவர் தருஞ் செஞ்சொற் றிருமணிகள்
தாவில் தொடைமிடைந்து தாயே தரித்திடுவேம் 168

மாகலைதே ருங்கூல வாணிகனுர் தந்தமணி
மேகலைவெண் கலைசூழ் மின்மருங்கி லேபுனைவேம் 169

சீரடியர் நல்லா ருரைத்து விலைதெரித்த
சேரமான் தந்த திருச்சிலம்பு காற்கணிவேம் 170

பண்டை வளையா பதியுடனே பாவலர்நா
விண்ட தமிழ்க்காப்பு மென்கரத்துச் சேர்த்திடுவேம் 171

செந்தாது சேர்த்தெடுத்துத் தெய்வப் புலவர்செய்த
அந்தாதி யாழி யணிவிரலுக் கீந்திடுவேம் 172

மங்கல மாலைபுனை மஞ்சரி வஞ்சியுலாத்
துங்க மடன்முதலாச் சொல்லணிகள் சூட்டிவைப்பேம் 173

சூட்டிப் புனைந்து தொடுத்தணிந்து தொன்மையெழில்
காட்டி யணைத்துக் கரத்தேந்திக் காவல்செய்து 174

பாட்டுக்குப் பொன்சொரியும் பாண்டித் துரைத்தேவன்
கூட்டி யியற்றுங் குலவுசங்கத் தொட்டிலினும் 175

அன்பர்க ளங்கங்கே யமைத்துவைத்த சங்கமெனும்
பொன்பொதியும் தெய்வப் புதியமணித் தொட்டிலினும் 176

ஆரியமுந் தண்டமிழும் ஆதரிக்கு மன்பர்புரி
சீரியநற் சங்கமெனும் தெய்வமணித் தொட்டிலினும் 177

சீரியநற் சங்கமெனுந் தெய்வமணித் தொட்டிலினும்
கூரியமெய்ஞ் ஞானக் குலவிளக்கே யாமேற்றி 178

தீட்டும் பனுவற் றிருப்புகழெ லாங்கூறி
வாட்டந் தவிர மகிழ்ந்துதா லாட்டினமே 179

வாட்டந் தவிர மகிழ்ந்துதா லாட்டவது
கேட்டு மனமகிழ்ந்து கேடி லருள்பூத்துக் 180

கேட்டு மனமகிழ்ந்து கேடி லருள்பூத்துக்
கோட்டந் தவிர்த்துக் குறுமுறுவல் கொண்டருளிச் 181

செஞ்சிலம்பு கொஞ்சுந் திருச்சரணஞ் சென்னியில்வைத்
தஞ்சலஞ்ச லென்றே யணைத்துப் புறந்தடவி 182

வாட்டு மிடியும் மனவருத்த மும்போக்கித்
தீட்டுங் கலைத்தமிழின் செல்வ மெமக்கருளிக் 183

கஞ்சத் தவிசும் கலைவாணர் நாவும்போல்
நெஞ்சத் திருந்து நினைத்த வரங்கொடுத்து 184

நெஞ்சத் திருந்து நினைத்த வரங்கொடுத்துச்
செஞ்சொற் பிராட்டி திருவருள்செய் தாண்டனரே 185

தெய்வத் தமிழ்வாழி செந்தமிழின் நூல்வாழி
நல்வித்தை யீந்தருளும் நாமகளும் வாழியரோ 186

ஆனை முகன்வாழி ஆறு முகன்வாழி
ஞான மணிமன்று ணாயகனும் வாழியரோ 187

அம்பிகை வாழி அகத்தியனு ரும்வாழி
நம்புமுச் சங்கத்து நாவலரும் வாழியரோ 188

மூவேந்த ரும்வாழி முச்சங்க மும்வாழி
பாவேய்ந்த பாண்டிப் பழம்பதியும் வாழியரோ 189

சேலாட்டு முண்கட் டிருவாணி மேலுரைத்த
தாலாட்டெஞ் ஞான்றுந் தழைத்தினிது வாழியரோ. 190

நாமகள் தாலாட்டு முற்றும்.

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A.]

பண்டைத் தமிழ் மக்கள் கடவுளைப்பற்றி என்ன கருத்துக்கள் கொண்டிருந்தார்கள் என்பது அவர்கள் பண்டைக் காலத்தில் வழங்கிவந்த சில செந்தமிழ்ச் சொற்களால் நாம் அறியலாம். அச்சொற்களில் கடவுள் என்பது ஒன்று. கடவுள் என்னும் பண்டைத் தமிழ்ச்சொல் கட என்னும் பகுதி (root) யும் உள் என்னும் தொழிற்பெயர் விகுதியும் சேர்ந்து உண்டான பெயர்ச்சொல். அச்சொல்லினுடைய வேர்ப்பொருள் (root meaning) கடத்தலையுடையவன் அல்லது கடந்தவன் என்பதாம். கடந்தவன் என்றால் எதனை அல்லது எவைகளைக் கடந்தவன் என்ற கேள்வி பிறக்கும். மக்கள் அறிவுடையவர்களாதலின் கடவுளைப் பற்றியுள்ள கருத்துக்களை முதலாவது தங்கள் மனதில் நினைத்துப் பின் அவைகளை வாயினாற் சொல்லுகிறார்கள். கருத்துக்களை மனதில் நினைத்து வாயினாற் சொல்லுதலே மக்களது இயற்கைச் செயலாகும். மனத்தின் செயல் உள்ளே நிகழ்வதாயும், வாயின் செயல் வெளியே நிகழ்வதாயுமுள்ளது. ஆதலின் பண்டைத் தமிழர்கள் மனதை உயிரி(ஆன்மாவி)னது உட்கருவியென

றும் வாய் முதலிய ஐம்பொறிகளையும் புறக்கருவிகள் என்றும் கொண்டார்கள். அதிலிருந்து உயிர் (ஆன்மா) தனது உட்கருவியால் செய்கிற செயல் எல்லாம் உயிரினது செயலென்றும் வெளிக்கருவியால் செய்யும் செயல் எல்லாம் உடலினது செயல் என்றும் கொள்ளப்பட்டது. இங்கே செயல் என்பது அறிதலாகும். ஆகவே உயிர் தனது உட்கருவியால் அறியுஞ்செயலை உயிர் அறிவு அல்லது பசு ஞானம் என்றும், வெளிக் கருவியாலறிதலை உடல் அறிவு அல்லது பாச ஞானம் என்றும் அவர்கள் கொண்டார்கள். இவ்வாறு கடவுள் என்ற சொல் உயிர் அறிவையும் (பசு ஞானத்தையும்) உடல் அறிவையும் (பாச ஞானத்தையும்) கடந்தவன் என்னும் பொருளில் வந்தது.

2. உடலானது ஒரு சிறிய உலகம் ஆதலின் உடல் அறிவு என்னும் சொல்லில் உலக அறிவும் அடங்கும். அறிவைக் கடந்தவன் என்றால் அறியப்படாதான் என்பது பொருள்,

3. கடவுள் உயிர் அறிவாலும் (பசுஞானத்தாலும்) உடல் அறிவாலும் (பாச ஞானத்தாலும்) அறியப்படுவான் அல்லனெனில் அவன் எதனால் அறியப்படுவான்? ஒருவாற்றாலும் அறியப்படானோ? என்ற கேள்விகள் அறிவுடையானொருவன் உள்ளத்திலுண்டாகும் இந்தக் கேள்விகளுக்கு விடைகள் அளித்தற்கு அவர்களது உள்ளத்தில் ஓர் ஆராய்ச்சி எழுந்தது.

4. அவ்வாராய்ச்சி அடியில் வருமாறு: கடவுள் உயிர் அறிவாலும் (பசு ஞானத்தாலும்), உலக அறிவாலும் (பாச ஞானத்தாலும்) அறியப்படுவான் அல்லனாயினும் ஒருவாற்றாலும் அறியப்படுவான் அல்லனாயின் அவனால் உயிர்கள் அடையும் பயன் யாது? பயன் ஒன்றுமில்லாவிடின் அவன் உயிர்களுக்கு எவ்வாறு முதல்வன் ஆவான்? இவ்வுலகில் நாம் கண்ணாற்கண்டும் உய்த்துணர்ந்தும் அறிகிற வியப்பான செயல்களெல்லாம் ஒரு முற்றறிவுடைய முதல்வனாலன்றி நடைபெறுமா? இன்னோரன்ன கேள்விகளுக்கு விடைகள் அளிக்குங்கால் அவர்கள் கடவுள் ஒருவாற்றான் அறியப்படுவானென்றுதான் முடிவு கட்டவேண்டியதிருக்கிறது.

5. கடவுள் எவ்வாறு அறியப்படுவான் என்னும் கேள்விக்கு விடை அளித்தற்கு உலகில் நிகழும் இயற்கை நிகழ்ச்சி ஒன்றும் அவர்களுக்கு உதவியாயிருந்தது. அது பகலோனும் (சூரியனும்) அவனது ஒளியும் ஒன்றைவிட்டு ஒன்றைப் பிரியாமலிருக்கிறது. பகலோன் அவனது ஒளியால் பகற்காலத்தில் உலகில் எங்கும் நிறைந்துளன். சிற்றுயிர்மக்கள் பகலோனைத் தங்கள் கண்ணாற் பார்க்கவேண்டுமானால் அவனுடைய ஒளியைக் கொண்டு பார்த்தல் முடியுமேயன்றி விளக்கொளியினாலாவது வேறு எந்த ஒளியாலாவது பார்த்தல் முடியாது. இந்த உவமையை மனதில் வைத்துக்கொண்டு பண்டைத் தமிழர்கள் கடவுளும் பகலோனொளிபோல எங்கணும் நிறைந்திருக்கும் அவனது அருளும் பிரித்தல் முடியாது என்றும் அந்த அருளைத் துணையாகக்கொண்டுதான் கடவுளை அறிதல் வேண்டுமென்றும், அறிந்துகொண்டார்கள் இவ்வாறு அறிந்து கொள்ளுதற்கு இறைவனது அருள்மொழி நூல்களும் துணையாயிருந்தன. இவ்வாறு அவர்கள் அநுமானித்த உண்மையைக் குருவின் உதவி பெற்று இயமம் நியமம் முதலிய அட்டாங்கயோக சாதனைகள் செய்து நேரில் கண்கூடாய் அறிந்தார்கள். இப்படி கடவுளை ஞானக்கண்ணால் அறிகிற அறிவு பதிஞானம், கடவுள் அறிவு, உண்மை உணர்வு, அடிஞானம், அருள் அறிவு, மெய்யுணர்தல் (திருவள்ளுவர்) முதலிய பெயர்களால் கூறப்படும்.

6. மேலே கூறியவாற்றால் கடவுள் என்ற சொற்பொருள் ஆராய்ச்சியால் கடவுள் ஒருவன் உண்டென்றும் அவன் உயிர் அறிவாலும் (பசு ஞானத்தாலும்) உலக அறிவாலும் (பாச ஞானத்தாலும்) அறியப்படுவான் அல்லன் என்றும் அருள் அறிவு (பதிஞானம்) ஒன்றினாலே அவன் அறியப்படுவான் என்றும் நாம் அறியக் கிடந்தமை காண்க. இவ்வாறே கடவுளைக் குறிக்கிற வேறு சில சொற்களையும் ஆராய்வாம்.

---

# 'செந்தமிழ்ச் செல்வி' வாழ்த்து

சங்கமெனும் முத்துமணித் தொட்டி லேறித்
தனியரசர் மூவர்தருந் தாலாட் டேற்றுப்
பங்கமிலாச் செழும்புலவர் நாவி லோடிப்
பாடல்மலி பூம்பொழிலிற் பயின் றுலாவித்
திங்கள்முகத் தோரிதழைப் பூத்து வீங்கித்
திரண்டமுலை மங்கையடை செவ்வி வாய்ந்து
செந்தமிழி னின்பமெலாம் மகிழ்நர்க் கூட்டுஞ்
செந்தமிழ்நற் செல்விஎன் றுஞ் சிறந்து வாழி.

சந்தனப்பூந் தண்டலைபொற் சயிலமுனி
தரவொருமுச் சங்கத் தொட்டில்
வந்தனந்தம் புலவர்திரு மடியிருந்து
நாவினடி வைத்து வண்மைச்
சுந்தரப் பொன் மாறன்முதல் மூவேந்த
ருலகாண்டு சுடர்பொற் றேற்றச்
செந்தமிழ்நற் செல்வியெனத் திங்கடொறும்
வருமரசி சிறந்து வாழி.

ஆறிவுக் குயிராகி நெஞ்சகத்துத் தூண்டா
தணியுமணி விளக்காகி யருநாவுக் கமுதாய்ப்
பேரறிஞர் வாயொழுகு கேள்விமருந் தாகிப்
பிறப்புதவு மறியாமைப் பேடகத்தைத் திறக்கும்
சீரியசெங் கோலாகி மேலாகி ஞாலம்
சேவைசெய் தடிபரவ வளருமருஞ் செல்வீ !
ஏரிளமை யினிமைமிகு பழமைவள முடைமை
இசைமைமிகு செழுந்தமிழா வினிதிறைந்து வாழி.

க. வேலுப் பிள்ளை,
யாழ்ப்பாணம், ஈவாலியூர்.

---

# திரைகடல் ஓடியும் திரவியம்தேடு

[திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை யவர்கள்.]

நாம் கண் காண உலகில் அடைய விரும்பும் பொருள்கள் மூன்று. அவை அறம், பொருள், இன்பம் என்பன. அறமாவது தன்னலம் கருதாமல் பிறருக்குச் செய்யும் உதவிகளே. பொருளாவது மணிகள், பொன், வெள்ளி, நெல், மண்முதலியன. இன்பமாவது தமது உடம்பு நலம் பெறுவதால் வரும் மகிழ்ச்சி. பிறருக்கு நாம் எந்தவிதமான உதவி செய்ய வேண்டுமானாலும், நமது உடல் இன்பம் பெற வேண்டுமானாலும் பொருள் வேண்டுவது இன்றியமையாதது. பொருள் இல்லாதவர்கள் இவ்வுலகில் எவ்வித அறமும், இன்பமும் அடைய முடியாது. அதனாலேயே பெரியோர்கள் அறம், பொருள், இன்பம் என வரிசைப் படுத்திவைத்தார்கள். ஆன்றோர் 'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்றதும் இதுவே. ஆதலின் ஒவ்வொருவரும் பொருளைத் தேடவேண்டிய முயற்சிகளைக் கைக்கொள்ள வேண்டும்.

அழியாப் பொருளாகப் பெரியோர் கொண்டாடும் கல்வியைக் கற்றற்கும், அக்கல்வித்தேர்ச்சிக்குக்கருவியாகிய நூல்களை வாங்குவதற்கும், கற்போரது பசி முதலாகிய துன்பங்களை நீக்கி இன்பத்தைத் தந்து அவர்கள் கல்வி கற்பதற்கும் முதன்மையான காரணம் இப்பொருளே. பொருளில்லாமையால் இக்காலத்தில் எத்தனை பிள்ளைகள் படிக்கமுடியாமல் சிறு வகுப்புக்களிலேயே படிப்பை விட்டுவிட்டுப் போய்விடுகிறார்கள்? எத்தனை பிள்ளைகள் தங்களுக்குப் பாடமாகவுள்ள நூல்களை வாங்கமுடியாமல் தவிக்கிறார்கள்? எத்தனைபிள்ளைகள் உணவுக்கு வழியில்லாமல் சிறுவயதிலேயே படிப்பை விட்டுவிட்டு வயிற்றுக்கு உணவுதேட முயற்சிகளைத் தேடியலைகின்றார்கள்? இவ்வாறெல்லாம் திண்டாடும் பிள்ளைகளோ அளவற்றவர். இக்காலத்தில் தங்கள் பிள்ளைகளைப் படிக்கவைப்பதற்குப் பொருள் படைத்தாரே சில சமயங்களில் தடுமாறும் நிலை ஏற்படுகிறதென்

ருல் மற்றவர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ? நாம் பொருளுடையவர்களாக இருந்தால் நமது சுற்றத்தார்கள் நம் மைவந்து நெருங்குவார்கள். உண்மையில் சுற்றத்தாரல்லாதா ரும் ஏதேனும் உறவு கூறிக்கொண்டு நம்மைவந்து நெருங்கு வார்கள். நாம் மிக்க கொடியநோயாகிய அவர்களுடைய பசியை நீக்கி அவர்களுக்குக் களிப்பை உண்டாக்கலாம். நமது பகை வர்கள் நம்மைக்கண்டு அஞ்சுவார்கள். அவர்கள் நம்மோடு ஏன் பகை கொண்டோமென்று வருந்தி நமது நட்பையே விரு ம்புவார்கள். ஈட்டி எட்டின மட்டும்தான் பாயும், பணம் பாதா ளம் வரையிலும் பாயும் அல்லவா ? நாம் உண்மையில் கல்வி யில்லாதவர்களாக இருந்தாலும் பல புலவர்கள் நம்மை வந்து பணிந்து நமக்கு ஒப்பான அறிவாளிகள் ஒருவரும் உலகத்தி லேயே தோன்றியதுமில்லை, தோன்றப்போகிறதுமில்லை என நம்மீது பாமாலைகள் பாடிப் புகழ்வார்கள். அவர்கள் நாம் சூம் பிய தோள்களோடும் பார்வை குறைந்த கண்களோடும் இருந் தாலும் நம்மை மலைபோலப் பருத்த தோளையுடையவனே என்றும் அழகிய சிவந்த தாமரை மலர்களைப்போன்ற கண்களை யுடையவனே என்றும் நம்முன் புகல்வார்கள். புல் தடுக்கினும் போதும் காற்றடித்தாலும் போதும், உடனே கீழே விழுந்து விடக்கூடிய அவ்வளவு வல்லமை படைத்த வீரராக நாம் இருந் தாலும், தற்காலத்தில் ஐரோப்பா, ஆசியா, அமெரிக்கா முத லிய எல்லா நாடுகளும் இணையற்ற வீரரெனப் புகழும் திருவா ளர் இராமமூர்த்திகூட நமக்கு முன் நிற்கமுடியாதென அவர் கள் நம்மைப் போற்றுவார்கள். 'ஈ' என்ற உயிரின் பெயரைச் சொன்னாலும் சினம் கொள்ளும் பெரிய வள்ளலாக நாம் இருக் கிறோம் என்பதை நன்றாக அறிந்தவர்களானாலும் அவர்கள் நம் மிடம் வந்து நம்மை நோக்கிப் பாரியென்ற பெரிய வள்ளலாரும் கூடத் தங்களுக்கு நிகராவரோ ? கொடையிற் சிறந்த கர்ண னும் தங்களிடம் தான் கொடைத்தொழில் பயின்றிருக்கவேண் டும் என்று பலபடப் பெருமையாகப் பேசுவார்கள். நாமும் அவர்களுக்கு வேண்டியது கொடுத்து அவர்களை மகிழ்விக்க லாம். அரசரும் அமைச்சரும் அதிகாரிகளும் நம்மை மதித்துத்

தமக்குப் பொருளுதவி வேண்டும்போதெல்லாம் நம்மைவந்தடைவார்கள். நாட்டில் வெள்ளத்தாலாவது பஞ்சத்தாலாவது கேடுகள் விளையும்போது அவைகளால் துன்பமடையும் மக்களுக்கு நாம் பொருள் தந்து ஒருவாறு துன்பத்தைத் துடைக்கலாம். பணமுடையார் சிலர் தீயமனமுடையவர்களாய்க் கொலை முதலியன செய்து செய்து தமது பணவலியால் அக்குற்றங்களிலிருந்து தப்புவதற்கு முயல்வார்கள். அதிகாரிகள் பலரும் பொருளால் மயங்கி உண்மைக்கு மாறுகத் தீர்ப்புகள்கூற முன் வருவார்கள். அத்திய பணக்காரர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டு சில அதிகாரிகள் தமது அறிவை இழந்து ஒரு பாவமும் அறியாத ஏழை மக்களைத் துன்பப்படுத்தத் தொடங்குவார்கள். அவ்வேளைகளில் நாம் நமது பொருளை நல்வழியில் செலவிட எண்ணி உண்மையிலேயே நோக்கமுடையவர்களாய்த் தீயவர்களைத் தண்டனைக்குஉட்படுத்தவும் ஏழைகள் அநியாயமாக அடையும் இடையூறுகளை நீக்கவும் முற்படுவோமேயானல் நமது முயற்சி நல்ல பயனைத்தருவது திண்ணம். பணமதமுடைய தீயார் பதுங்குவர். அதிகாரிகளால் அநியாயச் செயல்கள் விளையா. பணம் பத்தும் செய்யுமல்லவா?

இவ்வளவு பெருமையுடைய பொருளை நல்வழியிலேயே தேடல் வேண்டும். வேளாண்மை, வாணிகம், அரசர் பணி, கல்வி கற்பித்தல் முதலாயினவே அவ்வழிகள். "உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர், பழுதுண்டுவேறோர் பணிக்கு". ஆதலின் வேளாண்மையைப் போல குற்றமற்ற தொழில் வேறொன்றும் இல்லை. ஆசிரியத் தொழிலும் குற்றமற்றதே. கொண்டபடி போலும் விலை பேசி, தமக்கு ஊதியம் ஒரு சிறிது கூடிவரச் செய்யும் வாணிகமே குற்றமற்றதாம். விண் இடிந்து விழுந்தாலும் ஒழுங்கை விட்டு மாறுவதில்லை எனக் கங்கணம் கட்டிக்கொண்டு வேலை செய்யும் திருவுளமுடையார்க்கு அரசர் பணியும் குற்றமுடையதன்றும். இங்ஙனம் நல்ல வழிகளில் தேடப்பெறும் பொருளே என்றும் நமக்கு நன்மைதருவதாகும்.

களவு, பொய்ச்சான்றுரைத்தல், பொய் வழக்குப்பேசல், கள்ளக்கையெழுத்திடுதல், நம்பிக்கை மோசம் முதலிய தீய வழிகளில் தேடப்படும் பொருள் என்றும் துன்பமே பயக்கும். தீநெறிவந்த பொருள் தன்னை உடையாருக்கு ஆக்கம் போலக் காணப்பட்டாலும் விரைவில் அவர்களை வறியவர்களாக்கி, அவர்களுடைய குடும்பத்தையே நாசமாக்கி, அவர்கள் வாழ்ந்த மாளிகை இடிந்து குட்டிச்சுவராய் பாதாளமூலி, வெள்ளெருக்கு முதலிய முளைத்துப் பாம்புகள் வாழ்விடமாகி விடும்படி செய்யும். ஆதலின் நாம் இத்தகைய தீய வழிகளைக் கனவிலும் கருதலாகாது.

ஏழைகள் வயிற்றுக்கில்லாமல் பொருளுடையாரிடம் சென்று அவர்களுடைய வரவையோ சமயத்தையோ எதிர்பார்த்து அவர்களுடைய தலைவாசலிலே கால் வலிக்க நெடுநேரம் காத்திருக்கிறார்கள். அவர்களைக் கண்ட போது பலவாறு பணிந்து கும்பிட்டுப் பல்லைக்காட்டி இரக்கின்றார்கள்.; அந்நேரத்தில் அவர்கள் உண்மையில் இறந்தவர்களேயாகின்றார்கள். "பணமில்லாதவர் பிணமாம் பான்மை சேர்வர்". பணமில்லாதவர்களை அவர்களுடைய மனைவியும் மக்களும் மதிக்கமாட்டார்கள்: பெற்றதாயாரும் கூட .அவர்களை இகழ்ந்து ஏறெடுத்தும்பாரார்.; அவர்களுடைய சொல்லை நண்பரும் கேளார். ஆதலின் ஒவ்வொருவரும் தமது சிறுமை நீங்கிப் பெருமை பெறுவதற்குப் பொருளைத்தேட விடாமுயற்சிகள் பல்லாற்றானும் செய்ய வேண்டும்.

"திரை கடலோடியும் திரவியம் தேடு."

---

# புஷ்பங்களும் அவற்றின் தொழிலும்.

[Prof : P. சுந்தரம்பிள்ளை யவர்கள் M.A.]

ஜீவராசிகளுடைய பொதுவான இருபெருங்குணங்களில் முதலாவதான ஆஹார சுவிகார விருத்தி மரவர்க்கத்தில் நடந்தேறும் இயல்பை முன் சஞ்சிகையில் ஒருவாறு கூறி முடித்தோம் அல்லவா. இப்போது அம்மரவர்க்கங்கள், தங்கள் தங்கள் ஜாதிக்கேற்றபடி தங்களுக்குப் பிரதிநிதியாகப் பிற்கிளையுண்டுபண்ணி விடும் ஜீவராசிகளின் இரண்டாம் இலக்கணமாகிய பிரத்தியுத்பாதனம் என்னும் தொழிலை எவ்விதம் நிறைவேற்றுகின்றன என்று சற்றே ஆராய்வோமாக.

2. இத்தன்மையான ஆராய்ச்சிகள் வெளியிலுள்ள நானாவித பதார்த்தங்களைச் சம்பந்தப்பட்டிருப்பதால் நாம் நமது அறைக்குள்ளிருந்து கண்மூடி யோசித்து மனக்கணக்கிட்டுக் கொள்ளுதல் மாத்திரத்தால் உண்மை நிர்ணயிப்பது கூடா தாதலின், சற்றே வெளியிலிறங்கிப் பற்பலமரங்களிருக்கும் யாதாவதொரு தோட்டத்தில் சென்று சுற்றிப்பார்த்து வருவோமாக. இதோ! இந்தத் தோட்டத்தில் ஒருபுறம் மா, பலா, தென்னை, புன்னை, புளி, கமுகு முதலிய மரங்கள் நெருங்கிவளர்ந்து சோலையாக நிற்பது, பாருங்கள்! சற்றப்புறம் அதோ! நாரகம்*, எலுமிச்சை, மாதுளை, கொய்யா முதலிய செடிகள் நன்றாய் வளர்ந்து பலிதமாய் நிற்கின்றன. அதற்கும் அப்புறம் வாய்க்காலருகில் நன்றாய்ப் பக்குவம் பண்ணின திடரில் கத்தரி, வெண்டை, மிளகாய் முதலிய சிறு செடிகளும் பாகல், புடல், வெள்ளரி, அவரை முதலிய கொடியினங்களும் பல பல கீரைகளும் எவ்வளவு செழிப்பாய் வளர்கின்றன. ஆ! ஆ! இதோ! சுவர்ண வர்ணமாய் விளங்கும் இப்பீர்க்கம் பூப்போல,

> "புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்
> பொன்போற் பீரமொடு புதற்புதன் மலர."

என்னும் நக்கீரதேவர் மொழிக்கு நச்சினார்க்கினியமும் பொருள் விளக்கக் கூடியதாமா? வாய்க்கால் வரம்பில் ஒருவரியாய்

* இதை 'நாரத்தை' என்று சாதாரணமாக வழங்குவார்கள்.

வாழைகள் நிற்பது எவ்வளவு அலங்காரம்! அதற்கு அப்புறம் வயலிலோ நெல் பயிராயிருக்கின்றது. வாய்க்கால் வரம்பு முதல் நாம் உள்ளே பிரவேசித்த தோட்டத்து வாசல் வரையும் தும்பை, துத்தி, அறுகு கோரை என்றிப்படி எண்ணற்ற பூற் பூண்டு செடி கொடிகளை மிதித்துக்கொண்டல்லவா நடக்கிறோம். அவைகளை ஒருவரும் கவனிப்பாரில்லை. ஒவ்வொரு வேளை வெட்டியெறிய வேண்டுமென்ற ஒரே ஞாபகத்திற்கு இடம் வந்தால் உண்டேயன்றி அவற்றைத் தீண்டுபவருமில்லை; திரும்பிப் பார்ப்பாருமில்லை! திட்டுவதற்கேனும் அவை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயரிடலாகாதா? "கொல்லையெல்லாம் செடிவளர்ந்து விட்டது. கொடிபடர்ந்து விட்டது. கொத்தடா வெட்டடா!" என்று பொதுப்பெயராற் கூறுவதேயன்றி யாரேனும் இன்ன இன்ன செடிகள் என்றும் இன்ன இன்ன கொடிகள் என்றும் பெயரிட்டழைத்து,—கொண்டாட அல்ல—கொலை புரிய எனும் சொல்வதைக் கேட்டிருக்கிறோமா? பொறுங்கள்! ஈசுர சிருஷ்டியாகிய அனைத்தையும் சமதிருஷ்டியாகப் பார்த்து நமக்கு எட்டிய மட்டும் அவற்றின் விசித்திர விசேஷங்களையறிய நாம் உண்மையாக ஆசைப்படுவோமானால், இப்புற் பூண்டுகளையுஞ் சோதிக்க நமக்குத்தருணம் நேரிடும். தற்காலம் தோட்டத்திற்கு நாம் வந்த காரியத்தை முடித்துக் கொண்டு மேல் ஆலோசிப்போம்.

3. ஏறக்குறைய ௩௰-வருஷத்திற்கு முன் இந்தப் பூமி வெட்ட வெளியாகக் கிடந்ததென்றும் சுரு சுருப்புப் பட்டிச் சுப்பையன் செட்டி அந்தப்பாழ்ம்பூமியை அடைத்துத்திருத்தி இவ்விதம் தோட்டமாக்கிக் கொண்டானென்றும் நாம் கேட்டிருக்கிறோம்! அவர் இம்மரங்களை யுண்டு பண்ண என்ன செய்தார்? பல இடங்களிலிருந்தும் விதை காய்களை வரவழைத்துப் பரவிப்பயிராக்கி நட்டு வளர்த்தார் என்பது சரிதான். பருவந்தோறும் அப்படியே கீரை, வெண்டை, புடல் முதலிய விதைகளை யூன்றித்தான் அப்படர் பயிர்களும் உண்டாயிருக்கின்றன. நெல்காலந்தோறும் விதைத்து வயல் பயிரிடுகிறதைக் கண்டிருக்கிறோம். இப்புற் பூண்டுகள் எப்படி உண்டாயின? அவைகளும்

அப்படியே தங்கள் தங்கள் இனத்தின் விதை விழுந்தே யுண்டாயின என்பது, இதோ இத்துத்தியின் உலர்ந்த காயை எடுத்துப் பார்த்தால் அதற்குள் நிறைய விதை யிருப்பதும் சிதறியவிதைகளிலிருந்து சிறு சிறு துத்திச்செடிகள் கிளைத்து வருவதும் கண்டால் அறியலாம். இப்புல் தினையின் இனமானதினுலே தினைக்கதிர்போல குலை வாய்த்துச் சிறு சிறு அரிசியினுல் நிரம்பியிருப்பது பாருங்கள். இப்படியே பட்டுக்குடையைப் பார்க்கிலும் சிறந்த அழகு கொண்ட இக்காளானும் தோட்டத்து மதிலிலும் இக்குளத்திலும் படர்ந்து கிடக்கும் பலவகைப் பாசியினங்களும் தங்கள் தங்களுக்குரிய சிறு சிறு விதைகளாலேயே உற்பத்தியாயின என்பது நிராக்ஷேபமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. சிறு வுருவைப் பெரிதாகக் காட்டும் சிற்றுருவிளக்கி என்னும் யந்திரம் நமது கையில் இப்போது இருக்குமாயின் அதனை நிரூபித்தல் எளிதாகக் கூடும். இனி நாம் இவ்வித சோதனைக்குப் புறப்படும்போது ஆவசியம் கொண்டு வரவேண்டியதுண்டு. ஆயினும், நாம் கண்ணாரக் காணக்கூடிய காய், விதை, இவைகளையுடைய புற்பூண்டு செடி கொடி முதலிய யாவும் அந்த அந்த விதைகளிலிருந்தே உற்பத்தியாகின்றன என்பதற்குச் சந்தேகமில்லையே. அம்மட்டேனும் "வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை" என்பது பொய்யல்லவே.

4. இனி இவ்விதைகளும் காய்களும் எப்படியுண்டாகின்றன என்று பார்ப்போம். "சரி! சரி! மரம் விதையிலிருந்தும் வந்தது! விதை மரத்திலிருந்தும் வந்தது! மரமுந்தினதா காய் முந்தினதா என்று கேட்க வருகிறீரோ," என்று சந்தேகிக்க வேண்டாம். அவ்விதமான கேள்விகளெல்லாம், தெருவில் நம்மோடு வந்து விட்டால் தீண்டல் படுமென்று கதவையடைத்துக் கொண்டு அறையிலேயே இருக்கிற சாம்பதிக்ஷிதரிடம் கேட்டால் அவர் கக்கத்திலிருக்கும் ஸ்காந்தபுராணம் பார்த்தும் கண்மூடிக்கணக்கிட்டும் நமது சந்தேகம் தெளிய உபதேசிக்கினும் உபதேசிப்பார். நாம் இங்கே ஆராயப்புகுந்தது ஆதி சிருட்டியெப்படி என்றல்ல. இதோ நிற்கும் இந்நாரக (நாரத்தை) மரத்திலிருந்து இதோ தோன்றும் இந்நாரகப்பழம் எவ்விதம்

உண்டாகிறது, என்று அறிந்தால் நமக்குப் போதுமாக இருக்கும். நம் தகுதிக்கேற்றசொற்ப ஆராய்ச்சி தானே நாம் எடுத்துக் கொள்ளலாம்.

5. இந்நாரகப் பூவில் ஒன்றைப் பறித்து நன்றுய்க் கவனித்துப் பார்ப்போம். இவ்வித ஆராய்ச்சிக்காகப் பறித்துப் பார்க்கிற புஷ்பங்கள் அப்போது அலருகிறதாக இருக்கவேண்டும். முற்றிலும் அலர்ந்து பொழுது சென்ற மலர்களாக இருந்தால் அவற்றின் உறுப்புக்களில் சில உதிர்ந்தும் அழிந்தும் இருக்கக் கூடும். அலராத மொட்டாக இருக்கும் விஷயத்தில் உறுப்புக்கள் முழுதும் பூரணமாகத் தோற்றமாட்டாது. மேலும் நாம் மலர்களை அடர்த்தெடுக்கும் போது எவ்வளவோ கவனித்து அங்கபங்கங்களுக்கு இடமில்லாமல் மெல்லெனக் கிள்ளி எடுத்தலும் அவசியம்.




நாரக (நாரத்தை) மலர்.
1. புறவிதழ் (Sepals)
2. அகவிதழ் (petals)
3.*மகரந்தவாகினி(pistil)
4.மகரந்தபஞ்சம்(anther)

இதோ இந்நாரக(நாரத்தை) மலர் சரியான பக்குவ முடையதாயும் பத்திரமாக எடுக்கப்பட்டதாயும் இருக்கிறது. இதனைப் பாருங்கள். இதனுள் எத்தனை உறுப்பு இருக்கின்றன? அடியில் இதோ இருப்பது காம்பு. கிள்ளுண்ட இடத்திலிருந்து இன்னும் சிறிது கறைவடிந்து கொண்டிருக்கிறது. இப்படியே எல்லா மலர்களுக்கும் பீடமாக மரக்கொம்பினின்றும் கிளைத்து வரும் காம்பு உண்டல்லவா. அதற்குப் புஷ்பபீடம் அல்லது பூந்தாள் (peduncle) என்று பேர். இக் காம்பு கிண்ணம் போல் விரிந்து பூவின் அடியைச்சுற்றி நிற்பது தெரிகிறதா? கவனித்துப் பார்த்தால் இக்கிண்ணத்தின் மேல் விளிம்பில் நான்கு பாரிசத்திலுமாக ஐந்து பற்போன்ற சிறு நுனிகள் காணப்படும், அந்நுனிகளைப் பிரதானமாகக் கொண்டு நோக்கில் அவை ஐந்தும் ஐந்து பசுமையான இதழ்

* இந்த 3 இலக்கம் நடுமையத்தில் புள்ளிக்கோடு போட்டுக் குறிக்கப்பட்ட பாகத்தைக் குறிக்கிறது. அடுத்த இதழில் வரும் கட்டுரைத் தொடர்ச்சியிலுள்ள படத்தில் இந்த பாகம் தனியாக எடுத்துக் காட்டப் படும். பார்த்துத் தெளிவாய் அறிந்துகொள்க.

களின் சாயை தோற்றுவிக்கலாம். உண்மையில் ஐந்து இதழ்கள் ஒன்றோடொன்று இணைத்து வளையப்பட்டே இவ்விதம் கிண்ணம்போல் இந்நாரகமலரின் அடிப்பீடம் ஆக்கப்பட்டிருக்கிறது. அதோ அந்த அவரைப் பூவில் இவ்வடிப்பீடம் ஐந்து இதழ்களால் ஆக்கப்பட்ட தென்பது இன்னும் நன்றாய்த் துலங்குகின்றது. இக்கொய்யாமலரில் அவை முற்றிலும் பிரிந்து ஐந்திதழாக இருப்பதைப் பாருங்கள். இப்படிக் கிண்ணம்போல் பூவைத் தாங்கிக் கொண்டு நிற்கும் இப்பசுமையாகிய ஐந்து இதழ்களுக்கும் புறவிதழ் (Sepals) என்று பேர். ஐந்து இதழும் சேர்ந்த கூட்டத்திற்கு புல்லி (calyx) என்று சொல்வார்கள். இப்பூ அலருமுன் அதனைப் பொதிந்து காத்து நின்றது நாம் இப்போது கூறிய புல்லி என்னும் புறவிதழ்த் தொகுதியேயாம். அலராத மொட்டைப் பார்த்தால் இவை எவ்வளவு பலமாய்ப் பொதிந்து நிற்கிற தென்பது விளங்கும். மலர் உதிர்ந்து காயானதின் பின்பும் அதோ அந்நாரகக் காயின் அடியில் பீடம்போல ஒட்டிக் கொண்டிருப்பது காண்மின். இப்படிக் காயாயும் விடாது ஒட்டியிருக்கும் புறவிதழ்த் தொகுதிக்கு "விள்ளாப்புல்லி" (Persistent calyx) என்று பேர். நல்லது வெயில் ஏறுகிறதற்குள் இச்சோதனையை முடித்துக் கொண்டு வீட்டுக்குப் போகவேண்டும். ஆதலின் இப்போது நாம் பார்வையிட்ட பசிய புறவிதழுக்குள் என்ன என்ன இருக்கின்றன என்று சோதித்தறிவோம். உள்ளே புறவிதழுக்கடுத்த வரியில் இதோ ஐந்து மங்கல் வெண்மையான இதழ்கள் இருக்கின்றன. இவை புறவிதழ்போல் ஒன்றோடொன்று ஒட்டியிருக்க வில்லை. தனித்தனி யிருக்கின்றன. இவைகள் ஒவ்வொன்றுக்கும் ""அகவிதழ்" (petals) என்று பெயர். ஐந்து அகவிதழும் சேர்ந்த தொகுதிக்கு அல்லி" (corolla) என்று கூறுவர்.* இவ்வகவிதழ்களிருக்கும் ஸ்தானத்தைக் கவனியுங்கள். புறவிதழ்கள் இரண்டின் இடையிடையே அல்லவா இவ்வகவிதழ்கள் தோன்றுகின்றன. புறவிதழும் அகவிதழும் நேரே ஒன்றின் உள் ஒன்றாக அல்ல இருப்பது. அப்படி யிருந்தால் மொட்டாயிருக்கும்போது புறவிதழும் அக

---

* "அல்லியகவிதழ் புல்லி புறவிதழ்" சேந்தனார்

விதழும் ஒரே யிடத்தையே மூடக்கூடியவையாக இருப்பதினல் இடை வெளி தோற்றவும், உள்ளிருக்கும் அங்கங்கள் போது மானபடி பொதியப்படாமலிருக்கவும் நேரிடும். நாம் பூஜைக்குப் புஷ்பம் எடுக்கையில் பத்திரம் பறித்து ஒரு இலை நெடுகவும் ஒரு இலை குறுகவும் இட்டுவிட்டு, அவை இரண்டாலும் பொதியப் படாத இடத்திற்குக் கோணலாக இரண்டிலை பின்னும் எப்படி யிடுகிறோமோ, அப்படியேதான் புறவிதழ் ஐந்தாலும் மூடப் படாத ஸ்தலங்கள் மறையும்படி, புறவிதழ் இரண்டிரண்டிடையில் ஒவ்வொரு அக இதழ் இருந்து உள்ளிருக்கும் உண்மையான மலருறுப்புக்களை நன்ருய்ப் பொதிந்து காப்பாற்றுகின்றது.

6. "ஏது! உண்மையான மலருறுப்புக்கள் இன்னும் உள்ளாகவா இருக்கின்றன? அகவிதழ் புறவிதழ் என்று நாம் பிரித்தறிந்து கொண்டவை யல்லவோ?" எனின்; அப்படியே அகவிதழ் இரண்டும் உண்மையான மலருறுப்புக்கள் அல்ல. இவை யிரண்டு மில்லாத புஷ்பங்கள் அனந்தம். சாதாரணமாய் மரம் நிறைய நிற்கும் மற்ற இலைகளை யொத்த இலைகளே, உள் ளிருக்கும் மிருதுவான அங்கங்களுக்கு இசைய இப்படி மெல் லிய உருவெடுத்து, அகவிதழ் புறவிதழ் எனச் சுற்றி நின்று, உள்ளிருக்கும் பிரதான அங்கங்களைப் பாதுகாத்து வருகின்றன. சதுரங்க சேனவலயம் சூழ கோட்டை கொத்தளம் கட்டி அவை நடுவே அநேக பிராகாரசமாவரணமான அரண்மனையுள்ளே பட்டவர்த்தினியோடும் சிம்ஹாசன பதியாய் வீற்றிருக்கும் அர சனையறிந்து தெரிசித்துச் சல்லாபிக்க இடம் பெருத ஏழை குக்கிராம வாசிகள், கோட்டைவாசற் சேவகனைப் பார்த்து வாளும் கையும் கண்டு மன்னவனுக மதிதது வந்தன வழிபாடு செய்யும் மடமைபோலன்ருே, நிறமும் மணமும் கண்டு புறவிதழ் அகவிதழாகிய இப்புஷ்ப காவலாளரை மலர் என்றும் பூ வென் றும் வாழ்த்திப் போற்றுகின்ருேம். இனி அம்மதிப்பினை விட்டு, உள்ளிருக்கும் உண்மையான உறுப்புக்கள் எவை யென்று உற் றுப்பார்ப்போமாக. அப்பரிசோதனைக்குச் சற்றும் தடை யில் லாமலிருக்கும்படி ஐந்து புறவிதழ்களையும்மெதுவாக அடர்த்து எடுத்து விடுவோம். பிற்பாடு என்ன என்ன காணப்படுகின்றன?



மகரந்தபஞ்சரங்களும். [களும்.
மகரந்தக்காம்பு

உருண்டு நீண்ட உட் குழிந்த துரட்டி போன்ற தலைகளோடும் பல சிறு காம்புகள் தோற்றுகின்றன அல்லவா? இக்காம்புகள் இரண்டு மூன்று ஒன்றாக அடியிற் சேர்த்து வளையப்பட்டிருப்பினும் தலைகள் வெவ்வேறாக இருப்பது பார்க்கலாம். இத்துரட்டி போன்ற, உருண்டு நீண்ட குழிந்த தலைகளுக்கு 'மகரந்தபஞ்சரம்' (anther) என்றும், இவற்றைத் தாங்கிக் கொண்டிருக்கும் நூல் போன்ற நுண்ணிய உடம்பிற்கு 'மகரந்தக்காம்பு' (filaments) என்றும் பெயர். சாதாரணமாக இவ்வித மரங்களின் புஷ்பங்களிலுள்ள இக்காம்புகளும் இம் மகரந்த பஞ்சரங்கள் என்னும் தலைகளும் ஐந்தோ, ஐந்தின் பெருக்கங்களாகிய, ௰-௰௫-௨௰-என்ற ஐந்தின் குணன சங்கைகளாகவோ இருப்பது வழக்கம். கவனித்து எண்ணிப் பார்த்தால் தெரியவரும். இதைக்குறித்து இனியொரு பொழுது ஆலோசிக்க நேரிடும். இப்போது நாம் கண்டுகொண்ட ஒவ்வொரு துரட்டி போன்ற மகரந்த பஞ்சரமாகிய தலை இருபுறமும் உட்குழிந்திருப்பது கண்டோமல்லவா? உண்மையில் இத்தலைப்பின் வலப்புறம் இடப்புறமாக இரண்டு சிறு அறைகள் ஒன்றுபடப் புணர்த்தப்பட்டிருக்கின்றன. அப்படிப் புணர்த்தினதினால் உண்டான பொருத்துத்தான், இங்ஙனம் இருபுறமும் குழியாகத் தோற்றுகின்றது. புஷ்பம் விகசிக்கும் காலத்தில் இப்பொருத்து அடியில் சற்றே விலகுகின்றது. விலகவே யுள்ளிருக்கும் மகரந்தப் பொடி வெளியே சிதறுண்டு போகின்றது. இம்மலர் அலர்ந்த மலராதலால் இதோ நம் கைவிரல் படுமிடமெல்லாம் மஞ்சள் நிறமாக ஒரு துள் அகப்படுகிறது. பாருங்கள்! காம்பிலும் நாம் பறித்து எறிந்துவிட்ட அகவிதழ்களிலும் மஞ்சள் மஞ்சளாகக் காணப்படுவதும் இதுவே. இத்தூளுக்குத்தான் 'மகரந்தம்' (Pollen) என்று பெயர். கூர்மையாகப் பார்த்தால் இத்தூள் பல ரேணுக்களால் ஆக்கப்பட்டிருக்கிறது விளங்கும். இவ்ரேணுக்கள் ஒவ்வொன்றும் பயறுபோல் உருண்டு திரண்ட வடிவினையுடையதாயிருக்கும். அதற்கு மகரந்தரேணு (Pollen grain) என்று பெயரிடுவோம். இந்த ரேணு ஒவ்

வொன்றுக்குள்ளும் மூலசத்தையின் அதிவிசித்திர விகாரமான விந்து என்னும் தத்துவம் இருக்கிறது. அதனை மகரந்தவிந்து என்று சொல்லுவார்கள். அதுவே புஷ்பங்கள் காயாக முதிரச் செய்யும் முக்கிய தத்துவம். ஆனால் அதன் குண வைபவங்கள் முழுதும் அறிவதற்கு சிற்றுருவிளக்கியின் உதவியின்றி முடியாது. சிற்றுரு விளக்கியோ இப்போது கையில் இல்லையே. இனி வரும்போது கொண்டுவந்து சோதித்து அறிந்துகொள்ளுவோம். இப்பொழுது இனியும் ஏதாவது உறுப்புகள் இம்மலரிடத்திலிருக்கின்றனவோ என்று மேற்பார்வையாகப் பார்த்து முடித்துக்கொள்வோமாக. (தொடரும்.)

—விவேகசிந்தாமணி.

---

# மாயாவதி.

[திரு. எம். பி. எஸ். வேலாயுதம்]

(முன் 63-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

இருவரும் சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று ஆங்கிருந்த இரு நாற்காலிகளி லமர்ந்தார்கள். உடனே இருகிண்ணங்களில் குளிர்ச்சியான பானம் இவர்கள் முன் கொணரப்பட்டது. சொக்கநாதன் மெதுவாய் உறிஞ்சிச் சாப்பிட்டுக் கொண்டு தன்னைச் சுற்றிப்பார்த்துக் கொண்டிருந்தான். பிறிதொரு மேசையின் முன் மூன்று பேர், ஓர் ஆடவனும் இரு பெண்களும் உட்கார்ந்திருந்தார்கள். இருபெண்களும் மிகவும் நாகரீகமாய் உடையுடுத்தி, தக்க நகைகளை யணிந்திருந்தார்கள். கால்களில் பட்டு வைத்துத் தைத்த மிதியடிகளுங் காணப்பட்டன. இருபெண்களும் அழகே உருக்கொண்டு வந்தது போல் காணப்பட்டனர். அதிகமாய் விவரிக்க வேண்டியதில்லை. சொக்கநாதன் கண்கள் அவர்களை நோக்கின.

கார்த்திகேயன்:—“என்ன மிரளமிரள விழித்துக் கொண்டிருக்கிறாய். ஏதாவது இங்கு தெருச்சண்டை இழுக்க உனக்கு நினைப்பா?”

சோக்கநாதன்:—"இவர்கள் மிகவும் பணக்காரர்களா யிருக்க வேண்டும்."

கார்த்திகேயன்:—"அப்படிச் சொல்லிவிட முடியாது. சென்னை வாசியின் நிலைமையை அவன் வீட்டுப் பெண்களுடைய ஆடையினால் மதித்துவிட முடியாது. லட்சாதிபதியின் மனைவி யும், நாற்பது ரூபா மாதச் சம்பளம் வாங்கும் சிப்பந்தியின் மனைவியும் இவ்விதமாகத்தான் ஆடம்பரமாய் வருவார்கள். சோற்றுக்கு வழியில்லா விட்டாலும் ஆடையில் ஆடம்பர மாகத்தானிருப்பார்கள். அவர்கள் நம்மை யெல்லாம் வறிஞர் என்றே நினைக்கிறார்கள்."

சோக்கநாதன்:—"இடது பக்கமிருக்கும் பெண் மிகவும் அழகாயிருக்கிறாள். அவள் சென்னை வாசியாய்த் தோற்ற வில்லையே. அவள் முகத்தைப் பார்த்தால் நம் பக்கத்துப் பெண்ணைப் போலன்றோ விருக்கிறது."

கார்த்திகேயன்:—"அவள் தென்பக்கத்திலிருந்து இங்கு குடியேறிய குடும்பத்தைச் சேர்ந்தவள். அவள் முகச்சாயலைப் பார்த்தால் மதுரை அல்லது நெல்லை வாசி போல் தெரிகிறது."

சொக்கநாதன் முன் வைக்கப்பட்டிருந்ததோ ஒரே ஒரு கிண்ணத் தேயிலைப்பானம். அதனை எவ்வளவு நேரமாகத்தான் அருந்திக் கொண்டிருக்க முடியும்? ஆனால் சொக்கநாதனுக்கு அவ்விடத்தை விட்டுப் போவதற்குச் சற்றும் பிரியமில்லை. "இன் னொரு கிண்ணம்கொண்டுவரச் சொல்வோமா" என்றான் கார்த்தி கேயனிடம். கார்த்திகேயனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. "வேண்டாம். அவர்களும் அதோ புறப்பட்டு விட்டார்கள்" என்றான் சொக்கநாதனைப் பார்த்து. இவர்கள் நோக்கிக் கொண் டிருந்த பெண்ணுடன் வந்திருந்தவர்கள் வெளியில் சென்றுவிட, அவள் மட்டும் இன்னொரு கிண்ணத் தேயிலை கொணரச் சொல்லி உட்கார்ந்திருந்தாள். அவள் தான் நம்" மாயாவதி."

கார்த்திகேயன்: "இதோ நானும் சிறிது வெளியில் சென்று வருகிறேன். நீ இங்கு மயங்கி விடாதே. உன் தாயாரை

நினைந்து கொள். விடுதிகளில் உண வருந்துவதைத் தடுக்கும் தாயார் அன்னிய பெண்களை இச்சிப்பதை விரும்பாள்.

சொக்கநாதன் சிறிது நாணவும், கார்த்திகேயன் வெளியேறி விட்டான். மாயாவதியும் தேயிலைப்பானமருந்தி வெளியில் செல்ல வந்து விட்டாள். மாயாவதி விடுதித் தலைவனுக்குத் தன் பையிலிருந்து ஒரு ரூபா எடுத்துக் கொடுத்தாள். மேசையில் தட்டிப் பார்த்தால் அது செல்லாத ரூபா. மாயாவதிக்கு ஒன்றுந் தோன்றவில்லை. அங்கு மிங்கும் பார்த்துத் திகைத்தாள். என்ன செய்வதென்று விளங்கவில்லை. இவற்றையெல்லாம் கவனித்திருந்தான் நம் சொக்கநாதன். அவளிடம் பேசுவதற்கே சமயம் பார்த்திருந்தான். அவள் இவ்வாறு திகைத்து நிற்கையில் அவளை யணுகி "அம்மா, நான் தங்கட்கு ஏதாவது உதவி செய்ய முடியுமோ? என்னுலியன்றதைச் செய்யத் தயாராயிருக்கிறேன்", என்றான். மாயாவதி சொக்கநாதனை ஏறெடுத்துப் பார்த்துச் சற்றுத்திகைப்புடன்," எனக்கு ஒரு ரூபா தற்சமயம் கொடுத்துதவினல் நலமாயிருக்கும். என்னிடம் இவ்வொரு ரூபாதான் இருக்கிறது. இதுவும் செல்லாததாயிருக்கிறது" என்றாள்.

உடனே சொக்கநாதன் தன் பையிலிருந்து ரூபா ஒன்றெடுத்து மாயாவதியிடம் கொடுக்க அவளும் மிகவும் வந்தனத்துடன் அதனை ஏற்று, விடுதித் தலைவனிடம் கொடுத்து வெளியில் வந்தாள். மாயாவதி "எனக்கு இன்று தாங்கள் ஓர் பேருதவி புரிந்தீர்கள். மிக்க வந்தனம். நாளை இந்நேரத்திற்கு இவ்விடம் வருவீர்களாயின் தங்கள் பணத்தைத் திருப்பியளித்து விடுகிறேன். தங்கட்கு அவகாச மில்லாவிடில், தங்கள் விலாசத்தை யறிவித்தால், ஆங்கு அனுப்பி விடுகிறேன்." என்றாள்.

சொக்கநாதன்; "நான் கட்டாயம் வருகிறேன். நாளை மாலை சரியாய் ஆறு மணிக்கு இங்கிருக்கிறேன்."

மாயாவதி: "தாங்கள் எவ்வூர் வாசியோ".

சொக்கநாதன்; "நானிருப்பது மதுரை".

இதைக் கேட்டுக் கொண்டு மாயாவதி போய்விட்டாள்.

வெளியில் சென்றிருந்த கார்த்திகேயனும் அச்சமயம் அங்கு வந்துசேர்ந்தான். "ஏது. வந்ததற்குள்புதிய தொடர்புகள் சேகரித்து விட்டாய் போலிருக்கிறதே. நான் இவ்விடம் எத்தனையோ ஆண்டுகளாயிருந்து வருகிறேன். ஆனால் என்னை யாரும் பார்க்கக்கூட மாட்டேனென்கிறார்கள். நீயோ வெனில் முதல் நாளிலேயே—" என்று கார்த்திகேயன் சொல்லி முடிப்பதற்குள், சொக்கநாதன். "ஆம், ஆம் நான் அதிர்ஷ்டசாலிதான். நாம் போகலாம் வா" என்று தன் நண்பனை வீட்டுக்குப் போகக் கூப்பிட்டான்.

கார்த்திகேயன்: "நல்லது போகலாம், ஆனால் ஆழந் தெரியாமல் காலை விட்டு விடாதே. இவ்வூர் வாசிகளை நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லை."

சொக்கநாதன்: "நீயும் என்ன கர்நாடகமாயிருக்கிறாய். ஏதோ ஒரு பெண்ணுடன் பேசினதினால் என்னென்னமோ நேரிடு மென்று அளக்க வாரம்பித்து விட்டாயே ?"

கார்த்திகேயன் "அணுவிலிருந்துதான் அண்டம். உனக்கு எச்சரிக்கை செய்யவேண்டியது என் கடமை. என் பேச்சைக் கேட்பதும், அல்லது தள்ளி விடுவதும் உன் பொறுப்பு".

சொக்கநாதனுக்கு இவ்வறிவுரைகளெல்லாம் ஏற்க வில்லை. அவன் எண்ண மெல்லாம் நாளை அப்பெண்ணைச் சந்திப்பதிலேயே குடிகொண்டிருந்தது. இரு நண்பர்களும் நடந்தே வீடு போய்ச் சென்று இரவைக் கழித்தார்கள்.

பொழுது விடிந்தது. எப்போது மாலைப் போழ்து வருமென்றே சொக்கநாதன் எதிர்பார்த்திருந்தான். தனக்குள்ளேயே, "நாம் மட்டும் தனியே தான் செல்லவேண்டும். கார்த்திகேயன் உடன் வருவது நமக்கு இடைஞ்சலாய் முடியும். இருந்தாலும் இதை எப்படி அவனிடம் சொல்வது" என்று சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கையில், மாலை நாலு மணியாய் விட்டது. கார்த்திகேயன் தன் நண்பனைப் பார்த்து, "நானும் உன்னுடன் வர எண்ணியிருந்தேன். நீ அதனை விரும்பா விடினும், நீ என் விருந்தாளியாயிருப்பதால், உன்னைப் பாதுகாக்க வேண்டியது

என் பொறுப்பு. என் காரியாலயத் தலைவர் என்னை உடனே வரச் சொல்லியிருக்கிறபடியால் நான் உன்னுடன் வருவதற்கில்லை. ஆகவே உனக்கு வழி திறந்திருக்கிறது. மிகவும் எச்சரிக்கையாயிரு. அவ்விடத்திலேயே அவளிடம் பேசிக் கொண்டிரு. ஆனால் அவளுடன் வேறெங்கும் போய்விடாதே'' என்று சொன்னான்.

சொக்கநாதனுக்குப் பெரிய தடை யொழிந்தாற் போலாயிற்று. தன் நண்பன் வெளியே சென்றதும், தன்னை அலங்கரிக்க வாரம்பித்தான். தன்னை அழகுபெற அலங்கரித்துக் கொண்டு, ஓர் வாடகை ரிக்ஷாவில் ஏறி, முன் குறிப்பிட்ட விடுதியை யடைந்தான். மணி ஐந்தேமுக்கால் தானாயிற்று. கால் மணி நேரமும், ஒரு நாளாகவே அவனுக்குத் தோன்றியது. சரியாய் ஆறு மணிக்கெல்லாம் பிறிதொரு ரிக்ஷாவில் நம் மாயாவதி வந்திறங்கினாள். நேற்று அணிந்திருந்த ஆடை போலல்லாமல் இன்று தென்னாட்டுப் பெண்கள் போன்றே உடுத்திருந்தாள்.

மாயாவதி வண்டிக்காரனுக்கு வாடகையைக் கொடுத்து விட்டு, சொக்கநாதனையணுகி, ''தாங்கள் வெகு நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறீர்களோ'' என்றாள்.

சொக்கநாதன், ''இல்லை, இல்லை. நானும் சற்று முன்புதான் வந்தேன். ஆனால் என்ன புதுமாதிரியாய் உடையணிந்திருக்கிறாயே. நான் முதலில் உன்னை அறிந்து கொள்ளமுடியவேயில்லை.''

முதலில் ஒருவருக்கொருவர் சந்திக்கிறபோது கேட்கிற கேள்வி இதுவல்லவாயினும், மாயாவதி, ''நாம் உள்ளே போவோம். அப்புறம் தங்களுக்கு விடையளிக்கிறேன்'' என்று சொல்ல விடுதிக்குள் இருவருஞ் சென்றார்கள்.

சொக்கநாதன், ''நீ இருப்பது இங்கிருந்து வெகுதூரமோ''?

மாயாவதி, ''இல்லை, பக்கத்தில் தான், ஆனால் நான் கல்விச்சாலை யொன்றில் ஆசிரியையாயிருப்பதால், அஃது முடிகிற

வரை வேறெங்கும் செல்ல முடியாது. வீட்டுக்குப்போய் விட்டு வந்தேன்.''

சொக்கநாதன், "நீ ஆடையை மாற்றியிருப்பதற்குக் காரணஞ் சொல்லவில்லையே?''

மாயாவ : "இது தான் எங்கள் ஊர் வழக்கம். நானும் மதுரைவாசி தான். இவ்வூரிலிருப்பதால், இவ்வூர்ப்பழக்க வழக்கத்தை யனுசரிக்கிறோம். இன்று நான் மதுரை வாசியான தங்களைச் சந்திக்க வந்துள்ளதால் நம் வழக்கப்படி உடுத்திவந்தேன்.''

சொக்கநாதன்: "நீ மதுரைக்கு வந்ததேயில்லையா?

மாயாவதி: "இல்லை. எனக்கு மதுரையே தெரியாது. என் தந்தை இவ்விடம் வந்து என் அன்னையை இவ்விடமே மணந்து கொண்டார். நான் குழந்தையாயிருக்கும் போது, மதுரைக்குச்சென்ற விடத்தில் இறந்து விட்டார்.''

சொக்கநாதன்: "ஆனால் அவருடைய உற்றார்கள் உன்னைப் பற்றி விசாரிக்கவோ, அல்லது உன்னை வந்து கூட்டிக்கொண்டு போகவோ இல்லையா?''

மாயாவதி :—"ஐய! என் தந்தை சென்னை வந்து பல்லாண்டுகளாயிற்று. அவர் மதுரையி லிருக்குங்கால் அவருக்கு மணவினை நடந்ததாகவும், அம்மனைவி பின் இறந்து விட்டதாகவும் கேள்வி. இங்கு வந்த பின்னர் இவ்வூர்ப் பெண்ணாகிய என் தாயாரை என் தந்தை மணந்து கொண்டார். அவர் அவ்வாறு செய்து கொண்ட காரணத்தால், மதுரையிலுள்ள அவருடைய உற்றார்கள் எங்களை யணுகுவதில்லை.''

சொக்கநாதன் :—"இங்கு எப்படி நீங்கள் காலங் கழிக்கிறீர்கள்''?

மாயாவதி :—"என் தாயாருக்குச் சிறிது செல்வம் உண்டு. என்னை நன்கு படிக்கவைத்து விட்டதினால் நானும் கல்விச்சாலை யொன்றில் ஆசிரியையா யிருந்து பொருள் ஈட்டுகிறேன். இவற்றை வைத்துக்கொண்டு நாங்கள் காலங் கழிக்கிறோம்.''

சொக்கநாதன் :—"இவ்விடம் மதுரை வாசிகள் பலர் இருக்கிறார்களே அவர்களில் யாரை யாகிலும் நீ அறியாயோ?''

மாயாவதி:—" என் தாயாரை, மதுரையிலுள்ள என் தந்தையின் உற்றார்கள் சரியாய் நடத்தாதலினால், அவளுக்கு மதுரை வாசிகளென்றால் வெறுப்பு. ஆகவே நான் அவர்களிடம் பழகுவதில்லை."

சொக்கநாதன்:—ஆனால் எப்படி என்னுடன் பழக எண்ணங் கொண்டாய்?"

மாயாவதி:—"நாம் சந்தித்துப் பழகவேண்டுமென்பது கடவுள் விருப்பம் போலும்."

சொக்கநாதனுக்கு அளவிறந்த மகிழ்ச்சி ஏற்பட்டுவிட்டது. "மாயாவதி சொன்னது சரிதானா? கடவுளே இருவரும் சந்திக்க வேண்டுமென்று செய்தனரா? அப்படியானால் ஏன்?" என்று ஆழ்ந்த சிந்தனையில் இருந்துவிட்டான்.

(தொடரும்)

---

# திருப்பனந்தாள் மடாதிபதி திருவடி நீழலடைந்தனர்

தமிழ் மொழியின் பொருட்டும், திருக்கோயில்களின் பொருட்டும் பெரியதொரு மூலதனம் ஏற்படுத்தி வைத்தவரும், வடமொழி தென்மொழி இரண்டிலும் தக்க புலமையுடையவரும், காசிமடத்தின் தலைவராய் விளங்கியவருமான ஸ்ரீலஸ்ரீ சோக்கலிங்க சுவாமிகள் 23—2—30 பிற்பகலில் எல்லாம் வல்ல இறைவனடி சேர்ந்தார். இவர்கள் நமது கழகப் பதிப்புக்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு பிரதிகள் வீதம் வாங்கி யுதவிபுரிந்து வந்தமை பெரிதும் பாராட்டற்பாலது. ஏனைய சைவ மடங்களில் இவ்வுதவிதானுமில்லை என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது. செந்தமிழ் நூல்களை அழகுறப் பதித்து வருகிற நமது கழகத்தின் அரிய செய்கையைக் கண்டு வியந்து நூற்பதிப்பின் பொருட்டுப் பெரும் பொருள் தருவதாக வாக்களித்ததை இளைய பட்டத்தினின்றும் இப்போது தலைவராய் எழுந்தருளியவரும், தமிழ்ப் புலமை சான்றவருமாகிய ஸ்ரீலஸ்ரீ சுவாமி நாத தம்பிரான் சுவாமிகள் நிறைவேற்றித் தமிழ் நலமும் சைவ நலமும் பேணுவார்களென நம்புகின்றோம்.

# ஓர் தமிழ்ப் பெரியாரின் பிரிவு

யாழ்ப்பாணத்து வட்டுநகர் சைவ வேளாண் குலத்துதித்தவரும் பதினுறு தலை முறைகளாகத் தமிழ்ப் புலமை சான்ற குடும்பத்துத் தலையாய்த் திகழ்ந்தவரும், தமது பதினெட்டாண்டு முதல் தொல்புரம் சித்தாந்த சைவ வித்தியாசாலையை நடப்பித்து யாழ்ப்பாணம் மேல்பற்றில் பல குலத்துப் பிள்ளைகளுக்கும் புராண படனம், இலக்கண இலக்கியம் ஆகியவற்றிற் கல்விபுகட்டி வந்தவரும், நவாலி, தொல்புரம், வட்டுநகர், சுழிபுரம் முதலிய இடங்களிலுள்ள பல கோயில்களிலும் கந்த புராணம், பெரிய புராணம், திருச் செந்தூர் மான்மியம், காசிகண்டம், திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களை ஆண்டுதோறும் படனஞ் செய்து வந்தவரும், பலநூல்களை ஆக்கியோனும், இளமையில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் காட்சி நன்மொழி பெற்றவருமாகிய தமிழ்ப்புலவர், திருவாளர் கந்தையா பிள்ளை யவர்கள் சென்ற தைத் திங்கள் 16-ம் நாள் (29-1-30) புதன்கிழமை பிற்பகல் திருவருட்பேறு எய்திய செய்தி தெரியலானேம்.

இவர்கள் அன்று நாட் கடன்களை முடித்து இரவு ஊணுண்டு மூளாயிற் சில பார்ப்பனப் பிள்ளைகட்குப் பாடஞ் சொல்லிவைத்துத் திரும்பி ஆவின் கடனுமியற்றி நோயாளக் குழந்தைகட்குப் பார்வையுஞ் செய்து, 5 மணியளவில் சிற்றுணவுங் கொண்டு வெற்றிலைத் தோட்டத்தில் பாத்தி சரி பார்த்திருக்கையில் மயங்கி யுறங்கிச் சமாதி பெற்றன ரென்றறிந்து அவர்களது தூய இன்பமான இறப்பினைக் குறித்து வியப்புற்ரேம்.

இவர்களது தலை முறையில் குஞ்சிக் குமாரர், வில்வராய முதலியார், சின்னத்தம்பிப் புலவர், முத்துக் குமாரர், சண்முகச் சட்டம்பியார், சுவாமி நாதர் முதலியோர் பாவலர் சரித்திரதீபகத்தில் காட்டப்பட்ட தமிழ்ப் புலவர்களாவர். சுன்ஞகம் திரு. குமார சாமிப் புலவர், திரு. நா. கதிரை வேற்பிள்ளை முதலியோர் இவர்களது உற்ற நண்பர்களா யிருந்தனர்.

நமது செந்தமிழ்ச் செல்வி மாட்டு மிகுந்த அன்பு காட்டிய பெருந்தகையார். யாழ்ப்பாணமும் தமிழுலகமும், ஒரு பெரியாரை இழந்த தென்பது மிகையன்றே.

சைவ சித்தாந்த சங்கத்தார்.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு அ } மெய்கண்டான்யாண்டு-எளஎ பங்குனித் திங்கள் 1930ஞு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ { பரல் ரு

திருச்சிற்றம்பலம்

## திருமந்திரம்

### விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

(பொ - ரை.) ஐந்து கைகளையும் யானை முகத்தையும் சந்திரனுடைய இளம் பிறையை யொத்த பற்களையும் உடைய நந்திக்கு மகனும் ஞானச் சுடர்க் கொழுந்தாயுமுள்ள விநாயகக் கடவுளைச் சிந்தை செய்து வணங்குகின்றேன்; என்றவாறு. (க)

போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக்கும் நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக்குட் டென்றிசைக் கொரு வேந்தனுங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே.

(பொ - ரை.) தன்னை வணங்கும் பக்தர்கள் மனத்தில் தங்கிய பரிசுத்த தேகமுடையவனும் நான்கு திசைக்கும் தலைவனும் உமா தேவியாரை ஒருபாகத்தில் வைத்தவனும் சொன்ன நான்கு திசைக்குள் தென்றிசைக்கு ராஜாவாகிய யமனை உதைத்தவனுமுள்ள பரமேசுரனை நான் வணங்குகிறேன்; என்றவாறு. (உ)

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தா னைந்து
வென்றன னாறு விரித்தனனே ழும்பர்ச்
சென்றவன் றானிருந்தா னுணர்ந் தெட்டே.

(பொ - ரை.] தான் ஒன்றாயும், தன் சத்தியோடு இரண்டாயும், பிரணவத்தில் மூன்றாயுமிருந்து நான்கு வேதங்களையும் உணர்ந்தாங்குணர்ந்து ஐந்து புலன்களின் சேட்டைகளை யடக்கி வேதாங்கங்களாறையும் சொல்லி மேல் ஏழுலகங்களினுமிருந்து அட்டமா சித்திகளையு மறிந்திருந்தான்; என்றவாறு. (௩)

ஒக்க நின்றானை யுலப்பிலி தேவர்கள்
நக்கு நின்றேத்திடு நாதனை நாடொறும்
பக்க நின்றா ரறியாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றி செய்வேனே.

(பொ - ரை.) எவற்றிலும் உடனிருந்தவனாய் அழிவில்லாத தேவர்கள் அநேகரால் சந்தோஷித்து எதிர் நின்று வணங்கப் படுகின்றவனாய் அருகிருந்தாரும் அறியக் கூடாத மேலானவனாய் உள்ள பரமேசுரனைப் புகுந்து நின்று வணங்குகின்றேன்; என்றவாறு. (௪)

அகலிடத்தார் மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தெம்மெய்யைப் போத விட்டானைப்
பகலிடத்தும் மிரவும் பணிந் தேத்தி
யிகலிடத் தேயிரு ணீங்கிநின் றேனே.

(பொ - ரை.) உலகத்தார்க்குச் சத்தியமான பொருளானவனாய் அண்டங்களுக்கு விதை போன்றவனாய் நாமெல்லாம் தஞ்சம் புகுமிடமாய் எம்மைப் பிறப் பிறப்புக்களிற் போகவிட்டவனுமுள்ள கடவுளை இராத்திரியும் பகலும் ஒழியாது வணங்கி மாறுபாடான இவ்வுலகத்து இருளினின்றும் நீங்கி நின்றேன்; என்றவாறு. (௫)

சிவனோ டொக்குந் தெய்வந்தே டினுமில்லை
யவனோ டொப்பா ரிங்கியா வருமில்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவளச் சடைமுடித் தாமரை யானே.

(பொ - ரை.) சிவனுக் கொப்பானதும் மேலானதுமான தெய்வம் தேடிப் பார்த்தாலுங் கிடையாது; இந்த உலகத்திலேயும் அவனுக்குச் சமான மொருவருமில்லை; அப்பேர்ப்பட்டவனுடைய உருவம் புவனங்களை யெல்லாம் கடந்து நின்று சுவர்ணப் பிரகாசம் செய்யும் வெள்ளைச் சடையுடைய தாமரை நிறம்; என்றவாறு. (௬)

அவனை யொழிய வமரரு மில்லை
யவனன்றிச் செய்யு மருந்தவ மில்லை
யவனன்றி மூவரா லாவதொன் றில்லை
யவனன்றி யூர்புகு மாறறி யேனே.

(பொ - ரை.) அவனை யன்றித் தேவருமில்லை; அவனை யொழித்துச் செய்யும் கடுமையான தபசுமில்லை; அவனை யல்லாமல் பிரம விஷ்ணு உருத்திரர்களா லாவதொன்றில்லை; ஆதலால், அவனை யல்லாமல் மோக்ஷத்துக்குப் போகும் வழியறியேன்; என்றவாறு. (எ)

முன்னை யொப்பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
றன்னை யொப்பா யொன்றுமில்லாத் தலைமகன்
அன்னை யப்பாவென்னி லப்பனு மாயுளன்
பொன்னை யொப்பாகின்ற போதகத் தானே.

(பொ - ரை.) பழையராய்த் தம்மிற் சமத்துவமுடைய பிரம விஷ்ணு உருத்திரர்களுக்கு மூத்தவன்; தனக் கொப்பொன்றுமில்லாத் தலைமகன்; தாய் தகப்பனென்று சொன்னாலும் அப்படியே யுள்ளான்; பொன்னைப் போலப் பிரகாசிக்கும் அறிவினை யுடையான் அவன்; என்றவாறு. (அ)

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினு மீசனரு ளறிவா ரில்லை
சேயினு நல்லனணிய னல்லன் பர்க்குத்
தாயினு நல்லனற் றாழ்சடை யோனே.

(பொ - ரை.) அக்கினியில் உஷ்ணமாக வுள்ளவன்; தண்ணீருள் குளிர்ச்சியாக வுள்ளவன்; அப்படியிருந்தாலும் அவன் கருணையின் தன்மையை யறிபவர்களில்லை; பக்திமான்களுக்குப் பிள்ளையைப் பார்க்கிலும் நல்லவனும் அண்மையி லுள்ளவனுமுள்ளான்; தாயைப் பார்க்கிலும் நல்லவனுமுள்ளான்; கீழே விழும் சடையை யுடைய பரமேசுரன்; என்றவாறு. (௯)

போன்னாற் புரிந்திட்ட போற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க விருந்தவன் பேர்நந்தி
யென்னாற் றொழப்படு மெம்மிறை மற்றவன்
றன்னாற் றொழப்படுவா ரில்லை தானே.

(பொ - ரை.) பொற்கயிற்றினாற் கட்டப்பட்டதுபோற் பொன்னிறம் பிரகாசிக்கப் பின்னால் தொங்கும் சடையை யுடையன்; நந்தியென்னும் பேருடையான்; என்னால் வணங்கப்படும் எம்முடைய தலைவனாவான்; அவன் தன்னால் வணங்கப்படுவா ரொருவருமில்லாதான்; என்றவாறு. (௰)

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலுமாய் நிற்குந்
தானே தடவரைத் தண்கட லாகுமே.

(பொ - ரை.) பெரிய பூமியைத் தாங்குபவனுந் தானே; ஆகாயமாய் நிற்பவனுந்தானே; சுடுகின்ற அக்கினியாகவும் சூரியனாகவும் சந்திரனாகவும் மழை பெய்கின்ற மேகமாகவும் நிற்பவனுந் தானே; தானே உமையாயும், பர்வதமாயும் சமுத்திரமாயு நிற்பான்; என்றவாறு. (௧௧)

—உண்மை விளக்கம்.

---

# தமிழும் அறிவியல் நூல்களும்.

(திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., M.L.)

மேலை நாட்டு அறிவியல் நூல்களைத் தமிழிலே கலாசாலை மாணவர்க்குக் கற்பிக்கவேண்டும் என்ற கொள்கையானது சில காலமாகப் பெரிதும் பேசப்பட்டு வருகின்றது. அதனை நிறை வேற்றுதற் பொருட்டு அறிவியல் நூல்களில் வல்ல பல கலா சாலை ஆசிரியர் கூடிய கழகம் ஒன்று கல்வி இலாக்கா அதிபதியால் நியமிக்கப்பட்டு வேலை செய்து வருகின்றது. திரு. சத்தியமூர்த்தி ஐயரைப் போன்ற சில சொல்லாளர்களும் இது நிகழ்த்தப்பட வேண்டும் என்று பல்கலைக் கழக மேடை களிலும் பிற இடங்களிலும் ஆர்வத்துடன் பேசி ஒழிவது பல ரும் அறிந்ததே. ஆனால் அதன் சார்பாக வேலை செய்கின்றவர் களும் பேசுகின்றவர்களும் தமிழ் மொழி வல்லுநரை இவ் வேலைக்கு உடனுழைக்கும்படி பயன் படுத்தக் கருதாமை யானும், தமிழில் போதுமான ஆற்றல் தமக்கு வாய்க்கப் பெறா மையானும் தமது வேலையைத் தக்க முறையில் நடத்த இயலாத வர்களாதலோடு தமிழ் மொழிக்கும் ஒருவாறு ஊறு செய்தவர் கள் ஆகின்றார்கள். தமிழ் மொழியின் இயல்பினையும் ஆற்றலை யும் பெருமையையும் உணராதவர்களும் அவற்றை உணர்தற்கு வேண்டிய விருப்பமில்லாதவர்களும் இவ்வேலையில் தலையிடுதல் தக்கதன்று.

ஏனெனில், அறிவியல் நூற்சொற்களை அன்னோர் வட மொழியிற் பெயர்த்து அப்பெயர்ப்புகளைத் தமிழிற் புகுத்த முயல்கின்றார்கள். அங்ஙனம் முயல்வதால் இதுவரை தமிழிற் புகாத கணக்கற்ற வடசொற் றொடர்கள் தமிழிற் புகுந்து தமிழானது வடமொழியின் ஒரு கிளைமொழி என்று தோற்று வித்தற்கு இடமுண்டாகிறது. தமிழ் மொழியின் சொல்லாக்க ஆற்றல் புலப்படாது மறைதற்கு ஏதுவாகின்றது. இதுவரை தமிழில் வந்துள்ள வடமொழிகளாலும், தமிழ் மொழிகளை வடமொழியின் சிதைவெனப் பிதற்றும் சில போலிப் புல

வர்களது மயக்க வுரைகளானும் பொதுமக்களிற் பலர் தமிழ் வடமொழியின் கிளைபோலும் என்று தியங்கித் திரி புணர்ச்சி உடையராகின்றார்கள். இன்னும் வடமொழிகள் மிகுதியாகத் தமிழிற் புகுமாயின் பிறதிராவிடமொழிகள் போலத் தமிழ் மொழியும் உருமாறிப் போகும். மேலை நாட்டு அறிவியல் நூற்சொற்களை நேராகத் தமிழில் புகுவிப்பது இதனினும் சிறந்தது. வடமொழிவாயிலாக அவை தமிழில் வருமாயின் தமது உண்மை வடிவும் ஆற்றலும் கெட்டு அவை வடமொழிக்கு உரியனவோ என்று பொது மக்கள் ஐயுற்றுத் திரிபுணர்ச்சி எய்துதற்கு வழி வகுத்தவாறாகும்.

அறிவியல் நூற்சொற்களை மொழி பெயர்ப்பதற்குத் தமிழினும் வடமொழி சிறந்ததும் அன்று. துவி சக்கரவண்டி என்பதினும் 'ஈருருளி' என்பது சுருக்கமும் திட்பமும் உடையது. 'விஸ்லேஷணம்' என்பதைப் பார்க்கிலும் வகை அல்லது விரி என்பது சுருங்கிய நயமுடையது. 'சமரூபாந்தர விகாரங்கள்' என்பதைப் பார்க்கிலும் 'ஒரியற் பல்லுரு' என்பது திட்பமுடையது அன்றோ. பிறவும் அன்ன.

உண்மைத் தமிழ்ப்பற்றுடைய நன்மக்கள் தமிழ்ப்பற்றும் அறிவும் இல்லாதார் தமிழைப் பல்வகையினும் பாழ்படுத்தா வண்ணம் அதனைப் பாதுகாக்கக் கடமைப் பட்டிருக்கின்றார்கள்.

ஆங்கிலங் கற்ற தமிழரிற் பலர் தமிழ் வளர்ச்சியைப் பேணுவதில்லை. தமிழை நன்குகற்ற அறிஞர் பலர்க்கு வறுமை ஓர் இடையூறாக இருக்கின்றது. அவர்களது அறிவினைப் பயன் படுத்தும் நன்முயற்சியைத் தமிழ்ச் செல்வர் மேற்கொள்வதில்லை. கல்வியையும் செல்வத்தையும் ஒருங்கு இயைவிக்க முயலும் உழைப்பாளிகட்குத் தமிழரது ஒற்றுமை இன்மையாற் பல கேடுகள் விளைகின்றன. ஆங்கிலம் கற்று அதிகாரமும் செல்வமும் உடைய ஒரு கூட்டத்தார் தமிழை இழிவு படுத்தித் தாழ்த்துவதினாற்றான் தங்கள் சிறப்புஞ் சீரும் நிலையுறும் என்றெண்ணித் தமிழ்க்கு நன்மை செய்வார்போற் பசந்து காட்டிப் பல் வகைச் சூழ்ச்சிகளாலும் இன்னல் விளைக்கின்றார்கள். ஆதலின் தமிழின்

இயல்பையும் தமிழரது கடமையையும்பற்றி ஒரு சிறிது இங்கே கூறவேண்டியதாக இருக்கின்றது. சங்க நூல்களிற் பல வெளி யாதற்கு முன்னரே அச்சியற்றப்பெற்ற பிற்காலத்துத் தமிழிலக் கியங்களை நன்குகற்ற ஐரோப்பிய புலவர் சிலர் தமிழின் பெருமை யைப் பாராட்டி யிருப்பதைப் பார்த்து இந்நாட்டுப் போலித் தமிழ் நண்பர்கள் வயிறெரிகின்றார்கள்.

டாக்டர் வின்சிலோ என்பவர் தமிழைப்பற்றிக் கூறுவ தாவது "தமிழ் ஓர் இழிந்த கிளை மொழி யன்று. ஆங்கிலத்திற்கு எழுத்து அமைவதற்கு முன்னரே தமிழானது மிகவும் நாகரிகத் தோடு திகழ்ந்தது. கிரீக் மொழியினும் தமிழ் திண்மையும் செப்பமும் வாய்ந்தது. லத்தீன் மொழியைப் பார்க்கிலும் அது வள முடையது. தற்கால மொழிகளுள் ஆற்றலினும் நிறைவினும் அஃது ஆங்கிலம் ஜர்மென் என்னும் மொழிகளை ஒத்திருப்பது" என்பதே.

மேலை நாட்டில் அறிவியல் நூற்சொற்கள் பலவும் கிரீக், லத்தீன், மொழிகளினின்று எடுத்தமைத்துக் கொள்ளப்பட் டனவே. அவை போலத் திட்பமும் செம்மையும் வாய்ந்த தமிழ் மொழியானது அறிவியல் நூற் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு என் பயன்படாது? அவைகள் போலத் தமிழ்மொழி இறந்த மொழியாகவும் இல்லை. ஆங்கிலம் ஜர்மென் முதலியவற்றோடு ஒத்திருத்தலால் இவைகள் போல வழக்காற்றிற் சிறந்து விளங் குவதற்கும் தமிழ்க்கு ஆற்றல் உண்டென்பது தெளிவாதல் காண்க. பழையவற்றுட் பழமையாயும் புதியவற்றுள் சிறந்த தாயும் விளங்குகின்ற தமிழ் மொழியின் ஆற்றலை அறியாதார் அதனைப் பயன் படுத்தவும் அறியாரென்க.

முப்பத்தேழு ஆண்டு தமிழ் கற்ற டாக்டர் கால்டுவெல் என்பவர் கூறுவதாவது "திராவிட மொழிகள் எல்லாவற்றினும் மிகத் திருத்தம் வாய்ந்த தமிழானது வேண்டுமாயின், வட மொழியை முழுதும் விட்டுத் தனித்து நிற்கும் ஆற்றலுடை யது. அங்ஙனம் தனித்து நிற்றலோடமையாது வடமொழியின் உதவியின்றிச் செவ்விதிற் றிகழவுங்கூடும். தமிழ் ஒழிந்த பிற

திராவிட மொழிகளைப்பற்றி அங்ஙனங்கூற இயலாது. தெலுங்குக்கு இற்றை நிலைமையில் வடமொழிகளை நீக்கி விடுதல் அரிதாகும். கன்னடத்திற்கு அதனினும் அஃது அரியதாகும். மலையாளத்திற்கு அது மிகுதியும் இயலாததாகும். இம்மொழிகள் மிகுதியாக வடமொழியில் கடன் வாங்கி உதவிவேண்டும் போதெல்லாம் வடமொழியை உற்று நோக்கி உதவி கொள்ளப் பழகிவிட்டன" என்பதே. இதனால் பன்னாளாகத் தமிழறிஞர்கள் தம்மால் இயன்றவரை வடமொழி வெள்ளப் பெருக்கினைத் தடுத்துத் தமிழைப் பாதுகாத்து வந்தனர் என்பது போதரும். அவர்கள் அங்ஙனம் செய்யாவிடில் தமிழின் தனிச்சிறப்பை நாம் இன்று இழந்திருப்போம். தென்னாடு முழுவதும் தமிழே ஒரு காலத்தில் பரவியிருந்தது. தெலுங்கு, கன்னடம், மலையாளம், என்பவற்றை இப்பொழுது வழங்குமிடங்களில் வதிந்தோர் செந்தமிழ் நிலத்து மக்களோடு தொடர்பற்றுத் தனித்தனிக் குழாங்களாய் வாழ்ந்த காலத்தே அவர்கள் பேசும் மொழிகள் திரிவுற்றன. திரிவுற்ற மொழிகளைத் திருத்துவார் போற் புகுந்த ஆரியமரபினர் அவற்றின் நெடுங்கணக்கினைத் தமது ஆரிய மொழிக்குத் தக்கவாறு திரிவுபடுத்தி அவற்றிற் கிலக்கணமும் ஆரிய மொழியிலேயே அமைத்து விட்டமையால், அவை ஆரியத்தின் திரிபுபோல் தோன்றுவன ஆயின. தமிழோடு அவற்றிற்குள்ள தொடர்பினை அறியாத தெலுங்கரும் கன்னடரும் மலையாளரும் தத்தம் தாய் மொழிகள் ஆரியத்தின் கிளைமொழிகள் எனத் திரியக்கொண்டு ஆரியத்திற்கு அடிமையாய்த் தமிழ்த் தாயினை மறந்து அவளைப் புறம் பழித்தலும் செய்கின்றார்கள். இற்றைக் காலத்திலே அறிவியல் நூற் கருத்துக்களை வெளியிடுமுகத்தான் தமிழின்கண் ஏராளமாக ஆரியச் சொற்கள் புகுமாயின் தமிழ் நெடுங் கணக்கைப் பிற திராவிட மொழிகளின் நெடுங்கணக்கோ டொப்ப ஆரியமாக்க வேண்டிய அவசியம் சிறிது காலத்திற்குள் ஏற்பட்டுவிடும். அதனால் அம்மொழிகளுக்கு ஏற்பட்ட உருமாற்றம் தமிழ் மொழிக்கும் ஏற்பட்டுத் தமிழும் ஆரியத்தின் முழு அடிமையாய்ச் சிதைவுற்றுச் சிறப்பிழக்கும். அத்தகைய சீர்குலைவு ஏற்படுங் காலத்தைத் தமிழ்

எதிரிகள் கண்ணுங் கருத்துமாய் உற்று நோக்கிக் கொண்டிருக் கிருர்கள்.

தமிழ்ப் பல்கலைக் கழகங்களில் தமிழ் கட்டாயப்பாடங் களுள் இருக்கக்கூடாதென்பார் சிலர்க்கு இக்கருத்துண்டு. தமி ழிலக்கியத்தை ஆங்கில அறிவுடைய தமிழ் மக்கள் கல்லாமற் போனுல் தமிழின் வளமும் ஆற்றலும் அவர்களுக்குப் புலன் படாதுபோகும். போகவே ஆங்கிலத்தில் தாம் கற்ற கருத்துக் களையே தமிழிற்பயன்படுத்த வேண்டும் என்று நினைப்பார்கள். பயன்படுத்துதற்கு வேண்டும் தமிழறிவு இல்லாமையால் வட மொழியாளர் கூறுகின்ற முறையைத் தழுவி ஆங்கிலச் சொற் களையும் வடசொற்களையும் அவற்றின் போக்குகளையும் தமிழில் வழங்குவர். அங்ஙனஞ் செய்வதால் தமிழின் செம்மையைத் தொலைப்பதற்கு ஆங்கிலங்கற்ற தமிழரேதக்க கருவியாவர். ஆங் கிலம் மாத்திரம் கற்ற தமிழரிற் பலர் ஆங்கிலங்கலவாது தமிழ்ப் பேசத்திறமை அற்றவர்களாக இருக்கின்ருர்கள். சிற்சில இடங்களில் ஆங்கிலமொழிப் போக்கைத் தழுவித் தமிழ் பேசி நகைச்சுவை விளைக்கின்ருர்கள்.

நகைச்சுவைக்கு ஆசிரியர் நச்சினர்க்கினியர் "ஆரியர் கூறுந் தமிழ்" என்று உதாரணங்காட்டினர். இக்காலத்திலே ஆங்கிலத் தமிழர் கூறுந்தமிழ் என்று அதற்கு உதாரணங் கூறுதல் வேண் டும். உணவுகோடலை, உணவு 'எடுத்தல்' என ஆங்கிலம் அறிந் தார்பலர் இக்காலத்து வழங்குதல் காண்க. இன்னோர் அறி வியல் நூல்களை வடமொழிப்படுத்திய தமிழினில் ஓதவும் ஓது விக்கவும் செய்யத்தொடங்கி விட்டால் அது நற்றமிழ் அறி ஞர்க்கு நகைவிளைத்தலோடு கவலையையும் எழுப்பும்.

சில அறிஞர் தமிழிலே உயர்தரக் கல்வி முறைகள் ஆங்கில கலாசாலையில் எற்படுத்துதலே போதும், தமிழ் கட்டாயப்பாடம் ஆகவேண்டியதில்லை என்கிருர்கள், அவர்கள் கொள்கையும் தவறுடையதே. ஆங்கிலக் கலாசாலைகளில் பிரவேச பரிசோதனை வரையுள்ள தமிழ்ப் படிப்பு எளிதான இலக்கியச்சார்புடைய தாயும் அதற்கு அடுத்த பரிசோதனைக்குள்ள தமிழ்ப் படிப்பு

நடுத்தர இலக்கியச் சார்புடையதாயும், பி. ஏ. பரீக்ஷைக்குரிய தமிழ்ப்படிப்பு உயர்தர இலக்கியமாகிய சங்க நூற்சார்புடைத் தாயும் இருத்தற்பாலது. உயர்தர இலக்கிய நயத்தினை அறியப் பெறுதவர்கள் தமிழின் தனியாற்றலை உணரமாட்டாதவராவர்.

வடமொழிக்கலப்பு மிக்க பிற்காலத்துத் தமிழிலக்கியங்களை மாத்திரம் கீழ் வகுப்புக்களிற் கற்று விட்டு உயர் வகுப்புகளில் உயர்தனித்தமிழிலக்கியங் கற்கப்பெறுது தமிழை மறந்து விடுகின்ற மாணவர் தமிழ் ஆராய்ச்சி செய்யும் திறனில்லாதவராயும், செந்தமிழ் மொழியில் எழுதும் ஆற்றல் இல்லாதவராயும், செந்தமிழ் ஆராய்ச்சி நூல்களை வாசிப்பதற்கு ஊக்கமில்லாதவர்களாயும், பிறமொழி நூல்களைக் கற்பதிலும் பிறதொழில்கள் செய்வதிலுமே ஈடுபடுவர். செகப்பிரியர் மில்டனுர், முதலிய பெரும் புலவர்களது நூல்களின் சுவையறியாது ஆங்கிலப் பல்கலைக் கழகத்தில் ஆங்கில மக்கள் பிறவற்றைப் பயின்று வெளிவருவதை ஆங்கில நாட்டினர் விரும்பாமை போலத் தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகத்தில் தமிழ் உயர்தர இலக்கியச்சுவையை அறியாது தமிழ் மாணவர் பிறவற்றை மட்டும் பயின்று வெளிவருதலைத் தமிழ் நன்மக்கள் விரும்பார் என்க.

இதுகாறுங் கூறியவாற்ருல், அறிவியல் நூற்கருத்துக்கள் தமிழில் நன்கு பரவுதற்குக் கட்டாயத் தமிழ்க் கல்வி ஆங்கிலக் கலாசாலையிற் பி. ஏ. முதலிய உயர் வகுப்புகளுக்கு அமைத்தல் ஒரு சிறந்த துணையாமென்பது வலியுறுத்தப்பட்டது.

இனி, அறிவியற்கருத்துக்களுக்கேற்ற சொற்கள் ஈட்டுவோர், தமிழிலே மருத்துவநூல்வல்லார், பல்வகைக்கம்மத் தொழில் வல்லார், கைத்தொழில்வல்லார், பண்டை நூல்வல்லார் முதலிய பலகலை வல்லாரது உதவியைத் துணையாகக்கொள்ளின் மேலை நாட்டுச்சொற்களினு மிக நயமான தமிழ்ச்சொற்கள் ஏராளமாகக் கிடைக்கப்பெறும். 'காய்' என்ற சொல்லை பழுக்காதபழம் என்று பொருள்படும் 'unripe fruit' என்ற சொற்ருெடரால் வழங்குதல் எவ்வளவு சுற்ருன நீண்டமுறையாகும் என்பதை உற்றுநோக்குக. 'Centre of gravity' என்ற

சொற்றொடர்ப் பொருளைக் குறிப்பதற்கு 'ஏண்' என்ற ஒரு சொல் கம்மியர்களால் வழங்கப்படுகிறது. 'Prejudice' என்ற ஆங்கிலச்சொல்லிற்கு நேர் மொழி 'முன்ன முடிவு' 'முன் முடிவு' என்பது. இதனைத் திரு. இராமலிங்க சுவாமிகள் வழங்கியுள்ளாரெனத்திருவனந்தபுரம் திருவாளர் இலக்குமண பிள்ளையவர்கள் காட்டினர். பிறவு மன்ன,

இனி, தமிழிற் புதிதாகச்சொல்லாக்கமியற்றக் கருதுவோர் மேலை நாட்டுச்சொற்கள் எவ்வாறெழுந்தன வென்பதைக் கருதாது, குறித்த பொருள் முழுவதையும் ஒரு சிறுசொல்லி லுணர்த்த வேண்டுமென்றெண்ணி, நெடுஞ்சொற்றொடர்களை மேற்கொள்ளுகின்றார். இது 'சுருங்கச்சொல்லல்' என்ற அழகிலாதொழிதற் கேதுவாம். Chemistry என்பது 'ஊற்றுதல்' என்ற பொருளுடைய ஒரு சொல்லடியாகப் பிறந்தது. அச்சொல் அவ்வறிவியல் நூலின் இலக்கணத்தை உணர்த்தாவிடினும் இடுகுறியாக அந்நூற்கு வழங்குதல் காண்க. தமிழில் இதைப்பார்க்கினும் நயமான சொற்கள் எளிதிலமைத்தல் கூடும். பெயர்களாக அமைகின்ற சொற்கள் தாம் குறிக்கின்ற பொருளின் இலக்கணத்தின் ஒரு பகுதியைச் சுட்டினாலும் போதுமானது. அவற்றிற்கு விளக்கம் நூலுட் செம்மையாகத்தந்து, அவற்றை அப்பொருளையே குறிக்கப் பயன்படுத்துவோமாயின், தெளிவிற்கு ஊனம் ஏற்படாது. 'Geography' என்பதைக் குறிப்பதற்கு 'ஞால நூல்' என்ற சொற்றொடரை வழங்குதல்தக்கதே. 'Geology' என்பதற்கு 'நில நூல்' என்றசொற்றொடரை வழங்குமிடத்து, எவ்விடத்திலும் அச்சொற்றொடரை, அந்நூலைக் குறிக்கவே பயன்படுத்த வேண்டும். சில சமயங்களில் 'நில நூல்' என்பதை 'Geography' என்பதைக் குறிப்பதற்கும். 'ஞால நூல்' என்பதை Geologyயைக் குறிப்பதற்கும் வழங்காமலிருப்பின், அதுவே உரைத்தெளிவிற்குப் போதுமானது. அவ்வாறே 'Physics' என்பதற்கு 'பூத இயல்நூல்' எனவும் 'Chemistry' என்பதற்கு 'பூதக்கலவைநூல்' எனவும் வழங்கலாம். இவற்றை மாற்றிவிடுதல் கூடாது. 'பூதம்' என்ற சொல் ஆசிரியர் திருவள்ளுவனரால் ஆளப்பட்டுள்ளது.

'பூதங்களைந்தும் அகத்தே நகும்' என்றது காண்க, அது 'பூத்தல்' (=உண்டாதல்) என்பதடியாகப் பிறந்த தமிழ்ச்சொல்லாக இருத்தற்பாலதே. 'Chemistry' என்பது பூதக்கலவையை மாத்திரமன்றித் தனிப்பொருள்களைப் பற்றியுங் கூறுவதேயெனின், தனிப்பொருள்களில்லாது கலப்பு எவ்வாறு நிகழும். 'கலவை' என்பதனுள் அவை யடங்கும். 'Elevator' என்பதற்கு, 'பொருள்களை மேலே உயர்த்துங்கருவி' என்றெழுதினல், அது வெற்றென விரித்தலாகும். 'தூக்கி' என்ற தமிழ்ச்சொல்லை வழங்கினுற்போதும். 'Canyon' என்பதற்கு 'செங்குத்தான கரைகளை யுடைய ஆழமான ஆறு' என்று தமிழிற் கூறுவது தமிழ்ச்சொல்லாற்றலின்மையை உணர்த்தும். 'நிவப்புக்கரையாறு' என்றுற் போதுமானது. பிறவுமன்ன.

இஃதென் சொல்லியவாறோ வென்னில், அறிவியல் நூற்சொற்களைத் தமிழில் தழுவக் கருதும் அதிகாரிகளும், பிறரும் தமிழ்ச் சொல்லாக்க முறைகளை அறியாது இடர்ப்பட்டுத் தமிழ்க்கு ஊனம் விளைவிக்கும் வழியிற் செல்லுதலால், இந்நன் முயற்சி செவ்விதிற் றிகழ்ந்து தமிழ்க்கு வளமும் ஆக்கமும் மேம்படுதற் பொருட்டு ஆங்கிலம்வல்ல தமிழறிஞரைத் தமிழ்ப் பெருஞ் செல்வர்கள் இதன்கண் ஊக்கி அவர்களால் அம் முயற்சி கைகூடும் வண்ணம் செய்யவேண்டிய ஏற்பாடுகளை விரைவிற் செய்யவேண்டும். அன்றெனின், அதிகாரிகளின் துணைக் கொண்டு நமது மாணவர்களனைவரும் கற்குங் கலாசாலைகளில், அறிவியல் நூற்கருத்துத் தெரிக்கும் ஆரியச்சொல் வெள்ளம் பெருக்கெடுத்துத் தமிழ்க்கரைகளிலிருந்து அவர்களைக் குழப்ப மொழிக்கடலிற் கொண்டு தள்ளிவிடுதல் கூடும். ஆதலின், நம்மவர்கள் இப்போதாவது இம்முயற்சிக்கண் விழிப்புடன், தமிழ் நயத்தைப் பாதுகாக்கப் புறப்பட்டு வெற்றியடைக என்பதே.

---

# பிணியாளி

(அ. சிதம்பரநாதன். B. A.)

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.' இக்குறைவற்ற செல்வம் வாய்க்கப் பெறுவார் உலகில் வெகு சிலரே. மனிதனுக்குப் பழவினையாலும் உணவு செயல்கள் இவற்றின் ஏதுக்களாலும் பிணி யேற்படுகிறது. பழவினையால் வரும் நோய் அவ்வினை கழியுங்கால்தான் தீருமென்று சொல்லுவர். அஃதன்றி உணவுந் தொழிலும் மிகுவதாலும் குறைவதாலும் ஏற்படக்கூடிய நோய்கள் மருந்தாற் போக்கற்பாலன. பிணி வருமுன்னே காக்கச் சில விதிகளுண்டு. அவைகளுட்சில:—தான் முன்னருந்தியது அற்றதைக் குறிகளாற் கண்டு பின் அறக்கூடிய அளவறிந்து உண்ணல். மாறில்லா உணவுகளைக் கொள்ளல். தன்யாக்கை வலிமைக்கொத்த வினைகளை ஒத்த காலத்திற் செய்தல்.

இவ்விதிகளுக்கு மாறாக நடப்பதாலும் பழவினையாலும் பிணியாற் பிடிக்கப்படுவோர் நிலைமையை நோக்குவோம். அவர் தம் வாழ்க்கைப் போக்கில் மகிழ்ச்சி தரத்தக்க உணர்ச்சிகளும் வெற்றிக் குறிப்புகளும் நோய் வந்துழி தடைக்குள்ளாவனவேயன்றி மறைவனவாகவும் சொல்லலாம். அவர் படுத்த படுக்கையாகக் கிடக்கின்றனர். அவரது எண்ணங்கள் உவகை யென்னுமிடத்திற்குப் போகும் பாதை வழிச் செல்லத் தயங்குகின்றன. உலகத்தில் நிகழும் வேலைகளைப்பற்றி அவர்க்குக் கவலையில்லை. மனிதர்கள் என்னென்ன தொழில்களில் ஈடு படுகிறார்கள் என்பதை அறிந்து கொள்ள அவராலியலவில்லை. வைத்தியன் வந்து பார்க்கும் பொழுது வைத்தியம் என்பதாக ஒரு தொழில் இருக்கிறதென்ற நினைவுண்டாகிறது. வீட்டைப்பற்றிய கவலை அவர்க்கு இல்லை. ஏதோ உள்ளே முணு முணு வென்று கேட்கும் ஒலி வீட்டிற்குள் ஏதோ சிறு வினைகள் செய்யப்படுகின்றன என்று அறிவிக்கின்றனவேயன்றி அவ்வினைகள் யாவை யென்றறிந்து கொள்ள அவர் முயற்சிப்பதில்லை. பஞ்சு மெத்தை மீது

நடத்தல் போன்று ஓசையின்றி மாடிமீதேறிச் செல்லும் வேலை யாட்கள் எதற்காக அங்கு செல்கிறார்கள் என்பதைக் குறித்து அவர்கள் அறிந்துகொள்ள முயற்சிப்பதில்லை. வீட்டுக் கதவைத் தட்டும் ஓசை கேட்டும் யாரங்கே என்று கேட்காது கொன்னே இருக்கும் நோயாளி தட்டினவர் உள்ளே வந்தபின்கூட 'அவர் யார்' என்று அறிந்துகொள்ள விரும்பவில்லை. யார் யாரோ தனது உடல் நிலையைப்பற்றிக் கேட்டுச் செல்கிறார்கள் என்ற பொதுவான செய்தி யொன்றே அவர்க்குப் போதுமானது.

பிணியானது மனிதனைத் தங் நலங் கருதுவதிற்றீரனாகச் செய்து விடுவது என்ன விநோதம்! தான் நோய்நீக்கப் பெற வேண்டுமென்ற எண்ணத்தைத் தவிர வேறெவ்வெண்ணமும் அவனுக்கு உண்டாதலில்லை. தன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டும் அழுதுகொண்டும் முணுமுணுத்துக் கொண்டும் இருக்கும் பிணியாளி தனக்கு எவ்வழியில் நன்மை செய்து கொள்ளலா மென்றெண்ணிய வண்ணம் இருக்கிறான். அவனது துன்புறும் அங்கங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனியாட்கள் தன்னுடம்பிலேயேயிருந்து துன்பந் தருவது போன்றிருக்கிறது. அவன் இரவெல்லாம் தலைநோயாற்றுன்பப்பட்டதைக் குறித்து நினைப்பதிலும் தனது விரல்களெல்லாம் மெலிந்து போயிருப் பதைக் குறித்து வருந்துவதிலும் காலத்தைக் கழிக்கிறான்.

அவனிருக்குமிடத்தில் ஓசை குறைக்கப் படுகின்றது. எல் லோரும் குசுகுசென்று பேசிக் கொள்கிறார்கள். அரவமின்றி நடக்கிறார்கள். வீடு முழுவதும் அவனைப் பற்றியே பேச்சு; அவனைப்பற்றியே நினைவு. அவனோ படுக்கையில் இப்படியும் அப்படியும் புரளுகிறான். வலதுகைப் பக்கம் படுக்கிறான்; இடது கைப்பக்கம் படுக்கிறான்; முகத்தை மேலே வைத்துப் படுக்கிறான்; முகத்தைக் கீழே வைத்துப் படுக்கிறான். குளிரைத் தடுக்கத் துணிகளைப் போர்த்துக் கொள்கிறான். சற்று நேரத் தில் அவைகளைக் களைந்து விடுகிறான். தலையணையைப் புரட் டிப் புரட்டி வைத்துக் கொள்கிறான். அரசனுக்குப் போன்று அவனுக்குப் படுக்கையும் தலையணையும் தட்டியுங் கொட்டியு

மாற்றியும் போடப்படுகின்றன. அரசியல் வாதியைவிட அவன் பக்கங்கள் மாறுகிருன். சிலவமயங்களில் அவன் பொறுமை யெல்லாம் போய்ச் சினமுண்டாகிறது.

அதுபோன்ற சினத்தைச் சில நோயாளிகள் வீட்டிலுள்ளார் பாற்காட்டுவர். சிலர் கடவுளைக் குறை கூறுவர். வேறு சிலர் தாம் செய்த வினையை யெண்ணி நோவர். பின்னுஞ் சிலர் தாஞ் செய்த அட்டூழியங்களை நினைத்து வருந்துவர். வந்த நோய் கூற்றுவனையுமுடன் கொண்டு வந்துவிட்டதோ வென வஞ்சி அறவழிகளிற் பொருளைச் செலவு செய்ய வேண்டுமென்று நினைப்பாரு முண்டு. இவ்வச்சமே பிணியாளிகள் உயிர் விடுந் தறுவாயில் அறச் செயல்களுக்காக எழுதி வைக்கும் பணத் தொகைக் கேதுவாகும். பிணி வந்தக்கால் நல்லவை யல்லவை செய்ததற்கு வருத்தமும் நல்லவை செய்யவேண்டு மென்ற அவா வும் ஏற்படுகின்றன. கடவுளென்று ஒருவருண்டென்ற எண் ணமும் அப்பொழுதுதான் பலருக்குத் தோன்றுகிறது. பிணி, உள்ளனொன்று துன்பந் தருவதாகத் தோன்றினும், அதனற் சில நன்மைகளு மேற்படுவதாற்ருன் கடவுள் மக்கட்குப் பிணி யையுந் தருகின்றனர்போலும். குட்டநோய்பெற்ற நக்கீரர் செருக் கொழிந்ததும் வயிற்று நோய் பெற்ற சுந்தர பாண்டியன் நன் மதம் சேர்ந்ததும் யாவருமறிந்ததே. ஆனல், பிணிப்பட்டுழி ஒருவற்கு வரும் நற்புத்தி பிணியகன்றபின் மாறிவிடாதிருக்கும் படிச் செய்தல் எளிதன்று; ஆயினும் எளியதல்லா வொன் றைச் செய்தலால் வரும் பெருமையைக் குறித்தாவது பிணி யாளிகள் பிணி நீங்கியபின் நன்னெறிக் கண் செல்வாராக!

---

# கண்ணப்ப நாயனார்

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்]

திருக்காளத்தி மலையின் அடி வாரத்திலே பொத்தப்பி நாடு பலவளமும் சிறந்து ஓங்கியிருந்தது. அந்த நாட்டின் தலை நகர் உடுப்பூர் என்பது. அந் நாட்டிலே வேடுவரே மிகுத்திருந்தனர். அவர்களுக்கு அரசர் நாகன் என்பவர். அவர் தத்தை எனப் பெயரிய மங்கையாரோடு இல்லறம் பூண்டு அரசாண்டு வந்தார்.

அவர்களுக்கு நெடுநாள் பிள்ளைப்பேறு அரிதாயிற்று. அவர்கள் மலை நாட்டுத் தெய்வமாகிய முருகப் பெருமானை வழிபட்டு மெய்யன்போடு நோற்றிருந்தனர். முருகக் கடவுள் திருவருள் செய்தார். அத்தவப் பயனால் அவ்வம்மையார் ஓர் அருமைக் குழந்தையைப் பெற்றெடுத்தார். அப்பிள்ளை திண்ணென்று இருந்தது. அதனால் அம்மகனுக்கு இரு முதுகுரவரும் திண்ணனார் எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர். திண்ணனார் திடமுற வளர்ந்து இளவரசுப் பட்டம் பெறும் பருவத்தை யடைந்தார்.

அரசர் தமது மைந்தருக்கு இளவரசுப் பட்டம் சூட்டினார். திண்ணனார் வேடர் பலர் புடை சூழக் கன்னி வேட்டையாடக் காட்டை யடைந்தனர். கன்னி வேட்டையாவது முதன் முதல் ஆடும் வேட்டை. அவர் புலி, கரடி, யானை முதலிய பல கொடிய உயிர்களைக் கொன்றார். ஒரு பன்றி அவர் கையில் அகப்படாமல் மிக வேகமாக ஓடிற்று. அவர் அதைப் பின் தொடர்ந்து சென்றார். நாணன், காடன் என்ற இரு வீரரே அவருக்குத் துணையாகத் தொடர்ந்து வந்தனர். கடைசியில் அவர் அப்பன்றியைப் பற்றித் தமது ஈட்டியால் குத்தி அதைக் கொன்றார். அவர்கள் அப்பன்றியை வதக்கித் தின்று இளைப்பாறி ஊருக்குத் திரும்ப எண்ணினர்.

அவர்கள் தண்ணீர் உள்ள இடம் தேடிப் பொன் முகரியாற்றை அடைந்தனர். திண்ணனார் தீ உண்டாக்கிப் பன்றியை



கண்ணப்பர்

வதக்குமாறு காடனை அங்கே நிறுத்தி நாணனைத் தம்முடன் அழைத்துக்கொண்டு அம்மலைமேல் ஏறினார். அவர்கள் அம்மலையின் உச்சியை அடைந்தனர். அங்கே திண்ணனார் தம் முன்பு சிவலிங்கப் பெருமானைக் கண்டார். கண்டு பேரன்பு கொண்டு ஓடிச் சென்று அக்காளத்தியப்பரைத் தமது மார்போடு தழுவிக் கொண்டார். "கடவுள் எப்படி அங்கே ஒரு துணையும் இல்லாமல் உணவு கொடுப்பாருமின்றித் தனியே இருக்கின்றார்"? என எண்ணிய திண்ணனார் அவரைத் தம்மோடு ஊருக்கு அழைத்தார். அவர் பேசாதது கண்டு அவருடனேயே தங்கியிருக்கத் துணிந்தார்.

காளத்தியப்பர் பசித்திருத்தலைக் கண்டு அவருக்கு உணவு கொண்டுவர எண்ணி அவர் கீழே இறங்கிப் பொன் முகரிக் கரையை அடைந்தார். அங்கே அவர் அப்பன்றியை வதக்கி, சுவை பார்த்து நல்ல சுவையுள்ள புலாலை எடுத்துக்கொண்டு, கடவுளை முழுக் காட்டத் தமது வாயிலே ஆற்று நீரை மொண்டு கொண்டு, அப்பிரானுரை அழகு படுத்தப் பல மலர்களைப் பறித்துத் தமது தலையிலே செருகிக் கொண்டு மலையின் உச்சியை நோக்கி விரைவாக ஓடினார். அவருடைய செயலைக் கண்ட நாணனும் காடனும் அவருக்குத் தெய்வப் பித்தம் பிடித்து விட்டதென்று தீர்மானித்து அச்செய்தியை அரசருக்குச் சொல்ல விரைந்தனர்.

திண்ணனார் காளத்தியப்பர் முன் சென்று பணிவுடன் அவருடைய தலையிலே தமது வாயிலிருந்த நீரை ஊற்றி, தமது தலையிலிருந்த பூக்களை யெடுத்துச் சூட்டி, முன் தாம் கொண்டுவந்த புலாலுணவைப் படைத்தார். இவ்வாறு அவர் ஐந்து நாட்கள் செய்து அன்பு மீதூர அன்பே ஒரு உருவமாகிப் பிரானுரை விட்டு நொடிப் பொழுதும் நீங்காமல் காவல் காத்து நின்றார். உணவு தேடிப் போகும் நேரம் தவிர அவர் வேறு எங்கும் அகலார்.

திருக்காளத்தியப்பரைப் பூசை செய்யும் அடியார் புலால், எலும்பு முதலியன அங்கே சிதறிக்கிடப்பதைக் கண்டு மனம்

நொந்து "இத்தகைய தகாத செயல் செய்வாரும் உளரோ?" எனப்புலம்பி "இறைவரும் இதற்கு இடங்கொடுத்து மனம் இசைந்திருக்கின்றனரே" என இடையீடில்லாத சிந்தனை கொண்டார். கடவுள் அவருடைய கனவிலே தோன்றி, "அன்பனே! இதனைச் செய்வோன் அன்பே உருவானவன். நாளை நீ எமக்குப்பின்னால் அவன் காணாத இடத்தில் வந்து ஒளித்திரு. அவனுடைய பேரன்பை உனக்குக் காட்டுவோம்." என்று மொழிந்தனர். அவ்வடியார் மறுநாள் பிரானாரை வழிபட்டு உண்மை காண அவருக்குப் பின்னால் மறைந்திருந்தனர்.

திண்ணனார் ஆறும் நாளாகிய அன்று உணவு கொண்டு வந்தார். வந்தவுடன் அவர் காளத்தியப்பருடைய வலது கண்ணிலே இரத்தம் வடிவதைக் கண்டு நெஞ்சம் துணுக்குற்றார். இத்தீமையைச் செய்தார் யாரெனக்காண ஓடினர்; பல பச்சிலைகளைக் கொண்டுவந்து இரத்தம் வடியும் கண்ணிலே பிழிந்தார்; ஒன்றாலும் செந்நீர் வடிவது நிற்கவில்லை. அதனால் அவர் பட்ட துன்பத்திற்கு ஓர் அளவே இல்லை.

சிறிது நேரம் அவர் சிந்தனையில் ஆழ்ந்தார். அவருக்கு "ஊனுக்கு ஊன் இடல்" என்னும் உண்மை மொழி தோன்றிற்று. உடனே அவர் தமது வலது கண்ணைத் தோண்டியெடுத்து இரத்தம் வடியும் கண்ணிலே அப்பினார். அக்கணமே இரத்தம் வடிவது நின்றது. அது கண்டு அவர் மட்டிலா மகிழ்ச்சியடைந்து துள்ளிக் குதித்து ஆடிப் பாடினார்.

அப்போது கடவுளுடைய இடது கண்ணிலிருந்து இரத்தம் வடியத் தொடங்கிற்று; அதைப் பார்த்த மாத்திரத்திலே மறுபடியும் கவலை தோன்றிற்று. ஆனால் அவர், "இனி யான் இதற்கு அஞ்சேன். ஏனெனில் மருந்து கை கண்டேன்" என்று கூறிக்கொண்டு தமது இடது கண்ணைப் பிடுங்கத் தொடங்கினார். அக்கண்ணையும் பிடுங்கி விட்டால் காளத்தியப்பருடைய இடது கண்ணை அறிவது கடினமாய் விடும். அதனால் அவர் அடையாளம் கண்டு பிடிப்பதற்காகத் தமது காலைத்தூக்கி அக்கண்ணுக்கு அருகே ஊன்றிக் கொண்டு அப்பால் தமது இடது கண்ணைப் பறிக்கத் தொடங்கினர். ஈடும் எடுப்பு மற்ற இத்த

கைய அன்புச் செயலை யாரே செய்தார்! உடனே பெருமானார் தோன்றி அவருடைய கையை அம்புடன் பிடித்துக் கொண்டு, "நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!" என அருளுரை கூறி அவரைத் தமது அருகிலேயே வலது பக்கத்தில் வைத்துக் கொண்டு என்றும் குன்றாப் பேரின்ப வாழ்வைத் தந்தருளினார். செய்வதற்கு அரிய இத்தனை அன்புச் செயல்களையும் மறைந்திருந்து கண்ட அடியார் கடவுளுடைய திருவருளைப் புகழ்ந்து கண்ணப்ப நாயனாரை நாடோறும் கும்பிட்டிருந்து திருவருள் பெற்றார்.

---

# திருஞான சம்பந்தர்–செந்தமிழ் நாடகம்.

[திரு. S. முத்துக்குமாரசாமியா பிள்ளையவர்கள்)

திருச்சிற்றம்பலம்.

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக்கைம் மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநாயகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற்கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே." சம்பந்தர்.

"பண்டைவல் வினையினாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடுந்
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்"
கந்தபுராணம்.

முதல் அங்கம்—முதற்காட்சி.

இடம்:—மதுரைக் கோவில். மீனாட்சி யம்மன் திருமுன்.
காலம்:—முற்பகல்.

நடர்:—மங்கையர்க் கரசியார், குலச்சிறையார், வடநாட்டு மறையவர் முதலியோர்.

மங்கையர்க்கரசியார்;—(தன் தோழிமார்களுடன் கோவில் புக்கதும், அங்கு அமைச்சர் குலச்சிறையாரைக் கண்டு உரையாடல்).

அருட்கல்வி எற்கு அருளிய அமைச்ச! எந்தையே போன்ருய்!

சைவத்திற்கு நற்காலஞ் சார்தலும் உண்டோ? திருநீறு இடுவது கூட, மறைவாய்ச் செய்ய நேர்ந்ததே. நாடெலாம் புகழும் இக்கோவிலுக்கு, நாடோறும் வணங்க வருவாரும் குறைந்ததே. தங்கள் தேறுதல் மொழியால் திருவருள் கூடும் கூடும், என்று இதுவரைப் பொறுத்தேன். என் மனம் வரவரத் தளர்வுறுகின்றது. நம் மன்னர் பெருமானே, வஞ்சம் மிக்க அமணர் வலைப்பட்டார். "கரும்பிருக்க இரும்பை மென்று," "விளக்கிருக்க மின்மினித் தீக்காய்வார்" போலும் வருந்துகின்ருர். என் செய்வது? இன்று ஞாயிற்றுக்கிழமை. மாத சிவராத திரி. இக்கோவிலில் கூட்டமே இல்லையே. அயலூரிலிருந்து வந்தவர் சிலரே, வருதலும் போதலுமாக இருக்கிறது.

குலச்சிறையார்:--(மங்கையர்க் கரசியார்க்கு மறுமொழி கூறல்).

சிவமணங் கமழும் அருளுறை அம்மையே!

"ஊழிற் பெருவலி யாவுள" மனங் கவலற்க. நம் நீண்ட புகழ் மாறனர் சைவம் மாறுவர் விரைவில். நம்பர் அருளும் கூடும். நற்குறிகள் பல கண்டேன். உறுதி உழையிருந்தே கூறிக் கொண்டிருக்கின்றேன். ஒரு சமயத்திலும் பற்றிலாரையும், ஒன்றே பிடித்து, மற்றேதுங் கேளேன், என்ற மனப் பிடிவாத முடையாரையும், நல்வழிப் படுத்த இயலாது. நமது பெருமானர், அவ்விரு திறத்தாரோடுஞ் சேர்ந்தாரில்லை. நடு நிலை திறம்பா வீரர். நிறைந்த கல்வி கேள்வி யுடையர். அன்பிற் சிறந்துளார். காட்சிக் கெளியர். கடுஞ் சொல்ல ரல்லர். அமணர்பால் கொல்லாமை மறைந்தொழுகலே, அறியாது நம்பினர். அறியின், அமணர் பாடு என்னுமோ? நாம் கோவில் வருதல் மறுதிருக்கும் இவ்வொரு செயலே, நமது மன்னர் நன்னீதி யுடையார், என்

பதைத் தெற்றென விளக்க வில்லையா? என்றைக்காவது நம்மை வற்புறுத்திய துண்டா ? அமணர்கள் வெளியிற் செய்யும் அட்டூழியங்களைத் தென்னவர் தெரியார். தெரிவதொரு காலமும் நெருங்கிற்று. அம்மையே, உளக்கவல் விடுக,

இருவரும் உட்சென்று 'மீனாட்சி' யம்மனை வணங்கல்.

ஆதிசைவர் திருநீறு கொண்டு கொடுத்தல்.

பற்பல அயலிடமிருந்து வந்த அடியார்களில் ஒருவர் சிவப் பழமாய், நீறுபூத்த மேனியராய், கண்டி பூண்டு அன்புபொதி உள்ளத்தோடு வரக்கண்டார்கள்.)

முதல் அங்கம் இரண்டாங் காட்சி.

இடம்:—கோவில்.

காலம்:—முற்பகல்.

நடர்:—மேற்குறித்த மூவர் முதலியோர்.

குலச்சிறையார்:—(சைவ மறையவரைப் பார்த்துக் கூறல்.)

சிவப்பொலிவு சிறந்து தோன்றுஞ் சீரிய மறையோய்!

எங்கிருந்து வருகின்றீர் ? எவ்வூர் நும்மது ? நும்பக்கல் புதுமை ஏதேனும் உண்டோ ?

மறையவர்:—

அமைச்சர் பெரும ! வடபுலத்துள்ளேன். மூர்த்தி தலந் தீர்த்தம் போதல் எண்ணி இடந் தொறுஞ் செல்கின்றேன். மூன்றும் கூடிய இங்கு, விருப்பொடு வந்தேன் நேற்றிரவு. இங்கு வந்தது முதல், தூக்கமே இல்லை. மிக்க மனக்கவலை யடைந்தேன். எல்லா நாட்டிற்கும் வழிகாட்டியாய் இருந்த, இந்தத் தனிச் சைவ நாடா, இப்படி மாற நேர்ந்தது. அதிலும் தலைநகரமாய், இறைவனே நேராக அரசு புரிந்த, இந்த மூதூரா, இப்படிக் களைமாற வேண்டும். "பாண்டிநாடே பழம் பதியாகு" மென ஆன்றோர் மொழியுமா, பொய்க்கவும் நேர்ந்தது. நினைக்கும்போதெல்லாம் என் நெஞ்சம் பதைக்கின்றதே. சொல்ல ஒன்றுந் தோன்றவில்லை. நிற்க, மெய்யன்புடைய அமைச்சரேறே எங்கள் வளவனார் திருமகளாரே, ஒன்று கூறுதும். கேட்டதும் உங்கள் மனம் கழிபேருவகை எய்தும் என்பதில் ஐயமில்லை.

"சீகாழியில் சைவ மறையவர் ஒருவருளர். பெயர், சிவபாத விருதயர். சிவனடி மறவா அன்பர். அமணரின் அலக்கண் அகற்ற எண்ணினர். இருள் ஓட்டி அருள் நாட்ட, வலியுடைய பிள்ளை எண்ணி வரங்கிடந்தார். எண்ணியர் திண்ணியராக லின், தோன்றினர் ஒரு செல்வர். ஈராண்டு முடிந்து மூன் ரும் ஆண்டில், தோணியப்பர் அம்மையுடன் விடைமேல் வந்து, நமது தவப் பிள்ளையார் அழுகைமாற்றி, நங்கை பாலினெடு ஞானமுந் திரட்டிச், செம்பொற் குருமணி வள்ளத் தேந்திக் கொடுத்தனர். அப்பிள்ளையாரும் வாங்கி யருந்தினர். உடன் எண்ணிறந்த வேதம் ஆகமம் இவைபற்றி வரும் கலைகள் யாவும் ஓதாது உணர்ந்தனர். யாவருக்குந் தந்தை தாய் எனும் இவர்இப் படி அளித்தா ராவதனல், "ஆளுடைய பிள்ளையாராயினர்". "ஞான சம்பந்தரு" மாயினர். ஞான வாணி நாவினிலுற்ருள். வம் பந்த மறைகளெல்லாம் அருந்தமிழாகக் கூறுகின்றூர். கரும்பில் சக்கை நீக்கிச் சாறடு கட்டிபோலத் தெளிவிலா மறைப் பொரு ளைத் தெள்ளிக் கொடுக்கின்ருர். தேனுண் வண்டுபோல், "கொன்றைவேணியர்" இடந்தொறுஞ் செல்கின்ருர், பசும்பொற் ருளம், சிவிகை, பந்தர், இன்னன அருளினற் கொடுத்து வைத் தார் போலப் பெற்றனர். திருவீழி மிழலையில் வற்கடம் தொலைக் கப் படிக்காசு பெற்ருர். திருமறைக் காட்டில், கோவிற் கதவை, திறந்து அடைக்கப் பாடினர். பரன் உறை பதிதொறும் செல் கின்ருர். இங்கும் வணங்க வரலாம்"

குலச்சிறையார்: — எங்கள் செவிப்புலம் நிரம்ப, ஆரமுதம் போன்ற மொழி கூறிய அன்பரே, இன்றே நாங்கள் உய்ந்தனம்.

மங்கையர்க்கரசியார்:—அமைச்சரை நோக்கி —

அமைச்சரே! நம் நாடு நலனுறும் காலம் நண்ணிற்று. இது பொழுதே, தக்க அறிவுடையரை ஏவி, "ஆளுடைய வள்ள லாரை" அழைக்கச் செய்க.

குலச்சிறையார்:—(சைவ மறையவரைப் பார்த்து)

ஒழுக்கமே உயர்வாய்ப் பெற்ற மேலவ!

எங்கள் வேண்டுகோள் கண்டு, ஒரு குறிப்பு அனுப்புகின் ரேம். கூடுமாயின் தாங்களும் உடன் போக இசையின் நலம்.

## இரண்டாம் அங்கம்—முதற்காட்சி.

இடம்:—திருமறைக் காட்டில் ஞானசம்பந்தர் மடம்.

காலம்:—முற்பகல்.

நடர்:—பாண்டித் தூதுவர், மடத்துக்காவலர், ஞானசம்பந்தர், அடியார்கள்.

பாண்டித்தூதுவர்:—ஞானசம்பந்தர் மடத்துக் காவலரை நோக்கி, ஞானக் காவலாய் அமர்ந்த பெரியீர்,

நாங்கள் பாண்டி மதுரையிலுள்ளோம். அங்கு அமணிருள் சூழ்ந்தது. எங்கள் மன்னரும் அவ்வலைப்பட்டார். அன்னவர் இன்னுயிர்த் துணைவியாம் எங்கள் அன்னை "மங்கையர்க் கரசியாரும்", அன்புடை அமைச்சர் "குலச்சிறையாரும்" சைவப் பயிரை வாடுறாது வளர்த்து வருகின்றனர். அருட்பாலுண்ட "ஆளுடைய பிள்ளையார்" வரலாறு கேட்டனர். உடனே அங்கு அழைத்துவர எம்மை இங்கு ஏவினர். ஞானத்தலைவரிடம் எங்கள் வரவு கூறி, விடைபெற்றுவர வேண்டுகின்றனம்.

காவலர்:—அன்புடையீரே, அமருங்கள் இங்கு. யான் விடை கொண்டு வருகின்றேன். (என்று பிள்ளையார்பால் சென்று அடிவணங்கி நின்று)

சைவ மறை தெரிக்கும் எங்கள் தலைவ!

பழம்பதியான பாண்டி நன்னாடு அமண் வழிப் பட்டதாம். மன்னரும் அதனைப் போற்றவும் நேர்ந்ததாம். இதனைப் பொறாது, நம் வளவர்கோன் மகளார், தென்னர் கொற்றவர் தேவியாரும், குலச்சிறையாரும், ஏவப் பொற்கழல் பணிய வந்தோம், எனச் சிலர் வந்திருக்கின்றார். விடை வேண்டுகின்றனர்.

ஞானசம்பந்தர்:—(அகமலர்ந்து), அழைத்துவாரும் உடனே, (காவலர் தகவுடைத் தூதரை யழைத்துத் திருமுன் கொண்டு விடல். தூதர்கள் செல்லும் போதே, தலையினால் வணங்கி நின்றனர்.)

ஞானசம்பந்தர்:—(தூதுவரை அன்புடன் அமரச் செய்தல்.)
தமிழ் குழகன் தாள் போற்றும் அன்புடையீர்,
சைவப் பயிர் தழைக்க வந்த மங்கையர்க்கரசியார்நலமா?
அன்னவர் தமக்கு மானக் குன்றான 'குலச்சிறையார்' நலமா?

தூதுவர்:—தமிழ் மறை தந்த பெரும,

அமணர்களால் கன்னிநாடு கட்டழிந்தது. இழிந்தது. தங்கள் மன்னரும் அவர்கள் மாயத் தழுந்தினர். மாதேவியாரும், வென்றிக் குலச்சிறையாருங் கூடி, இந்நிலே புகலி வேந்தர்க்கு இயம்பும் என்று இறைஞ்சி விட்டார், இவ்வோலேயும் கொடுத்தனர். (ஓலேயைக் கொடுத்தல்)

ஞானசம்பந்தர்:—தன்னுடன் இடைபருது உறையும் "சம்பந்த சரணுலயரை" நோக்கி, அவ்வோலேச் சுருளே வாங்கிப் படிக்க அருளினர். அவரும் அப்படியே வாங்கிச் சுருள் நீக்கிப் படித்தார்.

சம்பந்த சரணுலயர்:—ஓலே படித்தல். திருச்சிற்றம்பலம்.

"வெங்குரு வேந்தர் அடிபணிந்து, அடியேன், குலச்சிறை விளம்பும், விண்ணப்பம்,

இங்கெழுந்தருளிச் சமணிருள் ஒதுக்கி, எம் இறை மகற்கு நீறளித்துப்,

பொங்கிரும் பணேசூழ் தென்றமிழ் நாட்டைப், பூதி சாதன வழி நிறுத்தி,

எங்களேக் காக்க"—இணேயிலா இன்பே, எங்கள் தவக் கொழுந்தே——

சிவனடியார்கள்:—எங்கள் வாழ் திருவே,

நம்பர் பாதம் நண்ணுத நாணிலமண் குண்டர்தமை, வென்றருளி,

வெண்ணீறு வேந்தனேயும் இடுவித்து, அங்கு நின்ற செயல், சிவனடியார் செயலே யாக, நினேந்தருள வேண்டும்.

## இரண்டாம் அங்கம்—இரண்டாங் காட்சி

இடம்:—திருமறைக் காட்டுக் கோவில் கோபுரவாயில்.

காலம்:—முற்பகல்.

நடர்:—திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், அடியார்கள், தூதுவர்கள், முதலியோர்.

திருஞானசம்பந்தர்:—(அப்பருடன், கோவில் சென்று வணங்கி மீளுங்கால் கோபுரவாயிலில் இருந்து கூறல்.)

அருள் வடிவு இதுவெனக் காணும் அப்பரே,

தமிழ்நாடு சமண் உற்றதாம். "நெடுமாற" மன்னரும் மயங்கி அதன் வழிப் பட்டனராம். அன்பு நிறைந்த குலச்சிறையாரும், அம்மை மங்கையர்க் கரசியாரும் வாட்ட முற்றனராம். நம் வரவு தெரிந்து, மகிழ்ந்து, அழைத்துவரத் தூதுவர் அனுப்பினர். போதல் துணிந்தேன்.

திருநாவுக்கரசர்:—அம்மம்ம! சமணர் சூழ்ச்சி சண்டாளம் (துரோகம்) அன்றோ! பெருந்தன்மை சிறிதும் பேணுதலின்று. தன்னூலளவன்றி மேலது கொள்ளார். முறட்டுக் குணமே மலிந்து தோன்றும். பிள்ளைமைப் பருவம் உன்னூர் அன்னூர். கண்ணோட்டம் என்பதைக் காணலரிது. கொண்டது விடாக் கொடிறு போல்வர். பேதையர் வழியே மன்னரும் உற்றூர், எம் சைவ நன்மணியே, நீர் போதற்கு என் மனம் இசைகின்றதில்லை.

திருஞானசம்பந்தர்:—சைவ மெய்யன்பரே,

"திணிந்த அமணிருள் சூழ்ந்த அவ்விடை, எல்லையிலா நீறு போற்றும் இருவரையுங் காணுங் கருத்துடையேன். அங்கு நான் சென்று திங்கு புரி யமணர் நிலை யழிவித்துச், சைவநெறி பாரித்தன்றி, ஒன்றுஞ் செய்யேன். ஆணையுமது,"

திருநாவுக்கரசர்:—அன்பமர் பிள்ளாய்,

போமாறு துணிதல் தகாது. அவ்வமணர் கொடுஞ்செயல் செய்ய அஞ்சார். அவர்களோடு பன்னாட் பழகி, குருவாய் உற்ற என்னைப் படுத்திய பாடு எண்ணவும் படுமோ. நஞ்சிட்டும், நீற்றினில் புகுத்தும், யானையால் இடரச் செய்தும், அருள்நிலை யறியாது, பின்னும், கல்லொடு பிணித்துக் கடலிடை யாழ்த்தியவரன்றோ? காலம் பார்த்தன்றோ செல்லுதல் வேண்டும். இப்போதுள்ள கோள்களும் தீயன. ஆதலால், நீர் போதல் ஒண்ணாது. யானே போய், அவ்வமணர் தீ மாயையினைச் சிதைத்து வருகின்றேன். (என்று எழுந்தார்.)

திருஞானசம்பந்தர்:—சிவப் பழ அப்பரே,

நாம் இடையருது பரசுவது நம்பெருமான் கழல்கள் என்ருல் பழுதணையாது.

திருச்சிற்றம்பலம்

“வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்து என்னுளமே புகுந்த வதனுல்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனிபாம்பு மிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே.”

(சம்பந்தர்.)

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசர்:—சிரபுரச் செல்வரே,

நன்றருளிச் செய்தீர். யானும் உடன்வருகின்றேன்.

(என்று எழுந்தார்.)

திருஞானசம்பந்தர்:—அப்பர் பெரும,

(கைகுவித்து) நீர் இப்புனல் நாட்டில் எழுந்தருளி யிருப்பீர். யானே போய்மீள்வல்.

திருநாவுக்கரசர்:—திருவருள் இதுவாயின் அப்படியே யாகுக. வேதம் வளர்க்கவும், சைவம் விளக்குதற்கும் சென்று மீள்க. வேதவனத் தருமணியை மீண்டும் புக்கு வணங்கிப் போவோம்.

இருவரும் மீண்டும் கோவில் புக்குப் பாதமுறப் பணிந்து எழுந்தார், பாடினுர், போற்றினுர், பரசியருள் பெற்று விடை கொண்டு வெளிவந்தார். இருவருந் தழுவினுர்.

திருஞான சம்பந்தர்:—எம் அப்பரே,

உம்மை விட்டுப் பிரிய மன மில்லேன். ஒன்ருய்ப் போகலாம். ஆனுல் உம்மைக் கண்டால், அந்த அமணர்களுக்கு வெகுளி தோன்றிக் கேடு விளைப்பார்கள் என்று எண்ணுகிறேன். நான் தனித்துச்சென்ருல், திருவருளை வியந்து நல்வழிப்படவுங் கூடும். எவ்வாருயினும் நம் நோக்கமும் அது தானே.

திருநாவுக்கரசர்:—மறுத்தற் கிடனின்றிப் பேசாது நின்ருர்.

திருஞான சம்பந்தர் அருமையாய் நீங்கிக் கதிர்ச்சிவிகை மருங்கணைந்தார். ஒரு நாமத்தெழுத் தஞ்சும்ஓதி, அடியார் போற்றச்சிவிகை ஏறிப் புறப்பட்டார்.

இரண்டாம்அங்கம்---மூன்றாங்காட்சி

அடியார்களுள் ஒருவர்:—மற்றொருவரை நோக்கி,

அன்பரே, இன்று நான் பெற்ற இன்பத்திற் கோரளவில்லை, நமது "அருள் ஞானக்கன்றும், அன்புசெறி கடலும், எனப் போற்றத்தகுந்த, திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும், ஒருவரோடொருவர் கூடிக்கலந்ததும், பிரியாமனதுடன், விடை பெற்றதும், எண்ணுந்தோறும், எந்நெஞ்சம் நெக்குறுகின்றது. என்ன அருமை! பார்த்தீரா! நமது பிள்ளையார், போவேனென்று எழுந்ததும், நமது அப்பர், எவ்வளவு ஆத்திரத்துடன், பதறிக் குழறித்தடுத்தார், தாமே போவேனென்றுங் கூறினர்.

மற்றவர்:—அதற்கென்ன தடை, யாவரேயாயினும் இவர்களிருவரும் நடந்து கொண்டதைப் பார்த்தால் மனம் நெகிழாதிருப்பார்களா. இதுபற்றியன்றோ,

"சம்பந்தர் நாவரசுபாற் கண்டோஞ் சார்ந்துவப்ப
தும்பிரிவி லுள்ளுவதுஞ் சோமேசா—"

என்றார் பெரியார். நமது அப்பர் பெருமானுக்கு, பிள்ளையார்க்குத் திருவருளினாலே துன்பநுகர்ச்சியாதும் நிகழாதென்பது தெரியாதென்பதல்ல. பிள்ளையார்மேல் மிகுந்த காதல் உடையவராதலால், இடையூற்றின் தோற்றமும் அவர்க்குக் கூடாதென்பது தான் அவர் கருத்து.

மூன்றாம் அங்கம்—முதற்காட்சி.

இடம்:—மதுரை அரண்மனையில் ஒரு சார்.
காலம்:—முற்பகல்.
நடர்:—மங்கையர்க்கரசியார் தோழிமார்களுடன், தூதுவர்கள், குலச்சிறையார், முதலியோர்.

தூதுவர்:—(மங்கையர்க் கரசியாரை வணங்கி முன்னின்று,)
எங்கள் தவமாய் இங்கமர் அம்மையே,

சைவ வான் பயிரைத் திருமறைக் காட்டில் கண்டு இறைஞ்சினம். நம் வேண்டுகோட் கிணங்கி உடனே வருகின்றனர். நாளைக் காலை இவண் உறுவர். நாங்கள் தகவற் கூற முன் வந்தோம்.

மங்கையர்க் கரசியார்:—இன்று நான் பெற்ற இன்பமே இன்பம்.

(குலச்சிறையாரும் அது பொழுது அங்கு வந்து வணங்கல்) நோக்கி, எங்கள் குலவிளக்காய அமைச்சரே.

நங்கள் தம்பிரானர் நண்ணினர். ஞான போனகர் முன் பெய்தி,

"எழுந்தருள உய்ந்தோமெ"ன எதிர் கொள்ளும்.

குலச்சிறையார்:—எம் அம்மையே,

அப்படியே சென்று எதிரேற்று வருகின்றேன்.

மூன்றும் அங்கம்—இரண்டாங் காட்சி.

இடம்:—மதுரை அரண்மனை.

காலம்:—பிற்பகல்.

நடர்:—எண் குன்றம் வாழ் அமண் குருக்கண்மார், கூன் பாண்டியன்.

கூன்பாண்டியன்:—குருக்கண்மார் கூடிவந்ததும் வணங்கி, அடிகண்மீர், புகுந்த புதுமை யாது?

அடிகண்மார்:....மன்னே, தீய கனவு கண்டோம். செப்புதற்குற்றேம்.

அரசன்:—கனவின் திறமென்னை?

அடிகண்மார்:—அரசே,

நங்தேவர், இருந்த அசோகு மரம், வேரோடு சாய்ந்து, அவர்மேலே விழக் கண்டோம். அதன்பின், அழகிய முக்குடையோடு தாம் எழுந்து கை உதறிப் போகவுங் கண்டோம். ஊராரும் ஓடக் கண்டனம். நம் (குரு பத்தினியாகிய) குரத்தி கையிலுள்ள குண்டிகையை உடைத்து, கொண்ட பாயினைக் கிழித்து ஓடவுங் கண்டோம். நமது பண்டிதர்களெல்லாம் கழுதைமே

லேறிப் போகவும், அவர்கள் பாலுற்ற "கலைமகள்" புலம்பி யோடவுங் கண்டோம். கானிடை நட்ட மாடுங், கண்ணுதற் றொண்டரெல்லாம், இங்கு விரவிடக் கண்டோம். நீரும், வெய்ய கொழுந்தழல் முழுகக் கண்டோம். ஆனபின் எழவுங் கண்டோம். மழவிடை இளங்கன்றொன்று வரக் கண்டோம். நம் கழகந்தன்னை உழறிச் சிதறி யோடச் செய்யவுங் கண்டோம். நம்மவர் யாரும் தடுக்க அஞ்சி, விழவொரு புகலுமின்றி, நிழலிலா மரங்களேறி நின்றிடவுங் கண்டோம். இக்கனாத் திறம் அடிகண் மார்க்குத் திங்கு விளைப்பது திடமே.

(என் செய்வது என்று யாவரும் இடருழந்தனர்).

மூன்றும் அங்கம்—மூன்றுங் காட்சி.

இடம்:—மதுரையின் வெளிப்புறம்.
காலம்:—விடியற் காலம்.
நடர்:—குலச்சிறையார், திருஞானசம்பந்தர், அடியார்கள், முதலியோர்.

குலச்சிறையார் ஊரின் வெளிப்புறம் போந்து, ஞானசம்பந்தர் திருச்சின்னம் ஊதும் ஓசை கேட்டு உளமகிழ்ந்து, எதிரணைந்து, தலைக் கை குவித்து, நிலமுறப் பணிந்து வணங்கிக் கிடந்தனர்.

சிவனடியார்கள்:—(வணங்கிக் கிடக்கும் "குலச்சிறையாரை" இவரெனத் தெரிந்து எதிர் வணங்கி,) அன்பரே, எழும், எழும், என்றனர்.

உடனே ஞானசம்பந்தர்பால் சென்று

சைவ மணி விளக்கே,

குலச்சிறையாருற்றார், வணங்கினர் கிடந்தார். பன்முறை வேண்டியும் எழாது, கண்ணீர் பெருக்கி, அன்புறுகின்றார்.

திருஞானசம்பந்தர்:—முகமலர்ந்து, சிவிகை யிழிந்து, விரைந்து சென்று, தமதிருகரத்தால் எடுத்தார். குலச்சிறையாரும் தொழுது முன்னின்றார், வள்ளலார் அவரையே நோக்கி, வாக்களிக்கின்றார்.

"செம்பியர் பெருமான் குலமகளார்க்கும், திருந்திய சிந்தையீர் ! உமக்கும்,

நம்பெருமான் திருவருள்பெருகும். நன்மைதான் வாலிதே,

குலச்சிறையார்:—எங்கள் வாழ்வே,

எங்கட்கு இனி என்குறையுளது? சென்ற காலமும் பழுதின்று. இனி, எதிர் காலமோ சிறந்தது. இங்கு எழுந்தருளப்பெற்றேம்; இதனுல் எற்றைக்கும் திருவருள் உடையோம். நன்றியில் நெறியில், அழுந்திய நாடு, உய்ந்தது. தமிழும் மேன்மையுற்றது. வேந்தரும் உய்ந்தார். திருநீற்றொளி விளங்கும் மேன்மையும் படைத்தனம். (தொடரும்).

---

# புஷ்பங்களும் அவற்றின் தொழிலும்

[Puof : P. சுந்தரம்பிள்ளை யவர்கள், M. A.]

(௧௨௪-ம் பக்கத் தொடர்ச்சி)

7. நாம் பரிசோதித்தறிந்த மகரந்தக் காம்புகளையும் இனி மெல்லெனக்கிள்ளி யெறிந்து விட்டு, இவற்றிற்கும் அப்புறம் மலருடைய நடுப்பக்கத்திலிருப்பது என்னவென்று பாருங்கள். கோபுரத்தின்மேல் வைக்கிற ஸ்தூபிகலசம் போலவும் நாம் வீட்டிற் பரிமாறும் பனிநீர்ச்செம்பு போலவும் வடிவுடையதாய், அடியும் தலையும் பெருத்து இடைசுருங்கித் தண்டாகாரமாக நீண்ட ஒரு உறுப்பு பூவின் நேர்நடுவில் நிற்பது தெரிகிறதா? அடியில் பெருத்து உருண்டு திரண்டிருக்கிறதைப் பத்திரமாய்க் கவனித்துத் துண்டித்துப்பார்த்தால், நாரகக்காயினுள் இருப்பதுபோலவே சிறுசிறு அறைகளும் அவ்வறைகளுக்குள் சிறுசிறு விதைகளும் அதிசூக்குமமாக இருப்பது வெளிப்படும். உண்மையில் இதுவே நாரகக்காயாகக் காலக்கிரமத்தில் உருக்கொண்டு பெருக்கின்றது. இங்ஙனம் மேற்காயாகப் பாவித்தற்குரிய இப்பூவுறுப்பிற்குப் பொகுட்டு* அல்லது

---

* "பொகுட்டுத் தாமரைப் பூங்கொட்டை" என நிகண்டுள் சிறப்புப்பெயராகக் காணப்படினும் "பொகுட்டே கன்னிகை பூவினுட்கொட்டை" எனப் பொதுப்படக் கூறுவர் பூர்வாசாரியாராகிய சேந்தனார்.

பூங்கோட்டை- பூம்பிஞ்சு (ovary) என்று பெயர்: அப்பூங் கொட்டைக் குள்ளிருக்கும் சூக்குமவிதைகளுக் குக் கோர்ப்பகோளம் (ovule) என்று சொல் லுவார்கள். வாஸ்தவத்தில் இக்கொர்ப்பகோளங் கள் ஒவ்வொன்றும் வீரியமடைந்து பலி தப்பட்டுப் பெருத்துவருவதே பிற்கிளையாக் கத்திற்குப்பிரத்தியக்ஷ ஏதுவாக விளங்கும் 'விதை விதை' யென்று சொல்லப்படுவது. "அப்படியா னல் இச்சிறுவிதை ரூபமாக இருக்கிற கொர்ப்ப கோளங்கள் மாத்திரம் போதாவோ? நாம் பார் த்த மகரந்த பஞ்சரம் ஏன்? மகரந்தத்தூள் ஏன்?' என்னில், இதோ பாருங்கள்! இக்கிளையில் ஒரு கொர்ப்பகோளமாகிய சிறு காயிருக்கிறது! வாடி யுலர்ந்துஉதிரும் தன்மையில்அன்றோ அதன் நிலை! அதற்குச் சமீபத்தில் உள்ள இலையை ஒரு புழு அரித்திருக்கிறது பார்த்தீர்களா? புஷ்பத் தில் இருந்த மகரந்தக்காம்புகளையும் மொட்டாக




'போதுட்டு அல்லது பூம்பிஞ்சு.
1. மகரந்தவாகினி
2. கொர்ப்பகோளம்

இருக்கும்போது அப்புழு அரித்து உண்டிருக்கவேண்டும் என் பது புறவிதழில் தோற்றுகிற தழும்பால் ஊகிக்கலாமல்லவா? அவ்விதமாக மகரந்த பஞ்சரங்களுக்கு ஏதோ கெடுதி நேரிட்ட தினல் தான் இக்கொர்ப்ப கோளப்பையாகிய போதுட்டு, இப்படி பலிதப்படாமல் வாடி யுலர்ந்து நிற்கிறது. பரீக்ஷை வழியாக இதனை நிரூபிக்கவேண்டுமானல் ஏதாவது அலர்ந்துவரும் ஒரு புஷ்பத்தில் உள்ள மகரந்தபஞ்சரங்களைக் கொய்து எறிந்து விடுங்கள். பிற்பாடு அப்புஷ்பத்தில் இருக்கும் சிறுகாய் இது போல உலர்ந்து உதிர்ந்து போகிறதில்லையா வென்று பாருங் கள்! பஞ்சரங்களுக்குள்ளிருக்கும் மகரந்தத் தூளைத்துடைத்து அலம்பி விட்டாலும் சிறுகாயின்கதி முற்கூறியவாறே, யாகும், மழை நன்ருய்ப்பெய்து கொண்டிருக்குங்கால் புஷ்பிக்கும் புஷ் பங்கள் எல்லாம் பலிதப்படாமல் போவதற்கும் காரணம் இது தான். இந்திரியாவயங்களால் கொர்ப்பகோளங்களான சிறு விதை மாத்திரம் தாமே காயாவதற்கு வலிமையுடையவையல்ல வென்

பது சந்தேகமறத் துணியலாமல்லவா? இனியும் நமக்கு அகப் படும் சந்தர்ப்பங்களில் அதனை நிரூபிப்போம். கெர்ப்பகோள மாத்திரத்தால் காயாவது கூடுவதன்று என்பதில் யார்க்கும் ஐயம் வேண்டுவதில்லை. அங்ஙனம் பலிதமாவது மற்றெப்படி யென்னில் நாம் முற்கூறிய மகரந்த ரேணுக்களில் இருக்கும் விந்துதத்துவம் இச்சிறு பிஞ்சுக்குள் வந்து கலத்தல் வேண்டும்.

8. அங்ஙனம் விந்து தத்துவம் வந்து கலத்தற்காகவே, நாம் கெர்ப்பகோளம் என்று பெயரிட்ட சிறு பிஞ்சின் தலை மேல் இக்காம்பு இருக்கிறது. இதன் நுனிபருத்து விரிந்திருப் பது தெரிகிறதா? தொட்டுப்பாருங்கள்? வழுவழுப்பான ஒரு விதமான பசை கையிற் படுகிறதல்லவா? கூர்மையாகப் பார்த் தால் இந்நுனியின் மேல் சிறுசிறு புள்ளிகள் சற்றே வெண்மை யாகத் தோற்றலாம். இப்படிப் பிஞ்சுக்காயின் மேலிருக்கும் காம் பிற்குமகரந்தவாகினி (Pistil) என்று பெயர். அதன் வழு வழுப்பான நுனிக்கு மகரந்தவாகினித்தலை (stigma) யென்று சொல்லலாம். மகரந்தவாகினித் தலைக்கும் பிஞ்சுக்காய்க்கும் இடையே சிறுத்துத் தோற்றும் உடல்தான் மகரந்தவாகினிக் காம்பு (style). ஆனால் இவ்வுடல் நாரகமலரில் காணப்படுவது போல் மற்றெல்லாமலரிலும் இருக்கவேண்டுமென்பதும் நியமம் அன்று. ஒவ்வொரு புஷ்பங்களில் ஒவ்வொரு விதமாக இருக்கும். அந்தக்கிரமங்களை அங்கங்கு சோதிக்கும்போது அறிந்து கொள் ளலாம். நாம் இப்போது கவனிக்க வேண்டுவது மகரந்த விந்து, பிஞ்சாகிய கெர்ப்ப கோளத்துக்குள் எவ்விதம் பிரவே சிக்கிறது என்பதே.

9. புஷ்பம் அலரும் பொழுதே மகரந்த பஞ்சரம் வெடிக் கிறது என்று சொன்னோமல்லவா? வெடிக்கவே அதனுள்ளிருக் கும் மகரந்தத்தூள் நாலுபாரிசத்திலும் சிதறுண்டு விழுகின்றது. அந்த ரேணுக்களில் சில, மகரந்தவாகினியின் வழுவழுப்பான சிரசிலும் விழும். விழுந்தவைகளோ அத்தலை வழுவழுப்பாக இருப்பதினால் அங்கே ஒட்டிக்கொள்ளுகின்றன. உடனே அவ் விரேணுக்களுக்குள்ளிருக்கும் விந்து தத்துவம் வெளிப்படுகின் றது. அது கண்ணுக்குப் புலப்படத்தக்கதன்று. சிற்றுரு

விளக்கியால் பார்த்தால் மிகவும் நுண்மையான நூல்போலும் வடிவினையுடையதாய், தானே சலிக்கும் வல்லமையோடு கூடிய மூலசத்தையின் அதிக விசேஷமான விகற்பமாக விளங்கும். அதின் குணாதிசயங்களைப் பற்றிப் பிற்பாடு சிந்திப்போம். இந் நூல் போன்ற விந்து தத்துவம் மகரந்தவாகினியின் சிரசி லிருந்து அங்கே நாம் சற்றுமுன் குறிப்பிட்ட வெண்மையான சிறுபுள்ளிகளில் அடைகின்றது. இப்புள்ளிகளோ, சிறு பிஞ்சு முதல் மகரந்த வாகினிக்காம்பை யூடுருவிக்கொண்டு அதின் தலை நுனிவரையும் வந்திருக்கின்ற அதிநுட்பமானகுழல் களின் கடைசி வெளிகளாகும். இதோ இக்காம்பை யறுத்து நன்றாய்க் கவனித்துப்பாருங்கள்! குழல்களின் சாயை தெரிகிற தல்லவா? நல்லது! இக்குழல்கள் வழியாகத்தான் மகரந்த வாகினியின் தலையில் தங்கிய விந்து தத்துவமானது மெள்ள மெள்ளப் புகுந்து முடிவில் பிஞ்சாகிய பொகுட்டுக்குள் சென்று சேருகிறது. அவ்விடத்திலோ சிறுவிதை ரூபமான கெர்ப்ப கோளங்கள் இருக்கின்றனவே. படிப்படியாய்ப் ப்ரவி முடிவில் இச்சிறு விதைகளுக்குள் புகுந்து அவற்றின் சத்தையோடு கலக்க அவை வீரிய மடைந்து பலிதமாகின்றன. கெர்ப்ப கோளத்துக் குள்ளிருக்கும் சத்தைக்கு நாததத்துவம் என்று நம்மவர்கள் சொல்லுவார்கள். மகரந்த ரேணுக்களின் உள் ளிருக்கும் விந்து தத்துவத்தை வகித்து இங்ஙனம் பிஞ்சினுள் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும் தன்மைபற்றியே அப்பிஞ்சின் மேலிருக்கும் உறுப்பிற்கு மகரந்தவிந்துவாகினி அல்லது சுருக் கத்தில் மகரந்தவாகினி, விந்துவாகினி யென்னும் பெயர்கள் உண்டாயிருக்கின்றன. ஆகவே இந்நாரக (நாரத்தை) மலரின் முக்கிய அங்கங்கள் மகரந்த பஞ்சரத்துள் வீற்றிருக்கும் ரேணுக் களின் விந்துவும் பொகுட்டென்று நாம் கூறிய சிறு பிஞ்சினுள் காத்திருக்கும் சிறுவிதை ரூபமான கெர்ப்பகோளங்களுமேயாம். இவை யிரண்டையும் கலப்பிக்கும் மார்க்கமாகிய விந்து வாகினி யும் முக்கிய அங்கங்களுள் ஒன்றாகவே கூறலாகும்.

10. இதுவே நாரகமலர் காயாகும் கிரமம். காயானபின்

முதிர்ந்து பழமாய் அதிலுள்ள விதைகள், சரியான காலதேச பக்குவங்கள் இருக்குமாயின், அவைகளை யீன்ற மரம் போன்ற வேறு மரங்களைத் தாய் மரத்தின் பிற்கிளைகளாக உற்பத்தி செய்ய வல்லமையுடையன என்பது யாவரும் அறிந்த விஷயம்.

11. நாம் இப்போது பார்த்து அறிந்துகொண்ட சங்கதிகளால் மரவருக்கத்தின் பிரத்தி யுத்பாதனம் என்னும் பெருந்தொழில் நடந்தேறுவதற்கு முக்கியமானது, மகரந்த ரேணுக்களிலுள்ள விந்து தத்துவம், பொகுட்டு, பூங் கொட்டை, அல்லது பூம்பிஞ்சு என்று சொல்லப் பட்டதின் உள்ளிருக்கும் சிறு விதை ரூபமான கெர்ப்பகோளத்தோடு கலக்கவேண்டியதொன்றே யென முடிகிறது. இதன் பொருட்டே மரங்கள் பூப்பது பூவிலுள்ள உறுப்புக்கள் ஒவ்வொன்றினுத்தேசமும் அவை ஒவ்வொன்றும் ஒவ்வொருவகை மலரில் எடுத்துக்கொள்ளும் வேவ்வேறான எண்ணற்றவடிவம், ஒழுங்கு, குணம் முதலியவற்றின் குறிப்பும் இதுவே. “காக்கை யிருந்தது பனம்பழம் விழுந்தது” என்றபடி மகரந்த பஞ்சரத்துள்ளிருக்கும் ரேணுக்கள் விந்துவாகினியின் உச்சியில் தக்க பருவத்தில் உதிரவேண்டியதாக இருப்பதினால், இத்தொழில் நன்கு முடியுமாறு ஒவ்வொரு புஷ்பவருக்கத்திலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் அனந்த கோடி உபாயங்கள் அத்தியந்தம் ஆச்சரிய தமமானவை. நாம் சோதித்த நாரக மரத்தில் மகரந்த பஞ்சரங்களும் விந்து வாகினியும் ஒரே மலரிலல்லவோ இருந்தன. அப்படியே எல்லாமலரினும் இருப்பன அல்ல. இதோ படரும் பூசனியில் பூக்கும் பூவெல்லாம் காயாகிறதில்லையே. காயாகும் பூ சிறுகாயென்னும் பொகுட்டோடு வேறே இதோ தோற்றுகின்றன பாருங்கள். இப்பூவில் ஒன்றைப் பரிசோதிக்கில் விந்து வாகினியே யல்லாமல் மகரந்த பஞ்சரம் ஒன்றும் காணமாட்டாது. வெளியில் சுற்றிய புறவிதழ் ஐந்தும் ஒன்றுபட வனையப்பட்டுக்குவிந்த கிண்ணம்போல் ஒன்றாக இருப்பது நாம் இப்போது கவனிக்க வேண்டிய சங்கதியன்று. உள்ளே மகரந்த பஞ்சரம் இல்லாமை, நாம் கூறிய விதிக்கு விரோதமாகத் தோற்றுவதே விசேஷம்.

ஆனால் மற்றுக் காயாயாகாத பூவில் ஒன்றைப் பாருங்கள்! அதில் மகரந்தக் காம்புகளனைத்தும் ஒன்றுபட நார்பின்னுவது போல் பின்னப்பட்டு ஒரே காம்பாக நிற்பதும், அது நிறைய மகரந்த ரேணுக்கள் பொதிந்து நின்று உதிர்ந்து விழுவதும் கண்டீர்களா! இங்ஙனம் ஒரு பூவிலுள்ள மகரந்த ரேணுமற்றொரு பூவிலுள்ள விந்து வாகினியைச் சென்றடைய அன்றோ வேண்டியதாக இருக்கிறது. இது மாத்திரம் அன்று, மகரந்த முடையது ஒரு பூவும், காயாக வேண்டுவது வேறொரு பூவும் ஆக இருப்பினும் இரண்டு பூவும் ஒரே பூசனிக்கொடியில் தானேயிருக்கின்றன. சில மரவர்க்கங்களில் அப்படியேனும் இல்லாமல், ஒரு மரத்தில் மகரந்த மலரும் மற்றொரு மரத்தில் விந்து வாகினிமலரும் இருந்து காயாக வேண்டிய நிர்ப்பந்தமும் உண்டு. இதோ இச்சவுக்குமரம் (casuarina muricata) காயாது நிற்பது கண்டீர்களா. அதோ நிற்பதில் நிறையக்காயிருப்பது பார்மின். முன்னது மகரந்தம் மாத்திரமே யுடையது. அது ஒரு போதும் காயாது. பின்னதில் கெர்ப்ப கோளங்கள் மாத்திரமே யுண்டு. அம்மரமே மற்றதின் மகரந்த ரேணுக்களின் சேர்க்கையால் காய்க்கக் கூடியது. இவ்வேற்றுமையால் தான் ஒன்றை ஆண் மரமென்றும் மற்றதைப் பெண்மரமென்றும் நம்மவர்களில் சிலர் கூறுகின்றனர். அறிந்துசொல்லினும் அறியாது சொல்லினும் உண்மை அதுவே. இத்தகைய காகதாலீயப்புணர்ச்சிக்கு நேரிடத்தக்க பிரதிபந்தங்களை விலக்கிச் சுலபப்படுத்தும் பொருட்டுச் செய்திருக்கும் ஏற்பாடுகளைக் குறித்துச் சிந்திக்கில் எவ்வளவு காலம் யோசிக்கினும் தெவிட்டாத சித்சுகத்தை விளைவிக்கத் தக்கனவாக இருக்கும். அவற்றுள் வண்டு தேனீ முதலியவற்றின் நல்வரவும் காற்றின் சஞ்சாரமுமே பிரதான ஹேது பூதங்களாக இருக்கின்றன என்று மாத்திரம் இவ்விடத்தில் தெரிவிக்கக் கூடியதீ. இவற்றுள் மதுகரங்கள் ஜீவஜாலத்துள் அகப்பட்ட படியால், அவைகள் செய்யும் தொழிலுக்குப் பிரதி பிரயோசனமாக விருந்தளிக்கவே தேன்துளிகள் புஷ்பங்களுக்குள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. வண்டுக்கூட்டம் மலரிருக்கும் இடம் தெரிந்து வரும்படி வைத்தவையாம்

மலர்களின் புறவிதழில் நாம் கண்டு மகிழும் பல்வேறு நிறங்களும், நாம் கொண்டாடும் நறுமணங்களும், இவைகளைப்பற்றி ஒவ்வொரு புஷ்ப விகற்பங்களையும் சோதனை செய்யும் தருணத்தில் சொல்வதே உசிதம், இப்போது வெயிலால் விட்டபடியாலும் உங்களில் சிலருக்குப் பசியும் ஒருபுறம் தபிக்கத் தலைப்பட்டிருக்கக் கூடியதினாலும் இன்று இவ்வளவோடு முடித்து வீட்டுக்குத் திரும்புவோம். இவ்வளவும் வீண் பொழுதாயினதே யென்று நினையாதேயுங்கள்! பசிப்பதும் பசிதீர்ப்பதும் என்று தான் இல்லை. "செவிக்குணவில்லாத போழ்து" அன்றோ "சிறிது வயிற்றிற்கு மீயப்படும்" என்றார் நாயனார், "தீராத குழி தீர்க்கை தொழிலாக"க் கொண்ட நம் முயற்சியின் நிலைமை பற்றியன்றோ "யோசிக்கும் வேளையிற் பசி தீர வுண்பதும் உறங்குவதுமாக முடியும்," என்றருளினர் பிரமானுபூதிச் செல்வராகிய தாயுமானவர். அங்ஙனம், பொழுது விடிந்து கண் துடைத்து எழுந்தது முதல் இரவில் கொட்டாவி விட்டுக் கண் மயங்கிச் சோரும் வரையும் 'எனக்கு எனக்கு' என்று ஓயாது தன்னயமே கருதி, ஒரு கணப்பொழுதேனும் உள்ளும் புறமும் ததும்பி விளங்கும் சித் விலாசத்தை யெட்டிப்பாராமல், வாணியன் வீட்டுச் செக்கெருதுபோலச் சென்றவழியே சென்று சுற்றிச் சுற்றி யுழைத்து நமது அரிய வாழ்நாள் முழுதும் கழித்து விட்டால், விவேக சூந்யமான மிருகங்களுக்கும் நமக்கும் வேற்றுமை யென்னும்? ஐயோ!

" செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்."

—விவேக சிந்தாமணி

---

ஆ. திரு. இராமலிங்கம் பிள்ளையவர்கள் இயற்றிய

# திருச் செந்தூர்த் தண்டக மாலை.

காப்பு

சீர்மலிசெந் தூர்வளருந் தேவானை வள்ளியுட
னேர்மலிவே லேந்திமயி லேறிவரு—மோர்முருகன்
தண்டா மரைப்பதத்திற் றண்டகத்தார் சாற்றவெனக்
குண்டாங்கை நாகத் துவப்பு.

நூல்

பூவி லயன்மால் புரந்தரன்மற் றும்பரெலாஞ்
சேவிக்கச் செந்தூரிற் சேர்முருகா !—ஆவிதனக்
குற்ற துணையா முனையடைத லன்றேயான்
பெற்ற பிறப்படையும் பேறு. 1

பெண்க டனமும் பிறங்குமவர் பேரெழிலுங்
கண்கவர விட்டுக் கரந்தனையோ!—தண்கமலம்
பற்றாதே பாவி பரதவிக்க யாரெனக்குச்
சொற்றாரோ செந்தூரா சூள். 2

பாடில் படித்துனக்குப் பத்திசெயும் வேளையினு
மோடித் திரிந்துமைய லுற்றதே—பேடிமனங்
கட்டார்செந் தூர்வளருங் கந்தாவுன் சேவடியைக்
கிட்டாரென் செய்வேன் கிளத்து. 3

பத்திசெயும் போதேனும் பண்பொடுசும் மாவிரென
வெத்தனையோ புத்தி யிசைத்தாலும்—பித்தமனந்
தான்போன போக்கேதான் சாதித்தாற் செந்தூரா!
நான்போக லெப்போ நவில். 4

உண்மையறி வாள ரொதுங்கியிருந் தானந்தங்
கண்பொழிய நின்றே கருதுவார்—பண்பொழியுஞ்
சிந்தையனேன் மெத்த தெரிந்தவர்போற் செந்தூரா!
முந்துகிறே னேதோ மொழிந்து. 5

உண்டுறங்கும் போது முனேநினைய வல்லாரே
கண்டுருகிச் சேருங் கருத்துடையார்—வண்டளேயுங்
கூந்தலார் சிந்தனேயே கொண்டலேவேன் செந்தூரா!
நீந்தலுண்டோ பாவ நிகழ்த்து. 6

ஒருகாலத் தேனுமுனக் குள்ளன்பு மிக்க
பெருகாத ரத்தோடு பேணி—முருகாகர்
தாவென்ருற் செந்தூரா தாராயோ வுன்னடியைப்
பாவென்ருல் வாராயோ பார்த்து. 7

வன்னியே கேதனமாய் வாசவனே வாகனமாய்ச்
சென்னியா ருய்த்திகழுஞ் செந்தூரா—வுன்னியுனேப்
பத்தி வலேயாலே பந்திப்பான் றந்தருளாய்
சித்தி யடையுந் திறம். 8

அறப்பகையோ டெற்பகையு மாளரிமுன் பின்னு
மிறப்பகைவே ருங்குசெந்தூ ரீசா!—விறப்ப
வரினுமுன் பாத மறப்பனேு துன்பு
தரினுஞ்சேய் நீங்குமோ தாய். 9

நாயேனே யாண்டருளு நாயகனே செந்தூரிற்
ருயானு யெல்லோர்க்குந் தற்பரனே!—யோயாமற்
பன்னிருதோ ளாறுமுகம் பச்சைமயில் வேலுடனே
யென்னிருகண் முன்வா வெழுந்து. 10

நாவாரப் பாடிநித நாயகனே செந்தூரா!
பூவாருன் சேவடிக்கே போதிடுவேன்—காவாரும்
வானுட் டரசு மதிப்பனேு நின்னருளிற்
ருனுட்டம் வைத்தபின்னுந் தான். 11

தனக்குவமை யில்லாதான் ருனெவையு மானுன்
றனக்குமுப தேசிக்குஞ் சாமி!—எனக்கருளு
நற்றவனே! சீரலேவாய் நாயகமே! யுன்னடியே
பற்றெனயான் கொண்டேன் பரிந்து. 12

பரிந்துபல நூல்கள் பயின்றுமலை தோறுந்
திரிந்துபல னெய்திலருஞ் செந்தூர்—பொருந்தியே
கந்தாவுன் பாதங் கருதுவரேல் முத்தியுடன்
றந்தாள்வா யென்பார்நீ தான். 13

தான்மறைக ளோதுஞ் சமர்த்தனெனத் தற்புகழு
நான்முகனை வன்சிறையி னூட்டியவா!—தேன்வழியுஞ்
சந்தவரைச் சண்முகனே சந்ததமு முன்னருளே
சொந்தமெனக் கென்றேன் துணிந்து. 14

துணிந்தசில வோடறுகு தூயகொன்றை சென்னிக்
கணிந்தசிவ னார்மகனே யன்பாற்—பணிந்தவிணோர்
துன்பந் துடைத்தசெந்திற் றாயோனே துன்பமுட
னின்பந் துடைத்தெனையா ளீண்டு. 15

ஈண்டுபொரு ளுண்முழுது மீட்டுவதிற் றுன்கழித்தா
லாண்டுலகுக் கேதுபய னுக்குவேன்?—வேண்டுபொரு
ளத்தனையுஞ் சிரலைவா யாறுமுகா நீயருள
வித்தனைபா டெற்கே னியம்பு 16

இயம்புமறை நான்குமே யெத்தனையோ கால
நயம்படநின் றேத்தியுங்கா ணுதான்—சுயம்பிரகா
சத்தொளியாய்ச் செந்தூரிற் சண்முகனை யெற்கருளுஞ்
சத்தொளியா னந்தமயந் தான். 17

தன்பேரி லாசை தமியேற்கிங் கூட்டினன்
றன்பேருஞ் சொல்லத் தகுமோதான்—அன்பேறக்
கூடிக் குலாவிக் குகனென்று தான்மறைந்தான்
சேடியரே செந்தூரிற் சேய். 18

சேயாக வந்தான் சிரபுரத்து வேதியர்பாற்
றீயே னிருளகற்றுந் தேவனே—தாயார்
வயிற்றிற் பிறவா வகையருளுஞ் செந்தூர்
குயிற்றியபொற் கோயிலாய்க் கொண்டு. 19

கொண்ட கணவனே குற்றமெனத் தள்ளிடிலவ்
வொண்டொடிக்கிங் கேதுசுக முத்தமனே !—பண்டைவினை
யானுலுஞ் செந்தூரா யாண்டவனீ யானடிமை
தானுகுங் காத்தாள் தடுத்து. 20

தடுத்தடிமை கொண்டுந் தனதடியார்க் காக
நடித்தருள்பொன் னம்பலவ ஞரி—கொடுத்த
முலைப்பா லருந்தியவன் மூதெயில்சூழ் செந்தூ
ரலைப்பா லுகந்தபெரு மாள். 21

ஆளவல்லாய் தஞ்சமென வாண்டுகொண் டென்னுள்ள
நீளமெலாஞ் சோதித்த னீதியோ—காளகண்டக்
கண்ணுதலார் பெற்றருளுங் கற்பகமே! செந்தூரா
வெண்ணுதலென் கொண்டபின்ன ரின்று. 22

இன்பமெனப் பேயுலக மெண்ணுவன முற்றுமே
துன்பந் தருமாற் சுகமருள—லன்புருவாய்
நின்றதிருச் செந்தூர் நிமலாநின் சேவையலா
தொன்றிலைமற் றென்னு முலகு. 23

உலவா வறம்பொருளின் போடுயர்வீ டென்பாள்
தலைவாநின் றண்டைக்கா ளுமே—கலவா
திருந்தாலுந் தோடமிலை யாரினிச் செந்தூராய்
வருந்தாது கொள்வார் மகள். 24

மகவான் குறையிரப்ப மாசூர் வலிதடியும்
பகவானென் றேலமிடும் பாவை—தகவா
லருளாயேற் செந்தூர் அறுமுகனே மெத்த
மருளாதென் செய்வாள் மறுத்து. 25

மறுத்தொருவர் மாதேநீ மால்மருகன் பாதம்
வெறுத்துறைநி யென்றால் வெகுள்வாள்—பொறுத்திருப்பா
ளெத்தனைநாட் செந்தூ ரிறைவாநான் சொல்வதிவண்
அத்தனையு மெய்யென் றறி. 26

அறிவேது மில்லாளுள் ளன்பிலாள் மிக்க
மறுவே நிறைந்த மனத்தாள்—கறுவுகின்ற
சிந்தனையா ளென்றாலுஞ் செந்தூரா னென்பார்க்கும்
வந்தனையே செய்வாள் மருண்டு. 27

மருண்டாவ தென்கொலோ மாதேயுள் ளன்பு
திரண்டா லொழியவந்து சேரான்—முரண்டாதே
யென்றாலுங் கேளா ளிறைவாசெந் தூர்முருகா
வென்றாலும் போதுமென்பா ளெற்கு. 28

எனக்குரிய வாவிபொரு ளிவ்வுடலுன் பாதந்
தனக்கே திறையாகத் தந்து—மனக்கவலை
யென்றுதா னிலகி யிருப்பேன்செந் தூரலாற்
குன்றுதோ றாடுங் குகா! 29

குகனேமெய்த் தெய்வமவன் கூர்வடிவே னெஞ்சே
பகடேறு மந்தகனார் பண்ணு—மிகறடிய
வுற்ற துணையா முவனுறை செந்தூரே
நற்றவர்க்கு வாழுகின்ற நாடு. 30

நாடுசெல்வம் கல்விமுதல் ஞானமெலா நெஞ்சேநீ
தேடியெங்குஞ் சென்றாலுஞ் சேராவாம்—பாடியே
செந்திநகர்த் தேவன் றிருவடியைச் சிந்திக்கில்
வந்துவிடு மெல்லா மலிந்து. 31

மலிந்த மடமாதர் வாழ்க்கையிலே சிக்கி
மெலிந்துழலு நெஞ்சேநம் வேலன்—பொலிந்துவளர்
செந்தூரைச் சேர்வார்க்குந் தீராத வல்வினையுஞ்
செந்தூளாய்ப் போகுமாந் தேர். 32

தேரோடும் வீதியிலே செந்தூரான் றந்நிலை
யாரோடு சென்றிங் கறைகுவேன்—பாருடே
வந்தமுத லென்னுடனே வாழுபட நெஞ்சேநீ
யெந்தவித மோர்ந்தாய்சொ லெற்கு. 33

என்னைவிட நிற்கு மிதஞ்சொலுவா ரிங்குமிலை
யுன்னைவிட நற்றுணையெற் கொன்றுமிலை—சொன்னபடி
யெப்பொழுதும் நெஞ்சே யிருப்பாயேற் செந்தூரா
னெப்படியுஞ் சேர்வா னெமை. 34

எமைப்புரக்குஞ் செந்திநக ரீசனருட் டொண்டர்
தமைப்பரவுந் தூநெறியே சார்வா—யிமைப்பொழுதும்
பத்தியிலார் சங்கத்தைப் பாராதே மேலாகு
முத்தியிலே நெஞ்சே முயல். 35

முயன்று தவமாற்ற முன்னூ ழின்றே
லியன்றவள விற்குகனை யேத்திப்—பயின்று
வருவாயே னெஞ்சே மனோலயமுஞ் செந்தூர்ப்
பெருவாழ்வுங் கிட்டுமே பின். 36

பின்னுசடைத் தொங்கல் பிறங்க விளம்பால்வாய்
மன்னுசிறு பிள்ளையாய் வந்தருளித்—தென்னவன்றன்
வெந்நோய் தணித்த விமலனே செந்திநகர்
என்னோய் தீர்த்தாளு மிறை. 37

இறையளவும் பத்தியிலா வேழைபட நெஞ்சே!
குறையுனக்கென் வைத்தான் குமரன்—நறைமலர்த்தா
ளெண்ணாதே கெட்டா யெடுத்தெடுத்துச் சொல்லிமிகப்
புண்ணானேன் செந்தூர்க்குப் போ. 38

போதமிலா நெஞ்சேநீ புன்மையர் பானாளும்
வாதுக்கேன் சென்றுயிரை மாய்க்கிறாய்—நாதனருள்
கூடு வகைதேர் குறிப்புடனே யுன்னினையாய்
வீடருளுஞ் செந்தூரன் வேல். 39

வேலுண்டு காக்க விரைமலரார் தண்டையார்
காலுண்டு நோக்கக் கரியதிற—மாலுண்ட
பூவிலே செந்தூர்ப் பொருப்புறைவே ளாமமே
நாவிலே யுண்டா நமக்கு. 40

---

# கருமை

(திரு. கபசம் எழுதியது)

(உசம் பக்கத் தொடர்ச்சி)

உலோகாயதக்கொள்கையையொத்த ஒருகருத்தால் தூண்டப்பெற்றுத் தேவர்கள் அமிர்தங் கடைந்தெடுக்கப் புகுந்தன ரென்பது நிலைநாட்டக் கூடியதோ அன்றோ வென்பதை நேயர்களே முடித்துக் கொள்ளவேண்டிய தென்று முந்திய கட்டுரையிற் கூறப்பட்டது. இதிலொரு துணிபிற்கு வரத்துணையாய் நிற்கு மிரண்டொரு உண்மைகளை ஈண்டுத்தருதும். தேவர்களென்று கூறப்படுவோர் மாநில மக்களைவிடச் சிறந்தவரெனக் கோடற்குச் சிறிதளவுஞ் சான்றில்லை. அவர்கள் விரும்பியுண்டவமிர்தம் யாண்டும் போகத்தைத் தருமொன்றாகக் காட்டப்பட்டுளதேயன்றி, போதத்தையளிக்கும் பொருளாகப் புகலப்படவில்லை. கற்பகத் தரு நிழலிலவர்கள் வாழும் வாழ்க்கை மாசகன்ற மனத்தார் விரும்பக் கூடியதன்று. நமது நாட்டுப் புலவர்களிதை யறியா திருந்தாரிலர். எப்பிறவியினும் மக்கட்பிறவியை உயர்த்திக் கூறினரேயன்றி, தேவர்பிறவியை யதற்கொப்பானதென்றோ, உயர்ந்ததென்றோ யாண்டு நவின்றிலர். இந்திர பதவியை நினைந்து எள்ளி நகையாடிய மதுகையோருமுளர். நானில வேந்தர் பெறுஞ் செல்வத்தையு மின்பநுகர்ச்சியையும் பன்மடங்கு பெருக்குவதாற் பிறப்பதே இந்திர பதவியாமெனல் இழுக்காகுமோ? இஃதன்றி, உலோகாயத முதனூல் செய்தவன் பிருகற்பதி என்று சிவஞான சித்தியும் வேறு நூல்களும் பகர்கின்றன. பிருகற்பதி என்பவன் தேவகுருவாதலால் அவன் தானியற்றிய நூலில் தேவர்களின் கொள்கைகளை விரித்திட்டானென்று கூறுவதிற் குற்றமென்னை? உலோகாயத தேவர்களைப் பற்றிக் கூறுவதை இஃதுடன் நிறுத்துதும்.

கருமையின் மற்றொரு பகுதியை யாராய்ந்திக் கட்டுரையை முடிப்பாம். இதுகாறும் பார்த்தவற்றால் கருமை என்பது எல்லாவகையினும் இன்னாததாகவே விளக்கமுற்றது. அது

இருளுடனும் கூற்றுவனோடுங் கொடுமையோடுங் கூடி நிற்கு மென்பதே இதுவரையிற் பெறப்பட்ட உண்மை. கள்ள உள்ள மிருக்க, உயர் துறவிவேடம் பூண்டு திரியுங்கயவரைக் குன்றி மணிக் கொப்பிட்டுக் கருமையின் பண்பைத் திருவள்ளுவர் காட்டினர்.

“புறங்குன்றி கண்டனையரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து” (திருக்கு. கூடாவொழுக்கம்)

ஆயினுங் கருமை நன்மைக் கோரடையாள மாகவுநிற்கின்றது.

‘செக்கச் செவேர்’ ‘பச்சைப்பசேர்’ என்று சொல்லும் போதெல்லாம் பெரும்பாலும் இனிமையே குறிக்கப்படுமாயினும், செங்களம், பச்சைப்பாம்பு என்பவற்றை நினைக்கும்போது அவற்றிலினிமை யொன்றுமில்லை. இதுபோன்றே ‘கன்னங்கரேல்’ என்று பேசுங்காற் பொதுவாக இன்னுமை தோன்றுமாயினும் ‘கார்காலம்’ ‘கருந்தனம்’ என்று சிறிதினிமையோடு புகல்கின்றோம். இவ்வினிமை வெளிப்படும் வகையை உற்று நோக்குதல் நன்று.

குளிர் மிகுந்த நாடுகளில் ஆண்டிற்பெரும்பகுதி விசும்பெங்கும் முகில் மூடி, வெயிலும் வெளிச்சமும் அரிதாவதால் தட்ப நிலத்தார் இருளையும் மேகத்தையும் மிக வெறுக்கின்றனர். ஆங்கிலத்தில் முகிலென்று பொருள்படும் ‘(clouds)’ என்ற சொல்லே துன்பத்தையுந் தொல்லையையுங் குறிக்கும். தட்ப நிலத்தில் வெயிலும் வெளிச்சமும் இன்பமளிக்குமாறு வெப்ப நிலங்களில் மேகமும் மழையு மினிமை பயத்தலால், கருமுகில் திரண்டெழுந்து வானைமூடும் ‘கார்காலம்’ நலத்தையும் வளத்தையுங் காட்டுமே யொழியத் துன்பத்தையுந் தொல்லையையு முணர்த்தாது. இங்ஙனமே, நிழல் என்றசொல் ஒரு ஆங்கிலனுக்குத் தரும் பொருள் வேறு, தமிழனுக்குத்தரும் பொருள்வேறு. பின்னவனுக்கு நிழலையடைவது வாழ்க்கையின் குறிக் கோளாகிறது. ‘இறைவன் திருவடி நிழலடைந்தார்’ என்பது தமிழனுக்கு அவலக்கவலை நீங்கி அழியாவின்பம் பெறுதலை யுணர்த்தும். ஆங்கிலனுக்கோ இதற்கு முற்றும் முரணான

ஒரு கருத்தை 'நிழல்' என்ற சொல் தோற்றுவிக்கும். நிழலென்பது வெயிலும் வெளிச்சமுந் தடைப்படுவதாலுண்டாவது. ஆதலின், அது வெளிச்சத்திற்கு முரண்பட்டுக் கருமையின் பாற்படும். நிழல் தருமரங்களைப் பாதை யோரத்தில் வளரச் செய்வது பேரற மாகுமென்று நமது நாட்டு முன்னோர் கூறிப் போந்தனர். இச் செய்கை அறம் ஆவது, மக்களுக்கு அது உதவுவதாலேயே யன்றி, நூல்களிற் கூறப்பட்டதாலன்று. 'அறஞ்செயவிரும்பு' என்று ஔவை சொன்னதால் நாம் அறஞ் செய்வோமென்று கூறுவதற்கிணங்க, காலம், இடம், தகுதி முதலியவற்றைக் கருதாது, நூல்களிற் கூறப்பட்டவாறே அறம் செய்வாமென்பார் கூற்று இரங்கற்குரித்தே. நிற்க. நமது நாட்டில் நிழலால் மக்கள் பெறும் நன்மையை அறிந்து நீண்ட சாலைகளை யமைத்து வேந்தர்கள் தம் பெயரை நிலை நாட்டியுளர். ஆதலின், கருமைப்பாற்படுங் காரும் நிழலும் இனியவாயின. அன்றியும், தமிழகத்தில் தொன்மை தொட்டின்றளவும் அரசுக்குறி குறியாயிருப்பது குடையாகும்.

'குடை நிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடை மெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்'
'பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க்காண்ப
ரலகுடை நீழ லவர்' (குறள், உழவு-3)

குடையை ஆட்சிக் கடையாளமாக வெடுத்துக்கொண்டது, அது நிழல் செய்யுந் தன்மைபற்றி, வேந்தர்கள் குடை வெண்ணிற முடையதாயினும் அது வெளிச்சத்தைத் தடுக்குங் கருவியாவதாற் கருமையின் பாற்படும். இந்நாளிற் பெரும்பாலுங் குடைகள் கரியனவே. வெளிச்சத்தை யூடுருவிச் செல்ல விடாது தடுக்க வல்லது கருமையொன்றே யாதலாற் குடைகள் கருப்பா யிருக்கின்றன. கரியவென்று குடைகளை இகழ்வாரிலர். சகுனம் பார்ப்பவர்க்குக் குடை மங்கலப் பொருளாகும். சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப்பாடல்பின்வருமாறு தொடங்குகின்றது.

"திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்த்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கணுல களித்தலான்"

குடை மங்கலப் பொருளாதல் யாதுபற்றி. குடை தானகவே நன்மையைத் தரும் பொருளாகாது. அது வேந்தரோடு சேர்த்து நினைக்கப்படும் பொருளாதலின், வீட்டை விட்டு வெளிப்படு மொருவன் கண்ணிலது படுமாயின், அவன் கருத்திற் கண்ட நோக்கங் கை கூடுமென்ற நம்பிக்கையே, குடையை நற்சகுன மென்று கொள்ளுமெண்ணத்திற் கடிப்படையாகும். ஆயினு மது ஆட்சிக்கறிகுறி யாவது கொண்டு உயர்ந்தோர் தவிரப் பிறரதைப் பிடிக்கக் கூடாதென்ற குருட்டு வழக்கமு மிந்நாட்டி லெழுந்தது. சென்னை நகரத்திற்கு முதல் முதல் நகரப் பாது காப்புக்கழகம் (Municipal Corporation) அமைத்துக் கொடுத்தபோது அக்கழக உறுப்பினர்கள் குடை பிடிக்கும் உரிமை யுடையராயிருந்தாரென்று காணப்படுகிறது.

உவேல்ஸ் இளவரசர் சென்னை நகரத்திற்கு வந்து, நகரப் பாது காப்புக் கழகத்தால் வரவேற்கப்பட்டபோது இவ்வுண்மை வெளிப்பட்டது. நாட்டுப் புறங்களிலின்று மித்தகைய வழக்கங் கொண்டாடப்படுவது. கருமையின் கொடுமைபோலும். நிற்க. பின்வரும் பாட்டு குடை மங்கல மெனுந் துறையைச் சார்ந்தது.

"முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச்
செம்மீ னிமைக்கு மாக விசும்பி
னுச்சி நின்ற வுவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதன மல்லமோ பலவே ? கானற்
கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கு
மாரைச் சாகாட் டாழ்ச்சி போக்கு
முரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்
வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை யொக்கு மாலெனவே
(துறை: குடை மங்கலம் புறநானூறு 60)

இதில், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனின் குடையைப் பற்றிப் பாடியிருக்கின்றது. காட்டிற் சென்ற பரிசிலன் விசும்பினுச்சியிலிலங்கிய நிறைமதிகண்டு, அது வளவனின் குடை போன்றிருந்தமை நோக்கி, மனைவியுடன் பன்முறை தொழுதானென்றிச் செய்யுள் கூறுகின்றது. 'வெயின் மறைக் கொண்ட வெண் குடை' என்பதற்குப் பொருளுரைக்குங்கால், 'வெயில் என்றது பகைவரானுங் கொடியோரானும் வரும் வெம்மையே' என்று நச்சினார்க்கினியர் நவில்கின்றார். வெம்மையையும் வெளிச்சத்தையும் வேறு பிரித்தெண்ண வொண்ணாது. இரண்டுமொன்று கூடி மக்களை வாட்டுகின்ற வெப்பநாட்டில், காரும் நிழலுங் குடையுமாகிய கருமையின் வகைகள் இனிமை பயத்தல் வியப்பன்றே.

'மெய்க் கொள் பெரும்பனி நலியப்பலருடன்
கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க
மாமேயன் மறப்ப மந்திகூரப்
பறவை படிவன வீழ்க் கறவை
கன்று கோளொழியக் கடியவீசிக்
குன்று குளிர்ப்பன்ன கூதிர்

(நெடு நல்வாடை : 7-12)

நாளிலே மக்கள் நெருப்பை நீரென வேட்டு, நீரையழலென வஞ்சுவர். அந்நாளில் கிழவருங் குழவிகளும் ஞாயிறு காயுமிடத்திலமர்ந்து குளிர் நீக்கிக் கொள்கின்றனர். ஆனால், இட்ட வடி கொதிக்க, எடுத்தவடி கொப்புளிக்கச் சுடுகதிர் பெருக்கும் ஞாயிற்றின் கொடுமை தாங்க வரிதாகும். முதுவேனில் வரும் போது, பொழுது சாய்ந்து, நிழல்கள் நீண்டு, தென்றல் வீசும் மாலை நேரத்தை மக்கள் எவ்வளவு விரும்பி நிற்கின்றனர்! முதுவேனிலில் நடுப்பகல் வேளை நள்ளிரவுபோ லமைதியாகின்றது. ஆறியமர்ந்திருக்கு மிரவு எப்பொழுது வருமென்று மக்கள் ஏங்குகின்றனர். ஆதலின், பொதுவாக வெறுக்கப்படுமிருளும் விரும்பத்தக்க ஒன்றாய் விளங்குங் காலமுமுண்டு. (தொடரும்)

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்.

## II

(திரு. M V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.)

கடவுளைக் குறிக்கும் இன்னொரு பண்டைத் தமிழ் சொல் லானது இயவுள் என்பது. இயவுள் என்ற சொல் இய என்னும் பகுதியும் உள் என்னும் தொழிற் பெயர் விகுதியுஞ் சேர்ந்து ஆன சொல். இய என்ற பகுதிக்கு இயக்கு அல்லது நடத்து என்று பொருள். இயவுள் என்பது இயக்குதல் அல்லது நடத்துதல் எனப் பொருள்படும். அஃது ஆகு பெயராய் இயக்குதலைச் செய்கிறவனைக் குறிக்கின்றது.

2. இயக்குகிறவன் என்றால் எவரை அல்லது எதனை இயக்குகின்றான் என்ற கேள்வி ஒருவனது உள்ளத்தில் உண்டாகும். இந்தக் கேள்விக்கு விடையளிக்க ஆராய்ச்சி எழும்பொழுது இயக்கப்படும் பொருள் இல்லாவிடின் இயக்கும் பொருளும் உளது ஆகாது ஆதலினாலும், உலகில் நாம் கண்ணாற் காணும் உயிர்ப்பொருள்கள் உயிரில் பொருள் ஆதலானும், இந்த உயிர்ப்பொருள் உயிரில் பொருள்கள் இரண்டும் இயக்கப்படும் பொருள்கள் என்றும், இவற்றை இயக்கும் பொருள் ஒன்று மூன்றாவது பொருள் இருத்தல்வேண்டு மென்றும் பண்டைத் தமிழர்கள் அறிந்தார்கள். அதன்மேல் ஆராய்ச்சி எழும்பொழுது உயிர்ப் பொருள்கள் தாமாக உட்கருவியாகிய மனதினால் அறிந்தும் புறக்கருவியாகிய உடலை அசைத்தலினாலும் ஓர் இடத்தைவிட்டு மற்றோரிடத்துக்கு இடம் பெயர்தலினாலும் இயக்கப்படுகின்றன என்றும், உயிரில் பொருள்கள் இருந்த இடத்தில் ஏவ அசைதற்கும் இடம் பெயர்தற்கும் இயக்கப்படுகின்றன என்றும் அவர்கள் கண்டு இந்த இரண்டு பொருள்களையும் இவ்வாறு இயக்குகின்ற மூன்றாவது பொருளுக்கு இயவுள் என்ற பெயரைக் கொடுத்தார்கள். இதனால் அவர்கள் துவக்கத்திற் செய்த மேற்பார்வை ஆராய்ச்சியால் மூன்று பொருள்

கள் உண்டு என்ற முப்பொருளுண்மையும் அப்பொருள்களுக்குள் ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள தொடர்பையும் அறிந்தார்கள். அவர்கள் இவ்வாறு அறிதற்கு நூல் அறிவு துணையாயிருக்கலாம் அல்லது தாங்களே தங்கள் உலக அநுபவ அறிவைத் துணையாகக் கொண்டு அறிந்திருக்கலாம்.

3. முன் I-ம் கட்டுரையிற் கடவுள் என்று பெயர் கொடுக்கப்பட்ட பொருளும் இவரே. இயவுள் என்று பெயர் கொடுக்கப்பட்ட பொருளும் ஒன்றே. கடவுள் என்ற சொல் உயிர்கள் கடவுளை எப்படி அறிதல் கூடும் என்பதை விளக்குகின்றது. இயவுள் என்ற சொல் அந்தக் கடவுள் உயிர்களையும் உயிரில் பொருள்களையும் இயக்குகின்றான் என்பதையும் அவன் இயங்காமல் அவைகள் இயங்கா என்பதையும் விளக்குகின்றது.

4. இனிப் பண்டைத் தமிழர்கள் நுணுகிய ஆராய்ச்சியினாலும் யோக முறைகளினால் அறிந்த தெளிவு அறிவினாலும் இயவுள் என்று கூறப்படும் முதல்வன் உயிர்ப் பொருள்களை எவ்வாறு இயக்குகின்றான் என்னும் உண்மையையும் உயிரில்லாத பொருள்களை எவ்வாறு இயக்குகின்றான் என்னும் உண்மையையும் அறிந்தார்கள். இவ்வாறு அவன் செய்யும் இயக்கங்களெல்லாம் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களின் பாற்படும் என்பதும், இந்த ஐந்து தொழில்களும் அவன் சலிப்பின்றி எப்பொழுதும் செய்தல் உயிர்கள் மலங்களினின்று நீங்கிப் பேராப் பேரின்பம் பெறும் பொருட்டு என்பது அவர்கள் அறிந்தார்கள். இந்த உண்மைகள் சித்தாந்த நூல்களில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளன. அங்குக் காண்க.

5 ஆகவே, இயவுள் என்ற சொல்லால் கடவுளாகிய முதல்வன் உயிர்கள் தங்களை அநாதியே சேர்ந்துள்ள மலப் பிணிப்பிலிருந்து நீங்கித் தன்னை அடைந்து பேரின்பம் அடைதற் பொருட்டுத் தனுகரண புவன போகங்களைப் படைத்துக் காத்து அழித்தற் பயனாக அவைகளை இயக்குகின்றான் என்பதும் உயிர்களுக்குத் தகுதி உண்டாக்கும் பொருட்டு முதலில் அவைகளை

அவன் உலகபோக நுகர்தற் பொருட்டு மயக்கி இயக்குகின்ருன். என்பதும் தகுதி வாய்ந்தபின் அவைகளைச் சிவபோகம் நுகர்தற் பொருட்டுத் தெளிவித்து இயக்குகின்ருன் என்பதும் பெறப்பட்டன. இவ்வளவு உண்மைக் கருத்துக்களையும் தன்னுள் அடங்கி நிற்கின்றதொரு குறிச் சொல்லாக இயவுள் என்னுஞ் சொல் பண்டைத் தமிழ் நூல் வழக்கில் விளங்கினது என்று இங்கே சுருக்கமாகக் கூறப்பட்டது.

---

# அழகியற் கலைகள்.

[திரு டி. எஸ். கந்தசாமி முதலியார் அவர்கள் பி. ஏ.]

செந்தமிழ் நாடு செழுங்கலைகள் பலவற்றிலும் மிகச் செழித் தோங்கியது வெளிப்படை. பண்டைக் காலத்தில் அருங்கலைகள் யாவும் பல்கி இருந்ததெனினும் இப்பொழுது அக்கலைகள் மிகச் செழிப்புற்றிருக்கின்றன என்று சொல்வதிற் கிடமில்லை. எம்மக்கள் கூட்டத்தில் அருங்கலைகள் பயிலப் பட்டும், வளர்க்கப்பட்டும் பாதுகாக்கப் படுகின்றனவோ அம் மக்கள் கூட்டமே அறிஞர் பெருமக்களால் போற்றத்தகும் நாகரிகத்தில் நனிசிறந்துள்ள தெனக் கூறலாம். ஏனெனில், நாகரிகம் என்னும் சொல் மக்கள் புற ஒழுக்கத்தைச் சுட்டாது, அகப் பண்பையே சுட்டா நிற்கும். தெய்வப்புலமை திருவள்ளுவனாரும்,

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

என்று பொய்யாமொழியால் கண்ணோட்ட மென்னும் கழி பெருங்குணமே நாகரிகம் எனக்கூறி விளங்கவைத்துள்ளார். மக்கள் நாகரிக முதிர்ச்சியே அருங்கலைகளின் தோற்றத்திற்குக் காரணம். அங்ஙனம் ஆவதோடு அருங்கலைப் பயிற்சியே நாகரிகத்தை வளர்க்கும் நன்னீருமாம். பண்டை மன்னர்களும், அமைச்சர்களும், மற்றுமுள்ள செல்வர்களும் புலவர் பெருமக்களைப் போற்றிப் பாராட்டி வந்தமையால், அழகியல் அருங்

கலைகளுள் தலைசிறந்த செய்யுட்களும், காவியங்களும் திகழ்ந்து ஓங்கின. இப்போது அத்தகையோர்களால் புலவர்கள் புறக் கணிக்கப் பட்டுள்ளார்கள். ஆகையால் புலவர்களும் குன்று வராயினர்; செஞ்சொற்கவிகளும் இலவாயின. கண்கவர் ஆடை உடுத்தலும் உள்ளங்கவர் உணவுண்டலும், காரை வெல்லும் கடு விசை வாகனங்களில் செல்லுதலுமே நாகரிகம் எனக்கொள்ளும் இக்காலத்தில் அருங்கலை விநோதங்களின் அழகைப்பற்றிக் கூறுவது எதற்கு எனச் சிலர் கேட்கலாம். அவர்கள் இவ் வருங்கலைகள் ஒருவருக்குத் தாம் உணணும் சோற்றினும், உடுக்கும் உடையினும், பருகும் நீரினும் இன்றியமையாதன என்பதை அவர் அறியார். பண்டைத் தமிழ் மக்கள் அருங்கலைகளின் அழகைக்கண்டல்லவோ தம் உயிரினும் சிறந்த தண்டமிழ் மொழியை இயல், இசை, நாடகமென முப்பகுதியாகப் பிரித்தார்கள். அதனை அறியாத நாம் தமிழ் என்பது இயற்றமிழ் ஒன்றே எனக்கொண்டு, இசையையும் நாடகத்தையும் அறவே கைநழுவ விட்டு, அவற்றைப் பெரும்பாலும் தகவிலார் மாட்டு ஒப்புவித்துள்ளோம். இயற்றமிழில் அவலச் சுவையையோ அல்லது வீரச்சுவையையோ செய்யுள் முகமாகப் புலப்படுத்தினல் அதனை உணர்ந்து கொள்ளுதல் இயற்றமிழ்த்துறையில் கைபோய வல்லார்க்கே சாலும். பிறர்க்கு அது சாலாது. ஆனல் எச்சுவையையேனும் இசை வல்லார்கள் இசைத் தமிழிலே இசைப்பார்களானல் இயலிலேனும் இசையிலேனும் அறிவிலாதார்க்கும் அது புலனுவதோடு, அது அவர் உள்ளத்தில் சென்று அதுதன் வயமாக்குவதை நாம் கண்கூடாகக் காணலாம். இசைத்தமிழ் ஒருவர் உள்ளத்தை உருக்கி இரங்கச்செய்வதையும், உவப்பித்துக் களிக்கச்செய்வதையும் நாம் காண்கின்றோம். அவ்வுள்ள நெகிழ்ச்சி அடைபவர்கள் பெரும் புலவர் அல்லாதிருப்பதையும் காண்கின்றோம். அப்படி உள்ளம் நெகிழ்பவருட் பலர் சாமானியராகவேயிருக்கிறார்கள். இசைத்துறை முற்றியவர்கள் என்று சொல்வதற்கும் இல்லை. காரணம் வேண்டாது உள்ளம் நெகிழ்பவர் என்று சொல்லுதலும் அமையாது. ஆதலின் அவர் அங்ஙனம் இரங்குதற்கும் மகிழ்தற்கும் காரணம்

இசைத்தமிழில் இயற்கையில் அமைந்து கிடக்கும் பெருங்குணமும் நலனும் என்று தான் சொல்லுதல்வேண்டும். எடுத்த மொழியாலும் ஏதுக்களாலும் பலபடப்பன்னினுலும் அறியப் படாதசெய்திகளும் பிறவும் நடத்தலில் வல்லான் ஒருவன் நடிப்பின் அவன் இங்கிதம், செயல், வடிவு முதலியவைகளின் விளையாட்டினலேயே எவர்உள்ளத்திலும் பதியுமாறு விளங்கும். எடுத்துக்காட்டாக ஒன்று கூறலாம் :—

அரிச்சந்திரன் அவலக்கடலுள் ஆழ்ந்தான் என்ற செய்தியை எதிர் நிற்போர் உள்ளத்தில் பதியுமாறு செய்வித்தல்வேண்டுமென்று வைத்துக்கொள்வோம். அப்படிச் செய்தற்கு மொழிகளைப் பன்முறையும் அடுக்கி அடுக்கி "மீகாமன் இல்லாமரக்கலம் நடுக்கடலில் கவிழ்ந்தபோது அதில் உள்ளார் துன்புறுவதுபோல் கரைகாணுத் துன்பம் எய்தினுன்" என்றுசொன்னுல் அவ்வேதுவின் நுட்பத்தைச்சிலரே அறிந்து அரிச்சந்திரன் அடைந்த இடுக்கண்ணின் பரிமாணத்தைச் சிலரே உணர்வர். ஆனுல் அதனைக் கேட்டார் அரிச்சந்திரன் எய்திய துன்பத்தை அப்போழ்து தமது உளக்கண்ணில் காண்பதுமில்லை; அதற்காகத் தாம் இரங்குவதுமில்லை. நாடக அரங்கில் நடித்தலில் கைவல்ல நடி ஒருவன் அரிச்சந்திரன் வேடம் தாங்கி யாதொரு வார்த்தையும் தன் வாயினுல் பேசாமல் அரிச்சந்திரனுக்குற்ற இடுக்கண்ணையும் அதனுல் அவன் அடைந்த பரிவையும், அவன் நடித்துக்காட்டும்போது, அங்கு பார்க்கின்றவருள் சிலர், தாம் இருப்பது நாடக அரங்கென்றும் அரிச்சந்திரனுக வந்து கவல்கின்றவன் ஒரு நடியென்றும் நோக்காது தம்மை மறந்து அவன் கொண்ட அவலத்திற்குத் தாம் இரங்கி மனம் நைகின்றுர்கள். ஆகவே மொழிகளால்செவ்விதிற்றெரிவிக்கப்படாச் செய்திகளும், உண்மைகளும் இசையினுலும் நாடகத்தாலும் பாமரர் உள்ளமும் கொள்ளும்படி புலப்படுத்தலாம் என்று புலனுகின்றது. இசைத்துறை முற்றிய உடன் தம் இசைவன்மையால் மகிழ்ச்சி ததும்பும் இசைகளைப் பாடின் அதனைக்கேட்போர் வறியராயினும், மகிழ்ச்சி கொள்ளும் காரணம் இலராயினும், இசை வயத்தராகிப் பெரு மகிழ்ச்சியையும் பேருவகையையும் கொண்டு களிக்கின்றுர்கள். சோகம்

ததும்பிய இசை யெடுத்துப்பாடினும் அதனைக் கேட்போர் அவ் விசையில் ஈடுபட்டு நெருப்புமுன் உருகும் வெண்ணெய்ப்பாவை யைப்போல் நெக்குவிட்டுருகி உளம் இரங்குகின்றனர். செவ்விய ஓசை அணுக்கள் நிறைந்த இசை, கேட்போர் உள்ளத்தைக் கவர்கின்றது. நடிகன் தன் வடிவில் தோற்றுவித்த செயல்களால் காண்போர் உள்ளத்தைக் கவர்கின்றான். அதுபோலவே ஓவியத் துறை முற்றிய ஒருவன் இசையிலும் நாடகத்திலும் எத்துணை ச்சுவைகள் அழகுபெற காண்போர் கேட்போர் உள்ளத்தைக் கவரும்படி தோற்றுவிக்கலாமோ அத்துணைச்சுவைகளும் ஓவியத் துறை முற்றியவனால் எழுதப்பட்ட ஓவியத்தில் புலப்படுத்தலாம். நம்முட் பெரும்பாலர் அழுவதெப்போது உவகை கொள்வதெப் போது என்று அறியமாட்டார்கள். இரங்கத்தக்க காலங்களை யும் மகிழத்தக்க காலங்களையும் ஒருவனுக்குப் பயிற்றுவது மேற்கூறிய அருங்கலைகளே. பண்டைத் தமிழ் மக்கள் படைத்த ஓவியங்களும், சிலைகளும் மேலை நாட்டு அருங்கலைவாணர்களால் பெரிதும் பாராட்டப்படுகின்றன. ஆனால் நம்மால் பெரிதும் புறக்கணிக்கப் பட்டிருக்கின்றன.

இந்நாடகத்தைப் புலவர் பெருமக்கள் போற்றுகின்றார் இல்லை. அறிஞர் பெரு மக்கள் ஆடிக்காட்டுகின்றார் இல்லை. நாடகத்தின் மூலமாக வயிறுவளர்க்கும் ஒரு சிறு கூட்டத்தார் கையில் ஒப்பு வித்துவிட்டார்கள். இசைத்துறையில் வல்லார்களை இங்குமங் கும் சிலரைக்காணலாமென்றாலும் அவர்களுள் இசைத்தமிழ் உணர்ந்தவர்களைக் காணல் அரிதாக இருக்கின்றது. ஓவியத் துறையும் அறிஞர்களால் ஒதுக்கப்பட்டிருக்கின்றது. மக்கள் மனப்பான்மைக்கேற்றபடியே சென்னைப் பல்கலைக் கழகத்தாரும் இசைக்கேனும் ஓவியத்துக்கேனும் ஒரு தனிப்பட்டம் ஏற்படுத்த வில்லை. அத்துறைகளை அவர்கள் போற்றவுமில்லை. இவ்வழ கியல் அருங்கலைகள் எல்லாம் மீண்டும் புத்துயிர் பெற்றுச் செழித் தோங்கிவளரவேண்டுமானால் பல பத்திரிகைகள் அவ்வழிகளிலே உழைத்தல்வேண்டும். அவைகளைச் செல்வர்கள் பொருளுதவி யால் ஊக்குதல் வேண்டும்; புலவர்கள் தம் புதுநலம் படைத்த பொய்யில் கட்டுரைகளால் புனைதல்வேண்டும். —கார்த்திகேயன்

# தக்கயாகப் பரணியைச் சீகாழியார் போற்றி வந்தது.

[ப. அ. முத்துத் தாண்டவராயபிள்ளையவர்கள்]

சைவசித்தாந்தக் கழகத்தார் புத்தகசாலையிலிருந்து தக்கயாகப் பரணிப் பிரதி சிலவற்றைச் சீகாழி வாசிகள் சிலர் தருவித்து வாசித்து வருகின்றனர். இக்கழகத்தார் பற்பல வெளியீடுகளை ஓரிடத்துச் சேகரித்து வேண்டியவர்களுக்கு வேண்டிய நூல்களை அவ்வப்போது அனுப்பிப் பேருதவிபுரிந்து வருகின்றனர். ஐரோப்பாவில் இத்தகைய புத்தக நிலையங்கள் அமைந்திருத்தலின் அங்குள்ளாருக்கு எப்புத்தகங்களும் எளிதிற் கிடைக்கின்றன. இந்நாட்டில் இருந்த குறையை இக்கழகத்தார் இப்போது தீர்த்துவருகின்றனர். இனியும் தங்கள் புத்தக நிலயத்தை இன்னும் பெருக்கி இந்நாட்டவர்க்குப் பலவுதவி புரிவார்களென்பது யாவரும் விரும்புவது.

மஹாமஹோபாத்தியாயர் பிரமஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் தக்கயாகப் பரணியை இவ்வாண்டு வெளியிட்டுத் தமிழுலகத்திற்குப் பெருநன்றி செய்கின்றார்கள்; ஏனைச்சங்கநூல் முதலியவற்றை வெளியிட்டருளிய வண்ணமே இந்நூலையும் பல ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் செவ்விதாக அமைத்து இருக்கின்றார்கள். இச்சிறந்த பேருதவிக்கு யாம் அனைவரும் மிக்க கடமைப்பட்டிருப்பதோடு இனியும் பல நூல்களை வெளியிட்டருளுவார்களெனப் பிரார்த்திக்கின்றோம். இவ்வூரவர்களுக்கும் பரணிப்பிரதி கிடைக்கவில்லையென்னும் பெருங்கவலை நீங்காவிட்டமையாற் பல புத்தகங்களைத் தருவித்துத் தமது முன்னோர் போற்றிவந்த வண்ணம் போற்றி வருவார்களென நம்புகின்றேன்.

இவ்வூரில் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் பள்ளிக்கூடத்துப் பயிலுஞ் சிறுர் புரட்டாதி மாதம் மஹாநவமி உற்சவகாலத்து ஆடம்பர வேடம்பூண்டு பல பாடல்களைப் பாடிக்கொண்டு வருவார். அப்பாடல்களிற் சில காழிச்சில்லரைப் பிரபந்தமென்று

இவ்வூர்ச் சிதம்பர வாத்தியாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. வயது வந்த பெரியோர் பரணியைச் சிரபுரத்து நாககாதர்கோவில் ஒட்டக்கூத்தர் திருவுருவத்தருகு வைத்துப் பூசித்து எடுத்துக்கொண்டு பெரியகோயில் வலம்புரிமண்டபம் போய் ஓதிவருவார்கள். இம்முறை கோவை உலா அந்தாதி கலம்பகம் பரணி கற்பதற்கு ஏற்ற சாதனமாகக் காணப்பட்டது. இக்காட்சி மிக்க சிறப்பாகக் காணப்பட்டு வந்ததாம்.

சீகாழி பல பெரியார்களின் பிறப்பிடமாகவும் வசிப்பிடமாகவும் இருந்தது. அவருள் கண்ணுடைய வள்ளலார் மேலைவீதி மேற்புறத்து மங்கையர்க்கரசி விநாயகர் சந்நிதியிலும், கூத்தர் சிரபுரச்சந்நிதி பெரிய கைக்கோளர் சின்ன கைக்கோளர் வீதியில் பழைய கழுமலநதியின் இருசார்பிலும், அருணாசலக் கவிராயரும் சிற்றம்பல நாடிகளும் வடக்குரத வீதியிலும், திருக்கை கோட்டி திராவிட கலாநியமத்தார் அவ்வீதியில் சிவ. கண்ணுசாமிப்பிள்ளை அவர்கள் வீட்டுக்கு அருகிலும், திருஞானசம்பந்தர் இரட்டை அக்கிரகாரம் சோளேச்சுரமுடையார் கோயிலுக்கு அண்மையிலும், சிதம்பரநாதமுனிவர் தெற்கு ரதவீதி தருமபுரமடத்திலும் கங்கை மெய்கண்டாரும் மச்சுச்செட்டியருணமச்சிவாயரும் கீழவீதியிலும் வசித்து வந்தார்கள் என்று பெரியோர் அவ்வில்லங்களை இன்றும் காட்டுகின்றனர். இவர்கள் பலகாலத்து இவ்வூரிற் பிறந்த பெரியோர்கள் என்பது இவ்வூரார் கூறிவருவது.

தக்கயாகப்பரணி இவ்வூரிலே நேமிநாதரும் பேராசிரியரும் பட்டோலை பிடிக்கக் கவிச்சக்கரவர்த்தி பாடினார் என்று இந்நகரமாந்தர் கூறுவதற்கு அகச்சான்றாகச் சட்டைநாதர் துதியும் சம்பந்தர் பிரபாவமும் இருப்பதனோடு சோழமண்டல சதகமும் புறச்சான்றாகும். பரணியின் ஏட்டுப்பிரதி இவ்வூரிலும் இவ்வூர்க்கோயில் சுவான்தார்களாகிய தருமையாதீன கர்த்தர் திருமடாலயத்துப் புத்தகசாலையிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இனி உரையும் இவ்வூரிலேயே எழுதப்பட்டது என்பதற்கு உரைப்பிரதிகள் இரண்டினுள் ஒன்று தருமபுர ஆதீனத்திலிருந்து மஹாமஹோபாத்தியாய சுவாமிகள் 47 வருடங்களுக்கு

முன் பெற்றது; மற்ருென்று இன்றும் அத்திருமடாலயத்து இருப்பது. பின்னர்க் கண்ட உரைச்சுவடியில் இறுதியிற் காணப் படும் தாழிசை (அருண்ஞான..........)யும், செய்யுளும் (சீர்கு ரோதன 1745) சாட்சியாகும். இவ்விரண்டாம் செய்யுளால் உரையாசிரியர் சிதம்பரநாத முனிவர் எனவும், பட்டோலை பிடித்தார் பெரியதம்பி எனவும் இவ்வூரார் கூறிவருகின்றனர். சிதம்பரநாதமுனிவர் அநேக தமிழ் நூல்களைஇயற்றியவர்; அருணசலக் கவிராயர் பெரியதம்பி முதலாயினுர்க்குக் குருவானவர்.

இனிப் பெரியதம்பி என்பவர் யாவர் என விசாரிப்போம். ராபர்ட் சூயல் துரையவர்கள் எழுதிய List of the Antiquarian Remains ல் தரங்கம்பாடியிலுள்ள இரண்டு தாமிர சாசனங்களில் அச்சுதப்ப நாயக்கர் (1572—1614) தமது அரசாட்சியில் சகம் 1631 (=1609 கி. பி.) தேவாலய விசாரணைக்கு நியோகித்த சைவ சமயப்பற்றுள்ளவரான பெரிய மரைக்காயர் என்னும் கனதனவானுடைய கொழூப் பேரராகிய பெரியதம்பி என்னும் சோனகர். இவரும் தமது பிதா மகனைப் போலவே சைவ முனிவர்களை அடுத்து உண்மை நூல்களைக்கற்று மஸ்தானகித் தமிழில் உடலறிஞானம் முதலிய நூல்களை யியற்றிப் பிறையாற்றிற் சமாதியிலிருப்பவர். இவர் 35-ம் வயதில் காழியில் வந்து சிதம்பரநாத முனிவரிடம் கற்றுச் சொல்லியாய்ப் பட்டோலை பிடித்தவர் என்றும் ஐதிகம் மேற்கண்ட கவியால் திடப்படுத்தப்படுகிறது.

இந்நிலைமை யாகவே காழி வாசிகளைப் பரணி நூற்பிரதிகளைத் தருவித்துத் தமது முன்னோர் போலவே போற்றி வாருங்கள்என்று தமியேன் வேண்டுகிறேன்.

காழியா ரொட்டக் கூத்தன் கனிந்துசொல் பரணி தன்னைக்
காழியார் சிதம்ப ரேசன் கனிந்துசொல் லுரையி னேடுங்
காழியார் நாங்கள் பாடக் கருணைசெய் தருளு மெங்கள்
காழியார் பிள்ளை யார்செங் கமலநற் பதங்கள் தாமே.

உகள...., ஞாயில்...., திருமடத்...., பிள்ளை...., நாணீர்...,
இவை மஹா நவமியிற் பாடும் பாடல்கள்.

சீர்குரோ தனவருடம் புரட்டாதி முதற்றேதித்
திங்க டன்னிற் (Mon. 17th Sep. 1745)
காருலவுஞ் சீகாழிச் சிதம்பரநா தமாமுனிவன்
கருணை யாலே
பார்புகழுந் தக்கயா கப்பரணி தனைமுகித்திப்
பதியி னன்றாய்
ஏர்பெறுந்தா ழிசைகளையு முரைதனையும் பெரியதம்பி
யெழுதி னானே.

அருண்ஞான குருபீட மடிவாழி யடியார்க ளடிவாழியேன்
இருளான பழிமாற விகலான வழிமாற விசைவாழியே.

இவை ஆதீனப்பிரதிகளிற் கண்டன, அச்சுப் பிரதியிலும் உள்ளவை. இவற்றின் மேலும் இக்காழியிலிருந்த வித்துவ சிரோன்மணிகளாகிய சிதம்பர வுபாத்தியாயர் சொக்கலிங்க செட்டியார் முதலாயினர் பரணித்தாழிசைகளை உச்சரிக்கும் போதெல்லாம் உரையியற்றினவர் சிதம்பரநாத முனிவர் என்று கூறி வந்தனர். இதன் உண்மையைத் தருமபுரவாதீனப்பிரதி களையும் இதர கர்ணபரம் பரைகளையும் ஆராய்ந்து மஹா மஹோபாத்தியாயரவர்கள் வெளியிட்டருளுவார்களாக. இதற் கிடையிற் பிறர் பிறகொள்கைகளைப் புகுவிக்காமலிருப்பது நலம்.

---

# கொடுக்கூர் கோவிந்தன்.

(காழி) சிவ. கண்ணுசாமி யவர்கள் B. A.

(௭-ம் சிலம்பு ௪௬௨-ம் பக்கத் தொடர்ச்சி)

“அது கேட்டு, நான் இன்னான் என்று அவர்களுக்குத் தெரிவித்தேன். என்னை அவர்கள் பொய்ய னெனக் கூறி நகைத்தார்களேயன்றி நான் கூறிய உண்மையை நம்பவில்லை. எனக்கு ஒன்றும் விளங்காததால், வழக்கம்போல் என் முக வாய்க் கட்டையிற்கையை வைத்தேன். என் தாடி களையப் பட்டிருக்கக் கண்டேன். தாடியோடிருந்தாலே நான்தான்

பீதாம்பரயோகி யென்று அடையாளங் கூற முன் வருபவர்கள் ஒரு சிலரே யிருப்பார்கள். அது நீக்கப்பட்டபின் என் சொந்த வேலையாளான கருப்பையன் கூட என்னைக்கண்டு கொள்வானோ மாட்டானோ என்ற ஐயம் எழுந்தது. கருப்பையனும் அன்று ஊரிலில்லை. ஆண்டிற்கு நான்கு முறை அவனைத் திருக்கழுக்குன்றத்திற்கு அனுப்பிக் குழந்தைகளின் நலத்தைப் பார்த்துக்கொண்டு பொருள் கொடுத்து வரச் சொல்வது வழக்கம். அன்றும் அதுபோல் அவனை யனுப்பி வைத்திருந்தேன்''

சம்பு :—'' அது சரி நீர் ஏன் உணர்விழக்க நேரிட்டதென்று கூற முடியுமா ?''

யோகி :—'' அது ஏனென்று தெளிவாகத் தெரிந்தால் முன்பே கூறி யிருக்க மாட்டேனா ? ஆனாலும் இதற்கெல்லாம் ஆட்டாளியார் என்பதை அறிவேன். ஆம், வேறு யாரும் இருக்க முடியாது. என் தங்கை மகன் தான் இப் பழிச் செயலைப் புரிந்திருக்கவேண்டும். என் தங்கையோ நாங்கள் எவ்வளவு எடுத்துச் சொல்லியுங் கேளாமல் ஒரு போக்கிலியை மணந்து கொண்டாள். ஒரு ஆண் குழந்தை அவளுக்குப் பிறந்தது. அக்குழந்தை பிறந்த சில தினங்களுள் அவள் இறந்து போனாள். அவள் மட்டும் உயிருடனிருந்தால் இச் சிறு பயல் இத்துணைக் கொடியவனாக வளர விட்டிருக்க மாட்டாள்.''

சம்பு :—'' அப்படியானால் உம் தங்கை மகன் அன்று உம் வீட்டிற்கு வந்தானென்றா கூறுகிறீர் ?''

யோகி :—'' ஆம், என்னிடமிருந்து பணம் பிடுங்கிச் செல்வதற்கு எத்தனையோ முறை அதற்கு முன் வந்திருந்ததுபோல் அன்றும் வந்தான். அவனைக் காணவே எனக்குப் பிடிப்பதில்லை. ஆயினும் என் தங்கையை நினைத்து அவனுக்கு வேண்டிய தளித்து வந்தேன். 'தொண்டை வரளுகிறது, நாவுலர்கிறது; உண்டு பல நாளாயின' என்று கதறினான்! நான் முன் கூறியதுபோல் கருப்பையன் அன்று ஊரிலில்லை யாதலால் நானே அவனுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை யெடுத்து வர உள்ளே சென்றேன். ஆம், அது வரையில் தான் தெரி

கிறது. அதற்கு மேல் நினைவில்லை. என் பின்னேயே தொடர்ந்து வந்து என்னை அவன் பின் புறமிருந்து தாக்கியிருக்க வேண்டும் என்றே நம்புகிறேன். ஆம் என்னை, வயது சென்ற என்னை, அவனுக்குத் தீங்கேதும் நினையாமல் நன்மையே செய்யக் கருதிய என்னை, அவன் பின்னிருந்து தாக்கியிருக்க வேண்டும்.''

சம்புலிங்கத்தின் மூளை விரைவாக வேலை செய்து கொண்டிருந்தது. இப்போக்கிலியார் ? கொடக்கூர் கோவிந்தன் தானா ? அன்றிரவு நுங்கம் பாக்கத்தருகில் குதிரை மீது வந்தவன் கோவிந்தனைப்போல் இருந்தானே ? ஆ! அவன் கோவிந்தனேயானால் நந்தவனச் சந்தையிற் குறி சொன்னவனும் அவனாகத் தான் இருக்கவேண்டும். ஆம், அவன் தான் தன் தலையின் பின்புறத்திற்றாக்கித் தன்னைப் போலீஸ்வீரர் கைகளிற் சிக்கும்படிச் செய்திருக்கவேண்டும்.

ஆனால் கோவிந்தன் முறைப்படி இதே சிறைக் கூடத்துள்ளல்லவோ இருக்கவேண்டும் ? அவன் தப்பிச் சென்றதாக இது வரைக் கேள்வியுறவில்லையே.

இருக்கவேண்டும் என்று நினைத்தது சரி: ஆனால் உண்மையில் இருக்கின்றானா ? இல்லை. பயல் எப்படியோ தப்பிச் சென்று விட்டிருக்க வேண்டும் எனக் கண்டுகொண்டான். எவனோ ஒரு நாடோடி தப்பிச் சென்றானென்று செய்தி பரவிய அன்றே இக்கோவிந்தனும் தப்பிச் சென்றிருக்க வேண்டும். ஏதோ உட்கருத்தைக்கொண்டு போலீஸார் இவன் தப்பியதை வெளிப்படுத்தாதிருக்கின்றனர் போலும் !

சம்பு :—“ உமது தங்கை மகனுக்கு நெற்றியில் நீண்டதோர் தழும்புண்டோ ? மூக்கு மிகவும் நீண்டு நுனியிற் சிறிது வளைந்திருக்குமோ ?''

யோகி :—“ அவன் தான். அவன் தான். உனக்கு அவனை நன்றாகத் தெரியும்போல் இருக்கிறதே ? ஒரு வேளை உன் கூட்டாளிகளில் அப்பயல் கோவிந்தனும் ஒருவனோ? ஐயை

யோ, அப்படித் தானென்று நீ ஒப்புக் கொண்டால் நான் அமைதியாய் இறக்கப் போவதில்லை.''

சம்பு :—'' அவனுக்கும் எனக்கும் முட்டப்பகை. அவன் என் கண் முன்பட்ட அதே நொடியில் கொல்லப் பட்டானுனல் நீர் என்னை மன்னிக்கவேண்டும்.''

யோகி :—'' கொன்றுவிடு, கொன்றுவிடு, சம்புலிங்கம், வேறு ஆலோசனை யின்றி உடனே கொன்றுவிடு. அவன் உயிருடனிருந்தால் இன்னும் எத்துணைத் தீங்கிழைப் பானென்று கூற முடியாது.''

சம்பு :—'' உமது வீட்டிலிருந்த பித்தளை வெள்ளிக் கலங்கள் தானு அச்சாக்குப்பையிற் கண்டவை ?''

யோகி :—'' ஆம், அவைகளாகத் தானிருக்க வேண்டும். என் வீட்டுச் சொத்தையே எடுத்து வைத்து எவன் வீட்டிலோ நான் கொள்ளையடித்து வந்ததாக வல்லவோ பெயர் கட்டினுன் அப் பழிகாரன் ?''

சம்பு :—'' அவன் இச் சிறையிலிருந்து தப்பியவுடன் நேரே உம் வீட்டிற்கு வந்திருக்கவேண்டும். சூழ்ச்சி செய்வதிற் றேர்ந்தவனுதலால் உம்மைத் தொலைத்து உமது பெயரைச் சூடிக்கொண்டால் எளிதில் தப்பிக்கொள்ளலா மென்பதைக் கண்டு கொண்டானுதலால் உம்மை உடனே வெளியேற்றி விட்டான்.''

யோகி :—'' என்ன சொன்னுய் ? இச் சிறையிலிருந்து தப்பினுனு ? அவன் ஏன் இங்கே வந்தான் ?''

சம்பு :—'' ஏனு? குப்புசாமி ஐயரைக் கொன்ற குற்றத்திற்காக. அவன் இங்கேயே இருந்திருந்தால் இதற்குள் தூக்கிற் கல்லவோ சென்றிருக்கவேண்டும் ? ஏன், குப்புசாமி ஐயர் கொலையுண்டதைப்பற்றி நீர் கேள்விப்பட வில்லையா ?''

யோகி :—'' அவனிறந்ததைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனுல் கொன்றவன் யாரென்று தெரியாது. அந்த ஐயரை நான் நன்கறிவேன். என் வீட்டிற்கு இரண்டு மூன்று தடவை அவனே குறிகேட்க வந்திருக்கிறுன். ஆ! கொடிய

நஞ்சை யொத்த ஒரு ஆண்பிள்ளை இருக்கக் கூடு மானல் அது அவனுகத் தானிருக்கவேண்டும். அவன் ஒழிந்தது நல்ல தென்று தான் கூறவேண்டும். இருந்தாலும் இந்தப் பயல் கோவிந்தனு கொன்ருன் அவனை? கொலேகாரப் பயல் என் பெயரைத் தாங்கி இப்பொழுது ஊரை ஏமாற்றி வருகிருனே? நானே அவனால் வஞ்சிக்கப்பட்டு இச்சிறையுட் கிடந்துழல் கிறேன். என் மகனின் குழந்தைகள் மட்டும் இல்லாமலிருந்தால் நான் இருந்தாலென்ன இறந்தாலென்ன? ஒன்றுமில்லே. ஆயி னும் இப்பாழும் அறையில் அழுவாரற்ற பிணமாய்க் கிடக்க எனக்குத் துணியவில்லே."

சம்பு:—"என்னாலியன்ற உதவியைச் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன். கோவிந்தன் விதி முடிந்து விட்ட தென் றே வைத்துக் கொள்ளும். ஏற்கனவே அவன்மேல் எனக்கு ஒரு கண் உண்டு. இப்பொழுது உமக் கிழைத்திருக்கும் தீங் கை நினைக்கும்போது ஆ, அவனைக் கண்டால் கண்டிப்பாய்க் கசக்கிப் பிழிந்து விடப்போகிறேன்."

பெரியவர் நன்றியறிதலுடன் சம்புலிங்கத்தின் கைகளைப் பற்றினர். அவர் கைகள் பனிக்கட்டியைப் போன்றிருந்தன. கைகளைப் பற்றினரே யொழிய அதற்கு மேல் வாய்திறந்து பேசவில்லே. சம்புலிங்கம் நீட்டிய கைகளைப் பின்னுக் கிழுக் காமல் அப்படியே உட்கார்ந்திருந்தான். தக்க வசதி யில்லாமல் அவன் உட்கார்ந்திருந்தது கைகால்களிற் கடுப்பை யுண்டாக் கிற்று. ஆயினும் எங்கே பெரியவர் வருந்துவாரோ என்ற கவலே யால் வலியையும் பொறுத்துக்கொண்டு அசையாமல் உட்கார்ந் திருந்தான்.

ஆ! கோழி கூவுகிறது! பொழுது புலரும் நேரம்.

சட்டெனக் கிழவர் எழுந்து உட்கார்ந்தார். "சம்புலிங் கம்—என்—குழந்தைகள்—நட—ராஜன்—அலர்—மே—லு—" என்று திணறினர். தலே தொங்கிற்று. சவமாகக் கீழே சாய்ந் தார்.

சம்புலிங்கம் உடனே எழுந்து அகல் விளக்கை யேற்றிக் கிழவரது தலேயணைக்குக் கீழ் அவர் கூறிய சடிதம் இருக்கிறதா

வெனப் பார்த்தான். கடிதமும் இருந்தது. அதை யெடுத்துப் பிரித்துப் பார்க்காமல் மேற் சட்டையின் உட்பையில் வைத்துக் கொண்டு கிழவரின் திறந்திருந்த கண்களை மூடிக் கைகால்களைச் சரியாக நீட்டி விட்டு மேலே ஒரு கம்பளியைக்கொண்டு போர்த்தினுன்.

அவனையு மறியாமல் தூக்கம் வந்து அவன் கண்களை அழுத்திற்று. விளக்கை நிறுத்தி விட்டுப் படுத்த மறு நொடியில் ஒரு சிறு குழந்தையைப்போல் அவன் அயர்ந்து தூங்கி விட்டான்.

## ஏழாங் கூறு.

### தப்பிச் செல்லுதல்.

குதிரைப் படைத் தளகர்த்தர் குறுக்கிட்டதனுல் குறித்த நோக்கந் தவறித் தலைவரைக் கை நெகிழவிட்ட சம்புலிங்கத்தின் தோழர்கள் சிறிது நேரம் இடிந்து நின்று விட்டார்கள். பிறகு ஒருவாறு தேறியவர்களாய், "தலைவர் சிறைச்சாலைக்குள் அடைபட்டாலென்ன? எத்தனைபேர் இதற்கு முன் அடைபடவில்லை; அடைபட்டவர்களில் எத்தனைபேர் தப்பிச் செல்லவில்லை? நினைத்துப் பார்த்தால் அவ்வாறு தப்பிச் சென்றவர்களின் பெரும்பாலோர்க்கு நந் தலைவர்க்கிருக்கும் ஆள்கட்டும், பொருளுதவியும் இருந்ததில்லை யன்றோ? இதற்கென்றே மடி கட்டிக் கொண்டு நாம் ஐவர் இருக்கும் பொழுது அவரை வெளியிற் கொண்டு வருவது கடினமோ? பணத்திற்கோ குறைவில்லை. அப்படி அது இல்லாவிட்டாலும் எங்கே எப்படி அதை எவ்வித உழைப்புமின்றிப் பெற முடியும் என்பது தெரிந்த தொன்றே" எனக் கூறிக் கொண்டே பெரிய மேட்டிலிருந்த ஒரு சிற்றுண்டிச் சாலையை நோக்கிச் சென்றனர். போலீஸ்காரர்களுடன் செய்த சண்டையில் ஒவ்வொருவருக்கும் காயங்கள் பட்டிருந்தன. ஆயினும் அதை அப்பொழுது அவர்கள் ஒருபொருட் படுத்தவில்லை. சிற்றுண்டிச் சாலையை யடைந்ததும் உள்ளே சென்று உட்கார்ந்து இனி என்ன செய்யலாம் என ஓர்ந்து ஒரு முடிவு கட்டத் தொடங்கினுர்கள்.

முனியன்:—"எப்படியாச்சும் மொதல்லே அவரெ வெளீலெ கொண்டாந்தூட்டு மறுவேலெ பார்க்கணும். ஆ! ஒரு வழி யிருக்கு! நம்ப ஆளு பக்கிரி இண்ணு ஒருத்தன் நாலஞ்சு நாளுக்கு மின்னெதான் செறச்சாலெக் காவக்காரனு வேலெ யொப்பு கொண்டிருக்கிருன். அவனெப் புடிச்சா நம்ப வேலையை முடிச்சிக்கலாம். என்னு சொல்றே பரட்டே?"

பட்டக்காரன்:—"பரட்டை சொல்றது அப்புறம் ஆகட்டும் எப்படி நீ வேலையை முடிக்கப் போகிருய்?"

முனியன்:—"நல்லா புரிச்சி சொல்லும் ஒனக்கு. நம்ப ஆளெக் கண்டு எந்த அறேலே அவரை அடைச்சிருக்கானுங்க, அந்த அறைக்குக் காவக்காரன் மொறெ யாருது, அவன் ஏதாச்சும் வாங்கிகிட்டு நம்பளுக்கு ஒதவி பண்ணுவானு இண்ணு மொதல்லே கேட்டுகிறது. அப்றம் வேலேயே தொடங்கிறது. எம் பரட்டே நாஞ் சொல்றது சரிதானு?"

பரட்டையோ தலையை அசைத்தானே யொழிய வாயைத் திறந்து ஒன்றும் பதிற் கூறவில்லை. நந்தவனச் சந்தையில் விழுந்த அடிகளில் மூக்காற் பகுதிக்குமேல் அவனுக்கே கிடைத்திருந்ததனுல் அவன் மிகவும் நொந்து போயிருந்தான். அதுவுன்றி உயிரினுமரிய தன் தலைவன் சிறைச்சாலையிலிருப்பதை நினைக்க நினைக்க அவனுக்கு ஒரு நிலை கொள்ளவில்லை.

"என்னு பரட்டே, என்னு வாயைத் தொறக்காமே தலையே மட்டும் அசெக்கிறே. வா, பொறபடுப்போய் அந்தப் பயல் பக்கிரியைப் பாத்தூட்டு வரலாம்" என்று முனியன் அழைத்தான். "இண்ணைக்கு நம்பளாலே ஒண்ணு முடியாது. நாளக்கிப் பாக்கலாம்" என்று கூறிப் பரட்டை படுத்து விட்டான். இவர்களிருவரும் செய்த ஏற்பாட்டின் படித் தலைவர் வெளியில் வருவது எளிது என்று ஒப்புக்கொள்ள முடியாமற் போயினும் அதனுல் ஒன்றுங் கெடுதி நேரிடாது என்பதுணர்ந்து அவர்கள் போகட்டும் எனப் பட்டக்காரன், காசி, தம்மண்ணன் ஆகிய மூவர்களும் கோடம்பாக்கம் சென்றனர்.

நிற்க, சிறைச்சாலைக் கருகிலிருந்த சிற்றுண்டிக் கடைக்குப்

பக்கிரி அடிக்கடி வருவானென்பதை யறிந்திருந்த முனியன் அங்கே போனால் அவனைப் பார்க்கலாம் என்று நினைத்தே பரட்டையை அங்கே கூப்பிட்டது. அதன்படி மறுநாள் நடுப்பகலுக்குமேல் முனியன் பரட்டையை யழைத்துக் கொண்டு அந்த சிற்றுண்டிச் சாலைக்குப் புறப்பட்டான்.

முனியன்:—"பரட்டே, ஏன் உம் மூஞ்ஞு என்னமோ போல இருக்கே?"

பரட்டை:—"இப்ப நம்பளே ஒன்றுங் கேக்காதே ரொம்ப ஒசணையிலே நம்பள் இருக்கிறோம். தெரியிலியா ஒனக்கு?"

முனியன்:—"ஆகா, ஒன்னோடே ஒசனைக்குக் கேப்பானே"

பரட்டை:"என்னடா இவன் இவ்வளவு குறியா ஒசனை பண்ரானேண்ணு வுனக்கு வயித்தே எரியுதோ? ஒன்னோடே எரு மீசைக்குப் பின்னாலே இருக்கிற மூளையைக் காட்டினும் ஏந்தலேலே ரொம்ப மூளை யிருக்குது தெரியுமா ஒனக்கு?"

முனியன்:—"முட்டாளே மீசெக்குப் பின்னாலேயாடா ஒர்த்தன் மூளையை வச்சிருப்பான்? ஒனக்கு இத்னியாச்சும் மூளை யிருந்தால்லே அது வெளங்கப் போவுது. அது கெடக்குட்டும். என்ன தான் அப்படிப் பெரிசா ஒசனை பண்றே சொல்லே பார்க்கலாம்."

பரட்டை:—"ஒண்ணுமில்லே. நம்ப இந்த காவக்காரன் பக்கிரியை நம்பிக்கிட்டுப் போரமே, அவன் மின்னேயெப்போல இல்லாமல் ஞானம் பொறந்து போய் அது தப்பு இது தம்பட்டம் இண்ணு ஆரம்பிச்சாண்ணு என்ன ஆவறது? அவரைக் காப்பத்த போயி நாம்ப எல்லாருமில்லே பள்ளிக்கொடத்துக்கு போவணும்?"

முனியன்:—"போடா போ. கருப்பு நாயி வெள்ளெ நாயா மாறினக்கூட காவக்காரன் ஒருத்தனும் ஞானம் பொறந்து மாறிப்பூட மாட்டான். பைத்தியமா ஒனக்கு? ஒழுங்கா ஒருத்தன் வேலே பாத்து வந்தா இந்த நாள்லே வயிறு நெறயா சோறு கிடைக்காது இண்ணு தெரியாதா ஒனக்கு?"

(தொடரும்).

திருவாளர் சி. வை. தாமோதரம் பிள்ளை
யவர்கள் பி. ஏ., பி. எல்.



தொல்காப்பியம், கலித்தொகை, வீரசோழியம்,
தணிகைப் புராண முதலிய நூல்களின்
பதிப்பாசிரியர்.

இவர்கள் வரலாற்றை ஏழாஞ் சிலம்பிற் காண்க.

ஓம் சிவம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு அ } மெய்கண்டான்யாண்டு-எாஎ சித்திரைத் திங்கள் 1930ஹூ ஏப்ரல்மூ--மேமூ { பரல் ச

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### தனித்திருக் குறுந்தொகை.

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

ஒரு பெரிய இரத்தினத்தினுடைய ஒளிபோல் சோதி உருவமாய் விளங்குகிற கடவுள், ஒரு விறகுக் கட்டையில் தீ மறைந்து அடங்கி யிருத்தல் போலவும், நல்ல பாலில் நெய் மறைந்து அடங்கியிருத்தல் போலவும், உலகிலுள்ள உயிர்ப்பொருள் உயிரில் பொருள் ஆகிய எல் லாப் பொருள்களிலும் ஊனக் கண்ணாற் பார்ப்பவர்களுக்குத் தோன்றா மல், மறைந்திருக்கின்றான். அப்படி மறைந்திருக்கிற கடவுள், ஒருவன் விறகுக் கட்டையை ஒருகோலிற் கயிற்றைச் சுற்றிக் கடைந்தபொழுது விறகுக் கட்டையிலிருந்து தீ வெளிப்படுதல் போலவும், நல்ல பாலை மத்திற் கயிற்றைச் சுற்றிக் கடைந்தவழிபாலிலிருந்து நெய் வெளிப் படுதல் போலவும், மக்கள் தாங்கள் கடவுளிடத்தில் தங்களுடைய உண்

மையான அன்பைத் தங்கள் அறிவுகொண்டு செலுத்தி ஒழுகினல் அவர்களுடைய உண்மை அறிவுக்கண்ணுக்கு (ஞானக்கண்ணுக்கு) வெளிப்பட்டு நிற்பன்.

முதல் வரியிலுள்ள இரண்டாவது இல்உவமவுருபு. உறவு=அன்பு. உணர்வு=உண்மை அறிவு. தீயினன் என்பதை தீயில்+நன் எனப் பிரிக்க. முதல் இரண்டு வரிகளும் ஒரு வாக்கியம். சோதியான் - எழுவாய், நின்றுளன் - பயனிலை. பின் இரண்டு வரிகளுக்கும் - அவன் - தோன்ரு எழுவாய், நிற்குமே - பயனிலை. விறகில் தீ என்ற உவமானமும், பாலில் நெய் என்ற உவமானமும் கடவுளைத் தங்கள் உள்ளத்தில் மறைந்து நின்று பொதுவாய் ஆண்டு கொண்டிருக்கிறவன் என்று அறியாத(பெத்தான்மாக்களுக்கு)பந்தத்தையுடைய அல்லது கட்டையுடைய ஆன்மாக்களுக்குக் கூறப்படும் உவமானங்கள். அவர்களில் விறகில் தீ மறைந்திருத்தலைக் கூர்ந்த மதியினர் அறிதற்கும், பாலில் நெய் மறைந்திருத்தலை மந்த மதியினர் அறிதற்கும் உவமைகளாகக் கூறப்பட்டன.

மக்கள் ஞாயிற்றை (சூரியனை) ஞாயிற்றினொளியால் பார்க்க முடியுமே யன்றி விளக்கொளி முதலிய பிற ஒளிகளால் பார்க்க முடியாது. அதுபோல் அவர்கள் கடவுளை அவனுடைய அருளறிவினுற் பார்க்க முடியுமே யன்றி உயிரறிவினல் அறிய முடியாது என்னுங் கருத்து இத்தேவாரத்தில் கூறப்பட்டது. முதல் இரண்டு வரிகளிலும் கடவுள் அருட்கண்ணில்லாதவர்க்குத் தோன்ருமலிருப்பதும், பின் இரண்டு வரிகளிலும் கடவுள் அருட்கண்ணுள்ளோர்க்கு வெளிப்படுதலும் கூறப்பட்டன. இக்கருத்தினைக் கீழ்வருஞ் செய்யுட்களாலறிக.

'எங்குந்தான் வியாபி யாய்நின் றுணரும்இவ் ஆன்மா வென்னில்
தங்கிடும் அவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமா் புலனென் ஞென்ருப் பார்த்திடல் பகரல்வேண்டும்
இங்கெலாம் ஒழிந்தா னிற்ப தெங்ஙனம் இயம்பல் வேண்டும்.

((சித்தியார் சூத் - ச, அதி - உ)

'அருட்கண்ணி லாதார்க்கு அரும்பொருள் தோன்ரு
அருட்கண்ணு ளோர்க்கு எதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்குஅங்கு இரவியுந் தோன்ருத்
தெருட்கண்ணி னோர்க்குஎங்குஞ் சீரொளி யாமே. (திருமந்திரம்.)

மா. வே. நெல்லையப்பபிள்ளை

# பெருமிழலைக் குறும்பநாயனாரது திருப்பதி

[கும்பகோணம் T. V. சதாசிவபண்டாரத்தாரவர்கள்]

சிவனடியார் அறுபத்துமூவருள் ஒருவராகிய பெருமிழலைக் குறும்பநாயனார் வாழ்ந்து வீடுபேறெய்திய திருப்பதி பெருமிழலை என்பது திருத்தொண்டர் புராணம் படித்தோர் யாவரும் நன்கறிந்ததொன்றும். இஃது இங்ஙனமாக, சைவ சமயாசாரியர்களால் பாடப்பெற்றதும், திருஞான சம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் படிக்காசு அருளப்பெற்றதுமாகிய திருவீழிமிழலை என்னும் திருப்பதியே இந்நாயனாரது பெருமிழலை எனக்கொண்டனர் பிற்காலத்தினர். ஆதலால், இத்திருப்பதிகள் இரண்டும் ஒன்றோ? அன்றிவேறோ? வேறாயின் பெருமிழலை யாண்டையது? என்பவற்றை ஆராய்வாம்.

சுந்தரமூர்த்திகள் அருளிய திருநாட்டுத் தொகையிலுள்ள 'மிழலைநாட்டு மிழலையே வெண்ணிநாட்டு மிழலையே' என்ற அடியால் மிழலை என்னும் பெயருடைய திருப்பதிகள் இரண்டு உண்டு என்பது வெளியாகின்றது. அன்றியும் இவ்விரு மிழலைகளுள் ஒன்று மிழலை நாட்டிலும் மற்றொன்று வெண்ணி நாட்டிலும் இருத்தல் வேண்டுமென்பது அவ்வடியாலே அறியப்படுகின்றது. ஆசிரியர் சேக்கிழார் நமது குறும்பநாயனாரது திருப்பதி, மிழலை நாட்டிலுள்ள பெருமிழலை என்று மிகத்தெளிவாய்க் கூறியுள்ளனர். இதனை,

சூதநெருங்கு குலைத்தெங்கு பலவுபூகஞ் சூழ்புடைத்தாய்
வீதிதோறு நீற்றினொளி விரியமேவி விளங்குபதி
நீதிவழுவா நெறியினராய் நிலவுங்குடியா னெடுநிலத்து
மீதுவிளங்குந் தொன்மையது மிழலைநாட்டுப் பெருமிழலை

—பெரியபுராணம், குறும்ப 1.

என்ற பாடலால் உணர்க. அன்றியும் அவ்வாசிரியர், வீழிமிழலையை மிழலை நாட்டிலுள்ள திருப்பதி என்று யாண்டும் குறிப்பிடவில்லை. ஆதலால் அவர் வீழிமிழலையும் பெருமிழலை

யும் வெவ்வேறு திருப்பதிகள் என்றே கருதியுள்ளாரென்பது ஒருதலை. எனவே, சுந்தரமூர்த்திகள் கூறியுள்ள மிழலைநாட்டு மிழலையும் வெண்ணிநாட்டு மிழலையும் முறையே பெருமிழலையும் வீழிமிழலையுமாயிருத்தல் வேண்டும் என்பது நன்கு துணியப் படும். ஆகவே இவ்விரண்டும் வெவ்வேறு திருப்பதிகளேயாம். இங்ஙனமே, ஆனாய நாயனாரது மங்கலமும்,[1] ஏயர்கோன் கலிக் காம நாயனாரது பெரு மங்கலமும்,[2] அரிவாள் தாயநாயனாரது கணமங்கலமும்,[3] பொதுவாக மங்கல மெனப் படினும் அவை வேறுவேறு திருப்பதிகளாயிருத்தல் ஈண்டு அறியத்தக்கது. இத் துணையுங் கூறிய வாற்றால், பெருமிழலைக் குறும்பநாயனாரது திருப்பதி வெண்ணி நாட்டு வீழிமிழலை யன்றென்பதும், மிழலை நாட்டுப் பெருமிழலையேயாம் என்பதும் இனிது புலப்படும்.

இனி, மிழலை நாட்டிலுள்ள பெருமிழலை எவ்விடத்துள்ளது என்பதைத் துருவி நோக்குவாம். முற்காலத்தில் சோழமண் டலம் ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

அவற்றுள் இராசேந்திர சிங்கவளநாடு என்பதும் ஒன்று கும். ஒவ்வொரு வளநாடு பலநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந் தது; எனவே, இராசேந்திர சிங்கவளநாட்டிலும் பல உள்நாடு கள் இருந்திருத்தல் வேண்டும். இவ்வள்நாடு இருபத்திரண்டு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த தென்பது கல்வெட்டு ஆராய்ச் சியால் புலப்படுகின்றது; அவற்றுள் மிழலைநாடு என்பதும் ஒன் றாகும். இதனை 'இராஜேந்திர சிங்கவளநாட்டு மிழலைநாட்டுச் சேய்நலூர் சபையார் இடக்கடவ திருமெய்க்காப்பு ஒன்றும்†' என்ற கல்வெட்டுப்பகுதியால் நன்குணரலாம் இக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள சேய்நலூர், அறுபான் மும்மை நாயன்மார் களுள் ஒருவராகிய சண்டேசுவரநாயனார் திருவவதாரம் செய்த ருளியதும் மண்ணியாற்றின் கரையில் உள்ளதுமான திருச்சேய்

---

1. பெரியபுராணம், ஆனாயநாயனார் புராணம்—7.
2. " ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் —1.
3. " அரிவாள்தாய நாயனார் புராணம்—1.

† South Indian Inscriptions Vol II Part III PP 331.

ஞலூரேயாகும். இத்திருச்சேய்ஞலூர் மிழலை நாட்டிலுள்ளது என்பது மேற்குறித்த கல்வெட்டால் புலப்படும் செய்தியாகும். இத்திருப்பதிக் கண்மையில் இரண்டுமைலில் மிழலை என்ற அழிந்த ஊர் ஒன்று உள்ளது. இஃது இப்பொழுது கும்ப கோணத்திலிருந்து நான்கு மைல் தூரத்தில் சென்னைக்குப் போகும் பெருவழியில் உள்ளது. யாம் நேரிற் சென்று அதனைப் பார்த்தபோது அழிவுற்ற நிலையிலுள்ள ஒரு பழைய சிவாலயம் அங்கே காணப்பட்டது. எக்காரணத்தாலோ அச்சிவாலயமும் அதனைச் சூழ்ந்துள்ள ஊரும் அழிந்துபோய்விட்டன. அவ் வூரினர் அதற்கருகிலுள்ள களம்பரம் என்ற ஊரில் குடியேறி யுள்ளனர். மிழலையும் அதிலுள்ள சிவாலயமும் பழையநாளில் நல்ல நிலையில் இருந்திருத்தல் வேண்டும். அழிவுற்ற அவ்வால யத்திலுள்ள படிமங்கள் அதில் ஒரு புறத்தில் புதியதாக அமைக் கப்பெற்றுள்ள ஒரு சிறு அறையுள் வைக்கப்பெற்று வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன. அவ்விடத்திற் பெருமிழலைக்குறும் பநாயனாரது படிமம் இன்றும் உள்ளது. ஆகவே, புலவர் பெரு மானாகிய சேக்கிழார், குறும்பநாயனாரது திருப்பதியாகக் கூறி யுள்ள பெருமிழலை மிழலைநாட்டிலுள்ள இம்மிழலையே யாதல் அறிந்து கொள்க.

இனி, சேக்கிழாரடிகள் குறும்பநாயனாரது திருப்பதி பெரு மிழலை என்றன்றோ உரைத்துள்ளனரெனின், கூறுவாம். பாப நாசம் தாலுக்காவிலுள்ள மிலட்டூர் முற்காலத்தில் பெருமிலட்டூர் என்று வழங்கிற்று என்பது 'நித்தவிநோத வளநாட்டுக் கிழார்க் கூற்றத்துப் பெருமிலட்டூர் ஊரார் யாண்டு இருபத்தொன்பதா வது முதல் காசு ஒன்றுக்கு ஆட்டைவட்டன் முக்குறுணி நெல் லுப் போலிசையாகத் தஞ்சாவூர் ஸ்ரீராஜராஜேஸ்வரம் உடை யார் பெரும் பண்டாரத்தே ஆடவல்லான் என்னும் மரக்கா லால் அளக்கக் கடவர்களாகக் கொண்ட காசு இருநூறினால் ஆண்டாண்டுதொறும் அளக்கக் கடவநெல்லு ஐம்பதின் கலம்' (South Indian Inscriptions Vol II No 6.) என்னும் கல்வெட்டினால் புலப்படுகின்றது. இதனைப்போலவே, தஞ்சா

லூர்த் தாலுக்காவிலுள்ள ஆற்காடு என்னும் ஊர் பழையநாளில் பேராற்காடு எனவும் சிநக்கவள்ளலுக்குரிய ஊர்களுள் ஒன்றாகிய அரசூர் பேரரசூர் எனவும் வழங்கிவந்தன என்று தெரிகிறது. (South Indian Inscriptions. Vol II Introduction Page 26.) எனவே, பெருமிலட்டூர், பேராற்காடு, பேரரசூர் என்று முற்காலத்தில் வழங்கிய ஊர்கள் முறையே மிலட்டூர், ஆற்காடு, அரசூர் என்று தற்காலத்தில் வழங்குவதுபோல, நமது குறும்பநாயனாரது திருப்பதியாகிய பெருமிழலையும் இஞ்ஞான்று மிழலை என வழங்குகின்றது என்றுணர்க.

---

# சிவஞான போதக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

## முகவுரை

சிவஞான போதம் என்பது ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னே மெய்கண்ட தேவரால் அருளிச்செய்யப்பட்ட ஒரு சித்தாந்த நூல். சித்தாந்தம் என்பது முடிந்த முடிபாகிய உண்மை (absolute truth) யாகும்; அதற்கு மேல் உண்மையில்லை. சித்தாந்தம் எனினும் ஆகமாந்தம் எனினும் ஒக்கும். சித்தாந்த உண்மையை உணர்த்தும் இந்தச் சிவஞான போத நூலானது முதலாவது சிவபெருமானால் சிவகணங்களுக்குத் தலைவராகிய நந்தி யெம்பெருமானுக்கு உணர்த்தப் பட்டுப் பின் நந்தி யெம்பெருமானால் சனற்குமார முனிவருக்கு உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவஞானபோதம் இறுதிப் பாயிரத்தில் "எந்தை சனற்குமாரன் ஏத்தித் தொழ இயல்பாம் நந்தி யுரைத்தருளும் ஞானநூல்" எனக் கூறப்பட்டுள்ளது. சனற்குமார முனிவர் கேட்க நந்தியெம்பெருமான் உரைத்த நூலை மெய்கண்ட தேவர் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் இக் காலத்துக்கு ஏற்ப ஏது திருட்டாந்தங்களுடன் கூறியருளினார். அந்நூல் மக்களுடைய அக இருளை அகற்றும் பன்னிரண்டு சூத்திரங்களையுடையது. இந்தப் பன்னிரண்டு சூத்திரங்களை

யும் பன்னிரு பகுதிகளாக்கி அவற்றிற் கூறப்படும் உண்மை களைக் கூடியவரை படிப்பவர்கள் எளிதில் அறியும் வண்ணம் எளிய நடையில் எழுதித் தரவேண்டுமென்று 'செந்தமிழ்ச் செல்விப்' பத்திராதிபர் கேட்டுக் கொண்டபடி இறைவன் திரு வருளைத் துணையாகக் கொண்டு சிவஞான போதக் கருத்து எழுதப்படுகின்றது. அதிற் குற்றங்குறைகளிருப்பின் அறிஞர் கள் ஏதுக்களுடன் எடுத்துக் காட்டுவார்களாக.

2. சிவஞான போத நூலிற் கூறப்படுவன கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள்கள், இம்முப் பொருள்கள் பற்றியன்றி மக்களால் அறியப்படும் உண்மைகள் ஒன்றும் இல்லை. இந்த முப்பொருள்களைப் பற்றி அறிதற்கு அடிப் படையாக நூலறிவு வேண்டப்படும். நூலறிவு மாத்திரம் நூலைச் சொன்னவருடைய அறிவு ஆகுமே யல்லாமல் அதனை ஓதுகிறவர்களது அறிவு ஆகாது. நூலறிவு ஓதுகிறவர்களு டைய அறிவாக ஆதற்கு முதலாவது ஆராய்ச்சி அறிவு வேண் டப்படும். ஆராய்ச்சி அறிவுக்குத் துணையாயுள்ளன இலக்கண நூலும் அளவை நூலும் ஆம். உண்மையை அறிகிறவனுக்கு ஆராய்ச்சி அறிவு மாத்திரம் உண்மை அறிவைக் கொடுத்து விடாது. ஆராய்ச்சி அறிவில் ஐய உணர்வு திரிபு உணர்வு களாகிய குறைபாடுகள் உள்ளன. ஆராய்ச்சி அறிவானது இந் தக் குறைபாடுகளினின்று முற்றிலும் நீங்கி, துணிந்து தெளிந்து அறிவதாகிய உண்மை அறிவாக ஆதற்கு, ஆராய்கிறவனுடைய உள்ளமானது தன் முனைப்பு (தற்போதம்) நீங்கித் தூய்மை யுடையதாய் விளங்கல் வேண்டும். உள்ளந் தூய்மையாதற்குச் சாதனம் வேண்டப்படும். இவ்வாறு தூய்மையான உள்ளத் தில் இறைவனுடைய நிறைவு அறிவு (வியாபக அறிவு) சேர்ந்து விளங்கும். இறைவனுடைய நிறைவு அறிவு ஆராய்வானுடைய தூய அறிவிற் சேர்ந்து அத்துவிதமாய் (இரண்டற) விளங்குத லாலே அவன் அறியும் அறிவே உண்மை அறிவாகும். இந்த உண்மை அறிவு மெய்யுணர்வு என்றும், திருவடி ஞானம் என் றும், பதிஞானம் என்றும் கூறப்படும்.

3. சிவஞான போத நூலானது முதல் ஆறு சூத்திரங்களால் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள்கள் உண்மையையும், அவற்றின் இலக்கணத்தையும் கருதல் அளவை (அனுமானப் பிரமாணம்) ஆராய்ச்சி வழியில் உணர்த்தும். இவ்வாறு உணர்த்தப்படுவது போது இலக்கணம் அல்லது தடத்த இலக்கணம் ஆகும். பின் ஆறு சூத்திரங்களும் தூய உள்ளமுடைய ஒருவர் தம்முள்ளே உணரும் உணர்வு வழியில் முப்பொருள்களின் உண்மை இலக்கணத்தை உணர்த்தும். இந்த உண்மை இலக்கணம் சொரூப இலக்கண மென்றும் கூறப்படும். உண்மை இலக்கணம் உள்ளுணர்வில் உணர்தற்கு இலக்கண நூலும் அளவை நூலும் வேண்டப் படா. வேண்டப்படுவன, ஒருவன் தானே செய்யும் சாதனங்களாகும். அச்சாதனங்கள் இவை என்பதும் அச்சாதனங்களால் அடையும் பயன்கள் இவை என்பதும், அப்பயனை அடைந்தோர் தன்மைகள் இவை என்பதும் பின் ஆறு சூத்திரங்களிற் கூறப்படும்.

4. ஒவ்வொரு சூத்திரமும் இரண்டு முதல் ஏழு அதிகரணங்களை உடையது. அதிகரணம் என்பது கூறு. ஒவ்வொரு சூத்திரத்திலுள்ள அதிகரணங்களும் ஒன்றுக் கொன்று ஏதுவும் பயனுமாய்ச் சங்கிலித் தொடர்போல் ஒரு பொருள் மேல் வருவன. ஒவ்வொரு அதிகரணத்துள்ளும் ஐந்து உறுப்புகள் அமைந்துள்ளன. அவை 1 மேற்கோள், 2 ஐயப்பாடு, 3 பிறர் கூறும் பக்கம், 4 பிறர்பக்கத்தை மறுத்துரைக்கும் சித்தாந்தம், 5 இயைபு என்பன. மேற்கோள் என்பது அதிகரணத்தில் எடுத்துக் கூறப்படும் பொருள். ஐயப்பாடு என்பது அப்படி எடுத்துக் கூறப்படும் பொருள் உண்டோ இல்லையோ என்று மனதில் எழும் ஐயம் (சந்தேகம்), பிறர் கூறும் பக்கம் என்பது சித்தாந்த வாதி அல்லாத பிறவாதிகள் கூறும் கருத்து. பிறர் பக்கத்தை மறுத்துரைக்கும் சித்தாந்தம் என்பது அப்படிப் பிறவாதிகள் கூறுங்கருத்தை ஏதுக்களுடன் மறுத்து உரைத்துச் சித்தாந்தத் துணிவை நிலை நாட்டுதல். இயைபு என்பது அந்தச் சித்தாந்தத் துணிவுக்கு எடுத்துக் காட்டும் திருட்டாந்தம்.

**5.** ஒவ்வொரு சூத்திரம் ஒவ்வொரு பகுதியாகவும் சூத்திரத்திலுள்ள அதிகரணம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு உட்பகுதியாகவும் ; வைத்துச் சிவஞான போதக் கருத்துக் கூறப்படும்.

## முதலாவது பகுதி

### கடவுள் உண்மை

வேதங்களும் ஆகமங்களும், முறையே கடவுளது பொது இலக்கணத்தையும், சிறப்பு இலக்கணத்தையும் கூறுகின்றன வாகத் திருமூலர் முதலிய அருட் பெருமை வாய்ந்த பெரியோர் கூறுகின்றார்கள். பலவகைத் தகுதி மக்களுக்குப் பலபட விரித்துக்கூறும், அவற்றின் ஒருமைக் கருத்தை யுணர்த்த எழுந்தது சிவஞானபோதம். அவைகளின் பகுதிகளையாவது வேறு அருள்நூல்களையாவது கற்றுக் கேட்ட ஒருவனுக்குத் தனது உள்ளத்தில் கடவுள் உண்டோ இல்லையோ என்ற ஐயம் நிகழுமன்றோ ? அந்த ஐயத்தை நீக்குதற்கு எழுந்தது முதலாவது சூத்திரம். இந்த ஐயத்தை நீக்கும் அறிவுக்குக் கருவியாயுதவுவது கருதல் அளவை (அனுமானப்பிரமாணம்). கருதல் அளவையாவது ஒருவன் தன் வீட்டு அடுக்களையில் எரியும் நெருப்புடன் புகையும் எப்பொழுதும் உடன் இருப்பதாகக் கண்ட பழக்க அறிவை (அநுபவ அறிவை)த் துணையாகக் கொண்டு தூரத்திலுள்ள ஒரு மலையிலிருந்து புகை வருதலைக் கண்டு அதில் நெருப்பைக் காணவிட்டாலும் நெருப்பு உள்ளது என்று கருதல். இந்தக் கருதல் அளவைச் சான்று (inferential evidence) அறிவுடைமக்கட் சட்டங்களில் உண்டு. கருதல் அளவை அறிவுக்கு உள்ளத்தில் ஒருமையுடன் ஊன்றி நினைத்தல் (சிந்தித்தல்) வேண்டும். அருள் நூல்களைக் கற்றுக் கேட்டு அறிந்த உரை அளவை அறிவுடன் இந்தக் கருதல் அளவை அறியவும் சேர்ந்து ஒருவனுடைய உள்ளத்தில் கடவுள் உண்டென்னும் உண்மை உறுதிப்பாடு அடைகிறது. மலையிற் காணப்படும் புகை போல உலகில் ஒருவன் கண்ணுக்குக் காணப்படும் பொருள்களெல்லாம் ஆண் உயிர் உடல்களும், பெண் உயிர்

உடல்களும் ஆண் என்றும் பெண் என்றும் பகுத்தறியப் படாத உயிர் உடல்களும் உயிரில்லாத பொருள்களும் ஆகும். இந்த உயிர்ப் பொருள்களும் உயிரில்லாத பொருள்களுமே உலகம் ஆகும். உயிர்ப் பொருள்கள் தனித்தனியாய் ஒரு காலத்தில் பிறத்தலையும், சிலகாலம் இருத்தலையும், பின் அழிதலையும் நாம் பார்க்கிறோம். உலகம் முழுமையும் இருத்தல மாத்திரம் நாம் பார்க்கிறோம். உலகம் முழுமையும் ஒரு காலத்தில் உண்டாதலை யும், மற்றொரு காலத்தில் அழிதலையும் சிறுவாழ் நாளுடைய நாம் பார்த்தல் முடியாது. உலகத்தின் இருப்பு நிலையிலிருந்து அது முன் ஒரு காலத்தில் தோன்றி இருத்தல் வேண்டும் என்ற அதன் தோற்ற நிலையையும் பின் அது ஒரு காலத்தில் அழியும் என்ற அதன் அழிவு நிலையையும் நாம் கருதி அறியலாம்.

(2) ஈசல் முதலிய சிற்றுயிர்கள் எல்லாம் மொத்தமாக ஒரு நாளில் அல்லது ஒரு நேரத்தில் உண்டாதலையும், மற்றொரு நாளில் அல்லது மற்றொரு நேரத்தில் அழிதலையும் நாம் பார்க் கிறோம். வேம்பு முதலிய சில மரங்களின் இலைகள் வேனிற் காலத்தில் மொத்தமாய் உதிர்ந்து வீழ்தலையும், மழைக் காலத் தில் தளிர்த்து உண்டாதலையும் நாம் பார்க்கிறோம். இவைகள் போன்ற இயற்கை நிகழ்ச்சிகளிலிருந்து நமது பார்வையை நீட்டி உலகம் ஒரு காலத்தில் தோன்றுதலும், நீண்ட காலம் கழிந்து மற்றொரு காலத்தில் அழிதலும் உண்டு என்று நாம் அறிந்து கொள்ளலாம். இன்னும் மாயா காரிய உலகம் நமது ஊனக் கண்ணாற் கண்டு சுட்டி அறியப்படுவதாயும் பல்வேறு வகைத் தாய்ச் சடமாயு மிருத்தலால் அத்தன்மைகளை உடைய பொருள் கள் அழிய நாம் நமது அநுபவ அறிவிற் காணுதல் போல் உல கத்தையும் அழிதலுடையது என அறியலாம். தற்காலம் மேற்கு நாட்டு இயற்கை ஆராய்ச்சி யாளர்களும் பகலோனுடைய ஒளி குறைந்து வருதலைக் காரணமாகக் கொண்டு இந்த உலகமும் நீண்ட காலங்கழிந்தபின் அழிதல் கூடும் என்று கருதுகிறார்கள். ஆகவே, இந்த உலகமானது தோற்றம், இருப்பு, அழிதல் என் னும் மூன்று தொழில்களையும் உடையது என, நாம் அறிகி றோம்,

(3) முன்னே கூறியபடி உலகம் தோன்றுதலையும் அழிதலையும் நாம் பார்க்க முடியாவிட்டாலும் உலகத்தின் இருப்பு நிலையை நாம் மொத்தமாகவும், தனிமையாகவும் பார்க்கிறோம். அவ்வாறு பார்க்குங்கால் உலக இயற்கை நிகழ்ச்சிகளெல்லாம் ஒழுங்காயும் விலக்க வொண்ணு நியமம் (inevitable law) உடையனவாயும் முடிவில் ஒரு நற்பயன் உண்டாகும் முறைமையுடையனவாயும் நிகழ்கின்றன. தனிப் பொருள்கள் நாம் வியப்படையும்படி தோன்றுதலையும், இருத்தலையும், அழிதலையும் பார்க்கிறோம். உலக நிகழ்ச்சிகள் இவ்வாறு நிகழ்த்தலிலிருந்து இவைகளை யெல்லாம் இயக்க வல்ல ஒரு முதல்வனுகிய கடவுள் இருத்தல் வேண்டும் என்று நாம் கருதுகிறோம். வீடு போன்ற செயற்கைப் பொருளொன்றிலுள்ள தொழிற்பாட்டின் றிறனை நாம் பார்த்து அதனைக் கட்டினவனை நேரிற் பார்க்கா விட்டாலும் அறிவுடைய ஒருவன் அதனைக் கட்டியிருத்தல் வேண்டும் என்று நாம் கருதி அறிதல் போல உலக நடப்பைப் பார்த்த நாம் அதனைச் செய்யும் ஆற்றலுடைய ஒரு கடவுள் இருத்தல் வேண்டும் என்று நாம் கருதல் அளவை அறிவாக அறிகிறோம். இத்துடன் முதலாவது அதிகாரம் முடிந்தது.

---

# கம்பன் கவிச்சுவை யமைப்பு

[திரு. அ. வரத நஞ்சைய பிள்ளை அவர்கள்]

உயர்தனிச் செம்மொழிகளென ஆன்றோர் விதந்தோதும் மொழிகளுள் நம் நாட்டு மொழியாகிய தமிழ்மொழியும் ஒன்றும். வடமொழி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் மிகச் சிறந்த காப்பிய நலங்கனிந்த சொற்சுவை பொருட்சுவைகள் துளும்பும் பற்பல நூல்களிருத்தல்போலவே நம் தென்மொழியிலும் பலப்பல நூற்களுள்ளன. காளிதாசன், பர்த்தருகரி, ஷேக்ஸ்பியர், மில்டன், கார்லைல், ஸாக்ரடீஸ், போன்றோர், எங்கள் மொழியினைப் புனைதற்கென்றே தோன்றிய "அரும்பெறற்புலவர் மணிகள்" என்போர்க்கெதிராய், நாணுது தலைநிமிர்ந்து அஃதே

போல எங்கள் தொன்மொழியாம் தமிழ்மொழியையும் அணியுறுத்தி உயர்வு பெறுதற்குத் திருவள்ளுவனார், கம்பர், சீத்தலைச் சாத்தர், இளங்கோவடிகள், சேக்கிழார், கச்சியப்ப சிவாச்சாரியார், சிவஞானமுனிவர், கச்சியப்பசுவாமிகள், சிவப்பிரகாசர், குமரகுருபரர், நணுகிய காலததே மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் போன்ற தெய்வப்புலமைச் சீரியல்வாய்ந்தோராய்க் கருவிலே திருவுடையராய்ப் பற்பல மேலோர் தோன்றியுள்ளாரென நாமுங்கூறி இறுமாத்தற்குரியேம். நம் நாடு வளங்குறைந்து வறுமைமிக்குறினும் நமது மொழி வளம் ஏனைமொழிகளுக்கிணையாகவோ அல்லது ஒரு படி அதிகமாகவோ நின்று விளங்குவதேயன்றி அவற்றிற்குத் தலை தாழ்த்துக்குறையும் நிலையில் என்றுமிராது. நூலின் சுவைகளையே ஆராய்ந்து மகிழும் கல்வி விநோதர்கள் இம்மொழியின் சுவையைச் சற்று நுகரும் பேறு பெறுவாராயின் வேறெம்மொழிகளையும் வெறுக்கப்புகுவரென்பது முற்றும் உண்மையே. ஆங்கில நாட்டிற்பிறந்து அம்மொழிப்பாலையே பருகி வளர்ந்த மேதாவியார் ஒருவர் (ஜி. யு. போப்) தம் கல்லறையின்மேல் தம்மை "ஒரு தமிழ் மாணவகன்" எனப் பொறித்துக் கல் நடுமாறு கூறியிறந்தனரெனின், நம்மொழியின் பெறுமைக்கு வேறு சான்றுகள் கூறவேண்டா. உலக நூற்களாகிய உடல்நூல், இயற்கைநூல், வானநூல், உலோக நூல் முதலவாய் ஆங்கில மொழியில் பெருக்கப்பட்டுள்ள கலைகள் நம்மொழியில் இல்லையென்னும் குறையை நாம் தலைநாணி ஏற்கவேண்டியதே. ஈங்கு அவற்றைவிட்டுக் கற்போர்மனதைக் கவர்ந்து அடிக்கடி உவகைக்கடலினுள்ளும் வீரச்சுவைக்குள்ளும் ஏனைப் பல சுவைக்குள்ளும் புகுத்துப் புகுத்து ஈர்த்துச்செல்லும் கதைமொழி பாட்டுகளைப்பற்றியே எடுத்துக்கொண்டோம்; ஆதலின் அவைவயிற்றையே பற்றிப் பேசுவோம்.

யாம் மேலே காட்டியவாறு செந்தமிழ் மடந்தை செய்தவப்பேற்றால் வந்தவதரித்த மதிநுட்பம் நூலோடுடைய புலவர் பெருமக்கள் பலரெனினும், 'கம்பர்' என்பார் ஒருவரையே "கல்வியில் பெரியன் கம்பன்" என்றும், இதுவென்ன கம்ப

சூத்திரமா? என்றும் எடுத்துக் குறித்தோதப்படுதலால், அவர் இயற்றிய 'இராமாவதாரம்' என்னும் நூலிற் காணப்படும் மிக அருமை பெருமை வாய்ந்த சொல்வளம் பொருள் நயங்களைக் கொண்டே அவ்வாறு தமிழுலகம் அவரைப் பாராட்டுவதாயிற் றென உணர்கின்றோம். நம் ஊகை வலியுறும் வண்ணம் அவ் விராமாவதாரச் சிறப்புப் பாயிரத்திலுள்ளதோர் கவியும் துணை செய்கின்றது. அது:—

> இம்பர் நாட்டிற் செல்வமெலா மெய்தியரசாண் டிருந்தாலும்
> உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்குநீழலிருந்தாலும்
> செம்பொன் மேருவனைய புயத்திறல்சேரி ராமன்றிருக்கதையிற்
> கம்பநாடன் கவிதையிற்போற் கற்றோர்க்கிதயங் களியாதே.

என்னுஞ்செய்யுளேயாம். இவ்வுலகத்தின் இன்பங்களுட்சிற ந்த இன்பம் யாதாகலாம்? கருதிய கருதியவாறே கைக்கூட் டற்கேற்ற பெருஞ்செல்வம் மிகப்பெற்று, உலகமுற்றும் ஒரு தானே அரசாளும் பேறுவாய்ப்ப இருத்தலன்றி வேறென்? இந்நிலைமையை அடையினும், அன்றி மறுமை யுலகின் இன்பம் யாதாக இருக்கும்? அமுதமுண்டு இறவாது வானநாட்டரம் பையர் சூழக்குலவிப் பிறிதொன்றும் வேண்டாப் பெற்றியின் மகிழ்ந்திருப்பதாகலாம், இவ்விரண்டும் ஒருசேர எய்தி நுகர்ந்து பெறும் இன்பம் அனைத்தும், கம்பன் இயற்றிய இராமகதையின் ஒரு செய்யுளைக்கற்று அடையும் இன்பத்தைப்போல் சிறந்த இன்பம் அளிக்கமாட்டா எனக் காட்டப்பட்டது.

அட! ஈதென்ன! வாய்மைதானோ? ஒரு கவிஞனைப்பொய் யுரை கூறிப் புனையும் புலவர் வழக்கத்தின்பாற்பட்டதோ? என் றையுறவேண்டா. உண்மையே என அந்நூலிற் பல்கால் அழு ந்தி ஓதி ஓதி யுணர்ந்து சுவைகண்டார் மொழிதற்குரியர். அத் துணை மகிழ்ச்சி மலிந்த களஞ்சியமாய் நின்று நிலவக் கம்பர் இயற்றியுள்ளார். தாமின்புறுவது உலகின்புறக்காணல் கற்ற றிந்தார்க் கடனாதலின் யான் தமிழ்க்கல்வியிற் சிறிது கற்ற துணைக்கேற்பப் புல்லியவறிவு அவ்வரும்பொருட்களைப் புல்லிய வளவு நம் செல்விக்குரைப்பத் துணிகின்றேன். சுவை நிரம்பிய

மிகப்பரந்த பாற்கடலினுள் ஓர் திவலையை மேல் எழுப்பி அதனைப்பல அணுக்களாய்ப் பகுத்து ஓரணுவைச்செறித்து இவ்வாறே இக்கடலின் நீர் அத்தனையும் சுவைமிகவுடைத்தெனத் தெரிக்கப்புக்காற்போல ஆங்காங்கே நமது புலவர்பெருமான் காட்டிச் செல்லும் அருமை பெருமை மிக்க கவிச்சுவைகளையும் அவற்றை அவ்வண்ணம் அமைத்த நுண்ணிய கூறிய மதித்திறனையும் சொற்றிறத்தையும் மாதிரிக்காகக் காட்டலுற்றுக் குற்றம் நீக்கிக் குணங்கொள்ளத் தமிழ்வல்லோரை வேண்டுகின்றேன்.

கம்பர் ஓர் இயற்கை நிகழ்ச்சியைப் புனைந்துகூறி முடித்தற்கும் பிறகவிகள் அங்ஙனம் முடிப்பதற்கும் வேறுபாடுண்டு. சிற்சில வகையாய்ப்புனைந்து கூறிக்கொண்டேபோய் அதனை முடிக்குமிடத்தே கற்போர் உள்ளம் துள்ளிக்குதித்துக் களிபேறுவகைபூத்து நகைமுகம் தோன்ற மிக வியப்புடைய தொன்றைக் கூறிமுடிப்பது இவர்கொண்ட கோட்பாடு. இவ்வாறு பிற புலவர்கள் சென்றிலர். அவற்றுள் சில காட்டுவாம்.

இராவணன் சூர்ப்பநகையால் சீதையின் பேரழகைக் கேட்டுக் காமமிக்குடையனாய் ஆற்றாது வெம்பி அவ்வெப்பம் தீர்த்தற்குப் பகற்காலத்தேயே இரவியைப்போக்கி மதியைத் தருவிக்க மொழிந்தனன். மதியமும் எஞ்சி நின்ற பகல் முற்றுமுன்னே அவன் கட்டளைப்படி வானகத்தேகலை வீசித்தோன்ற, முன்னையினும் காமநோய் முதிர்ந்து கனற்ற அவ்விராக்காலத்தையும் வெறுத்து உடனே பழையபடி பகற்காலமே யாகுக. கதிரவனை வருவியுங்கள் என்று ஏவலர்க்குப் பணிப்ப நள்ளிரவு திடீரெனமாறிக் காலையாயிற்று. இவ்வாறு இராவந்து உரிய நாழிகை கழியுமுன்பே விடிந்து பகலாமென்பது தெரியாதாகலின் யாவரும அப்புதுப்பகலில் தூங்கிக் கிடந்தனர் என்று கூறிவரும் இடத்தில் "மங்கையர் துணைவரைத் தழுவினர் துயில்கின்றார் சிலர். யாவர் கண்களும் பகல் வந்தும் திறவாமல் மூடப்பட்டிருத்தல், உலோபிகள் பகல் முழுதும் தங்கள் மனைக்குப் பிச்சை கேட்க இரவலர் யாரேனும் வந்துவிடுவரே என்ற அச்சத்தால் வாயிற்கதவை மூடிவைப்பது

போலக் காணப்பட்டது. பகற் காலத்தே மலர்தற்குரிய பல மலர்களும் மலர்தலொழிந்தன. எனக் கூறிவந்து முடிக்கும் இடத்தில்,

"ஏவலின் வன்மையை யெண்ணறேற்றலர்
நாவலரி யற்றிய நாளினும நூற்
காவலி னினிதுணர் கணிதமாக்களுங்
கூவுறு கோழியுந் துயில்வு கொண்டவே. (ஆர. மாரீ. 129.)

எனக்கூறி நிறுத்துகின்றார். இவ்வாறு ஓர் இரா இடையே பகலாகுமென்பது தெரியாமல் மக்களும் பிறவும் உறங்கலாம்; இதிலென்ன வியப்பு! ஒவ்வொரு பகலும் இரவும் இத்தனை நாழிகை யுடையன. இன்று இந்நேரத்துக்கு மதியம் உதிக்கும், இன்னமீன் உச்சமுற்றால் நாழிகை யிவ்வளவாம். என வான நூற்கணிதம் தேர்ந்தோதும் காலக்கணிதரும் அன்று அயர்ந்து தூங்கிவிட்டனர், இதுவும் ஓர் வியப்பாகாது. அவர்கள் தாம் இராவணன் இவ்வாறு மாற்றுவானென்பதை எங்ஙன மறிவார்கள்? இவை யெலாம் ஒழிக. இயற்கையாகவே கடவுள் படைப்பின் முறை பிறழாது விடியற்காலத்தை அறிந்து நமக்குணர்த்தும் தொழிலைக் குலத்தொழிலாகக் கொண்டு மாறாது கூவிவரும் கோழிச் சேவல்களும் அன்று கண்ணுறங்கினவே" என்று கூறுகின்றார். ஆ! கவிஞர் பெருமான் சமயத்திற் புகன்ற அருமைச் சொற்றிறம் கண்டீர்களா? இயற்கைப் பொருட்கள் தம் இயல்பு மாறுமென்னும் தன்மையை உள்ளங் கொண்டு உரிய இடத்தோதிய அவர் தம் நுண்மதிக்கு நம்முள்ளம் திறைகொடுக்க வேண்டாவோ.

இதே வண்ணம் மற்றோரிடத்தே இப்பொருளையே பிறிதோரியற்கையால் வியப்புறக் காட்டியிருக்கின்றார். அதாவது:—

இராமன் ஆணைப்படிச் சீதையைத் தேடிக்கொண்டு இலங்கைக்குட் புகுந்த அநுமான் ஆங்காங்கே சுற்றித் திரியும் நள்ளிரவின் நிகழ்ச்சிகளைக் கூறிய இடத்தில் யாவரும் உறங்குகின்றனர். காரிய மடங்கினர்கள் கம்மியர், ஊர்காவலர் துடிக்கண் ஒலித்தன. ஆடவரோடிய பெண்கள் ஒழியப் புணர்ந்த மட

வார் துயின்றனர். என்று இவ்வாறு கூறிக் கொண்டே வந்து நிறுத்தும் தறுவாயில்,

‘ நித்த நியமத்தொழி லராய் நிறையும் ஞானத்
துத்தம ருறங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களி றுறங்கின மயங்கும்
பித்தரு முறங்கின ரினிப்பிறரி தென்னும்.(சுந். ஊர்தே. 165)

ஞானிகளும் யோகிகளும் விழித்துக் குறி நோக்கற் கமைதி யுடையதென்று கொள்ளாமல் அவ்விரவில் உறங்கினர். மதங் கொண்ட யானைகளுமே அன்று அயர்ந்து தூங்கின. இவை எல்லாம் வியப்பல்ல; இரவில் தூக்கமே பிடியாத இயற்கை பெற்று பித்துக் கொண்டவர்களும் நன்றாய்த் தூங்கிவிட்டனர் என்கின்றார். மூளை கெட்டுத் திரியும் பித்தர்களுக்கு இரவில் தூக்கமே வருவதில்லை யென்னும் இயற்கை இவர் நன்கு தெரிந்து அதனைத் தக்கதோரிடத்தில் காட்டும் ஞாபகத்தை என்னென்று பாராட்டுவோம்.

இங்ஙனம் வருணனையில் மட்டுமல்ல. ஒருவரோடொருவர் பேசிக் கொள்வதாகக் கதையில் வருமிடங்களிற்கூட அப்பேச்சு இத்துடன் நிறுத்தப்படுமெனக் கற்போர் அக்கவி கொண்டே உணர்ந்து கொள்ளும் முறையில் அச்சொல்லை வெல்லுஞ் சொல் வேறில்லை யெனும்படி ஓர் சொல்லைக் கூறி முடிப்பர்.

இராமபிரானை வனம்புக அரசன் ஆணையிட்டாரெனக் கேட்டு மிகப் பதைபதைத்துச் சிறிக் கனலெழ விழித்துப் போர்க் கோலத்தோடு யானே இராமனை முடி புனைவிப்பேன் தடுக்குநர் தடுக்க வம்மின் பார்ப்போம் என நிற்பதைக் கண்ணுற்று இராமன் இலக்குவ! என் இத்தனை சீற்றம் உனக்கு? என, அவன், ஐய! நினக்கு இவ்வுலகம் முடி சூட்டுவதாய் முற் கூறிப் பின் நேர்ந்த மாறுபாட்டால் நீர் இப்போது வனம்புக நேர்ந்த தென்றால் யான் இச்சமயத்தன்றி வேறெச்சமயத்தில் கோபம் கொள்ளவுரியேன். உன்பால் அன்பில்லாதார் உன்னை வனம் புகுத்த இப்புல்லிய உடற்சுமையைச் சுமந்து யான் உயிர் தரிப்பேனோ? என் கண்முன்னே இவ்வுலகம் ஆளும் அரசுரிமை

நினக்கென்று சொல்லி அவ்வார்த்தை தவறி இப்போது உனக்கில்லை அரசென்று செப்பிய அரசனே டொத்த வன்கண்மையேனேயான் என மொழிதலும், சீதை கொண்கன், ஓர் யாற்றில் வெள்ளம் பெருகாக்குறை மழை யின்மையாலன்றி ஆற்றின் குற்றமாகுமோ, அதுபோல என்பால் நல்லூழ் இல்லாமையாலே இங்ஙனம் நிகழ்ந்தது, சினந்தவிர்கவென்று செப்ப, இளையவன் உனக்கரசில்லை யென்று செய்த அவ்விதியே, ஆம் ஆம் இராமனுக்கே அரசு என்று சற்று நேரத்தில் உடன்பட்டு வேறு விதியாக மாற்றுகிறேன் என் வில்லால் பார் என விளம்ப, இராகவன் தாய் தந்தையர் மேற் சலிப்புறுதல் மக்கள் கடமை யாகாதென மறுக்க, தம்பி, நீயே என் தந்தை, நீயே என் அன்னையும், நீயே என்னரசனும், நினக்கு இடையூறு காணக்கணமும் பொறேன் என்று கைமறித்துக் கழற, ஐயன், அங்ஙனமாயின் அருமைத் தம்பியைக் கொலை செய்தோ தந்தையை வதைத்தோ தாயைத் தலை துமித்தோ உன்கோபந் தீர்த்து யான் பட்டம் புனையப் பெறுவதெனப் பேச, பின்னவன் பகைவர் சொல்லும் பழிச் சொல்லும் தோளென்று கூறும் கல்லும் அதனில் ஒரு வில்லும் சுமத்தற்குப் பிறந்த யான் கோபம் கொண்டென்செய்வேன் எனக் கண்ணீருகுக்க,

இராமன் என் தந்தை சொற்றவழி யான் அரசு புரிய உடன்படேன். என் சொல்லை நீ கேட்க வேண்டுமென்பதென்ன? என்று ஒரு சொற் கூறவே, இராமனை உண்மையிலேயே தந்தையாகக் கருதியொழுகும் இலக்குவன், (இராமன் தந்தை சொல்லை மேற்கொண்டாற் போல நானும் என்னையன் சொற் கடப்பது தவறு) அவன் விரும்பியவாறே ஒழுகுவேன் எனச் சினந் தணிந்தனன். என இவ்வாறு நீண்டு வந்த வினவிடைகள் முடிவதற்கு ஏற்ற ஓர் வெற்றிச் சொல்லைத் தந்து முடித்த இவர் நாவன்மை மிகப்பாராட்டற் பாலதே.

இவ்வண்ணமே பல இடங்களிலும் முடிவிடம் மிகத்தரமான உயரிய கருத்துக்களோடு முடிக்கப்படுவன காண்க. விரிப்பிற் பெருகும்.

இனி நம் கவியரசர், சில அடை மொழிகளைக் கூறுவதி னின்று அப்பொருளுக்கு அமைந்த சிறந்த கருத்துக்கள் உத்தி வகையால் உணர்ந்து கொள்ளுமாறு குறிப்பித்துச் செல்லும் இயல்பினர், என்பதற்குச் சில மேற்கோள் காட்டுவாம். இவ் வாறு அடைமொழிகள் வேறு பிற புலவர்களால் சிறந்த பொரு ளைக் குறித்துணருமாறு அமைக்கப்பட்டில. இருப்பினும் வெகு அருமையாயிருக்கும்.

இராமபிரான் திருமணத்தின் பொருட்டுச் செல்லுந் தயரத னது படையாளர்கள் வழியில் அயர்வுதீரத் தங்கி ஆடவரும் மனை வியருமாகப் பூக்கொய்து விளையாடுகின்றனரெனவரும் இடத்தில்,

போரென்னவீக்கும் பொருப்பன்ன பொலங்கொடிண்டோள்
மாரன்னனையான் மலர்கொய்திருந் தானைவந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
யாரென்னலோடும் அனலென்ன வயிர்த்துயிர்த்தாள்.

எனமொழிந்தனர். ஒரு ஆடவன் 'காமன்போன்ற கட்டழகி னன்' எங்கேனும் 'போர்' என்னும் சொற்கேட்பில் உடனே மலைபோலப் பூரிக்கும் தோளாற்றலுமுடையன். தன் மனைவி குழலில் தொடுத்துத் தானே யணிந்து மகிழக்கருதி அங்கும் இங்கும் ஓடிப்பற்பல நன்னிற நறுமலர் பறித்துக்கொண்டிருப் பத் தன்நாயகன் தன்னை அலங்கரித்தற்கு வருந்துகின்றமை நோக்கி அதற்கினிய கைம்மாருகத தானொன்று செய்யக்கரு திய அவன் மனைவி பின்புறத்தே சென்று அவனிருவிழிகளையும் தன் கைகளாற் புதைத்தலும் அவ்வாடவன் 'யார்?' என ஒரு சொற்கூறினனாக, அதற்கே நெருப்புப்பொறி பறக்கச் சிறந்து நெட்டுயிர்த்து அம்மங்கை தூரவிலகி அகன்றனள்: என்பதன் கருத்து. பின்புறம் மறைந்து வந்து கண் பொத்துதல் உவகை விளைக்கும் விளையாட்டு. அங்ஙனம் கண் புதைப்போர் குரல் காட்டாமல் வருதல் இயல்பு. இஃ்மாதும் உரையாது பைய வந்து கண்புதைத்தாள் எனக் கவிகூறாமல் 'காரன்ன கூந்தற் குயிலன்னவள்' என்றே குறித்தார். மேகம்போன்ற கூந்தலை யும் குயில்போன்ற மொழியினையும் உடையாள் என அவளியல்

யை அணிந்து கூறியதெனப் பொருள்கொள்வதனோ டமையா மல் காரும், குயிலும் நினைப்பூட்டப்பட்டமைகொண்டு கார்ப்ப ருவத்தே குயில் கூவாது வாயடங்கும் இயற்கை உணரப்பட்டு அவ்வாறே இவளும் ஓசைப்படாது வந்தனள் என உய்த்துணர வைத்த திறமை மெச்சும் தகையதூ.

இங்ஙனமே இராவணன் இராமனது போர்முகத்தில் தோல் வியுற்றுப் படைகளும் படைக்கலமும் ஏறிவந்த தேரும் முற்று மொழியக் கால்நடையாய்ச் செல்லும்போது அவனுள்ளக்கிடக் கையைக் கூறநேர்ந்த இடத்தே,

"வானகமண்ணுமெல்லா நகுநெடுவயிரத்தோளான்
நானகும்பகைவரெல்லாம் நகுவரென்றதற்குநாணன்
வேனகுகருங்கட்செவ்வாய் மெல்லியல் மிதிலைவந்த
சானகி நகுவளென்ற நாணத்தாற் சாம்புகின்றான்." என்றனர்.

(இ-ள்.) மிகவெற்றிபெற்று எட்டுத்திக்கிலும் புகழ்வி ளைத்து வானையும் மண்ணையும் தமக்கடிமையாக்கி ஆளும் அவ் விராவணன் இதன்முன் தான் பொருதுமெல்ல ஆற்றாராய் முது கிட்டோடில் பகைவர்களை நோக்கிச் சிரித்த நகைப்பை இப் போதுதன் நிலைமையைக்கண்டால் அவர்களும் திருப்பிச் சிரித் துப் பழிவாங்குவார்களே என்று வெட்கங்கொண்டானோ எனின்? இல்லை ! இல்லை !! அவன் கொண்ட வெட்கம் வேறொன்று பற்றி. அது, வேல்போன்ற கரிய கண்களையும், சிவந்த வாயையுமுடைய சானகி கண்டு சிரிப்பாளே என்பதுகொண்டு. அந்நாணமே அவ னுள்ளத்தை மிகவும் வாட்டுகின்றது. (என்பதாம்.)

இதனுள், இந்நிலைமையில் சீதை தன் ஆண்மையை மதித் தாலன்றி இணங்காளென்பதொன்றினையே கருதுதலுடையானா தலின் தன் ஆற்றலின்மையுடன் தன் நாயகனாகிய இராமனது பெருகிய பேராற்றலையும் அவள் கண்டு பின்னும் தன் கணவ னையே மதிப்பதன்றி என்னை மதியாளே முன்னையினும் அதிக மாய் எள்ளி நகையாடுவாளே. என் எண்ணம் எவ்வாறு நிறை வுறும் என்றே நினைக்கின்றேனாதலின் அவ்வொரு நாணமே அவனை வாட்டலாயிற்று. எனக்கருத்துற மொழிந்தவர் சீதை

யின் ஏனை உறுப்புக்களில் எவற்றையேனும் புனைந்துரையாது கண்களையும் வாயையுமே சுட்டிக் கூறுவானேன் என ஊன்றி நோக்குவோமாயின் அஃதொரு சிறந்த கருத்தைக் குறிக்கும். தன் தோல்வியைச் சீதை முதலிற் கண்ணுற்றுப்பின் சிறப்ப ளென உட்கொண்டான் இராவணன். ஆகவே காணுங்கண் எத்தகைய வனப்பிற்று எனக் கருத நேர்ந்த வழி வேனகு கருங் கண் என அது முற்படக்குறிக்கப்பட்டது. பின் நகை தோன்றுமிடமாகிய வாயின் நினைவால் அது செவ்வாய் என ஓதநேர்ந்தது. தனது வன்மைத் தன்மைச் சிறப்புத்தீர ஓர் மெல்லியலாள் நகைப்படுவேனே எனக் கருத்தோடிற்றாகவே மெல்லியல் என்றும் கூறலாயிற்று என இவ்வாறு கதாபத்தி ரங்களின் சொந்தக் கருத்தின் வழி தனது கருத்தைச் செலுத்தி அம்மயமாக நின்று கூற்றுரைக்கும் வன்மை இக்கவிஞர்பால் மிக்குள்ளதென்க. (தொடரும்)

---

# குன்றத்தூர் சேக்கிழார் திருவவதாரஞ் செய்த இல்லம்

சாத்தூர் வழக்கறிஞர்,

[திருவாளர் டி. எஸ். கந்தசாமி முதலியார் B. A. எழுதுவது.]

பரந்த இந்நில உலகத்தில் எண்ணில் கோடிமக்கள் அறி வின்மையாம் பேரிருளில் மூடப்பட்டுச் சோம்பி வாளா இருந்த பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் புலத்துறை முற்றிய ஆட வரும் மகளிரும் செந்தமிழ் நாட்டிற் பல்வேறு இடங்களில் விசும் பில் தோன்றும் உடுக்களும் திங்களும் போல் தத்தம் அறிவுச் சுடராம் பேரொளியைத் தம் நாடெங்கணும் பரப்பி வந்தனர். அப்புலத்துறை முற்றிய புலவர்கள் எந்நாட்டிற்றோன்றினும் அந்நாட்டிற்கு எல்லை இல்லாப் பெரும்புகழ் உண்டாம் என் பதில் சிறிதும் ஐயம் இன்று. செந்தமிழ் நாடெனச் சேர சோழ

பாண்டிய நாடுகளையே சிறப்பாக ஆன்றோர் கூறி இருப்பினும் தமிழ்கூறும் நல்லுலகத்தில் தொண்டைநாடும் முனைப்பாடி நாடும் அடங்குமென்னலாம். கைம்மாறு கருதாது உலகத்தார்க்கு ஒளி நல்கும் உடுக்களும் வெண்டிங்களும் கவிஞர் பெருமக்க ளால் போற்றப்படுகின்றன. அவ்வுடுக்கள் கைம்மாறு ஒன்றுங் கருதாது ஒளி நல்குமாயினும் அவற்றின் ஒளியின் அழகினைக் கண்ட கவிஞர்கள் வேறு பொருட்பயன் ஒன்றுங்கருதாது அவற்றின் அழகினைப் புகழ்வர். நல்லிசைப் புலவர்கள் வேறு பயனொன்றுங் கருதாது தம் கருத்தில் எழுந்த அழகிய பொருள் களைச் செவ்விய தீஞ்சொற்களால் கவி புனைந்து தாம் மகிழ்ந்து இன்புறுவதோடு பிறரையும் இன்புறுத்தக் காமுறுவர். அத் தகைய நல்லிசைப் புலவர்களையும் அவர் பிறந்தருளப் பேரருள் பெற்ற ஊரையும் அவர் பாடியருளிய நூல்களையும் அறிவுடைய நன்மக்களெல்லாம் போற்றுதல் வேண்டும். அவ்வாறு போற்ற வேண்டியது அறிவுடையார்களின் கடமையும் ஆகும். இறவாத நூல்களை உலகத்திற்கு இயற்றிக் கொடுத்த இயற்றமிழ்ப் புலவர் களுக்கு நம்மாற் செய்யலாகும் கைம்மாறு என்ன இருக்கிறது! அந்நூல்களுள் நுவலப்படும் பொருட்செல்வத்தின் பயனைப் படிப்போர் அநுபவித்து அதனோடு அமையாது பலருக்கும்அது செல்வத்தை வழங்குதல் வேண்டும் என்றும் இறவா நூல்களைப் படைத்த அப்பெரியோர்கள் தாம் கூறிய நூல்களுள் என்றும் இறவாதிருப்பரேனும் இந்நூல்களைக் கற்று மகிழ்ந்த அறிஞர் கள் தவிராது செய்யவேண்டிய கடப்பாடுகள் சில உண்டு. அக் கடப்பாடுகள் யாவையோ எனின் அவர் செய்த நூலினை எவ ரும் எளிதில் வாங்கிக்கற்று இன்பம் அநுபவிக்குமாறு எங்க ணும் வெளிப்படுத்துதலும், அவர் பிறந்தருளிய ஊரில் அவ ரது நினைவை ஊட்டும் அடையாளங்களாகக் கோவில்கள் முத லிய கட்டடங்கள் கட்டித் திருஉருவம் செய்தமைத்தலும் அவர் பிறந்த ஊருக்கு அறிஞர்கள் சென்று ஒருங்கு கூடி அப்பெரி யார் நினைவை ஊட்டும் விழாக்கள் முதலியவைகள் எடுத்தலு மாகும்.

ஆங்கில நாட்டில் தோன்றி ஜெகப்பிரியர் என்னும் நாடகக் கவியை ஆங்கில நாட்டார் யாவரும் ஒரு தலையாய்ப் பொன்னே போன்று போற்றுவதோடு அவர் பிறந்தருளிய ஊராகிய ஸ்ட்ராட் போர்ட் ஆன் அவான் (Stratford-on-avon) என்னும் ஊருக்குத் திரள் திரளாகச் சென்று கண்டு உவகை கொள்ளுகிறார்கள். அந்நாடகப் பேராசிரியரின் நூல்களைக் கற்று இன்பம் நுகர்ந்த ஆங்கில நன்மக்களுள் அவர் ஊருக்குச் செல்லாதவரேனும் அவரை வணங்காதவரேனுமிலர். அத்தகைய பெரும் புலவர்களோடு தொடர்புடைய சிற்சிறு பொருள்களுக்கும் பெரும்பொருள் கொடுத்து அவைகளை வாங்கி அப்பொருள்களினால் அப்பெரும் புலவர்களின் நினைவைப் பெற்றுப் பெருமகிழ்ச்சி அடைகின்ற மக்கள் பலர். டிக்கன்ஸ் என்ற நவீன ஆசிரியர் போற்றி வளர்த்து வந்த அண்டங்காக்கை ஒன்று லண்டன் மாநகரில் அங்காடித் தெருவில் விலைகூறப்பட்டபோது அவ்வாசிரியர்பால் அன்பும் நன்மதிப்பும் உடைய பலர்கள் கூடி அக்காக்கையை ஒவ்வொருவரும் தாம்தாமே பெறவேண்டுமென்று போட்டி செய்து இறுதியில் கஙு௦ பவுன் கொடுத்து ஒருவர் பெற்றார். மேல் நாட்டில் இசைவல்லார் ஒருவரது முறிந்த யாழ் ஒன்று விலை கூறப்பட்டதென்றும் அப்போது அவ்விசைப் புலவரின் ஆற்றலில் ஈடுபட்ட சிலர் அவ்வியாழை ஒவ்வொருவரும் தாம் தாமே பெறவேண்டுமென்று முயற்சி செய்து போட்டி போட்டதில் ஆயிரக்கணக்கான தங்க நாணயங்களைக் கொடுத்து அம்முறிந்த யாழை ஒருவர் பெற்றுப் போயினர் என்றும் கூறுப. ஆகவே புலவர்களைப் போற்றும் திறத்திலும் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடன்களை இறுக்கும் திறத்திலும் மேல் நாட்டார் நம்மினும் பற்பல மடங்கு அறிவுடையார். பண்டைத்தமிழ் மகன் எக்குற்றம் செய்யினும் செய்வான். ஆனால் ஒருவன் தனக்கு எவ்வகையிலேனும் எவ்வளவாயினும் உதவி செய்திருந்தால் அவனை அவன் தன்னுள்ளத்து ஓயாது வாழ்த்தி அவனுக்கு ஏற்றபெற்றியில் நன்றி செலுத்தும் காலம் எப்போது வாய்க்குமோ என்று காத்திருப்பான். இக்காலத்துத் தமிழ்

மகனே என்றால் அவ்வுயரிய நிலையினின்றும் நழுவி வீழ்ந்துள்ளான் என்று சொல்லின் அது பொய்யாகாது.

தமிழ் மக்களால் பொன்போலப் போற்றப்படுதற்குரிய புலவர் கூட்டத்துள் சேக்கிழார் ஒருவர். அப்புலவர் பெருமானைத் தமிழ் மக்களும் சிறப்பாகச் சைவ நன்மக்களும், என்றும் இடையறாது உன்னி உன்னி வாழ்த்தி வணங்குதற்குரியர். தெய்வம் பேணும் செந்தமிழ் நாட்டில் தெய்வ வழிபாடு குறைவதையும் தமிழ் வழக்கு வீழ்ந்து அயல்வழக்கு வெல்வதையும் சைவ நன்னெறிக் கொள்கை குன்றுவதையும் கண்டு தமிழ்மக்களை உயரிய நெறிக்கு எங்ஙன மீட்டுவதென்று சிந்தித்து உலகெல்லாம் போற்றி உய்தற்குரிய ஒப்பற்ற காவியச்சுவைகள் பலவும் படைத்துள்ள சீரிய திருத்தொண்டர் புராணத்தைக் கைம்மாறு ஒன்றும் கருதாது உலகினுக்கே அளித்த வள்ளல் சேக்கிழார். அவர் பிறந்தருளிய பேரூர் தொண்டை நாட்டிலே சென்னைக்கு அணித்தாயுள்ள குன்றத்தூர். சைவ சமய ஆச்சாரியர்கள் திருவவதாரம் செய்து தம் செஞ்சொற் றேவாரங்களால் தமிழுலகினைத் திருத்திச் சாக்கிய சமண ஒழுக்கங்களை வழக்கறுத்துச் சிலகாலம் சென்ற பின் பண்டு போல் மீண்டும் இவ்வுலகம் சைவ நன்னெறிக் கொள்கையினின்றும் நழுவத் தலைப்பட்டது. அக்காலத்து மன்னர்களுள் தலைநின்ற அநபாய சோழன் தமிழ் நூற்பரப்பாம் கடலை நிலைகண்டுணர்ந்தானுயினும் சமணர் கொள்கைகளில் தம் மனத்தைச் செலவிட்டிருந்தானென்றும் அறிந்த சேக்கிழார் முனிவர் காவியச்சுவையில் ஈடுபட்ட அக்கவிகை மன்னர்க்கு எல்லையில் இன்பம் சுரக்கும் அருள்நூலை அளித்துப் பேருதவி செய்தார். அது முதற் கொண்டு அவர் செய்த நூல் அறிவுடையார் உள்ளத்தையும் அறிவையும் கொள்ளை கொள்ளும் நலமுடையதாக இன்றளவும் விளங்குகின்றது. சைவ நன்மக்கள் தம் நெறியினின்றும் ஒருவி வழுவியபோதெல்லாம் அவரை மீட்டும் அந்நெறிக்கட் கொண்டு வந்து நிறுத்துவதற்கு ஏற்றதுணையாக இருந்தது அப்பெரியார் அருளிச் செய்த தொண்டர் புராணமாகும். அப்பெரியார்

செய்த பேருதவிக்குத் தமிழ் மக்கள் யாதொரு கைம்மாறும் செய்வதற்கு ஏற்றவளம் படைத்திலர்.

அத்தகைய பேருதவி செய்தபெரும் வள்ளலாராம் சேக்கிழார் முனிவருக்குத் தமிழுலகம் என்ன உதவி செய்தது? அவரைத் தமிழர்கள் எங்ஙனம் போற்றுகிறார்கள்? அப்பெரியாரைப் போற்றுவாரும் அவர் பேரைச் சாற்றுவாரும் இங்குமங்குமாகச் சிற்சிலரே காணப்படுகிறார்கள். தமிழறிஞர்கள் செல்வம் படைத்த திருவுடையார்கள் நினைத்தால் அப்பெரியாரை உலகம் உள்ளளவும் நினைத்தற்கேற்ற குறிகளும் அடையாளங்களும் செய்ய முடியாதா? வறியராயினும் அவர் பிறந்தருளிய குன்றத்தூருக்குக் காலினால் நடந்தேனும் செல்லலாகாதா? ஆனால் செல்வம் படைத்த எத்தனை தமிழர்கள் சேக்கிழாரை நினைந்து அவரை நினைத்தற்கேற்ற குறிகளும் அடையாளங்களும் செய்துள்ளார்கள்? எத்துணை வறிஞர்கள் அவர் ஊருக்குச் சென்றுள்ளார்கள்? ஒருவருமில்லை.

குன்றத்தூர் என்னும் பெரும்பதி தொண்டை நாட்டு நாலாறு கோட்டங்களுள் சிறந்த புலியூர்க் கோட்டத்தில் பெருமையில் மிக் கோங்கிய பெரும்பதிகளுள் ஒன்று. அது சென்னையிலிருந்து தென்மேற்கில் பதினான்கு மைல் தூரத்திலுள்ளது. சென்னையிலிருந்து ஒவ்வொரு நாளும் பற்பல மோட்டார்கள், வண்டிகள் குன்றத்தூருக்குச் செல்கின்றன. இப்பொழுது குன்றத்தூர் என்று அழைக்கப்படுகின்ற ஊர் சேக்கிழார் முனிவரால் திருநாகேச்சுரம் என்ற திருக்கோயில் கட்டப்பட்ட இடம். முன்னொரு காலத்தில் குன்றத்தூரின் ஓர் பகுதியாக திருநாகேச்சுரம் இருந்திருக்கலாம். சேக்கிழார் பிறந்தருளிய ஊர் இப்பொழுது நத்தம் என்று வழங்கப்படுகின்றது. குன்றையூர் நத்தம் என்பது நத்தம் என்று மட்டும் வழங்கப்படுகின்றதென்று கருத இடமுண்டு. குடி இருப்பு வீடுகளுள்ள இடத்தைப் பண்டைத் தமிழர்கள் நத்தம் என்று வழங்கினார்கள் என்று தொன்னூல்களினாலும் ஆன்றோர் வழக்கினாலும் நாம் அறிகின்றோம். சேக்கிழார் முனிவர் சோழநாட்டின் கண்ணுள்ள

இறைவன் திருக்கோயில் கொண்டருளிய திருநாகேச்சுரத்தின் பேரழகில் ஈடுபட்டு அத்தகைய திருக்கோவிலைத் தம் குன்றத்தூரிலும் கட்டுவித்தல் வேண்டுமென்று கருதி அங்ஙனமே கட்டுவித்துத் தம் நூறு காணி நன்செயையும் அக்கோவிலுக்கு நன்கொடையாக அளித்து மற்றும் நிபந்தனைகளையும் ஏற்படுத்தினார் என்று அவ்வூரார் அனைவரும் செவிவழிக் கேட்டுவந்த செய்தியை இன்னும் அவ்வூரார் வாயிலாகக் கேட்டறியலாம். திருநாகேச்சுரத்தில் தொண்டை நாட்டு வேளாளர்கள் இப்பொழுது இல்லை. நெசவுத்தொழில் செய்யும் செங்குந்தர்கள் பல்கியுள்ளார்கள். அச் செங்குந்தர்கள் கையில் தான் திருநாகேச்சுரத்துச் சிவன் கோவில் இருக்கிறது.

திருநாகேச்சுரத்திலிருந்து குன்றத்தூர் நத்தம் சற்றேறக் குறைய அரை மைல் தூரத்திலிருக்கிறது. குன்றத்தூர் நத்தத்தில் முருகவேளுக்கும், பெருமாளுக்கும், சிவனுக்கும் தனித்தனிக் கோவில்களுள்ளன. இங்கே சேக்கிழார் மரபிலுதித்த தொண்டை நாட்டு வேளாளர்கள் வசிக்கிறார்கள். தொண்டை நாட்டு வேளாளர்கள்—கொண்டை கட்டிகள் (கொண்டல் கட்டிகள்) என்றழைக்கப்படுகின்றார்கள். அத்தொண்டை நாட்டு வேளாளர் தெருவில் பண்டைநாள் தொட்டு இன்று காறும் வேறு எம்மரபினருக்கும் வீடு இல்லை. அவ்வேளாளர் தெருவிலே தான் சேக்கிழார் முனிவருக்குச் சைவ வேளாளர்களால் ஒருகோவில் கட்டப்பட்டு அதில் அவர் திருவுருவம் நாட்டப்பட்டிருக்கிறது. அக்கோவிலுக்கு முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் திருமரபிற்றோன்றிய ஆதி சைவச் சீலர்கள் நாள்தோறும் இருகால பூசை செய்து வருகிறார்கள். அக்கோவிலை மேற்பார்த்து அதன் காரியங்களை நடத்துபவர் அவ்வூரிலே அத்தொண்டை நாட்டு வேளாளர் மரபிலே கூடல் கிழார் குடியிலே தோன்றியவரும் அவ்வூர்க் கிராம முனிசீப்பும் பெரும் நிலக் கிழவருமாகிய திருவாளர் நடராஜ முதலியார் அவர்களே. சேக்கிழார் முனிவர் திருநாள் அவ்வூரில் பத்து நாட்களாக அவர் நக்ஷத்திரத்திற்கு முன் முதல் வருஷந்தோறும் நடைபெற்று வருகின்றது. அவ்

விழாவிற்குச் சென்னையிலிருந்தும், மற்றும் பல இடங்களிலிருந் தும் பலர் செல்லுகின்றனர். அச்சேக்கிழார் கோவிலும் அவர் பிறந்தருளிய திருமனையிலே தான் கட்டப்பட்டுள்ளதாக அவ் வேளாளர்கள் வாய்மாட்டுக் கேட்கின்றோம். அக்கோவில் தொண்டை நாட்டு வேளாளர் தெருவில் இருப்பதும் மற்ற வேறு எம்மரபினருக்கும் அங்குமனை இல்லாதிருப்பதும் அவ்வேளா ளர் கூற்றை வலியுறுத்துகின்றன. அக்குன்றத்தூரிலே தாமரை மலர்களால் அணி செய்யப்பட்டிருக்கும் பளிங்கு போன்ற தீம் நீரையுடைய குளம் ஒன்று சேக்கிழார் பெருமான் பின்தோன்ற லாகிய பாலறுவாயரால் வெட்டப்பட்டதாகவும், அது பால றுவாயர் குளமெனவும் அவ்வூரார் சொல்லுகின்றனர். அக்குன் றத்தூரை நெற்கழனிகள் மிக்க மருதமும், குன்றையுடைய குறிஞ்சியும், மாயோன் மேய காடுடைய முல்லையும், சூழ்ந்திருக் கின்றன.

குன்றத்தூரில் சென்று அவர் திருக்கோயிலை வலம் வந்து அக்கோவில் அவர் திருமனையில் கட்டப்பட்டதென்று ஒருவர் அறிந்தபோது அவருக்குச் சேக்கிழார் பிள்ளைப் பருவத்தில் தளர் நடையுற்று அசையும் நடைப்பருவத்தே திருவடி எடுத்து வைத்து நடந்த இடம் அதுவாமென்றும், அவர் நடந்து விளை யாடல் செய்த இடமும் தெருவும் இவையாமென்றும் மனத்தில் எண்ண நேரும். தொண்டர் சீர்பரவுவார் அத்தொண்டர் புரா ணங்களை அவர் தமது உள்ளத்தில் சிந்திப்பதற்குத் தனி இட மாகக் கொண்ட இடம் இதுவாக இருக்கலாமென்று அவர் கோயிலைக் காண்பாருக்கு ஓர் எண்ணம் தோன்றி அதனால் அவருக்கு எல்லை இல்லதோர் மகிழ்ச்சியும் உளதாகின்றது.

உமாபதி சிவாச்சாரியார் சேக்கிழார் புராணம் செய்திருப் பதில் அம்முனிவர் காலத்துத் தொண்டைநாட்டு வேளாளர் மரபில் தோன்றிய வேறு மூன்று குடிப்பெயருடையார் இருந் தனரென்றும், அவர் புரிசைகிழார், கூடல்கிழார் வெண்குளப் பாக்கிழார் என்றும் கூறியிருக்கின்றார். சேக்கிழார் இறைவன் திருவடிக் கீழ்ச் சென்றமையின் அவர் குடியில் அவருக்கு நேர்

வழித்தோன்றலாயுள்ளாரை இக்காலத்துக் காணுதலரிதாகும். அவரினின்று நேர்வழியிற்றேன்றுது போயினும் மற்றும் அப்பெருங் குடியின் சினை மரபிற்றேன்றியவர் இப்போது அங்கு இல்லை. ஆனல் அக் கூடல்கிழார் மரபில் உதித்தவர்தான் முன்னர் கூறப்பட்ட நடராஜ முதலியார். புரிசைகிழார் குடியில் தோன்றியவரும் அங்கு உள்ளார்கள். இவ்விருகுடியில் தோன்றி இப்போது குன்றத்தூரில் வாழ்கின்றவர்கள் தாங்கள் அவ்வூரிலேயே பண்டைக்காலந்தொட்டு வாழ்ந்து வருவதாகவும், வேறு ஊரிலிருந்து அங்கு அவர்கள் குடியேறினவர்கள் அல்லர் என்றும், தாங்கள் அவ்வூர்ப் பண்டைக்குடிகள் என்றும் சொல்லிக்கொள்ளுகின்றூர்கள். சேக்கிழார் குடிப்பேருடையவர் ஒருவர் அக்குன்றத்தூரில் வாழ்கின்றூர். ஆனல் அவரின் மூதாதை ஒருவர் சிறிது காலத்திற்கு முன்பு மற்றொரு ஊரிலிருந்து அங்கு வந்து குடியேறினதாகச் சொல்லப்படுகின்றது.

தமிழ் மொழியிற் பற்றுள்ள ஒவ்வொரு மகனும் அம்மொழிக்கு எல்லையற்ற பெரும்புகழைப் படைக்கும் சீர்த்தியையுடைய தொண்டர் புராணத்தைப் பாடியருளிய சேக்கிழாரைப் பற்றிய சரிதக் குறிப்புகளைத் தத்தம் உளத்திற்கு முன்னிறுத்திப் பெருமகிழ்ச்சி யெய்தி அப்பெருமான் திருவருள் பெற்று அவரால் போற்றப்படும் மெய்யடியார் சரிதங்களை நுண்ணிதில் ஆராய்ந்து பெரும் பயனடைதல் வேண்டும்.

---

# சில கொடையாளிகள்

[திரு. எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, B. A., L. T.,]

முற்காலத்தில் தமிழ்ப்புலவர்களையும் தமிழ் வீரர்களையும் தமிழகமன்னர்கள் போற்றி வந்தனர். முடிமன்னர்கள் காலத்திலே குறுநில மன்னர்களும் வரையாது கொடுக்கும் வள்ளல்களாயிருந்தனர். தலை, இடை, கடை யென மூன்று வகுப்பாக ஒவ்வொரு பகுதிக்கும் எவ்வேழு புலவர் வீதம் இருபத்தொரு வள்ளல்களிருந்தனரெனவும் முதலெழுவள்ளல்களில் குமணனும்

இடையெழு வள்ளல்களில் அரிச்சந்திரனும், கடையெழு வள்ள ல்களில் பாரி, ஓரி, எழினி, காரி, ஆய், பேகன், நள்ளி யென்ப வர்கள் சிறந்து விளங்கினரெனவும் அறிகின்ருேம். கடை யெழுவள்ளல்களின் பெருமையைப் புறநானூற்றிலும், சிறு பாணாற்றுப்படையிலும் காணலாம். குமணனென்ற வள்ளல் பின்காலத்திலுமொருவனிருந்ததாகப் புறப்பாட்டுகளினுல் தெரி யவருகின்றது. இவர்களன்றியும் பல கொடையாளிகள் தமிழ் நாட்டில் தழைத்து வந்தனரென்பதை இவண்காட்டுதும். தற் காலக் குறுநிலமன்னர்களும் ஏனைச்செல்வரும் புறநாகரீகத்தி லுழலாது முன்னேர் அடிபற்றி பாத்திரம் அறிந்து ஈவரேல் தமிழ்மொழியும் தமிழ்ச் சமயமும் தமிழர் நாகரீகமும் முன்னி லும் அதிகமாகப் பிறங்குமென்பதில் ஐயமுளதோ? பொருள் வாய்ந்த சீகாழி சிதம்பரநாத முதலியாரும் மன்னுர்கோயில் மன்னையில் வரைந்து வைத்த மாவண் முதலியாரும் இராசவல் லிபுரம் இறையொப்ப வழங்கிய பிள்ளையாரும் வடபாதிமங்கலம் வேலியாயிரந்துய்க்கும் விதவை நல்லார்களும், ஆடுதுறை, தரு மபுரம் போன்ற தரும வாதிக்கங்களும் இருக்கத் தமிழன்னையும் மக்களும் வருந்துவதேன்? அன்னுர்களை அடுத்து அணுகின் உள்ளியது உறுவதாகும். அழுதபிள்ளையே பால்குடிக்கும் என் பது முதுமொழியன்றே?

1. ஆதனுங்கன் வேங்கடத்தின் தலைவன். நாள்தோறும் இரவுபகலென்னுமல் பலரையும் காத்துக்கொண்டு விளங்கிய அறத்துறை நின்றவன். அவனுடைய நண்பர்களில் ஒருவர் ஆத்திரையனுர். இவர் அவனது புகழ் கூறினல்லது வேறெ வரையும் புகழார். தாமுயிர் நண்பரென்றும் தம்முடைய வுயி ரானது தம்முடம்பைவிட்டு நீங்குங்காலத்தும் தம்மைத்தாம் மறக்குங்காலம் வருமாயின் அப்பொழுது தாம் மறப்பினல்லது மறவேமென்றனர்.

> 'என்னுயிர் யாக்கையிற் பிரியும்பொழுதும்
> என்னியான் மறப்பின் மறக்குவன்'

பசித்த ஒக்கல்களுக்குப் போதுமானபடி யளிக்கும் இசைசால் நெடுந்தகையென்று பெருமை பாராட்டப்பட்டுளன்.

2. வில்லியாதன் இலங்கையென்னும் பெயருள்ள வூருக்குத் தலைவன். மாவிலங்கை மன்னனாகிய நல்லியக்கோடன் வழியைச் சார்ந்தவன். இவன் நறுநெய்யுருக்கி நாள்தோறும் பசி தீர்த்ததுமன்றி 'கேட்டதற்கொண்டும் வேட்கை தண்டாது விட்டோய்' என்று புகழப்பட்டவன். இவனை நன்னாகனார்,

'யானேபெறுகவன் தாள்நிழல் வாழ்க்கை
அவனே பெறுக என் நாஇசை நுவறல்'

என்று சிறப்பித்துளார்.

3. திருக்கண்ணன் சோழிய ஏனாதி. இவன் மலையமானாட்டுள்ள கோவலூர்க்கரசன். இரவலர்க்கு வைப்புத் திரவியம் போன்றவன். இவன் திருக்கிள்ளியென்றும் பெயருடையவன்.

'கவலை நெஞ்சத்து அவலந்தீர'த்

தோன்றினனென்றும் அஃது எது போன்றெனின்

'கல்கள்பொடிய, கானம் வெம்ப
மல்குநீர் வரைப்பில் கயம்பல உணங்கக்
கோடியர்நீடிய பைதறுகாலை
இருநிலம் நெளிய ஈண்டி
உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே'

என்றும் கூறப்பட்டுளது.

4. சிறுகுடிப்பண்ணன் சோழன் கிள்ளிவளவனுடைய நண்பன். 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என அகநானூற்றில் புகழப்பட்டுளான். 'பசிப்பிணி மருத்துவன்' என்று புறநானூற்றில் உரைக்கப்பெற்றவன். 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய பாணர் காண்க'. இவனிடம் வரும் இரவலரின் கூட்டமிஃதென்று கூறுவான்:

'யாணர்ப்பழுமரம் புள்ளிமிழ்ந்தன்ன
ஊணொலி அரவம் தானும் கேட்கும்
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டைகொண்டு வற்புலம்சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கு ஏய்ப்பச்
சோறுடைக் கையர் வீற்றுவீற் றியங்கும்

இருங்கிளைச்சிறார்க்காண்டும் ; கண்டு
மற்றும் மற்றும் வினவுதும்.'

'கைவள் ஈகைப்பாணன் சிறுகுடி'க்குப் போகின்ற விரலிகள், பாணர்கள் பரிசில் பெறுவர். அஃது எத்தகைத்ததெனில்,

'விறகு கொய்மாக்கள் பொன்பெற்றன்னதோர்
தலைப்பாடன்று அவன் ஈகை'

5. பிட்டங்கோற்றன் குதிரைமலைத் தலைவன். சேரனுடைய சேனாதிபதி. கூறிய வேலையும் அம்பையுமுடைய வில்லோன். இவனை,

'கைவள்ளீகைக் கடுமான்கொற்ற,
வையகவரைப்பில் தமிழகங் கேட்பப்
பொய்யாச்செந்நா நெளியவெத்திப்
பாடுபவென்ப ஈயாமன்னர் நாண
வீயாதுபரந்தநின் வசையில் வான்புகழே.'

என்று கந்தப்பிள்ளை சாத்தனார் பாடியுள்ளார். மருத்துவன் தாமோதரனார்,

'மலைகெழுநாடன். கூர்வேல்பிட்டன்
குறுகலோம்புமின்'

என்று பகைவரை நோக்கிக் கூறியதைக் காண்க. இவனது வன்மைத்திறனை மெய்ச்சிய புலவர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்,

'இன்று செலினுந்தருமே, சிறுவரை
நின்று செலினுந் தருமே, பின்னும்
முன்னே தந்தனன் என்னாது துன்னி
வைகலுஞ்செலினும் பொய்யலனாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கலம் நிறைப்போன்...
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்,
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்
அருங்கலம் களிற்றொடு வேண்டினும், பெருந்தகை
பிறர்க்கும் அன்ன அறத்தகை யன்னே,
ஈவோரரிய இவ்வுலகத்து
வாழ்வோர்வாழ அவன்தாள் வாழியவே' என்று

புகழ்ந்துளார். வடமவண்ணக்கன் தாமோதரனர் இப்பெருங் கொடையாளியை வேல்வெற்றியுடையனென்றும் பாடியிருத்தலைக் காண்க.

‘ஒளிதிகழ் திருந்துமணி நளியிருள் அகற்றும்
வன்புலநாடன் வயவன் பிட்டன்
ஆரமர்கடக்கும் வேலும்.’

6. நாலை கிழவன் நாகன் ஆண்மையினுஞ் சூழ்ச்சியினு மிகுந்து தளராத ஊக்கத்தினையும் நல்ல புகழையுமுடையவன். பாண்டியனுக்கு வாட்படையுதவியும், உற்றுழி அமைச்சன் போன்று அறிவு கொளுத்தியும் வந்தவன். பருந்து பசிதீர்க்கும் வேலன். ‘ஞாலமீமிசை வள்ளியோர் மாய்ந்தென’ப்பரிசிலர்க்கு அளித்தவன்.

‘வேண்டுப வேண்டுப வேந்தனதேஎத்து
அசைநுகம்படாஅ ஆண்தகையுள்ளத்துத்
தோலாநல்லிசை நாலைகிழவன்’

என்று வடநெடுந்தத்தனர் பாடியுளார்.

7. திருக்கிள்ளி கொடையும் வீரமுமுடையோன். ஏனாதிப்பட்டம் பெற்றவன்,

“வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான்கிள்ளி
நின்னைவியக்கும் இவ்வுலகம், அஃது
என்னோ”

8. நாஞ்சில் வள்ளுவன் நாஞ்சில் மலையை உடையவன். சேரனுக்குப் படைத்துணைவன். பெருங்கொடையாளி. ‘உயர் சிமையவுழா நாஞ்சில்’ என்றும், ‘தடவுநிலைப் பலவின் நாஞ்சில்’ என்றும்,

“துவன்றிய
கயத்திட்டவித்து வறத்திற்சாவாது
கழைக்கரும்பின் ஒலிக்கும்
கொண்டல் கொண்டநீர் கோடையாயினும்
கண்ணன்னமலர் பூக்கும்,
கருங்கால்வேங்கை மலரின் நாளும்

பொன் அன்னவீ(பூ) சுமந்து
மணியன்னநீர் கடல்படரும்
செவ்வரைப் படப்பை நாஞ்சில் ''

என்ற செழிப்புடைய மலைநாடென்றும் புகழப்பட்டுளது. அந் நாட்டு வள்ளுவன் வள்ளலேயாவன்.

" நின் இறை
மாறிவாவென மொழியலன், மாதோ,
ஒலியிருங்கதுப்பின் ஆயிழை கணவன்
இளிமரீஇய வியன்புனத்து
மரனணிபெருங் குரலனையன் ''

(குரல்=கதிர். மரனணி=மரம்(ன்) + அணி.)

என்று துதிக்கப்பெற்றுள்ளான். நாஞ்சநாடு என்பது நாஞ்சில் (கலப்பை) நாடா, அல்லது நாஞ்சில் என்ற மலைநாடாவென் பது ஆயற்பாலது. நாஞ்சநாடு வயல்வளம் பொருந்தியது. நாஞ்சில் நாடு மலைவளமுள்ளது. ஆகவே நாடுகளிரண்டும் வெவ் வேறுயுள்ளதெனத் துணியப்படும்.

' தீஞ்சுளைப்பலவின் நாஞ்சிற் பொருநன்
துப்பெதிர்ந்தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந்தோர்க்கே யங்கை நன்மையன்...இந்நிலம்
இலம்படு காலையாயினும்
புலம்பல் போயின்று, பூத்தவென் கடும்பே'. (கடும்பு=சுற்றம்)

இவ்வடிகளில் இந்நாட்டின் வளப்பத்தையும் நாடுடையவன் வண் மையையும் சிறக்கக் கூறியிருப்பது புலனாகும்.

9. கடிய நெடுவேட்டுவன் கோடையென்ற மலைக்குத்தலை வன். சினமிக்க நாயையும் வலிய வில்லையுமுடைய வேட்டு வன் (வேடன்). கொடையாளி, இவனிடம் பரிசுபெறுவோர்க்கு யானையை யளிப்பது வழக்கம்.

" ஆர்கலியாணர்த் தரீஇயகால் வீழ்த்துக்
கடல் வயிற் குழீஇய அண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா ஆங்குத் தேரோடு
ஒளிறுமருப்பேந்திய செம்மல்
களிறின்று பெயரல் பரிசிலர் கடும்பே''

என்று பெருந்தலைச் சாத்தனார் அவனுடைய ஈகைத் தன்மையை விளக்கியுள்ளார். அங்ஙனம், விளக்குங்கால் இரவலராகிய பாவலர் பெருமையையும் விடாமற் புகன்றுளார்.

"முற்றிய திருவின் மூவராயினும்
பெட்பின்றீதல் யாம் வேண்டலமே"

என்றது கவனிக்கத்தக்கது.

10. திருக்குட்டுவன் சோழிய ஏனாதி, மிக்க கொடையாளி. சிறிய வேழத்தை யளிக்க அதனைச் சிறிதென்று, புலவர் மதுரைக் குமரனார் உணர்ந்ததைக் கண்டு நாணிப் பிறிதுமோர் பெருங்களிறு நல்கினன் என்றுளர்.

"வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்
வள்ளியனாதல் வையகம் புகழினும்
உள்ளம் ஓம்புமின் உயர் மொழிப்புலவீர்"

11. நள்ளி கண்டீரத்தின் கோ. இக்கொடையாளி பெரிய குளிர்ந்த மலைத்தலைவன். பரிசிலர்க்கு நன்கலன்களையும் களிறுகளையும் அளிப்பது வழக்கம்.

"நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின் முற்றளிப்ப"

ஆதலால் என் சிறு செந்நா நின்நகை வள்ளன் ஏத்தி மன்னரைப் புகழ்ச்சி வேண்டிக் கிளத்தல் எய்யா தென்றனர் வன்பரணர். இவன் வண்மையால் 'புரவுக் கடன் பூண்ட வண்மையானே' பாணர்கள் மாலைப் பொழுதில் மருதப் பண்ணை வாசித்தும் காலையில் செவ்வழியை வாசித்தும் வந்த முறைமையை மறந்தனரென்றும் கூறியுளார். தன்னுடைய நாடு காட்டு நாடானதனால் அருங்கல மளிக்கு மியல்பிலனாயினும் தான்

"மார்பிற்பூண்ட வயங்குகாழாரம், (முத்துவடம்)
மடை (கொளுத்து) செறி முன்கைக் கடக மொடித்தனன்,
எந்நாடோ வென நாடுஞ் சொல்லான்
யாரீரோவெனப் பெயருஞ் சொல்லான்
பிறர் பிறர் கூற வழி கேட்டிசினே."

முத்து வடத்தினைக் கை கடகமொடு ஈந்த பெரியான் ஊரும் பெயருஞ் சொல்லானாயினும் பிறரிடங் கேட்டறிந்தே னென்று புலவர் புகழ்ந்துளார். "பளிங்கு வகுத்தன்ன தீநீர் நளிமலை நாடன் நள்ளியவ"னெனவே.

12. போறையாற்றுக்கிழான் பொறையாறு என்னு மூருக் குரியவன். இவன் நாட்டில் பகடு தரும்பெருவளமுண்டு. வட புலம் பசித்த காலையில் இக்கிழான் நாட்டில் வந்து, புலவர் சுற் றம் பசி தீர்ந்தது. இந்நாட்டில்

': துளிபதனறிந்து பொழிய
வேலி ஆயிரம் விளைகநின் வயலே'

என்று கல்லாடனார் கூறியுளார்.

13. எவ்வி வேளாளனாதலின் 'வேள் எவ்வி' யெனப்பட் டான் போலும். இவன் மிதிலைக் கூற்றத்துத் தலைவன். தலை யாலங்கானத்துச் செருவில் வென்ற பாண்டியன் நெடுஞ் செழிய னால் தோல்வி யடைந்தவன். இவன் பாரிவள்ளலின் வழித் தோன்ற லென்பாருமுளர். 'ஒம்பாவீகை மாவேளெவ்வி', 'போரடு தானை யெவ்வி,' 'எவ்வி தொல்குடி', இவ்வடிகள் இவன் பெருமையை விளக்கும். யாழ்ப்பாணருக்குப் பரிசிலளித்தவன். அவன் இறந்தபின் பாணர் வறுமை யுற்றன ரென்ப. 'எவ்வி யிழந்த வறுமை யாழ்ப்பாணர் பூவில் வறுந்தலைபோல'. இவன் பலரோடு உண்டனனாகலின் இவன் இறந்தபின் இவன் காதலி வைக்கும் பிண்டத்தை எவ்வாறு உண்டனன் கொல்? என்று வெள்ளெருக்கிலையார் வினவுகின்றார்.

'உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோடுண்டன் மரீஇ யோனே'

'பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண்டனன் கொல்.'

14. ஆதன் முழுப்பெயர் சேரமான் சிக்கற் பள்ளித்துஞ் சிய செல்வக் கடுங்கோ வாழியாதன். இவன் பெரிய வீர

னென்பதை 'மாறு கொண்டோர் மதிலிடறி' என்பதனாலறிக. இவனுடைய பகைவர் பணிந்து கொடுத்த திரையால் இவனைச் சார்ந்தோர் பலருடைய தரித்திரத்தை அகற்றினன் என்பதனால் அவன் வெற்றித் திறன் துலங்குகின்றது.

" தன்பெருமை யின்தகவு நோக்கிக்
குன்றகழ் களிறென்கோ."

" மன்று நிறையுநிரை யென்கோ,
மனைக் களமரொடு களமென்கோ,
ஆங்கவை, கனவென மருளவல்லே, நனவில்
நல்கி யோனே நசைசால் தோன்றல்
ஊழி.........
பூழியர் பெருமபியானைச்
செருமிகு நோன்தாள் செல்வக் கடுங்கோ
வாழியாதன் என்னுத் தெவ்வர்
உயர்குடை பணித்திவண், மாதோ,
நெடிதே...வஞ்சிப்புற மதிலலைக்குங்
கல்லென் பொருநை மணலினும், ஆங்கண்
பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையு நெல்லினும், பலவே"

என்று புலவர், இவன் பெருமையை வியந்துளார்.

15 வண்ணந்தாயன் சோழ நாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் என்று உரைக்கப்பட்டுளது. புத்த முதலாய புறமதக் கோடரியென்றும், வேள்வி பல முடித்தவர் மரபினன், விருந்தினரைப் புரந்தவன் என்றும், இவனை ஆவூர்க் கிழார் புகழ்ந்துளார். "கேள்வியாற் சிறப்பெய்தியானை, வேள் வியான் விறன் மிகுத்தன்று". இவனளித்த பரிசிலின் பெருமையைப் புனைந்துரைக்கும் பின்வரும் அடிகள்,

குடாஅது (மேல்பக்கம்)

பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற் (ஒலிப்பிற்)
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்
தண்புனல் படப்பை எம்மூர், ஆங்கண்
உண்டுந் தின்றும் ஊர்ந்தும் ஆடுகம்,

செல்வல் அத்தை யானே, செல்லாது
மழை அண்ணுப்ப நீடிய நெடுவரைக்
கழை வளர் இமயம் போல
நீலிஇயர் அத்தை நீ நிலமிசை யானே"

நான்மறை, ஆறங்கம் இவற்றை நன்குணர்ந்த பார்ப்பனனுதலின் வேதவேள்வியைக் கண்டித்த புறச் சமயிகளைப் பொய்யரென்று நிந்தித்தனன்.

" முழுமுதல்வன் வாய் போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுதுநூல்
இகல் கண்டோர் மிகல் சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய் ஓராது மெய் கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக."

16. வெளிமான் எவலால் அவன் இளவல் பெருஞ் சித்திரனுருக்குத் தக்கவாறு மனநெகிழ்ந்து கொடை யளிக்கவில்லையென்று வெகுண்டு புலவர் அண்ணனையுந் தம்பியையும் சினந்து பேசினர்.

" இரவலர் புரவலை நீயுமல்லை
புரவலர் இரவலர்க் கில்லையுமல்லர்
இரவலர் உண்மையுங் காணினி.''

என்று கூறிக் குமண வள்ளலிடஞ் சென்று களிறுபெற்று அக்களிற்றை வெளிமானினது கடிமரத்தில் கட்டிச் சென்றனர். அன்றியும், வாயாவன்கனிக்கு உலம் வருவோர் யாரோ? உள்ளம் உள்ளவிந்து அடங்காது யாளிபோல இனி நெஞ்சம் எழுமென்றனர். இளவல் கொடுத்த பரிசில் சிறிதென்பதை 'புலி பார்த் தொற்றிய (வீழ்த்த) களிற்றிரை பிழைப்பின் எலிபார்த்து ஒற்ருதாகும்' என்று குறிப்பிட்டனர், வெளிமான் இறந்தபின் சித்திரனுர் மனங்கவன்று பாடுவாரது சுற்றம் ஒளி மழுங்கின. முரசுங் கண் கிழிந்தன, யானையும் மருப்பிழந்தன, என்றுரைத்

துத் துன்பக் கடலிற் சுழல்வதைவிட இறந்து படுதலே தக்க செய்கை என்றனர்.

“ மாரி இரவில் மரங்கவிழ் பொழுதின்
அகனுருற்ற நெஞ்சமொ டோராங்குக்
கண்ணில் ஊமன் கடற்பட்டாங்கு
வரை யளந்தறியாத் திரையருநீத்தத்து
அவலம் மறுசுழி மறுகலின்
தவலே நன்று, மற்று தகுதியும் அதுவே”

(மரம் - மரக்கலம், அனுர் - துன்பம், நீத்தம் - வெள்ளம், அவலம் - துன்பம், தவல் - இறந்துபடுதல்).

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்.

## III

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.)

கடவுளைக் குறிக்கும் பண்டைத்தமிழ்ச் சொற்களில் “கந்தழி” என்பது ஒன்று. அச் சொல்லில் அடங்கியிருக்கும் பொருளை ஆராய்வோம் :—

2. கந்தழி—என்னுஞ் சொல், கந்து + அழி என்னும் இரண்டு சொற்களாலாகியது. கந்து என்பது பற்றுக்கோடு. பற்றுக்கோடானது ஒரு பொருள் மற்றொரு பொருளைப் பற்றிக்கொண்டிருத்தல் ஆகும். ஒரு படர்கொடி ஒரு கொழு கொம்பைப்பற்றிக் கொண்டிருத்தல் போல்வது. யானைகட்டுந் தறி கந்தழி என்று கூறப்படுகிறது. அழி என்னும் சொல் முதனிலைத் தொழிற் பெயராய் அழித்தல் என்னும் பொருளில் வந்தது. அழித்தலாவது இல்லாமற் செய்தலாகும். ஆகவே கந்தழி என்னும் தொடர்மொழி, (compound word) பற்றுக் கோடு இல்லாமற் செய்தல் என்று பொருள்படும். அது தொழில் ஆகு பெயராய்ப் பற்றுக் கோடில்லாமற் செய்தவனை

அதாவது பற்றுக் கோடில்லாதவனைக் குறித்தது. கடவுளைப் பற்றுக் கோடில்லாதவன் என்று பண்டைத் தமிழ்மக்கள் அறிந்தார்கள்; ஆதலினால் அவனுக்குக் "கந்தழி" என்று பெயரிட்டார்கள்.

2. கடவுள் தனக்கு ஒரு பொருளும் பற்றுக் கோடில்லாதவன்; ஆனால் அவன் எப்பொருளுக்காவது பற்றுக் கோடாயுள்ளவனா? என்னும் கேள்வி பிறக்கும். எப்பொழுதும் ஒரு இன்மைக் கருத்து அதற்கு எதிரிடையான உண்மைக்கருத்தை அவாவியே நிற்கும். பற்றுக் கோடில்லாதான் கடவுள் எனவே பற்றுக்கோடுள்ள பொருள் எது? அல்லது பொருள்கள் யாவை? பற்றுக் கோடுடைய பொருள்கள் உயிர்ப்பொருள்கள் ஆகும்.

3. கடவுளும் உயிர்களும் உருவமில்லாத அறிவுப் பொருள்கள். அறிவுப் பொருள்களில் ஒன்று மற்றொன்றைப் பற்றுவது எப்படி? உயிர்கள் ஒன்றை யொன்று பற்றுதல் அறிவினாலே (Consciousness) தான் ஆகும். இந்த அறிவில் (Consciousness) வேட்கையும் செயலும் அடங்கி யிருத்தலால் உயிர்கள் தங்களுடைய அறிவுவேட்கை (இச்சை) செயல்களுக்காகக் கடவுளைப்பற்றி நிற்கின்றன என்பது பெறப்பட்டது. கடவுளுடைய அறிவுவேட்கை செயல்களை முறையே உயிர்களுடைய அறிவு வேட்கை செயல்கள்பற்றி நிற்கின்றன. அதாவது கடவுளுடைய அறிவு வேட்கை செயல்கள் நிகழாவிட்டால் உயிர்களுடைய அறிவுவேட்கை செயல்கள் நிகழா. சைவசித்தாந்த நூல்கள் உயிர்கள் ஒன்றைச் சார்ந்து நிற்குந்தன்மை உடையனவன்றித் தனித்து நிற்கும் தன்மை உடையன வல்ல என்று கூறுவது இந்த உண்மையையே. இதனைத்தான் தாயுமான சுவாமிகள் அவனன்றியோரணுவுமசையாது என்று கூறியுள்ளதும் ஆகும். We live move & have our benign Him (God) என்று ஆங்கிலத்தில் கூறப்பட்ட உண்மையும் இதுவே. கடவுள் பற்றுக்கோடில்லாதவன் எனவே, அவன் தனது அறிவுவேட்கை செயல்களுக்கு வேறொரு பொருளைப் பற்றுவான் அல்லன், என்பதாகும். அவன் அறிவில் நிறைவுடைய

வன். மக்கள் போன்று கருவிகளால் ஒன்றொன்றாய் அறியாது, கருவிகள் ஒன்று மில்லாது அறிந்தாங்கறியும் தன்மையுடையவன். அவன் உயிர்களிடத்தில் திருந்திய வேட்கை அல்லது அன்பு உடையவன்; மக்கள்போன்று அவன் தனக்கென ஒன்றும் வேண்டாதவன். செயலால் அவன் மக்கள் போன்று ஒன்றையுங் கருவி கரணங்களாற் செய்யாது எதனையும் நினைத்த மாத்திரையே செய்யவல்லவன். ஆகவே கடவுள் அறிவுபற்றி முற்றறிவு உடையவன்; வேட்கை பற்றிப் பேரருளுடையவன்; செயல் பற்றி முடிவில் ஆற்றல் உடையவன், என்பது பெறப்பட்டது. இந்தச் சொல் இப்பொழுது தமிழ்ப்பேச்சு வழக்கிலில்லை. இவ்வாறு கந்தழி என்னும் சொல்லினால் கடவுள் இன்ன மாயாமல ரகித குணம் உடையவன் என்றும் உயிர்கள் இன்ன மலமாயா சகித குணம் உடையவர்கள் என்றும், பண்டைத் தமிழ் மக்கள் பண்டைக்காலத்திலே அறிந்திருந்ததாக நாம் தெரிகிறோம்.

3. கந்தழி என்னும் சொல்லில் அடங்கியிருக்குங் கருத்தை மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்,

உற்றவாக்கையி னுறுபொரு ளறுமல ரெழுதரு நாற்றம்போற்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே
பெற்றவாபெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே
அத்தனாண்டு தன்னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே.

---

அம்மை அப்பன் துணை

# சிவநெறி மாண்பு

[ரத்னபுரி K. சிதம்பரநாதனவர்கள்]

இலங்கை அரசினர் பல்கலைக்கழகத்து இந்து மாணவர்களும் யாழ்ப்பாணத்து உபாத்திமார் கல்லூரி மாணவர்களும் பிறருங்கூடிய இந்துமாணவரியக்கத்து 3-ம் ஆண்டு வெளியூர்க் கூட்டங்களிற் கடைநாளாகிய 1929ஆ டிசம்பர்மீ 26-ம் நாள் அநுரதபுரி "சிற்றம்பல" மண்டபத்தில் ஷ பல்கலைக் கழகக் கணிதப்பெரும்போதகாசிரியர் சைவத்திரு C. சுந்தரலிங்கம் M. A., B. Sc., அவர்கள் அவைத்தலைமையில் யாழ்ப்பாணத்து பட்டோர் நியாயவாதி சித்தாந்தச்செம்மல், பண்டிதர் க. சிதம்பரநாதனர் அவர்களால் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவு.

சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம் பொருளைக்,
கைவந்திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தை விட்டுப்,
பொய் வந்துழலும் சமயநெறி புகுதவேண்டா முத்திதரும்,
தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாரும் செகத்தீரே.

உலகத்தீரே ! சமயங்களுட் சைவசமயமே சிறந்தது. சமயங்களுக்குமெட்டாத பழவுண்மையை அண்மையிற் றெளிவாகக் காட்ட அறிவு வெளியாம் அம்பலமேயிருக்கின்றது. அவ்வெளியின் உண்மை உட்பொருளை உணராது (உண்மையென ஏகதேசத்துப் பொருள்களைக் காண்பித்து நிறைவின்மையாற்) பொய்யே நிறுத்தும் பிறசமய வழிகளில் ஒழுகாதீர். இருள் மருள் நீக்கி இறவாப்பேரின்பமீந்தருளும் திருக்கூட்டப் பொலிவிற்சேர்ந்து இறையருளை நுகர்ந்து நிலைத்தற்கு வம்மின் ! வம்மின் !!

இஃது தாயுமானுர் திருவாக்கு. என்னை ? எந்நெறியாளருந் தந்நெறியே மெய்ந்நெறியென்பதொருதலையாக! இக்கூற்றும் அத்தகைத்தாகவொக்கும் என்னில், அன்று ; சிவநெறி பல்வேறு காரணங்களாலும் தலைமை நிலையுடையது என்னுமுண்

மையை உலகினர் அறிவாராய்ச்சிக்கு வரையறை காட்டாது ஏற்ப எடுத்து விளக்கிக்காட்டுவதே இச்சொற்பொழிவாம் என்க.

உலகிலுள்ள மக்கட்கெல்லாம் இன்பம் துன்பம் என்ற இரு வகை யுணர்ச்சியுமியல்பிலே யிருத்தலானும் துன்பம் வெறுக்கப் பட இன்பமே விழையப்படுதலானும் அவ்வின்பமுமே ஈண்டுச் சின்னுணிலையாய சிற்றின்பமாகக் காணப்படுதலானும், என்று மழியா நிலைபேறுன பேரின்பத்தை யடைவதே பிறவிப்பெரும் பயனென அறிவுதலைப்பட்டோர்க்குத் தோன்றுதலானும், அவ் வாறப்பேரின்பத்தை அறிந்தடைந்தெய்தி யழுந்தியிருப்ப மக் கள் கடைப்பிடித்தொழுகும் வழிகளும் முறைகளும் பல்வகை நெறிகளாகும். அவைதாம் சமயங்களெனவும்படும்.

அச்சமயங்கடாம், பல்வேறு நாட்டினர்க்கும் பல்வேறு பழக்க வழக்கமுடையோர்க்குமேற்பப் பல்வேறு வகையா நில வுவனவாம். இக்காலத்து உலகிற்பெரிதும் வழங்கும் சமயங் கள் இந்துமதம், பௌத்தமதம், கிறிஸ்துவமதம், மகம்மதிய மதம், யூதமதம், செரூஸ்ரிய மதம் முதலியவாம். இவற்றுள் இந்துமதமென்பது பொதுவில் நான்மறைகளாகும் வேதங்களை முதனூலாகக்கொண்டு கிளைத்தெழுந்த அறிவு ஆராய்ச்சிகளா னுற்ற சைவம், வைஷ்ணவம், காணுபத்தியம், வைரவம், கௌ மாரம், வாமம், வேதாந்தம் முதலிய பல சமயங்களையும் தன்ன கத்துக்கொண்டுள்ளது. பௌத்த மதத்தையுமே ; அதன் தலை வர் இந்துவாயிருந்திறந்தமையின் இந்துமதத்தின் கிளையேயெ னக் கூறுவாருமுளர். மகாத்மா காந்தியடிகளும் இலங்கை யில் பௌத்தருக்கு இவ்வாறு கூறிப்போந்தது காண்க. அஃ தெவ்வாருயினுமாகுக. ஏனைய மதங்கள்யாவும் தத்தம் தலைவ ராகிய ஒவ்வோர் பெரியோர் வாயிலானிறுவப்பெற்று அவர்க ளது பேரானும் குறிப்பிட்ட உருவமூர்த்திகள் பேரானும் வழங் கிவருவனவாக சிவநெறியொன்றே சிவத்தையடையும் மதமென நின்று ஓர் மனுடனுலும் கற்பித்து நிலைநிறுத்தி வகுத்ததெனப்

படாமல் அடையும் பயனைக்குறித்து அழைக்கப்படுவதாம் பெருமையுடைத்தாதல் தெளிபு.

இனி, சிவநெறி யென்பது சிவத்தை யடையும் நெறி யென்றாக, சிவம் தான் யாதென ஆராய்தலேற்புடைத்தாம். "செம்பொருள்" எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாராற் குறிக்கப் பெற்றதும், "செம்மையே யாய சிவபதம்" என மணிவாசகப் பெருந்தகையாற் சுட்டிக் காண்பித்ததும், இன்பம் எல்லாம் கூடிய பெரும்பொருள் என்பதும், சிவம் என்ற சொல்லால் நம் செந்தமிழில் அறியப்படுவதாகும். "சைவம் சிவத்தோடு சம்பந்தம்" என்று சிற்றம்பல நாடிகள் கூறியதுமிது குறித்ததே. தேம்பாவணி யென்னும் கிறிஸ்தவ நூலினுமே "சிவம்" எனும் சொல் பெருஞ்சுகம் என்ற பொருள்தர வழங்கியுள்ள தென்பர். எனவே சிவநெறி யென்பது பரம சுகத்தைத் தேர்ந்து தெளிந்து துய்க்கு நெறியாம் என்ப. அப்பரம சுகந்தான் "எப்பொருள் யார் யார் வாய்க்கேட்கினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றபடி, அவ்வவர் அறிவு நிலைக்கும் காலதேச வர்த்தமானங்களுக்கு மேற்பத் தேர்ந்து தெளிந்து துய்க்கப் பெறுமாகவே, சிவநெறியும் மெய்ப்பொருளைக் காணு நெறி, மெய்ப்பொருளைத் தெளியு நெறி, மெய்ப்பொருளைத் துய்க்கு நெறி என விரிந்து,

யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள்
வேதனைப் படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா லவையிலாதா னறிந்தருள் புரியுமன்றே.

என்ற சிவஞானசித்திப்பாவிற் கிணங்க, "எவ்வெவர் தம்மையேனும் யாவரே யெனினும் போற்றின், அவ்வவரிடமாக் கொண்டே யவர்க்கருள் புரியும்" இறை நலத்தைக் காட்டி, உலகிலுள்ள அறிவாளரது ஆராய்ச்சிகளெல்லாவற்றையும் ஒரோவகை உட்பொருள்கள் (சோபானம்) ஆகக் கொண்டு தன்னகத்தடக்கித் தானே தலைமை (இராசாங்க) நிலையில் அமர்ந்திருக்கும் நெறியாமென்பது தெளிவாம்.

அங்ஙனமாயின், எல்லாநெறியும் மெய்ந்நெறியாதல் ஒருப்பாடாம். ஆகவே அவற்றுட் டலையாய நெறி சிவநெறியே யென்றல் யாண்டையது? என வினு நிகழும். அதற்கு விடையாகவே சிவஞான சித்தியாரில்,

"ஓது சமயங்கள் பொருள் உணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாம லுளபலவு மவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்லது எனும் பிணக்க தின்றி
நீதியினல் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்
ஆதலினல் இவையெல்லா மருமறையா கமத்தே
அடங்கியிடு மிவையெல்லாம் அரனடிக்கீழ் அடங்கும்"

எனக்கூறியதாம். என்னே? யானை கண்ட குருடர்போற் கண்ட கண்டனவே முடிபாமெனக் கூறி நிற்பார் பல்வகை மதத்தினருமாக, அவர்கண்ட உண்மைகள் எல்லாவற்றையும் ஒரோ வழி ஒத்துத் தன்னகத்தே காண்பித்து மேலாம் முடிபைக்காட்டுவது சிவநெறி யென்ப. அருமறை யாகமம் அறிஞர் கண்ட பொருள் முடிபெல்லாவற்றையும் காட்ட அம்மறையாகமம் எனப்படும் சொல்லறிவுமே அரனடி என்னும் சிவத்திண்மையாகும் செம்பொருளில் அடங்கி நிற்ப, மேல் முடிவு (சித்தாந்தம்) செய்வதற்குப் பிறிது உண்மையிலதாய் அறிவாராய்ச்சி யடங்கியவிடம் காண்பித்து நின்றது சிவநெறி யெனினுமமையும். இதுவே சிவநெறியின் தலை மாண்பாமெனக்கூறலாம். ஏனைய நெறியாளர் போன்று உண்மைக்கு வரையறை கட்டிக் கிணற்றுத் தவளையது போன்ற அறிவு முடிபு கொள்ளவிடாது, நுண்ணாராய்ச்சி கொள்ளுமட்டுங் கொள்ளத்தந்து சொல்லிறந்த பரவெளிச் சுகத்தைக் கண்டு களித்துண்டு திளைக்கத் தருதலின், உலகப்பொது நெறி (Universal religion) ஆதற்குரிய பெருமையுடையது சிவநெறியே யன்றோ? இதனை அறியாதார், சிவநெறியினை இற்றை நாட்கண்ட சிற்சில வரம்பிலா வழக்குகளோ டிணைத்துக் குறுகிய நெறியெனக் கொண்டு பிதற்றுவர். அன்னோர்க்குச் சித்தாந்தம் தெளியப் பெறலே விழைவாயின் "மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த்

தொடங்கின்'' "வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும்'' எனக்கூறி நிறுத்தி அப்பாற் செல்வாம்.

சிவநெறியிற்றானே இறை, உயிர், இருள் (=தளை, கட்டு) (பதி பசு பாசம்) என்னும் முப்பொருள் நிச்சயம் தெளிவாகக் கூறியுள்ளதெனலாம். பதி யுண்மையைக் குறிக்காத, ஒவ்வாத, பௌத்தம் முதலிய நாஸ்திக மதங்கள் போலன்றியும், பதி யொருவனையே கண்டு, அவன் சிருட்டியால் மனிதருண்டாயதாக் கொண்டு, சுகதுக்க விழைவுகட்கு வகை தெரிவிக்க மாட்டாது முழுப் பொறுப்பையும் கடவுள் மேலே ஏற்றி, அருள், நிறை ஆகிய குணங்களை அவற்குக் காண்பிக்க முடியாது தத்தளிக்கும் கிறிஸ்துவ முதலிய பல ஆஸ்திக மதங்கள் போலன்றியும், தனித்து நின்று முப்பொருளையும் அநாதி காட்டி நிச்சயிப்பது சிவநெறி யொன்றே யாம். என்னை? உண்மை அறிவு இன்பம் (சச்சிதானந்தம்) திரண்ட நிறைபொருள் பதியாக, நிலையின்மை அறிவின்மை (அசத்து அசித்து) என்ற தன்மைகளுள்ள கட்டுப் பொருள் பாசமாக, இவ்விரண்டுடனும் சார்ந்ததன் வண்ண மாய்க் "கண்டதைக் காட்டும் பளிங்கு போன்ற'' தன்மைத் தாய்ச் சதசத்து எனப்படுவதாயுள்ள பொருள் பசுவாகவும், இம்மூன்றும் அநாதியாய் ஒன்றினொன்று தோன்றாததாய் நிலையாயுள்ளன வெனக் காண்பிப்பது சிவநெறியொன்றே யாம். இறை உயிர் இலக்கணத்தை இரவியொளியும் கண்ணொளியும் போல எனவும், இறைவன் திருவருளே மாயையா மென்றும், அதுவே மறைப்பாய் நின்று பாசத்தொடு கூட்டி உயிரை மயக்கி யும், பின் பக்குவ காலம் உற்றபோது அறிவாய் நின்று பதி யோடு கூட்டி உயிரை வீட்டின்பத்து நிறுத்துவதெனவும் காட்டு வதும் சிவநெறியன்றே. அன்றியும் இதிற்றானே "அகரமுதல வெழுத்தெல்லா மாதி। பகவன் முதற்றேயுலகு'' என்றவாறு "அக்கரங்கடோறுஞ் சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனும்'' என்றும், எனப்பதிப் பொருள் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் சித்தாகி நின்று உயிரினம் யாவற்றையும் மெய்களை யும் நிலைத்து நிற்பானியக்குவனெனக் காட்டியதுமாம் என்க.

அகர முதல என்றது, அங்காப்பு மாத்திரையானுய உள் வளித் துரப்பு அகரத்தைத் தோற்றுவிப்பதே யன்றி மற்றெல்லா எழுத்துக்களதோசையையும் தோற்றுவிப்பதற்குச் சிலவற்ருேடு (உயிர்க்கு) ஒன்ருயும் பிற சிலவற்ருேடு (மெய்க்கு) உடனுயும் நிற்குமாற்ருல் தொழில் பிறப்பியக்க மாறிய முறையில் எழுத்துக்களெல்லாவற்றையும் முதலாய் நின்றியக்குவ தென்பதாக் கொள்க வென்றபடியாம்.

மேலும் இச்சிவநெறி யொன்றிற்ருனே உயிர்களுக்குள்ள சத்த சத்தித் தன்மை (Matter and energy) விளக்க அம்மையோ டப்பன் (சதிபுருட) முறைமையாக இறைவனைக் காண்பித்துள்ள உண்மையே, இதன் பெருமையையும் சிறப்பையும் காட்டுவதாம். என்னை? ஏனைய மதக் கடவுளர் போலன்றி, உமைபாகனுஞ் சிவனுயிருப்பவன் எம் சிவ நெறியிறை யன்றே. பெண்மையைப் புறக்கணித்துக் கடவுளை ஆண் மகனுக மாத்திரமே காண்பித்துள்ள பிறமதங்கள் போலன்றி,

"அருளது சத்தியாகும் அரன்றனக் கருளையின்றித்
தெருள்சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தியில்லை
மருள்தனை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை ஒளியாலோட்டும் இரவியைப் போல ஈசன்."

என்றவாறு, அருளே சிவசத்தி யாமென்றும், அவளின்றி அவனுமேயில்லை யென்றும், அவளே இரவியொளி இருளையோட்டுவதுபோல் உயிர்களது மயலை நீக்கி மெய்யறி வீயும் சத்தியாமென்பதும் அவளைக் கொண்டே இறைவன் இருளையோட்டியுயிர்க்கருள் புரிவன் என்பதும் காட்டியது சிவ நெறியன்றே. "இருமையினின்றி இயலாதுலகம்" என்பது மேனுட்டு விஞ்ஞான சாஸ்திரிகளும் ஒத்துளதாதல் கொண்டு இக்காலத்து இளங்கல்வியாளர் இவ்வுண்மையின் திண்மையைக் கடைப்பிடிக்கற் பாலர்.

மேலும் இச்சிவநெறியினிற்ருனே அறிவாற்றல், உடலாற்றல், மனவாற்றல்களுக்கேற்ப இறைவனைப் புறத்தும், அகத்தும், அகம்புறத்தும் ஒன்றினின்றும் கண்டு வழிபடுதலாகிய

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை நெறிகள் நிறுவப்பட்டுள்ளதாகும். என்னை ? பணிப்போனிடம் பணி யாளன் பணிந்து நின்று தயைபெறுவதுபோல் இறைவனைப் புறத்தே பெரும்பொருளாகக்கொண்டு கைகூப்பிக் கால்வருடி ஆலயத்திலுருவமைத்து நன்னுளிலாவது போற்றி வேண்டிய பெறுதலாகிய ஆண்டான் அடிமை முறையாம் தாதமார்க்கம் சரியையாகவும், தந்தையிடம் தநயன் உரிமைபேசிக் கிட்டநின்று மெய்தீண்டி உளங்கனிவித்து உவப்பித்து வேண்டிய பெறுவது போல் இறைவனைக் கும்ப விம்ப லிங்க உருவத்தில் மலர்சூட்டிப் பதினறுவகை யுவப்பித்தலும் (சோடசோபசாரம்) பணித்து நித்தியபூசையென்னும் கிரியைகளையும் இயற்றிச் சந்தியாவந்தன மென்னும் மந்திரகிரியை பாவனைகூடிய நித்திய ஒழுக்கங்களையும் ஒழுகி அண்மையிற்கண்டு அன்புருக்கால் என்புமிளகி உடல் புள கித்து ஆடியும் பாடியும் இன்புற்று நின்று வேண்டுவ பெறுதலா கிய தந்தை மகன் முறையாம் சற்புத்திர மார்க்கம் கிரியையாக வும் ; தோழனுடன் தோழன் உரிமையோடு உறவும் பாராட்டி வழக்கிட்டுப் புறம்பின்றி நெருங்கி நின்று வேண்டுவ பெறுமா போல், இறைவனைத் தன்னகத்தே பிராணனையியக்கி நிறுவித் தன்னுடம்பிலேயே "காயமே கோயிலாகக் கடிமனமடிமை யாக, வாய்மையே தூய்மையாக, மனமணி இலிங்கமாக, நேயமே நெய்யும்பாலா நிறைய நீர் அமையவாட்டிப், பூசனை ஈசனர்க்குப் போற்றவி காட்டினேமே" என்றவாறு கொண்டு கண்டு பாவ னையால் தன்னுள்ளே தலைவனென்றுணர்ந்து மூலகுண்டலியை எழுப்பிப் புருவமத்தியிற் சுடராகிய கொழுந்துவிட்டெரிய உரு கும் அமிர்தத்தையுண்டு திளைத்து இன்புற்று வேண்டிய பெறுத லாகிய தோழமை முறையாம் சகமார்க்கமே யோகமாகவும்; தலை வனும் தலைவியுமாய இருவரும் உடல்வேறுயிரொன்ருய் நின்று இரண்டற்றொன்றற்று ஒருவரதின்பம் மற்றவரதாக ஒன்றி உரிமை, உறவு, உயிர்த்துணை பூண்டுள்ளவர்போல் இறைவனை உயிர்தன்னேடு இரண்டற்று ஒன்றேயாய் (அத்துவிதக் கலப் பில்) "தன்னுளே சகமும் சகத்துளே தானும்" ஆகி "அவ னேதானே ஆகிய வந்நெறி ஏகனுகி" "தந்ததுன்றன்னைக்

கொண்டதென்றன்னை '' என்றபடி " இறை கலந்தவின வெள்ளை சோர எனதுள்ளங் கவர்கள்வனுய்'' கணவன் மனைவி முறையில் அகத்திணையின்பத்து நிறைவாகிய பேரின்ப நுகரு நிலையில் கண்டுகொண்டு வேண்டிய பெறுதலாகும் தலைவன் தலைவியர் முறையாம் சன்மார்க்கமே ஞானமாகவும் கூறிவிரித்து விளக்கப்பெற்று மக்கள் யாவர்க்கும் அவரவர் நிலைக்கேற்ப அறிவின்பம் பெருக்க வழிகாட்டி நிற்பது சிவநெறியன்றே. ஏனைய சில மதத்தர்போல் நுண்ணறிவொன்றினுலேனும், அன்றி அஃதின்றிய நம்பிக்கையாலேனும், அன்றி விசுவாசத்தாலேனும் மாத்திரமே இறைவனருள் பெறலாமெனச் சுட்டித்தொழுகை முறையை வரையறுத்துளதன்று சிவநெறியென்க.

மேலும் சிவநெறியிற்றுனே ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் "நெல்லினுக்கு முளை தவிடு உமிபோல்'' நின்று உயிர்களை மயக்கி வினை செய்வித்து இன்பதுன்ப நுகர்விக்குமென்பதும், அவற்றுள் ஆணவம் மயல் என்னும் அறியாமையிருளாய் உயிரை அநாதியேபற்றி நின்று என்றுமழியாததாய் முத்தியினும் " இரவிமுன்னிருள்போல்'' செயலற்று நிற்பதென்றும் கன்மம் விட்டவிடத்துத்தோன்றிப் பிரவாக அநாதியாய் நின்று இயற்றப்படுங்கால் நல்வினைத் தீவினை எனப்படும் ஆகாமியமாய்ப் புத்தியிற்கட்டுண்டு (நான் செய்தேன் பிறர் செய்தார் எனது யான் என்னுமிக்கோணுல்) புண்ணியம் பாவம் என்ற சஞ்சிதமாய்ப்பின் நுகர்ச்சிக்கு வரும்போது இன்பம் துன்பம் என்ற பிராரத்துவமாய் வருவதென்றும்; மாயை உயிர்கட்குத் தனு கரணம் புவனம் போகம் எனப்படும் நிலைக்களனுய் உயிர் அநாதியானமைபற்றி முற்றுமழியாதிருக்குமாற்றுல் காரண காரிய அநாதியாய் இன்பதுன்ப மூட்டைகளை உண்ணவிடங்காட்டி நிற்பதென்றும் விளக்கியதாம். என்னை! அநாதி எனப்பட்டது இறை உயிர் இரண்டற்கும் சித்துசத்தாம் தன்மையில் முற்றுயும் (infinite & eternal) ஆணவவியல்பில் ஆன்மகுணமாந்தன்மையில் ஏகதேசமாயும் (Infinite & Primordial) கன்ம வியல்பில் விட்டவிடந் தொட்டென்று நிற்றலில் பிரவாக

(தொடரும்)

# திருஞான சம்பந்தர்—செந்தமிழ் நாடகம்.

[திருவாளர் S. முத்துக்குமாரசாமியா பிள்ளையவர்கள்]

(முன் ஊடுஅ-ம் பக்கத்தொடர்ச்சி)

எழுந்தருளும் பெருமை கேட்டருளி, மங்கையர்க் கரசியார் எய்துதற்கரிய பேறு எய்தினர். நம்முடைய வாழ்வு எழுந்தருளிய தென்று, என்னை, எதிர்கொண்டு அடிபணிவீர் என்றருளினர்.—(என்று கூறி மீளவும் பணிந்து போற்றினர்).

(அழைத்துக் கோவிலுக்கு வருதல்). மதுரை கண்டு "மங்கையர்க்கரசி" பாசுரம்.

மூன்றும் அங்கம்—நான்காம் காட்சி.

இடம்:—மதுரை அரண்மனை.

காலம்:—முற்பகல்.

நடர்:—மங்கையர்க் கரசியார்.

நெடுமாற மன்னர்:—(கூன்பாண்டியன்).

மங்கையர்க்கரசியார்:...மன்னர் முன் சென்று:—

அன்பு மிக்குடைய எம் தலைவ,

ஆலவா யமர்ந்தார் தம்மைக் கும்பிடவேண்டும். விடை தந்தருளுக.

மன்னர்:—என் உயிரனையாய்,

செல்க, நீ விரும்பியவாறே.

தாதியர் தம்மைச் சூழத் தனித் தடையொடும் சென்று நம்பரை வணங்கித் தாமும் நல்வர வேற்று நின்றார்.

இடம்:—மதுரைக் கோவில்.

காலம்:—முற்பகல்.

நடர்—திருஞான சம்பந்தர், குலச்சிறையார், மங்கையர்க் கரசியார், கோவில் தொண்டு செய்வோர் முதலியோர்.

திருஞான சம்பந்தர் கோவில் வெளிமுன் சென்று நில முறப் பணிந்து, மெய்ம்மயிர் பொடிப்ப, கண்ணீர் வார, நின்று ஏத்துகின்றார்.

திருச்சிற்றம்பலம்.

" நீலமாமிடற்-றாலவாயிலான்
பாலதாயினர்-ஞாலமாள்வரே"
" அடிகளாலவாய்-படிகொள் சம்பந்தன்
முடிவிலின்றமிழ்-செடிகணீக்குமே."

திருச்சிற்றம்பலம்.

இவ்வாறு துதித்துக் கோவிலுட் புகுந்தார். எதிர் செல லாகாதென்று உள்ளிருந்த அம்மையார், இவர் புகுந்ததும் வணங்கினர். உடனே,

குலச்சிறையார்:—பிள்ளையார் கழல்வணங்கி, எம் இறையே! இதோ கைகுவித்து நிற்கும் அம்மைதான், வளவர் கோன் பாவையார்.

திருஞானசம்பந்தர்:—பெருங்களிப்புடன், விரைந்து, எதிர் அணைந்தார்.

தேவியார், சிவக்கன்றின் திருவடி, தன் தலை பொருந்த முன் விழுந்தார்.

வள்ளலார், அருளொடுந் திருக்கையாலெடுத்தார்.

அம்மையார், தம் மனக்கருத்து முற்றியதென மதித் தார்.

கண்ணீர் மல்கிற்று. பவளவாய் குழறவும்,

அம்மையார்:—"யானும் என்பதியுஞ் செய்தவம் என்கொல்?" என்று மீண்டும் வணங்கினர்.

திருஞானசம்பந்தர்:—"புறச் சமயத்தாற் சுற்றப்பட்டும், திருத் தொண்டினை மேற்கொண்டு வாழும், உம்மைக் காணவே வந்தனம்."

குலச்சிறையார்:—எங்கள் தவப் பெரும,

நாங்கள் உற்ற துன்பம் இனைத்தெனக்கூற வியலாது.
(அம்மையார் வணங்கினர் மீண்டனர் மாளிகைக்கு).

கோவிலில் உள்ள அடியார்களும் பணிசெய்வோரும் :

திருஞான சம்பந்தர் திருவடி வணங்கி:—

இருளில் கிடந்து தியங்கும் எங்கட்கு நல்லொளியாய்த் தோன்றிய ஞான சூரியரே !

எல்லையில் தவஞ்செய்தோம், ஆதலால், இங்கெழுந்தருளப் பெற்றோம். எங்கள் பிராட்டியாரும், மன்னனார் அமைச்சனாரும் வேண்டிய குறையை, முடித்துத்தர வேண்டுகின்றோம்.

திருஞானசம்பந்தர்:—அன்பர்களே, அஞ்சல் விடுமின்கள், மதுரை நாயகனார் திருவருளால் யாவும் இனிதே நிறைவேறும்.

இன்புறும் அமைச்சர், வெளியிலழைத்து வந்து, திருமடம் காட்டினார். அன்பர்கள் போற்ற, தம் பரிசனத்தொடும் அங்கு அமர்ந்தார். (விருந்தளித்தல்)

நான்காம் அங்கம் - முதற்காட்சி.

இடம்:—மதுரை அமண் பாழி.

காலம்:—மாலைப்பொழுது.

நடர்:—அமண் குருக்கண்மார்.

அமண் குருக்கண்மரர்கள் யாவரும் ஒருங்கு கூடினர்.

அமண்குருக்களுள் தலைவர்:—அடிகண்மீர்,

இன்று காலை முதல், இதுவரை, இவ்வூரில் இந்தச் சைவர்கள் படுத்தின பாட்டைப் பார்த்தீர்களா ? இருப்பது கொஞ்சப் பேர்தான். அவர்களுக்குத் தங்களில் ஒருவரைக் கண்டதும், அதிலும் அவர் பல்லக்கில் வருவதும், கூட்டம் கூடியிருப்பதைக் கண்டதும், பொறுக்கமுடியவில்லையே. அவருக்குச் சின்னங்கள், ஊது வாங்காக்கள், என்ன ஆடம்பரம் பார்த்தீர்களா? உண்மையான அன்பனாக விருந்தால் இந்த வீண் ஆரவாரம் எதற்கு ? நமது அரசியாரும், அமைச்சரும், இதற்குக் கொஞ்சம் ஒத்திருப்பதால்தான் இவ்வளவு கோலாகலம். ஊர் மக்களையும் ஒன்றிலும் நம்ப முடியவில்லை. "சூரபன்மனின் வாலில்லாக் கிளைகள்" என்று சொல்லுவதுபோல் தானிருக்கிறது. இன்று அவர் சிவிகையோடு, கூட்டத்தைப் பார்த்தீர்

களா ? அவர்கள் பாட்டைப் பார்த்தீர்களா ? ஆனால் கேட்ப தற்கு இனிமையாகத் தானிருக்கிறது. இதனால்தானே, மக்கள் ஏமாந்து போகிறார்கள். நாம் பேசாது இருந்துவிடக்கூடாது. ஊறும்போதே துடைத்துவிடுதல் வேண்டும். சிறிய பகை யெனினும் வேரோடு பறித்தெறிதல் வேண்டும். என் செய்வது இப்பொழுது.

மற்றொரு குருக்கள்:—தாங்கள் சொல்லிய யாவுஞ் சரிதான். இன்று இந்தச் சைவர்கள் கொண்டுள்ள மகிழ்ச்சி யைக் கண்டு, என் மனம் பொறுக்க முடியாத துன் படைகின்றது. நாம் யாவரும் சேர்ந்து இப்பொழுதே அரசனிடம் சென்று, அவரை நம் வயப்படுத்திக் கொண்டு, இந்தச் சைவக் கிழங்கள் தங்கியிருக்கும் இந்த மடத்தைத் தீக்கிரையாக்கி விடுவோம். இன் றிரவே செய்துவிடவேண்டும். அப்படிச் செய்தால், இந்த ஆட்டபாட்ட மெல்லாம் ஒடுங்கி, நாளைக் காலை இருந்த இடந் தெரியாது, எல்லாரும் ஒடிவிடுவார்கள்.

மற்றொரு குருக்கள்:—அதுவே சரியான எண்ணம். அப்படித் தான் செய்ய வேண்டும். என்ன அட்டகாசமய்யா ! ஒருத்தர் தாளம், ஒருத்தர் ஆட்டம், ஒருத்தர் கொடி பிடித்தல், ஒருத்தர் சாமரம் இரட்டல், என்ன பெருமை, எழுந்திருங்கள் யாவரும். இப்போதே மன் னன் பால் ஏகுவம்.

(எல்லாரும் எழுந்து மாலைக்கருகருத்த நேரத்தில் மன்னன் அரண்மனை யடைந்தார்கள்.)

## நான்காம் அங்கம் - இரண்டாங்காட்சி

இடம்:—அரசன் அரண்மனைக் கொலுமண்டபம்.

காலம்:—மாலைப்பொழுது.

நடர்:–அமண்குருக்கண்மார், கூன்பாண்டியர், முதலியோர்.

அரண்மனைக் காவலர்:—(அமண்குருக்கண்மார்கள் காவலரை நோக்கி)

"வெற்றி வேலவர்க்கு எங்கள் வருகையை விளம்புவீர்"
(காவலர் அரசன்முன் சென்று வணங்கி)

மன்னருள் ஏறே!

"அடிகண்மார் கூட்டமாய் நம் வாயில்முன் வந்தனர்." தங்களைக் காண வேண்டினர்.

மன்னர்:—"அடிகண்மாரை விரைவின் இங்கு வரவிடுக."

நான்காம் அங்கம்: இரண்டாம் காட்சி:

பாயுடுத்திச் செல்லும் அமண்குருக்கண்மார் மனப்பதைப்புடன் உட்சென்றார்.

கூன்பாண்டியன் :—"வணங்கி" அடிகண்மீர், நலமா? நீவிர் யாவரும் ஒருங்கு திரண்டு இப்போது வந்ததுஎன்ன? அவ்வாறு வரும்படி உங்களுக்கு உற்ற இடர் என்ன?

அமண்குருக்கண்மார் :—அரசே :—சொல்ல முடியாத, அவ்வளவு, பெருந்தீங்கு உற்றது.

மன்னர் :—அப்படியா! அவ்வளவு பெருந்தீங்கு என்ன? அடுத்தது கூறுக. கூடியவாறு தீர்க்க முயலுகின்றேன்.

அடிகண்மார்:—மிக்க வலிமை யுடைய மன்னவ!

அமணர் தலைவனுயுற்ற உமது மதுரையில், சைவ வேதியர் மேவலால் "கண்டுமுட்டி" யானேம் (என்றார்கள்)

மன்னர் :—யானும் "கேட்டு முட்டி" யானேன். (சிறிதுநேரம் ஒன்றும் உரையாது இருந்து—பின் வெகுளிச் சிரிப்புச் சிரித்து) நன்று! நான் புரிந்த அறம்! இன்று எம் மாநகர் அணைந்தது என்? அவர்கள் யாவர்?

அடிகண்மார் :—

மறைச்சிறுவன், தன் கூட்டத்தோடு, முத்துச்சிவிகையில், வந்திருக்கிறான். சோழ நாட்டுச் சீகாழியிலுள்ளானும். அவ்வூர் சடைக்கடவுள்பால் ஞானம் பெற்றுளனும். "எங்களை வாதில் வெல்ல" என்றே இங்கு வந்திருக்கின்றானும். இன்று, அவனைக்கண்டதும், இங்குள்ள சில சைவர்களும் சேர்ந்து

கொண்டு செய்த அட்டகாசம் அளவில்லை. ஒரு மடத்தில் தங்கியிருக்கிறார்கள். அவரைக் கண்டதும், ஏதோ, ஒரு வெற்றி வந்து விட்டதுபோல, இந்தச் சைவர்கள் அவருக்கு விருந்து செய்வதும், வணங்குவதும், ஊது சின்னங்கள் கொண்டு ஊது வதும், இப்படியாக, இன்று அவர்கள் செய்வது, எங்களால் சொல்லுந் தரத்ததன்று.

மன்னர் :—(நமது பிள்ளையார் பெயர் முதலிய கேட்டதும், வெருண்டு, கூறுவான்) அப்படியா? மாமறை மைந்தனா? நன்று! நாம் இப்போது செய்யவேண்டுவதென்ன?

அமண்குருக்கண்மார் :—(மன்னன் சீற்றமுற்ற தன்மையைக் கண்டு) மன்ன, நாம் வலிசெய்து போகச்செய்வது முறையன்று.

அமண்குருக்கண்மார் :—

நமக்கு அடுத்ததும் அன்று. (சிறிது நேரம் எல்லாரும் கலந்து கொண்டிருத்தல்) மன்னே! ஒன்று செய்வது நலமென எண்ணுகிறோம். அதாவது, அவர்கள் உறை மடத்தில், மந்திரத் தொழிலால், தீவைத்து விட்டால், இந்த நல்ல ஊரை விட்டு விட்டு மறைச் சிறுவன் தானே ஓடி விடுவான். அவன் ஓடி விட்டால், பின் எல்லாரும் போன இடம் தெரியாது போய் விடுவார்கள்.

மன்னர் :—"ஆவதொன்று இதுவே யாகில்" அதுவே செய்யுங்கள். விரைந்து போங்கள்.

(அமணர்கள் யாவரும் தங்கள் எண்ணம் முற்றியதென எழுந்து போதல்)

நான்காம் அங்கம்: மூன்றாங் காட்சி.

இடம்:—மதுரை அரண்மனை.

காலம்:—மாலைப்பொழுது, முன் இராப்போது.

நடர்:—கூன்பாண்டியன், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் முதலியோர்.

மங்கையர்க்கரசியார் :—(மன்னர் ஒன்றும் உரையாடாது பூவணைமீது இருந்தார். மங்கையர்க் கரசியார் எதிரணைந்து, மன்னர் துயர்கண்டு வினவல்) என்னுயிர்க்குயிராயுள்ள இறைவ !,

என்கவலுற்றது ? முன்னுள மகிழ்ச்சி இல்லையே. முகம் வாட்டமுற்றிருக்கின்றதே, கவலை இதுவென அருள் செய வேண்டும். (என்று வருந்திக்கேட்டார்).

மன்னர் :—அழகிய கண்ணினாய்,

காவிரிநாட்டுச் சீகாழியிலிருந்து, சங்கரன் அருள் பெற்று, அடிகண்மாரை வாதினில் வெல்ல என்று, ஒரு மறைச்சிறுவன் இங்கு உற்றான். நீறுபூசுந்தொண்டர் அவனைச் சூழ்ந்துளார். அக்கோலங்கண்டு, அடிகண்மார் "கண்டு முட்டி" யாயினர். நானும் அவர்கள் கூறக் "கேட்டு முட்டி" யாயினேன். காதல் மானியே !, பண்பு மற்றிதுவே ! பரிசு வேறில்லை.

மங்கையர்க் கரசியார் :—என் உறை மனனே,

வருந்த வேண்டாம். இதுதானா ? இது தெய்வத்தன்மையே ! வாது செய்தால், வென்றவர் பக்கம் துன்னுவது உறுதி.

(மன்னன் கவலை நீங்கி மனமகிழ்ந்திருத்தல்)

நான்காம் அங்கம்: நான்காம் காட்சி

இடம்:—அரண்மனை ஒரு சார்.

காலம்:—முன்னிரவு.

நடர்:—மங்கையர்க் கரசியார், தோழிமார்கள், குலச்சிறையார்.

மங்கையர்க்கரசியார்:--(மன்னன் மகிழ்வுற்றதும், தானும் களிப்பு மிக்குப்போக, குலச்சிறையார் அங்கு வந்தெய்தக் கண்டு கூறல்)

அமைச்சரே,

நமது மன்னரும் அருள் வழிப்பட்டார். இப்போது நிகழ்ச்சி

யிலறிந்தேன். நமது வள்ளலார், கூட்டத்தோடு, வாது செய்ய வந்தார் என்று கேள்வியுற்று, மிகக் கவலையோடிருந்தார். நான் சென்று, அவர் கவலை கேட்டேன். தெரிந்தேன். வருந்துவா னேன் "வென்றவர் பக்கம் சேர்வம்" நமக்கென், யாராயின்? என்றேன். உடனே மன எழுச்சி கொண்டு, சரிதான் என்று மகிழ்வுற்றார். இதுவும் நமக் கொரு நற்குறியே.

குலச்சிறையார்:—அருள் நிறை அம்மையாரே, (என்று தலை, கைகுவித்து நின்று)

நமது பிள்ளையார் இங்கு இன்று வந்து ஒன்றுஞ் செய்ய வில்லையே. அப்படியிருந்தும், நமது மன்னரிடம், இவ்வமணர் கள் சென்று, ஏதோ தப்புந்தவறுமான எண்ணங்கள் படும்படி சொல்லித்தானே இவ்வாறு நமது மன்னர், கவலைப் படும்படியா யிற்று. இன்னும் இந்த வஞ்சகர்கள் என்ன மாயங்கள் செய் யப்போகிறார்களோ ? நமது சொல்லுறுதி கொண்டன்றோ, நமது பிள்ளையார் இங்கணையும் பேறு பெற்றோம். கண்குளிரக்கண்டு, வணங்கவும் பெற்றோம். இனி, என் நிகழுமோ ? அறியேன். (என்று கவலையுற்றார்).

மங்கையர்க்கரசியார்:—(உடனே அஞ்சினார். கண்ணீர் வடித் தார்) சொல்வது சரியே. இவ்வமணர்கள் கொடிய வஞ்சகர்களே. ஈனமே புரிபவர்களே. என்ன செய் வார்களோ ? அமைச்சரே, அப்படி ஏதாவது "நன் மையல்லாத செய்து ஊனம் வரின்" யாமும் உடனே உயிர் துறந்து ஒழிவம். (தொடரும்)

---

# குடியும் மீதூண் விரும்பலும்

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

"குடித்தல்" "பெருந்தீனி தின்னல்" என வழக்காற்றிற் கூறப்பட்டு வரும் இரண்டும் மக்கட் செய்கைகளல்லாது மாக் களின் செய்கைகளாகவே கற்றோராலும் மற்றோராலும் கருதப்

பட்டு வருவதால் வெறுத்தொதுக்கற் பாலனவேயாம். இஸ்ரவேட்ஸ் என்ற மக்கட் கூட்டத்தினர்க்கு மோசே என்பவர் கடவுள் வாக்கென எடுத்தியம்பியதாகக் கிறித்துவநூலிற் காணக்கிடப்பது என்னவெனில் "இவ்விரண்டு கெட்ட பழக்கங்களும் படிந்துள்ள ஒரு சிறுவனை அவன் பெற்றோர்கள் பொது மன்றத்திற் கழைத்துச் சென்று அங்கே குழுவியிருக்கும் நாட்டுப் பெரியோர் முன் 'எங்கள் மகனாகிய இவன் சொன்னது கேட்பதில்லை; அன்றியும் பெருந்தீனி தின்னவும் குடிக்கவும் பழகியிருக்கிறான். நீங்கள் எல்லீருங்கூடி இவனை நடுத்தெருவில் விட்டுக் கல்லாலடித்துக்கொன்று விட்டால் நலம்', என்று கூறவேண்டும்" என்பதே.

ஈண்டுக் குறித்தது சால் வயிறர்களையும் மிடாக் குடியர்களையுமே. ஆனால் கடை கெட்ட இப்பழக்கங்களே யன்றி முறையாக உண்ணும் மூன்று வேளைகளிலும் மிகுந்த நேரஞ் செலவு செய்து விதம் விதமாகச் சுவைபார்த்து உண்ணுதலும், ஒரு சிறிது குடிப்பதுங்கூடக் கண்டிக்கற் பாலதேயாம். உண்பது, குடிப்பது ஆகிய இச் செயல்களிற்கூட மிகவும் நாகரிகமாகவுந் திருந்திய வகையிலும் உண்டு குடித்து வருவதாக ஒரு சிலர் பெருமை பேசுகின்றனர். இவ்வாறு புரைபட்ட ஒரு பெருமை கருதி, இயற்கையில் எளிதாக நடைபெறவேண்டிய இச் செயல்களில் அருமையான காலத்தை வீணாகச் செலவு செய்கின்றோமே என்ற உணர்ச்சியின்றி அவர்கள் அதைப் பெருமையாக நினைத்திருப்பது அந்தோ, வெட்கம்! வெட்கம்! என்றுதான் சொல்ல வேண்டும். "என்னென்ன உண்கிறார்கள், எவ்வளவிற்கு உண்கிறார்கள் என்பதையாம் கண்டிக்கவில்லை; ஆனால் இன்னின்னதை யுண்ணல் வேண்டும் இவ்வளவிற்குக் குடித்தல் வேண்டும் என்ற அவாக்கொண்டுழல்வதையே மிகவும் வன்மையாகக் கண்டிக்கிறோம்" என்றொரு மேனாட்டுச் சான்றோர் கூறியுள்ளார். உண்பொருள்களிற் சிலவற்றைக் குறித்துக்கொண்டு அவைகளையே எஞ்ஞான்றும் எப்பாடுபட்டேனும் உண்ணவிழைதலும், அப்படி யுண்ணுங்கால் இயற்கைக்கு மீறிய அளவுக்கு உண்ணவோ பருகவோ விழைதலும், அவ்விழை வேதுவாக

அவற்றைப் பற்றியே நினைவு கொண்டிருந்து செய்யக் கடவ வேலைகளையுஞ் செய்யாமற் கைநெகிழ விடுதலுங் கண்டிக்கற்பால வென்பதைக் கூறவும் வேண்டுமோ?

நன்றாக உண்ணவேண்டும், குடிக்கவேண்டும் என்ற அவா வயதேறியோர் மாட்டுக் காணப்படுதலே நன்றன்றெனின் இளைஞர் மாட்டுக் காணப்படுதல் கூடாது என்பது எளிதிற் பெறப் படும். என்னை? இத்தீய பழக்கங்களில் ஈடுபட்டானொரு இளைஞன் அரையுயிர் இழந்தானென்றே கூறி விடலாமாகலின் கள்ளற்க, கொல்லற்க, களவொழிக என இளைஞர்க்கு அறிவு புகட்டுவது காவலர் கடமையே யன்றி நாவலர் கடமை யன்று. அவ்வாறு அறிவு புகட்டவே நீதிபதிகளும், காவலாளர்களும் அமைக்கப்பட்டிருக்கின்றனர். இன்னுங் கூறப்புகின், இழுக்கங்கள் என வரையறுக்கப் பட்டவற்றைப் பொது மக்கள் எல்லோருமே கண்ட விடத்தெல்லாம் கண்டித்து விடுகின்றனர். ஆனல் அவ்வரையறைக் குட்படாத இவ்விரண்டும் தீச்செயல்கள் என்றோ இழுக்கங்களென்றோ கருதி யொதுக்கப்படுவதற்கு மாறாக, ஒருவாறு பெருமை யளிக்கும் செயல்களாகப் பிறழ உணரப்பட்டு வருகின்றன. இவைகளும் இவைபோன்ற சிறிய குற்றங்களும் எதிர்பாராத வகையில் மக்கள் தம் இன்ப வாழ்க்கையை அழிக்கவல்லன என்பது உறுதி எனவே பொதுவாக எல்லோரும், சிறப்பாக இளைஞரும், இச் சுழிகள் வாய்ப்பட்டுத் தடுமாறி யழியாமற் குறிக்கொண்டு நடந்து கொள்வார்களாக.

இனி, இவை தீய பழக்கங்களாகக் கருதப்படுதற்கான சிறப்பேதுக்களைக் கூறுவாம். குறிப்பிட்ட சுவை மிகுந்த சிலவற்றையே உண்ண விழைவு கொள்வதால் அவற்றைச் சேகரிப்பதில் நேரிடுஞ் செலவு பெரியதொன்றாக இருக்கிறது. சேகரித்த அவைகளை வேண்டியவாறு சமைத்தற்கு நேரிடுஞ் செலவு ஏறக்குறைய அஃதே அளவிற்று. இவ்வெட்கக் கேட்டை என்னென்று எடுத்தியம்புவது? ஒருவரது வயிற்றுப் பசியைத் தணிப்பதற்கென்று வேறொருவரிருவர் அதே வேலையாக விருந்து வேலை செய்துவர அமைக்கப் படுகின்றனர்! அதன்பின்

விறகென்றும், வறட்டி யென்றும், சருகென்றும், செத்தை யென்றும், கரியென்னும், "கெரோஸின்" என்றும் எத்தனை யெரிபொருள்கள்! பானையென்றுஞ் சட்டி யென்றும், கரண்டி யென்றும், அகப்பை யென்றும், தட்டென்றுந் தாள மென்று மெத்தனை துணைக் கருவிகள்! அடுக்களை என்றும், அடுப்பென்றும், கண்ணாடிச் சுவர் என்றும், கஞ்சி மேடையென் றும், எத்தனை கட்டடங்கள்!!! அம்மம்ம! இவ்வளவையும் சேகரிக்க என்ன பாடு? என்ன செலவு? இவ்வளவும் எதற் காக? ஒருவரிருவர்க்கு அவர்கள் வாய்க்குப் பிடித்த வகையில் உணவு சமைத்துக் கொடுப்பதற்காகவே. இந்த உணவருந்து வோர் பெரும்பாலும் வயிற்றுக்கு உணவு தேட வகையற்ற வர்களாக இருந்தாலு மிருக்கலாம்; என்னை? அவ்வாறிருப்ப வர்கட்கே உண்டிச் சுவையில் விருப்ப மிகுந்திருப்ப தியல்பாகக் காண்கின்றுமாகலின்.

இனி, இத்துணைப் பாடுபட்டுப் பெருஞ்செலவிற் சமைத்து வைத்த பொருள்களைச் சுவைத்து உண்பதில் எத்துணை நேரம் வீணுகக் கழிகின்றது! காலையிலெழுந்தது முதல் இரவில் மீண் டும் படுக்கைக்குச் செல்வதற்குள்ளாக இயற்கையிற் கிடைக்கும் பதினன்கு பதினைந்து மணி நேரத்தில் ஏறக்குறைய மூன்று அல் லது நான்குமணி நேரத்தை உண்பதிலும் பருகுவதிலுமாகக் கழிப்போர் எத்துணையோர்! இஃதென்னவென்று கேட்டாலோ, உண்பதைப்பிடித்தவரையில் வேண்டியமட்டும் ஆற அமர உட் கார்ந்து நருங்க நருங்கத் தின்றாலல்லவோ உடம்பில் ஒட்டும் என்ற விடையை யளிக்கின்றனர். அரிதிற் பெற்ற காலத்திற் புரிதற்குரிய செயல்களைச்செய்யாது கை நெகிழவிட்டு உண்டியோ உண்டியெனத்திரியும் ஒரு இளைஞன் வாழ்க்கையில் வேறெத்து றையிலாவது பணியாற்றத் தக்கவனாக இருப்பான் என்று கொள்ளவுங்கூடுமா?

இனி, இட்ட உணவிற் சுட்டுரைக்கும் இயல்புடைய ஒரு வரை அவர் நண்பர்களோ, உறவினர்களோ அழைத்து உண வளிக்க அழைத்து வந்த அவர் விருப்பத்தையொட்டி யுண வைச் சமைத்தளித்து மகிழ்விக்க முயல்வார்கள் என்பது உண்

மையே. ஆனல் இவ்வளவு முயன்றும், உண்டவர் உணவில் தாராதரம் பார்த்துக் கூறி இதில் ஒரு உப்புக் குறையின் அமுதம்போலிருக்கும். இதிற் சிறிது புளி குறைவாகக் காண்கிறது, தயிர் இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று கூறியது கண்டு மறு முறை அவரை அழைக்கக் கருதுவார்கள் என்று நினைக்கவுங் கூடுமோ ? என்னை; கட்டிய வீட்டிற்குப் பழுது கூறுவாரையும் அட்ட உணவிற்குச் "சொட்டு" ரைப்பாரையும் அறிந்தாராகக் கொள்ளுதல் உலக வியற்கையன்றுமாகலின். இனி மது வருந்தும் பழக்கமுடைய ஒருவராக இருந்து விட்டாலோ அவரை நண்பர்கள் உணவளிக்க அழைப்பதன் முன் ஒரு முறைக்கு நூறுமுறைத்தீர ஆலோசித்தே அழைக்க முற்படுவார்கள். எனவே இப்பழக்கங்களாற் பெற்ற பயன் நண்பர்தம் இன்முகங் கோடவைத்தலேயாம்.

இறுதியாக, நோயற்ற வாழ்வே வாழ்வெனப்பட்டுக் குறைவற்ற செல்வமாகவுங் கருதப்பட்டு வருவது யாவரு மொப்ப முடிந்ததோர் உண்மை. பேரிரை கொள்ளலும் பெருங்குடி குடித்தலும் இறப்பிற் கேதுவாம் என்பதும் பலருமொப்ப முடிந்த உண்மைகளே. எனவே இத்தீய பழக்கங்களால் உடல் நிலைகெட்டு நோய்வாய்ப்படுதல் ஒருதலை. அற்றாலளவறிந்துண்க அவ்வாறுண்டால் தான் உடம்பு பெற்றான் ஒருவன் நெடிதுய்க்க எளிதாகும்; அஃதின்றிக் கழி பேரிரை யுண்டான்கண் நோய் நின்று உயிர்க்கு மாறுபாட்டையளிப்பது திண்ணம் என்று ஆன்றோர் அறைந்தனரன்றோ ? எக்ளீஸியாஸ்டிகஸ் என்ற மேனாட்டறிஞர் கூறுவதாவது :—

"அளிக்கப்படும் உணவை அளவறிந்துண்க; உண்ணுங்கால் ஒழுங்காயுண்க, விழுங்கற்க; பந்தியிற் பலருடனிருந்து உண்ணுங்கால் முந்தி முந்தியென்றுகை நீட்டற்க, ஒரு சாண் வயிற்றிற்கு ஒரு பிடி குறைந்தாலெய்துங் கேடொன்றுமில்லை. அளவுடன் உண்டார் அயர்ந்து உறங்குவர். அன்றியும் அன்னார் உறங்கி யெழுந்தபின் உடல்நிலை சுறுசுறுப்பாயும் கலகலப்பாயுமிருக்கக் காண்பர். கழிபேரிரையாற் காணும் பெருநோய்: உண்டி சுருங்கிலோ உயிர் நீளும். மதுவருந்தி மதியிழவாதீர்;

மதுவினல் மடிந்தோர் மட்டற்றோர்.'' ஒப்பரிய இப்படிப் பிணையை ஒவ்வொரு இளைஞரும் பொன்னே போற்கற்றுக் கற்ற பின் நிற்பர் அதற்குத் தகவெனில் எந்நாளும் எய்தார் இடும்பை.

---

# தமிழ்ச் சித்த வைத்தியம்

[ ஸ்ரீமத் விருதை. சிவஞான யோகிகள் ]

இப்பொழுது இந்துமாக்கடலுள் மூழ்கியிருக்கும் (Submerged Land Lemuria) நாவலந் தீவினொரு பகுதியாகிய தமிழகமே மக்கள் முதற்கட்டோன்றிய நிலமெனப் புலவர் ஹேக்கல் (Prof. Hakel) முதலிய ஆங்கில சரித்திராசிரியர் பலர் கூறுகின்றனர். அத்தமிழகத்திருந்த தென்மதுரையிற்றான் தமிழ் முதற்சங்கம் இற்றைக்கு 16000 ஆண்டுகட்கு முன்னரே தோன்றிவிளங்கியது. முதற்கழகம் 4440 ஆண்டுகள் நடைபெற்றுக் கடல் கொள்ளப்பட்டுப் பின்னர் அதற்கு வடக்கணிருந்த கவாடபுரத்தில் தமிழ் இடைக்கழகம் 3750 ஆண்டுகள் நடைபெற்று அதுவுங் கடல்கோட்பட்டொழிந்தது. இவ்வாறிரண்டு தடவை தமிழகங் கடல்கோட்பட்டமையால் அதிலிருந்த தமிழ் மறைகளும், அரும்பெரும் நூல்களும் மூழ்கியொழிந்தன. அங்ஙனங் கடல்கொள்ளப்பட்டவைபோகக் கடல்கொள்ளப்படாத மற்றப்பகுதியிலிருந்த சித்தர் தமிழ் நூல்களில் வைத்தியம், வாதம், மந்திரம், யோகம், கற்பம், ஞானங்கூறுவன பல இலக்கக்கணக்கில் இன்றுமிருக்கின்றன. அவற்றில் ஆயிரத்திலொரு பகுதிகூட அச்சியற்றி வெளியிடப்படவில்லை. இடைச்சங்க காலத்தில் ஆரியர்களும், கி. மு. 300-ல் கிரேக்கர்களும், கி. பி. 9-வது நூற்றாண்டில் முகம்மதியர்களும் இந்நாட்டில் வந்து குடியேறித் தங்கள் ஆதிக்கத்தை நாட்டினர். அந்நிய நாட்டார் தங்கள் மொழிகளையும் நூல்களையும் கொள்கைகளையும் நாட்டும பொருட்டுத் தீக்கும் ஆறுகளுக்கும் இரையாக்கப்பட்ட தமிழ் நூல்களுக்கு அளவில்லை. தமிழ் நூல்களில் ஆராய்ச்சியும் பற்றும் அற்ற தமிழர் தங்கள் தங்கள் வீடுகளிலிருந்த தமிழ்ச் சுவடிகளைக் கரையான் அரிக்கவும், மண் தின்னவும் விட்டு வைத்ததன்றி நாமகள் பூசை யிறுதியில் ஆற்றில் விட்டும்

ஆயிரக் கணக்கான நூல்களைத் தொலைத்தனர். உதாரணமாகச் சைவசமயாசிரியரியற்றிய தமிழ் மறையாகிய தேவாரத் திருப் பதிகங்கள் 103000த்துக்குப் பாக்கள் 1030000த்துக்குமேலா கின்றன. கரையான் தின்றொழிந்தது போக இப்பொழுது எஞ்சி யிருக்கும் பதிகங்கள் 795க்குப் பாக்கள் ஏழாயிரத்துச் சில்லரைதான் என்பதைக் கவனித்தால் நன்கு விளங்கும். தமிழ் மறையோதற்குரிய தமிழ்ப்பண்கள் 12000 வழங்கி வந்த தாய்த் தமிழ் இசை நூல்கள் பல கூற இப்பொழுது வழங்கும் பண்கள் 30க்கு மேல் காண்கிலம். அந்தோ ! நமது தமிழ் இசை நூல் தமிழர் உயிரோடிருக்கும் பொழுதே போற்றுவாரின்றி மறைந்து பட்டமைக்கு வருந்தாத தமிழரும் உளரோ ! மிகக் குறைந்துபோன சிறிய தொகையிலுள்ள பண்களையும் தெளி வாய்க் கற்பிக்கும் ஆசிரியர் மிகக் குறைவாயிருக்கின்றனர். இசை நூல்களும் பல ஒழிந்து போயின; அவ்வுண்மையை,

"ஏரண முருவம் யோகமிசை கணக்கிரதஞ் சாலம்
தாரண மரமே சந்தம்தம்ப நீர்நில மூலோகம்
ஆரணம் பொருளென்றின்னமான நூல் யாவும்வாரி
வாரணங் கொண்டதந்தோ வழிவழிப் பெயருமாள்''.

என்ற பழம் பாட்டால் தமிழகத்தில் முற்காலத்திருந்த தமிழ் நூல்களின் மிகுதியையும் அவை கடல் கோளிற் பட் டொழிந்தமையையும் அறியக்கிடக்கின்றமை காண்க.

தமிழ்க் கடைச்சங்கம் இப்பொழுதிருக்கும் மதுரையில் கி. பி. இரண்டாவது நூற்றாண்டின் இடைக்காலம் வரை 1850 ஆண்டுகள் செழித்திருந்தன. கடைச் சங்கத்தில் மருத் துவன் தாமோதரனார் முதலிய தமிழ் மருத்துவப் புலவரு மிருந்தமை தெளிவு. இடைச்சங்க காலத்தில் மாபுராணமென்ற வைத்திய நூல் வழங்கினமையும் சரித்திர வாயிலா யறிகின் றோம்.

தமிழர் நாகரீகத்தின் தொன்மையையும் மேன்மையையும் பற்றிப் பல சரித்திராசிரியர் விரித்துக் கூறியிருக்கின்றனர். அவற்றில்,

Buddist India Page 156.

Our No. 2 Vedic, is largely subject to Dravidian influence, both in phonetics and in vocabulary. The Aryan Vernaculars throughout, and all the literary forms of speech. Pali Sanskrit and Prakrit are charged with it in a degree no less than that in which the descent and the blood relation-ships of the many people of India are charged with Non-Aryan elements and that is saying a Great deal.

புத்தர் இந்தியா என்ற நூலில் 156-வது பக்கத்தில் நமது 2 வது நம்பரிற்பட்ட வேதபாடை ஒலிகள், சொற்களாகிய இரண்டும் மிகவும் திராவிடபாடையின் ஆதிக்கத்துக்குட்பட்டிருந்தன. ஆரியசம்பந்தமான பேச்சு வழக்குள்ள நாட்டுமொழிகள் முழுவதும் பரவிச் சம்ஸ்கிருதம், பிராகிருத பாடைகளின் கல்வி சம்பந்தமான எல்லாச் சொற்களின் வடிவங்களும் இந்தியாவிலுள்ள பல ஆரிய ஜனங்கள் பரம்பரையிலும் இரத்தக் கலப்பிலும் ஆரியரல்லாத திராவிடரோடு எவ்வளவு அதிகமாய்க் கலந்திருக்கிறார்களோ அவ்வளவு அதிகம் திராவிடமொழிகள் கலந்துசேர்ந்திருக்கின்றன. அதாவது அதிக அளவு வந்து சேர்ந்திருக்கின்றது என்பது கருத்து என்றும்,

Ancient Indian in Mesopotamia,
By A. GHOSE.

When another champollion is found to unearth the deeply buried relic of the ancient Dravidian culture in all probability it will be discovered that lunar astronomy as well as the very First alphabet originated in India just as it is now being recognised that the advanced civilisation of ancient Mesopotamia, owed its Inception to the Sumurians from India. How far the world is thus indebted to the ancient Dravidians, as appears to be disclosed by recent researches,

is a subject which finds no place in the works of the modern historian of ancient India.

There is every reason to suppose that Pre-Aryan Dravidian culture flourished in their great home well endowed as it was by beautiful nature.

சாம்பாலியன் என்பவரைப்போன்ற இன்னொருவர் தோன்றிப் பழமையரான திராவிடருடைய (தமிழருடைய) ஆழத்திற் புதைந்துபோயிருக்கிற நாகரீகத்தின் குறிப்புகளை வெளிப்படுத்தும் பொழுது பழமையான மெசபட்டோமியாவின் மேலான நாகரீகம் இந்தியாவிலிருந்து வந்து அங்கு குடியேறின சுமேரியர் (திராவிடர்) ஆல் உண்டானதென்று எல்லா வகையாலும் கண்டு பிடிக்கப்பட்டதுபோலவே சாந்திரமான வானசாத்திரமும், மிகப் பழைமையான எழுத்துகளும் இந்தியாவில் முதன் முதல் உண்டானதென்று இபபொழுது எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வகையில் பழைய திராவிடர்க்கு உலகம் எவ்வளவு தூரம் கடமைப் பட்டிருக்கிறதென்பதைப் பழைய இந்தியாவைப்பற்றி ஆராய்ச்சி செய்யும் தற்கால சரித்திரக்காரரின் நூல்களிற் காணக்கூடவில்லை. திராவிட நாடு இயற்கையில் செழிப்புடையதா யிருந்தபடியால் ஆரியருக்கு முற்பட்ட திராவிடரின் நாகரீகமானது அவர்கள் பழைய பூமியில் செழித்து வளர்ந்ததாகக் கருதுவதற்கெல்லா ஆதாரமுமுள்ளன என்பது முதலிய மேற்கோள்களால் நன்கு விளங்கும்.

மெசபட்டோமியாவில் 10000 ஆண்டுகளுக்கு முன் எருதூர் ஆட்சி, அதன் பின் கழகியூர், அங்காடியர், (Accadians) சாலடியர் (Chaladians) முதலிய ஆட்சிகளைச் சுமூரியர் என்ற தமிழர் நாட்டிய சரித்திரங்களையும் ஆராயில் அவர் தொன்மை நன்கு விளங்கும்.

தமிழ் மருத்துவம் என்பதற்குத் தமிழ் வயித்தியம், தமிழ்ச் சித்த வைத்தியம், என்ற பெயர்களும் வழங்குகின்றன. ஆதலால் தமிழ் வைத்தியமே சித்த வைத்தியம்.

திருமந்திரம் 8000-ல் மருந்தின்சொற்பொருள் கூறுமிடத்து,

" மறுப்ப துடல்நோய் மருந்தென லாகும்
மறுப்ப துளநோய் மருந்தெனல் சாலும்
மறுப்ப தினிநோய் வாரா திருக்க
மறுப்ப துசாவை மருந்தென லாமே "

என்று நோய் வாராமற் காத்தல், வந்த உடல்நோய், உள நோய்களைத் தீர்த்தல், சாகாமல் நீண்டநாள் வாழ உடலை நிலைக் கச்செய்தல்களாகிய இயல்புகளையுடையது மருந்தென விளக்கப் பட்டுள்ளது.

அதனால் காப்பு நோய் வராமற் காக்குமருந்து, நீக்கம் வந்த நோயை நீக்குமருந்து, நிறைப்பு உடலிற் குறைந்த சத்துக்களை நிறைக்கும் மருந்து என மருந்து மூவகைப்படும். இவ்வாறு உலகினர்க்குப் பயன்படும் மருந்துகளும், உலோகங்க ளைத் தூயனவாக்கி மாற்றும் வாத மருந்துகளும், யோகிகளுக்கு நீண்ட ஆயுள்தரப் பயன்படும் காய கற்ப மருந்துகளும் தமிழ்ச் சித்தர் நூல்களிற் கூறப்படுகின்றன. நீண்ட ஆயுளைத்தரும் கற்ப மருந்துகள் துறவிகளுக்குப்போல மனைவியுடன் வாழும் உலகினர்க்கும் பயன்படும். இவையனைத்தும் தமிழ்ச் சித்தர் நூல்களிற் கூறப்படுகின்றன. நோயின்றி நீண்ட ஆயுள் பெற்று இனிது வாழும் பேற்றிலும் உயர்ந்தபேறுலகிலின்று. தமிழ்நாட் டிலும் உலகிலுள்ள பிற நாடுகளிலும் செல்வவான்களும் ஜமீன் தார்களும், கல்விவான்களும், அரசாங்க உத்தியோகத்தரும், பலகலை வல்லுநரும், அரசர்களும் தமிழ்ச்சித்த நூல்களின் உண் மையறிந்து ஆயுள் வளர்க்கும் மருந்துகளையும், காயகற்ப மருந் துகளையும், யோகத்தையும் தெரிந்து நீண்ட ஆயுளையும் இனிய வாழ்வையும் பெற்று மகிழாது சிறு காலவளவிற் கேடுறும் பிற மருந்துகளை அவை கற்றுர் புகழ் மொழிகளில் மயங்கி யுட் கொண்டு நோய் நீங்காது அற்ப ஆயுளில் பெறற்கரும் தம் உட லையும் இழந்துவிடுகின்றனர். இவ்வுண்மைகளை நன்குய்த்துணர் ந்து சித்த வைத்திய நூல்களின் ஆராய்ச்சிக்குத் தம்மால் இய ன்ற உதவிபுரிந்து அதனால் விளையும் பெரும் பயனையடைய நம் நாட்டாரையும் பிறநாட்டாரையும் வேண்டுகின்றனன்.

(தொடரும்)

ஓம்சிவம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.


| சிலம்பு ௮ | மெய்கண்டான்யாண்டு-எாஎ வைகாசித் திங்கள் 1980௵ மே௴—ஜூன்௴ | பரல் ௫ |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### தனித்திருநேரிசை

மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
பொய்ம்மையாங் களையைவாங்கிப் பொறையெனு நீரைப்பாய்ச்
தம்மையு நோக்கிக்கண்டு தகவேனும் வேலியிட்டுச் [சித்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே.

இது மிக்க பொருட் செறிவுள்ள ஒரு அருமையான தேவாரப்பா. இதற்கு நீண்ட பொழிப்புரை செய்தல் அதில் அடங்கியுள்ள கருத்துக் களை நன்கு விளக்காது. இதிலுள்ள உபமான உபமேயப் பொருள்களை விரித்துக் கூறுதலால் இப்பாட்டின் பொருள் நன்கு விளங்கும்.

2. இந்தப்பா ஒருவன் பேரின்பம் அடைதற்கு எவ்வாறு முயற்சி செய்தல் வேண்டும் என்பதைக் கூறுகின்றது. இறைவனது அருளைப் பெற விரும்பும் ஒருவன் செய்யும் முயற்சியானது பயிர் செய்யும் ஒரு உழவனது முயற்சிக்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. உழவன் பயிர் செய்கிற இடம் நிலம் ஆகும். பேரின்ப விருப்பன் பயிர் செய்கிற இடம் உயிர் அறிவு ஆகும். உழவன் தனது நிலத்தை முதலாவது உழு கின்றான்; பேரின்ப விருப்பன் தனது உயிர் அறிவில் தனது ஆசிரிய

னிடம் கடவுளைப்பற்றிக் கேட்ட உண்மைகளைச் சிந்தனைசெய்து பயில் கின்றான். உழவு செய்யச்செய்ய நிலம் பண்படுதல்போல உண்மைகளை உயிரறிவிலே சிந்தனை செய்யச்செய்யப் பேரின்ப விருப்பனுடைய உயிர் பண்படுகின்றது. நிலத்தை உழுத பின் உழவன் அதில் தான் பெற விரும்புகிற தானிய விதைகளை விதைக்கின்றான்; பேரின்ப விருப்பன் கடவுளைப்பற்றி ஆசிரியன் மொழிந்த உண்மைகளை அறிந்த பின் அவை களை யுணர்ந்து கடவுளிடத்தில் அன்பு செய்கின்றான். உழவன் தான் விதைத்து உண்டாக்கின பயிர்களினிடையில் முளைத்த களையைப் பிடுங்கி எறிந்து பயிர் ஓங்கிவளரும்படி செய்கின்றான். பேரின்ப விருப்பன் தனது உயிரறிவில் சிந்தித்துப் பயின்ற உண்மைகளைப் பற்றி உண்டாகும் ஐயந்திரிபுகளை நீக்கி அவ்வுண்மைகள் உறுதியாய் நிலை நிற்கும்படி செய்கின்றான். மெய்மை என்பது இங்கே கடவுளைப் பற்றிய உண்மை களை ஐயந்திரிபற அறிந்து கடவுளைச் சார்ந்து நிற்கிறமெய்த்தன்மை. (சத்துத்தன்மை - Reality). பொய்மை என்பது அவ்வுண்மைகளுக்கு மாறான கருத்துக்களினால் உலக வாழ்வில் பற்றுவைத்து அதனை மெய் யென்று கருதும் பொய்த்தன்மை. (அசத்துத்தன்மை - Unreality) உழவனுடைய நிலத்தில் முளைத்த பயிர் தண்ணீரில்லாமல் வாடின பொழுது அவன் அதற்குத் தண்ணீர் பாய்ச்சுகின்றான்; பேரின்ப விருப் பன் ஆசிரியனிடத்திற் கேட்டுச் சிந்தித்து அறிந்த உண்மைகளின் வழி யாக உண்டான கடவுளைப்பற்றிய அன்பானது தான் முன் செய்த வினைப்பயனால் நுகரும் துன்பங்களை நினைத்தலினால் சோர்வு அடையும். அப்பொழுது அவைகளைத் தான் முன் செய்த வினைப்பயன் என்றெண் ணிப் பொறுமையுடன் பொறுத்துக் கொள்ளுதலினால் அன்பு சோர்வு அடையாமல் உறுதிப்படுகின்றது. பயிர் செழிப்பாய் ஓங்கி வளர்ந்து அதில் கதிர்கள் தோன்றுகின்றன. பயிர் வளர்ந்து அப்படிக்கதிர்கள் தோன்றினமையை உழவன் உற்று நோக்கித் தான் செய்த முயற்சிக்கும் பயிரின் பலனுக்கும் கடவுளுடைய அருளே காரணமாயிருக்கிறது என்று அறிந்து உணர்கிறான். பேரின்பவிருப்பன் தனது உயிரறிவில் கடவுளைப்பற்றிய அறிவும் அன்பும் உறுதியாய் நின்று தூய்மையும் அடைதலால் பயிரிலிருந்து தானியக்கதிர் உண்டானது போல உள் ளுணர்வு ஆகிய அருளறிவு உண்டாகின்றது. இந்த அருளறிவினால் பேரின்ப விருப்பன் தன்னறிவினுள்ளே கடவுள் இரண்டறக் (அத்து விதமாய்க்) கலந்து ஒன்றித்து நின்று தான் பேரின்பம் அடைதலுக்கு வேண்டுவனவாகிய காணும் உபகாரம் காட்டும் உபகாரங்களை எப் பொழுதும் விகாரமின்றிச் செய்து கொண்டு வருகிறான் என்னும்

உண்மையை அறிகின்றான். இந்த உண்மையைப் பேரின்ப விருப்பன் தன் அறிவினுள்ளே அறிந்து கடவுளுடன் ஏகமாய் நிற்றலே தன்னை நோக்கிக் காணுதல் ஆகும். கதிர்கள் தோன்றின பயிரை விலங்குகள் முதலானவைகள் சேதப்படுத்தாமல் உழவன் நிலத்துக்கு வேலியிடுகின்றான். பேரின்ப விருப்பன் தான் அடைந்த அருளறிவு நிலை மலத்தினாலுண்டாகிய பழைய வாசனையால் தாக்கப்பட்டு நழுவாமலிருக்கும்படி தான் சேடியணுகிய கடவுளுக்குச் சேடப்பொருள் (ஆண்டானாகிய கடவுளைப் பிரிந்து தனித்து நில்லாத அடிமைப்பொருள்) என்னும் பெருந்தகைமையை நினைந்து சிவோகம் பாவனையும் அஞ்செழுத்து ஓதலும் செய்கின்றான். 'தகவு எனும் வேலி' என்பது சிவோகம் பாவனையும் அஞ்செழுத்தோதலும் செய்தல். உழவன் மேலே கூறியபடி செய்தால் விதைத்து வளர்ந்த பயிரில் தானியப் பலன் விளைகின்றது. பேரின்ப விருப்பன் முன்னே தன் அறிவானது திருகி ஐம்புலன் வழியே சென்று உலக விடயங்களை நுகர்ந்து கொண்டிருந்த விலக்கு நெறியினின்று திரும்பிக் கடவுளை நோக்கி நேர்மையாய் மேலே கூறிய வண்ணம் ஒழுகுதலாகிய செந்நெறியில் ஒழுகுதலினால் அவனுக்குச் சிவனது திருவடியை அடைதலாகிய வீட்டின்பம் விளைகின்றது; அவன் பேரின்பம் அடைகின்றான். செம்மை என்பது கடவுளை நேராய் நோக்கி ஒழுகும் வீட்டு நெறி. சிவகதி என்பது சிவனையடைதலாகிய வீட்டின்பம்.

3. இந்தத் தேவாரம் வீட்டு நெறியைக் கூறுதலால் இதனை வீட்டு நெறித் தேவாரப்பா என்று நாம் கூறலாம். இந்தப்பாட்டு சிவஞான போதம் அ-வது சூத்திரத்தில் "தம் முதல் குருவு மாய்த்தவத்தினி லுணர்த்த" என்னும் பேரின்ப விருப்பனுடைய நிலை முதல் "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்னும் கக-வது சூத்திரத்திற் கூறப்பட்ட வீட்டு நிலை வரை கூறுகின்றது. 'மெய்ம்மையாம் உழவைச் செய்தல்' என்பது ஆசிரியனுடைய உபதேச உண்மைகளை "ஞானக்கண்ணினிற்சிந்தை நாடி" என்னும் கூ-வது சூத்திரத்திற் கூறப்பட்ட நிலை. 'பொய்ம்மையாங் களையை வாங்குத'லாவது கூ-வது சூத்திரத்திற் கூறப்பட்ட, "பாசம் ஒருவுதல்" அதாவது பொய்த்தன்மையை (அசத்துத்தன்மையை) நீக்குதல், பொருட்பற்றும் உயிர்ப்பற்றும் விட்டுக் கடவுளைப் பற்றுதலினாலுண்டாகும் மெய்த்தன்மையை (சத்துத்தன்மையை) அடைதலே 'மெய்ம்மையாம் உழவைச் செய்த'லாகும். மெய்ம்மையாம் உழவு செய்தலையும் பொய்ம்மையாங் களையை வாங்குதலையும் ஒரு சேர எடுத்துக் கொண்டு பொருளுரைத்தல் வேண்டும், பொய்மை

நீங்க நீங்க மெய்மை விளங்கும் ஆதலின், "சுட்டி யுணர்வதனைச்சுட்டி அசத்தென்னச் சட்ட இனியுளது சத்தேகாண்" (சிவஞான போத வெண்பா) என்ற கருத்தும் இதுவே. இது அறிவு விளக்கத்தைக் குறிக்கின்றது. "விருப்பெனும் வித்தை வித்தி" என்ற சொற்றொடரையும் "பொறையெனும் நீரைப்பாய்ச்சி" என்ற சொற்றொடரையும் ஒரு சேர எடுத்துப் பொருளுரைத்தல் வேண்டும்; பொறுமை மிகமிக அன்பும் வளர்கின்றது. ஆதலின், இது அன்பு விளக்கத்தைக் குறிக்கின்றது. இந்த அறிவு விளக்கமும் அன்பு விளக்கமும் நிறைவு பெற்று கக-வது சூத்திரத்திற் கூறப்பட்ட "அயரா அன்பு" ஆகின்றது.

4. தம்மையு நோக்கிக் காணுதலாவது. பேரின்ப விருப்பன் உடைப்பொருளாகிய தனது இயல்பினை யுணர்ந்து தன்னை உடையானாகிய கடவுளியல்பினையும் தனது உயிரறிவில் வைத்து அறிதல் ஆகும். இதுவே சிவஞான போதம் க0-வது சூத்திரத்திற் கூறப்படுவது. தகவு என்னும் வேலியிடுதலாவது "எண்ணும் அஞ்செழுத்தே" என்று க-வது சூத்திரத்தில் "பாசம் ஒருவ" என்பதற்குப்பின் கூறப்படுவது. சிவகதி விளைதலாவது கக-ம் சூத்திரத்திற் கூறப்பட்ட "அரன் கழல் செலுமே" என்பது. இவ்வாறு சிவஞானபோதம் அ-வது சூத்திர முதல் கக-வது சூத்திர இறுதி வரை கூறப்பட்ட கருத்துக்கள் இந்தப்பாட்டில் சுருக்கமாகக் கூறியிருத்தல் காண்க.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# சைவ இளைஞர் மகாநாடு தலைவர் பேருரை

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், எம். ஏ., எம். எல்.]

சைவ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம் மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப்போலப் பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனாலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக் கிளர்ச்சி, களங்க மின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக் கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை

தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சிமிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின், எல்லா நலத்தையும் விளக்கவல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையினெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றாகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங்கருதிப் பயிலப்படும் உழவு, கைத்தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற்கலை எனலாம். ஐம்புலனிற்கும் மனதிற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச்சிறப்பிக்கும் கலைகளெல்லாம் கவின்கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலைஎனவும், தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்தலை எனவும் இருதிறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science) பாலனவாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (Philosophy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும் முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க்கலை உயர்ந்ததாலும், அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக

மேம்பாடு உடையது ஆதலானும், சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும்பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்

எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித்திரத்தின் முட்டறுப்பான் ஆகும்—மொழித்திரத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

என்ற விடத்து இலக்கண இலக்கியங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து, பற்று நீங்கி, வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற் கேற்பச் சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப் படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்த காலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக் கடவுள் உயிர் உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்று நோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள்படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய் உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத் தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியினோடு கலந்தே ஒலித்தலின் அதனைச் சார்பெழுத் தென்றார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றோடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை புணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்யுணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. "சார்பினால் தோன்றாது தானருவாய் எப்பொருட்கும், எனின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தோர்" என்ற விடத்தும் இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப்பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள்களின் இயல்பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வெற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறாக அவ்வின்பத்தைப்பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும் ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடு செய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதாவின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறிய வற்றால் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள்ளத்தில் பதித்துக் கொள்வது யாதெனில் எல்லாம்வல்ல முழு முதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையா தென்பதும் ஆகிய முடிந்த உண்மைகளேயாம். இச்

கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல் நூல்களும் கிரேக்க தத்துவநூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடையோர் முழுமுதற் பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் உள்ளதென்பதை முடிவாகக் கைக்கொண்டுள்ளார்கள். இம் முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் நாத்திக வாதம் பேசி யொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெறாத அவாவேயாம். நினைந்ததொன்று முடியவேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாத விடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்றான். தான் செய் வினைக்குத் தக்க பயனை ஒருவன் அடைகின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராததாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார். கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப்படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவனார்,

> அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
> செவ்வியான் கேடும் நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினால் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினன்" என்ற திருஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கினால் எக்

காலத்தும் மனந்தளராமையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளியப்படும். பயன் கருதாது இறைவனை வழிபட்டால் அது கிடையாதபோது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுகவெனப் பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது, ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்றார். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழிபாடாகும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம்போல இறையன்பினால் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம் பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்தநோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினால் உலகிலுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர், "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக்கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயலவேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற்பொருட்டுச் சைவ சித்தாந்தக் கலாசாலை, சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச்செல்வர்களும் கோயிலதிகாரிகளும் அமைத்து நன்கு நடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியு

மாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்துகிறேன். சுபம்.

---

# கடன் கோடல்

(திரு, டி. எஸ். கந்தசாமி முதலியார் அவர்கள் பி. ஏ.)

கடன் கோடல் மிகக்கேடு பயக்கும் தீயதோர் பழக்கம். அப்பழக்கத்துக்கு மக்கள் பலர் அடிமையாகி அவ்வடிமையி னின்றும் மீளும் வழியறியாது அல்லற்குட்பட்டு உழல்கின்றனர் கள். சில நாடுகள் கடன் கொண்டு அக்கடனைத் தீர்க்கமாட்டாது விழித்துக் கொண்டிருக்கின்றன. கடன் கொண்டவன் படும் துன்பத்திற்கோர் எல்லையில்லை. வீரருள் வீரனுய இலங்கை மன்னன் பட்ட துன்பத்தைக் கடன் பட்டான், கலக்கத்திற்கு உவமையாக்கிக் கூறினர் கவியரசர். நம் நாட்டு மக்களுள் கடன் படாது வாழ்கின்றவர் மிகச் சிலர்; கடன் பட்டு உழல்கின்றவர் எண்ணிறந்தவர்.

கடன் கொண்டார் கூட்டத்தைச் சிறிது ஆராயின் அக் கூட்டத்துள்ளே, நிலக் கிழவரையும் வணிகர்களையும், தொழிலாளர்களையும் வழக்கறிஞர்களையும், அரசவினைவர்களையும் மற்றும் பலரையும் காணலாம். கடன் கொண்டாரை ஓர் தனிப்பிறப்பாளர் என்னலாம். அவர்கள் ஓர் தனித்த சாதி. மக்களைக் கடன் கொள்வாரும், கொடுப்பாரும் என இரு பெரும் பிரிவுக்குட்படுத்தலாம். ஆகவே அவர்கள், வெவ்வேறு ஜாதியைச் சார்ந்தவர்கள், தனித்தனி மெய்ச் சாயலையுடையவர்கள். ஆங்கிலப் புலவர் ஒருவர், மக்களை காக்கேசியர், மங்கோலியர், ஆரியர், அநாரியர் என்று பிரிப்பதில் பயனில்லை என்றும், அவ்வம் மக்கட்கூட்டத்துள்ளும், கடன் கொள்வாரும், கொடுப்பாருமாய இருவகை மக்களைக் காணலா மென்றும், மக்களை அவ்விரு பிரிவின் கீழ்ப் படுத்தலே ஏற்புடைத் தென்றும் கூறுகிறார். அவருள்ளும் கடன் கொள்வாரே உயரிய மக்கள் என்றும் கூறுகிறார். கடன் கொடுப்பவன் மேலும் மேலும் தன்

பொருளைப் பெருக்குவதில் கருத்துடையனாய்ப், பகலென்றும் இரவென்றும் பாராது, வட்டிகருதி முதலிழக்கும் உளம் வாய்த்து, கடும் பற்றுள்ளமுடையனாய், தன் பெட்டியில் பொருளிருப்பதை 'வட்டியின்றி முடங்கியிருக்கின்றதே' எனப் பெரிதும் கவன்று, வட்டிக்குக்கடன் வாங்கு வாரை எதிர்நோக்கி நிற்கின்றான். அந்தோ! இவன் ஏழை! கவலைக்கோர் இருப்பிடம், கவலைக்கே பிறந்தவன்.

கடன்கொள்வானோ, 'கடனும் கிடைக்கும்; கொடுப்பாரும் பலர் உண்டிவ்விரிந்த உலகத்தில்' என்று எண்ணும் மதுகையுடையனாய், வட்டிக்கு வாங்கப்பட்டதாயினும், "செல்வத்துப் பயன் துய்த்தலே" என்று கருதி அதை ஐம்புலநுகர்ச்சிக்குச் செலவிட்டு இன்பம் துய்க்கின்றான். பொருளைப் பலர்க்கும் வழங்குகின்றான். கண்டாரெல்லாம் அவனைக் கன்னன் என்கின்றார்கள். நாளைக்கென் செய்வோம் என்னும் கருத்து அவன் நெஞ்சத்தில் எழுவதில்லை. அழுத்துவதுமில்லை. எப்போதும் இன்பத்தில் ஆழ்ந்துள்ளான். கவலையின்றித் திரிகின்றான். அக்கடன் கொள்வார் கூட்டத்துள் இன்னும் வேறு சிலர், எப்பொழுதும், பட்டும் துகிலும் உடுத்தித்திரிவர். அமிழ்தன்ன அடிசிலுண்டு ஏமாப்பர். அத்தகையாரைக் கண்ட அளவில், கவலைக்கே கொள்கலமாம் கடன் கொடுப்பான், இத்தகையாருக்கு நம் பொருள் சிறிதேனும் கடன் கொடுக்கப்பட வேண்டுமென ஆசை கொள்கிறான். அவர் வாய் திறந்து கடன் கேட்டுவிட்டாலோ தனக்கு ஓர் பெரும் பேறு வாய்த்தது போல் மதித்துத் தடை சொல்லாது கொடுக்கின்றான்.

இன்னும் சில கடன் கொண்டாருடைய நடையையும் உடையையுங் கண்டார் பலர், அவரைச் செல்வத்திற் பிறந்த செல்வத் தோன்றல்கள் என மயங்குகிறார்கள்.

'கடன் கொடுக்கவும் வேண்டாம், கொள்ளவும் வேண்டாம்' என, ஆங்கிலப் புலவர் ஒருவர் அறிவு மொழி கூறுகிறார். கடன் கொள்ளும்போது ஒருவனுக்கு அது கொடுப்பானிடத்துளதாய பற்றும், நன்மதிப்பும், அதைக் கேட்டக்கால் இருப்ப

தில்லை, இத்தன்மை இன்றுதான் மக்களிடத்துத் தோன்றிய புதியதோருணர்ச்சியில்லை: 'கலித் தொகைக்' காலத்திலேயே, உள்ளது.

'உண் கடன் வழி மொழிந்திரங்குங் கான் முகனும்
கொண்டது கொடுக்குங் கான் முகனும் வேறுகுதல்
பண்டு மிவ்வுலகத்தியற்கை யஃதின்றும்
புதுவதன்றே புலனுடை மாந்திர்,'

என்ற கலியில், தலைமகன் தலைவியிடத்திற் காதலிரந்து நிற்கும்போது அவற்கு உண்டாய முகமலர்ச்சியும், மென்மையும், தலைவி தலைமகனைப் பிரிவதற்கு அஞ்சி அவனைத் தன்னுடனிருக்குமாறு இரந்தக்கால் அழிவதைக், கடன் கொள்வார் கொள்ளுங்கால் கொள்ளும் முகமலர்ச்சி பின் அதனைக் கொடுத்தார் கேட்குங்கால் அழிவதை நிகர்க்குமென அழகு பிறங்கக் கூறப் பட்டுள்ளது.

பெருந் திரளான நிதியத்தைக் குவியல் போல் திரட்டல் ஒருவர்க்கு இயலாததாயிருக்கலாம். ஆனல் யாரும் கடன் கொள்ளாது இருக்கலாமே. 'தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்' எனக் கூறினர் ஆன்றோரும். தாளாற்றலால் பெற்ற பொருளைத் துய்த்தல் சரி. அதனை அறவும் செலவிட்டு மேலும் கடன் கோடல் சரியா ? சரியன்று, அறமுமன்று.

தமிழ் நாட்டு மக்கள் பெரும்பாலும் தத்தம் வரவும் செலவும் நோக்காதும், மனம்போம் நெறியில் சென்றும், பொருளைச் செலவிட்டுக் கடன் பட்டுழல்கின்றார்கள்.

'ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை.

என்ற பொய்யா மொழி அரசர்க்கும் ஒக்கும்: ஏழைகட்கும்ஒக்கும். அந்நெறியை அரசரும், குடிகளும் ஒருங்கே பின் பற்றினல் அவர்களுக்குப் பெரிதும் நன்மை விளையும். அந்நெறியைக் கடைப் பிடிக்காமையினல் தான், வணிகரும், நிலக்கிழவரும், அரசரும், அமைச்சரும், சிற்சிலபோது செய்வதின்னதென்றறியாது தலைமேல் கைவைத்துத் துன்பமெய்துகின்றனர்.

நம் நாட்டு மக்கள், மணம் என்றால் ஆயிரமும், இழவென்றால் ஈராயிரமும், இது என்றால் ஆயிரமும், அது என்றால் ஐயாயிரமும் எண்ணாது செலவிட்டு, இறுதியில் இடும்பையிற் படுகின்றார்கள். சடங்குகள் வேண்டும்; ஆனால் அச்சடங்குகளுக்கு ஓர் எல்லையும் வேண்டும். சடங்கு, செய்வானது பொருளளவிற்கு ஏற்றபடி செய்யப்படல் வேண்டும். சடங்குகளின் எண்ணம் மிகக் குறைவுபடவேண்டும். பயனில் சடங்குகளைப் போக்குதல் வேண்டும்.

'வருவாயுட் கால் வழங்கவேண்டு' மென்று ஆன்றோர் கூறியிருப்பதைக் கடன் கொள்வார்தங்கருத்தில் ஊன்றி நோக்குதல் வேண்டும். அம் முதுமொழிப்படி ஒவ்வொருவரும் தத்தம் வருவாயில் கால்பகுதியை மீதி வைத்தல் வேண்டும். கண்ணிற் கண்ட பொருள் எல்லாம் வாங்குதல் வேண்டுமென்கின்ற பெரும் பித்து ஒழிதல் வேண்டும். செட்டாக ஒவ்வொருவரும் செலவிடல் வேண்டும்.

நிலக் கிழவர்களும், உழவர்களும், இக்காலத்து உழவு ஊதியம் தருவதில்லை எனக் கூறுகிறார்கள். பயிர்த்தொழில் செய்வாரிற் பெரும்பாலார் கடன் வாய்ப்பட்டிருத்தல் தான் அவர்க்கு அத்தொழில் ஊதியம் தாராமைக்குக் காரணம். பயிர்த் தொழில் செய்வார், உழவு காலமுதல் அறுவடை காலம் வரையில் கையில் பணமில்லாது கடன் வாங்குவதாகவே இருந்தால் பயிர்த் தொழிலும் அதன் பற்பல வினைகளும் அதனதன் பருவத்தில் எவ்வாறு நடைபெறும்? ஆதலின் மக்கள், வாழ்க்கையில் பொருட் செட்டையும், தொழிற் செட்டையும் கைப்பற்றினால் பெருமையை யடையலாம். நம் நாட்டு மக்கள் மடிமையெய்திச் சோம்பித்திரிகின்றனர். தொழில் செய்வதில் அவர்க்கு விருப்பமில்லை. அவர்கள் தங்களுக்கு யாராவது ஒருவர் வலிந்து வந்து வாயில் உணவு ஊட்ட வேண்டுமென்று கருதுகிறார்கள். ஊக்கமுடையானுக்கே கடவுள் துணை செய்கிறார். மடியுளானுக்கு மாமுகடி துணை செய்கின்றாள்.

தமிழ் நாட்டு மக்கள் பசித்திருந்தால், அது அம் மக்களின்

குறை; அது மடிமையின் பிள்ளை. கை செய்வார்க்கு நிலம் பெரிதும் பயனளிக்கும்.

இன்பத்தை விரும்புவார் கடன் வாங்காதிருத்தல் வேண்டும். பொருளைச் செட்டாகச் செலவு செய்தல் வேண்டும். வருவாயுட் கால் வழங்குதல் வேண்டும். மடியிலாது ஊக்கமுடையராய் வினை செய்தல் வேண்டும்.

---

# இன்பமும் வெளிப்பகட்டும் *

[அ. சிதம்பரநாதன் B. A.]

ஐரோப்பிய நாட்டு மன்னர்கள் நன்னடக்கையுள்ள குடிகளுக்குப் பரிசளிக்கும் விதமொன்று புதிதாகக் கண்டு பிடித்திருக்கின்றனர். அஃதாவது நாட்டிற்கும் மன்னர்க்கும் உண்மை யூழியஞ்செய்யும் பெருமக்களுக்கு நான்கு முழம் நீளமுள்ள † நீலநூல் வடங்களைக் கண்டத்தைச் சுற்றி யணியும் பொருட் டளிப்பதேயாம். இக்குறியீட்டுப் பெருமை யுடையோர் ஒவ்வொருவரும் மன்னனையே தலைவனாகக் கொண்ட கூட்டத்துளொருவராய் மதிக்கப்பட்டு "தீரர்" என்றழைக்கப் படுவர். மிகச்சிறந்த ஊழியங்களுக்கும் மிகவும் கையிறுக்கமாகப் பரிசிலளிக்கும் வழியிதுவே; குடிகள் இத்தகைய அற்பமான பரிசில்களைப்பெற்று நிறைந்த மனத்தினராய் விடல் மன்னரின் நற்காலமேயாகும். தன்னாட்டுப் பெருமையைக் காப்பான் வேண்டித் தனது பெற்றோரால் வந்த பொருளனைத்தையும் அயல் நாட்டிற் செலவிட்ட தூதனுக்கு மன்னனாலளிக்கப்படும் நாலு முழ நூல் வடம் இழக்கப்பட்ட பொருளுக்கு ஒப்பானதாய்க் கருதப்பட வேண்டியிருக்கிறது, குறுகக்கூறின், நீலம் அல்லது பச்சை நிறமுள்ள நூல்வடம் இரண்டு முழ நீளமளவாவது கையிலிருப்பின் ஐரோப்பிய நாட்டு மன்னன் அமைச்சரை

---

* இது கோல்டுசிமித் என்ற ஆங்கில நாட்டுப்புலவர் எழுதிய கட்டுரையின் மொழி பெயர்ப்பாகும்.

† இவ்வடங்கள் அரசாங்கத்தாரா லளிக்கப்படும் பட்டங்களின் குறியீடாகும்.

யும் படைத்தலைவரையும் படையாட்களையும் பெறுதலைக் குறித்துக் கவலையுற வேண்டுவதில்லை.

வெறும் வெகுமதிகளுக்காகக் கொடிய கடுமையை மேற்கொள்ள விரும்பும் பெரும்பொருள் படைத்த முத்தரையருள்ள நாடுகளை நான் பெரிதும் வியப்பதற்கில்லை. போதியவளவு பொருள் படைத்த வொருவன் வேணவாகொண்டு முற்படுவானாயின், தனது நிலையினுற் பற்பல இடையூறுகளுக்குள்ளாவான். ஆனால், அவன் முன் பெற்றிராத எவ்வித உண்மையான இன்பத்தையும் வேணவா நடையால் அடைதலில்லை. ஆதிக்கம் பெற்றுத் துய்ப்பதற்கொப்பாகவோ அன்றி மேலாகவோ அவன் மன்னன் தோழனுகுமுன் உண்டு முடுத்தியுங் குடித்து முறங்கியுமிருக்கக் கூடும். ஊர்ப்பொது வாழ்வு முறையிற் பெறுவதேபோல் தானிருக்குமிடத்திலேயே இச்சகம்பேசித் திரிவோரைப் பெறக்கூடும். அம்மாத்திரமோ! பிறராற் பார்க்கப்படாமலும் பழிக்கப்படாமலும் தன் மட்டில் தன் மனதுக்கிசைந்தவற்றையும் செய்து கொள்ளக்கூடும்.

முன்னலேயே போதியவளவு பொருளுடையோன் பின்னுஞ் சிறிது சேர்த்தலால் என்ன உண்மை நலத்தை அடைகிருன்? ஒன்றுமில்லை. பெரிய மனிதன் தனது பொருட் செல்வத்தைப் பெருக்குவதால் தனது பசியையும் பெருக்கக் கூடுமானுல் பொருட் பெருக்கத்தால் வரும் கொண்டாட்ட மென்பதொன்றை யடைகிருனென்று கூறலாம். ஆயிரத்தை ஈராயிரமாகச் செய்வதால் இரண்டு மனைவிகளுடன் ஒரே காலத்திற் கூடவோ இரண்டு முழுச்சாப்பாடுகளை ஒரே காலத்திற் சாப்பிடவோ அவனுல் முடியுமானுல், தனது துப்புரவைப் பெருக்கிக் கொள்ள அவன் ஏதோ சிறிது துன்பத்துக் குள்ளாதலைப் புறக்கணித்து விடலாம். ஆனுல், அவன் அகலப்படுத்த முயலுவதற்கெதிராக அவனுக்கு இன்பத்தின்கணுள்ள அவா குறைகின்றதைக் காணலாம். அம்மட்டோ! அவனது ஆக்கம் பெருகத் தொடங்கவே அவனது இன்பநுகரு மாற்றல் குறைந்து விடுகிறது.

ஆதலால் செல்வரிடத்து அழுக்காறு கொள்ளுவதற்கு மாறாகச் சிறிது இரக்கத்துடனேயே அவர்களைப்பற்றிப் பொதுவாக நான் நினைப்பதுண்டு. அவர் நுகருமின்பத்திற்காக அவருக்கின்றி நமக்கே கடப்பாடுடையவராய் வழியல்லா வழியிற் செலுத்தப்படும் நற்குணமுள்ள மக்களாகவே அவர்களை நான் கருதுவதுண்டு. அவர் நெற்றிவியர்வை நிலத்தில் விழும்படி ஒய்யாரமாக அணிகளை மெய்மீது வாரிப்போட்டுக்கொண்டு சுமப்பது நம்முடைய மகிழ்ச்சிக்கேயன்றி அவருடைய இன்பத்திற்காகவன்று. நம்முடைய மகிழ்ச்சிக்காகவே அவருடைய கையாட்களுங் காலாட்களுமாகிய குற்றேவற் கூட்டத்தார் வேடிக்கையாக நம் முன்னே பொற்புடன் போகின்றனர். தேர்ந்த அயர்வினரின் எல்லா வேலைகளையுங்கூட ஒரே வேலையாள் செய்து விடக்கூடும். அவ்வாறிருக்கவும் இருபது ஆட்களையுடையோர் தமது இன்பத்திற்கு ஒருவரையும் நம்முடைய இன்பத்திற்காக ஏனைய பத்தொன்பதின்மரையும் வைத்திருக்கிறார்கள். ஆதலால் "நம்மை மகிழ்ச்சி உடையவராக நாமே நினைத்துக் கொள்வதினும் மிகுதியாக நாம் மகிழ்ச்சி யுறுவதாகப் பிறரை நினைக்கச் செய்தலில் ஊக்கம் பெரிதும் காட்டுகிறோம்" என்று * கான்பூழியர் கூறியது பேருண்மையேயாம்.

பிறர் தம்மைப் பார்க்கவேண்டும் பார்த்துப் பேசவேண்டும் புகழவேண்டும் என்ற விருப்பம் அவ்விருப்பமுடையாருக்குச் சில கடுமையான அலுவல்களைக் கொடுக்கக் கூடியதாயிருப்பினும், அவர் தமது இன்பத்தையும் கவலையின்மையையும் துன்பத்திற்கும் முழநீள நூலுக்கும் மாற்றாகக் கொடுக்க முன்வருவது மக்கள் குழாத்தின் நலத்திற்கேயாம். அவருடைய பகட்டினால் நாமிழப்பதொன்றுமில்லை ஒரு முத்தரையரோ ஒரு பெரு மனிதரோ நூற்றுக்கணக்கான வேலையாட்களுடன் நம் நடுவே வரின், நாமிழப்பதொன்றுமில்லை, அவ்வாறு வருமவர்க்கு இன்பத்தைக் கொடுத்தலும் அவரைப்பார்த்து இன்பத்தை

* கான்பூழியர் என்பவர் கி. மு. ஆறும் நூற்றாண்டில் சீன நாட்டிலிருந்த ஒரு முனிவராவர். அவரும் கௌதம புத்தரும் ஒத்த காலத்தவர்.

அடைதலும் நம்மால்தானாகும். இங்கு ஒரு சிறு கதையைக் கூறின் மேற் கூறியது நன்கு விளங்கும்.

சீனநாட்டு முத்தரையரொருவர் தமது ஆடையின் ஒவ்வொரு பகுதியிலும் பற்பல அணிகளை அணிந்து கொண்டு பகட்டாக ஊரார் முன்னே வரும் வழக்கமுண்டு. ஒருநாள் அவர் அவ்வாறு வருங்கால் ஒருவயது முதிர்ந்த சீனநாட்டுக் குருக்கள் அவரைப் பல தெருக்கள் வழியே தொடர்ந்துசென்று வணங்கி வணங்கித் தமது வந்தனத்தைத் தந்தனராம். முடியிலிருந்து அடிவரை அணியணிந்த அம்முத்தரையர் "எதற்காக நீ இவ்வாறு பணிகிறாய்" என வினவினராம். அதற்கு அக்குருக்கள் விடை பகர்ந்ததாவது :—

"அன்ப! நான் உனக்கு யாதொரு அணியுமளித்தேனல்லேன். ஆயினும், நீ அணிந்துள்ள பல அணிகளையும் பார்க்க விடுத்தனையன்றோ! அவ்வளவு பயன்தானே நீயும் அவவணிகளானடைய முடியும்!! ஆதலால், நீ அவைகளைக் காப்பதற்காக வேண்டித் துன்பப் படுதலைத் தவிர உனக்கும் எனக்கும் உள்ள வேற்றுமையில்லை. அக்காத்தல் துன்பத்தை யான் விரும்பவில்லை."

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள."

---

# சிவநெறி மாண்பு

[ரத்னபுரி K. சிதம்பரநாதனவர்கள்]

(239-ம் பக்கத் தொடர்ச்சி)

மாயும் (infinite & intermittent) மாயை இயல்பில் காரியமிருப்ப வென்றுங் காரண முளதாம் முறையில் காரண காரியமாயும் (infinite and causative) விளங்க நின்றது குறிக்கற்பாலது. ஆதியெனக் கண்டவிடத்துக் காலதேச வர்த்தமான

வரையறை யுண்டாதல் பற்றி அவற்றிற் கதீதமாய் அறிவிற் கெட்டாததாய் நிற்குமாற்றான் எவ்வாறு நிலைக்குமென ஆய்ந்து தெளியக் கண்டபடி கொண்ட அநாதிநிலை யுண்மை யிது சிவ நெறியிற் றெரித்ததென்ப. எனவே, ஏனைய மதங்கள் போல் மூலகன்மத்தை ஆதாமேவாளிலோ அன்றிச் சாத்தானிலோ அன்றி அவனையும் நிற்கவிட்ட கடவுளிலேயோ பொறுப்பித்து விட்டுப் பின் கொடுக்கும் தண்டனை உபகாரங்கட்கும் அவ் விறைவன் மேலேயே பழியைச் சுமத்தி அவரதிறைமைக் குணத்தை யிழிவு காட்டி உயிர்கட் கியல்பாம் மயலையும் தெளியு மாற்றலையும் அவர்கட்கு நாட்டாது அவர்களது உயிர்க் குணத் தையும் ஒழிவு காட்டித் தத்தளிக்காது நின்று அநாதி மயலை யும் வினையையும் மாயையையும் காட்டி விளக்குவது சிவநெறி யென்க.

மேலும் இத்தகை "மாயையின் வயிற்றுள் மன்னி" "வேட ரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்கும், மன்ன வன்றன் மகன்" போன்ற உயிரை "பின்னவனும் என் மகன் நீ என்று அவரிற் பிரித்துப் பெருமை யொடுந் தானுக்கிப் பேணுமாபோல்" ஐம்புல வேடர் சுழலினின்றும் நீக்கி "அருட் குருவாகி, மலமகற்றி, தானுக்கி, மலரடிக் கீழ்" இறைவனே வைப்பன் என்ற உண்மை கூறுவது எம் சிவநெறி யன்றே. என்னை ? இறைவனே ஆணவம் என்னும் ஒருமல முடைய விஞ் ஞானகலர்க்கு உயிர்க்குயிராய் நின்றும்; ஆணவ கன்மமாகிய இருமலமுடைய பிரளயாகலர்க்கு "மான்மழு சதுர்ப்புஜ" முதல்கூடிய திருக்கோலத்தினின்றும், ஆணவ கன்ம மாயை யாகிய மும்மல முடைய சகலராகிய எம்மனோர்க்கு "மானைக் காட்டி மான்பிடிப்பவர்போல்" மானுடச் சட்டை சாத்திக் குரு வடிவில் வந்து முற்காட்டிய சஞ்சித வினையைத் திருநோக்கா னெரித்து, ஆகாமியத்தை அறிவால் விளையாது நிறுத்திப் பிரா ரத்துவத்தை உடற் கழிவினழிய விட்டு இருவினை யொப்பக் கண்டு மலம் பரிபாகமாகச் சத்திநிபாதஞ் செய்து முத்தி யளித்தலாகும் தீக்கையைச் செய்தருளுவன் என்றது விளக்

கியது ஈங்குத்தானே. ஓடும் பொன்னும் ஒப்ப நோக்கி, "தேச மிடங் காலந் திக்காசனங்களின்றிச் செய்வதொன்று போற் செய்யாச் செயலதனைக் கொண்டிங்கு, ஊசல்படுமனமின்றி உலாவல் நிற்றல் உறக்கம் உணர்வு உண்டி பட்டினி யிருத்தல் கிடத்தல், மாசதனிற் றாய்மையினில் வறுமை வாழ்வில் வருத் தத்தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத்தில் ஆசையினில் வெறுப்பின் இவையல்லாது மெல்லாமடைந்தாலும் ஞானிகடாம் அரனடியை அகலார்'' என்றவாறு எல்லாம் "இறைவன் திருவிளை யாட்டாகவே செய்து கண்டு இன்புற்று நம் செயல் அற்று, இந்த நாம் அற்றபின், நாதன் தன் செயல்தானே, என்று உந்தீ பற'' என்றவாறு நிற்றலே இருவினை யொப்பாக, அப்போது மலம் (மேலும் பிறவியிற் படுத்தும் கன்ம வினைவின்மையாற், பரிபாகமாக, மாயையாய் நின்று மயக்கிய திருவருட்சத்தியே தோழியாய் நின்று இறைவனுடன் நள்ளிருளிற் கூட்டுவித்த லாகும் சத்திநிபாதம் ஆக முன் விளக்கிய அத்துவித இன்பம் பெறுதலே முத்தியாமெனத் தெள்ளிது விளக்கியது சிவநெறியி னன்றே. வினைமுற்ற லிப்பாவ மன்னிப்பினும் மனந்திரும்பலி னும் அன்றிக் கொள்வன விற்பன முறையிலாம் வியாபாரத்தி லும் வரும் எனக் கூறும் பிறர்போலன்றி முத்தி வரவும் முத்தி யியல்பும் முத்திப்பேறும் காட்டியுள்ள செம்நெறி சிவநெறி யென்க.

மேலும் இறைவனை வணங்கி உய்வதற்கு ஒரு சாரார் கூறு வது போல் உருவில்லாத அருவமே ஒக்கு மென்றும், அன்று உருவமே ஒக்குமென்றும் வழக்கிடாது, அறிவு முதிர்ச்சிக்கேற்ப உருவாயும் அருவுருவாயும் அருவாயும் வழிபடல் பொருந்து மெனக் காட்டி நிற்பது சிவநெறி யொன்றே யன்றோ. என்னை ? சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கு திருமேனியும் ஆண் பெண் எனப் பிரித்தறியப்படாத அஃறிணை (Neuter) மாத்திரையிற் காட்டிய அருவமாகவும்; சதாசிவன் என்ற சிவ லிங்க வடிவமாகிப் பீடமாகிய சத்தியும் (Kinetic energy) இலிங்கமாகிய சிவமும் (Potential energy) சேர்ந்து உரு

வென்பார்க்கு உருவும் அருவென்பார்க்கு அருவும் ஆகிக் குறி யளவானே (mere form) இலங்கும் திருமேனியே அருவுருவ மாகவும்; மகேசன், உருத்திரன், மால், அயன் என உரு, குணம், குறி, தொழிலாலும் சுட்டிக் காட்டிய நான்கும் ஆண்பேதமாய் முறையே மகேசை, உமை, திரு, வாணி என்னும் சத்திகளைப் பெண்ணாகக் கொண்டு உலகியலினும் எம்மனோரால் இலகுவாக வழிபடற் குற்ற திருமேனியே உருவமாகவும் குறித்துக் காட்டிய பெருமை சிவநெறியதன்றே. இதுபற்றித்தானே.

"சத்தியும் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியுமாக
வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையும் உணரார் பீட லிங்கத்தி னியல்புமோரார்"

எனச் சித்தியாருட் கூறியதுமாம். இதை நுணுகி யுணராதார், சிவலிங்க வழிபாட்டின் திட்பநுட்பத்தைத் தெளியாதும், தெளிந்தறியாதும், அறிந்தார் வாய்க் கேட்காதும், எள்ளு வர். இவர் தமக்கு "உலகமெல்லாம்" எத்தகைத் தெனவும், எவ்வா றியங்குவதெனவும் கடாவி, ஆண் பெண் பாற்படு மியல்பு குணகுணியாய் ஒத்து ஒவ்வா நிலையில் ஒன்ற ஞென்று அபின்ன மாய் "சிவஞ்சத்தி தன்னை யீன்றும், சத்திதான் சிவத்தை யீன் றும், உவந்திருவரும் புணர்ந்திங்குலகுயிர் தம்மை யீன்றும், பவன் பிரமசாரியாவன், பான்மொழி கன்னியாகும்" என்ற நிலையிற் காணக் கிடந்ததெனக் காட்டி "அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை யெல்லாம்" என்பதை மறித்து மறித்து ஊன்றி நோக்கி யுணர்ந்து உண்மை கடைப்பிடிக்குமாறு தூண்டிப் பீடலிங்கத்தி னியல்பை ஓர்ந்துணர்ந்து மனத்துட் பதித்து உய்யுமாறு வேண்டி நிற்பதே யன்றி வேறென் செய்யவல்லேம்.

மேலும் உருவ வணக்கங்களுள்ளும் ஓங்கார பிரணவத்தை உருவமாக்கி "அகரமென நிறைவாகி" உகர மகரங்கள் சேர்ந்த பதி பசு பாச அமைப்பும் படைப்புக் காப்பு அழிப்பும் தேற்றிய வேழமுகத்துப் பிள்ளையார் வடிவினில் மூலாதாரப் பொருளா கக் காட்டியும்; அறுகோண சோதியாகும் முருகென்னும் இள

நலத்திறையைப் புருவ மத்தியாகிய ஆஞ்ஞையில் கோலமயிற் றோகையுட் குலவித் தோன்றி மறைந்து, சுடர் வடிவேலேந்திக் கோழியாகும் நாதத்துட் குரலெழுப்பி இச்சை கிரியையாகும் அரமகள் குறமகளைக் கூடி ஆணவச் சூரையும் கன்மச் சிங்கத்தையும் மாயைக் கிரவுஞ்ச தாருகனையும் முறையே அடக்கியாண்டும், அழிய அடித்தும், தகரப் பொடித்தும் தமிழின நலந் தந்து நிற்கும், குமரனாக நண்ணிநிற் குறித்தும்; பிற ஆதாரங் களிற் பிற மூர்த்திகளாகவும் இறைவனை உண்ணோக்கிற்கும் புறநோக்கிற்கு முவப்ப உருவகப்படுத்திக் காண்பித்தும்; தகர வித்தை யென்னும் ஐந்தொழில் நிகழ்ச்சி யுருவமாக "உலகமே யுருவமாக யோனிக ளுறுப்பதாக, இலகுபே ரிச்சா ஞானக் கிரியை யுபகரணமாக, அலகிலா வுயிர்கட்கெல்லா மறிவினை யாக்கி யைந்து, நலமிகு தொழில்களோடு நாடகம் நடிப்பன் நாதன்'' என்றபடி கூத்தப் பெருமான் (நடராஜர்) ஆக "மன்றுள் வெளி காட்டும்'' கடவுளாக இருதய மென்னும் (heart) உயிர்த்தானத்தில் ஆடக்காட்டியும் விளக்கியுள்ளது சிவநெறியன்றோ. இவை விரிப்பிற் பெருகும். வேண்டியவர் சிவ நூல்களிற் றெளிக. இதனை யறியு மாற்றலிலாதார், பல தெய்வ வணக்க முடையர் சைவர் என்ப. அவர் கூற்று முப்பான் முக்கோடி தேவர் சாதியைக் கடவுளரெனக் கொண்டாரென மேனாட்டு அறிவிலிகள் கூறிய பொய்ம்மொழியோடும், கல்லையும் செம்பையும் வணங்குவர் எனக் கூறும் நுண்ணறிவினரென்பார் சிலர் கூற்றோடும், சாதிகற்பித்தான், புராணம் எழுதினான், ஒன்றும் மெய்யன்று, உருவும் வேண்டிற்றன்று, என நின்று போம் வழியறியா துழலும் குடியரசுக் காரரின் கொடுமொழிகளோடும் சேர்த்துச் சிவநெறி யுண்மையாந் தீயிற் சுடப்பட்டுத் திருவெண்ணீறெனத் தூளாயழியு மெனவும் அந் நீற்றையு மணிவன் அவ்விறையே யெனவுங்கூறி அன்பினிலவர்கட் கருணெறியாமாறு திருவருளை வேண்டி நிற்றலே சாலும் என விடுப்பல்.

மேலும் உருவவணக்கத்திற்கு நிறுவிய ஆலய அமைப்பி

னும் உடம்பினுயிரிருக்கு முறையாக ஆறுதார நிலையே தெளித்து "இலங்கும் உயிர் உடல்களெல்லாம் ஈசன் கோயில்" எனக்காட்டி யும், வணக்க முறைகளினும் குளிப்பு நீறிடல் மணி யணிதல் ஐயுறுப்பு எண்ணுறுப்பு முற்றுறுப்புத்தோய வணக்கம் (பஞ்சாங்க, அஷ்டாங்க, சாஷ்டாங்க நமஸ்காரங்கள்) செய்தல் புலனொடுக்கியிருத்தல் (தியானம் முதலிய புற ஒழுக்கங்களாலும் அகத்தோடு உடலையும் தூய்மை யாக்கும் சுகாதார தேகாப்பியா சங்களையும், நறுமணங்களையும், கர்ப்பூரமாதி தூயொளி விளக்கு களையும் பஞ்சகவ்விய மென்னும் ஆனைந்தாகும் அருமருந்தினை யும் குறித்துள்ளது சிவநெறியன்றே. இறைவர் காட்டிய நீர் (மஞ்சனதீர்த்தம்) கோசல கோமயம் ஆதியவற்றின் பெருமை யும் அருமையும் இப்போது ஐரோப்பிய அறிஞரும் பெரிதும் உணர்ந்து போற்றுவதாகச் சென்ற வாரப்பத்திரிகை யொன்றி லும் கண்டாம். சுருங்கச்சொல்லில் யாம் செய்யும் எச்செயலும், நினைக்கும் எந்நினைவும் சொல்லும் எச்சொல்லும் இறை வணக்க மாக "நின்று மிருந்துங்கிடந்து நடந்து நினை, என்றும் சிவன் றாளிணை" எனக்காட்டியுளது சிவநெறியேயாம். ஏனைய மதங் களிற்போல் வாரமொரு முறையோ, அன்றி நாளில் சில பொழுதுகளிலோ இறைவனை நினைப்பதும் எஞ்சிய நேரங்களில் இறைவனையின்றிப் பிற செயல்களிலீடுபட்டுழைப்பதும் என்றில் லாமல் "எல்லாம் உன் செய்கையே" என அவனில் ஒன்றி நின்றகலாது உயிர் வாழக் காட்டுவது சிவநெறி யொன்றே யெனல் மிகையாகாது.

மேலுமிவ் வொழுக்க நெறி விளக்கவுற்றுச் சிலரால் கால தேச வர்த்தமானங்களுக்கேற்க வகுத்து விதித்தவற்றையும் பல ரால் (majority) கொண்டாடப்படுவன வற்றையும் நன்மையென் றும் விலக்கியனவற்றையும் வெறுக்கப்படுவன வற்றையும் தீமை யென்றும் சுட்டாது "இதம் அகிதங்களென்பது இகல் மனம் வாக்குக்காயத்த, இதம் உயிர்க்கு உறுதி செய்தல் அகிதம் மற்றது செய்யாமை" எனச் செய்யப்பட்டார்க்கு உறுதி பயப்பன இதம் (நன்மை) ஆகவும், உறுதிபயவாதன அகிதம்

(தீமை) ஆகவும் வரை விலக்கணம் காட்டியுள்ளது சிவநெறியினன்றே. இதுவும் சிவநெறியினைக் காலதேச வர்த்தமானங்களுட் கட்டுப்படாத உலகநெறி எனக்காட்டுமன்றே. இதுபற்றியே "ஈனமில் செய்தி ஈசனிடும் பணி" எனவும் "ஒழுக்கம் அன்பு அருள் ஆகாரம் உபகாரம் உளவு சீலம், வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி, இழுக்கிலா அறங்கள் ஆனல் இரங்குவான் பணி அறங்கள்" எனவும் "அறமலி இதம், மறமலி அகிதம்" ;எனவும் "சினமுதலகற்றி வாழும் செயல் அறமானல்" எனவும் சித்தியாரில் விடுத்து விடுத்துக் கூறியதுமாம் என்க. என்னை? இயற்கை நோக்கி, இயல்பு நோக்கி, பழக்க நோக்கி, பாவனை நோக்கி செயப்பட்டார்க்கிட ருழையாதன நலனும், இடருழப்பன தீதும் ஆமென்ப. இதுவே மேதாவியரும் ஒப்பக் கொள்ளும் உண்மையாம். செய்பவன் தன் செயலற்று "ஏகனுகி இறைபணி நிற்ப" செயப்பட்டாற்குறும் பயனுகரவே செயலின் நயன் தீது தெரிக்கும் கட்டளைக் கல்லாதல் தெளிவு. இதனைச் சுட்டியே திருவள்ளுவநாயனரும் "வாய்மை எனப்படுவதியாதெனின் யார் யார்க்கும் தீமையிலாத சொலல்" என்றதும் "மனத்துக்கண் மாசிலனுதல் அனைத்தறன், ஆகுல நீரபிற" என்றதுமாம். என்னை மனத்து மாசிலதாக வாக்கில் மாசின்றும், செயலினும் இன்றும் என்றபடி. அன்றி ஏனைய மதத்தர்போல் உலகியற் கட்டளையும், அரசாங்கக்கட்டளையும், பலர் கட்டிய கட்டளையும், மனச்சாட்சியென்ற, என்றும் காலதேச வர்த்தமான இயல்பில் மாறித் தோன்றும் பொருளலாப் பொருளின் கட்டளையும் இதம் அகித வரைவிலக்கணத்தை நிறுவவில்லாதென்பது காட்டித் தெளிவுறுத்தியது சிவநெறியிலேயாம் எனல் ஒப்பாம்.

மேலும் இறவாப்பேரின்ப முத்தியுட்டிளைக்கும் தன்மையை, உலகிற் சிறந்த இல்லொழுக்க வாழ்க்கையிற் கண்ட போலி இன்பத்து மேலுண்மையாகக் காண்பித்து, அழியாவின்பத்துட்டிளைத்து அரனேடொன்றி இரண்டன்றி ஒன்றுமன்றி அத்து

விதமாய்க் கலந்து நின்று துய்த்தல் என்பதாகக்காட்ட "அவனே தானே ஆகிய அந்நெறி, ஏகனுகி இறைபணி நிற்க, மலமாயை தன்னொடு வல்வினையின்றே'' எனக்குறித்து விளக்கி உலகியலிலும் முருகன் வள்ளி யொழுக்கிலும் பிறபுராண சரித்திரங்களினும் சிறப்பித்து நிற்பது சிவநெறியன்றே. இவற்றையறியாதார் புராணங்களை இழித்துக் கூறுவர். நால்வகை நெறியார்க்கும் உண்மையைப் பருப்பொருளாகவும் உட்பொருளாகவும் தெளிபொருளாகவும், துய்பொருளாகவும் உணர உவமை முறையில் நிகழ்ச்சிகளை யொட்டி யெழுந்த மெய்ஞ்ஞான நூல்களவை யென்பதும், துருவியாய ஆய அகத்துப் பிரித்துணர மெய்யமுது எழும் என்பதும் உணராதார் வெளிற்றுரையாய் அவர் கூற்று ஒழியும் ஆக இவர்க்கு.

"அப்பணி செஞ்சடை ஆதிபராபரன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரம் என்பன மும்மல காரியம்
அப்புரம் செற்றமை ஆர் அறிவாரே"

என்ற திருமந்திரத்தைக் காட்டித் திரிபுர தகனம் மும்மலகாரியவழிவு குறித்த இறையருட் செயலாகவும், பாற்கடற் கடைவு பிராணுயாமத்துக் குண்டலி யெழுப்பி அமுதூறச் செய்து தேவராய் அழியா வின்பம் பெறலும் தவறி யசுரராய்க் கழிகாமத்தழிதலும் குறித்த பெரும் பொருட் புதை செயலாகவும், காலனைக் காலானுதைத்தது ஆயுளடக்கத்தை யோக சாதனையாற் காலை (பிராண வாயுவை) நிலைசெய்து எண்ணும் பதினாறிற் கட்டி நீட்டிப்பது குறித்த தெளி செயலாகவும், சூர சம்மாரம் இருள்மாவாகும் ஆணவச் சூரைச் செயலறச் செய்து மயில் சேவலாகும் பரவிந்து நாதத் தொடுக்கி, வெட்ட வெட்டத் தழைக்கும் பல் ஆயிர முகமுடைச் சிங்கமாகும் கன்மத்தை (வைராக்கியம்) ஓர்ப்பு என்னும் வச்சிரத்தாலழிவுபட வடித்து, அறிவுடைப் பொருள் அறிவில் பொருள் (சராசரம்) ஆகிய தாரகன் கிரௌஞ்சமென நின்ற மாயையை வேலாற் றுளைத்து அறிவொளிப் பிழம்பிற்று கழிபடத் தீத்தும் முத்தி முத்தற் கீந்த

திருவருட் செயலாகவும் காண நின்ற உண்மையை நுணுகியா ராயுமாறு வேண்டிப் பிறகலைகளும் இவ்வாறே அறியக் கிடக் கும் என வலியுறுத்திப் பெரும் பொருள் பொதிந்த அருங் களஞ்சியமே புராண இதிகாசம் ஆகும் எனக் கூறிவிடுப்பல்.

மேலும் "தர்மம் குறைந்து அதர்மம் பெருக நானே மீட் டும் மீட்டும் உருவெடுப்பேன்'' எனக் கிருஷ்ணபரமாத்மா கீதையிற் கூறியவாறு, வேண்டிய வேண்டிய காலத்தில் உலகி லுண்மைநாட்டு அவதார புருடர்களாம் இறையருட் செல்வர் களைத் தந்து வருவதும் இறையருளே எனக்காட்டி, ஏனைய மதத் தர்போல ஒரு அவதாரத்திலேயே திருவருட்கு முடிவு காட் டாது நிலவுவதும் சிவநெறியன்றே. இது பற்றியன்றோ எம்பரத கண்டம் புண்ணிய பூமி யெனப்படவும், இன்றும் இன்னும் மெய்யறிவாளர்களைத் தோற்றுவித்தும் தோற்றுவிக்க நின்றும் பேருலகிற் பெரும் பொருள் நோக்கிற்கு நிலைக்களனாகி, உடலி லுள்ளவாபோல் கமலை (திருவாரூர்) ஆகும் மூலத்தில், உயிர்ச் சத்தியைப் பிறப்பிக்க முத்தியும், காசியாகும் புருவ நடுவிற் சுட்டெரிக்க முத்தியும், பேரம்பலமாகும் இதயத்திற்கான நிறுத்த முத்தியும் தருங்குறிப்புடைத்தாய் நிலவவும் பெற்றது என்ப.

மேலும் அன்புநெறி, அருள் விழைவு என்பனவற்றை நன்கு விளக்கி, உலகினில் எப்பொருட்கு மியக்க மிருக்கு மாற் றானே சிவசத்திபதிவாக உயிருண்டு என்பதைக்காட்டி மக்கள் மேலன்றி மற்றெல்லாவற்றினும் அன்பு பாராட்டி அருள்விழை வாக்குமாறு கற்பித்து மெய்யான இரக்கம் (சீவகாருண்யம்) தலைப்பெய்த கொல்லா (அஹிம்சா) நெறிபூண்ட உண்மை (சத்ய) ஒழுக்கத்தை நிலைநாட்டி யுள்ளதும் சிவநெறி தானே எனல் மறுக்கொணா மாண்பேயாம். அது பற்றியே "உற்ற நோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை'' என்றும் "நோன்பென்பதுவே கொன்று தின்னாமை'' என்றும்,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்திலர்

அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே''

என்றும் மறை மொழிகள் எழுந்ததூஉமாம் என்க. இவ்வன்பு நெறியை நாட்டி உலகிற்கு நல்வழி நிறுவிய நாயன்மார்கள் முதலிய பல்பெரும் பெரியாரது கதைகளும் அவர்களெமக்கு அருளினீந்த திருமுறைப் பாக்களும் கன்னெஞ்சையும் கரைந்துருகச் செய்யும் தகைத்தாதல் எம் சிவநெறிக்குப் பிறநெறிகளிற் சிறந்த பெருமையைத் தருவதோடமையாது பொருணிலை நிறுத்தலில் ''அன்பே சிவமா யமர்ந்திருப்ப''ரெனமுற்றுக் கட்டி முடித்த ஒப்பிலாத்தனிமாண்பையும் நிறுத்தி நிற்பவெனல் தெளிவே. எனவே உலகியலிற் பல நெறிகளும் துன்பத்து விலக்கி இன்பத்தை, அதுவும், அழியாப் பேரின்பத்தை உயிர்கள் அடைந்துய்ய எழுந்தன என்றும், அவற்றுட் சிவநெறியே

(க) உண்டாக்கிய ஒருவர் பெயரானியங்காது துய்க்கும் பயனும் சிவத்தையிட்டு அறிய நிற்றலானும்,

(உ) முற்றின்பக் கூட்டை (பரமசுக சம்பந்தத்தை) விளக்கு நெறியென விளங்கி நிலவலானும்,

(ங) எல்லா நெறிகளையும் அவற்றின் முடிபுகளையும் தன்னுள் அடக்கிக் காண்பித்து, ஒன்றையும் இகழாது மேற்றிகழ்தலானும்.

(ச) பொருள்கள் இறை, உயிர், இருள் (பதி பசு பாசம்) என மூன்றாய் முதலீறின்றி (அநாதியாக) நிலைப்பன என விளக்குதலானும்,

(ரு) ஆண் பெண் (சத்த சத்தி பேதம்) ஆகிய தன்மையை இறைவனிற் காட்டிப் பெண்மையை எள்ளாது உயர்த்தி நாட்டுதலானும்,

(சா) ஆண்டானடிமை, தந்தை மகன், தோழன் றோழி, தலைவன் றலைவியர், (தாதமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம்) என்ற முறைகளில் இறை வணக்

கத்தை இயல்புக்கும் தகுதிக்கு மேற்ப உலகினர்க்கு வகுத்துக் காட்டலானும்,

(எ) இருள், வினை, மயக்கு (ஆணவம், கன்மம், மாயை) என்னும் கட்டு (பாசம்)களின் தன்மையை விரித்து விளக்கி உயிர்க்குள்ள குறையைக் காட்டலானும்.

(அ) அக்குறையை மாற்றும் அருட்பதிவு (தீக்கை) முறையையும் இறைவனே அருட் குருவாய் வந்து ஆட்கொள்ளும் திறனையும் தெளிய விளக்குதலானும்.

(௯) அவரவர் அறிவு ஆற்றலுக்கேற்ப அருவ, அருவுருவ, உருவத்திருமேனிகளை இறைவற்குளதாகக் காண்பித்தலானும்.

(௰) உருவ வணக்கத்தும் இயற்கை வணக்கமாகிய முருக வணக்கம் பிள்ளையார் வணக்கம் முதலியவற்றை உட்பொருள் உணர வைத்து நன்கு நிறுத்துதலானும்.

(௰௧) திருக்கோயில் அமைப்பு, நாட்செயல் (நித்தியகருமம்) வணக்கங்களினும் உடல் மனந்தூய்மையுற ஒழுக்க நிறுவி, நினைவு பேச்சு செயல் எல்லாம் இறை வணக்கமாம் கடமையே யெனக் காட்டுதலானும்.

(௰௨) நல்லொழுக்கமுமே "உயிர்க்குறுதி செய்தல்" என்றும், தீயொழுக்கம் "உயிர்க்கு உறுதி செய்யாமை" என்றும் வரைவுசெய்து, செயப்பட்டார் பாற்கண்ட இன்ப துன்பமாகிய உணர்ச்சிப்பயனே கட்டளைக்கல்லா நிற்குமெனத் தெளிவுறுத்தலானும்.

(௰௩) ஒன்றிரண்டற்ற (அத்துவித) முத்தி நிலையை உலகியலில் இல்லொழுக்க வின்பத்தோ டொருபுடை இணைத்து மேற்செலச் சுட்டுதலானும்.

(௰௪) பெரியோர் பிறப்பு (அவதாரம்) என்றென்றைக்கும் ஆகும் என்பதை வற்புறுத்தலானும்.

(௰௫) அன்புநெறியே மெய்ந்நெறியெனக் காட்டி அன்பே சிவம் என முடித்து உண்மை அறிவு இன்பம் (சச்சிதாநந்தம்)

என்பதை உலகினர்க்குத் தெளிய விளக்கி அருள் நிலை குறித்தலானும்.

எம்சிவநெறியே மேலான மாண்புடையதாமென இது காறும் கூறியுற்றதாம். மேல் விரிவுதெரிய வேண்டுவோர் சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய கச மெய்கண்ட சாத்திரங்களை ஆராய்ந்து திருக்குறள் பண்டார சாத்திரம் தொண்டர் புராணம் திருமுறைகள் முதலிய தமிழ் நூல்களோ டொட்டி நுணுகத்தேர்ந்து அறிந்தார் மாட்டு ஐயந் தீர்த்து அமைவதாக அதினும் சிவஞான சித்தியார் திருவிளங்க தீபிகை என்னும் புத்துரையில் இக்கூறிய பலவுண்மைகளும் பரக்கத்தெரித்திருத்தல் பார்த்துணர்க.

குற்றங்குறைகளைக் களைந்து குணமே கொள்ளல் கற்றோர் கடமையெனவும், சொற்றவற்றை முற்று மாய்ந்து துணிபு கோடல் கற்போர் கடமையெனவும் கூறி இறை அருள் இலங்க இலங்கைப்பண்டை அரசியல் நகரில் இன்று கூடி இச்சிற்றுரையையும் கேட்க இயைந்து இழுத்து இங்கு இவனையும் பொருட்படுத்திய இளஞ்சிங்கங்களாகும் சிவநெறிச் செல்வ உடன் பிறப்பாளர்கட்கு இறை நலனே கண்டு இணக்கமாகிய வணக்கமுமீந்து நிலைக்கின்றேன்.

"சிவனெனு நாமந் தனக்கேஉடைய செம்மேனி யெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாயில் அவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னுளைழைத்தால்
இவனெனைப் பன்னு ளழைப்பொழி யானென் றெதிர்நிற்பனே"

"நங் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன்அடி யேனையும் தாங்குதல்
என் கடன்பணி செய்து கிடப்பதே"

"இறவாமற் பிறவாமல் எனையாள்சற் குருவாகி
பிறவா கித்திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா
கதையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமானே"

அம்மை அப்பன் திருவடிகள் வாழ்க.

# தமிழ்ச் சித்த வைத்தியம்

(ஸ்ரீமத் விருதை சிவஞான யோகிகள்)

(256-ம் பக்கத் தொடர்ச்சி)

தமிழ்ச் சித்த வைத்தியம் முற்றறிஞனாகிய சிவனார் எழிலக்கம் பாட்டுக்களுடையதாய் இயற்றியருளிய தமிழ்ச் சித்த வைத்திய முதல் நூலையும், முருகன் முதலிய கணநாதரும் சித்தரும் முனிவரும் கூறிய வழிநூல் சார்பு நூல்களையும் மேற்கோள்களாக வுடையது. சிவனார்பாற் கேட்டவர் நந்தி. அவர் பாற் கேட்டோர் சனகாதி முனிவர் எண்மர். அவர் வழிவந்த சித்தர் பலர். சனகாதி முனிவர் தமிழ் முதற்சங்க காலமாகிய இற்றைக்குப் பதினாறாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவர். அன்னவர் கூறிய தமிழ்ச் சித்த வைத்திய நூல்களிற் பல அக்காலந் துவக்கி வழங்கிவருகின்றன. சித்த வைத்திய நூல்களில் மக்களுறை மூலிகை சம்பந்தப்பட்ட மருந்து, சூருறை அறுவையும் அதற்குரிய மருந்துகளும், தேவுறை நீறு (பற்பம்) செந்தூரம், சுன்னம், உலோகம், பாடாணம், சத்து மணி முதலியன ஆகிய மூவகை மருந்துகளும் உலோகங்களைத் தூயனவாக்கி மாற்றும் வாத சம்பந்த மருந்துகளும், உடலை வலுக்கச் செய்து ஆயுளை நீளச் செய்யும் காய கற்ப மருந்துகளும், இவற்றிற்குக் குருவாகிய முப்பு முறைகளும், உயிரை நிலைப்படுத்தக் கூடிய யோக முறைகளும் கூறப்பட்டுள்ளன. ஆகவே தமிழ்ச் சித்த நூல்களில் மக்கட்கு இன்றியமையாத வெல்லா உயர் மருந்து முறைகளும், சாதாரண முறைகளும் நிரம்பியுள்ளன வென்பது தெளிவு.

காசியரசன் மகனாகிய திவோதாசன் என்பவர் வைத்திய நூற்றேர்ச்சியால் "தன் வந்திரி" என்ற பட்டப் பெயர் அடைந்தனர். அவர் காலம் இற்றைக்கு 1500 ஆண்டுகளாகின்றன. சரகர் காலம் அதற்கு முந்தினதாதலால் கி. பி. முதல் நூற்றாண்டிற்குப் பின்னரே வடமொழி ஆயுள் வேதம்

என்னும் வைத்திய நூல்கள் தோன்றின. வடமொழி அட்டாங்க இருதயம் கி. பி. 900 லும், சாரங்கதர சங்கிதை கி. பி. 1300 லும், பாவப்பிரகாசம் 1600 லும் தோன்றின. சுசுருதரும் தங்வந்திரியார் காலத்தவரே. 1. நாடி, 2, கண், 3. நா, 4. உடல், 5. மலம், 6, நீர், 7. தொடல் (பரிசம்), 8. ஒலி என்ற இவற்றால் நோய்களையறியும் எண் வகைத்தேர்வுகளும், தேவுறையாகிய உலோகம், பாடாணம், சத்து, முதலியவற்றின் பற்பம், செந்தூரம், சுன்னம் முதலியவைகளும் வடமொழிச் சரகம் சுசுருதம் என்ற நூல்களில் கூறப்படவில்லை. மக்களுறை, சூருறைகள் மட்டும் அவற்றில் கூறப்பட்டுள்ளன.

வடமொழி ஆயுள்வேத மருந்துகள். 1. குடிநீர்வகை 12, 2. சூரணம், 3 வடிகா, (குளிகை), 4. மோதகம் (உண்டை), 5. கண்டபாகம் (லேகியம்), 6. பாவனம், 7. புடபாகம், 8. காஞ்சிகம் (புளிப்புப்பானம்), 9. திராவகம், 10. சொற்ப திராவகம். 11. சங்கதிராவகம், 12. ஆசவம் (காய்ச்சாத செயற்கள்), 13. அரிட்டம் (காய்ச்சிய செயற்கள்), 14. கிருதம் (நெய்), 15. தைலம், 16. வமனம், (வாந்தி), 17. விரேசனம் அல்லது பேதி, 18. வஸ்தி (பீச்சுமருந்து), 19. நசியம் (மூக்குறை), 20. தூமபானம் (புகை குடித்தல்), 21. கண்டுசம் (கொப்பளி மருந்து) முதலியனவே.

ஆயுள்வேத நூல்களில் சரகர், சுசுருதர், வாக்படர், மாதவகரர் இவர்கள் நாடியில் நோயறியும் விதத்தைச் சொல்லவில்லை. கி. பி. 1300 ல் தோன்றிய சாரங்கதரர் தான் முதலில் வடமொழியில் நாடிபார்க்கும் விதத்தைத் தமிழினின் றெடுத்தெழுதினர். பல சித்த மருந்துகளையும் மொழிபெயர்த் தெழுதினர்.

சித்த வைத்திய மருந்துகள் 66 வகைப்பட்டு ஒவ்வொன்றிலும் ஆயிரக் கணக்கான முறைகளிருக்கின்றன. அன்றியும் மிக்க வலியுடையனவும் தீராத நோய்களைத் தீர்ப்பனவுமாகிய மருந்துகள் பல ஆயிரக்கணக்கிலுள்ளன.

பிற்காலத்தவரான ஆதிமன், நித்திய நாதன், சந்திரசேனன், சோமதேவன், கோவிந்தன், நாகார்ச்சுனன் முதலியவர்

தமிழ்ச் சித்த முறைகளைத் தெரிந்து சில நூல்களெழுதினர். இரசாத்தின சமுச்சயமென்ற நூலும் பின்னலெழுதப்பட்டது.

ஆந்திரத்தில் கி. பி. 19-வது நூற்றாண்டில் நவநாத சித்த தீபிகை, சரபராஜீயம் என்ற நூல்கள் தமிழ்ச்சித்த முறைகள் பல தேர்ந்தெழுதப்பட்டுள்ளன.

கிரீக்தேச வைத்திய நூல்கள் கி. மு. 900 லும், ஆலோபாதி (எதிருறை) என்ற ஆங்கில வைத்தியம் கி. பி. 1755 லும், உரோமர் மருத்துவம் கி. பி. 200 லும், ஒமியோபாதி (ஒப்புறை) கி. பி. 1753 லும், யூநாநி மருத்துவம் கி. பி. 600 லும் தோன்றின.

திவான் பகதூர் L. D. சாமிக்கண்ணுப் பிள்ளையவர்கள் M.A., B.L., L.L.B., I.S.O. தமிழ் வைத்தியசங்க இரண்டாவது மகா நாட்டுத் தலைவராய்ச் செய்த பிரசங்கத்தில் "ஜயினர், பௌத்தர், கிரேக்கர், உரோமர் நூல்களைக் காட்டிலும், நம் மருத்துவ நூல் முந்தியதெனக்கருத இடமுண்டு."

"நாம் கையாடிய நூல்களெல்லா வற்றிலும் இம்மருத்துவ நூலிலேயே பிறருதவியின்றி மிகவுழைத்திருக்கிறோம்'' மருத்துவத்திலோ வென்றால் நாம் மற்ற நாடுகளிலிருந்து கைக்கொண்டது மிகவுங் கொஞ்சம், நாமேயுண்டு பண்ணியதும் மற்றவர்களுக்குப் பகுத் துரைத்ததும் அதிகம் என்றும், "பிரெஞ்சுக்காரரான குருமாரிடத்தில் ஒரு மருந்துப் புத்தகமுண்டு. அதில் இந்நாட்டு மருந்துகள் பெரும்பான்மையும், மேல் நாட்டு மருந்துகள் சிறுபான்மையுமாக விருப்பது மன்றி மேல் நாட்டு மருந்துச்சாலைகளும், மருத்துவர்களும் இல்லாத விடங்களிலெங்கும் விளையும் மூலிகைகளைக் கொண்டு நோய்களைப் போக்கும் பொருட்டுப் பல விதிகளும், வாகடங்களும் அடங்கியிருக்கின்றன. இவ்விதமான மருத்துவத்தை மேல் நாட்டாரான சில பிரஞ்சுக்காரர் கைப்பற்றி யிருப்பாரானல் இப்பரதகண்டமாகிய நம் நாட்டில் வந்து வசிக்கும் மேல் நாட்டவரும் சில காரணங்களால் மேல் நாட்டு மருத்துவத்தை நாடும் நமதுநாட்ட

வரும் நம் மருத்துவத்தை யேற்றுக் கொள்வதற்குத் தடையென்ன! முடிவாய் நான் கூறுவதெல்லாம் நம் தமிழ் வைத்தியத்திலுள்ள அரிய மருந்துகளனைத்தும் உலகிலுள்ள எல்லா நாட்டவருக்கும் பயன்படும்படி செய்யும் முயற்சியே சிறந்த தென்பதே'' என்றும் விளக்கியிருக்கிறார்.

எல்பின்ஸ்டன் என்ற ஆங்கில வைத்தியாசிரியர் இந்துக்கள் தான் முதன் முதல் உலோகங்களை வைத்தியத்தில் உபயோகப்படுத்தியவர்கள் இரசத்தையும் பாடாணத்தையும் உபயோகப்படுத்த அவர்களிட மிருந்தே நாம் கற்றுக்கொண்டோமென்று கூறியிருக்கிறார்.

ரோமன் கத்தோலி மதகுருவாகிய ரேவ ரேண்ட் பேஸ்சி (Rev. Beschi) என்பவர் தமிழ்மொழியையும் தமிழ் வைத்திய நூல்களையும் நன்றாயோதி "தேம்பாவணி'' என்ற தமிழ் காவியமொன்றும் வேறு சில நூல்களுமெழுதியதன்றிச் சித்தவைத்திய முறைகளை விளக்கும் பொருட்டு நசகாண்ட முதலிய தமிழ் வைத்திய நூல்களு மெழுதியிருக்கிறார். அவர் சித்த மார்க்கங்களைத் தேர்ந்து ஆயுளையும் வளர்த்துச் சமாதி யடைந்தார்.

80 வருஷங்களுக்கு முன் ஈஸ்ட் இண்டியாக் கம்பெனியிலிருந்த ஒரு ஆங்கில டாக்டர் தமிழ் அகஸ்தியர் பரிபூரணம் நானூறு முதலிய பல நூல்களிலிருந்து மொழி பெயர்த்து ஆங்கிலத்திலெழுதி அச்சிட்ட இரண்டு வால்யுமாகிய தமிழ் வைத்திய புத்தகம் சென்னை கவர்ன்மென்ட் கன்னிமாரா லைப்ரெரியில் இன்றும் காணலாம். இன்னும் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்யில் உலகத்திலுள்ள எல்லாத் தேச வைத்தியர்களும் தமிழ்ச்சித்த நூல்களிலிருந்தும் சித்த முறைகளைத் தெரிந்தவர்களிட மிருந்தும் லோகம், பாடாணங்களின் பற்ப செந்தூரங்களின் முறைகளைத் தெரிந்து கொண்டார்களென்று கருதற்குப் பலகாரணங்களிருக்கின்றன.

சித்தவைத்தியத்தில் மருந்துகளுக்கும் நோய்களுக்கும் உள்ள இயைபுகளை விளக்கும் பொருட்டு திருமந்திரம் 8000-ல்

இயைபுகள் எதிருறை (Alopathy), ஒப்புறை (Homeopathy), கலப்புறை என மூன்று விதங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.

"உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து"

என்ற திருக்குறட்படி நோயாளன், மருத்துவன், மருந்து, உழைச்செல்வான் என நாலு உறுப்புகளைத் தமிழ்ச்சித்த வைத்திய நூல்கள் கூறல், தற்காலமுள்ள ஆங்கில முறையை ஒத்திருக்கிறது.

"நோய்நாடி நோய்முத னாடியது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்" (திருக்குறள்)

என்று நோயை ஆராய்ந்து அதற்குக் காரணத்தை யாராய்ந்து அக்காரணத்தைத் தணிக்கும் வழியை யாராய்ந்து அது நிறைவேறச் செய்தல் மருந்து என்று நோயின் காரணத்தை விலக்கலால் நோய் நீங்குமென்று விளக்கப்படுகிறது.

## நோய்க்குக் காரணங்கள்.

உணவு, ஒழுக்கம், உயிர்த்தல், உழைப்புகளின் வேற்றுமை, புழுக்கள், கேட்ட வாயுக்கள் உட்செல்லல் முதலிய வற்றோடு சித்தர் நூல்களிற் கூறும் முக்கிய காரணங்கள் வாத பித்த கவங்களின் விகாரங்கள், 1. உயிர்க்கால் (பிராணவாயு), 2. ஒலிக்கால் (உதானவாயு), 3. செயற் கால் (வியானவாயு), 4. செரிகால் (சமானவாயு), 5. மலக்கால் (அபானவாயு), முதலிய வாயுக்களின் விகாரங்கள், 1. சாறம் (இரசம்), 2. செந்நீர் (இரத்தம்), 3 ஊன் (மாம்சம்), 4. கொழுப்பு (மேதசு), 5. என்பு (அஸ்தி), 6. மூளை (மச்சை) 7. வெண்ணீர் (சுக்கிலம்) ஆகிய தாதுக்களின் விகாரங்கள் மக்களுடலிலுள்ள உலோகங்களின் குறைவு முதலியனவும் ஆம்.

மனிதன் உடலில் இரத்தத்தில் 1. இரும்புச்சத்தும், மயிரில் 2. செம்புச்சத்தும், மூளையில் 3. தங்கச் சத்தும், எலும்புகளில் 4. வங்கச்சத்தும், நரம்புகளில் 5. வெள்ளிச் சத்தும், உயிர்ப்பில் 6. சூதச் சத்தும் இருக்கின்றன. இரத்தத்தில் இரும்புச் சத்துக் குறைந்தால் இரும்பைக் கொடுத்து நிறைக்கில் அந்நோய் நீங்கு

மென்று ஆலொபாதிக் வைத்தியர் கண்டு பிடித்துக் கொடுத்து வருகின்றனர்.

ஆனல் அவர் அதன் களிம்பு நீக்கி மருந்து செய்யாமையால் இரும்பு மருந்து சிலநாட் சாப்பிட்டவுடன் மலங்கறுத்துக் களிம்பு தோன்றுகிறது. அதிக நாட் கொடுத்தால் சில தீங்குகளுஞ் செய்கின்றது. சித்த முறையிற் செய்யப்பட்ட அயச் செந்தூரப் பற்பங்கள் எத்தனை நாட் சாப்பிட்டாலும் களிம்பின்மையால் மலங்கறுக்காது வேறு தீமையுஞ் செய்யாது. ஆதலால் பலநோய்களைப் போக்குதற்கு உலோகச் சத்துள்ள மருந்துகள் அவசியம் வேண்டியிருப்பதால் சித்த வைத்திய முறைப் பற்ப செந்தூரங்கள் இன்றி யமையாதனவாம். மூலிகைகளிலும் உலோகச் சத்துள்ளன விருக்கின்றன. அவற்றையும் சித்த வைத்திய நூல்களால்தான் அறியலாம். மேற்றிசையார் தங்க மருந்தால் பயனின்றென்று முற்காலத்தில் வெறுத்துக் கூறினர். இப்பொழுது பல மேற்றிசை வைத்தியர் தங்கம் இருமல் உளமாந்தை (Tuberculosiso consumption) முதலிய நோய்களைத் தீர்ப்பதாய்க் கண்டு பிடித்திருக்கின்றனர். இனிச் சிறிது காலத்தில் சித்த மருந்துகளாகிய உலோக மருந்துகளை யெல்லாம் மேற்றிசையாரும் உபயோகித்துப் பயனடைவித்தற் பொருட்டே சித்த வைத்தியக் கண்காட்சிகள் நடத்தப் படுகிறது. எகிப்து (Egypt) தேசத்திலிருந்த அரசர் பிணங்கள் ஆயிரக் கணக்கான வருடங்களுக்குக் கெடாமல் தைலம் நிறைத்து மேலினும் பூசலால் நிலைத்திருக்கிறது எல்லாருமறிந்த விஷயம்.

தமிழ்ச் சித்தர்கள் சத்துச் செந்தூரங்களையும், கற்ப மருந்துகளையும், மகா மூலிகைகளையும் சாப்பிடுவதால் 120 வருடம் சாதாரணமா யுயிர்த்திருக்கலாம். பத்தியம் யோகப் பயிற்சியுடன் கற்ப மருந்தினல் ஆயிரக் கணக்கான வருடங்கள் உயிரோடிருக்கலாமென்று கூறியிருக்கின்றனர். நீண்ட ஆயுள் பெற்றிருந்த பெரியோர்களிற் சிலரை நான் பார்த்து மிருக்கிறேன்.

அதற்குரிய யோகப் பயிற்சியுடைய பெரியோர் சிலர் நட்பு

மெனக் குண்டு, உடல் நிலைக்கச் செய்யச் சித்த மருந்துகளும், உயிர் நிலைக்கச் செய்ய யோகப் பயிற்சியும் இன்றி யமையாதன. இந்த நம்பிக்கையும் அநுபவமும் இந்தியாவில் நீண்ட காலமா யிருந்து வருகிறது. அதை நன்கு கூறுவன தமிழ்ச் சித்த நூல் கள் தான். இந்நம்பிக்கை இந்தியர் கூட்டுறவால் மேற்றிசை யிலும் பரவுகின்றது.

இந்து நேசன் 29-1-1 927-ல் 1000 ஆயிரம் வருட காலம் எப்படிப் பிழைக்கலாம்.

ஜெர்மனியின் தலைநகராகிய பெர்லின் (Berlin) என்னும் ஊரில் ஓர் ரசாயன சாஸ்திரி டி. ஹேபர் (D. Haber) என்பவர் 1000 வருஷங்கள் வரையில் ஒருவன் உயிரோடிருக்கலா மென் கிறார். எவ்வன காலத்தில் எப்படி என்ஜிம்ஸ் (Eng Zemes) உண்டாக்கப்பட்டனவோ அப்படியே கிழத்தனத்திலும் உண் டாக்கப்பட வேண்டிய சாதகங்களைத் தேகத்தினாலே தானே யுண்டாக்கினால் மூப்பில்லாமலே போய்விடும் என்றும் சிறு வய தில் வளர்ச்சிக்குரிய அணுக்கள் தேகத்தி லுண்டாவதுபோல முதிர்ந்த வயதிலும் உண்டாகச் செய்தால்;மூப்பு வராமல் வயது வளரும் எனவும் கூறுகின்றார்.

சித்தர் நூல்களும், 42 வயது வரை உலோகச் சத்துக் களும், ஜீவாணுக்களும், மக்களுடலில் உண்ணும் உணவினின்று தோன்றி யுடல் வளர்த்தல் போல முதிர்ந்த வயதிலும் அவை தோன்றும்படி உலோகச் சத்து மருந்துகளும், சீவ சத்துண் டாக்கு மருந்துகளு முட்கொண்டு ஆயுளை நீடித்துக் கொள் ளும்படி கூறுகின்றன.

சித்தர் நூல்களைப் படித்துத் தேர்ச்சியடையும் வைத்தியப் பாடசாலைகளும், மருந்தாராய்ச்சிச் சாலையும், கற்ப ஆராய்ச்சிச் சாலையும், வைத்து நடத்துந் தருமத்தை நம் நாட்டுக் கனவான் கள் மேற்கொண்டால் கல்விகொண்ட (வித்யாதன) பலமும், மருந்து தந்து நோய்களைப் போக்குந் தருமபலனும் அடைவ தோடு தாங்களும் நீண்ட ஆயுளும் கீர்த்தியும் பெறுவார்கள்.

கோவிற்பட்டி } வி. சிவஞான யோகி, அமைச்சர்,
சென்னை மாகாண சித்தவைத்தியசங்கம்.

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

## இறைவன் 4.

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

கடவுளைக் குறிக்கும் பண்டைத் தமிழ்ச் சொற்களில் இறைவன் என்னும் சொல் ஒன்று. இறைவன் என்ற சொல் இறு என்னும் பகுதி அடியாகப் பிறந்த சொல். இறு என்னும் பகுதி ஐ என்னும் தொழிற் பெயர் விகுதியுடன் சேர்ந்து இறை என்றாயிற்று. பொறு, நிறு, சிறு என்ற பகுதிகளிலிருந்து முறையே பொறை நிறை சிறை என்ற சொற்கள் வந்தனபோல இறு என்ற பகுதியிலிருந்து இறை என்ற சொல் வந்தது. இறு என்ற பகுதி, தல் என்ற தொழிற் பெயர் விகுதியுடன் சேர்ந்து இறுத்தல் (இறுதல் அல்ல) என்றாதலும் உண்டு; பொறு பொறுத்தல் என்றும், நிறு நிறுத்தல் என்றும், சிறு சிறுத்தல் என்றும் வருதல்போல இறு என்பதற்கு "தங்கு" என்று பொருள். இறை என்ற சொல் தங்குதல் என்னும் தொழிலைக் குறிக்கின்றது. அது தொழில் ஆகுபெயராய்த் தங்குதலை உடையவனை அல்லது தங்குகிறவனை உணர்த்துகிறது. இறை என்ற சொல்லினால் பண்டைத் தமிழ் மக்கள் அங்கு இங்கு என்னாதபடி எங்கும் தங்கியிருக்கிற கடவுளை உணர்த்தினார்கள். இறை என்னும் சொல் அன் என்னும் உயர்திணை ஆண்பால் படர்க்கை விகுதியுடன் சேர்ந்து, வகர உடம்படுமெய் பெற்று இறைவன் என்றாயிற்று. இறை என்ற சொல்லையும் இறைவன் என்ற சொல்லையும் வேற்றுமை யின்றிப் பண்டைத் தமிழ் மக்கள் கடவுளைக் குறிக்கும் பெயராக வழங்கி வந்தார்கள்.

2. இறைவன் என்ற சொல்லுக்கு "தங்குகிறவன்" என்ற வேர்ப் பொருளிலிருந்து (root meaning) பெறப்படுகிற கருத்துகளைக் கருதுவாம்.

3. தங்குகிறவன் என்றால் எங்கே தங்குகிறவன்? அல்லது எப்பொருள்களில் தங்குகிறவன்? என்ற வினா பிறக்கும். கடவு

ளைத் தவிர உள்ள பொருள்கள் உயிர்கள், (ஆன்மாக்கள்) ஆகிய உயிர்ப் பொருள்களும், மாயா உலகமாகிய உயிரில் பொருள் களும் ஆகும். எப்பொருள்களில் தங்குகிறவன் என்ற வினவுக்கு எல்லா உயிர்ப்பொருள்களிலும் எல்லா உயிரில் பொருள் களிலும் தங்குகிறவன் என்பது விடையாகும். பகலோன் (சூரியன்) தன்னுடைய கதிரொளியினால் உலகில் எங்கும் பகலில் நிறைந்திருத்தல் போலக் கடவுள் தன்னினின்றும் பிரியாதிருக் கின்ற அருளினால் எல்லா உயிர்ப் பொருள்களிலும் எல்லா உயி ரில் பொருள்களிலும் உயிர்க்கு உயிராய் அணுவுக்கு அணுவாய் நிறைந்திருக்கின்றான் என்பதே கடவுள் எல்லாப் பொருள்களி லும் தங்கி யிருக்கின்றான் என்று சொல்லுதலின் கருத்தாகும். கடவுள் இவ்வாறு எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருத்தலி னால் அவன் "எட்டு உருவினன்" என்றும் "ஏகனுமாகி அநே கனுமானவன்" என்றும் சைவ சமய நூல்களிற் கூறப்படு கின்றான்.

4. கடவுள் எல்லாப் பொருள்களிலும் தங்கி யிருத்தல் எதன்பொருட்டு என்ற வினா, ஆராய்ச்சி செய்கிறவனது உள்ளத் தில் உண்டாகும். அவன் உயிரில் பொருள்களில் தங்காவிட்டால் அப்பொருள்களில் ஒன்றும் இயங்காது. மண் கடினமாயிருந்து ஏனைய பூதங்கள் தரித்தற்கு இடங்கொடாது; நீர் குளிர்ச்சி யுடையதாய் ஏனைய பூதங்களைப் பதஞ் செய்யாது; தீ வெப்ப முடையதாய் எரியாது; வெளி (ஆகாயம்) ஏனைய பூதங்களில் இடை உண்டாகும்படி ஊடுருவி நின்று அவைகளை அசையச் செய்து தானும் அசையாது. இந்த ஐம்பெரும் பூதங்களும் தத் தமக்குரிய நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்னுங் குணங் களை உடையனவாகா. பூதங்கள் இவ்வாறு இயங்கித் தொழில் கள் நிகழாவிட்டால் உலகியல் நடவாது.

5. இனிக் கடவுள் உயிர்ப் பொருள்களில் தங்கி யிருத்தல் எதன்பொருட்டு என்று பார்ப்போம். உயிர்களெல்லாம் தத் தமக்குரிய நிலைக்கேற்ப அறிவு வேட்கை (இச்சை) செயல்களை உடையவைகள். உயிரில்லாத பொருள்களுக்கு இந்த அறிவு

வேட்கை செயல்கள் இல்லை. மக்கள் உயிர்கள் பிற உயிர்களைப் பார்க்கிலும் விளங்கிய அறிவு வேட்கை செயல்களை உடையவர்கள். மக்கள் தனித்தும் பெருங் கூட்டமாயும் சிறு கூட்டமாயும் உலகில் நிகழ்த்தும் நிகழ்ச்சிகளெல்லாம் அறிவு வேட்கை செயல்களாலேயே நடைபெறுகின்றன. இந்த அறிவு வேட்கை செயல்கள் எம்மட்டில் திருத்தமாயிருக்குமோ அம்மட்டில் அவைகளால் நடைபெறும் நிகழ்ச்சிகளும் திருத்தமாயிருக்கும். கடவுள் உயிர்ப்பொருள்களிடத்தில் தங்கி யிருக்காவிட்டால் மக்கள் உயிர்களிடத்திலும் பிற உயிர்களிடத்திலும் அறிவு வேட்கை செயல்கள் நிகழா. அவ்வாறாயின் அவர்களால் உலகில் ஒரு தொழிலும் நிகழாது.

6. கடவுள் எல்லா உயிர்ப் பொருள்களிலும் ஒப்பத் தங்கி யிருக்கின்றான் என்றால் ஆறறிவுடைய மக்களுயிர்களிலுங் கூட வேறுபாடான அறிவு வேட்கை செயல்கள் என் காணப்படுகின்றன? என்னும் கேள்வி ஆராய்ச்சி செய்கிறவனுடைய உள்ளத்தில் உண்டாகும். இக்கேள்விக்குச் சுருக்க விடை கூறுதும். எல்லா உயிர்களுக்கும் அநாதியே ஆணவமல மறைப்பு உண்டு. அந்த மல மறைப்பினால் உயிர்களுக்கு அறிவு வேட்கை செயல்கள் விளங்குதலில்லை. மல மறைப்பு நீக்கத்துக்காகவே உயிர்கள் உடல் முதலிய கருவிகளைப் பெற்று அக்கருவிகளினுடைய உதவியால் ஏகதேசமாய் அறிவு வேட்கை செயல்கள் விளக்கம் அடைந்து வினை செய்து உலகில் வாழ்ந்து வருகின்றன. ஆதலின், மக்கள் தாங்கள் உலக வாழ்வில் அடைந்த அனுபவத்திற்குத் தக்கவாறு அறிவு வேட்கை செயல்களினது ஏகதேச விளக்கத்தைப் பெறுகின்றார்கள். வினை நீங்கிய மக்கள் முழுமையும் அறிவு வேட்கை செயல்களினது விளக்கம் பெறுகின்றார்கள்.

7. மேலே கூறியபடி கடவுள் எல்லா உயிர்ப் பொருள்களிலும் உயிரில் பொருள்களிலும் தங்கியிருந்தாலும் அவன் அப்பொருள்களில் அடங்காதவனாய் அவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்குகிறவன். எல்லா உயிர்ப்பொருள்களும் உயிரில் பொருள்களும் கடவுளிடத்தில் அடங்கும் தன்மையை உடை

யன. சிலர் கூறுகிறபடி கடவுள் உயிர்ப்பொருளாக ஆவது உயிரில் பொருள்களாக ஆவது ஆகமாட்டான்.

8. கடவுள் எல்லா உயிர்களிடத்திலும் வியாபகமாய் நிறைந்திருக்கும் தன்மையினாலும் உயிர்கள் கடவுளிடத்தில் வியாப்பியமாய் அடங்கி யிருக்கும் தன்மையினாலும் இருவேறு உயிர்ப் பொருள்களுக்கும் உளதாகிய தொடர்பு அத்துவிதம் (இரண்டற நிற்றல்) என்று கூறப்படும். இந்த அத்துவிதத் தொடர்பு பற்றிக் கடவுள் எல்லா உயிர்களையும் அவைகள் தன்னை அறியாதிருக்கும் பொழுது பொதுவாயும், அவைகள் தன்னை அறியும் பொழுது சிறப்பாயும் ஆளுகை செய்து தனக்கென ஒன்றுமின்றி அவைகளுக் கேற்ற நலனை எப்பொழுதும் ஒழிவின்றிச் செய்து கொண்டே வருகின்றான். உலக வாழ்க்கையில் அரசன் கடவுளுடைய பதிலாளாய் அவனுடைய குடிகளை அவர்கள் நலத்தின் பொருட்டே ஆளுகை செய்து வருகிறவனாதலின் அரசனும் இறைவன் என்று பண்டைத் தமிழ் நூல் வழக்கில் கூறப்படுகின்றான்.

9. "முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்" என்ற குறளில் இறை என்ற சொல் கடவுளையும்;

"இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்"

என்ற குறளில் இறை என்ற சொல் அரசனையும் குறித்தல் காண்க.

---

## திருக்கோணமலை

# த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள்

### சரித்திரச் சுருக்கம்

கனகசுந்தரம் பிள்ளையவர்கள், திருமூலநாயனாரால் சிவ பூமியென்று கூறப்பெற்ற பண்டைச் செந்தமிழ்த்தேயமாகிய ஈழமண்டலத்திலே, தேவாரம் பெற்ற சிவத்தலமாகிய திருக் கோணமலையிலே, வேளாளர் குலத்திலே, ருதிரோற்காரி ஆவணிமீ உ௬ௗ (கிறிஸ்தாப்தம் ௧அ௬௩) கல்வி யறிவொழுக் கங்களிற் சிறந்த தம்பி முத்துப்பிள்ளை என்பாருக்கு அருந்தவப் புதல்வராய்ப் பிறந்தார்கள். சில காலம் சிற்றார் உயர்தர பாடசாலையில் பிரதமாசிரியராகவும், சைதாப்பேட்டை ஆசிரிய கல்லூரியில் ஆங்கில போதகாசிரியராகவும் இருந்து, தமிழ்ப் புலமையிலும் சிறந்து, தத்தைவிடுதூது, மோகனாங்கி முதலிய அரிய நூல்களியற்றி உலகிற் குபகரித்தவராகிய சிவபதமடைந்த ஸ்ரீமாந். த. சரவணமுத்துப்பிள்ளை பீ. ஏ. என்பார் இவர்களுக் குச் சகோதரராவர். கனகசுந்தரம் பிள்ளையவர்கள், பிள்ளை மையில், திருக்கோணமலையிலிருந்த அறிஞர்களாகிய ஸ்ரீ கதிரை வேற் பிள்ளை, ஸ்ரீ கணேச பண்டிதர் என்பாரிடம் தமிழிலக்கிய இலக்கணங்களும், ஆங்கிலமும் கற்றுணர்ந்து, கல்வியிற்பேரவா வும், நுண்மதியுமுடையராய்ப் பதினான்கு வயதளவில் திருவாத வூரர் புராணம் மறைசையந்தாதி முதலிய நூல்களுக்குப் பொருள் கூறும் ஆற்றலுடையவர்களா யிருந்தார்கள். ௧அஅ0-ம் ஆண்டில் சென்னைமாநகர் சென்று முதலில் செங்கல்வராய நாய்க்கர் பாடசாலையிற் கற்று, மத்திய பாடசாலைப் பரீட்சை யில் சித்தி யெய்தினார்கள். பின், பச்சையப்பன் காலேஜில் எப். ஏ. வகுப்பிலும், பிரசிடென்சி காலேஜில் பீ. ஏ. வகுப்பி லும் சித்தியெய்தியமையோடு, பீ. ஏ. வகுப்பில் தத்துவ சாஸ் திரத்திலும் தமிழிலும் விசேஷசித்தி யடைந்தமை காரணமாக மிகச் சிறந்த பரிசுகளும் பெற்றார்கள். கல்லூரிப் பிரதமாசிரி யர்களும், மற்றைய ஆசிரியர்களும், அறிவொழுக்கங் காரண

மாக இவர்களிடத்து மிக்க பிரீதியுடையவர்களாயிருந்தார்கள். அதன்பின் பிள்ளையவர்கள் அரசாட்சியாரது வித்தியாபிவிருத்தி நிலயத்தில் உத்தியோகம் பெற்று, அதனை மிக்க திறமையோடு முறை வழுவாது நடாத்தி வந்தார்கள். சிலகாலஞ் சென்றபின் இராசாங்கலேக நிலயத்தில் உத்தியோக மாற்றம் பெற்று, அந்நிலயத்திற்றானே வித்தியாபிவிருத்தி நிலய சம்பந்தமான காரியங்களுக்கு அத்தியட்சர்களுமாயினார்கள். யாழ்ப்பாணத்துத் தெல்லிபம்பதிவாசரும், கிராமக்கோட்டு நீதிபதியுமாகிய ஸ்ரீமாந். சிதம்பரநாத முதலியார் புதல்வியாகிய சுந்தரம் என்னும் பெண்மணியை விவாகஞ்செய்து அறநெறிவழாது இல்லறமோம்பித், திருவாளர்களாகிய இராசராசன் பீ.ஏ.; இராஜசேகரன் பீ.ஏ. (ஹானர்ஸ்), இராசேசுவரன், இராசமார்த்தாண்டன் என்னும் புதல்வர்களையும், செல்வநாயகி என்னும் புதல்வியையும் பெற்று மகிழ்வுற்றார்கள். இப்புதல்வர்கள் தங்கள் அரும்பெறற்றந்தையார்க்குளவாகிய சீலமெல்லாம் இனிதமையப்பெற்று மன்னுயிர்க்கினியராய், "தக்கார் தகவில ரென்பதவரவ ரெச்சத்தாற் காணப்படும்" என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியம் புதுக்குவது காணும் அறிஞரெல்லாம் "நீவிர் பல சிறப்புக்களும் பெற்று இனிது வாழ்க" என்று இவர்களுக்கு ஆசிகூறி, இறைவனருளை வேண்டி நிற்பதுகண்டு மகிழ்கின்றோம். இவர்கள் புதல்வியார் சென்னைப் பிரஸிடென்ஸித் தபாலாபீசுத் தலைவராயிருந்து தேகவியோகமடைந்த ஸ்ரீமாந் ராவ் பகதூர் க. வைத்தியலிங்கம் பிள்ளையவர்கள் சியேட்ட புத்திரராகிய ஸ்ரீ இரங்கநாதன் என்பாரை விவாகஞ்செய்து, ஆங்கிலமுஞ் செந்தமிழும் கற்றுணர்ந்து அறிவொழுக்கங்களிற் சிறந்தவராய்ப் பல சிறப்புக்களோடும் வாழ்கின்றனர். பிள்ளையவர்களது மனைவியார் பல வருடங்களின் முன், தமது இருபத்தெட்டாவது வயதில், தேகவியோகமாயினர். அஃது பிள்ளையவர்களுக்கும், குழந்தைகளுக்கும் பெருந்துயர் தருவதாயிற்று. பிள்ளையவர்கள் தங்கள் பிள்ளைகளை அன்புடன் வளர்த்துக் கல்வி யறிவொழுக்கங்களாற் சிறப்புறுவித்து அவையத்து முந்தியிருப்பச் செய்த திறன் வியக்கற்பாலது.

கனகசுந்தரம் பிள்ளையவர்கள் தங்கள் உத்தியோகக் கடமைகள் ஒழிந்த மற்றைய காலங்களிலெல்லாம், பழந்தமிழ் நூல்களையும், வடமொழி நூல்களையும் ஆராய்தலையே பெருங்கடனாகக்கொண்டு ஒழிவின்றி உழைத்து வந்தார்கள். சென்னையிலிருந்த வித்வான் இராசகோபாலப் பிள்ளையவர்கள் உதவிகொண்டு கம்பராமாயணத்திற் சில பாகங்களையும், வேறு சில நூல்களையும் மிக நுண்ணிதாக ஆராய்ந்து கொண்டார்கள். ஏனைய நூல்களையெல்லாம் தாங்களாகவே இடைவிடாது கற்றுணர்ந்தார்கள். தொல்காப்பியத்தையும் சங்ககாலத்து இலக்கியங்களையும் ஏட்டுப்பிரதிகள் பலவற்றோடு ஒப்பு நோக்கி நுண்ணிதாக ஆராய்ந்து கொண்டார்கள். இந்நூல்களிலுள்ள உண்மைப் பாடங்களும், நுண்பொருளுங் கண்டறிதலில் தமிழ் நாட்டில் ஒப்புயர்வின்றி விளங்கினார்கள். இவர்களாற் பிள்ளைமையிலும் பிற்காலத்தும் பாடப்பட்ட சில செய்யுட்கள் அவ்வக்காலங்களில் வெளியிடப்பட்டுள்ளன. அவை பண்டைச் சான்றோர் செய்யுட்கள்போல ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் கொண்டுள்ளன. பிள்ளையவர்கள் தாங்கள் அரிதிற் கற்றுணர்ந்த தமிழ்க்கல்வியைப் பிறர்க்கும் பயன்படச் செய்வான் கருதிச் சிறிதும் சிரமம்பாராதும் கைம்மாறு கருதாதும் பிறரியற்றிய நூலுரைகளுக்கு இன்றியமையாத் துணைபுரிந்தும், அவற்றைப் பரிசோதித்துத் திருத்திக் கொடுத்தும், பண்டிதர் பலர்க்கு நூலுரைகளில் நேர்ந்த ஐயங்களை நேராகவும், கடிதவாயிலாகவும் தெளிவித்தும் பேருதவி புரிந்து வந்தமையோடு, ஆங்கிலத்திலும் பீ. ஏ. பரீட்சைக்காகக் கற்ற பலர்க்குப் பல நூல்களிலும் நேர்ந்த ஐயங்களைத் தெளிவித்தும் உதவி புரிந்து வந்தார்கள். ஆறுமுக நாவலரவர்கள் செந்தமிழ் வளர்ச்சி கருதிப் பரோபகாரமாகத் தாபித்த வித்தியாநுபாலன யந்திரசாலையிற் பிரகடனமாகும் புத்தகங்களிலுள்ள தாலமுத்திரித வழுக்களையும் பிறவற்றையும் நெடுங்காலமாகத் திருத்தஞ்செய்து உபகரித்து வந்தார்கள். அம்மட்டோ! தமிழ் நாட்டில் இவர்கள் காலத்திருந்த புலவர்களுள் கல்வி விஷயத்தில் இவர்களது இன்றியமையாப் பேருதவியைப் பெறாதவர்கள் இல்லையெனக்

கூறினும் அஃது ஒரு சிறிதும் புனைந்துரையாகாது. "கைம் மாறுவேண்டா கடப்பாடு மாரிமாட் டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்பது பொய்யா மொழியன்றோ! சிவபதமடைந்த வித்வச் சிகாமணிகளாகிய சி. வை. தாமோதரம் பிள்ளை, திரு வனந்தச் சுந்தரம் பிள்ளை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் முதலிய பலர் தாம் தாம் பதிப்பித்தனவும், இயற்றி வெளியிட் டனவுமாகிய பற்பல நூலுரைகட்கெல்லாம், பிள்ளையவர்களது பேருதவி இன்றியமையாததாயிற்று. நாராயணசாமி ஐயரவர்க ளது நற்றிணையுரையை, அவர்களிறந்த பின்னும் பிள்ளையவர் களே பரிசோதித்து அச்சிடுவிக்க வேண்டியவர்களானார்கள். பண்டிதர். நா. கதிரைவேற் பிள்ளை முதலிய சிலர் இவர்களிடம் தொல்காப்பியத்தைக் கற்றுணர்ந்து கொண்டனர் என்பர். சென்னையிலும் பிறவிடங்களிலுமுள்ள இப்பொழுதைப் புலவ ருள்ளும் பல்லோர் இவர்களிடம் கல்வி விஷயமாக இன்றி யமையா உதவிகளைப் பெற்றோரும், நூலுரைகளைக் கற்றறிந் தோருமாவர். மஹா மஹோபாத்தியாயர் ஸ்ரீமத் சாமிநாதைய ரவர்கள் தாங்கள் வெளியிட்ட நூலுரைகளுக்கு, இடையிடையே பிள்ளையவர்களையும் உசாத்துணைவர்களாகக் கொண்டுள்ளார் கள். ஸ்ரீமத் அநவரதவிநாயகம் பிள்ளையவர்கள், ஸ்ரீமத் நமச்சி வாய முதலியாரவர்கள், ஸ்ரீமத் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் என்பவர்களும் தாங்கள் தாங்கள் வெளியிட்ட நூலுரைகளுக் குப் பிள்ளையவர்களது இன்றியமையாப் பேருதவியைப் பெரி தும் பெற்றுள்ளார்கள். பிள்ளையவர்களது வடநூலுணர்ச்சி மாண்பையும் மொழி பெயர்க்கும் ஆற்றலையும், ஸ்ரீ பண்டித நடேச சாஸ்திரியார் அவர்களுக்குப் பின் இவர்களால் மொழி பெயர்த்துப் பிரகடனஞ் செய்யப்பட்ட வால்மீகி ராமாயணத் துக் கிஷ்கிந்த காண்டப் பாகமும் சுந்தர காண்டமும் காட்டும். இலக்கிய இலக்கண நூலுணர்ச்சி வன்மையையும் ஆராய்ச்சித் திறனையும் பிள்ளையவர்களாலும் அவர்களது இன்றியமையாப் பேருதவிகொண்டு பிறராலும் வெளியிடப்பட்ட அரிய நூல் களும், "யாப்பிலக்கணம்" "திருவள்ளுவர்" "இராமாயணம்" முதலாக மாசிகசங்கைகளிலும் பிறபத்திரிகைகளிலும் பிள்ளை

யவர்களால் எழுதப்பட்ட அரிய விஷயங்களும் காட்டும். சமய நூலுணர்ச்சியை இவர்களாற் பரிசோதித்துத் தூலமுத்திரித வழுக்களும் பிறவுமாக நுண்ணிதிணய்ந்து திருத்தப்பட்ட சிவ ஞானபாடியம், திருமந்திரம் முதலிய நூல்கள் காட்டும்.

பிள்ளையவர்கள் நெடுங்காலமாகச் சென்னைச் சர்வ கலா சாலைப் பரீட்சகருள் ஒருவராயிருந்தமையோடு நான்கு வருட காலமாகப் பரீட்சக சங்கத்துக்குத் தலைவர்களாகவும் இருந்தார்கள். அன்றியும் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பரீட்சகருள் ஒருவரரகவும் சென்னைக் கிறிஸ்தியன் காலேஜிலும் பச்சையப்பன் காலேஜிலும் தமிழ்த் தலைமைப் புலவர்களாகவும் இருந்தார்கள். சாண்டலர்துரை என்பாரால் அரசினராஞ்ஞைப்படி நடத்தப்பட்டுவரும் மிகப் பெரிய தமிழகராதிக்கும் சிலகாலம் உதவிப் பதிப்பாசிரியர்களாக இருந்தார்கள். இவ்வகராதி சென்னை யரசினரால் பெருந்தொகைப் பொருள் கொடுத்து நடாத்துவிக்கப்படுகின்றது. இதனை ஏற்றவாறு சிறப்புறச் செய்து முடித்தற்கு ஆங்கில நூலுணர்ச்சியும் மிகப் பெரிய தமிழறிவும் சமஸ்கிருத நூலுணர்ச்சியும் ஒருங்கு கைவரப் பெற்ற பிள்ளையவர்களைப் போன்ற ஒருவர் தமிழ்நாடு முழுவதிலும் கிடைப்பதரிது என்பது ஆபாலகோபாலப் பிரசித்தம். அங்ஙனமாகவும், தமிழணங்கும், அரசினரும் புரிந்த தவக்குறையே போலும்! பிள்ளையவர்கள் ஒரு வருடகாலத்துள் இவ்வேலையினின்று விலகிக்கொண்டார்கள். எவ்வேலையைக் கையேற்பினும் "செய்வன திருந்தச்செய்" என்றவாறு அதனைச் சிறப்புறச் செய்துமுடித்தலும், பொருள் வருவாயையும்பொய்ப்புகழையுமே கருதி முகமன் வார்த்தைகள்கூறி நடுவுநிலைமை குன்றாமையும் நம்பிள்ளையவர்களுக்கு இயல்பாகும். "கேடும் பெருக்கமுமில்லல்ல நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கணி" என்பது தமிழ்மறை. பல வருடகாலமாகப் பிள்ளையவர்கள் "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்றவாறு வடமொழி தென்மொழிகளில் வல்ல கவிஞர் சிகாமணியாகிய சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர் அவர்களுக்கு ஆப்த நண்பினர்களும், நல்விஷயத்தில்

உசாத்துணைவர்களுமாகி அவர்களோடு சேர்ந்து நம்பியகப் பொருளுக்கு ஓர் அரிய உரையை எழுதி வெளியிட்டும், கம்ப ராமாயணத்தைப் பிழையறப் பரிசோதித்துக் கூடிய மட்டில் ஏட்டுப்பிரதிகள் பலவற்றோடு ஒப்பு நோக்கிச் சுத்த பாடங் கண்டு முழுவதையும் அரும்பதவுரையோடு அச்சிடமுயன்று, முதலில் பாலகாண்டத்தை அவ்வாறு வெளியிட்டு முள்ளார்கள். இவ்வரும்பதவுரை கம்பசூத்திரத்து நுண்பொருள்களை நன்கு தெரித்துக் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெரும்பயன் தருவதா யமைந்துள்ளது. அயோத்தியா காண்டமும் அவ்வாறே பரி சோதித்துச் சுத்த பாடமாக்கப்பட்டும், அரும்பதவுரை பூர்த்தி யாக முன்னே, இவர்களிருவரும் ஒருவர்பின் ஒருவராகச் சென் றமையால், அது கடைபோக முடிந்து அச்சுவாகனமேற முடி யாததாயிற்று. இந்நூல் முழுவதும் இவ்வாறே இப்புலவர் திலகர்களாற் பரிசோதித்து வெளியிடப் பெறாமை கம்பநாடர் தவக்குறைவோ நம்மனோர் தவக்குறைவோ அறியகில்லேம். தமிழ் நாவலர் சரிதை யென்னும் நூலும் ஈழமண்டலத் தேவார முந் திருப்புகழும் என்னும் நூலும் வேறு சில நூல்களும் பிள்ளையவர்களால் குறிப்புரையோடு, அச்சிடப்பட்டனவாகும். பிள்ளையவர்கள் தொல்காப்பிய முழுவதையும் ஆராய்ந்து குறிப் புரை முதலியவற்றோடு அச்சிட நினைத்து ஏட்டுப்பிரதிகள் பல வற்றை வைத்து ஆராய்ந்துகொண் டிருந்தார்கள். தங்களறிவும் ஆராய்ச்சியும் மிகச் சிறிய வென்பதையும், அவைகொண்டு நூலுரைகளைப் பிழைபட வியற்றி வெளியிடுதல் அநீதி என்ப தையும் நோக்காது பொருள் வருவாயையும், பொய்ப்புகழை யுமே கருதி அவற்றை வெளியிடுவது நம்மவருட் பெரும்பாலர் இயல்பு. தக்க ஆராய்ச்சியின்றி அவ்வாறு செய்தல் நம்பிள்ளை யவர்கள் போன்ற அறிஞர்க்கு ஒருபோதும் கருத்தன்று. இத னால் பிள்ளையவர்கள் பெயர் பெரிய எழுத்திற் புத்தகமுகத்துக் காணப்படா தொழியினும் அத்தகைய புகழ்விரும்பப்படா தொழியினும், இவர்கள் காலத்தில் இவர்கள் உதவிகொண்டு பிரகடனமாகிய அருந்தமிழ் நூல்கள் பல என்பதிற் சிறிதும் ஆக்கேபமில்லை. "இனித்தமிழுக்கு வரம்புமில்லை; உரை கல்லு

மில்லை'' எனக் கூறப்பட்டதும் ஒரு சிறிதும் தவறுகாது. பிள்ளையவர்கள் அரசினர்பால் உபகாரச்சம்பளம் பெற்றிருந்த பிற்காலத்தில் தமிழிலக்கணவிலக்கிய வரலாற்றை நன்கு ஆராய்ந்து சர்வ கலாசாலையிற் பலர்க்கும் பயன்படுமாறு பிரசங்கிக்க வேண்டுமென்று அக்கலாசாலை அதிகாரிகளோடு ஒழுங்கு செய்திருந்தார்கள். அதனுல் எவ்வளவோ உண்மைகளும் தவறுகளும் வெளியாகுமென்று பலர் நம்பியிருந்தார்கள், இவர்கள் மரணம் காத்திராப்பிரகாரம் சடிதியில் நேர்ந்து விட்டமையால், அவ்வெண்ணம் நிறைவேற முடியாததாயிற்று. நெருநலுள ளொருவனின்றில்லை யென்னும் பெருமையுடைய இவ்வுலகியல் நோக்கித் திருவருளை நினைத்து ஒருவாற்ருன் அமைவதேயன்றி, இருகாற் பசுக்களாகிய நம்மவராற்றலால் ஆவது மொன்றுளதோ? தொல்காப்பிய முதலிய இலக்கணங்களை யெல்லாம் பல்காற்பயிலு முகத்தால், இக்காலத்து, அவற்றை ஒருவாறு உணர்ந்திருப்பார் ஒரு சிலருளராயினும், அவற்றை நுண்ணிதினுய்ந்துணர்ந்து பரோபகாரமே கருதிச்சிரமம் பாராட்டாது மாணவர்க்குரைத்து வந்தவர்கள், நம்பிள்ளை யவர்களே யென்பது அவர்கள்பால் அந்நூல்களிற் பெரும்பாகத்தைக் கற்றுணர்ந்துகொண்ட அம்மாணவர்கள் நன்கு தெளிந்த உண்மையாகும். தமிழணங்கும் ஆதார மற்றவளாயினுள். உலகத்தில் தமிழை வளர்க்கின்ரும் என்று கொடிகட்டிப் பிரசித்தம்செய்து புத்தகங்களைப் பிரகடனஞ் செய்வோரை உற்று நோக்கின் அவருட் பெரும்பாலார் தந்நயமொன்றையே கருதிப் பெரும் பொருளீட்டித் தமக்கும் தம்பெண்டிர் பிள்ளைகட்கும் இம்மைச் சுகமொன்றையே தேடிவைத்துச் செம்மாப்புற்ருெழிவாராகின்றனர். நம்பிள்ளையவர்களோ தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் விளங்கித் தம்பெயரையும் பிறவற்றையும் கருதாது, தமிழுக்காக உழைத்த பெருமாண்பும், அருமை பெருமையும் அவர்களோடு நன்கு பழகியோரே அறியவல்லுநர். "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்'' எனவும் "முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டாயாரே யழகுக்கழகு செய்வார்'' எனவும் வரும் ஆன்ருேர் வாக்குக்களும் ஈண்டு நோக்கற்பாலன. பிள்ளையவர்

களைப்போன்ற நற்குண நற்செய்கைகளிற் சிறந்த நல்லிசைப் புலவர்களை இத்தமிழுலகம் அடையுங்காலம் எக்காலமோ அறிய கில்லேம். கம்பநாடர் சீதாபிராட்டியின் அழகைக் குறித்துக் கூறுமிடத்து இப்பாவை தோன்றலால் "அழகெனு மதுவு மோரழகு பெற்றதே" எனப்புகழ்ந்து கூறியாங்கு, அறிவு, வாய்மை, அடக்கம், நடுவுநிலைமை முதலிய மன்னுயிர்க்கின்றி யமையாக் குணங்களெல்லாம் நம்பிள்ளையவர்களால் சிறப்புறு வனவாயின என ஒருகாற் புனைந்துரைப்பினும் அது குற்றமா காது. பொதுக்குணங்கள் இல்வழிச் சிறப்புக் குணங்களெல் லாம் நடிப்பு மாத்திரையே ஆவனவன்றி விழுப்பந்தருவனவாகா. இத்தகைய அருமை பெருமை வாய்ந்த புலவர் சிகாமணியாகிய பிள்ளையவர்கள் ஒழுக்க வரலாற்றினையும் நுண்மாணுழை புலத் தோடு கூடிய கல்வி மாண்பையும் அவற்றுள் ஒரு சிறிதும் அமையப்பெறுத யாமா கூறவல்லம்.

நேரிசை வெண்பா

செந்தமிழ்நூன் முற்றுமுணர் சீரார் புகழ்க்கனக
சுந்தரவேள் வாழ்க்கை துறந்ததனுற்—செந்தமிழாம்
மாதார நொந்து வருந்தினளே பாவலரும்
ஆதார மற்றனரே யாம்.

தொல்காப் பியமுதலாந் தொன்னூல் விழுப்பொருளும்
பல்காப் பியமும் பலர்க்கருள—வல்லவனுஞ்
சொல்லார் திறற்கனக சுந்தரன்போ லிவ்வுலகில்
நல்லா ருளரோ நமக்கு.

புத்திரர்கள் செவ்விகண்டுன் புந்திநிலை நன்குணர்ந்தேன்
துத்தியஞ்சேர் நற்கனக சுந்தரனே—எத்திறத்துந்
தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

---

# சூது

[காழி. சிவகண்ணுசாமி அவர்கள் B. A.]

பெரும் புகழ் படைத்த ஆல்பிரெட் மன்னர் ஒருநாள் இருபத்து நான்கு மணிகளில், எட்டு மணி நேரம் அரசுக் கடனாற்றியும், எட்டு மணி நேரம் இளைப்பாறியும், எட்டு மணி நேரம் உடற் பயிற்சியிற் செல வழித்தும் வந்ததாகக் கூறுவதுண்டு. அவர் ஓரரசரானமையின் உடற் பயிற்சியிற் செல வழித்து வந்த எட்டு மணி நேரத்திலுங்கூடப் பலதிறப்பட்ட உயர்ந்த நினைவுகளை நினைத்திருத்தல் கூடும். எனினும், அரசரே யன்றி ஏனையோர் யாவருக்குமே உடற் பயிற்சிக்கான கால வசதி யிருத்தல் இன்றியமையாததே. நாளொன்றிற்கு எட்டு மணி நேரம் அதிற் கழிப்பதென்பது மிகையெனக் கூறுறு ஞதாயினும், அவ்வாறு கழித்தற் குரிய நேரத்தையும், உடற் பயிற்சிக் குரிய சாதனத்தையும் நன்கு தேர்ந்து கொள்ளல் தலையாய கடனாகும். தேர்ந்து கொண்ட பயிற்சி வகை தானும் தனக்கும் பிறர்க்கும் எத்தகை யானும் இன்னா பயவாததாயும், உடல் நலத்திற்குக் காலத்தானே கேட்டை விளைவியாததாயும் இருத்தல் நேரிதாம். இத்துறை நோக்குங்கால், திறந்த வெளியிடங்களில் ஆடப்படுவதான விளையாட்டுகளே மிகவுஞ் சிறந்ததாம். என்னை ? அவையே உடல் நலத்தை யுலவாதளிப்பனவாயும், இரவானன்றிப் பகற்கண் விளையாடற் பாலனவாயும், வைகறைத் துயிலெழுந் தூய வழக்கத்தை யூட்டுவனவாயும் இருக்கின்றனவாகலின் காலசக்கரச் சுழற்சியின் பயனாய்த் தற்கால இளைஞர்கள் வயிற்றுப் பிழைப்பு நோக்கிப் பெரும் நகரங்களிலே வாழ்ந்து வருதலே இயற்கையாக மாறிவிட்டமையின் அவர்களுக்கு இத்தகைய புரையற்ற விளையாட்டுப் பயிற்சிகளிற் காலங்கழிக்க ஏற்ற வசதி யில்லா தொழிகின்றது. எனவே அவர்கள் பெரும்பாலும் புத்தகங்களுக்கும், ஆட்டக் கொட்டகைகளுக்கும், சூதரங்குகளுக்கும் இடையே காலத்தைக் கழிக்க வேண்டியவர்களாகின்றனர். இக் குறித்த மூன்றில் முன்னைய தொழிந்த பின்னையவிரண்டனுள் இரண்டாவதான

சூதாங்கே சூழும் வினையாகலின் அதுவே முதற்கண் அஞ்சி யொதுக்கற் பாலதாம்.

பிறர் பொருள் வெளவும் பேதைமையே யடிப்படையாகக் கொண்டதன்றோ சூது? வெளவும் பொருட்டு ஈடாக ஒன்றைக் கொடுத்தபின் பெற வேண்டும் என்பதோ அன்றி என்றேனும் கொடுத்தல் வேண்டும் என்ற நியதியோ அதன்கண் இல்லை. எனவே, சூது இயல்பாகவே தீயதென்றும் என்றென்றும் தன் வலைப்பட்டாரைத் தீய வழிக்கண்ணேயுய்க்குமென்றுங் கூறவும் வேண்டுமோ? சூதாடிச் சுகமுற்றான் என்று ஒருவனையும் இது காறுஞ் சுட்டிக் காட்டுதற்கில்லை; மற்று பொருள் கெடுத்துப் பொய் மேற்கொண்டு அருள் கெட்டு அல்லலுழக்கும் பலரையோ எளிதிற் காட்டலாம். என்னை, சூதென்ற ஒன்று என்றென்றும் பொருள் கருதியே யாடப்படுமாகலின், அரிதிற் பெறுங்காலத்தை வறிதே கழிப்பதன்றியும் நெறியல்லா நெறியிற் கழிக்கவும் ஒருப்படுவரோ நற்குடிப் பிறந்த இளைஞர்,

"ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு?"

இளைஞர்கள் இத்துறையிற் கழிக்குங் காலம் எத்துணையோ அத்துணையும் கொன்னே கழிந்ததாகவே கொள்ளல்வேண்டும். கற்பதினும், கற்றதை யெழுதுவதினும், இன்றேல் மறுநாட் காலை யெழுந்ததும் பணி யியற்றுவதைச் செம்மையாயியற்றற் கேற்றவாறு போதிய வளவு இளைப்பாறுவதினுங் கழிக்கப் படற்குரிய அருமைசேர்காலம் சூதென்னும் பேயினால் விழுங்கப் படுவதைக் காணின் யார்தான் கவலை கொள்ளார்? எனவே, சிறுமை பல செய்து சீரழிக்கும் இச்சூதை, வறுமையை யன்றிப் பெருமையை யளியா இச்சூதை இளைஞர்கள் தொத்து நோயைக் கண்டாலன்ன வெறுத் தொதுக்கி வாழ்வதே சால்புடைத்தாம்.

---

# கலங்கரை விளக்கம்

(திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி அவர்கள், B. A.)

கலிவிருத்தம்

1. ஓது செல்வமிக் கோங்கு சென்னையி
னீதி சாலை நிமிர்தரு சேட்சிமை
மீது நின்று மிளிர்ந்திருள் போழுபு
சோதி யொன்று சுழன்றொளிர் கின்றதால்.

2. அளக்க ரிற்செல வார்ந்துவங் கஃமெலாந்
துளக்க முற்றுத் துயரடை யாவணை
மளக்க ரும்புக ழாளர் கலங்கரை
விளக்க மென்னவொன் றிட்டனர் மேலைநாள்.

3. அன்ன வெண்ணங்கொண் டாக்கின ரேனுமஃ
தின்ன மும்பல வின்பய னல்குபு
மன்னு கிற்றன் மதிக்கு மெமதுள
முன்னி யுன்னி யுவகை சிறக்குமால்.

4. உலக மாந்தர்க் கொளியே யுயர்ந்ததென்
றிலகு முண்மை யினிது விளக்குபு
மலைக வின்றுயர் மாடத்து மீமிசைப்
பலக திர்த்திரள் பண்பிற் பரப்புமே.

5. ஆக்க மோங்குந மாங்கில மன்னவர்
தாக்கு தம்பிர தாபம் பகையிருள்
போக்கு தற்குப் பொருந்து மறிகுறி
யாக்கொள் நிற்ப தமைவுடைத் தேபரோ.

6. மன்ற மேறுபு வாய்மொழி கூறுநர்
நின்று தங்கொள்கை நேர்ந்து நிறுவுந
ரொன்று மெய்ம்மை யுணர விழையுந
ரென்றின் னோர்கட்கு மேனைய மக்கட்கும்.

7. கரவு செய்யலிர் கட்டுரை கூறுமி
னொருவன் றேவ னுளன்கண்டீ ரென்றுதன்
சிரநி வந்துயர் செவ்விய கோலெனும்
விரலிற் சுட்டி விளம்புதன் மானுமே.

8. மக்கட் கின்னுரை மாண்பின் வழங்குந
ரொக்க யாரு மொருங்குறக் கேட்டற்குத்
தக்க தோருயர் தானத்தின் மேலெழீஇத்
தொக்க தங்கைகள் சொல்லுழி நீட்டல் போல்.

9. வன்பு மாக்கள் வழிப்பட் டுழலுபு
துன்புற் றுரைத் துயர்களை நீதித்தா
யின்ப மீகுவ லென்வயிற் போதுதி
ரென்ப வட்போன் றிருங்கதிர் வீசுமால்.

10. கடமை யிற்பிறழ் கல்லார் பொதுளிவிண்
டடவு மாடத் தலைக்கண் விளக்கந்தான்
படமெ டுத்துயர் பாந்த ளரையன்றன்
சுடிகை மேவுஞ் சுடர்மணி போலுமே.

11. உம்பர் நோக்கி யொளிசெய்து சுற்றிவந்
திம்ப ரிவ்விளக் கெங்கணு மின்னலா
னம்ப னந்த நறுந்தமிழ் வேட்டவ
னெம்பி ரான்சடை யென்றலு மொக்குமே.

12. சுற்றி நின்று சுடர்க்கற்றை வீசலா
னுற்று நோக்குந ருள்ள மலர்த்தலான்
மற்றி ராப் பொழு தத்தின் வயங்கலான்
வெற்றி வேணியன் மேலொளிர் திங்களோ ?

13. ஒரும் போழ்தினி லுவ்விளக் கம்புடை
சாரும் பற்பஃ றனிமலை தானடுத்
தேரி யன்றுய ரின்னலஞ் சான்ற பொன்
மேரு மாமலை மேலொளி ரீசனோ ?

14. எண்ணு மிங்நக ரேயிவ் விளக்கமே
கண்ணி மாந்தரைக் காக்கும் கறைமிடற்
றண்ண லார்த மருள்கெழு மாவலக்
கண்ணெ ணுவிது கண்டுளம் பொங்குமால்.

15. இங்கி ருக்குமெ மின்றமிழ்ப் பாவலர்
தங்க ளுக்குத் தழைத்துவந் தெம்முள
மிங்கி தத்தி னெழுந்து குதித்துறப்
பொங்கு மாறு புகலுதற் பாலதே.

16. வென்றி மாப்படை வீரர் புரந்திட
நன்றிவ் வாங்கில ராச்சிய ஞாலத்தி
னென்று மென்றூழ் மறைகுத லில்லையா
மென்று கூற லியையு மியையுமே.

—ஞானபோதினி.

---

# சிவஞான போதக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள் B. A.]

முதலாவது சூத்திரம்

முதலாவது பகுதி

## இரண்டாவது அதிகரணம்

இரண்டாவது அதிகரணம் (கூறு) என்று ஒரு அதிகரணமாய் எடுக்கப்பட்டாலும் அது மூன்று பிரிவுகளை யுடையது. முதலாவது பிரிவு உலகம் உள்பொருள் என்பது.

2. சிலர் கூறுதல் போல உலகமானது மித்தை (பொய்) அல்லது இல்லாத பொருள் அல்ல. உள்ள பொருள் தோன்றுமே தவிர இல்லாத பொருள் தோன்றாது. இது "சற்காரிய வாதம்" என்று சைவ சித்தாந்தத்திற் கூறப்படும். தோன்றுதல் என்பது தூலமாய் (பருப்பொருளாய்) நமது கண்ணுக்குத் தெரியும்.

படி காரியப்படுதல். இவ்வாறு காரியப்படுதலானது அந்தப் பொருளுடைய சூக்குமநிலை (நுண்ணிய நிலை) யிலிருந்து உண்டாகுமே அன்றி ஒன்றுமில்லாத சூனியப் பொருளிலிருந்து உண்டாகாது. இது நமக்கு உலகில் கண்கூடான (பிரத்தியக்ஷமான) பழக்க அறிவு (அனுபவ அறிவு). எடுத்துக் காட்டாக நாம் கண்ணுக்குத் தெரிகிற ஒரு பொருளை எடுத்துக் கொண்டால் ஒரு சிறிய ஆலம் விதையிலிருந்து ஒரு பெரிய ஆலமரம் உண்டாகிறதைப் பார்க்கிறோம். ஒரு பெரிய ஆலமரமாயுண்டாகிற சத்தியானது அதனுடைய சிறிய விதைக்குள் அடங்கி யிருப்பதினாலேதான் உள்ளே அடங்கி யிருக்கிற சத்தியானது காலக்கழிவில் ஒரு பெரிய ஆலமரமாகின்றது. மேற்கு நாட்டு இயற்கை ஆராய்ச்சியாளர்கள் அடங்கி யிருக்கிற சத்தியை (Latent Energy) என்றும், வெளிப்பட்ட சத்தியை (Patent Energy) என்றும் கூறுவார்கள். அதுபோல நாம் பெரிதாய்க் காணுகிற இந்தச் சடஉலகம் சத்திக் கூட்டமாய் (சத்தி சமூகமாய்) ஒடுங்கியிருக்கிற நுண்ணியமாயை (Primordial matter) என்கிற அநாதி நித்தியப் பொருளிலிருந்து கடவுளுடைய நினைப்பினால் (சங்கற்பத்தினால்) உண்டாகிறது.

3. இனி அவ்வாறு உள்பொருளாய் நாம் காணுகிற உலகமானது அதனைச் செய்வான் ஒருவனையின்றி அமையாது என்பது இந்த அதிகரணத்திலுள்ள இரண்டாவது பிரிவு. நமது பழக்க அறிவில் நாற்காலி போன்ற யாதாமொரு செயற்கைப் பொருளைப் பார்த்தால் அதனை ஒருவன் செய்த பொழுது நாம் பார்க்கா விட்டாலும் அதனைத் தச்சன் ஒருவன் செய்திருத்தல் வேண்டுமென்று அறிகிறோம். அந்நாற்காலியில் நாம் காணுகிற வேலைப் பாட்டிலிருந்து அத்தச்சனது செய்தொழிற்றிறனையும் அறிகிறோம். அதுபோல நாம் உள்பொருளாய்க் காணுகிற பருப்பொருள் உலகத்திலிருந்து அதனைச் செய்த கடவுள் ஒருவன் உண்டு என்று அறிதலுமல்லாமல் அக்கடவுளது ஆற்றலையும் ஒருவாறு அறிகிறோம்.

4. இனி, எந்த ஒரு பொருளினிடத்து உலகம் அழியும்

பொழுது அடங்கி ஒடுங்குமோ அந்தப் பொருளினிடத்தி லிருந்தே ஒடுங்கியவாறே மீளவும் தோன்றும் என்பது இரண்டாவது அதிகரணத்திலுள்ள மூன்ருவது பிரிவு. உலகம் தோன்றுதல் என்பது சற்காரிய வாதத்தின்படி அதனுடைய நுண்ணிய நிலை (சூக்கும நிலை) யானது திண்ணிய நிலை (தூலநிலை) யாக மாறுதல் என்று நாம் மேலே கண்டோம். அவ்வாறே அதனுடைய திண்ணிய நிலை (தூல நிலை) நுண்ணிய நிலை (சூக்கும நிலை) யாக மாறுதலே அது அழியுங்கால் ஒடுங்கும் நிலையாகும். உலகம் அழிந்து மீளவும் தோன்றும் பொழுது அது இந்த ஒடுங்கிய நிலையாகிய நுண்ணிய நிலையிலிருந்தே வெளிப்பட்ட நிலையாகிய திண்ணியநிலை (தூலநிலை)யை அடைதல் வேண்டும். இவ்வாறு உலகம் ஒடுங்குதற்கு ஒரு நிலையான இடம் வேண்டும். உலகம் எந்தப் பொருளில் ஒடுங்குமோ அது மாயை யென்று கூறப்படும். இந்த மாயையானது மூன்று அநாதி நித்தியப் பொருள்களில் (காலங்கடந்த நிலையான பொருள்களில்) ஒன்று ஆகும். ஆகவே உலகம் மாயையிலிருந்து தோன்றி மாயையில் ஒடுங்கும் என்பது பெறப்பட்டது.

5. இனி மாயை உயிரில்லாப் பொருளாகலின் அது ஒரு உயிர்ப்பொருளின் தொழிலால் அன்றித் தானே உலகமாகத் தோன்றமாட்டாது. மண் ஒரு குயவனையின்றித் தானுக ஒரு குடம் ஆகமாட்டாதது போல உலகத் தோற்றமாகிய தொழிலிலிருந்து அத்தொழிலைச் செய்தவன் ஒருவன் இருத்தல் வேண்டும் என்றும், செய்வானின்றிச் செய்வினை இல்லை என்றும், இரண்டாவது பிரிவிற் கூறிய முறைமைப்படி நாம் அறிகிருேம். அவ்வாறு உலகத்தைத் தோன்றும்படி செய்த ஆற்றலுடைய ஒருவன் தான் படைப்புக் கடவுள் ஆவான். உலகம் தோன்றின பின் அது நீடித்த காலம் நிலைத்திருத்தலால் அவ்வாறு அது நீடித்திருத்தலைச் செய்கிற ஆற்றலுடைய ஒருவன் இருத்தல் வேண்டும். அவன்தான் காப்புக்கடவுள் ஆவான். அது போலவே உலகம் அழிந்து போதற்கு அந்த அழித்தலைச் செய்யவல்ல ஒருவன் இருத்தல் வேண்டும். அவன்தான்

அழித்தற்கடவுள் (சங்காரக் கடவுள்) ஆவான். ஆகவே உலகம் தோன்றல், நிலைத்தல், அழிதல் என்னும் மூன்று தொழில்கள் உடைமைபற்றிச் செய்வானின்றிச் செய்தொழி லின்மையால் அம்முத்தொழில்களையுஞ் செய்தற்குப் படைப்புக் கடவுள், காப்புக்கடவுள், அழித்தற் கடவுள் என மூன்று கடவுளர் இருத்தல் வேண்டும் என்று கருதல் அளவையாலே நாம் காண்கிறோம். இனி அந்த மூன்று கடவுளரும் ஒருவருக்கொருவர் தொடர்பு உடையவர்களா? அல்லவா? தொடர்புடையவர்களானல் எவ்வாறு தொடர்பு உடையவர்கள்? என்னும் கேள்விகள் அறிவானொருவன் உள்ளத்தில் உண்டாகும். மூன்று தொழில்களும் உலகமாகிய ஒரு பொருளைப்பற்றி ஒரு குறித்த பயனைத் தரக்கூடியனவாக நிகழ்தலால் ஒன்றுக் கொன்று தொடர்பு உடையவைகளாயிருத்தல் வேண்டும்; ஆதலின் அவைகளைச் செய்கிற மூன்று கடவுளரும் ஒருவருக்கொருவர் தொடர்பு உடையவர்களா யிருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

6. எத்தொழிலும் அதனை நிகழ்த்துதலுக்கு முன்னே அதனைச் செய்கின்றவன் அதனை ஒரு குறித்த பயனை அடைதற்காகச் செய்தல் வேண்டும் என்னும் வேட்கையையும் (இச்சையையும்) அதனை எவ்வாறு செய்தல் வேண்டும் என்னும் அறிவையும், செய்யுந் திறனாகிய செயலையும் உடையவனா யிருத்தல் வேண்டும். இம் முறைமையின் அன்றி உலகில் எத்தொழிலும் நிகழாது என நாமே நமது பழக்க அறிவிற் காணுகிறோம். எடுத்துக்காட்டாகத் தேர் போன்ற ஒரு செயற்கைப் பொருள் பல வினையாளர்களாற் செய்யப்படினும் அப்பல வினையாளர்களும் ஒரு முதல்வனுடைய வேட்கை அறிவு செயல் முறையிற் செய்யப்பட்டாலொழிய அது குறித்த வடிவத்தில் குறித்த பயனைத் தரும்படியாய்ச் செய்யப்படுதல் முடியாது என நாம் அறிகிறோம். இந்த முதல்வன் பல வினையாளர்களில் ஒருவராயிருக்கலாம். அல்லது அவர்களை ஏவுகிற வேறொருவராயிருக்கலாம். இந்த முறைமைப்படி உலகத்தைப்பற்றி நிகழ்கிற முத்தொழில்களும், அம்முத்தொழில்களையுஞ் செய்கிறவர்களில் ஒரு

வனுடைய வேட்கை அறிவு செயல்களின் வழியே நிகழ்தல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது. படைப்புக்கடவுளும் காப்புக்கடவுளும் அழித்தற் கடவுளை அழித்துத் தங்களிடம் எடுக்கவல்ல ரல்லராயிருத்தலாலும் அழித்தற் கடவுளே மற்றிரு வரையும் அழித்துத் தம்மிடம் எடுக்க வல்லவராயிருத்தலானும் அழித்தற் கடவுளிடமே படைப்புக் கடவுள் (அயன்) காப்புக் கடவுள் (திருமால்) உள்ளிட்ட எல்லா உயிர்ப்பொருள்களும் உயிரில்லாத பொருள்களும் சேர்ந்த உலகம் ஒடுங்குகின்றது. உயிர்ப்பொருள்கள் அழிதல் என்பது அவைகள் விளங்கப்பெற்ற உடலுருவங்கள் அழிதலாகும். இவ்வாறு உலகம் அழித்தற் கடவுளிடம் அழிந்து ஒடுங்குகின்றபடியால் ஒரு மரத்தினுடைய சத்திக் கூட்டம் ஒடுங்கியுள்ள சிறு விதையிலிருந்து அம்மரம் மீளவும் தோன்றி உண்டாதல்போல உலகமும் அது ஒடுங்கின அழித்தற் கடவுளிடமிருந்தே முன் ஒடுங்கியவாறே மீளவும் தோன்றுதல் வேண்டும். அழித்தற் கடவுளிடமிருந்து உலகந் தோன்றும் என்பது இதனாற் பெறப்பட்டது. இதனுடன் இரண்டாவது அதிகரணம் முடிந்தது.

---

# திருஞான சம்பந்தர்-செந்தமிழ் நாடகம்

(திருவாளர் S. முத்துக்குமாரசாமியா பிள்ளையவர்கள்)

(உசஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

ஐந்தாம் அங்கம்: முதற்காட்சி:

இடம் :—மதுரை.
காலம்:—நள்ளிரவு.
நடர்:—அமண் குருக்கண்மார்.

அமண் குருக்கள் யாவரும் நள்ளிருளில் ஒன்று கூடிக் கொண்டு ஏவல் மந்திரங்கள் செய்தார்கள்.

அமண் குருக்களுள் ஒருவர்:—

நேரமும் விடிவதாயிற்று. நமது மந்திரங்கள் ஒன்றும் பலிக்கவில்லையே. ஒன்றும் செய்யாதிருந்து விடுவோமாயின், பின் மிகத்துன்பமாய்விடும். எப்படியும் தீ வைத்தல் வேண்டும். நமது செயல் இப்படி முடியாது போயிற்று என்பது நமது மன்னர் அறியின் நமது மேன்மை தொலைந்துவிடும். நமர் விருத்தியும் குன்றச் செய்து விடுவன், ஆதலால், இனி, இந்த இருட்டோடு இருட்டாய்ச் சென்று தீயை வைத்துவிடவேண்டியது தான். இதுதான் இதற்குத் தீர்வு.

மற்றவர்கள்:—அதுவே சரி: இன்னும் பொறுத்தோமாயின் நேரம் விடிந்து விடும். இன்று இரவெல்லாம் விழித்திருந்தும், நாம் படித்த, கற்ற, மந்திரங்கள் யாவும் பலிக்காது போயிற்றே. இருந்தாலும், இப்போது அதை எண்ணிக்கொண்டிருக்கவேண்டாம். பின் பார்த்துக் கொள்ளுவோம். இப்போது நினைத்தபடி முதலில் செய்து விடுவோம்.

(அவர்கள் நினைத்தவாறே ஒருபுறம் சென்று தீத்தொழில்புரிந்தார்)

## ஐந்தாம்அங்கம்: இரண்டாங்காட்சி:

இடம்:—மதுரை அடியார் வாழ்மடம்:
காலம்:—விடியற் காலம் (பின் இரவு)
நடர்:—சிவனடியார்கள், திருஞான சம்பந்தர்:

சிவனடியார்கள்:—தீத்தொழில் வெளிப்படுதலும், அடியார்கள் வருந்தி, பிரிந்து வெளியில் வந்து—திருஞான சம்பந்தர் முன் அணுகி வணங்கி:—

அஞ்சினர் பதைப்பு நீக்கும் ஆரருள் வள்ளலே,

நாங்கள் வாழ் மடத்துத் தீயமணர் தீ முட்டினர், வெளியில் வருவதற்குமுன் தீ சூழ்ந்து கொண்டது. பிரித்து வருவதற்குள் அரும்பாடு பட்டனம். காத்தருள் எங்களை ஐய!

திருஞான சம்பந்தர்:— (தானே எண்ணிப் பரிவுறுதல்).

ஆ! மாதவர் துயிலும் இத்திரு மடத்துப் பழுது செய்வ

தே! பாவிகள் எனக்குத் துன்பிழைக்கக் கருதி, இது செய்தார்கள். ஆயின், இறையோன் அன்பருக்கு எய்துமோ? (அச்சக்குறி - பின் வெகுண்டு)

இதுதான் அமணர்கள் அறச்செயலோ! நன்று! இது, இவர்களை யாதும் எண்ணுவது தவறு. மன்னன் முறை வழுவாயிற்று. எய்தாரை நோவாது அம்பை நோவது எவன்? மன்னன் வலியின்றி இம் மறச்செயல் செய்ய ஒருப்படுவரோ? ஆதலால், இக்குற்றம் மன்னன் பாலதே. அன்னவன் பாலே வெகுதற் செய்கின்றேன். சைவவாழ் மடத்து அமணர்களிட்ட தீத்தழல் போய்ப் "பையவே சென்று பாண்டியற்கு ஆக"

திருச்சிற்றம்பலம்.

"செய்யனே திரு வாலவாய் மேவிய
வையனே யஞ்ச லென்றருள் செய் யெனைப்
பொய்யரா மமணர் கொழுவுஞ் சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே."

"அப்ப னாலவா யாதி யருளினல்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம்பந்த னுரை பத்துஞ்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே."

திருச்சிற்றம்பலம்

உடனே தீ நின்று விட்டது. அடியார்கள் யாவரும் மன முவந்து வழுத்தித் தங்கள் இருப்பிடஞ் சென்றனர்.

ஐந்தாமங்கம்: மூன்றுங்காட்சி:

இடம்:—மதுரைத் திருமடம்:
காலம்:—விடியற் காலம்:
நடர்:—அடியார்கள்.

சிவனடியார்களுள் ஒருவர்:— (மற்று முள்ளவர்களைப்பார்த்து) அடிகளே,

இன்று நிகழ்ந்த சிவத்தோற்றத்தைப் பார்த்தீர்களா? நமது பிள்ளையார் ஞானவடி வென்பதில் யாதேனும் ஐயமுண்டா?

நள்ளிரவில்: நண்ணார் நடுவில்! நாடாத பெருந்துன்பம் உற்ற போது; மனஞ்சிறிதுங் கலங்கினரா. எவ்வளவு வீரம்? பெருந் தன்மை?

சிவனடியார்களுள் ஒருவர்:—

பகைவராக இருந்தும் அவர்கள் மீது எவ்வளவு உருக்கங் காட்டுகின்றார்? அவர்கள் அறிவின்மைக்கு எவ்வளவு இரங்கு கின்றார்? எவ்வளவு அருள்? "இவ்வறிவிலிகள் என் செய்வார் கள்?" மன்னன் தானே இத்தீங்கு நிகழ்வதற்குக் காரணம், என்று-தீயை அவன் பால் ஏவினரே.

மற்றொருவர்:—

அடிகளே, அதுமட்டுமா? நமது பிள்ளையார் செயல் யாவும் அருள் வழிப்பட்ட தென்பது வெள்ளிடை. மன்னன்பால் தியை ஏவும்போதும் "பையவே" என்று ஏவினர் பார்த்தீரா. அதிலும் எவ்வளவு அன்பு பார்த்தீரா?

மற்றொரு அடியார்:—

முற்றத்துறந்த முனிவரே யாயினும், வெகுளி வந்துற்ற தானல், ஏதேதோ புகன்றிடுவர். இது பற்றியன்றோ "குன் றேறி நின்றார் வெகுளி" என்று சிறப்பித்து "தேவரும்" கூறி யிருக்கின்றனர். நமது பெருமானர் பிள்ளைமைப்பருவமாக விருந்தும், எழுந்த வெகுளியை யடக்கி, எவ்வளவு சாந்தமாய்ப் போக்கிட்டார் பார்த்தீர்களா? "பையவே" என்ற ஒரு சொல், சொல்லாதிருந்திருப்பாராயின், மன்னன் உடனே கரிந்து போயிருக்க மாட்டானு? அப்படி நேரின், நமது பிள்ளையாரை யடுத்த அம்மையார் மங்கலம் என்னும்? குலச்சிறையார், நமது வள்ளல் கழல் வணங்கும் போதே, வேண்டிய வரம் என்னும்? நமது அம்மையார், பின், கோவிலில் வைத்துத்திருவடி வணங்கி எழும்போது "அம்மையார், கேட்ட வேண்டுகோள் நினைப் பிருக்கிறதா? "யானும் என்பதியும் செய்த தவமென் கொல்" என்று சொன்னரல்லவா? அவர் சொன்ன கருத்துத் தானெ ன்னே ? நமது பிள்ளையார் திருக்கரத்தால் நீறு சாத்தும் பெருமை, மன்னவரும் பெற வேண்டுமென்பதல்லவா ?

மற்றொரு அடியார்:—இக்கருத்துப் பற்றியன்றோ நமது சேக்கிழார் பெருமான்,

திருச்சிற்றம்பலம்.

“ பாண்டிமா தேவியார் தமது பொற்பிற்
பயிலுநெடு மங்கலநாண் பாதுகாத்தும்
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும்
அரசன்பா லபராதமுறுத லாலும்
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலிவேந்தர்
தீண்டியிடப் பேறுடைய னாத லாலுந்
தீப்பிணியைப் பையவே செல்க வென்றார்”

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாமங்கம் : நான்காங் காட்சி.

இடம்:—அரசன் அரண்மனை.

காலம்:—விடியற்காலம்.

நடர்:—மங்கையர்க்கரசியார், தோழிமார்கள், குலச்சிறையார் முதலியோர்.

காலைப்பொழுதில் மங்கையர்க்கரசியாரைப் பார்த்து வணங்க அமைச்சர் வந்தனர். இருவரும் இருக்கும்போது, ஒருவர் ஓடிவந்து

“எங்கள் தவ உருவே,

நேற்றிரவு, நமது சைவ மறையவர் வாழ் மடத்தில், பாதகர் தீயிட்டனர்” (என்று பதைத்துக் கூறினர்)

மங்கையர்க்கரசியார்.—(ஏக்கமுற்று)

அமைச்சரே,

இத்தீயவர் நாட்டு, நாம் தானே, வரவழைத்தோம். நாம் இனிச் செய்வது என் ? மாய்வதே உய்தி? (என்று வருந்தல்) அடியவர்கள் என்ன பாடு படுகின்றனரோ ? நினைக்க நினைக்க என்னால் துன்பம் தாங்க முடியவில்லையே ?

அமைச்சர்:—அம்மையே,

என் மனமும் உடைகின்றது. எதுவுந் தீரத் தெரிந்தே செய்யவேண்டும். இன்னும் சிறுபொழுதில் தெரிந்து, பின் எண்ணுவோம். சிறிது தாழ்க்க.

தோழி:—(இவ்வமயம் ஒரு தூதுவர் ஓடி வந்து கூறக்கேட்டு, அம்மை முன் சென்று வணங்கி) உய்ந்தனர் அடியார்கள். மறையவர்க்குத் தீங்கு சிறிதுமில்லை. தீ வைத்தது உண்மைதான். அடியார்கள் பிள்ளையாரிடத்துச் சென்று முறையிட்டார்களாம். உடனே, அவர் ஒரு பாசுரம் அருளினராம்.

தோழி:—உடனே, அப்பற்றிய தீ நின்று விட்டதாம். அடியார்களெல்லாம் மிக நலமாய், பிள்ளையார் பெருமையை வியந்துகொண் டிருக்கிறார்களாம். ஊரிலும் கூட்டம் கூட்டமாய்க் கூடி, இந்த வியப்பான செய்தியைத்தான் பேசிக்கொண்டிருக்கிறார்களாம். இதோ, நமது தாதி வந்து கூறினாள்.

மங்கையர்க் கரசியார்:—

தோழி :—அங்கயற் கண்ணி யருள்பெருகுக,

அமைச்சரே, தீதின்மை தெளிந்தோம். பெருமான் அருளே!

அமைச்சர்:—அம்மையே,

கருமுருட்டமண் கையர் செய்த, இந்தத் தீங்கு முடிவில் என்னவாய் முடியுமோ? (வருந்தினார்).

காவலர்:—(ஓடி வந்து அம்மை முன்னின்று வணங்கி)

எங்கள் பெருமாட்டி,

இதோ, நம் மன்னருக்கு வெப்பு நோயுற்றது. கொடுமை தாங்கொணாது வருந்துகின்றார். படுக்கையில் உருளுகின்றார். புரளுகின்றார். பக்கத்து யாரும் நெருங்க முடியவில்லை. மாளிகைப் புறத்தும் அனல் வீசுகின்றது. வெளியில் நின்றார்களும் புலர்ந்து, தீந்துபோம்படி, உடலிலிருந்து வெப்பம் எழுகின்றது.

அம்மையாரும், அமைச்சரும், கேட்டு முடிவதன்முன் விரைவாய் மன்னன் மருங்கு பதைப்புடன் உற்றார்கள்.

மங்கையர்க்கரசியார்:—

அமைச்சரே, நாமும் பக்கத்து நெருங்க முடியவில்லையே. நமது மன்னர் எவ்வாறு தாங்குவர்? சிவனே! என் செய்வது இதுபோது. மருத்துவர் வரும்வரை பொறுக்காது போலுமே. இளங் கதலிக்குருத்தும், தளிரும் கொண்டுவரச் செய்க. அவற்றையாவது இடுவோம்.

(ஏவலாளர்கள் உடனே கொண்டுவந்து மன்னன் பக்கத்து இடல்) அவையும் துண்டுகளாகப் போதல் கண்டு)

ஐயகோ, இத்தண்டும், தளிரும் துகளாகின்றதே! என்செய்வேன்! ஈசா!

என்னுறு காதலர் படுந்துன்பம் பார்க்க என்மனம் தாங்குகின்ற தில்லையே!

இறைவா! ஓலம்! அருள்செய்! காத்தருள்.

மருத்து நூலார்:—இதோ இப்பிணியைக் கைநொடிப் பொழுதில் ஓட்டி விடுகின்றோம் - ஒருவரும் வருந்த வேண்டாம்.

(ஒன்றும் பலிக்கவில்லை - மருந்து போடப்போட மிக்குற்றது நோய். அரசன் கருத்தழிந்து உரை மறந்தனன்)

ஐந்தாம் அங்கம் - ஐந்தாம் காட்சி.

இடம்:—சமண்பாழி.

காலம்:—விடியற் காலம்.

நடர்:—அமண் குருக்கண்மார்கள்.

அமண் குருக்களுள் ஒருவர்:—மற்றவரை நோக்கி.

அடிகண்மீர், புகுந்தது கேட்டீரோ. நமது மன்னனுக்கு வெப்பு நோய் அடுத்ததாம். யாவரும் கிட்டத்து நெருங்கா வகை அனல் வீசுகின்றதாம். எல்லாரும் கூடி வேண்டுவன செய்து கொண்டிருக்கிறார்களாம். இருந்தும், அரசன், தன்னறிவு இழந்து, பேசவுங் கூட முடியாது கிடக்கின்றாராம்.

மற்றவர்:—அப்படியா ! உண்மைதானு !

இன்னெருவர்:—உண்மைதான். நானும் இதோ கேள்வியுற்றேன்.

மற்றேருவர்:—உண்மைதான். நாம் இங்கிருப்பது முறையில்லை. எழுந்திருங்கள் எல்லாரும் உடனே போவோம். அங்கு நாமும் போயிருந்து கொண்டு நமது மந்திரங்களைப் போட்டுப் பார்ப்போம். இந்தச் சிறுவன் வேலையாகத்தான் இருக்கும்.

“ பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்”

என்பது சரியாக ஆயிற்று. நமது செயலாகத்தானிருக்கும். நமது குட்டு வெளிப்படும் முன் போய்ப் பக்கத்து இருந்து கொள்ளுவோம். நாம் உடன் இருந்தால், நம்மைப் பற்றி, அரசன் ஐயுறுதல் படும்படி, ஒன்றும் ஒருவரும் சொல்ல முடியாது. எழுந்திருங்கள். போவோம் விரைவில்.

(யாவருங் கூடி வந்து மன்னன் மருங்கணைந்தனர்).

அடிகண்மார்:—அடடா ! என்ன வெப்பம். இது, சூட்டின் மிகுதியால் உற்றது. நமது கைகளிலுள்ள மயிற்பீலி கொடு தடவுவோம். (என்று எடுத்தனர் பீலிகையினை.) ஐயையோ ! நமது பீலிகை கரிந்து போகின்றதே ! கைப்பிடிப்பிரம்பும் கரிந்து போயிற்றே. பொரி பறக்கின்றதே ! சுடுகின்ற உடலில் இந்தப் பொரியும் விழுகின்றதே - (என் செய்வது என்று ஏங்கி நின்றனர்).

அடிகண்மாருள் ஒருவர்:—

நாம் பக்கத்து நிற்கமுடியவில்லை. சற்று விலகி நின்று கொண்டு நமது கையிலுள்ள “குண்டிகை” நீரை மந்திரங்கூறித் தெளிப்போம்.

(அவ்வாறு “அருகனே காவாய், அருகனே காவாய்”

என்று தெளித்தனர்) ஐயையோ! என்ன செய்வது, தீயிடை யிட்ட நெய் போலன்றோ நமது குண்டிகை நீர் ஆகின்றது. இனி என் செய்வது.

மன்னவர்:— (அமண் குருக்கண்மார்களை நோக்கி,)

உங்களைக் கண்டதும் நோய் வெப்பம் மிகுதியாகின்றது. அதிலும், உங்கள் நீர் பட்டதும் துன்பம் தாங்கமுடியவில்லை. ஒருவரும் என் கண்முன் நில்லாது போங்கள். போதும் உங்கள் உறவு. ஐயோ! என்செய்வேன். வெப்பம் தாங்க முடிய வில்லையே (என்று சோர்ந்து கிடந்தான்).

மங்கையர்க்கரசியார் :—(பயமெய்தி அமைச்சரை நோக்கி) அமைச்சரே,

புகலியிலிருந்து வந்து நம்மை ஆண்டு கொண்டவர் பால் இவர்கள் செய்த தீங்கு தான் இவ்வாறு மூண்டதோ ?

அமைச்சர் :—முப்புர மெரித்தார் தம்மடியவர்க்கு இவர்கள் செய்த தீங்கு தான் இவ்வாறு உற்றது. இவர்கள் இன்னும் மருந்து போட உன்னின் நோய் மிகுமே யன்றிக் குறையாது.

---

## பிழையும் திருத்தமும்

| | பிழை | திருத்தம் |
|---|---|---|
| சிலம்பு ௮ பக்கம் ௨௩௩ வரி௧௮ | அதிகாரம் | அதிகரணம் |

„ பக்கம் ௧௧௬௪ல் "எங்குந்தான் வியாபியாய்" என்ற சித்தியார்ப் பாட்டுக்குப்பதில் அடியிற்கண்ட சித்தியார்ப் பாட்டைப் பெய்து வாசிக்க.

"எங்குந்தா னிறைந்துசிவ னின்றா னாகி
லெல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னி
லிங்குந்தா னந்தகருக் கிரவியிரு ளாகு
மீசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதியலர்த் திடுவதுபோற் பருவஞ்சே ருயிர்க்குத்
துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே."

சூத். ௧௧; அதி. ௨.



திருச்சி மலைக்கோயில்.

ஓம்சிவம

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு அ } மெய்கண்டான்யாண்டு-எளஎ ஆனித் திங்கள் 1930௵ ஜூன்௴—ஜூலை௴ { பரல் சா

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற்
கடம்பமர் காளைதாதை கழலடி வணங்கலாமே.

இந்தத் தேவாரப்பாட்டு உடம்பினுள்ளே இறைவன் இருக்கின்றான் என்றும் அவன் உடம்பினுள்ளே யிருந்தாலும் அதனை உறைவிடமாகக் கொண்டிருக்கிற உயிர் அறியாதபடி மறைந்திருக்கின்றான் என்றும் அவ்வாறு மறைந்து உடம்பினுள்ளே யிருக்கின்ற இறைவனைக் காணுதற்கு அவ்வுயிர் என்ன செய்தல் வேண்டும் என்றும் கூறுகின்றது.

உடம்பு ஒருவன் குடியிருக்கிற மனையாக உருவகஞ் செய்யப்பட்டிருக்கிறது. இதிலுள்ள உவமான உவமேயங்களின் பொருள்களை விளக்குவாம். அந்த மனையானது ஒரு இருளிரவில் முற்றிலும் இருட்டாயிருத்தலினால் அதில் விலையுயர்ந்த ஒரு மாணிக்கமிருப்பினும் மனையிலிருக்கிறவனுக்குத் தெரியாது. அதுபோல் இறைவன் ஒருவனுடைய உடம்பினுள்ளே இருந்தாலும் அவன் தனது சுட்டுணர்வாகிய அறியாமையால் அவனைக்காண முடியாது. இருட்டு மனையிலிருக்கிற மாணிக்

கத்தைக் காணுதற்கு மனைக்காரன் ஒரு அகல்விளக்கில் நெய் ஊற்றி அந்த நெய்யில் ஒரு நூற்றிரியைத் தோய்த்துத் தோய்த்ததிரியை அகல் நுனியிற் சேரவைத்து அதிலே தீயைக்கொளுத்தி எரியும்படி செய்தல் வேண்டும். விளக்குத்திரி எரிந்தால் அதனுடைய ஒளி நாலு சுவருக் குட்பட்ட அந்த மனையிட முழுவதும் விளங்கி அதிலிருக்கிற மாணிக் கத்தை மனைக்காரன் காண்பான்.

உள்ளத்தை அகலுக்கும், அறியாமையைப் போக்குகின்ற உள் ளுணர்வை (Intuition) நெய்க்கும், உயிரைத்திரிக்கும், திரியி லெரிகிற விளக்கு ஒளியை உண்மை அறிவுக்கும் ஒப்புமைகள் கூறப்பட்டிருக் கின்றன. விளக்குத் திரியில் ஒளி விளங்கி மனை முழுவதும் நிறைந்து அங்கேயுள்ள மாணிக்கத்தை மனைக்காரனுக்குக் காட்டுதல் போல் உயிரினிடத்தில் உண்மை அறிவு விளங்கி உயிரிருக்கிற உடம்பு முழுவ தும் நிறைந்து உடம்பினுள்ளே யிருக்கிற இறைவனை அந்த உயிருக்குக் காட்டும். திரியில் தீ எரிதற்கு நெய் வேண்டப்படுதல் போல் உண்மை அறிவு உயிரில் விளங்குதற்கு அறியாமையைப் போக்குகிற உள்ளுணர்வு வேண்டப்படுவது. நெய் இருத்தற்கு அகல் இடமாயிருத்தல் போல உள்ளுணர்வு உண்டாதற்கு உள்ளம் இடமாயிருக்கின்றது.

தகழி-அகல். மடம் படும் உணர்-அறியாமை அழிக்கும் உள் ளுணர்வு. மடம் என்பது உலகத்தை மெய் என்றும் இறைவனைப்பொய் என்றும் மயங்கி அறிகிற உலக அறிவு. அது உண்மை அறிவை நோக்க அறியாமை ஆதலால் மடம் எனப்பட்டது. படுதல்-அழித் தல் அல்லது போக்கல். உணர்வு என்பது உணர் எனக் கடை குறைந்து நின்றது. முதனிலைத் தொழிற் பெயர் என்று கூற லும் ஆம். உணர் என்பது உள்ளத்தின் உள்ளே உணர்தல். இந்த உணர்தலாவது கற்றுக் கேட்டுச் சிந்தித்து (நினைத்து)ப் பயின்று தூய்மை அடைந்த உள்ளத்தில் இறைவனது அருளொளி வந்து கலத்த லால் உண்டாகின்றது. இந்த உள்ளுணர்வைத் திருநாவுக்கரசு சுவாமி கள் வேறொரு தேவாரத்தில் உள்ளத்து ளொளியுமாகும் என்று கூறு கின்றார். தூய்மையான உள்ளத்தில் இறைவன் அருள் விளங்குதலைத் திருநாவுக்கரசு சுவாமிகள் 'சிந்தையாய் நின்றசிவமே போற்றி' எனவும், 'சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மை யொடு' எனவும் 'உள்ளம் நிறைந்த வெந்தையேகம்பம்' எனவும், 'சிந்தையாக சிவனாக' எனவும், திருமூலர், 'சித்தஞ் சிவமாய மல மூன்றுஞ் செற்றவா' எனவும் 'சித்தந்திரிந்து சிவமயமாகியே' எனவும், கூறுதல் காண்க. சித்தம், உள்ளம், சிந்தை மனம் என்பன ஒரு பொருட்சொற்கள். அட்டி-பெய்து. மயக்கி-

சேர்த்து. இடம்படும் ஞானத்தீ-என்றது உண்மை அறிவு. அது அகன்று ஆழ்ந்து விரிந்து "உண்மை நிறை பெருகுநிலைக்குறியாளர்" அறிவாயிருத்தலால் இடம்படு ஞானத்தீ என்றார். தீயானது தன்னிடம் சேர்ந்த அழுக்கினை எரித்துத் தூய்மையாக்குதல் போல உயிரினிடத்துள்ள மலத்தைப் போக்கி அதில் அருளொளி விளங்கச் செய்தலால் ஞானத்தீ என்றார். எரிகொள - நாசமாக. மனைக்குக் கூறும் பொழுது இருள் நாசமாக என்றும் உடம்புக்குக் கூறும் பொழுது உடம்பைச் சேர்ந்த உயிரிலுள்ள மலம் நாசமாக என்றும் பொருள் கொள்ளுக. இருந்து நோக்கில் என்பது மனைக்குக் கொள்ளும் பொழுது மனைக்காரன் மனையினுள்ளேயிருந்து அதனுள் விளங்குகிற விளக்கு ஒளி கொண்டு மனை எங்கும் பார்க்கில் என்றும், உடம்புக்குக் கொள்ளும் பொழுது உடம்பினுள்ளே யுள்ள உயிர் தனது உள்ளத்தில் ஒரு வழிப்பட்டு உற்று நோக்கில் என்றும் பொருள் கொள்க. இருந்து நோக்குதல் என்பது உள்ளே நினைத்து (தியானித்து) மறைந்துள்ள இறைவனைக் காணுதல் ஆகும்.

கடம்பு அமர்காளை என்பது முருகக்கடவுள். அவன் எப்பொழுதும் இளங்குமரன் ஆனதால் காளை என்றார். அவன் தாதை இறைவனாகிய சிவபெருமான். கழல் - வீரகெண்டையம். அடியார்களுக்கெல்லாம் வீட்டை அளிக்கிற புகழை அது குறிக்கிறது.

அடிகாணல் - இறைவனுடைய வலது கால் அறிவு வலியையும் (ஞான சத்தி) இடது கால் செயல் வலியையும் (கிரியா சத்தி) குறிக்கிறது. ஒருவன் தனது அறிவானது இறைவனது அறிவையின்றி நிகழாது என்றும், தனது செயலானது இறைவனது செயலின்றி நிகழாது என்றும் அறிந்து எங்கும் நிறைந்துள்ள அவனுடைய அறிவு வலிக்குள் தனது அறிவு வலியும் செயல்வலிக்குள் தனது செயல்வலியும் அடங்கித் தன் முனைப்பின்றி நிற்றலே அடிகாணுதலாகும். இந்த அடிகாணுதலே பேரின்பநிலை அடைதலாகிய வீடுபேறு ஆகும்.

ஒருவன்-தோன்றா எழுவாய். காணலாகும்-பயனிலை.

"வெள்ளத்தைச் சடையில்வைத்த வேதகீ தன்றன்பாதம்
மெள்ளத்தா னடையவேண்டின் மெய்தரு ஞானத்தீயால்
கள்ளத்தைக் கழியநின்றார் காயத்துக் கலந்துநின்ற
உள்ளத்துள் ளொளியுமாகு மொற்றியூ ருடையகோவே"

என்னும் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய தேவாரம் மேலே கூறிய தேவாரக் கருத்தினையே கூறுகின்றது. ஆனால் இதில் மனையில் விளக்கேற்றுதலாகிய உருவகம் கூறப்படவில்லை.

# சிவஞான போதக்கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்பிள்ளை யவர்கள் B. A]

## முதலாவது சூத்திரம்

### மூன்றாவது அதிகரணம்

இந்த அதிகரணத்திற் கூறப்படும் பொருள் (மேற்கோள்) "அழித்தற்கடவுள் (சங்காரகாரணன்) ஒருவனே உலகிற்கு முதற் கடவுள்" என்பது. இந்த மேற்கோளினது பொருள் நன்கு விளங்குதற்கு அழித்தற்கடவுள், உலகு என்ற இரண்டு சொற்களால் பெறப்பட்ட கருத்துக்கள் விளக்கப்பட வேண்டும்.

2. அழித்தற் கடவுள் என்று இங்கே ஆசிரியர் கூறினது மாயாகுணங்களோடு கூடிய அழித்தற் கடவுளை (குணி உருத்திரனை) அன்று; பருஉலகம் (தூல உலகம்) முதல் சுத்தமாயா உலகங்கள் (புவனங்கள்) வரை அழிக்கப்படுகின்ற பெரிய அழித்தலை (மகா சங்காரம்)ச் செய்கின்ற சதாசிவ மூர்த்தியை, இறைவனொருவனே லயநிலையில் பரமசிவன் எனவும், போக நிலையில் சதாசிவன் எனவும், அதிகாரநிலையில் மகேசன் எனவும் பெயர் பெறுவன்.

3. உலகு என்பது இங்கே உயிர் உலகத்தை (சேதனப் பிரபஞ்சத்தை) மாத்திரம் குறிக்கின்றது. உயிருலகம் மாத்திரமே இறைவனுடைய முதன்மையை அறிந்து நடக்கவல்லது. உயிர்களுடைய அறிவு வேட்கை செயல்களுக்கு இறைவனுடைய முதன்மை இன்றி அமையாது வேண்டப்படுவது. இறைவன் உயிர்களுடன் இரண்டற (அத்துவிதமாய்)க் கலந்து ஒன்றி நின்றாலன்றி உயிர்களுடைய அறிவு வேட்கை செயல்கள் நிகழா. உயிரில்லாத பொருளுக்கு அறிவு வேட்கை செயல்களில்லை. இறைவன் அதனை அசைவித்தல் மாத்திரம் செய்கின்றான்; அறிவு வேட்கை செயல்களை நிகழ்த்துவித்தலாகிய முதன்மையை, அதனிடத்துச் செய்தலில்லை. இந்தக்கருத்து மேற்கோளில் சங்காரமே என்ற சொல்லிலுள்ள பிரிநிலை ஏகாரத்தாற் பெறப்படுகின்றது.

4. எந்தப் பொருளினிடத்தில் மேலே கூறிய பெரிய அழித்தற்காலத்தில் (மகாசங்கார காலத்தில்) எல்லா உயிர்ப் பொருள்களும் உயிரில் பொருள்களும் ஒடுங்கி நிற்குமோ அந்தப் பொருள் மாத்திரமே அவ்வழிவு முடிவுக்காலத்தில் எஞ்சி நிற்பதாகும். அந்தப் பொருளினிடமிருந்தே மீளவும் படைப்புக் காலத்தில் உயிருலகமும் உயிரிலுலகமும் தோன்றுவன ஆகும். அந்தப் பொருள் சதாசிவன் ஆதலின் அவனே பிறப்பு இறப்பு இல்லாதவன். அவனே முதற்கடவுள் என்று இரண்டாவது அதிகரணத்தாற் பெறப்படுகின்றது. அழித்தற் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள் என்னும் மேற்கோளையுடைய மூன்றாவது அதிகரணம் வேண்டுவதில்லை. ஆயினும் அத்தகைய அழித்தற் கடவுளரும் பலர் இருத்தல் கூடும் எனக்கூறுகிற பல கடவுட்கொள்கையர்களை மறுத்தற்பொருட்டு ஆசிரியர் மூன்றாவது அதிகரணம் கூறுகின்றார்.

5. மூன்றாவது அதிகரணத்தில் ஆசிரியர் கூறுகிற ஏது "சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான்" என்பது. இதன் பொருளை நாம் நன்கு அறிதல் வேண்டும். நாம் அதனை அறியப்புகுவாம். சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் என்றது சுட்டுணர்வுடைய உயிருலகம். "சுட்டுணர்வின்றி நின்ற சங்காரம்" என்பது சுட்டுணர் வில்லாதிருக்கின்ற அழித்தற்கடவுள். சுதந்தரம் என்பது தற்சார்பு (independence). சுட்டுணர்வு ஆவது, அறிகிறவன் கருவி அறிவால் பொருள்களை அவைகளுக்கு வேறாய் நின்று சுட்டி அறிவது. இப்படி அறியும் சுட்டுணர்வில் அறியப்படும் பொருள்கள் அறிகிறவனுக்கு வேறாயிருக்கின்றன. அப்பொருள்கள் பலவாயிருத்தலின் அவைகளை அறிகிறவன் ஒன்று ஒன்றாய்ச்சுட்டி அறிதல் வேண்டும். முன் அறிந்த ஒரு பொருளை அவன் பின் மறந்து விடுகிறான், அல்லது மயங்கி வேறொன்றாய் அறிகின்றான். முன் ஒரு காலத்தில் அவன் தெளிவாயறிந்த ஒரு பொருளைப் பின் ஒரு காலத்தில் அறிய முடியவில்லை. வெளியிலுள்ள தடைகளை நீக்கி அவன்

தனது மனதை ஒருமுகப்படுத்தி நினைத்து அறிந்த ஒரு பொருளைப்பின் அத்தடைகளுள்ள பொழுது அறிகின்றானில்லை. இதனால் நாம் அறிகிற உண்மை என்னவெனில் அறிகின்றவன் தானாக ஒன்றையும் அறியாமல் வேறொரு பொருளினது சார்பு கொண்டு அறிகின்றான் என்பது. அப்படியிருத்தலினாலே தான் அந்தச் சார்புப் பொருளுடைய விளக்கம் தனது உள்ளத்திற் பட்டபொழுது அவன் அதனை அறியவும், படாதபொழுது அறியாமலிருக்கவும் நேரிடுகின்றது. ஆதலின் சுட்டுணர்வு உடைய உயிர்களுக்குத் தற்சார்பு இன்மை (சுதந்தரமின்மை) பெறப்படுகின்றது.

ஆனால் இறைவன் உயிர்கள் போலச் சுட்டிஅறிவானல்லன். அவன் உயிர்களுடைய கட்டுக்காலத்திலும் கட்டு விடுதிக் காலத்திலும், எல்லா உயிர்களுடனும் கலந்து இரண்டற (அத்துவிதமாய்) ஒன்றி நிற்கின்றான். ஆதலின் அவன் எல்லா உயிர்களுடைய அறிவு வேட்கை செயல்களை எல்லாம் ஒரே காலத்தில் ஒருசேர அறிகின்றான். உயிர்களுடைய அறிவு வேட்கை செயல்களெல்லாம் தனது அறிவு வேட்கை செயல்களிற் கலந்து ஒன்றாயிருப்பதால் இறைவன் அவைகளை ஒன்றொன்றாய் அறிய வேண்டுவதில்லை. இறைவனுடைய அறிவு இச்சை செயல்கள் இப்படி இருத்தலினாலே அவன் முற்றறிவும் பேரருளும் முடிவிலாற்றலும் உடையவனாய் உயிர்களுக்கு ஐந்து தொழில்களையும் எளிதிற் செய்ய வல்லவனாயிருக்கின்றான். அவனுடைய ஏனைய பண்புகளும் இந்த மூன்று பண்புகளில் அடங்கும். இறைவன் எல்லா உயிர்களுடன் கலந்து வேறறவிருப்பினும் அவன் உயிர்கள் அடைகிற விகாரம் அடைவானல்லன். மேலே கூறிய காரணங்களால் இறைவன் ஒரு பொருளிலும் சார்ந்திராதவனாயும் எல்லா உயிர்களும் தன்னைச் சார்ந்து நிற்கும்படியான சார்புப் பொருளாயுமிருக்கின்றான். இதுவே இறைவன் தற்சார்பு (சுதந்தரம்) உடையவன் என்பதன் கருத்தாகும்.

இனி இவ்வாறு இறைவன் தற்சார்பு (சுதந்தரம்) உடையவனாயும் உயிர்கள் தற்சார்பு இல்லாதவர்களாய், தங்கள் அறிவு

இச்சை செயல்கள் கட்டுக்காலத்தில் உலகில் நிகழ்தற்கும் கட்டு விடுதி பெற்ற காலத்தில் இறைவனிடத்தில் நிகழ்தற்கும் இறைவனிடத்தில் சார்பு உடையவர்களாயிருத்தல் பற்றி இறைவன் உயிர்களுக்கு முதன்மையை உடைய முதற்கடவுள் ஆகின்றான். இவ்வாறு உயிர்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருக்கிற முதற்கடவுள் உலகிற்கு ஒருவனாயே இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. அயன், மால், உருத்திரன் மூவரும் அவன் ஆணை வழி நின்று, தத்தம் தொழில் செய்யும் உயிர் வர்க்க அதிகாரிகளேயாவர். உலக வழக்கிலும் எத்தகைய மக்கட்கூட்டத்துக்கும் முற்றிலும் ஆளும்வன்மையை உடைய ஒருவனே தலைவனாயிருக்க நாம் காண்கின்றோம். ஆளும் வன்மையில் சிறிதும் வேற்றுமையில்லாத இருவர் ஒரு கூட்டத்திற்கு ஒரு செயல் நிகழ்த்த ஏற்படுத்தப்படின், அக்கூட்டத்தார் செயல் செவ்வனே நிகழாது என்பது திண்ணம்.

இனி உயிர்கள் தங்கள் கட்டு விடுதிபெற்ற பேரின்ப வாழ்வுக்காலத்தில் இறைவனுடன் ஒப்பு உடையவர்கள் என்று கூறும் சிவனொப்புக் கூறுவார் (சிவசமவாதி) கொள்கையை ஆசிரியர் மறுத்து அக்காலத்திலும் உயிர்கள் இறைவனிடத்திற் சார்பு உடையவர்களாய்ப் பேரின்ப நுகருதல் அல்லாமல் தனித்து நிற்கும் தற்சார்பு உடையவர்கள் அல்லராயிருத்தலினால் அவர்கள் இறைவனுக்கு ஒப்பாகார் என்று எடுத்துக்காட்டு வெண்பாவிற் கூறுகின்றார். இக்காரணம் பற்றி உயிர்கள் கட்டுள்ள காலத்திற்போலக் கட்டுவிடுதிபெற்றகாலத்திலும் இறைவனுக்கு அடிமைகள் ஆவார்கள். இறைவனுக்கும் உயிர்களுக்கும் ஆண்டான் அடிமைத் தொடர்பு எக்காலத்திலும் உண்டு. இதனுடன் மூன்றாவது அதிகரணம் முடிகின்றது.

இங்ஙனம் முதலாவது சூத்திரத்தில் காணப்பட்ட உலகத்தைக்கொண்டு காணப்படாத கடவுள் ஒருவன் இருத்தல் வேண்டும் என்று கருதல் அளவை முறைமைப்படி கூறப்பட்டது. இந்தச் சூத்திரம் மூன்று அதிகரணங்களை உடையது. முதலாவது அதிகரணத்தில், உலகம் பிறப்பு, இருப்பு, அழிவு என்னும்

முத்தொழில்களை உடையது என்பது கூறப்பட்டது. இரண்டாவது அதிகரணத்தில் அந்த முத்தொழில்கள் செய்தற்கும், செய்வானையின்றிச் செய் தொழில் அமையாது. ஆதலான் முறையே படைப்புக்கடவுள் காப்புக்கடவுள் அழித்தற்கடவுள் உளராதல் வேண்டும் என்பதும், உலகம் அழியுங்கால் அழித்தற் கடவுளிடம் ஒடுங்கும் என்பதும், அழிந்த உலகம் மலம் உண்மையால் அந்த அழித்தற்கடவுளிடம் ஒடுங்கியவாறே மீளவும் தோன்றும் என்பதும் கூறப்பட்டது. மூன்ருவது அதிகரணத்தில் அந்த அழித்தற் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள் என்பது கூறப்பட்டது. இங்ஙனம் மூன்று அதிகரணங்களும் சங்கிலித்தொடர்போல ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாய் வருதல் காண்க. இதனுடன் முதலாவது சூத்திரம் முடிந்தது.

---

# கம்பன் கவிச்சுவை யமைப்பு

[திரு. அ. வரத நஞ்சைய பிள்ளை அவர்கள்]

(உகஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

உலக இயற்கை, ஓர் காரியத்தைச் செய்ததன் பின், அதே காரியத்தை அவ்வாறன்றி வேருெரு விதமாய்ச் செய்தாற் சிறப்பாயிருக்கும் என அநுபவத்தால் சீர்திருந்தும் முறையைக் கற்பிப்பதாயுள்ளது. அங்ஙனமே ஓர் உயர்ந்த கவிஞனும் ஒன்றை முற்படக்கூறிய பின் அதனினுஞ் சிறந்த பொருள் தரும் சொல் இல்லையோ எனக்கருதி விழுமிய ஒன்றை விளம்புவன். இம்முறையைக் கம்பர் தம்கவிகளில் பல இடங்களில் ஆங்காங்கு அமைத்து வைத்திருக்கின்றனர். உதாரணமாக இரண்டொன்று கூறிக்காட்டுவோம்.

இராமபிரான் சிற்றன்னை வார்த்தைப்படி இளையவனேடும் சீதையுடனும் வனம் செல்லலுற்ருன் என்று கூறுமிடத்தே,

அஞ்சனம்=கண்களை அலங்கரிப்பது, இவன் அழகும் கண்டோர் கண்களை அலங்கரிக்க வல்லது. அவ்வஞ்சனம், அணிந்தோர்க் கழகு செய்வதையே பயனாக உடையதன்றித் தனக்கெனப் பெருமை வேண்டாதது, ஐயன் மேனியும் விரும்பி நோக்கும் கண்கட் கின்பம்பயத்தலன்றித் தனக்கென வேறலங்காரம் வேண்டாததாயிப்போதுள்ளது. ஆகவே இவ்வொப்புமையால் அஞ்சனத்தை முன்னே கூறினர். பின்னர் அங்ஙனம் கூறியது சரிதானோ? அதனினும் உயர்வுடையதாய்ச் சிறந்த பொருள் வேறில்லையோ என ஆராய்வாராயினர். அங்ஙனம் ஆராய்வதற்குக் காரணம் இராமபிரானது எல்லையற்ற அழகின் பெருக்கேயாம். அவ்வாறு ஆராயப்புக்கார்க்கு அஞ்சனம், சில பொருள்கூட்டி மனிதர் இயற்றும் செய்கைப்பொருளாக இருத்தலாலும், இவன் மேனி, இப்போது வனஞ்செல்லும் கோலத்தால் அலங்கரிக்கப்படாமல் இயற்கை ஒளியே நிரம்பி விளங்குவதாதலாலும், அவ்வஞ்சனம் ஒவ்வாது. இயற்கை ஒளிக்கு ஒப்பு, இயற்கை ஒளியையுடைய வேறொன்றேயாதல் வேண்டும். இவன் நிறத்தோடு ஒப்புமை யுடையது மரகதமணியே, எனக் கண்டு பின் அமைத்தனர். மீட்டும் அம்மணிதானும், மனிதர் கைப்பட்டுச் சாணையிலிட்டு மண்ணுத விடத்துப்போதிய ஒளி தருவதின்றாகலான், அதனினும் சிறந்ததாய் விளங்கும் வண்ணமும், இவன் கானம் போய்த் திரும்புவதைக் குறிப்பிப்பதாய்ப் போய்த்திரும்பும் அலைகளையுமுடைய கடல் ஞாபகத்துக்கு வந்தமையின் மறிகடலோ, என விசேட அடைகொடுத்துக் கூறினர். பின்னும் அமையாது, அக்கடலும் காட்சிக்கு இன்பமுடையதாவதன்றி நீர் வேட்கை கொண்டோர் கிட்டி உண்ணற்குதவாத உப்பாய் ஒழிவது நோக்கி, சிச்சீ! ஐயன் உருவம் கட்கின்பமும், கண்டோர்க்கு மேலாய வீட்டின்பப்பயனும் ஒருசேரத்தருவதாயிருப்ப இக்கடலை ஒப்பிட்ட என்புன்மதியின் பேதைமை என்னே? எனவருந்தி மழைமுகிலைக்கண்டு திருப்தியுடன் ஒப்பமைத்தார். அம்முகில், கருநிறத்தானும், இடையே மின்னொளியைத் தோற்றுவித்தலானும், இந்திரவில்லேந்தி இடித்து விடாமல் மாரி பெய்து கோடைத்துன்ப வெப்பகல,

ஓரறிவுயிர் முதல் எல்லாவுயிர்க்கும் ஆக்கந்தந்து வளர்க்கும் பயனுடையதாய், உலகிற்கும் வானுக்கும் இன்றியமையாத தாய்க் கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டினதாய்த், தெய்வீக இயல்பின் மிகச் சிறப்புற்றதாயும் விளங்குமாறே, இவனும் நிறக் கருமையானும், மின்னற்கொடி போன்றுளாகிய மைதிலியோடு மருவுதலானும், சோதண்டவில் ஏந்திவருதலானும், வில் நாணோசை முழக்கி அம்புமாரி பொழிந்து தீயவர் துயர் நீக்கி, நல்லோர் பலர்க்கும் இன்பமுற வாழ்வளித்துத்தன் செய்கைக் குக் கைம்மாறு வேண்டாது கடப்பாடு புரிய வந்த தெய்வ இயல்பினனாதலானும், தனக்குவமையில்லாதானாய்ச் சிறந்து நிற்றலானும், நம் கவிச்சக்கரவர்த்தி மிக முயன்று எண்ணி எண்ணிக் கூறிக்கூறி அமையாமல் மேன் மேலும் கொண்ட ஆராய்ச்சிக்கு ஓர் முடிவு கண்டு மகிழ்ந்து நின்றார் என்றாலும், அம்மழை முகிலும், வேண்டுங்காற் பெய்யாமலும் வேண்டா வழி அதிகம் பெய்தும் கெடுக்கும் தன்மையும் உடையதா மன்றே. ஐயன் திறத்தில் அங்ஙனம் எண்ணுதற்கோரிழுக்கும் இல்லையே! மழை மேகத்தினும் சிறப்புடைய வேறொரு பொரு ளும் தோன்றவில்லையே! படைப்பினும் கண்டிலேனே! அவனை ஒருவாறேனும் உவமித்து மகிழத்தொடங்கிய என் எண்ணம் இளைப்புற்றுத் தோல்வியுறுகின்றதே! எனக்குறிப்பிடுவார் போல் "ஐயோ இவன் வடிவு" என ஆராமையுடன் கூறி முடிக்கின்றார்.

இங்ஙனமே "பிராட்டி அசோகவனத்தில், தனியளாய் இரவில் விளங்கும் சந்திரனால் காமம் மிக அம்மதியை வெறுக் கின்றாள்." என வரும் இடத்தில்

கல்லாமதியே கதிர்வாள்நிலவே
செல்லாவிரவே சிறுகாவிருளே
எல்லாமெனையே முனிவீர்நினையா
வில்லாளனை யாதும் விளித்திலிரோ.

எனச் சாதுரியம்படக் கூறுகின்றார்.

(இதன் கருத்து) மதியே! அதனொடு வேறாகிற்கும் சந்திரி கையே! போகேனென்று அடம் கொண்டு நிற்கும் இராத்

திரியே! நெடு நேரமிருந்தும் சிறிதாவது குறைவு காட்டாது பழையபடியே மிகுத்து நிற்கும் இருளே! நீங்கள் எல்லீரும் ஓர் பேதைப் பெண்ணுகியும் காதலனையே நினைந்துருகும் கற்புக் கடமையில் மாருதவளாகியுமிருக்கும் என்னொருத்தியைத்தானே கோபித்துத் துன்பஞ் செய்யக்கடவீர்கள்! என் தலைவர், நாம் கைதொட்டுக் காப்பாற்றுவதாய் ஏற்றுக்கொண்ட மனைக்கிழத்தி யாதாயினளோ? எனச் சிறிதும் நினையாதாராயினும் அவர் கையில் வில்லிருப்பது கண்டஞ்சி நுங்கள் கூப்பாடு அங்கொன்றும் இல்லை போலத்தோன்றுகின்றதே என்பதாம்.

இதனுள், மதி ஒருவன் தோன்ரு முன்னம் இந்நோய் இவ்வளவு வருத்தந் தராமையை அறிகின்ருளாதலின், இத்தனையும் இக்கொடும்பாவி தோன்றியதால் வந்தது என அம்மதியையே முதலிற்சுட்டி உலக இயற்கை யின்னதென்றறியாத இளம்பருவமுள்ள சந்திரனே! (அதாவது, வயதேற ஏற உலக அநுபவம் முதிர்ந்து, கண்டும், கேட்டும், தானே அநுபவித்தும் பிறரை வருத்தின், உண்டாகும் துன்பம், தன்னை ஒரு வலியவன் வருத்தினற் போல்வதொன்ருமெனத் தோன்றும், இவ்விளமை பிறர் வருத்தத்தை விளையாட்டாக நோக்கும் பேதைமையின்பாற் படுவது என அதன் அறியாமைக்குக் காரணம் காட்டியவாறு; பிறையே என்னுமல் மதியே! என்று விளித்தது, புத்தியின் இயற்பெயரைச் சூடியநீ அப்பெயர்க்கேற்ப ஒரு சிறிதாவது ஒழுகாமல் இவ்வாறு செய்தல் அடாது எனக்கடிந்தவாறு:)

இனி, அம்மதியை வெறுத்தவள், இம்மதியம் சில பகலிற் கூட மேற்றிசையில் காணத்தோன்றும். அப்போது அதன் ஒளி சூரியன் ஒளியாற் கவரப்பட்டு மழுங்கிச் செயலற்றுஒழியும். இவ்விரவில் சூரியன் இல்லாமையால் அவ்வொளி தருக்குற்று என்மேற் பாய்வதாயிற்று, ஆம், இம்மதி என் செய்யும். அந்தோ பாவம்! அது வானில் ஒரு பக்கத்தில் நிற்பது. பூவுலகிலுள்ள என்னை அது துன்புறுத்துவது, அதனிடத்தே தோன்றி என் உடல் ஊடுருவும் வரையில் மிக நீண்டு வந்து தீண்டி சானை பிடிக்கப்பட்டதோர் நெடிய கத்திக்கொப்பாய் என்னைப்

போழ்வது இந்நிலவன்றே? எனப்பின் கண்டு மதியைவிட்டு "கதிர்வாள் நிலவே! என அதனை வைதனள். பின்னும் நோக்கு கின்றாள். இந்நிலவு தான் என் செய்யும், இவ்விரா வில்லா விடத்து, நேற்றுப்பகலில் இந்நிலவு மதியோடு கூடியும் இவ்வாறு துன்புறுத்தவில்லையே! ஒரோர் காலம், ஒவ்வொரு அற்பரையும் வலியையுடையவர்களாக்குவதியல்பே. ஆதலின் இவ்விராக் காலமே என் பெருந்துன்பத்துக்குக் காரணமாய் நிற்கின்ற தெனக் கண்டாள். கண்டு இரவே! இதுகாறும், என்னைப் பலமாய்த்தாக்கியும் நின்வலி சிறிதும் குறைபாமலும் நீ சற்று நகர்ந்து செல்கின்றாய் என்றெண்ணி நான் சற்று மகிழ்தற்கிட மில்லாமலும் நிற்கின்றனையே? என அதனை வெறுக்கலுற்றாள். பின்னும் கருதுகின்றாள். இவ்விரவு குடிகொள்வதெல்லாம் இருளின் பெருக்காலன்றே! பாழ்த்த இப்பொல்லாத விருள் போய்த் தொலையுமாயின் இவ்விராவும் சொல்லாமல் ஓட்ட மெடுக்குமே என நினைத்து, "சிறுகா இருளே" எனக் கடி கின்றாள். நாழிகை உள் நாளாய், நாட்கள் மாதம் முதலிய வாய்க்காலம் செல்லச்செல்ல உலகப்பொருட்கள் பலம் குன்றித் தேய்ந்து அழிந்தொழியக் காண்போம். ஓர் யுகம் போலத் தோற்றும் நெடுங்காலமாய் இவ்விராவில் எதிர்த்து நின்ற, சிறி தும் குறைவுபடாத சிரஞ்சீவியாய் வாழ்கின்ற இருளே! ஏன் இவ்வளவு கொடுமை புரிகின்றாய் என இருளைச்சீறுவாளாயினள். இங்ஙனம் காரணகாரிய முறையாய் எண்ணினவள் மிகச் சலிப் புற்று, பாவத்தினால் விளையும் பாவமனைத்தும் துன்பம் பெருக் கும் தொகுதியினங்களே. ஆனதால் இவ்விருள் முதல் மதி வரையில் உள்ள எல்லாம் ஒன்று கூடி என்னை வாட்ட வந்த கொடியனவே! என்பாள் "எல்லாம் எனையே முனிவீர்" என்று கூறினாள். "எனையே முனிவீர்" என்பதில், தான் ஒருத்தி யென்பதும், தன் மேல் பகைத்து வருத்தும் அவைகள் பல வென்பதும் அதனால் அது போர்புரியும் அறம் அன்றென் பதும், மேலும் தான் ஒரு பெண், கற்பு நிலைமைதவறாதவள் ஆதலின் தன்பாற் குற்றமுமில்லை. குற்றமில்லாரை ஒறுத்தல் நீதியன்று என்பதும் அடங்கியவாறு கண்டு மகிழ்க. இனிக்

குற்ற முடையார் ஒருவர் உளர். அவர் ஓர் ஆடவர். மேலும் வில்லும் கையிலுடையவர். அவர் பால் நீங்கள் சென்று அறம் செய்தால் எனக்கு நன்மையும் உங்கட்குப் புகழும் உண்டாகும். ஆனல் நீங்களோ அது செய்யமாட்டீர் என்று குறிப்பிப்பாள். "நினையா வில்லாளனையாதும் விளித்திலிரோ" என்றாள். இராமனை "நினையா வில்லாளன்" என்றமையால் தான் அவனை என்றும் மறவாத நெறியை உணர்த்தினள். நான் அவனை நினைப்பது போலவே அவனும் என்னை நினைக்கும் கடமையில் தவறுற்றான் என்றவாறு. அவனை நீங்கள் அணுகமாட்டீர், என்று பரிகசிப்பாள், அவன் வில்லாளன். அருகில் சென்றால் வதைப்பான் என்று அஞ்சினீர்கள் எனச் சூசனை காட்டி. (தொடரும்.

---

# அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திரவுண்மை

## பரிசு பெற்ற கட்டுரை

[அ. மு. சரவண முதலியார்]

### (க) தோற்றுவாய்

முற்காலத்திலிருந்த பெரியோர்களின் வரலாற்றுண்மையை அறிந்து கோடற்குக் கருவிகளாகவுள்ளன பல; அவை அகச்சான்று, புறச்சான்று, கல்வெட்டு முதலியன. அகச்சான்றை ஆதரவாகக் கொண்டு கூறப்பட்ட. புறச்சான்றுகள் எவ்வகையானும் எள்ளப்படாதன வாகும். அகச்சான்று ஆதரவில்லாத பகுதிகள் புறச்சான்றிற் காணப்படுமேல் அவற்றைக் கூறியவர் கூறப்பட்டார் காலத்திற்கு அண்மைக் காலத்திற் றோன்றியவராய், சரித்திர வுணர்ச்சி, உலகிய லுணர்வு, புனைந் துரைக்கு அஞ்சுதல் முதலியன வுடையராய் இருந்திருப்பரேல் அவர் கூற்றும் வலியுடையதாகும்.

இனி, இவ்வாதரவுகளைக் கொண்டு சரித்திரவுண்மை காண்

பவர் அச்சரித்திரத்தில் அத்தலைவர்களாற் செய்யப்பட்ட செயற்கரிய செயல்கள் காணப்படுமேல் அவற்றின் உண்மையை அறியுங் கருவியாகிய யோகக்காட்சி கொண்டு அறிய வேண்டுமேயன்றி அதற்கு வேறுபட்ட துறையினின்று கொண்டு 'அவை மக்கட்டன்மைக்கு மீறியன' என்று கருதி அவையிற்றைப் பொய்யெனக் கூறுதல் அறிவுடைமையாகாது. எனவே சரித்திர வுண்மை காணும் கருவி வேறு; செயற்கரிய செயல்களின் உண்மையை அறியுங்கருவி வேறு என்பது பெற்றாம்.

இனி, அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திரத்தைப் 'பெரிய புராணம்' என்று வழங்குகின்ற 'திருத்தொண்டர் புராண'த்தில் விரித்துக் கூறியருளியவர் 'சேக்கிழா' ரென்னும் புலவர் பெருமகனாராதலின் முதலில் அவர் தன்மையைத் தெரிந்து கோடல் இன்றியமையாததாகும்.

(உ) சேக்கிழார்

திருத்தொண்டர் வரலாற்றைக் கூறத் தொடங்கிய இவர் தில்லைக்குச்சென்று திருக்கூத்தன், திருமுன் நின்று பருகற்கினிய அப்பரங்கருணைத் தடங்கடலை உருகிப் பெருகி யுளங்குளிர முகந்துகொண்டு அதனைப்பாடி முடித்தற்குரிய ஆற்றலைத் தனக்குத் தந்தருள வேண்டுமென்று குறையிரக்க, அவ்விறைவனது இன்னருளால் 'உலகெலாம்' என்னும் ஒலி அசரீரியாக எழுந்தது. இவ்வுண்மையை,

"அருளினீர்மைத் திருத்தொண்டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல்கூறிய
பொருளி னாதுமெனப் புகல்வாமென்றே"

என்னும் செய்யுளால் அவரே விளக்கியருளினார்.

இங்ஙனம் வானிழல் கூறியது கொண்டு அனைத்தையும் பாடி முடித்தாரெனக் கூறுவர் சிலர். அது அன்புக்கண் ஒன்றுமட்டுங் கொண்டு கூறுவதாகும். அதனோடு ஆராய்ச்சிக் கண்ணையுங் கொண்டு நோக்கினால், அவர் வன்றொண்டர்

அருளிய 'திருத்தொண்டத் தொகை'யையும் ஏனைய தேவாரங் களையும், நம்பியாண்டார் நம்பியின் 'திருத்தொண்டர் திருவந் தாதி'யையும் ஆதரவாகக் கொண்டு ஒவ்வொரு அடியார் இருந்த ஊருக்கும் தாமே சென்று ஆங்காங்குள்ள குறிகளையுஞ் செவிவழிச் செய்திகளையும் கண்டும் கேட்டும், தாம் அமைச் சராக இருந்தமையின் அறிஞர் பலரை ஏவி உண்மைகளை அறிந் தும், இவ்வாதரவுகளுடன் தாமும் தம் அறிவுக்குப் பொருந்த நன்கு ஆராய்ந்துமே பாடி முடித்தனர் என்பது நன்கு புலனா கும். இதற்குப் பல எடுத்துக் காட்டுகள் உள ; எனினும் நமக் குப்பொருள் இது இல்லையாதலின் விரித்திலம்; ஆனாலும் அவர் தம்மால் துணிய முடியாதவற்றை எங்ஙனங் கூறிப் போந்தன ரென்பதை மட்டுங் காண்போம்.

நம்பியாண்டார் நம்பி கூறாது விட்டமரபையும் ஊரையும் நாயன்மார் சிலருக்குக் கூறிச் சென்றிருப்பதை நோக்க அவர் பல வகையாலும் உண்மை யறிந்தமை புலனாகும். 'இதனைப் புனைந்துரையாகக் கொள்ளலாகாதோ' வெனின் நாயன்மார் சிலரின் மரபினைக் கூறாது போந்தனராகலின் அங்ஙனங் கொள் ளுதற்கில்லை யென்க. இன்னும் அவர், திருநாவுக்கரசு திருப் பதிகத்தொகையைத் திருநாவலூரர் திருநின்றியூர்த் தேவா ரத்தில்,

'இணைகொ ளேழெழு நூறிரும் பனுவலீன்ற
வன்றிரு நாவினுக் கரையன்'

எனக் கூறியிருப்பதையும், நம்பியாண்டார் நம்பி 'திருநாவுக்கரசு திருவேகாதசமாலை'யில் அதனையே,

'பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி'

எனக் கூறி யிருப்பதையும் நோக்கி, தொகை நூலாசிரியரும் வகை நூலாசிரியரும் 'ஏழெழுநூறு' என்னும் எண்ணின்கண் மாறுபடாது 'பனுவல்' என்றும், 'பதிகம்' என்றும் கூறுவதிற் றுணிந்து ஒன்றன ஏற்காது,

வேட்கை செயல்களைப்பற்றி நிகழ்கின்றன என்று நாம் உலகப் பழக்க அறிவில் (அனுபவ அறிவில்) கண்கூடாக அறிகின்றோம். இந்த அறிவு வேட்கை செயல்கள் உலகிலுள்ள பல்வேறு மக்களிடம் பலவாறாக இருக்கின்றன. உலகில் எத்தனை மக்களிருக்கிறார்களோ அத்தனை வேறுபாடுகள் அறிவு வேட்கை செயல்களில் உள என்று நாம் சொல்லலாம். இன்னும் மக்களுக்குக் கீழ்ப்பட்ட பலவகை உயிர்களிலும் வேறுபாடுகளிருக்கின்றன. இவ்வாறு வேறுபாடுகள் பலவாயிருப்பதால் உயிர்களும் பலவாயிருத்தல் வேண்டும்.

5. இனி இந்தப் பல வேறு வகையான குறைவுகளை உடைய உயிர்களுக்கு அவர்களுடைய குறைவுகளை, நீக்குகிறதற்கு அவைகளின் வேறாய்க் குறைபாடு இல்லாத கடவுள் இருத்தல் வேண்டும். கடவுள் உயிர்களுக்கு வேறான பொருளாயிருந்தாலும் அவைகளுடன் வேறற ஒன்றி நின்று அவைகள் ஒவ்வொன்றினுடைய குறைவை உணர்ந்தாலொழிய அவன் அவைகளுடைய முயற்சிக்குத் தக்கவாறு அவைகளுடைய குறைவை நீக்குதல் முடியாது. அப்படி ஒவ்வொரு உயிரிலும் ஒன்றி நிற்கிறவன் ஒருவனாயே இருத்தல் வேண்டும்.

6. இனி, கடவுள உயிர்கள் ஒவ்வொன்றுக்கு முள்ள குறைவுகள் அறிந்து உணர்ந்து நீக்குதல் அவன் அவைகளை ஆளுதல் ஆகும். அவன் தன் பொருட்டல்லாமல் உயிர்கள் பொருட்டே இந்த ஆளுகையைச்செய்கின்றான். இந்த ஆளுகைச் செயலை, நாம் இயற்கை நிகழ்ச்சிகளை உற்று நோக்கினால் நமது அறிவின் அளவில் நாம் அறியலாம். இறைவன் இந்த ஆளுகைத் தொழிலுடையவன் ஆதலின் ஆண்டான் என்றும், உயிர்கள் அவனது ஆளுகைக்குள் அடங்கி யொழுகித்தங்களுடைய அறிவு வேட்கை செயல்களுடைய குறைவை நீக்கிப்பேரின்பம் அடைய வேண்டியவர்களாயிருத்தலின் அடிமைகள் என்றும் சைவ சமய நூலிற் கூறப்படுகின்றார்கள். ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையைப்பற்றி விரிவான கருத்துக்களுக்குச் செந்தமிழ்ச் செல்வி 2-ம் சிலம்பு 127, 173, 278 பக்கங்கள் பார்க்க.

7. ஒரு புடையாக (ஏகதேசமாக) உலகில் அரசன் தன் குடிகளுக்கு இந்த ஆளுகைத் தொழிலைச் சிறிதும் தன் பொருட்டின்றிக் குடிகள் நலத்தின் பொருட்டுச் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றான் என்று தமிழ் நூல்கள் கூறுகின்றன. அதனால் கடவுளைக் குறிக்கிற இறைவன் என்னும் சொல் அரசனையும் குறிக்கின்றதாகின்றது.

8. ஆண்டவன் என்ற சொல் ஆண்டான் என்று வழங்கப்படுதலுமுண்டு. ஆண்டவன் என்ற சொல்லை, இப்பொழுது பிற சமயத்தவர்கள் எல்லாரும் கடவுளைக் குறிக்க வழங்கி வருகிறார்கள். ஆயினும் ஆண்டவன் என்ற சொல்லில் அடங்கியுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையை, அவர்களில் வைணவச் சமயத்தார்கள் தவிரப், பிறசமயத்தார்கள் கொள்வதில்லை. இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மைச் சைவ சமயத்துக்கே சிறப்பாக உரியது. ஆண்டான் என்னும் சொல்லில் அடங்கியுள்ள மேற்கண்ட கருத்துக்கள் பண்டைத் தமிழ்மக்கள் சைவ சமயக் கொள்கையர்கள் என்பதைப் புலப்படுத்துகின்றன.

9. ஈஸ்வரன் என்ற வடமொழிச் சொல்லினது வேர்ப்பொருள் ஆளுகிறவன் என்பதே யாகும். ஆனால் சுமார்த்தப் பிராமணர்கள் பெரும்பான்மையும் ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையைக் கொள்ளுகிறவர்களல்லர்.

---

# நட்பும் அடக்கமும்

[காழி. சிவ. கண்ணுசாமி, B. A.]

ஒருவனுடைய நண்பரைக் கொண்டு அவன் பண்பினை யுணர்தல் எளிது. என்னை ? ஒவ்வொருவரும் தன்னை யொத்த பண்பும் நடையும் உடையோரையே நாடி நட்பாட விழைவராகலின், தெள்ளென்னும் அறிவு படைத்தோர், கள்ளுண்ணுங் கசடர்களைக் காணவும் விழையார்; வருவாயுட் கால் வழங்கும் பெற்றி யுடையோர் பெருவாரிச் செலவினரைப் பார்க்கவு மிசை

யார்; நன்னெறி பயின்று நலம்பட வாழ்வோர் புன்னெறி பயிலும் பேதையை நாடார். கற்றாரைக் கற்றரே காமுறுவர்; கற்பிலா மூர்க்கரை மூர்க்கரே முகப்பர். இதுவே இயற்கை. பாடகர்களும், நடிகர்களும், மற்போர் வல்லோர்களும், சுருட்டுப் புகைப்போர்களும் ஒன்ருகக் கூடி அளவளாவ விழைவது மியற்கையே. ஆயினும் வாயாடி வம்பர்கள் என்னும் பெயருக் கிலக்காம்படி ஒரு சிலர் வீண்பேச்சு பேசுவதற் கென்றே ஒன்று கூடி வேறென்று மின்றிப் பேசியே காலங்கழிக்க விழைகின்றனர். இது பெரிதுங் கண்டிக்கற் பாலதாகும். இளைஞர்கள் இயற்கையாகத் தம்மை யொத்த வயதுடையோரின் நட்பையே நாடுவர். ஆனல் அவ்வாறு நாடுங்கால் "குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்ருவினனு மறிந்தியாக்க நட்பு" என்பதைக் கருத்திலிருத்திக்கொள்க. என்னை? நாடாது நட்டலினும் பெரியதோர் கேடில்லை யாகலின்.

நட்பாராயுங்கால் தம்மையொத்த குடிப்பிறப்போ அன்றி வாழ்வோ உடையோராக வாய்ந்து நட்பு கொளல் வேண்டற் பாலதாகும். நேருக்குநேர் ஒத்ததாக அமையாது போயினும ஒரு சிறிது ஏறத்தாழ விருப்பினும் எய்தக் கடவதோர் இழுக் கில்லை. ஆயினும் தம்மினும் மிக மேம்பட்டோரைக் கீழ் நிலையி லிருக்கின்றேம் என்ற உணர்வுடன் நாடுதல் கூடாது. என்னை? அடிமை யென்னும் ஆகுலப்பேய் அந்நொடியே விடாது பற்றிக் கொள்ளு மாகலின். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்பது உண்மையாயின் ஐந்தில் வளைந்தது ஐம்பதில் நிமிராது என்பதும் உண்மையேயாகும். இளமையில் கொண்ட அடிமை யுணர்ச்சி முதுமையில் விட்டகலுதல் அரிதிலுமரிது. எனவே "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை தான் சாந்துயரந் தரும்" என்ற மறைமொழியை யறிந்து கொள்ளுதல் இளைஞர்தந் தலையாய கடனும்.

நண்பர்களுடனும் மற்றையோருடனும் பழகுங்கால் மூர்க்கமாகவும், கண்டிப்பாகவும் இருக்கவிழைதல் சீரிதன்று. ஆனல் மூர்க்கமாகவும் கண்டிப்பாகவும் இருந்தாலும் இருக்கலாம், பல்

லைக் காட்டிக் கொண்டும், மண்டியிட்டுக் கொண்டும் மட்டும் எக்காலத்திலும் இருத்தலாகாது. அடங்கியிருத்தல் ஆண்மையே, ஆனால் அடிமையாயிருத்தல் அதன் நேர் மாறாகும். அடங்கவேண்டிய விடத்து அடங்குதல் ஒழுக்கத்தின் பாற்படுமேயன்றி யிழுக்கமாகாது. ஆனால் "தங்கள் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன்" என்று ஒவ்வொன்றிற்குங் கூறுங் கொடிய வழக்கமான அடிமைத் தன்மையையே அகலவிலக்க முற்பட வேண்டும்" கொடுக்குமொன்றை யேற்பதற் கென்றே கைகள் படைக்கப் பட்டதாயின் கால்களிற் சமர்ப்பிப்பதேனோ? இந்நினைவே அருவருப்பை யளிக்குமே! எனவே அடிமையை யகற்றி அமரருளுய்க்கும் அடக்கத்தைக் கைக்கொள்ளுதல் இளைஞர்க் கழகாகும்.

---

## கருமை

[திரு. கபசம் எழுதியது]

(௧௱௭௫-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு நாள் சென்னையை யடுத்துத் தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்த புகை வண்டித்தொட ரொன்றின் ஒரு பகுதியிற் கூடியிருந்த மக்களுக்குள், பின் வருமாறு பேச்சு நிகழ்ந்தது:—

"வைகை பெருகிக் கரை யுடைந்து வெள்ளம் புரண்டு, அதிகப்பொருட்சேத மேற்பட்டதாமே."

"ஆம், ஆம்; மதுரை முழுவதும் பெரிய குழப்பமாயிருக்கிறதாம். இன்னும் வெள்ளம் நின்ற பாடில்லையாம். பத்திரிகைகளிலெல்லாம் பத்தி பத்தியாய் இதைப்பற்றி எழுதியிருக்கிறது."

"வருண பகவான் மீறி வந்து விட்டால் யார் எதிர்த்து நிற்க முயுடிம்.?"

"வாஸ்தவம், வாஸ்தவம்; வருணனை வெல்ல எவராலாகும்.?"

வண்டியினொரு மூலையிலிருந்து இப்பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த ஒருவர் இடையிற் புகுந்து,

"வருண பகவான் மீறி வந்து விட்டால் ஒருவராலும் எதிர்த்து நிற்க முடியாதென்று முடிவு கட்டி விட்டீர்கள். நல்லது, அக்கினி பகவான் மீறி வந்து விட்டால்?'' என்று கேட்டார்.

"அதையுந்தான் யாராலுந் தடுக்க முடியாது'' என்று விடை பகர்ந்தார் முதலிற் பேச்சைத் தொடங்கியவர். இடையிற்புகுந்து பேசியவர் இவரை நோக்கி,

''நீர்மிகிற் சிறையுமில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலுமில்லை
வளிமிகின் வலியு மில்லை'                    (புறநானூறு 51)

என்றபடி, ஐம்பூதங்களில் எது மீறி வந்தாலும் அதைத்தடுக்க எவராலும் ஆகாது என்றல்லவோ சொல்லவேண்டும்?'' என்று வினவினர்.

''நீங்கள் சொல்வது உண்மை தான்; ஆனால், பொதுவாகப் பேசும் பொழுது ஒன்றை உயர்த்தியும் மற்றொன்றைத் தாழ்த்தியுந்தான் பேசுகிறோம்'' என்று விடை கிளம்பிற்று.

பொதுவாகப் பேசு முறையில், எவ்வகையாலோ உளத்தைக் கவர்ந்த ஒரு பொருளை எல்லாவற்றினும் பெரிதாகவோ, கொடிதாகவோ, இனிதாகவோ இடத்திற்கேற்ப நவில்வது வழக்கம். வருணனைப் பற்றிப் பேசும்பொழுது அக்கினியின் உரம் மறைகின்றது. அக்கினியைக் குறித்து உரையாடுங்கால் வருணனின் வன்மை குறைகின்றது. இக்கட்டுரையின் முற்பகுதியிற் கருமையென்பது இருள், மலம் என்பவற்றுடன் சேர்ந்து அஞ்சத்தக்க ஒன்றாய் விளங்கிற்று. இது வருணன் மீறி வந்ததையொக்கும். எங்கும் வெள்ளக் காடாகின்ற போது நீரின்மேற்றோன்றும் வெறுப்பிற்கிணங்கக் கருமை பெருகி நின்ற நிலையிலதனின்னாமை மிக விரிந்து வீங்கிற்று. பிறகு, வெப்பமிகுந்த நாட்டில், சூட்டாலும் வெளிச்சத்தாலு மக்களுறுந் துன்பத்தைக் கருதியவிடத்து, வெயிலினின்னாமை

வெளிப்படத்தொடங்கிற்று. இஃது அக்கினி மீறி வந்ததை யொக்கும். பெருந் தீப்பிடித்தெரியுங்கால் நெருப்பின் மேற் பிறக்கு மருவருப்புப் போன்று, ஒளியோங்கி நின்ற நிலையிலதன் கொடுமை குவிந்துயர்ந்தது. நீர் பெருகி, உயிர்க்கும் பொருட்டு மின்னல் விளைப்பது காணுமொருவன், வெள்ளத்தின் கெடுதியை மிகுத்துக் கூறுமாறு, கருமையின் தீயபகுதியை யாய்ந்த விடத்து அதன் கொடிய தன்மையை அழுத்தித் தீட்ட வேண்டியதா யிற்று. நெருப்பு பரவி வீடுகளை எரித்து வீழ்த்துவதைக் காணு மொருமகன், அழலின் வெம்மையை உயர்வு நவிற்சி வகையால் வெளிப்படுத்துவதை யொப்ப, ஒளியின் வெப்பத்தைப்பற்றி உரை எழுந்த போது அதன் காயுந்தன்மையை உயர்த்திக்கூறலா யிற்று.

காருங்குடையு நிழலு மிருளுங்கருமையின் பாற்படுமென்று பன்முறை முன் சொல்லியாயிற்று. காருநீரு மொன்றே.

> "காரென்றும்பேர் படைத்தாய் ககனத்துறும் போது
> நீரென்றும்பேர் படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்"
>
> (தனிப்பாடற்றிரட்டு)

நீருக்குத் தலையாம் பண்பு தட்பமாகும். குடையு நிழலுந் தண்மை செய்வன வாதலால், நீருடன் பற்றுடையனவேயாம். நிறங்கொண்டு நோக்குங்கால் நீருமிருளு மொன்றே. ஆழமான தூயநீரின் தோற்றத்தாலும், நீருக்கு நிலையாகிய கடலின் தோற் றத்தாலு மிஃதறியப்படும். நீரிற்றண்மை போல், இருளிலுங் கருமையிலுங் குளிர்ச்சி யுண்டென்பது மிதை வலியுறுத்தும். இங்ஙனம் நோக்குழி, கருமையு நீருந்தண்மையு மொன்றை யொன்று பற்றி நிற்குந்தன்மை புலப்படுகின்றது.

கருமையுடன் நீலத்தையுஞ் சேர்த் தெண்ணல்வேண்டும். எனெனின், கருமைக்கு நீலத்திற்கு முள்ள வேற்றுமையினு மொற்றுமை பெரிது. மற்றும், பழைய தமிழ் நூல்களிலெல் லாம் 'கருமணி' என்பதை நீலமணியென்ற பொருளிலேயே வழங்கியிருக்கிறது. கார்மேகம், நீலமேகம் என்பவற்றுள் வேற்றுமை யொன்றுங் காண்கிலம். கருமை போன்று நீலமுந்

தட்பமுடையதாகும். விசும்பின் நீலநிறங் குளிர்ச்சி யுடைய தென்பது நுகர்ந்தறியப்படும். நெடுங்கடலு நீலங்கருமை யாகிய விருநிறமுங் கொண்டிலங்குகின்றது.

நிற வரிசையில் நீலத்திற் கடுத்தபடியிலுள்ளது பச்சை. இதுபற்றிப் பின்னர்க் கூற விடமுண்டு. நீலத்தைப் பிடித்த கருமை பசுமையையுந் தொடர்கின்றது. பசுமையுங் குளிர்ச்சியு மேறக்குறைய ஒரு பொருட் பன்மொழிகளேயாம்: செழிப்பு, பசுமை, வளம் என்பவற்றோடு 'நீர்' என்ற கருத்து கலந்து நிற்கின்றது. பசுமையென்பது பெரும்பாலும் புற்பூண்டு மரஞ் செடி கொடி பயிர் முதலிய உயிர்த்தொகுதியை யொட்டி நிற்கின்றது. மரஞ்செடி கொடிகளின் பசுமை நீரின்றி நிலையாது. வீடுகளிற் குளிர்ச்சிக்காகச் சுவர்களிற் பூசப்படும் நிறங்கள் நீலமும் பசுமையுமே. படிக்கும்போது கண்ணிற்குக் குளிர்ச்சி யுண்டாம் பொருட்டுப் பச்சைக் கண்ணாடியா லாக்கப்பெற்ற மேல் மூடுடைய விளக்குகளைக் கற்றோர்கள் வைத்துக் கொண் டிருப்பதை நாமறிவோம். ஆதலின் நீலம், தண்மை, புனல் என்பவற்றோடு பசுமையும் பொருந்திக் கருமையிற் புகுந்தது.

ஐம்பெரு முதற்பொருட்களில் (மேலிருந்து கீழிறங்கு முறையில்) நான்காவதாகிய புனலே கருமையாமெனின், ஐந் தாவதாகிய நிலம் அதனினுங் கரியதாக வேண்டும். நிலத்தைக் கரியதென்பது நிறங் கொண்டன்று, பண்பு கொண்டு. ஒரு வகையிலிதைக் காட்டுதும். 'மண்டிணிந்த நிலனும்' எனுமிரண் டாவது புறநானூற்றுச் செய்யுளில், நிலத்தின் தன்மை பொறுமையென்று புகன்றார். பொறுமை யென்பது தட்ப மாகும். பொறுத்தலும் ஆற்றுதலு மொன்றே. ஆற்றுதலா வது வெப்பத்தை நீக்குதல். "கொதி நீரை ஆற்றிக்கொடு" எனும் உலக வழக்கை நோக்குக. "பொறுத்தவர் பூமியாள் வார், பொங்கினவர் காடாள்வார்" என்ற பழமொழியில், 'பொங்குதல்' என்பதன் குறிப்பைக் கொண்டு பொறுமை தட்ப மாகுந் தன்மையை நன்குணரலாம். இதனால், நீருடன் நிலத் தைச் சேர்த்திரண்டையுங் கருமையின் கீழ்க்கொணர்தல் கூடும்.

ஆயினும், நிலத்தைக் கருமையுடன் சேர்ப்பதற்கித்துணையாம் வருந்த வேண்டியதில்லை. கருமையாவது மலம். மலமென்பது சடப்பொருள், சடப்பொருளில் மிகத் திண்மைபெற்றது நிலம். இவ்வகையில் நிலமென்பது கருமையிற் கருமையாய்த் திகழ்கின்றது.

இங்ஙனம், நீர், நிலமென்ற முதற் பொருட்களும், நீலம், பசுமையாகிய நிறங்களும், தண்மையாகிய பண்பும், முன் கூறப்பட்டவற்றுடன் கூடிக் கருமையிலடங்கின.

கருமை யென்பது ஒரு நிறமன்று; நிறமின்மையே கருமையென்பதைக்கருத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். வெண்மையென்பதும் நிறமன்று; எல்லா நிறங்களுமொன்று கூடிய நிலையே வெண்மையாவது. பொருட் பண்பு நூலார் (Physicists) கண்ட உண்மையிது. நிறமின்மையென்று கருமையை இன்மையில் வைத்துரைப்பதே அதன் தன்மைக்குப் பொருந்திய உரையாகும். உள் பொருளாகிய ஒளி குன்றி யொடுங்கிய நிலையிலிருள் வந்து மூடுவது காண்கின்றோம். ஒளியின்மையே இருளாவதன்றிப் பிறிதொன்றில்லை. ஆதலின், இருளை இல்பொருளென்றுஞ் சொல்லலாம். ஆனால், 'இப்பொருள்' என்ற தொடர் பொருள் மயக்கம் பயக்குமாதலால், அதை விலக்குவது நன்று. ஒளி யென்பதை யுள்பொருளென்றும், இருளென்பதை எதிர் மறைப்பொருள் (எதிர் மறை பொருள்?) என்றுங் கூறுதல் சாலும். ஒளிக்கு மிருளிற்கு முள்ள தொடர்பே நிறத்திற்குங் கருமைக்கு முண்டென்பதைக் கருத்திற் கொள்ள, நிறமென்பது உள்பொருளென்பதும், கருமை யென்பது எதிர் மறைப்பொருளென்பது மெளிதில் விளங்கும். உள்பொருளென்று மெதிர் மறைப்பொருளென்றும் யாங் கூறுவதை ஆங்கிலர் முறையே Positive, Negative, என்கிறார்கள்.

(தொடரும்.)

---

# திருஞான சம்பந்தர்-செந்தமிழ் நாடகம்

(திருவாளர் S. முத்துக்குமாரசாமியா பிள்ளையவர்கள்)

(௨௬௭-ம் பக்கத் தொடர்ச்சி)

அமமையார்:-நாம், நமக்குள் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தால் நோய் எவ்வாறு நீங்கும்: அரசரிடமே, நமது கருத்தைச் சொல்லுவோம். (என்று இருவரும் அரசன் முன் சென்று வணங்கி)

என் உள்ளுறை வாழ்வே,

இவ்வமணர்கள் செய்த பொருந்தாச் செயல்தான் இந் நோய் பெருகியது. இதற்குத் தீர்வு பிள்ளையார் அருள்தான். காயமும் மனமும், கழுவா மாசுடை, இவ்வமணர்கள், செய்யும் மாயங்கள், இந்நோயை வளர்ப்பதேயாகும். திங்களணி வேணியார் ஞானம் பெற்றார், வந்து, விரும்பி, நோக்கினுற் போதும். இத் தீப்பிணியே யன்றிப் பிறவியுந் தீரும்.

அமைச்சர்:—பேரன் புடைய மன்னர் பெருமானே, நின் வருத்தங் காண மனமிக வுடைகின்றேம்.

"நோய் நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும்
வாய் நாடி வாய்ப்பச் செயல்"

என்பதே கோடல் தகுதியன்றோ. எமது அம்மையார் கூறுவதும் குறிக்கொளற்பாலதே. நமது நிழற்கீழ் வாழ்வார் ஒருவற்கு ஒரு தீங்கு, அதிலும், நெருப்பு வைத்தல், மற்றவருக்கு இழைத்தாராயின், நாம் நீதிசெய்தல் அறம். அயலூரிலிருந்து ஒருவர் வந்தாரென்றால் அவருக்கு யாதொரு தீங்கும் நிகழாது பார்ப்பது நம்மைப் பொறுத்த கடனே. வந்தவர் தாமும் மக்களுள் ஒருவரோடு எண்ணுந் தகையுடையாரல்லர். ஒரு சமய குருவாய் எழுந்தருளி வந்திருக்கின்றார். அவர் பெருமையுடையவராக இருப்பினும், இல்லாது போயினும், அவர் தங்குமிடங்களில் ஒருவித இடையூறும் உறாத வண்ணம் பார்ப்பது நமது

கடன். இப்பவோ, நம்மை யறிந்தோ, யறியாதோ பெரியதோர் தீங்கு அவர் இருந்த மடத்து நிகழ்ந்துவிட்டது.

"ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்"

என்ற வள்ளுவர் வாக்கும் கருதற் பாற்றன்றே. எப்படியும், வருந்தும் அப்பெரியார் மனத்தைச் சாந்தப் படுத்தவேண்டும். "சான்றோர் சினம் நீரெய்த வடுப்போல் மாறும்" எப்படியும். அப்பெரியாரை அழைத்துவந்து, நோய் தீர்க்க முயல்வது நலம்.

அரசர்:—"(திருஞானசம்பந்தர்" என்னும் பெயர் மன்னன் கேட்டதும் அயர்வு நீங்கினன்) சைவ மறைச் சிறு வருற்றால் நோய் தீருமா? பார்ப்போம். எவ்வாறாயி னும் சரி. இன்று, யாவர், யானுற்ற பிணியை நீக்கு கின்றார்களோ, அன்னவர்களே, வென்றவர்கள். அவர் கள் பக்கந்தான் நான் சேர்வேன். அதற்குச் சம்மத மாயின், அழைத்து வாருங்கள். (உடனே அம்மை யாரும் அமைச்சரும் ஞானவள்ளலார் தங்கும் மடத் திற்கு ஏகல்).

ஆறுவது அங்கம்: முதற் காட்சி:

இடம்:—சைவ மறையவர் வாழ் மடம்:
காலம்:—முற் பகல்:
நடர்:—திருஞான சம்பந்தர், மங்கையர்க் கரசியார், குலச் சிறையார்:

மங்கையர்க் கரசியார் சிவிகையிலும், குலச்சிறையார் குதிரையிலும், பல்லோர் புடைசூழத், திருஞான சம்பந்தர் திரு மடம் வந்து, அங்கு காவலாயுற்ற அடியவரை நோக்கி வேண்டல்.

குலச்சிறையார்:—(காவலரை நோக்கி).

அன்ப,
பாண்டி தேவியாரும், அமைச்சனும், வந்திருப்ப தாகக் கூறி விடை பெற்று வர, வேண்டுகிறேன்.

காவலர்:—அப்படியே செய்கின்றேன். (வணங்கிக் கூறல்).

(காவலர் திருஞான சம்பந்தர் திருமுன் சென்று, வணங்கி நின்று) எங்கள் நாயக,

நமது சோழ மன்னன திருமகளாரும், அன்பிற் சிறந்த அமைச்சனுரும் இங்கு வந்துளார்கள். திருவடி காண அவா வுறுகின்றனர்.

திருஞான சம்பந்தர்:—விரைவில் அழைத்து வருக.

இருவரும் உட்சென்றதும், பிள்ளையாரைக் கண்ணுரக் கண்டார்கள்.

மங்கையர்க் கரசியார்:—ஞானவடிவே,! மறைத்துணையே! மதிக் கொழுந்தே!, அமண்கொடியோர், தீங்கு செய்தற் கும் துணிந்தனரே, நின், அருளொளி கண்டும், மாறினுரில்லையே. (என்று கண்ணீர் வடித்து, கை குவித்து, திருவடிக் கீழ் நிலமுற விழுந்து - அலறி, உரை குழறி, ஒன்றும் அறிந்திலராகிக் கிடந்தார்).

குலச்சிறையார்:—சிவனுர் மகனுரே!, ஞானத்தின் எழுபிறப்பே!, நின் வடிவிற்கும் தீங்கு செய்ய உன்னினரே. (என்று அலறி, உரைகுழறி, விழுந்து புரளல்).

திருஞான சம்பந்தர்:—இருவர் பக்கலும் விரைந்தோடி எடுத்து, அன்புடையீர்களே,

உங்களுக்கு உற்றதென். வருந்தாதீர்கள். இறைவன் அருள் உங்கள் பால் ஆகுக: (இருவரும் பேசாது மீண்டும் மிக்க துன்ப முற்றிருந்ததைக் கண்ட, சம்பந்தர்) மீண்டும் அன்போடு நோக்கி, "திருவுடையீர், உங்கள் பால் தீங்குளதோ?

குலச்சிறையார்:—முதலில் அமணர் செய்த, தீங்கு கேட்டு வருந் தினேம். பின், தீர்ந்தோம். வஞ்சகர் செய்த, அத்தீத் தொழில் போய், மன்னரை யுற்றது. வெப்பு நோய் ஆயது. தாங்கொணுத் துன்பம் தொடர்ந்தது. அமணர் செய்யும் ஆண்மைகளால், அளவு கூடுகின் றது. எங்கள் தவமே!, மன்னர் முன் போந்து,

நோய் நீக்கி, வென்றருளி, எங்களை உய்வித்தல் வேண்டும்,

திருஞான சம்பந்தர்:—அன்புடையீர்,

ஒன்றும், நீர் அஞ்சவேண்டாம். இன்று, நீர் உவகை எய்த, யாவருங்காண, உணர்விலா அமணர் தம்மை, வாதில் வென்று, விதியால், மீனவனை வெண்ணீறு அணிவிப்பன். எல்லாம் ஆவதும் அழிவதும் அவர் செயல். அமணர்கள் தீயர்கள். ஆதலால் அவர்களைக் காண்டலும் ஆகாது. அன்னவரை நேராய்ப் பார்த்து, வெல்லத் திருவருள் உள்ளம் அறிவேன்.

(என்று அடியார் சூழக் கோவில் செல்லல்)

ஆறுவது அங்கம்: இரண்டாங் காட்சி.

இடம்:—மதுரைக் கோவில்:
காலம்:—முற்பகல்:
நடர்:—திருஞான சம்பந்தர்: அடியார் குழாம், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார்—முதலியோர்

திருஞான சம்பந்தர்:—

("சோம சுந்தரப் பெருமான் திருமுன் நின்று, இன்பக் கண்ணீர் வடித்து, தலைமேற் கைகுவித்து (விழுந்து எழுந்து நின்று) "பாடுகின்றார்:

திருச்சிற்றம்பலம்.

"காட்டு மாவது ரித் துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரைசெய் வனுன்
வேட்டு வேள்வி செய்யாவமண் கையரை,
யோட்டி வாது செயத்திரு வுள்ளமே"
செந்த ணுமுரனுந் திரு வாலவாய்
மைந்தனே என்று வல்லமண் ஆசறச்
சந்தமார் தமிழ் கேட்ட மெய்ஞ்ஞானசம்
பந்தன் சொற் பகரும்பழி நீங்கவே:

(திருச்சிற்றம்பலம்)

பின்னும், பெருமானை நோக்கி,

வள்ளலே; விண்ணவர்கள், தாங்கள் உயிர்வாழ உன்னை வேண்டினர். உண்டாய் நஞ்சை.; பின், மார்க்கண்டன், தன்னுயிர் வேண்டி இரந்தனன். காலனைக் கடிந்தாய்; நான், இப்போ வேண்டுவது, என் நலங்கருதியன்று. ஞாலம் முழுவதும் நின் புகழ் பரவவேண்டும். அன்புநெறி தழைக்கவேண்டும் என்பது ஒன்றே யன்றி வேறல்ல.''

(மேற்கருத்துள்ள பாடல்)

திருச்சிற்றம்பலம்

"வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதமில்லி யமணொடு தேரரை
வாதில்வென் றழிக்கத் திரு வுள்ளமே
பாதிமா தட னாய பரமனே.
ஞாலநின் புகழே மிக வேண்டுந் தென்
னாலவா யிலுறையு மெம் மாதியே.''

"கூடலால வாய்க் கோனை விடை கொண்டு
வாடன் மேனி யமணரை வாட்டிட
மாடக் காழிச் சம்பந்தன் மதித்தவிப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே:

திருச்சிற்றம்பலம்:

விடைபெற்று, மீண்டும், சிவிகை ஏறி, அடியார் சூழ, அரண்மனை ஏகல்: அமைச்சர் முன்னும், அம்மையார் சிவிகையில் பின்னும், பெருமான் சிவிகையில் நடுவுமாகச் சென்றார்கள்.

ஆறுவது அங்கம்: மூன்றாங் காட்சி:

இடம்:—மன்னவர் அரண்மனை:

காலம்:—முற்பகல்:

நடர்:—மன்னர், குலச்சிறையார்; மங்கையர்க் கரசியார், அமண் குருக்கண்மார்-முதலியோர்.

குலச்சிறையார்:—(விரைந்து வந்து அரசனை வணங்கி நின்று)

மன்னுயிர் புரக்கும் மாற,
காழி வள்ளலார் வருகின்றார்:

மன்னவர்: (துயர் சிறிது நீங்கி) அமைச்ச,

முழுமணிப் பீடம் கொணரச் செய்க, இங்கு, என் தலை மாட்டில் இடுவிக்க, நீர், விரைவில் எதிர்கொண்டு வள்ளலாரை அழைத்து வாரும்.

அமைச்சர்:—பெரும, அப்படியே செய்கின்றேன். (விரைந்து ஏகல்).

(இச் செயலைக் கண்டதும், அங்கிருந்த அமணர்கள் ஒருவரோ டொருவர் பேசல்)

ஒருவர்:—நம் மன்னன் செயல் மிக நன்று; இவரா, நமது ஒப்பற்ற சமயத்தைக் காப்பவர்! மறையவன் வருவதற்கு முன்னரே இப்படி மருளுகின்றாரே! நாம் மன்னனிடம் ஒன்று சொல்லுவம்.

(என்று யாவரும் மன்னர் முன் சென்று, அவரை நோக்கி) சமண் உறை வாழ்வே,

நீரே உமது சமயத்தைக் காத்துக் கொள்ள வேண்டாமா? நமக்குள்ள வலியின்மையை, வெளியிற் காட்டிக் கொடுக்கலாமா? அந்தச் சிறிய மறையவன் வந்து, அவனே உமது நோயைத் தீர்த்தாலும், நாங்களும் சேர்ந்தே, தீர்த்தோம் என்று, சொல்லிவிடும். எங்களையும் ஊடே ஊடே மருந்து போடவுந் தூண்டிக் கொள்ளும். இதுவே, தகுந்த முறை.

மன்னவர்:—அடிகண்மீர்,

நீங்கள் அறங்கடந்து பேசுகின்றீர்கள். வஞ்சகம் பேச மாட்டேன். உண்மையே புகல்வேன். உங்கள் உங்கள் தெய்வத் துணையால் எனது நோயைத் தீருங்கள். அப்படித் தீர்த்தவர் பக்கமே சேர்வேன். அத் தெய்வமே உண்மையாகும்.

(அமணர்கள் தங்கள் எண்ணம் பலியாதது கண்டுகவலுற்றுப் பேசாது இருத்தல். வள்ளலார் சிவிகை வந்து இறங்குதல்).

ஆறுவது அங்கம்: நான்காங் காட்சி:

இடம்:—அரண்மனை.

காலம்:—முற் பகல்.

நடர்:—மன்னவர், குலச்சிறையார், மங்கையர்க்கரசியார், அமண்குருக்கண்மார் முதலியோர்.

மன்னவர்:—(பிள்ளையார் உள் வந்ததும், மன்னன் கண்டு, துன்பு நீங்கி, தலை கை குவித்து வணங்கி, பீடத்தமரக் கைகாட்டினார். பிள்ளையாரும் அதில் அமர்ந்தார். விருப்பத்தோடு)—

அந்தணீர்,

தங்கள் ஊர் யாது ?

திருஞான சம்பந்தர்:—

திருச்சிற்றம்பலம்

"பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த்தோணி
புரம் மன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவம் வண்சண்பை
யரன்மன்னு தண்காழி கொச்சைவயம் உள்ளிட்டு அங்காதியாய
பிரமனூர் பன்னிரண்டாய் நின்ற திருக்கழுமலம் நாம் பரவுமூரே."

திருச்சிற்றம்பலம்,

இந் நிகழ்ச்சியினைக் கண்டு, அமணர்கள் மனம் புழுங்கி, பொறாமை கொண்டார்கள். மனதில் அச்சம் மிகுந்தது. அதனை மறைத்துக் கோபக் குறியோடு எல்லாரும் ஒன்றாய்க் கூடிக் கொண்டு,

ஏ, பொய் வேடத்தாரே,

நீர் பூசுவது நீறு. அறம் என்று ஆட்டை, வேள்வியில் கொல்லுவீர், கொலையை ஏற்கும் தேவே, சிறந்த தேவாம்! நன்றும் கொள்கை! இவருக்கு வெற்றிச் சின்னம்! என்ன பெருமை; நீர் யாரை வென்றீர் ?. எங்கள் கடவுள் அறமே மேனியுடையர்—

திருஞான சம்பந்தா:—(தமது திருக்கரம் அமைத்து)

அடிகண்மீர், பதறாதீர் ! பொறுங்கள். யாவரும் அமைதியொடு இருந்து ஒருவர் ஒருவராகக் கேளுங்கள். பேசுக நும் பொருளெல்லை—

(தொடரும்,)

# பத்தமடை முத்துசாமிப் பிள்ளையவர்கள் பிரமோதூத வருஷப் பஞ்சாங்க அறிவிப்புக்கு மறுப்பு.

[இராமேஸ்வரம் தேவஸ்தானம் ஜோதிஷ மகா வித்வான் திருவாளர் த. முத்துக்கருப்ப பிள்ளையவர்கள் எழுதுவது]

பத்தமடை முத்துசாமிப் பிள்ளையவர்கள் பிரமோதூத ஆண்டிற்குப்புதிதாகச் சித்தாந்த சைவப்பஞ்சாங்கம் என ஒன்று வெளியிட்டிருக்கின்றனர். அதில் முதலில் உள்ள அறிவிப்பில் அந்த வருஷத்துக்கு முந்திய வருஷ பங்குனிமீ சுக்கிலப் பிரதமையின் வாராதிபதி ராஜாவென்றும், அது சாஸ்திர சம்மதமென்றும், சித்திரை மாதப்பிறப்பின் வாராதிபன் அரசன் என்று சில பஞ்சாங்கங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது சாஸ்திர விரோதமென்றும் பிள்ளையவர்கள் கூறுகின்றனர். இதனை ஆயுமிடத்துப் பிள்ளையவர்கள் கூறுகின்றபடி அந்த வருடம் என்பது கணிக்கப்பட்ட வருடத்தையும் முந்திய வருடம் என்பது கணிக்கப்பட்ட வருடத்திற்கு முன் வருடத்தையும் குறிக்கும். குறிக்கவே, பிள்ளையவர்கள் கணித்துள்ள ஷெ பஞ்சாங்கத்தில் கண்ட பிரமோதூத வருடம் 'அந்த வருஷ'மும், அதற்கு முன் சென்ற சுக்கில வருடம் 'முந்திய' வருடமும் ஆகும். ஆகவே, அவைகள் வெவ்வேறு வருடங்களாய், வெவ்வேறு பலன் அல்லது வெவ்வேறு பயனுள்ளவைகளாயிருக்கின்றன. ஒவ்வோர் வருடமும் சித்திரை மாதப்பிறப்பு தொடங்கி மறுசித்திரை மாதப்பிறப்பில் முடிவுபெறும் என்பது பண்டிதர்களும், பாமரர்களும் நன்கறிந்த செய்தி. இருக்குவேத சம்மிதையில் "சித்திரை வருஷாரம்பம்" என்றிருக்கிறதாய்த் திலகர் கூறுகின்றார் என ஸ்ரீமான் எம். கே. ஆசாரியார் துந்துபிவருஷ பங்குனிமீ உருவ சுதேசமித்திரனில் கூறுகின்றார். மாதங்களில் சித்திரையும், நட்சத்திரங்களில் அசுவனியும், இராசிகளில் மேடமும், கிரகங்களிற் சூரியனும் தலை சிறந்துள்ளது பற்றி அச்சூரியன் மேடராசியில் அசுவனி முதல்

"நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றியவன் புள்ளுருகப் பாடுவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவே ழேழுநூறும்
அன்று சிறப்பித்தஞ்சொற் றிருப்பதிக மருள்செய்தார்"

(ஏயர்கோன் கலிக்காமர் புராணம். கடுo)

என்று கூறிப்போந்தமையை நோக்க அவர் தம் தூய வுள்ளம் புலனாகும்.

(௩) 'அறுபத்து மூன்று' என்ற எண் சரியா?

தனியடியார் அறுபத்து மூவர் என்ற கொள்கை, தொகை நூலாசிரியராகிய நம்பியாரூரார் எண்ணத்திலுமில்லை; சேக்கிழா ருக்கும் அஃது உடன்பாடில்லை. வகை நூலாசிரியராகிய நம்பி யாண்டார் நம்பியே திருவந்தாதியின் கண்,

"கூட்டமொன்பா னுடைறபத்து மூன்று தனிப்பெயரா
ஈட்டும்பெருந் தவத்தோ ரெழுவத்திரண்டாம்"

என 'அறுபத்து மூன்று' என்னும் எண் கொடுத்தார். திரு வன்றொண்டர் திருவுள்ளத்தில்லை யென்பதற்கு அவர் 'திருத் தொண்டத் தொகை' இறுதிப் பாட்டில் தமது அத்தனையும் அன்னையையும் ஏனைய நாயன்மார்கட்குக் கூறியாங்கு 'அடி யேன்' என்னாது தம்மை விளக்கிக் கொள்ளுமுகத்தால்,

"என்னவனு மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்"

எனக் கூறியமையே சான்றாகும். 'அரனடியே அடைந்திட்ட' என்னுங் குறிப்பால் நம்பியாண்டார் நம்பியும், சேக்கிழாரும் முறையே வகையினும், விரியினும் கூறி வைத்தனர்; அதனாற் போந்த இழுக்கொன்றுமில்லை யெனினும், 'பொய்யடிமை யில்லாத புலவர்' என்பது ஐயத்திற்கு இடந்தந்து நிற்பது கண் கூடு. அவர் நம்பியாண்டார் நம்பி கருத்துப்படி தொகையடி யாராக இருப்பின் 'திருத்தொண்டத் தொகை'யில் தொகை யடியாரைக் குறிப்பதாகிய 'பத்தராய்ப் பணிவார்' என்று தொடங்கும் பாட்டுடன் சேர்ந்திருத்தல் வேண்டும். அங்ஙன

யின்றித் தனியடியார் வரிசையில் வைத்திருத்தல் கருதத் தக்கது. முதலில் 'தில்லை வாழந்தணர்' எனத் தொகையடியார் கூறப்பட்டனரே யெனின், அஃது ஆண்டவன் திருவாக்கென்க. அன்றியும் தொகையடியாரனைவரும் சென்ற காலத்தில் இருந் தவரென எண்ணுதற் கிடனின்றி மூன்று காலத்திலும் இருந் தவராகவும், இருக்கின்றவராகவும், இருப்பவராகவும், எண் ணற்றவராகவு மிருக்கப் 'பொய்யடிமை யில்லாத புலவர்' மட்டும் முன்னிருந்த சங்கப்புலவர்களென்பதும், அவர் நாற்பத் தொன்பதின்மரென்பதும் எங்ஙனம் பொருந்தும்? அன்றியும் அவருள் பல்வேறு சமயத்தாரு மிருந்தன ரென்பதை எவரே மறுப்பார்! இவ்வாற்றாற்றான் நமது சேக்கிழார் பெருந்தகை,

"தரணியிற் பொய்மையிலாத் தமிழ்ச்சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர்முதனாற் பத்தொன்பதுபல் புலவோர்
அருணமக்கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிப்பலபாடும் புலவர்களே"

என நம்பியாண்டார் நம்பி பாடியிருக்கவும், கபிலரைப்பற்றி யாதல் பரணரைப்பற்றி யாதல் நக்கீரரைப்பற்றி யாதல் ஒரு சிறிதும் கூறாதேதோடு, அவர் பெயரையுங் கூறாது, மதுரை அல்லது 'ஆலவாய்' என்று குறித்தாலும் "சங்கப்புலவர்களைக் கொண்டு விடுவாரோ" எனக் கருதி,

"செய்யுணிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயனிதுவே யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்"
"பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமை யல்லாற
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள்"

எனக் கூறியருளினர். இதனாலேயே அவர் அடியார்களின் தொகையைத் தாங்கூறாது விடுத்தனரென்க; எனவே 'அறுபத்து மூன்று நாயன்மார்' என்று கூறுவதினும் 'தனியடியார்' என்று

கூறுவதே தொகை நூலாசிரியருக்கும், விரி நூலாசிரியருக்கும் ஒத்த கருத்தென்க.

(௪) நம்பியாரூரர்

இவர் திருமுனைப்பாடி நாட்டின்கண் உள்ள திருநாவலூரின்கண் சடையனார் என்னும் சிவவேதியருக்கு, இசை ஞானியாரென்னும் அம்மையார் திருவயிற்றில் திருவவதாரஞ் செய்தருளினவர் (சரித்திர விரிவைப் பெரிய புராணத்துட் காண்க.) இவர் தாய், தந்தை இவரென்பதும், ஊர் இதுதானென்பதும் இவர் கூறியருளிய அகச்சான்று கொண்டே அறியலாம்; அது,

"என்னவனு மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவலூர்க்கோன்"

என்பது.

இவரது முற்பிறவியின் செய்தியையும், ஈண்டுப் போந்தமையின் காரணத்தையும், அஃது இறைவன் அருளிப்பாடு என்பதையும்,

"மாயங்காட்டிப் பிறவிகாட்டி மறவா மனங்காட்டிக்
காயங்காட்டி [illegible]ண்ணீர் கொண்டால் வாழ்ந்துபோதீரே"

என்னும் தேவாரம் குறிப்பாலுணர்த்துகின்றது.

"காதலுக்க[illegible]க்கூர் நரசிங்க முனையரையன்
ஆதரித் தீசனு[illegible] காட்செயுமூர்"

என்பதனல் நரசிங்க முனையரையர் தம்மை அபிமானித்து வளர்த்து வந்தமையும், அவரும் ஒரு நாயனார் என்பதையும், தமது காலத்திலே இருந்தவ ரென்பதையுங் குறித்தருளினர்.

இவர் தம்மை இளமையிலே இறைவன் தடுத்தாண்டமையையும் அது வெண்ணெய் நல்லூரிலென்பதையும், அது காலே ஆவணங் காட்டியதையும் பல விடங்களிற் கூறியருளுகின்றார்; அவை,

"வெண்ணெய் நல்லூரில் வந்தெனை யாளுங்கொண்ட"

"அடக்கங்கொண் டாவணங் காட்டிநல்
வெண்ணெயூ ராளுங்கொண்டார்"

"அன்று வந்தெனை யகலிடத்தவர்முன்
னாளதாகவென் றுவணங்காட்டி
நின்று வெண்ணெய்நல் லூர்மிசை யொளித்த
பித்திலத்திரட் டொத்தினை"

"வெண்ணெய் நல்லூரில்
அற்புதப்பழ ஆவணங்காட்டி அடியனு யென்னை யாளதுகொண்ட"

என்பன.

தன்மையினு லடியேனைத் தாமாட் கொண்ட நாட்சபை முன்
வன்மைகள் பேசிட வன்றொண்ட னென்பதோர்வாழ்வு தந்தார்"

என்னுந் தமிழ்மறை, ஆண்டவன் ஆட்கொள்ள வந்த ஞான்று 'பித்தன்' முதலிய வன்சொற்களை ஆரூரர் கூறியதையும், அது காரணமாக அவ்விறைவன் அவருக்கு 'வன்றொண்டர்' என்னுந் திருப்பெயரை அருளினமையையும் உணர்த்துவது காண்க.

ஆண்டவன் தம்பொருட்டு எளிது வந்து தூது சென்றதையும், தமக்குத் தோழனுகித் தாம் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுத்தருளினமையையும்,

"தூதனை யென்றனை யாள் தோழனை"

"அடியேற் கெளிவந்த தூதனைத் தன்னைத் தோழமை யருளித்
தொண்டனேன் செய்த துரிசெலாம் பொறுக்கும் நாதனை"

என்பனவற்றால் விளக்கி யருளுகின்றார்.

"மாழை யொண்கண் பரவையைத்தந் தாண்டானை"

"சங்கிலி யோடெனைப் புணர்த்த தத்துவனை"

"சங்கிலி மென்றோள் ஆர்த்தனன்"

"பின்றான் பரவைக் குபகாரஞ் செய்தாயோ"

என்பனவற்றால், தமக்குப் பரவையார், சங்கிலியார் என்னும் இருமனைவியருண்டென்பதையும், அவர்களைத் தமக்கு மணஞ் செய்வித்தவன் இறைவனே என்பதையும் விளக்குகின்றார்.

திருக்குருகாவூரில் ஆண்டவன் தமக்கு உணவளித்தமையை அவ்வூர்ப் பதிகத்திலே,

"பாடுவார் பசி தீர்ப்பாய்"

என்பதனுற் குறிப்பித்து, பாடுபவர் தாமே என்பதை,

"என்றுமுட்டாப்பாடு மடியார் தங்கண் காணுது
குன்றுமுட்டிக் குழியில்வீழ்ந்தால் வாழ்ந்து போதீரே"
"சந்தம்பலவும் பாடுமடியார் தங்கண் காணுது"
"வாக்கென்னுமாலை கொண்டுன்னை யென்மனத்தே யார்க்கின்றேன்"

என்பன போன்றவற்றுல் விளக்கி யருளினர். இவ்வாதரவு களைக் கொண்டு தான்,

"அர்ச்சனைபாட்டே யாகுமாதலால் மண்மே னம்மைச்
சொற்றமிழ்பாடு கென்றூர் தூமறைபாடும் வாயார்"

என இறைவன் கூற்முக வைத்துச் சேக்கிழார் கூறியதூஉ மென்க.

திருக்கச்சூராலக்கோயிலிற் சிவபெருமான் உச்சிப்போதில் பிச்சை யெடுத்து வந்து தமக்கு உணவு கொடுத்தமையை,

"உச்சம்போதா வூரூர்திரியக் கண்டாலடியா ருருகாரே"

என்பதனுற் குறிப்பித் தருளினர்.

இவர் குண்டையூர்க் கிழவரிடம் நெல்லுப் பெற்றதையும், அதனை ஆரூருக்குக் கொண்டு சேர்க்கும் பொருட்டு ஆண்டவனை வேண்டி அதனை முடித்துக் கொண்டதையும்,

"நீள நினைந்தடியேன்"

என்று தொடங்கும் திருக்கோளிலிப் பதிகத்தால் விளக்கி யருளினர்.

திருமுதுகுன்றத்தில் ஆண்டவன் தமக்குப் பொன் அருளினமையையும், அதை ஆண்டுள்ள மணி முத்தா நதியிற் போட்டு விட்டுத் திருவாரூர்க் கமலாலயம் என்னுங் குளத்தில் பரவையார் முன்னிலையில் தேடிக் காணுது வருந்த அவர் சிரித்

தமையும் பிறவும் 'பொன் செய்த மேனியினீர்' என்று தொடங்குந் திருப்பதிகத்திற் கூறியருளினர்.

அப்பதிகத்தில் இரண்டாவது பாட்டு,

"உம்பரும் வானவரு முடனேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழுமுது குன்றமர்ந்தீர்"

என்பது.

திருவதிகை வீரட்டானத்துள்ள 'சித்தவடமட'த்தின் கண் இரவில் ஆண்டவன் தன் திருவடியைத் தமது திருமுடியில் வைத்ததையும், அதனை யறியாது தாம் இகழ்ந்து கூறியதையும்,

"எம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல் வைத்திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட்டானத் துறைவானை
யிறைபோது மிகழ்வன் போலியானே"

என்பதனாலும், அதுபோது தாம் 'இங்கென்னைப் பலகாலு மிதித்த நீயார்' என்று வினவ 'என்னை யறியாயோ' என்று கூறி அவ்விறைவன் மறைந்தருளிய செய்தியை,

"தம்மானை யறியாத சாதியா ருளரோ"

என்பதனாலும் குறிப்பித்தார்.

இவர் கோட்புலி நாயனர் பெண்களாகிய வனப்பகை, சிங்கடி யென்பவர்களை அந்நாயனர் திருமணஞ்செய்து கொள்ளுமாறு வேண்டவும் அதனை மறுத்து அவர்களைத் தம் புதல்விகளாக ஏற்றுக் கொண்டமையை,

"சிங்கடி தந்தை"
"வனப்பகை யப்பன்"
"வனப்பகை யவளப்பன் வன்றொண்டன்"
"சிங்கடியப்பன்"

என வருவனவற்றாற் காண்க.

இனி, இவர் சங்கிலியாரை மணக்கும் பொருட்டு அவரைப் பிரிவதில்லையென்று சூளுரைத்துப்பின் பிரிந்தமையின் பயனாகக்

கண் மறைந்தமையை, 'அழுக்கு மெய்கொடு' என்று தொடங்குந் திருப்பதிகத்தாலும், "சங்கிலிக் காவென்கண் கொண்ட பண்ப" என்பதனாலும், "பழியதனைப் பாராதே படலமென் கண் மறைப்பித்தாய்" என்பதனாலும் விளக்குகின்றனர்.

அங்ஙனங் கண்மறைந்த இவர் ஆண்டவனைக் கண்கொடுக்கும் பொருட்டுப் பலவாறு வேண்டவும் அருளாமை கண்டு ஊன்றுகோல் ஒன்று வேண்டினரென்பதை,

"ஊன்றுகோலெனக் காவதொன் றருளாய்"

என்பதும், ஆண்டவன் திருவெண்பாக்கத்தில் நம்பி மனம் வருந்தி 'நீ கோயிலில் இருக்கின்றாயோ' என்ன ஊன்றுகோலொன்று அருளி, 'இருக்கின்றோம் போகீர்' என்றருளினனென்பதை,

"ஊன்றுகோலொன்றருளி யுளோம்போகீரென்றானே"

என்பதும், அவர் "சங்கிலியாருக்குச் சூளுரைக்குங் காலத்து நீர் மகிழடியின் கீழே போயிரும்" என்று இறைவனிடம் வேண்டிக்கொண்டமையை அச்சங்கிலியாரிடம் அவ்வாண்டவன் கூறி மகிழடிக் கீழே சூளுரைக்கும்படி செய்வித்தமையையும், திருவெண்பாக்கத்தில் பகைவனைக் கண்டதுபோலச் சினந்து கூறியதையும்,

"பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீ ழிருவென்று
சொன்னவெனைக் காணாமே சூளுறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே யிங்கிருந்தா யோவென்ன
ஒன்னலரைக் கண்டாற்போ லுளோம்போகீ ரென்றானே"

என்பதும், சூள் தவறிய காலத்துக் கண் மறைந்ததுடன், உடம்பிலும் பிணி வந்தமையை,

"கண்ணிலே னுடம்பில் வடுநோயாற் கருத்தழிந்
துனக்கே பொறையானேன்."

என்பதும், அந்நோய் திருத்துருத்தியில் நீங்கியதை "மின்னுமா மேகங்கள்" என்று தொடங்குந் திருப்பதிகமும், காஞ்சிபுரத்தில் ஒரு கண் பெற்றமையை "ஆலந்தானுகந்தமுது செய்

வானே" என்று தொடங்குந் திருப்பதிகமும், திருவாரூரிற் சென்று மற்றொரு கண் வேண்டினமையை,

"மீளா வடிமை யுமக்கே யாளாய்"

என்று தொடங்குந் திருப்பதிகமும், அங்ஙனமே மற்றக் கண்ணும் பெற்றமையை,

"காணாத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே"

என்பதும் நன்கு விளக்குதல் காண்க.

இனி, பரவையார் ஊடலை நீக்க ஆண்டவன் சென்றதைக் குறிக்கின்ற,

"தூசுடைய வகலல்குற் றூமொழியாளூடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய்வந்து"

என்பது,

"பத்தூர்புக் கிரந்துண்டு"

என்று தொடங்குந் திருநாகைக்காரோணப் பதிகத்திருந்தாலும் அப்பதிகம் நம்பிவாக்கோ என ஐயுறும் நிலையி லிருப்பதாலிங்கு கொள்ளப்படவில்லை.

ஏயர்கோன் கலிக்காமர் செய்தி,

"ஏயர்கோனுற்ற விரும்பிணி தவிர்த்து"

என்னுங் குறிப்பா லறியக் கிடக்கின்றது.

இவருக்கு இறைவன் இறைவியோடும் போந்து, "கூடலையாற்றூர் வழி இது" வென்று நினைப்பூட்டினமை,

"வடிவுடை மழுவேந்தி"

என்று தொடங்கும் பதிகத்தால் விளங்கும்.

சேரமான் பெருமாள் தமக்குக் கொடுத்த பொருள் முதலியவற்றைத் திருமுருகன் பூண்டிக்கு அணித்தராகச் செல்லும்பொழுது இறைவனாணையாற் பூத கணங்கள் வர, அவற்றை மீண்டும் பெற்றமை,

"கொடுகு வெஞ்சிலை"

என்று தொடங்கும் பதிகக் குறிப்பால் அறியக் கிடக்கிறது.

இவர் முதலைவாயினின்றும் பிள்ளையை வருவித்தமை,

"காரைக்கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே"

என்பதனால் அறியலாம்.

இவர் இறுதியில் இறைவன் ஆணையின்படி அவனால் அனுப்பப்பட்ட வெள்ளானையின்மேலேறித் திருக்கயிலாயமலை சேர்ந்தமையும், போங்கால் நீர்க்கடவுளாகிய வருணன் வந்து வழிபட்டமையும், அவனால் தாம் அதுபோது பாடிய பதிகத்தை இந்நிலவுலகிற்கு வரச் செய்தமையும பிறவும்,

"தானெனை முன்படைத்தான்"

என்று தொடங்குந் திருப்பதிகத்திற் காண்க.

(௫) இவர் காலத்தவராய நாயன்மார்கள்

சடையனார், இசை ஞானியார், நரசிங்கமுனையரையர், சோமாசிமாறர், விறன்மிண்டர், மானக்கஞ்சாரர், ஏயர்கோன் கலிக்காமர், பெருமிழலைக் குறும்பர், கோட்புலியார் என்பவர்கள் இவரிருந்த காலத்திலேயே இருந்தவராதல் வேண்டும். இவருள் முதல் மூவரும் முறையே தந்தையும், தாயும் வளர்ப்புத் தந்தையுமாவரென்பது முன்னரே காட்டப்பட்டது. சோமாசி மாறரும், பெருமிழலைக் குறும்பரும் ஆரூரரை வழிபட்டுப் பேறு பெற்றவரென்பது பெரிய புராணத்தால் அறியப்படுகின்றதாகலின் அவரும் உடன் காலத்தவராவர். விறன்மிண்டர் 'திருத்தொண்டத் தொகை' நம்பியாரூரர் திருவாயால் வெளி வருவதற்குக் காரணமாயிருந்தவர். கோட்புலியார் தமது அருமைப் புதல்விகளை மணஞ்செய்து கொள்ளுமாறு வேண்டினரென்பதையும், அம்மகளிரை ஆரூரர் தமது புதல்விகளாகக் கொண்டனரென்பதையும் முன்னரே விளக்கினோம். திருநாட்டியத்தான் குடிப்பதிகத்திறுதியில் 'கோட்புலி சென்னி' என்று அருளியிருப்பதூஉங் காண்க. ஏயர்கோன் கலிக்காமர் வன்றொண்டர் இறைவனைத் தூதனாக ஏவியமையாற் சினந்து, அது காரணமாகச் சூலைநோயேற்றதும், ஆண்டுத் திருநாவலூரர் போந்தமையும் பிறவும் பெரிய புராணத்துட்

காண்க. இது, 'ஏயர்கோனுற்ற விரும்பிணி தவிர்த்து' என்னும் ஆளுடைய நம்பிகள் திருவாக்காலும் வலியுறுவதாகும். இவ்வேயர்கோன் கலிக்காமருக்குப் பெண் கொடுத்தவர் மானக்கஞ்சாறர். ஆதலின் அவரும் உடன் காலத்தவராக எண்ணப்பட்டார்.

(௨) இவர் காலம்

நம்பியாரூரர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியெனத் திருவாங்கூரிற் கல்வெட்டிலாக்காவிற்குத் தலைவராக இருந்து காலஞ்சென்ற டி. ஏ. கோபிநாதராயரவர்கள் 'செந்தமிழ்' மூன்றாந்தொகுதியிற் பொறித்து வெளியிட்டார். தஞ்சை, ராவ் பகதூர் கே. எஸ். சீனிவாசப் பிள்ளை அவர்கள் தமது 'தமிழ் வரலாறு' என்னும் நூலில் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முதற்பகுதியென வரைந்துள்ளார். ஆகவே, இவ்விரண்டு ஆராய்ச்சியாளர் முடிபும் சிறிதேறக்குறைய ஒத்ததேயாகும்.

இனி, டி. வி. சதாசிவப் பண்டாரத்தாரவர்கள் மேற்காட்டிய இருவர் கொள்கையையும் மறுத்து, கி. பி. 690-710-க்கும் இடைப்பட்டதெனக் கூறுகின்றனர். (தமிழ் பொழில் துணர் 3 மலர் 6-ல் காண்க.) இஃது உண்மையாயின் கழற்சிங்கர், செருத்துணையாரென்பவரும் இவர் காலத்தவரே என எண்ணவேண்டும். இன்னும் இவர் மேற்காட்டிய 690-710-க்கும் இடைப்பட்டிருந்தவர். இரண்டாவது நரசிங்கவர்மரென்றும், பல்லவ அரசரென்றும், அவரைத்தான் ஆரூரர் 'கழற்சிங்கர்' எனக் கூறினாரென்றும், அவர் காஞ்சியிற் கைலாயநாதர் கோயில்கட்டி முடித்திருக்குஞான்றுதான் திருநின்றவூரிற் பூசலார் நாயனார் தம் உள்ளத்தின்கண்ணே திருக்கோயில் கட்டினாரென்றுங் கூறுகின்றனர். அங்ஙனமாயின் பூசலாரையும் ஆரூரர் காலத்தவரென்று கொள்ளவேண்டும். ஆனால் சேக்கிழார் கழற்சிங்க நாயனார் புராணத்தாதல், பூசலார் நாயனார் புராணத்தாதல் இது கூறினாரில்லை.

இனி மேற்காட்டிய கைலாயநாதசாமி கோயிலின் வெளிப்

புறத்திலுள்ள கல்வெட்டு ஒன்றில், 'துஷ்யந்தர் முதலான அரசர் ஆகாயவாணியைக் கேட்டாரானுல் ஆச்சரியமில்லை. நற்குணம் பறந்தோடிப்போன கலியுகத்தில் அந்த வாணியை ஸ்ரீபரன் கேட்டது வியப்பைத் தருவதே'' என்றிருப்பதால் அவ்வாகாய வாணிதான் பூசலார் செய்தியைப் பல்லவ மன்னனுக்கு அறிவித்ததாகும் என பீ. டி. சீனிவாசய்யங்காரவர்கள் 'பல்லவ சரித்திரத்'தின் இரண்டாம் பாகத்திற் கூறியிருப்பதுங் கருதத் தக்கதாகும்.

இனி, ஆரூரர் திருப்பரங்குன்றம் வணங்கிப் பதிகம் பாடுங் காலை முடியுடை மன்னர் மூவரும் ஆண்டிருந்தனரென அப் பதிகத்திறுதியிற் கூறுகின்றார்; அது 'முடியாலுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தாறுமோர் நான்குமோ ரொன் றினையும்' என்பது. இதன்கட் கூறிய பாண்டியனும், சோழனும் யாரென விளங்கவில்லை. சேரர் சேரமான்பெருமாள் நாயனாரெனப் பெரியபுராணத்தாலறிகிறோம்.

இச்சேரமான்பெருமாள் நாவலூர் நம்பியாரூரருடன் நட்பா யிருந்தமைக்கு அகச்சான்று யாதுங் காணோம். ஆனல் பதினோராவது நூற்றாண்டுக்கு முற்பட்டும், நாவலூர் நம்பியாரூரரின் காலமாகிய 8 அல்லது 9-வது நூற்றாண்டுக்குப் பிற்பட்டு மிருந்த 'பூந்துருத்தி நம்பிகாட நம்பி' என்னுந் திருவிசைப்பா ஆசிரியர் கோயிற்றிருவிசைப்பாவில்,

> "களையா வுடலோடு சேரமா னாரூரன்
> விளையாமதமாறு வெள்ளானை மேற்கொள்ள''

என்று கூறியதையும், இதனை ஒட்டி நம்பியாண்டார் நம்பி திருத் தொண்டர் திருவந்தாதியின்கண்,

> "சேரற்குத் தென்னாவலர் பெருமாற்குச் சிவனளித்த
> வீரக்கடகரி முன்புதன் பந்தியி வுளிவைத்த
> வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
> சூரற்கென துள்ள நன்று செய்தா யின்று தொண்டுபட்டே''

என்று கூறியதையும் ஆதரவாகக் கொண்டதுடன் தாம் பல வகையாலுங் கண்ட உண்மைகளையுங் கொண்டு சேக்கிழார்

விரித்துக் கூறினரென்க. எனவே சேரமான் பெருமானாரும் அடிகள் காலத்தவரென்பது பெற்றாம்.

(எ) நம்பியாரூரர் தேவாரத்தாற் குறிக்கப்படும் நாயன்மார்கள்

நம்பிகள் அருளிய திருத்தொண்டத் தொகையிலேயன்றி வேறு அருட்பாக்களிலும் நாயன்மார்களிற் சிலர் பேசப்படுகின்றனர். அவர்கள் புகழ்த்துணையார், சண்டீசர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாளைப் போவார், சூதர், (மூர்க்கர்), சாக்கியர், சிலந்தி (கோச்செங்கட் சோழர்), கண்ணப்பர், கணம்புல்லர் எனப்படுவார். இவருள், புகழ்த்துணையாரை 'அகத்தடிமை' என்று தொடங்கும் பாட்டாலும், சண்டீசரை 'எத நன்னிலம்' என்று தொடங்கும் பாட்டாலும் வேறு பல பாக்களாலும், மற்றவர்களை 'நற்றமிழ் வல்ல' என்று தொடங்குந் தேவாரத்தாலும் அறிக.

(அ) திருநாவுக்கரசர்

இவருக்குப் பிள்ளைத் திருநாமம் 'மருணீக்கியார்' என்று கூறப்படுகின்றது. இவரியற்றிய திருத்தாண்டகத்தில், 'மறப்படுமென் சிந்தை மருணீக்கினான்காண்' என்னுந்தொடர் காணப்படுகின்றது. இவர் சமண் சமயம் புகுந்ததற்கும், மீண்டுஞ் சூலைநோய் காரணமாகச் சைவ சமயம் புகுந்ததற்கும் நிறைய அகச்சான்றுகள் உள. அவற்றுட் சில,

"கூற்றாயின"

என்று தொடங்கும் பதிகம்.

"அமணரோடே காதுவித்தாய் கட்டநோய்
பிணிதீர்த்தாய் கலந்தருளிப் போதுவித்தாய்"

"இருந்தா வமணர்தந் தீநெறிப்பட் டுத்திகைத்துமுத்தி
தருந் தாளிணைக்கே சரண்புகுந்தேன்"

"தக்கார்வமெய்திச் சமண்டவிர்ந் துன்றன் சரண் புகுந்தேன்"

"ஏவமேது மிலாவமணேதலர் பாவகாரிகள் சொல்லலைப் பட்டுநான்
தேவதேவன் திருநெறி யாகிய பூவணூர்புகு தப்பெற்ற நாளின்றே"

"எண்ணில் சமண்தீர்த் தென்னையாட் கொண்டார் போலும்"

"குண்டரொடு பிரித்தென்னை யாட்கொண்டார் போலும்"

என்பன.

"பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன்"

"போற்றாதே யாற்றநாள் போக்கினேனே"

என வரூஉம் இவை போன்றன பல அவர் பன்னாள்வரையுஞ் சமண்சமய மிருந்ததை நினைந்து வருந்துவதைக் குறிப்பன.

"முயல்விட்டுக் காக்கைபின் போனவாறே"

"கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே"

என்பன போன்றவை அவருக்கு இயல்பாகவுள்ளது சைவ சமயமே என்பதை வலியுறுத்துவன.

இவருக்குச் சமண் சமயத்திலிட்ட பெயர் தருமசேனரென்று கூறப்படுகின்றது.

சூலைநோய் நீங்கக் "கூற்றாயின" என்று தொடங்கும் பதிகம் பாடிய முடிவில் இறைவனால் அருளப்பட்ட பெயர் 'திருநாவுக்கரசர்' என்பதாகும்.

"மாசில் வீணையும்" என்ற பதிகம் நீற்றறையிற் பாடப்பட்டதன்று; அந்நீற்றறை தமக்கு இருந்தவாற்றை நினைந்து பின்னர்க் கூறியருளியதாகும். இவ்வுண்மையைச் சேக்கிழார் கூற்றை உய்த்துணரின் அறியலாம்.

"அஞ்சுவதியா தொன்றுமில்லை யஞ்ச வருவது மில்லை"

"தலைவணங்கிய வீசன் றமர்களைக்
கொலை கையானைதான் கொன்றிடு கிற்குமே"

என்பன சமணர்களால் திருநாவுக்கரசரைக் கொல்லும் பொருட்டு ஏவப்பட்ட யானையினாற் றீங்கு விளையாமையைக் குறிப்பன வாகும்.

"வஞ்சனைப்பாற் சோறாக்கி வழக்கிலா வமணர்த்தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே"

என்பது அமணர் அவருக்கு நஞ்சூட்டியதையும் அதனால் அவர் ஒரு தீங்குமின்றி யிருந்ததையும் விளக்குவதாகும்.

"கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

"தோன்றாத் துணையா யிருந்தனன்"

"அலைகடன் மூடினுங் கண்டேன் புகல்நமக்கு"

"நெடுநீரில் நின்றேற்றி நினைந் தருளி"

"கல்லினோ டெனைப்பூட்டி யமண் கையர்
ஒல்லைநீர் புகநூக்க வென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமநவிற்றி யுய்ந்தே னன்றே"

என்பன சமணர்கள் நாவுக்கரசரைக் கல்லொடு பூட்டிக் கடலிற் போட்டதையும், அதனையே புணையாகக் கொண்டு அடிகள் கரை யேறியதையும் விளக்குவனவாகும்.

அப்பரென்ற பெயர் திருஞான சம்பந்தரால் இடப்பட்ட தாகும்.

"மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி"

என்ற தொடர் அடிகள் சூலக்குறியைத் தாம் வேண்டி நின்ற மையும், அதனையும், இடபக்குறியையும் ஆண்டவன் அருளிய தையுங் குறிப்பதாகும்.

ஆண்டவன் அருட்கழலை இவர் திருமுடிமேல் திருநல் லூரில் வைத்தமையை அவ்வூர்த் திருத்தாண்டகமாகிய "நினைந் துருகும்" என்று தொடங்கும் பதிகமும், 'தன்னுடைய திருவடி யென் றலைமேல் வைத்த தீங்கரும்பை" என்னுந் தொடரும் விளக்குதல் காண்க.

இவர் திருவீழி மிழலையிற் படிக்காசு பெற்றமை 'பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு' என்னும் அகச்சான்றாலும், இவருக்கு அடுத்த நூற்றாண்டிற்றோன்றியவரும் இறைவன் திருவருள் பெற்று இவருடன் ஒருவராக எண்ணப்படுகிற வருமாகிய வன்றொண்டப் பெருந்தகையார்,

"இருந்துநீர் தமிழோடிசை கேட்கு மிச்சையாற்
காசுநித்த னல்கினீர் அருந்தண்விழி கொண்டீர்"

எனக் கூறுவதனுலும், எட்டு அல்லது ஒன்பதாவது நூற்றாண்டுக்குப்பின்னும், பதினோராவது நூற்றாண்டுக்கு முன்னுமிருந்த சேந்தனாரென்பார் திருவீழிமிழலைத் திருவிசைப்பாவில்,

"பாடலங்காரப் பரிசில்காசருளிப் பழுத்தசெந்தமிழ் மலர்சூடி
நீடலங்காரத் தெம்பெருமக்க ளெஞ்சிறு ளின்மைறந்து நின்றானே"

எனக் கூறுவதனுலும் அறியக்கிடக்கின்றது. திருஞான சம்பந்தர் படிக்காசு பெற்றமைக்கும் இப்புறச்சான்று பொருந்துவதாகும். (தொடரும்.) —சித்தாந்தம்

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.)

## ஆண்டவன்

கடவுளைக் குறிக்கும் பண்டைத் தமிழ்ச்சொற்களில் ஆண்டவன் என்னும் சொல் ஒன்று. அதில் அடங்கியுள்ள கருத்துக்களை இந்தக் கட்டுரையில் நாம் கருதுவாம்.

2. ஆண்டவன் என்னும் வினையாலணையும் பெயர் ஆள் என்னும் பகுதி அன் என்னும் ஆண்பாற் படர்க்கை விகுதி டகர ஒற்று என்னும் இறந்தகால இடைநிலை ளகரம் ணகரமாய்த் திரிந்ததும் வகர உடம்படுமெய் தோன்றுதலும் ஆகிய சந்தி அகரம் என்னும் சாரியை ஆகிய இந்த உறுப்புகளை உடையது. எப்பொழுதும் ஆளுகின்றவனை ஆண்டவன் என்று இறந்த காலத்தாற் சொன்னது இயல்புபற்றி வந்த இறந்தகாலவழு அமைதி. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும் பிறழவும் பெறூஉ முக்காலமு மேற்புழி என்ற நன்னூற் சூத்திரத்தின் படி ஆள்வான் என்னும் நிகழ்காலம் ஆண்டான் என்னும் இறந்த காலமாய் வந்தது.

3. ஆண்டவன் எனவே யாரை ஆளுகின்றவன் என்ற வினாப் பிறக்கும். யாதாம் ஒரு சொல்லின் பொருள் வேறொரு பொருளை அவாவி நிற்குமானல் அவாவி நிற்கப்பட்ட பொருளை

வருவித்துச் சொன்னலொழியச் சொல்லினது பொருள் நிரம்புதலில்லை. யாரை ஆளுகின்றவன் என்ற வினவுக்கு உயிரை என்பது விடையாகும். இரண்டு பொருள்கள் ஒன்ருேடொன்று தொடர்புபட்டால் அல்லாமல் ஆளுதலாகிய தொழில் நிகழாது. ஆளுதற்ருெழில் நிகழ்கிற இருவகைப் பொருள்களும் அறிவுடைப் பொருள்களாயிருந்தால் அல்லாமல் ஒரு பொருளினது ஆளுகையால் மற்ருெரு பொருளுக்கு யாதொரு பயனையும் தராது. இருவகைப் பொருள்களும் அறிவுடைப் பொருள்களாயிருப்பதிலும் ஒரு பொருள் மற்ருெரு பொருளை அறிவிக்கும் தகுதியுடைய பொருளாயும், மற்ருெரு பொருள் அறிவித்ததை அறியும் தகுதியுடைய பொருளாயு மிருந்தாலன்றி யாதொரு பயனும் உண்டாகாது. அறிவிக்கும் பொருள் அறிவு நிறைந்த பொருளாயும் அறிவித்தால் அறியும் மற்ருெரு பொருள் அறிவுப் பொருளாயிருப்பினும் குறைந்த அறிவுடைய பொருளாயும் இருத்தல் வேண்டும். ஆகவே அறிவிக்கும் தகுதியுள்ள நிறைந்த அறிவுடைப் பொருளாகிய கடவுளை ஆண்டவன் என்ற சொல் குறிக்கிறது. அத்தகைய கடவுளால் அறிவிக்கப்படும் பொருள் குறைந்த அறிவுடைய உயிர் ஆகின்றது.

4. இனி, கடவுள் உயிர் என்ற இருவகைப் பொருள்களில் ஒவ்வொரு வகைப்பொருளும் ஒன்ருே இரண்டோ பலவோ என்ற வினு ஆராய்கின்றவனுடைய உள்ளத்திலே பிறக்கும். மேலே கூறியவாறு உயிர் குறைவு உடைய பொருளாயிருப்பதில் அக்குறைவு வருதற்குக் காரணம் இருத்தல் வேண்டும். காரணம் யாதொன்றும் இல்லாமல் உயிருக்குக் குறைவு வந்தது என்று சொன்னல் அந்தக் குறைவை நீக்குதற்கு உலகில் காரண காரிய நிகழ்ச்சி முறை எங்கும் நிகழ நாம் காண்கின்ருேம். வழியும் உளதாகாது காரணம் இல்லாதிருந்தாலும், முயற்சி கொண்டு குறைவு நீங்கும் என நாம் வைத்துக்கொளினும்அக்குறைவுதிரும்பவராது என்னும் உறுதியுடையதாகாது. இந்தக் குறைவுக்குக் காரணம் பலசமயங்கள் பலவாருகக்கூறும். இந்தச் சொல் விளக்கக் கட்டுரையில் அந்த நுட்பங்களுக்குள் நாம் புகவேண்டியதில்லை. ஆனல் இந்தக் குறைவானது அறிவு

பாதத்தில் வரும்போது நமக்காதாரமாயுள்ள இப்பூவுலகம் துலாராசியில் சித்திரை மூன்றும் பாதத்தில் வருவதால் அந்நட்சத்திரப்பெயரைக் கொண்ட சித்திரை மாதம் தலை சிறந்தது என்றும், அதுவே வருடாரம்பத்திற்குரிய தென்றும் நந்தமிழுலகந் தோன்றிய காலமுதல் நந்தமிழ் மக்கள் உணர்ந்து வழங்கி வருகின்றனர். இன்னும் வருடாரம்ப இலக்கணம் பலவுள்ளன; விரிக்கிற் பெருகும்; நிற்க.

சென்ற வருடம் பங்குனிமீ பூர்வ பக்கப் பிரதமையைச் செல்ல வேண்டிய வருடாரம்பமெனக் கொண்டு அத்திதியின் வாராதிபன் இராஜாவெனக் கூறுதல் "குட்டிச்சுவரில் தேள் கொட்டக் கட்டாந்தரையில் கடுப்புக்கண்டது'' என்னும் கூற்றை யொக்கும்; ஆதலின், பங்குனிமீ சுக்லப்பிரதமை உண்மையான வருஷாரம்பமாகாது. ஆகுமென்றால் ௧௯௩௰ஞூ டிசம்பர் மாதத்துள் ௧௯௩௧ஞூ ஜனவரி மாதம் பிறக்குமெனக்கொள்ள வேண்டும். அங்ஙனம் கொள்பவர் இல்லாமையால் அக்கொள்கை உண்மையாகா தென்க. பிள்ளையவர்களும், அவர்களினத்தவர்களும், திருநெல்வேலி ஜில்லாத்தமிழர்களும், ஸ்மார்த்தர்களும் பங்குனி சுக்கிலப்பிரதமையை வருஷப் பிறப்பாகக் கொண்டு கன்மங்களியற்றி யிருக்கின்றனரா? இயற்றுகின்றனரா? அன்றெனின், பிள்ளையவர்களுக்கு மட்டும் அப்பிரதமை வருடப்பிறப்பென்பது எங்ஙனம் புலப்பட்டது? சில வடமொழி நூல்களினும் பஞ்சாங்கங்களினும் பங்குனி சுக்கிலப்பிரதமையில் (சைத்திர சுத்தம், அதாவது உண்மையான சித்திரைமாதப்பிறப்பு) என்றும், சாந்திர வருஷாரம்பமென்று மூளதை நோக்கி அதைக்கொண்டனர். என்றால் அவரது ஷ பிரமோதூத வருடப் பஞ்சாங்கத்தில் உள்ள வைகாசிமீ களஉயில் ஹிஜ்ரி ௧௩௪ ஞூ மொஹரமாதம் ௧௨ மகமது வருஷாரம்பத்தையும், மார்கழிமீ களஉயில் ௧௯௩௧ ஞூ ஜனவரிமீ ௧௨ கிறிஸ்து வருஷாரம்பத்தையும் குறிப்பிட்டிருக்கின்றனரே, அவைகளிலொன்றை வருடப் பிறப்பெனக் கொண்டாலென்னை? சாந்திர வருடப்பிறப்பு மாதப்பிறப்புகளுக்கு உதய காலத்துச்

சுக்லப் பிரதமை காரணம், ஹிஜிரி வருஷப் பிறப்பு மாதப் பிறப்புகளுக்கு அஸ்தமனகாலத்து சுக்லத்திதியை காரணமாத லின் இவ்விரண்டு வருடமாதப் பிறப்புகளுக்கும் சாந்திரதின மான திதிகளே காரணமாயிருத்தலின் ஹிஜிரி வருடப் பிறப்பை யும் பிள்ளையவர்கள் ஏன் கொள்ள வொண்ணாது? அது புற மதங்களில் ஒன்றான மகமது மதக்கொள்கை ஆதலின் அஃது ஏனைய மதங்களுக்கு ஆகாது எனின், கூறுதும்: வடமொழி யார்களில் பெரும்பாலார் சைவரும் அல்லர்; சௌரமானிகளும் அல்லர். அவரது நூல்களில் பல சைவசமபத்தையும், அச் சமயக் கடவுளரையும் ஆகமங்களால் பெரிதும் புகழப்படும் சௌரமானத்தையும் சைவ ஆசாரியர்களையும் சிறிதும் பேணாது இழித்துக் கூறும் அவர்களோ வைரவ முதலிய அகச்சமயம் ஆறினுள் ஒன்றிலேனும் சேர்ந்தவருமல்லர்; அவர்களை நோக்கி நீங்கள் எம்மதத்தவர் எனவினவில் நாங்கள் ஸ்மார்த்தமத மென வும், வைதிக மதமெனவும் அத்வைத மதமெனவும் கூறுவர். இம்மதங்கள நமது வேதாகமங்களில் உள்ள மதங்களா? இல் லா மதங்களேயாகும். ஆதலின், இத்தகையோர்களது நூல்களை யும் அவரது கொள்கைகளையுமட்டும் சைவ நன் மக்களிற் சிறந்த பிள்ளையவர்கள் அளவைகளாகக் கொள்ளலாமோ? கொள்ள வொண்ணாதென்பதே துணி பொருள். அன்றியும் வடமொழியாளர்களோ கேவல கன்மிகள்; அவரது நூல்களும் கேவல கன்மங்களையே மிகப் புகழ்ந்து கூறும். இதற்குச் சான் ருகச் சோமசம்பு சிவாசாரிய சுவாமிகள் சிவராத்திரி நிர்ணயம் என்னும் நூல் ௩௰௫, ௩௰௬ பக்கங்களில் காமிகாகமக்கூற்ருக "பார்ஹஸ்பத்தியம் சாந்த்ரமாநம் சௌரஞ்செ தித்ரிதாமதம்! மாநத்ரய மிதிக்யாயாதம் தத்து துக்தப்ரகாரத:!!. ஊனாத் யா சாரசம் யுக்தா பார்ஹஸ்பத்ய மிதிஸ்மிருதம்.! கேவலம் கர்ம நிஷ்டா நாம் சாந்திரமா நமுதாஹ்ருதம்!!. ஆதி சைவா மஹா சைவாப்பநு சைவாந்த்ய சைவக:! அவாந்தரா சப்ரவரா: சர்வே ஷாம் சௌரமா நகம்!!. பரார்த் தேசாலயே ஷ்வேஷு— ஸௌரமா நேநகார யேது, ஸௌரமா நம்விஹா யாத சாந்த்ரா தி:ஷ க்ருதேத்யதி ஆயு ஸ்ரீ புத்ர நாசஞ்ச தத்கர்மம் நிஷ்பலம்

பவேத் !,'' என்றும், ஷ ஆகமம் முகூர்த்த நிர்ணயப் படலத்தில் "காரணம் சௌரமா நஞ்சசூக்ஷமம் சாந்த்ரமிதிஸ்ம்ருதம்! ஸ்தூலம்ஸ்யாத் பார்ஹஸ்பத்யம் மாநத்ரய முதாஹ்ருதம் !. சூக்ஷமம் ஸ்தூலம் பரித்யஸ்ய இருஹேத் காரண முத்தமம். சௌரமாநேந கர்த்தவ்யம் ஸர்வகர்ம சுபாவகம்'' என்றும் கூறுமாற்றானும், காரணாகமம் பூர்வபாகம் மஹோத்ஸவவிதிப் படலம் "ஸௌரமாஸம்ப்ரஸஸ்தம்ஹி சாந்த்ரமா லோப்ரஸஸ்தகம்'' என்று கூறுமாற்றானும்—"பார்ஹஸ் பத்தியமானம் சாந்திரமானம், சௌரமானம் எனமானம் மூன்றுவிதம்; ஊணசார முடையோர் பார்ஹஸ் பத்திய மானிகள், கேவலகன்மாசார முடையோர் சாந்திரமானிகள், ஆதிசைவர், மஹாசைவர் அனுசைவர், அந்திய சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவரென்னும் அறுவரும்।சௌரமானிகள். ஆலயங்களில் "சௌரமானத்தாலேயே கிரியைகள் நடத்தவேண்டும், சாந்திரமானத்தாலே கிரியைகள் செய்யக் கூடாது; செய்தால் ஆயிசு செல்வம் புத்திரர்கள் நாசமாவதோடு அக்கன்மங்கள் யாதொரு நற்பலனையும் கொடாது'' என்றும், "சௌரமானம் காரணம், சாந்திரமானம் சூட்சுமம், பார்ஹஸ்பத்தியமானம் தூலம், தூலம் சூட்சுமங்களை விடுத்துக் காரணத்தைக் கொள்வது உத்தமம். "எல்லாக் கன்மங்களும் சௌரமானத்தாலேயே செய்ய வேண்டு'' மென்றும், "சௌரமாசம் பலமுள்ளது, சாந்திரமாசம் பலமில்லாதது'' என்றும் உண்மை நிலை பெறுகின்றது. இவ்வாகமங்கள் சிவபெருமானருளிய தமிழ்மொழி ஆகமங்களினின்றும் மொழி பெயர்க்கப்பட்ட வடமொழி ஆகமங்கள். வடமொழி விரதராஜம், விரத சூடாமணி, புருஷார்த்த சிந்தாமணி, நிர்ணய சிந்து, தருமசிந்து, சுதிவிலோசன முதலிய நூல்கள் கேவலம் மனிதர்களது வாக்கியம். சுருதிஸ்மிருதி முதலிய நூல்களும் அத்தகையனவே. இத்தகைய நூல்களைக் கடவுளருளிய நூல்கள் போலும் தேவதைகளருளிய நூல்கள் போலும் பிறழக்கருதி அந்நூல்களைத் தழுவி நடப்போரைக் குறித்து, திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா "அசிக்க வாரியங்களோது மாதரைப் பேதவாதப், பிசுக்கரைக் காணுக் கண்

வாய் பேசாதப் பேய்களோடே'' என்று கூறுகின்றது. அன்றியும் வடமொழி நூல்கள் கற்பனை நூல்களென்று கைவல்லிய நவநீதம் சந்தேகந் தெளிதற் படலத்தில் "அந்தணர் நூன்மித்தையென விடலது தீவிரதரமா மறிந்து கொள்ளே'' என்றுங் கூறுகின்றது.

அளவைகட்குரிய நூல்கள் ஆகமங்கள்; அவைகளில் சௌரமாதங்களையே சாந்திர மாதங்கள் போற் கூறுகின்றன. இவ்வுண்மையை நாம் வெளியிட்டுள்ள குரோதனஸு ஐப்பசிமீ செந்தமிழ்ச் செல்வியில் 'ஆசுவயுஜமும் ஐப்பசியும் ஒரே மாதம்' என்னும் தலைப்பின் கீழும் அட்சயஸு ஆவணிமீ செந்தமிழ்ச் செல்வியில் "சாந்திரமான அகர்கணம் பிழைபடுகின்றது'' என்னும் தலைப்பின் கீழும் காண்க. சித்திரை மாதப்பிறப்பின் வாராதிபனே இராஜா வைகாசி மாதப்பிறப்பின் வாராதிபனே மந்திரி என்பதற்குரிய ஆதாரங்களைப் பிரபவஸு ஆவணிமீ செந்தமிழ்ச் செல்வியில் 'நவநாயகரில் இராஜாவையும் மந்திரியையும் மாறுபாடாய் நிர்ணயித்திருக்கின்றனர்'' என்னும் தலைப்பின் கீழும் காண்க. இதுவுமன்றி இக்காலம் நடைபெற்று வரும் வாக்கிய பஞ்சாங்கங்களிலுள்ள பற்பல வழுக்களை எடுத்து விளக்கிக் காட்டிக்கண்டித்து உண்மை இஃதென நிலை நாட்டிப் "பஞ்சாங்க விளக்கம்'' என்னும் ஒரு நூலும் எழுதியிருக்கிறோம். அதில் ஆறு பகுதிகளை மட்டும் பிரபவஸு வைகாசி ஆவணி மாதங்களின் செந்தமிழ்ச் செல்வியில் 'பிறை சூடும் பெருமாள் பிள்ளை' என்னும் பெயரால் வெளியிட்டுள்ளோம். இப்பொழுது எல்லாப்பகுதிகளையும் ஒரே புத்தகரூபத்தில் வெளியிடும்படி விரும்பிய எமது நண்பர்களின் பொருட்டு அவ்வாறே செய்யக் கருதி அந்நூலை அச்சுக்கனுப்பியிருக்கிறோம்; விரைவில் வெளிவரும். ஆதலின், அதனை ஆய்ந்துணர்ந்து தெளிந்து கொள்க.

அறிவிப்பின் ௫ ஆவதில் கணித முறையில் திருநெல்வேலிக்குத் திதி நட்சத்திர நாழிகையில் 2-நாழிகை வரை வித்தி

யாசம் வருகிறது போல் கூறுகின்றனர். இதனையும் ஆராயு மிடத்து, "மானியாதி வாக்கியங்களைச் சந்திரப்புடத்துடன் கூட்டிக் கணிக்கப்படுகிறதினாலே திதி, நட்சத்திரம் யோகம், கரணம் தியாஜ்யம் என்பவைகளில் சற்றேறக்குறைய ஒன்றே முக்கால் நாழிகை வரையும் நாள் தோறும் குறைந்து வரும். மானியாதி என்பது வருசியார் இருக்கும் இடத்தின் தேசாந் தரத்துக்குரிய பெயர். அம்மானியாதிகள் பிறதேசங்களுக்கு ஒவ்வாது. அவ்வாக்கியங்களைச் சேராது கணித்தால் வித்தி யாசம்வராது. கேரளதேச கணிதர்களும், கருங்குளம் கிருஷ்ண ஜோதிஷர், அனந்த கிருஷ்ண ஜோதிஷர், இலத்தூர் செல்லம் சாஸ்திரிகள், அரிமளம் காமாட்சிநாத சாஸ்திரிகள், எட்டையபுரம் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை முதலோரும் வாக்கிய கணிதர்களே. இவர்கள் அம்மானியாதிகளைச் சேரா மலும், பிள்ளையவர்களும், இராமநாதபுரம், சிவகெங்கை, புதுக் கோட்டை, ஸ்ரீ அரங்கம், யாழ்ப்பாணமுதலியவாக்கியப்பஞ்சாங்க கணிதர்களும் மானியாதி வாக்கியங்களைச் சேர்த்தும் கிரியை செய்கிறதினாலே வித்தியாசப்படுகிறது. மானியாதிகளைச் சேர்க் காமல் அவ்வவ்விடங்களுக்குரிய தேசாந்தரக்கிரியை செய்தால் வித்தியாசப்படாது. பிள்ளையவர்கள் இவ்விதிகளை நன்குண ராது பிறர் பால் குற்றம் கூறல்தகாது.

௪-ஆவது:—'திருவாவடு துறை தருமபுர முதலிய சைவ மடங்களிலும், திருநெல்வேலி சிதம்பர முதலிய க்ஷேத்திரங் களிலும், சைவர் கிரகங்களினும் விநாயக சதுர்த்தி, நவராத்திரி, கந்தஷஷ்டி முதலியவைகள் நெடுங்காலமாகச் சாஸ்திரமான ரீதியாக நடைபெறுகின்றது. சில காலமாகச் சில பஞ்சாங்கங் களில் ஜோதிஷ சாஸ்திர விரோதமாகவும், சிவாகம விரோத மாகவும், பரம்பரை வழக்கத்துக்கு விரோதமாகவும் சௌர மானத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது.' என்று கூறுகின்றனர். இவைகளைப் பற்றியும் சிறிது ஆராய்வாம்:—

பிராமணருள் போஜராஜ பண்டித ரென்பார் இயற்றியுள்ள சரசோதி மாலை என்னும் ஜோதிட சாத்திரம் தெய்வவிரதப்

படலத்தில் சித்திரகுத்தர் விரதம், "மன்னு சித்திரையா மாதம் வளர்வதியிடையுவாவில்—பன்னிய நடு நாடன்னிற் பரிதியின் சேயனை—மின்னு சித்திரகுத்தற்கு விருப்புறு விரதமாகும்" என்றும்,

வைகாசி விசாகம்,

"விம்பமுற்ற வைகாசிவிசாக நாள்"

என்றும்,

தேவிவிரதம்,

"ஆடியிற் பூரநாளே யம்பிகை அவதாரஞ் செய்
பீடுறுதினம்"

என்றும்,

விநாயக சதுர்த்தி

"சிங்கமாமாதம் வந்ததெரி சத்தின்பின் புசேருந்
திங்களினாலாம் பக்கஞ்சிந்து
எமுகனேன் பாகும்"

என்றும்,

ஜயந்தி

"பேசுமாவணிப் பின்னிரு நாலிலே
யோசை பெற்றவுரோகணி கூடவே
தேசமெங்குஞ் ஜெயந்தியாம்"

என்றும்,

மகாளயம்:

"கன்னியிலாதவன் கருதிவந்தெழப்
பொன்னிகர் பூரணை போனமற்றை நாள்
உன்னிய தெரிச மீறொரு பன்னைக்தினும்
மன்னிய மாளயம் பிதிரர் வாழுமே"

என்றும்,

கேதார விரதம்

"பொங்கியபுகழ் புரட்டாதியாகிய
திங்களிற் பிற்பதினாலு செய்யதாட்
சங்கரி நோற்றகேதார நோன்பதாம்"

என்றும்,

நவராத்திரி

"அரிவை யிலிரவி சேர்ந் தைப்பசிப் பிறை
வருபிரத மைமுதனவமி யீறதாய்ப்
புரவலர்தூர்க்கையைப் பூசை செய்திடில்"

கந்தஷஷ்டி

"நற்றுலை மாதந்தன்னி னனி மதிவளருகின்ற
முற்பிரதமையே யாதிமூவிரு தினமு மீசன்
சற்குருவான செவ்வேடனது நோன்பாகும்"

என்றும்,

கந்த புராணம் உபதேச காண்டம்

கந்த விரத படலம்.

கந்தஷஷ்டி.

"வெற்பொடு மவுணன் றன்னை
வீட்டியதனிவேற் செங்கை
யற்புதன் றன்னைப் போற்றி
யமரரு முனிவர் தாமுஞ்
சொற்படு துலையின் றிங்கள்
சுக்கிலபக்கந் தன்னின்
முற்பக லாதி யாக
மூவிரு வைக ஞேற்றூர்"

என்றும்,

சிவராத்திரி

சரசோதிமாலை

"பிறங்கு மாசியிற் பிற்பதினலதே
யறங்கொணர் சிவராத்திரியாம்"

என்றும், கூறுகின்றன.

மகா சிவராத்திரி மான்மியம்

சிவராத்திரி யுற்பவச் சருக்கம்

"மாசி மாதத்தின் றேன்று மதிக்கலை குறைந்துதேயும
ஆசில் பன்ஞன் காம்பக்கத் தரையிருளி யாமந்தன்னிற்
றேசிஞல் விளங்குஞ் சோதி செஞ்சுடராகி நின்ற
காசிலா நுதற்கட் பெம்மான்ற னதுருக்காட்டி நின்றூன்"

என்றும்,

வடமொழி நூல்களில் சிவராத்திரி விரதம்

காரணாகமம்:—" கும்பராசிகதேபாநௌயாச கிருஷ்ண சதுர்த்தசி !. சைவாத்ர மாகஸம்ஜ்ஞா ஸ்யாதத்தரவார்ச்யாம ஹாநிசி" என்றும்,

புரோற்கிதாகமம் :—"யதாகும்பக தஸ்ஸ-ரெஸ் ஸமா சோமாக ஸம்ஜ்ஞக: தஸ்மிந் நேவசதுர்த்தஸ்யாம் சிவம்சம்பூஜ ரேந்நிசி" என்றும்,

குரோதன ௵ மாசிமீ ௨௨ தமிழ்நாடு பத்திரிகை— கரும்பக்கம்—தி. சோமசுந்தர தேசிகர் எழுதிய கூற்றில்

வீராகமம்,

" கடம்ஸமாஸ் ருதேபூஷ்ணிதிநாந்த ஞ்சயத்ர யோதசி.!
பச்சாத் சதுர்தசி யுக்தாஸாராத்ரி
சங்கரப் ரீயோ"

என்றும் கூறுகின்றன.

காமிகாகமம்.

" கும்பேரவௌது சம்ப்ராப் தேக்
குஷ்ணபக்ஷேவி சேஷதம்
'த்ரயோதஸ் யாசதுர்த்தஸ்யஸம்
யுக்தேத்ந்நிசிஸ்ததா"

என்றும்,

நவராத்திரி விரதம் யாமளதந்திரம்

"ததாசகந்யாமாசேது பூர்வபக்ஷ விசேஷத:!"
ப்ரதமாயாஞ்சமாரப்ய நவமீயந்தம்ப்ரபூஜயேது"

என்றும்,

"சௌரமாநேநகர்த்தவ்யம் நவராத்திரிம் விசேஷத:!
சாந்த்ரமாநம்நகர்த்தவ்வியம்க்ருதம் க்ஷேத்ராஷ்டநாசனம்"

என்றும்,

பிராமணருள் நாராயண ஜோதிட பண்டிதரால் செய்யப் பட்ட விதானமாலை என்னும் ஜோதிட நூலில் தெய்வப்பிர திட்டைப் படலத்தில்,

## சிவப்பிரதிட்டை

"மாசி யொழிய வுறு முத்தராயண காலமன்று
மாசில் சீர்தெக் கணத்தைப்பசியாவணியாங்கரனைப்
பேசுவர் தாபனம்"
என்றும்

## ஸ்ரீ ஜயந்தி அதாவது கிருஷ்ண ஜென்மாட்டமி

"திங்க ளுரோகணி சேர்ந்தெழச் செங்க திர்சிங்கமேறப்,
பங்கப்படு மட்டமியில்"
என்றும்,

## ஏகாதசி விரதம்

"இரவிதனு வுற்றிடுநாள் வளர்பிறையேகாதசி" என்றும் கூறப்பெற்றிருக்கிறது. இன்னும் அளவைகள் பல உள்ளன. விரிக்கில் மிகவிரியுமென்றஞ்சிவிடுக்கலானேம். (இது வைகுண்ட ஏகாதசி.)

இதுகாறும் கூறியவாற்ருல் சோதிஷ சாத்திரங்களாலும், பல சிவாகமங்களாலும், புராணத்தாலும் சௌரமாதங்களிலே சாந்திர தினங்களென்னுந் திதிகளில் எல்லா விரதங்களும் பூசைகளும் ஏற்பட்டிருக்கிறதாய்ப் புலப்படுகின்றன. அவைகள் சாந்திர மாதங்களில் ஏற்பட்டதாய்ப் புலப்படவேயில்லை. மேற்கண்ட ஆகமங்கள் சௌரமானத்தைப் பெரிதும் புகழ்ந்தும், சாந்திரமானத்தை மிகவும் இகழ்ந்தும் கூறிச் சாந்திரமானத்தில் யாதொரு கன்மங்களும் செய்ய வொண்ணுது, செய்யின் கேடுண்டாம் எனவும் வற்புறுத்துகின்றன. ஆதலின் மேற்கண்ட நூல்களின் படியே விநாயக சதுர்த்தி, கிருஷ்ணஜயந்தி இவைகளை ஆவணி மாதத்தும், நவராத்திரி முடிவும், விஜய யாத்திரையும் புரட்டாதியிலும், தீபாவளியும் கந்தஷஷ்டி முடிவும் ஐப்பசி மாதத்திலும், சுவர்க்க ஏகாதசி மார்கழியிலும், சிவராத்திரி மாசிமாதத்திலும் கொள்ளல் வேண்டும்; அன்றி, இம் மாதங்கட்கு முன் பின் மாதங்களில் கொள்ள வொண்ணுது, நவராத்திரிக்கு மகா நவமியும், விஜயயாத்திரைக்குத் தசமியும் முக்கியமானவை, இவைகள் புரட்டாதி மாதத்துள்ளிருத்தல் வேண்டும். கந்த ஷஷ்டிக்கு ஷஷ்டி முக்கியம். இது ஐப்பசி

மாதத்துள் இருத்தல் வேண்டும் என்பது ஷை நூல்களின் கருத்து.

மேற்கூறியபடி சோதிட நூல்களும் ஆகமங்களுமிருக்கின்றதை யுணர்ந்து அவ்வாறே இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் குரோதன வருஷ முதலாகத் தமது சைவப்பஞ்சாங்கத்தில் விரதங்கள் ஏற்படுத்தி வருகிறதாகப் புலப்படுகின்றது. ஏனைய பஞ்சாங்கங்களிலோ ஷை நூல்களுக்கு விரோதமாகச் சாந்திரமாதங்களிலே விரதங்களேற்பட்டு வருகிறது. இங்ஙனம் சாந்திரமாதத்தில் ஏற்பட்டு வரும் விரதங்களை ஷை சாஸ்திரங்களின்படி சௌரமானத்தில் ஏற்பட்டு வரும் விரதங்களை ஷை சாஸ்திரங்களுக்கு விரோதமென்று பத்தமடைப் பிள்ளையவர்கள் கூறுகின்றார். இங்ஙனங் கூறுகின்றதை ஊகித்து நோக்குமிடத்துப் பிள்ளையவர்கள் அந்நூல்களைப் பார்த்துணராது சாந்திரமானிகள் சொற்களைக் கேட்டு எழுதினர் போலப் புலனாகின்றது.

---

## திருவருட்பா

எத்துணையும் பேதம்உறாது எவ்வுயிரும்
தம்உயிர்போல் எண்ணிஉள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் எனநான் தெளிந்தேன்அந்த
வித்தகர்தம் அடிக்குஏவல் புரிந்திடஎன்
சிந்தைமிக விழைந்ததாலோ.

இதன் பொருள் : சிறிதும் உயர்வு தாழ்வு என்னும் வேற்றுமை கருதாமல் சிற்றுயிர்கள் முதல் எல்லா உயிர்களையும் இன்பதுன்ப நிகழ்ச்சிகளில் தம் உயிர்போல் எண்ணி உள்ளத்தில் அவ்வுயிர்கள் பால் ஒத்த உரிமை யுடையவர்களாகி அம்முகத்தால் மகிழ்ச்சி யடைகின்றவர்கள் யாவரோ, அவர்கள் உள்ளந்தான் அறியாமை கலவாத முழு அறிவு உருவாய் எம்பெருமான் நடம்புரிகின்ற அறிவு வெளியாகும் என்று நான்

தெளிந்தேன். ஆதலால் அத்தகை அறிவு மிக்க சான்றோர்களுடைய திருவடிகளுக்கு ஏவல் செய்ய என் உள்ளம் விரும்புகின்றது.

—லோகோபகாரி

# எலுமிச்சம்பழம்

எலுமிச்சம் பழம் நமது நாட்டில் சர்வ சாதாரணமாய்க் கிடைக்கக் கூடிய ஒரு பழம். இதிலிருந்து உப்பு எடுப்பதுண்டு. திரவமும் இறக்கலாம். ஷர்பத் என்னும் இனிய பானம் செய்யலாம். செங்கல்பட்டு ஜில்லாவிலே அல்லிக்குழி என்னும் கிராமத்தில் எலுமிச்சம் பழம் ஒருபெரிய வியாபாரமாய் நடந்து வருகின்றது. அக்கிராம வாசிகள் எலுமிச்சம் பயிரைத் தவிர வேறு பயிர் செய்வது கிடையாது. அவ்வூர்ப்பழத்தின் தோல் இலேசானதாயும் அதிக ரசம் உள்ளதாயும் இருக்கின்றது. [திருநெல்வேலி ஜில்லா கடையத்திலும் எலுமிச்சம்பழம் மிகுதி. அவ்வூர்ப்பழம் சென்னைக்கும் வருகிறதாம்.] இன்னும் வெவ்வேறு இடங்களிலும் எலுமிச்சம் பயிர் செய்யப்பட்டு வருகின்றது.

எலுமிச்சம் பழம் பித்தத்தைப் போக்கும்; விஷத்தை நீக்கும். நரம்புகளுக்குப் பலத்தைத் தரும். எலும்புருக்கி (ரெக்கடிவ்) என்னும் வியாதியைக் குணப்படுத்தும். விஷசுரம் (மலேரியா) என்னும் கொடிய வியாதியைப் போக்கும். ஜீரண சக்தியை உண்டு பண்ணும். இரத்தத்தைச் சுத்தி செய்து இருதயத்தை வலுப்படுத்தும். நாவிற்கு ருசியைத் தருவதில் ஒப்பற்றது.

எலுமிச்சம் பழத்தையோ அல்லது அதன் ரசத்தையோ உட்கொண்டால் சளிப்புப் பிடிக்கும், தொண்டை கட்டும், தலைவலி வரும், சுரம் காணும் என்பது யாவருக்கும் அனுபவம். எலுமிச்சம் பழத்தில் உள்ள புளிப்பினாலேயே சளிப்பு முதலானவை உண்டாகின்றன. ஆதலால் மேற்கூறிய தோஷத்தை நீக்க நம் நாட்டில் உப்பு சேர்த்து ஊறுகாய் செய்து உபயோகிக்கின்றார்கள். உப்பிலே ஊறின ஊறுகாயை ஆறு மாதம் கழித்து உட்கொள்ளச் சளிப்பு முதலான தோஷங்களை உண்டு பண்ண மாட்டாது.

எலுமிச்ச ஊறுகாய் செய்யும் வகைகள் பலவற்றுள் சில வற்றை இங்குக் கூறுகிறேன். பழத்தைச் சட்டியில் போட்டு நல்லெண்ணெய் விட்டுப் பழத்தில் சொட்டை விழும் வரையில் வதக்கிப் பிறகு எடுத்துச் சிறிய துண்டுகளாய்ச் செய்து கொண்டு அவற்றுடன் வறுபடாத மிளகாய்க் (நூறு பழத்திற்கு) கால் வீசை, ஒரு படி உப்பு, எண்ணெயில் பொறித்துத் தூள் செய்த பெருங்காயம் ஒரு பலம், மஞ்சள் தூள் 2 பலம், நல்லெண் ணெய் இரண்டு வீசை, கடுகு அரை வீசை (வறுத்தது), இவைக ளுடன் கத்தரிக்காய், உருளைக்கிழங்கு, வெண்டைக்காய், வாழைக்காய், பச்சை மிளகாய், இஞ்சி, பாவக்காய், அவரைக் காய், சீமை முள்ளங்கி, நாட்டு முள்ளங்கி, வாழைத்தண்டு ஆகிய வைகளை வகைக்குப் பத்து பலம் எடுத்துக்கொண்டு கொத்த வரைக் காயைப்போலத் துண்டுகளாகச் செய்து கலந்து ஜாடியி லாவது கல் சட்டி அல்லது மண் சட்டியிலாவது வைத்துக் கொண்டு ஆகாரத்துடன் உபயோகித்து வரச் சரீரத்திற்கு ஆரோக்கியமும் நாவிற்கு ருசியும் தரும். உப்பில் ஊறிய ஆறு மாதத்திற்கு மேம்பட்ட ஊறுகாயிலும் மேற் சொன்ன சரக்கு களைச் சேர்த்து ஊறுகாய் போடலாம். இந்த ஊறுகாயைத் தினம் தினம் ஆகாரத்தோடாவது வேறு பலகாரத்தோடாவது உட்கொண்டுவர விஷநோய் அணுகாது. அரோசகம் சேராது. பித்தம் அதிகரிக்காது. மலச்சிக்கல் காணாது, இரத்தக் குறை வும் ஏற்படாது. ஆகையினால் நண்பர்கள் எப்பொழுதும் எலு மிச்சம் பழ ஊறுகாயை உபயோகித்து வருதல் நலம்.

எலுமிச்சம் பழத்தால் நீங்கும் பிணிகளில் முக்கியமானதும் மற்ற எம் மருந்துகளாலும் நிவர்த்தி யாகாததுமான வியாதி யைக் கூறுகிறேன்.

எலும் புருக்கி என்னும் (ரெக்கடிவ்) கொடிய வியாதிக்கு உலகில் மருந்து கிடையாது என்பது வைத்திய நிபுணர்களின் தீர்மானம்.

எலும்புருக்கி வியாதியானது ஒருவித நோயுமின்றிச் சரீ ரத்தை இளைக்கச் செய்யும் ஒருவித வியாதி. இது குழந்தை

களுக்கும் காணும். பெரியவர்களுக்கு மேற்படி வியாதி கண்டால் எலுமிச்சம்பழ ஊறுகாய் நாள் ஒன்றுக்கு 1-பழம் விழுக்காடு உட்கொண்டு வர இக்கொடிய நோய் தீரும்.

குழந்தைகள் ஊறுகாய் தின்பதற்கு இயலாமையால் அத்தகைய குழந்தைகளுக்கு ஒரு பேசின் அல்லது போணியில் காய்ச்சின சலம் 4 படி விட்டு அதில் 1 எலுமிச்சம் பழரசத்தை விட்டுக் குழந்தை தாங்கும்படியாய் இலேசான சூட்டுடன் நீரை வைத்துக்கொண்டு அதில் குழந்தையை உட்கார வைத்துப் பிடித்துக் கொள்ளவேண்டும். அல்லது சாயவைத்து விடலாம். இதன்படி காலை மாலைகளில் சுமார் அரைமணி நேரம் உட்கார வைக்கவேண்டும். இப்படிச் செய்தால் ஆசனத் துவார வழியாய் எலுமிச்சம்பழத்தின் சத்து சரீரத்தில் சென்று வியாதியைக் குணப்படுத்தும்.

சென்னையில் கிருஷ்ணு அண்டு கம்பெனி சொந்தக்காரரின் குழந்தை இளைத்து எலும்பும் தோலுமாய்க் காணப்பட்டது. அதைக் கண்ட பல டாக்டர்களும் ரெக்கடிவ் என்னும் எலும் புருக்கி நோயாகிய இவ்வியாதி குணமாவது கஷ்டம் எனக் கூறிக் கைவிட்டனர். பிறகு மந்திரவாதிகளால் கைவிடப்பட்டது. கடைசியாய் அக்குழந்தையை ஒரு தொட்டியில் உட்கார வைத்து அதில் 4 படி சலம் விட்டு ஒரு எலுமிச்சம்பழ ரசம் கலந்து சுமார் அரைமணி நேரம் உட்கார வைத்துக்கொண்டு வந்ததில் குழந்தை சம்பூரண சுகத்தை அடைந்தது. இன்னும் காலை மாலைகளில் பெற்றோர்களின் ஆனந்தத்தால் அச் சிகிச்சையைச் செய்து கொண்டே வருகின்றார்கள்.

சென்னை கோவிந்தப்ப நாய்க்கன் வீதியில் இருசால சுப்பராயச் செட்டியார் அவர்களின் 14 வயதுடைய மாணவன் எலும்புருக்கி நோயால் இளைத்துப் போய்விட்டான். பல சிகிச்சைகளும் செய்து வெறுத்தபின் என் வார்த்தையை ஏற்றுக்கொண்டு தினம் ஒன்றுக்கு எலுமிச்சம் பழ ஊறுகாய் ஆகாரத்துடன் உட்கொண்டபின் சுமார் 1 மாதத்திற்குள் வியாதி நீங்கி ஆனந்த பரவசனுய் இன்று பி. ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கின்றான்.

# பெரியபுராணச் சிறப்புச் சொற்பொழிவுகள் நிகழ்த்திய வரி :

லால்குடி, போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர்

## திருவாளர். அ. மு. சரவண முதலியாரவர்கள்

திருநெல்வேலியில் 14-5-30 முதல் 5-6-30 வரையில்

| வருடம் மாதம் நாள் | இடம் | பொருள் | நன்கொடையாளர்கள் பெயர் | ரூ. |
|---|---|---|---|---|
| 14-5-30 | திருநெல்வேலி ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் வசந்த மண்டபம் | தடுத்தாட்கொண்ட புராணம் | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கம் | 40 |
| 15-5-30 | ,, | ,, | ,, | |
| 16-5-30 | ,, | ,, | ,, | |
| 17-5-30 | ,, | ,, | ,, | |
| 18-5-30 | ,, | காரைக்காலம்மையார் | திருநெல்வேலி சுவாமி நெல்லையப்பர் காந்திமதியம்மாள் தேவஸ்தானம் | 40 |
| 19-5-30 | ,, | மெய்ப்பொருளுயனூர் | ,, | |
| 20-5-30 | ,, | திருநீலகண்ட நாயனூர் | ,, | |
| 21-5-30 | ,, | இயற்பகை நாயனூர் | ,, | |
| 22-5-30 | ,, | சேரமான் பெருமாள் நாயனூர் | திருவாளர் விசுவநாத பிள்ளை அவர்கள் | 10 |
| 23-5-30 | ,, | நம்பியாரூரரும் சேரமான் பெருமாளும் } | ,, ந. சு. சுடலைமுத்துப்பிள்ளை அவர்கள் | 10 |
| 24-5-30 | ,, | கண்ணப்ப நாயனூர் | ,, சு. உ. மா. அ. உமையொருபாகம் பிள்ளை அவர்கள் | 10 |

| | | | | |
|---|---|---|---|---|
| 25-5-30 | ,, | இளையான் குடிமாற நாயனார் | ,, சோ. வ. திரவியம் பிள்ளை அவர்கள் அண்டு கோ. | 10 |
| 26-5-30 | ,, | ஏனாதிநாத நாயனார் | ,, சு. தங்கப்பிள்ளை அவர்கள் | 10 |
| 27-5-30 | ,, | அப்பரும் ஞானசம்பந்தரும் | ,, Tinnevelly District Surgeon | 10 |
| 28-5-30 | ,, | சிறுத்தொண்ட நாயனார் | ,, மு. சு. ஷ. மா. ச. வே. சண்முகம் பிள்ளை அவர்கள் | 10 |
| 29-5-30 | ,, | அமர்நீதி நாயனார் | ,, ம. சு. ஆ. கோபாலகிருஷ்ணன் செட்டியார் அவர்கள் | 10 |
| 30-5-30 | ,, | குங்குலியக்கலய நாயனார் | ,, கோமதி நாயகம் பிள்ளையவர்கள் | 10 |
| 31-5-30 | ,, | நம்பியாண்டார் நம்பிகள் | ,, சொ. கந்தசாமிபிள்ளை அவர்கள், சு. க.சு. தியாகராஜபிள்ளை அவர்கள் | 10 |
| 1-6-30 | ,, | சேக்கிழார் புராணம் | [தெ. இ. சை. சங்கம்] இனும் | |
| 2-6-30 | திருநெல்வேலி மேலரதவீதி சிவ. பச்சையப்பிள்ளை அவர்கள் கடைமுன் | அப்பூதியடிகள் | அன்பர் திருக்குழாங்கள் | 10 |
| 3-6-30 | சிந்துபூந்துறை பாளையம் சாலைக்குமாரசாமிகோவில் | சமயகுரவர் | சிந்துபூந்துறை சாலைக் குமாரசுவாமி தேவஸ்தானம் | 10 |
| 4-6-30 | கைலாசபுரம் கைலாசநாதர் சுவாமி கோவில் | அழுதடியடைந்த அன்பர் மணிவாசகர் | கைலாசபுரம் கைலாசநாதர் சுவாமிகள் தேவஸ்தானம் | 10 |
| 5-6-30 | வண்ணாரப்பேட்டை Dr. P. K. S. முன் ஹால் | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | பா. வ பரமசிவன்பிள்ளை, பழைய வண்ணாரப்பேட்டை | 10 |
| | | | | 220 0. |

குறிப்பு:—திருநெல்வேலியில் பெரிய புராணத்தை அன்பர்கள் ஆதரித்தமை போலத் தமிழ் நாட்டின்கணுள்ள சைவ நன்மக்கள் பலரும் பெரிய புராணத்தின் பெருமை விளங்குமாறு செய்யவேண்டிக்கொள்கிறோம்.

# மதிப்புரை

## ஸ்ரீஇராம கிருஷ்ண தேவரின் சரித்திரம்

இஃதியற்றியவர் ஸ்ரீவில்லிபுத்தூர் அ. ஸ்ரீனிவாஸாசாரியார் பி. ஏ., எல். டி., அவர்களாவர். இதுகாறும் தமிழில் வெளிவந்த இவரது சரித்திர நூல்களைவிட இது மிகவும் விரிவுடையது. இது 'தேவியின் திருமுன்னர், பத்தரோ பித்தரோ, அலதாரி, பைரவீ பிராமணீ, ஆகம நூற்றுறைகள், இராமலாலா, நிருவிகற்ப சமாதி, மதுரர் கண்ட காட்சிகள், திருப்பதிகட்குச் செல்லல், மதுரபாபுவின் மரணம், அன்னை சாரதா தேவியார், கேசவ சந்திர சேனரும் பிரம்ம சமாஜரும், ராமசந்திரதத்தரும் மனமோகன மித்திரரும், சுரேந்திரரும் கேதாரரும், யோகேந்திரநாதர், கிரீசசந்திர கோஷ், காசிப்பூர்ப் பூம்பொழிலும் மகா சமாதியும், விண்ணகம்புக்க பின்னர், முதலிய தலைப்புக்களையுடையது. இதன்கண் இராமகிருஷ்ண தேவர், தக்ஷிணேசுர ஆலயம், சுவாமி விவேகானந்தர், மதுரநாதர், அன்னை சாரதாதேவி, 32 அடியார்கள் முதலிய எழு உருவப் படங்கள் இணைக்கப்பட்டிருக்கின்றன. நூலிறுதியில் அரும்பத விளக்கம் சேர்க்கப்பெற்றிருப்பது கற்பவருக்குப் பயன் றரத்தக்கதாகும். இவரது வரலாறு மக்கள் வாழ்க்கையினால் ஆம் பயனை அடைதற்குரிய வழியைத் தெள்ளிதிற் கற்பிக்குந் தகையது.

உயர்ந்த சீமைக் கடிதத்தில் அச்சிடப்பட்டுக் கலிக்காக் கட்டிடஞ் செய்யப் பெற்றுள்ளது.

**950 பக்கம் விலை ரூபா 5**

கிடைக்குமிடம்:-ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை.

---

## கார்மண்டல சதகம் உரை.

இந்நூல் அவிநாசி ஆறை கிழாரால் எழுதப்பட்டது. இதற்கு உரை இயற்றியவர் காழி வித்வான் திரு. ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளையவர்களாவர். இது கார்காத்த வேலாளரின் வரலாற்றை நுவல்வது எனினும் பொதுவாகப் பழந் தமிழ் நாட்டு வரலாற்றையு மொழிகின்றது.

இதன் விலை அணு **12**

கமது கழகத்திலேயே விலைக்குக் கிடைக்கப்பெறும்.

---

## 'உடல் நலன்'

பொன்னமராவதி, வலம்புரி, திரு. ஆவி சித. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் இந் நூலை இயற்றித் தமது தந்தையாரின் அறுபதாம் ஆண்டு நிறைவின் நினைவாக வெளியிட்டுள்ளார்கள். உடல் நலனைப் பேணுதற்குரிய முறைகளை இனிய தமிழில் அழகுறத் தமது அநுபவ வாயிலாய் விளக்குகின்றார்கள். இந்நூலைத் தமிழ் மக்கள் அனைவரும் படித்துணர்ந்து அதன்படி ஒழுகுதல் வேண்டும். இதனைப் பெற விரும்புகிறவர் தபாற் செலவுக்காக ½ அணு தபாற் பில்லையை இதன் ஆசிரியு'க்கே அனுப்புதல் வேண்டும்.



பூண்டி அரங்கநாத முதலியார் M. A.
1847—1893
கச்சிக் கலம்பக ஆசிரியர்.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு அ | மெய்கண்டான்யாண்டு-௭௱௭ ஆவணித் திங்கள் 1930௵ ஜூலை௴—ஆகஸ்டு௴ | பரல் எ |

சிவமயம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

காயமே கோயி லாகக் கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.

இந்தத் தேவாரப்பாட்டு சிவபெருமானுக்கு உயிர் (ஆன்மா) எவ்வாறு அகவழிபாடு செய்தல் வேண்டும் என்பதையும் அதன் பயனையும் கூறுகின்றது. உயிர் தன் பொருட்டு வழிபாடு (ஆன்மார்த்த பூசை) அகத்திலும் புறத்திலும் சிவபெருமானுக்குச் செய்கின்றான். பிறர் பொருட்டு வழிபாடு (பரார்த்த பூசை) கோயிலில் செய்யப்படுகின்றது. பிறர் பொருட்டுப் புறவழிபாடு கோயிலில் இலிங்கமாகிய உருவில் புறப் பொருளைக் கொண்டு செய்யப்படுகின்றது. தன்பொருட்டு அகவழிபாடு மனமாகிய இலிங்கத்தைக் குறியாக வைத்து அறிவு அன்புப்பண்புகளைக்கொண்டு செய்யப்படுகின்றது. இந்தப்பாட்டில் பிறர் பொருட்டுக் கோயில் வழிபாட்டுக்கும் தன் பொருட்டு அகவழி பாட்டுக்கும் ஒப்புமை கூறப்பட்டிருக்கிறது. அகவழிபாடு வழுவாமல் உறுதிப்படுதற் பொருட்டே புறவழிபாடுசெய்யப்படுகின்றது.

ஈசனார்க்கு - சிவபெருமானுக்கு

காயமே கோயிலாக=காயம் என்பது உடல். புறவழிபாடு செய்யும் பொது மக்களுக்குக் கோயில் இடமாக அமைந்துள்ளது போல, தன் பொருட்டு அகவழிபாடு செய்யும் உயிருக்கு உடல் இடமாக அமைந்துள்ளது.

கடிமனம் அடிமையாக=கடிதல் என்பது போக்குதல், நீக்குதல். கடிமனம்-காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் நீக்கப் பட்ட மனம். அடிமையாக-உலகப்பற்றுவைத்து சங்கற்பவிகற்பங் கள் செய்யாமல் உயிரில் அடங்கி உயிர் சிவத்தன்மை பொருந்தி யிருக்க.

மனமானது காமம் வெகுளி மயக்கங்களினின்றும் நீங்கித் தூய்மையாய்ச் சங்கற்ப விகற்பங்களாகிய செயல்களின்றி உயிரில் அடங்கி உயிர் சிவத்தன்மை பொருந்தியிருக்க.

வாய்மை தூய்மையாக=வாய்மை என்பது உண்மைத் தன்மை (சத்துத் தன்மை).

புறவழிபாடு செய்கிறவனுக்கு, நீர்முழுக்கு, வெண்ணீறு தரித்தல், கைவைப்பு (கரநியாசம்), உறுப்புவைப்பு (அங்கநியாசம்), உயிர்ப்படக்கம் (பிராணாயாமம்), ஆகிய இச்செயல்கள் உடலைத் தூய்மை செய்து சிவத்தன்மை அடையச் செய்தல் போல, காமம் வெகுளி மயக்கம் ஆகிய குற்றங்களின்றி அடங்கியிருத்தல் மன தைத் தூய்மைசெய்து சிவத்தன்மை பொருந்தச் செய்கிறது.

மனமணி இலிங்கமாக=மனமணி என்பது மனமாகிய மணி. மணியில் ஒளி விளங்குதல் போல, தூய்மை அடைந்த மனதினிடத்து அருள் ஒளி விளங்குதலால் மனமணி என்றார். புறவழி பாட்டுக்குக் கோயிலில் இலிங்கம் குறியாக அமைதல் போல, தன்பொருட்டு அகவழி பாட்டுக்குத் தூய்மை அடைந்து அருள் ஒளி விளங்குகிற மனம் குறியாக அமைகிறது.

கடிமனம் மனமணி என இருவேறு மனமில்லை. குற்றங்களினின்று நீங்கித் தூய்மை அடைந்த மனமே மனமணியாகிறது.

நேயமே நெய்யும்பாலா=நேயம் என்பது அன்பு பாலாக எனற்பாலது பாலா எனக் கடைக் குறைந்து நின்றது. நெய்யும் பாலும் என்பன ஏனைய ஆவின் சிறநீர் சாணம் தயிர் ஆகிய மூன்று பொருள்களை

யும் இனப்பொருள்களாக உடன் தழுவி ஆனைந்தும் எனப்பொருள் படும். புறவழிபாட்டில் இலிங்கத்துக்கு ஆனைந்தும் ஆட்டுதல் தூய்மை செய்தல் போல், அகவழிப்பாட்டில் மனதுக்கு உயிர் தனக்கு அருளால் சிவம் செய்து வரும் பேருதவிச் செயல்களை நினைந்து, குழைந்து உருகி, தன்னறிவு முனைப்பின்றிச் சிவத்தில் அடங்கி நிற்கும் அன்பானது தூய்மை செய்கின்றது. முழுக்கானது (அபிடேகம்) உயிர்த்தூய்மை (ஆன்மசுத்தி) யைக்குறிக்கிறது.

நிறையநீர் அமையவாட்டி=நிறையநீர்-என்பது நிறை+அ+நீர் எனப் பிரித்து அகரத்தைச் சாரியையாகத்தள்ளி நிறைநீர் என்னும் சொற்றொடருக்கு நிறைந்த தன்மை என்று பொருள் கொள்க.

அமைய-பொருந்த. ஆட்டி-முழுககுச் செய்வித்து. நிறைந்த தன்மை பொருந்த, அதாவது, குறைவற முழுக்கு (அபிடேகம்) செய்வித்து என்பது பொருளாகும்.

போற்று பூசனை=அவியுடன் சேர்ந்திருக்கிற போற்று என்னும் சொல்லை பூசனை என்னும் சொல்லுக்கு அடைமொழியாகக் கொள்க. போற்று பூசனை-இவ்வாறு பேணி அல்லது விரும்பிச்செய்கின்ற வழிபாட்டினால்,

அவிக்காட்டினேமே=அவி என்பது தேவர்களுக்குப் பிரியமாகக் கொடுக்கப்படும் உணவு. அஃது இங்கே உருவகப் பொருளில் ஆன்ம நிவேதனத்தை (offering of oneself to god)க் குறிக்கிறது.

புறவழி பாட்டில் அன்ன முதலிய பொருள்கள் இலிங்கத்துக்கு நிவேதனம் காட்டப்படுதல் போல, தன் பொருட்டு அகவழிபாட்டில், உயிர், தன்னுடைய தன்னறிவை (சிவபோதத்தை) சிவத்தினிடத்தில் அடங்கும்படி கொடுத்தலானது அவி ஆகின்றது. உயிர் தன்னறிவை இழந்து, சிவத்துடன் ஒன்றி அடங்கி நிற்றல் சிவத்துக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தலால் அது அவி எனப்பட்டது.

அவிக்காட்டினேமே-அவி காட்டினேமே என்றிருக்கவேண்டும். உயிர்ப்பலி கொடுத்தலைச் செய்தோம் (நாங்கள்)

ஈசனுர்க்குக்காயமே கோயிலாகக்கடி மனமடிமையாக வாய்மையே தூய்மையாக மனமணி யிலங்கமாக நேயமே நெய்யும் பாலுமாக நிறைநீர் அமைய வாட்டி (இவ்வாறு) போற்று பூசனையால் அவி காட்டினேமே என்று முடித்துக்கொள்க.

பேரின்பம் அடைந்தோம் என்பது குறிப்பெச்சம்.

நாங்கள் (அடியார்கள்) தோன்றா எழுவாய். காட்டினேமே பயனிலை.

இதனால் உயிர் சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாடு என்பது, உயிர் தனக்குச் சிவபெருமான் செய்யும் அருளை நோக்கி மனங் குழைந்து உருகி அன்பு செய்தல் என்பதும், அவ்வாறு அன்பு மீதூர்ந்து செய்தலால் அவன் திருவடி அடைந்து பேரின்பம் நுகர்தலே அவ்வழிபாட்டின் பயன் என்பதும் பெறப்பட்டன.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# யாப்பிலக்கணம்.

[தி. த. கனகசுந்தரம் பிள்ளை B. A.,]

TAMIL PROSODY

தமிழாசிரியர்கள் இலக்கணத்தை எழுத்திலக்கணம், சொல் லிலக்கணம், பொருளிலக்கணம், அணியிலக்கணம், யாப்பிலக்க ணம் என ஐந்தாகப் பகுப்பார்கள். அவற்றுள் யாப்பிலக்கண மென்பது செய்யுளின் இலக்கணம். யாப்பு யாத்தல், அதாவது கட்டுதல் என்று பொருள்படும்; யா பகுதி, பு தொழிற்பெயர் விகுதி; காப்பு, மூப்பு என்றாற்போல. செய்யுள் என்பதற்குச் செய்தல் என்பது பொருள்; செய் பகுதி, உள் தொழிற்பெயர் விகுதி; பாய்த்துள் விக்குள் என்றாற்போல. யாப்பிலக்கணம், செய்யுளிலக்கணம், யாப்பியல், செய்யுளியல், பாட்டியல் என் பன ஒரு பொருட்சொற்கள். இயல் என்பது இலக்கணம்.

தமிழாசிரியர் சிலர் யாப்பியலைச் செய்யுளியல் பாட்டியல் என இரண்டாகப் பகுத்து வழங்குவர். அவர் செய்யுளியலில் பாவகையும் அவற்றின் உறுப்புக்களும் கூறி, பாட்டியலில் தொடர்நிலைச் செய்யுளின் விகற்பமும் அவற்றின் இலக்கணமும் கூறுவர்.

ஆதியில் தமிழில் யாப்பிலக்கணம் செய்தவர் யாவரென் பது இப்போது புலப்படவில்லை. அருந்தவக்கொள்கை அகத்

தியனாரே தமிழிற்கு எழுத்துச் சொல் பொருள் யாப்பு அணி என்னும் இயற்றமிழிலக்கணம் ஐந்தும், இசைத்தமிழிலக்கணமும் நாடகத்தமிழிலக்கணமும் இயற்றினார் என்றுசிலர் சொல்லுவர். இவ்விலக்கணங்களை எல்லாம் புதிதாய் ஒருவரே இயற்றினார் என்று சொல்லுவது பொருந்தாது. எத்துணை வல்லராயினும் ஒருவராலே ஒரே காலத்தில் இவைகளெல்லாம் நூதனமாக இயற்றப்படத்தக்கனவல்ல. வடமொழியில் முன்னுள்ள வியாகரண நூல்களையெல்லாம் ஆராய்ந்து அவைகளெல்லாவற்றினுஞ் சிறக்கத் தாமொரு வியாகரணமியற்றிய ஆசிரியர் பாணினியார் போலத் தமிழில் முன்னுள்ள இலக்கண நூல்களை யெல்லாம் ஆராய்ந்து அவைக ளெல்லாவற்றினுஞ் சிறக்க அகத்தியனாரும் தாமோரிலக்கணம் இயற்றினார் போலும்.

ஆசிரியர் அகத்தியனார் செய்த அகத்தியமன்றிச் செய்யுளிலக்கண முணர்த்தும் நூல்கள் தமிழிற்பல. அவை மாபுராணம், பூதபுராணம், தொல்காப்பியம், பல்காப்பியம், யாப்பியல், சங்கயாப்பு, பாட்டியன்மரபு, யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, சிதம்பரப்பாட்டியல், இலக்கணவிளக்கம் முதலாயினவும், பல்காயனார், காக்கைபாடினியார், சிறுகாக்கை பாடினியார், அவிநயர், நக்கீரர், நற்றத்தர், மயேச்சுரர் முதலாயினார் இயற்றிய நூல்களுமாம். இவற்றுள் மாபுராணமும் பூதபுராணமும் அகத்தியம்போல இயல்இசை நாடகம் மூன்றுமுணர்த்தின போலும். தொல்காப்பியமும் வீரசோழியமும் இலக்கணவிளக்கமும் எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணி என்னும் இயற்றமிழிலக்கணம் ஐந்து முணர்த்துவன. எஞ்சியவற்றுள் அவிநய மொழிய ஏனைய செய்யுளிலக்கண மொன்றே உணர்த்துவன. அவிநயம் யாப்பேயன்றிச் சொல்லிலக்கணமு முணர்த்தினமை

திணைபான் மரபு வினைச்செப் பிடஞ்சொல்
இணையா வழுத்தொகையோ டெச்சம்—அணையாக்
கவினையார் வேற்றுமையுங் காலமயக்குங்கொண்
டவிநயனா ராராய்ந்தார் சொல்.

என்னும் வெண்பாவாற் பெறப்படும்.

இந்நூல்களுள் இப்போதுள்ளன சில; பல இறந்தொழிந்தன. இக்காரணத்தினால் மாபுராணம், பூதபுராணம், யாப்பியல், சங்க யாப்பு, பாட்டியன்மரபு முதலிய நூல்களியற்றினார் பெயரும், பல்காயனார் அவிநயனார் முதலியோர் இயற்றிய நூல்கள் எவ்வெவ் விலக்கண முணர்த்தின வென்பதும் புலப்படவில்லை. யாப்பிலக்கண முணர்த்தும் நூல்கள் இப்போதுள்ளனவற்றுள் மிகப்பழையது தொல்காப்பியம். இதற்குரை செய்தார் பலர். அவர்கள் செய்தவுரைகளுள் தொல்காப்பியச் செய்யுளியற்கு மூன்றுரையுள்ளன; அவை உரையாசிரியர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்னும் மூவராலும் இயற்றப்பட்டன. இவற்றுள் பேராசிரியருரை முன்னரே அச்சிடப்பட்டுள்ளது; நச்சினார்க்கினியருரை இப்போது அச்சிடப்பட்டு வருகின்றது; உரையாசிரியருரை இன்னும் அச்சிடப்படவில்லை. தொல்காப்பியச் செய்யுளியலும் அதன் உரைகளும் மிக உபயோகமானவை. யாப்பிலக்கணத்தில் வழங்கும் பெயர்களுக்குக் காரணமும் பாக்களுக்குக் கூறப்பட்ட ஓசை விகற்பங்களும் வேறுபலவும் இப்போது இவற்றாலேயே அறியக்கிடக்கின்றன.

தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டது யாப்பருங்கலம். இது சமணராற் செய்யப்பட்டது. இது தொல்காப்பியத்தை முற்றுந்தழுவாது, அதனோடு சிறிது மாறுபட்டு, காக்கை பாடினியத்தைப் பின்பற்றிச் செல்லும். அது தொல்காப்பியர் போல நேர்அசை நிரைஅசை வேண்டாது, காக்கை பாடினியார் போல நாலசைப்பொதுச்சீர் வேண்டுவதனாலும், தாழிசை துறை விருத்தங்களைத் தொல்காப்பியர்போலக் கொச்சகக்கலிப்பாற் படுத்தாது பாவினங்களென வகுப்பதனாலும் பிறவாற்றாலும் பெறப்படும். இஃது ஒரு சிறந்த நூல். இதன் பெருமை

சொல்லிற் சுருங்கிப் பொருள்பெருகித் தொன்ஞானம்
எல்லாம் விளங்கி யிருளகற்றும்—நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாமன்றே கேள்வி
ஒருங்கறிய வல்லா ருணர்ந்து.

என்று சான்றோர் கூறிய வெண்பாவானினிது விளங்கும்

இதற்கு யாப்பருங்கலவிருத்தி என்று பெயருள ஒரு விரிவுரையுளது.

யாப்பருங்கலக்காரிகை யாப்பருங்கலத்திற்கு அங்கமாயுள்ளது. இஃது அதன் பெயராலே விளங்கும். காரிகைக்கு உரையெழுதிய குணசாகரர் அதனை அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதுபோல யாப்பருங்கல மென்னும் யாப்பிற்கு அங்கமாய் அலங்கார முடைத்தாகச் செய்யப்பட்டமையால் யாப்பருங்கலக் காரிகை யென்னும் பெயர்த்தாயிற்று என்பர். இந்நூல் செய்தார் ஆரியை யென்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமுதசாகர ரென்னு மாசிரியர் என்று அதன் உரையாசிரியராகிய குணசாகரர் கூறுவர். இவர் ஆரியா சப்தசதி என்னும் வடநூலை மொழி பெயர்த்தார் போலும். யாப்பருங்கலஞ் செய்தாரும் இவ்வமுதசாகரரே. அதன் பாயிரம்.

யாப்பருங் கலனனி யாப்புற வகுத்தோன்
தனக்கு வரம்பாகிய தவத்தொடு புணர்ந்த
துளக்கறு கேள்வித் துகடீர் காட்சி
அளப்பருங் கடற்பெய ரருந்தவத் தோனே.

என்று கூறும். பாயிரத்திற் குரையெழுதினர் கடற்பெயர் அருந்தவத்தோன் யாரென்று கூறிற்றிலர். "அவர் விரவியு மருகியும் வேறு மொரோவழி—மருவியும் பெறூஉ வழங்கு மன்னவையே" என்னுஞ் சிரோத்துச் சூத்திரத்துரையுள் "இந் நூலுடையாரும், மாஞ்சீர் கலியுட்புகா" என்னும் புறநடையானும் பிறவாற்றானும் * * * விளங்கக் கூறினர்'' என்பதனல் யாப்பருங்கலம் செய்தாரே காரிகை செய்தவரும் என்பது விளங்க வைத்தார். 'மாஞ்சீர்கலியுட் புகா' வென்பது. யாப்பருங்கலக் காரிகை ஒழிபியல் மூன்றாவது காரிகை.

பாயிரங் கூறினவர் நூலாசிரியர் பெயரை மொழிபெயர்த்துத் தமிழில் "அளப்பருங் கடற்பெயரருந் தவத்தோன்" என்று கூறினாராயின், நூலாசிரியர் பெயரை அமிதசாகரரென்று

எழுதவேண்டும், அமிதம் அளவில்லாதது; சாகரம் கடல். ஏட்டில் அமித சாகரரென்றிருந்ததைப் பின்னுள்ளோர் அமிர்த சாகரரென்றும் அமுதசாகரரென்றுங் கொண்டிருக்கலாம்.

வீரசோழியத்திற் குரையியற்றிய பெருந்தேவனாரும் யாப்புப் படலத்தில் "தன்னுங்குறளடி" என்றற்றொடக்கத்துப் பத்தொன்பதாஞ் செய்யுளையு மதனுரையையும் அணிமை பெறச் சேர்த்துக் காட்டாதும், சில விடங்களில் மூலபாடத்தை விரித்துரையாது பொருளை மாத்திரம் முடித்தும், சில விடங்களில் நூலாசிரியர் போக்கினையும் நோக்கினையுங் கருதாது வேறு பொருள் கொண்டு முடித்தும் இருக்கின்றார். இக்குறைபாடுகளை நோக்கி இதற்கொரு புத்துரை இயற்றியுள்ளார் நல்லிசைப் புலமை வாய்ந்த யாழ்ப்பாணச் சுன்னுகத்துக் குமாரசுவாமிப் புலவர். இவ்வுரை காரிகைகளைப் பிரித்து, முடிபுகளைத் தெரித்து, பொருளை வரையறுத்து, அதற்கின்றியமையாதவைகளை எடுத்துக்கூறி, உதாரணங்கள் இலக்கணமமைந்து கிடக்குமாற்றைப் புலப்படக்காட்டி, செய்யுளுறுப்பாதியவற்றின் பெயர்க்காரணங்களை விளக்கிச் செல்கின்றது. இவ்வுரையில் நூலின் மூலபாடமும் உதாரணமும்நாமெடுத்தோதிச் செல்வதோடு இனிய கட்டளைக் கலித்துறையால் யாக்கப்பட்டு எளிதிற் பாடம் பண்ணிக்கொள்ளற் கேற்ற தாயமைந்துள்ளது. இதன் சுருக்கமும் தெளிவும் இனிமையுமே இது யாவராலும் பாராட்டப்பட்டு வருவதற்குக் காரணம். இக்காலத்துத் தமிழ் யாப்பிலக்கணம் கற்பார் கற்கும் நூல் இதுவே.

இதற்குப் பழையதோ ருரையுண்டு. அது குணசாகரரென்பவராற் செய்யப்பட்டது. இவ்வுரையாசிரியர் இந்த இலக்கணத்திற்கு இஃது எடுத்துக்காட்டென்று கற்போர் எளிதில் அறிந்துகொள்ள இலக்கணங்களையும் எடுத்துக்காட்டிக் காரிகையுரையில் 'மிக்குங் குறைந்தும் வரினுமொருபுடை யொப்புமை நோக்கி யொழிந்தவுங்கொளலே' என்றார் அமுதசாகரனார் என்று யாப்பருங்கலஞ் செய்தார் அமுதசாகரனர் என்பது புலப்பட யாப்பருங்கலத்து ஒழிபியலோத்துச் சூத்திரத்தை எடுத்து மேற்கோளுங் காட்டினர்.

யாப்பருங்கலக் காரிகை சிறு நூலாயினும் மிகச் சிறந்தது. அது யாப்பிலக்கணப் பொருள்களெல்லாமடங்க மிகச்சுருங்கின சொல்லால் தொகுத்தும்வகுத்தும் செய்யப்பட்டு உதாரணங்கள் பிழையறப் பரிசோதித்துத்திருத்தப்பட்டிருக்கின்றது; மூலத்தில் நிரனிறையாகக் கூறியனவெல்லாம் வேறு வேறு பிரித்து இதற் கிதுவென விரைந்து புலப்படுமாறு விளக்கப்பட்டிருக்கின்றன; குணசாகரருரையில் விதந்து கூறாத கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா முதலியவைகள் எவ்வெப்பா வினங்களின் பாற் பட்டனவென்பதும், அவற்றின் இலக்கணங்கள் யாவை என்பதும் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றன; சில புத்துதாரணங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. குணசாகரர் தம்முரையிலே காரிகை மூலபாடத்தோடு சேர்க்காது ஓர் உரைச்சூத்திரமாக எடுத்துக்கூறிய "தூங்கேந்தடுக்கு" என்னும் வண்ணவிகற்ப முணர்த்துங் காரிகை உள்ளவாறு மூலத் தோடு சேர்த்து உரை கூறப்பட்டுள்ளது. இக்காரிகைக் குரை கூறுமிடத்துத் தொல்காப்பியனார் கூறிய பாஅவண்ணம் முதலிய இருபது வண்ணங்களும் அவிநயனார் கூறிய குறிலகவற்றூங் கிசை வண்ண முதலிய நூறு வண்ணங்களும் உதாரணங்க ளோடு எடுத்துக்காட்டி விளக்கப்பட்டதோடு தமிழ் நூலிற் கூறப்படும் வண்ணத்திற்கும் வடநூலிற் கூறப்படும் சந்தத் திற்குமுள்ள வேற்றுமையும் தாண்டகத்தினிலக்கணமும் சொல் லப்பட்டிருக்கின்றன.

காரிகைக்கு முதலில் உரை எழுதிய குணசாகரரை யாப் பருங்கலத்தின் பாயிரச் சூத்திரத்தில் அமுதசாகரருக்கு ஆசிரி யராகக்கூறிய குணசாகரரென்றும், ஆதலால் அமுதசாகரரோ டொரு காலத்திருந்தவரென்றும் அவருக்குற்ற நண்பினரென் றும் ஒருவர் கொண்டார். அது பொருந்தாது. இவர் பெய ரும் குணசாகர ரென்றிருத்தல் பற்றி இருவரையும் ஒருவராகக் கொள்ளலமையாது. அமுத சாகரரியற்றிய "தூங்கேந்தடுக்கு" என்றற்றொடக்கத்துக் காரிகையை மூலத்தோடு சேர்க்கத்தவ றினமையானும் "அந்தமில்பாதம்" "எழுவாயெழுத்தொன்றின் மோனை" என்றற்றொடக்கத்துக் காரிகைகளுக்கும் பிறவற்றிற்

கும் நூலாசிரியர் கருத்திற்கேற்க உரை கூறுமையானும் பிற வாற்றானும் உரையாசிரியராகிய குணசாகரர் நூலாசிரியராகிய அமுதசாகரரோடொரு காலத்தினரல்ல ரென்பதும் வெகு காலத்திற்குப் பிற்பட்டவரென்பதும் இனிது புலப்படும்.

வீரசோழியம் யாப்பருங் கலத்திற்கும் காரிகைக்கும் பிற் பட்டது. அது வீரசோழியமியற்றிய புத்தமித்திரனாரோடு ஒரே காலத்தினராக எண்ணப்படும் அதன் உரையாசிரியராகிய பெருந்தேவனார் தமதுரையில் யாப்பருங்கலச் சூத்திரத்தினை எடுத்து மேற்கோள் காட்டியதனால் விளங்கும். இந்நூலுடை யார் யாப்பிலக்கணங் கூறுமிடத்து வடமொழி யிலக்கணத்தைக் கொண்டு வந்து நுழைத்து, சீருந் தூக்குங் கருவியாக அடிவகுக் காது எதுகை கருவியாக அடி வகுத்து, பாக்களை ஓசைபற்றி வகுக்காது அடி பற்றி வகுத்துத் தொல்லாசிரியரோடு மாறு படக்கூறுவர்.

இலக்கண விளக்கமும் சிதம்பரப்பாட்டியலும் பிற்காலத்து நூல்கள். இவைகளிரண்டும் அச்சிடப்பட்டுள்ளன. இலக்கண விளக்கமச்சிட்டவர் வீரசோழியம், இறையனாரகப் பொருள், தொல்காப்பியம், கலித்தொகை, சூளாமணி முதலிய பழந்தமிழ் நூல்கள் அச்சிட்ட யாழ்ப்பாணத்து ஸ்ரீமான் சி. வை. தாமோ தரம் பிள்ளையவர்கள். சிதம்பரப்பாட்டிய லச்சிட்டவர் செந் தமிழ்ப்பத்திராசிரியர் ஸ்ரீமத் மு. இராகவையங்கார். இலக்கண விளக்கமியற்றினவர் திருவாரூரில் திருக்கூட்டத்தில் தமிழ்க் கிலக்காகிய வைத்தியநாத தேசிகர். சிதம்பரப்பாட்டியல் செய் தார் பரஞ்சோதியா ரென்பார். இந்நூல்கள் பெரும்பாலும் யாப்பருங்கலத்தையும் காரிகையையும் தழுவிச்செல்வன. விதந் தெடுத்துக் கூறத்தக்க சிறப்பமைந்தனவல்ல.

நூலாராய்ச்சிக்கு யாப்பிலக்கணவறிவு இன்றியமையாதது. பழந்தமிழ் நூல்கள்பலவும் இன்னும் அச்சில்வராது ஏட்டி லேயே யிருக்கின்றன. ஏட்டிலெழுத்துப் புள்ளியிட்டெழுதப் படாதது. அவ்வெழுத்திலுள்ள பாக்களின் உண்மைப் பாடங் களைக் கண்டு கொள்வதற்கு யாப்பிலக்கண வுணர்ச்சி ஒரு

பொருளாகும் வரை துணையாக உடனிருந்து பின் நீங்குவதா யுள்ளது.

9. மூன்று காரணங்களையும் காரியத்தையும் எவ்வாறு அறிதல் வேண்டும் என்பது. ஒருவன் ஒரு தொழிலைச் செய்து அத்தொழிலால் முடிவு பெற்ற பொருளே காரியம் ஆகும். இந்தக் காரியப்பொருளே அவனாற் செய்யப்பட்ட பொருளாகும். இந்தச் செய்யப்படு பொருளைச் செய்த அறிவுடைப்பொருள் நிமித்த காரணம் ஆகும். அது அப்பொருளை யார் செய்தார்? என்னும் கேள்விக்கு விடையாய்ப் பெறப்படுவது. செயப்படு பொருள் எந்தப் பொருளிலே செய்யப்படுகிறதோ அது முதற் காரணம். அது செயப்படு பொருளானது எப்பொருளிலே செய்யப்பட்டது என்னும் கேள்விக்கு விடையாய்ப் பெறப்படுவது. செயப்படுபொருள் செய்தற்குக் கருவியாயுள்ளது துணைக்காரணம். அது செயப்படுபொருள் எந்தக் கருவியாலே செய்யப்பட்டது என்னும் கேள்விக்கு விடையாய்ப் பெறப்படுவது. எடுத்துக்காட்டாக வனைதலாகிய தொழிலால் முடிவு பெற்ற செய்யப்படுபொருள் குடம். குடமே காரியப் பொருள் ஆகும். அக்குடம் மண்ணிலே செய்யப்பட்டது. ஆதலின் மண்முதற் காரணம் ஆகும். மண் குடத்தைவிட்டு எப்பொழுதும் நீங்காதிருப்பது. அது தண்டசக்கரக் கருவியால் செய்யப்பட்டதாதலின் தண்ட சக்கரம் துணைக்காரணம் ஆகும். இந்த எடுத்துக்காட்டு உவமையில் உவமேயப் பொருள்களை நோக்கில் உலகம் செய்யப்படு பொருளாகிய காரியமும் கடவுள் நிமித்த காரணமும் மாயை முதற் காரணமும் கடவுளுடைய அருள் வலி துணைக்காரணமும் ஆகின்றன. ஆகவே நிமித்த காரணமாகிய குயவன் முதற் காரணமாகியமண்ணிலே துணைக்காரணமாகிய தண்டசக்கரத்தால் வனைதலாகிய தொழிலைச்செய்து முடித்து, குடமாகிய காரியத்தை உண்டு பண்ணுதல் போல, நிமித்த காரணமாகிய கடவுள் முதற் காரணமாகிய மாயையில் அருள் வலியாகிய துணைக்காரணத்தால் படைத்தலாகிய தொழிலைச் செய்து உலகமாகிய காரியத்தைப் படைக்கின்றான். இரண்

டாவது சூத்திரத்திற் கூறப்படுகிற துணைக்காரணம் உயிர்களுடைய கட்டு நிலையில் வழங்கப்படுகின்ற கடவுளுடைய மறைப்பு வலி (திரோதானசத்தி)யாகும். இவ்வாறு மாயையிலிருந்து உண்டாகிற உலகமானது மாயைக்கு ஆதாரமாய்க் கடவுளிருத்தலினால், கடவுளிடமிருந்து உண்டாகிறது என்றும் கூறப்படுகிறது.

10. ஏதாவதொரு தொழிலினால் ஒரு காரணப் பொருள் காரியப் பொருள் ஆகின்றது என்று நாம் மேலே கண்டோம். தொழில் செய்தற்கு அறிவு வேண்டப்படும். ஒருவன் ஒரு தொழிலை எப்படிச்செய்கிறது. என்னும் அறிவு இல்லாமல் அதனைச் செய்து காரியப் பொருளையுண்டு பண்ணுதல் முடியாது. ஒரு தொழிலைச் செய்யும் அறிவு இருந்தாலும் அதனைச் செய்யும் வேட்கைஇருந்தால் அன்றி அதனைச் செய்யத்தொடங்கமாட்டான். தொழிலானது செயலால் நிகழ்கின்றது. ஆகவே ஒரு நிமித்த காரணமாகிய வினைமுதல் ஒரு காரியப்பொருளை உண்டுபண்ண வேட்கை அறிவு செயல் மூன்றும் இன்றி அமையாது வேண்டப்படும். இதனால் மண்போல ஒரு முதற் காரணப் பொருள் குடம்போல ஒரு காரியப்பொருளாய் முடிதற்கு, வேட்கை அறிவு செயல்கள் மூன்றும் வேண்டப்படும் என்பது பெறப்பட்டது.

11. காரணகாரிய நிகழ்ச்சி மண்போலுள்ள ஒரு முதற் காரணப் பொருளில் நடைபெறுதல்போல, பறவை விலங்கு மக்கள் முதலிய உயிர்ப் பொருள்களினும் நடைபெறுதலுண்டு. மேற்கு நாட்டு உடல்நூல் வல்லாரும் (Physiologists) உயிர் நூல் வல்லாரும் (Biologists) உள்ளம் நூல் வல்லாரும் (Psychologists) கல்வித்திறன் வல்லாரும் (Educationalists) தங்கள் வேட்கை அறிவு செயல்களின் திறத்தினால் உயிர்களில் சில புதிய அறிவு செயற் பழக்கங்களை உண்டு பண்ணுகின்றார்கள்.

12. மேலே கூறியபடி மக்களுடைய வேட்கை அறிவு செயல்களால் காரணகாரிய நிகழ்ச்சி நடைபெறுதல்போல,

இயற்கையிலும் காரணகாரிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இயற்கையில் அவைகள் நிகழும்பொழுது கடவுள் நிமித்த காரணம் ஆகின்றான். அதனை மேற்கு நாட்டு இயற்கை ஆராய்ச்சியாளர்கள் காரண காரியச்சட்டம் (Law of cause and effect or Law of causation) என்று கூறுகின்றார்கள். ஆனால், அவர்கள் காரண காரியச் சட்டத்தை மக்களுடைய ஒரு பிறப்புக்கே உரியதாகக் கொள்ளுகிறார்கள். நமது நாட்டு முற்கால அறிஞர்கள் ஒரு உயிருக்குள்ள பல பிறப்பு வாழ்நாள்களையும் சேர்த்து அதனுடைய வாழ்நாளாகக் கொண்டு காரண காரியச் சட்டத்தைப் பல பிறப்புகளுக்கு முள்ள வேட்கை அறிவு செயல்களுக்கு உரியதாக்குகிறார்கள். அதனையே அவர்கள் ஊழ்வினை அல்லது பால் என்று கூறுகிறார்கள். இக்காலத்தில் மேற்குநாட்டு அறிஞர்கள் பலர் வினைச் சட்டத்தையும் (Law of Karma), பல பிறப்பு உண்மையையும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். உயிர்களுடைய வினையும் உலகம் மீளப்படைத்தலுக்குக் கடவுளுடைய மறைப்பு வலியுடன் (திரோதான சத்தியுடன்) துணைக்காரணமாக இரண்டாவது சூத்திரம் இரண்டாவது அதிகரணத்திற் கூறப்படுகின்றது. வினைச் சட்டமானது (Law of Karma) தாங்கள் பின் அடைய விரும்புகிற மேல் நிலையை அடைதற்கு முயலும் ஊக்கத்தையும் முயற்சியினால் விரும்பிய நிலையை அடைதல் கூடுமென்ற உறுதியையும் கொடுக்கிறது.

13. ஒருவனுக்கு உலகியல் அறிவும் மெய் அறிவும் காரணகாரிய நிகழ்ச்சி முறைமையை அறிதலாலே உண்டாகின்றது. ஒருவன் செய்தொழிற்றிறனும் அதனாலே உண்டாகிறது. ஒரு மருத்துவனுக்கு நோய்தீர் திறனும் ஒரு வழக்கறிஞனுக்கு (Vakil) மன்றத்தில் வழக்குப் பேசுந்திறனும் ஒரு மன்றத் தலைவனுக்கு (Judge) வழக்கு முடிவு செய்யுந் திறனும் காரணகாரிய நிகழ்ச்சி முறைமை அறிவினாலே உண்டாகின்றன. இதனால் காரணகாரிய நிகழ்ச்சி முறைமை அறிவானது எத்துணை மேம்பாடு உடையது என்று நாம் அறிந்து கொள்ளலாம்.

14. சைவ சித்தாந்தத்தில் சிறப்பாக எடுத்துக் கூறப்படுகிற உள்ளது தோன்றல் முறைமை (சற்காரிய வாதம்) என்னும் உண்மையானது மேலே கூறிய காரணகாரிய நிகழ்ச்சி முறைமையைச் சார்ந்துள்ளது. காரண நிலையில் சத்திக் கூட்டமாய் அடங்கியுள்ள ஒரு சிறிய நுண் பொருள் செய் தொழிற் பாட்டினுல் காரிய நிலையில் பருப்பொருளாய் வெளிப் படுதலே, உள்ளது தோன்றல் முறைமை (சற்காரிய வாதம்) ஆகும். அது ஒரு சிறிய ஆலம் விதையிலிருந்து ஒரு பெரிய ஆலமரம் உண்டாதலும், ஒரு பூ அரும்பி லடங்கி யுள்ள மணம் அது விரிந்த பொழுது வெளிப்படுதலும் போல்வன. உள்ளது தோன்றும் என்னும் உடன் பாட்டு முறைமைக்கு எதிரிடையாகக் கூறப்படும் இல்லது தோன்றாது என்னும் எதிர் மறை முறைமையும் 'உள்ளது தோன்றன் முறைமை' (சற்காரிய வாதம்)பில் அடங்கும். ஒருக்கால் நுண் உருவில் அடங்கியுள்ள சத்திக் கூட்டப் பொருளே மற்றொருக் கால் பருப்பொருளாய்த் தோன்றி விரிதலானும், ஒருக்கால் பருப் பொருளாயுள்ளது சத்திக்கூட்ட நுண் பொருளாய் ஒடுங்குதலானும், மாயாகாரிய உருவங்கள் வளர்ச்சியை (growth) அடைகின்றன. மாயா காரிய உருவங்களை உடலாகக் கொண்ட உயிர்களும் அறிவு வேட்கை செயல்களில் வளர்ச்சி அடைகின்றன. உருவங்களின் வளர்ச்சியும் உயிர்களின் வளர்ச்சியும் ஒன்றுக் கொன்று பொருத்தமாய் நிகழ்கின்றன. (Darwin) டார்வின், (Spencer) ஸ்பென்சர் முதலிய மேற்கு நாட்டு ஆராய்ச்சியாளர்கள் (evolutionists) உருவத்துக்கு மாத்திரமே வளர்ச்சி கூறுகிறார்கள். சைவசித்தாந்தமானது உருவம் உயிர் இரண்டுக்கும் (form & life) வளர்ச்சிகூறி, அவ்வளர்ச்சியினுலே உயிர் உண்மை அறிவு அடைந்து வீடு அடைகின்றது எனக் கூறுகின்றது. இவ்வாறு, உயிர் வீடு அடைதலுக்குக் காரணமாயிருப்பது உள்ளது தோன்றன் முறைமையாகும். உயிர்கள் உலகிலே பிறத்தலினுலே அடங்கி யுள்ளது விரிந்தும் இறத்தலினுலே விரிந்துள்ளது ஒடுங்கியும் வருதலினுலே, அறிவு வேட்கை செயல்களில் பெருக்கம் (development) அடைகின்றன. பிறப்

பினாலே உயிர்களுக்கு ஆணவமலம் பரிபாகம் அடைகின்றது. இறத்தலினாலே வினைமலம் பரிபாகம் அடைகின்றது. உயிர்கள் பிறத்தல் இறத்தல்களை அடையும் தன்மை இச்சூத்திரம் மூன்றாவது அதிகரணத்திற் கூறப்படுகின்றது. இயற்கையில் காணப்படுகின்ற இத்தகைய சிறப்புடைய உள்ளது தோன்றல் முறைமையானது சைவ சமயத்தில் கூறப்படுதல் போல வேறு சமயங்களில் கூறப்படுதலில்லை.

———

# பெண்மக்களும் உடற்பயிற்சியும்

[திரு. ஆவி. சித: சோக்கலிங்கன் அவர்கள்]

இப்பூவுலகினுற்பவித்த மக்களனைவரும் உடல் வலிமையை விரும்புவார்கள். அதை யடையப் பல வழிகள் இருக்கின்றன. ஆனால், பலர் ஆடவர்களுக்கு மட்டுமே உடல் வலிமை வேண்டும், பெண்களுக்கு வலிமை எற்றுக்கு ? அவர்கள் போருக்கா போகின்றார்கள் என்கிறார்கள். பலர் "அடுப்பூதும் மங்கையர்க்குப்பயிற்சி எற்றுக்குப்படிப்பெற்றுக் கென்கிறார்கள்" சிலர் "பெண்கள் கற்றால் கற்பு நிலை பிறழ்ந்து கணவற்கடங்கார்" என்கிறார்கள். ஆடவர்கள் மட்டும் பயிற்சி பெற்று அவர்கள் மனைவிமார்களுக்கேற்க நடக்கின்றார்களா? என்றால், இல்லை. எனவே, பெண்களுக்குத் தனித்த முறையில் பயிற்சி வேண்டும். வீட்டு வேலைகள் மட்டும் போதுமானதா வென்றால், நாடு இருக்கும் நிலையில் போதியதல்ல. இக்காலத்துப் பெண்கள், ஓர் வேலையுஞ் செய்யாது, கண்டபடி உண்டு, தொப்பையுந் தொந்தியுமாய் உடல் நலங்குன்றப்பெற்று, சாறிழந்த சக்கையாய், என்புக்கூடுகளாய் விளங்குகின்றார்கள். நிற்க, ஓர் வேலையுஞ்செய்யாது, எவ்வேலைக்கும் வேலையாட்களைத் தேடுகின்றார்கள். எனவே, இன்னுங் கொஞ்ச காலத்தில் வேறு வேலைகளுக்குங் (உண்பதற்கும்) கூட ஆள் வைத்து விடுவார்களோ வென்றஞ்சுகின்றேன். உடற்பயிற்சியில்லாத உடலானது, தடித்துக் கொழுத்துத் தளர்வடைகின்றது. தடித்திருப்பது, அழகில்லா

மனும் விகாரமாகவுந் தோன்றும். நிற்க, ஒவ்வொரு முறையும் குனியவும் நிமிரவும் முடியாமல், ஒரு மாப்பையை இடுப்பில் கட்டியிருப்பதைப் போல ஓர் உணர்ச்சி தோன்றும். தடித்திருப்பது சோம்பலைப் பெற்றிருப்பதே. கொழுத்த மனிதன் விரைவில் சாவினையடைகின்ருன். எவ்வாறெனின், மூச்சுவிட முடியாமல், திணறித்திணறி மூச்சு விடுவதாலும், இரத்தமானது நின்று நின்று ஓடுவதாலும் மூச்சுப்பைகளும், அதிகமான இழுப்புகளை இழுக்க வேண்டியதிருக்கிறது. இதனுல், இரத்தவோட்டக் குறைவு ஏற்பட்டு, விரைவில் சாவடைகின்ருர்களென்று ஓர் அறிஞர் கூறுகின்ருர். அதிகமாக உண்டு உடற்பயிற்சி செய்யாமலிருப்பதே, இக்குலைவிற்குக் காரணம். தடித்த உடம்பு பயிற்சி பெற்ருலன்றி வலிமை பெருது. ஒரு வேலையுஞ் செய்யாத இயந்திரமானது, எவ்வாறு துருப்பிடித்துப் போகின்றதோ, அவ்வாறே ஒரு வேலையுஞ் செய்யாத நமது உடலானது மிகுதியாகப் பருத்துத் தொப்பையுந் தொந்தியும் விழுந்து, அருவருப்பான கோலமாய்த் தோன்றும். ஆனல், இயந்திரங்கள் அதிகமான வேலைகளைச் செய்தால் தேய்ந்து போகின்றன. நமது உடலோவெனின், அவ்வாறில்லை. வேலை செய்யச் செய்ய வலிமை பெறுகின்றன. சிலர் இம்முறைகள் நூதனமாக விருந்தாலும், பெண்களுக்குப் பயிற்சி யவசியமில்லை, ஆண்களுக்கு வேண்டியது தானென்கிருர்கள். இவர்கள் கூறுவது அறியாமையே. உலகில், புல் முதல் மக்கள் ஈருகவுள்ள எல்லாம் ஆண்பெண் வடிவமாகப் பொலிதல் காண்கின்ரேம். நிற்க, ஆண்டவன் ஒரு கூறு பெண்ணுகவிளங்குகின்ருன். ஆண்டவனின் ஒரு கூருகிய ஆண்கள் மட்டும் பயிற்சிபெற்ருல் போதுமா? மற்ெருரு கூருகிய பெண்கள் இவர்களைப்போல், கால், கை, கண், மூக்கு இவைகளைப் பெற்றிருக்கவில்லையா? "ஓர் குழந்தையின் ஒழுக்கம் அதன் தாயினதையேபற்றி நிற்கும்'' என்று, நெப்போலியன் கூறுகின்ருர், எனவே பெண்கள் உலகோம்புந் தாயாக விருப்பதால், அவர்களுக்கே, முதலில் உடற்பயிற்சியும் அறிவுப் பயிற்சியும் வேண்டும். "மக்கடாமே ஆறறிவுயிரே'' என்று தொல்காப்பியனர்,

பொதுவாகக் கூறியிருக்கின்றார். நிற்க, ஆண்கள் மட்டும் இருவகைப் பயிற்சியும் பெற்று, பெண்கள் பயிற்சி பெறாதவர்களாக விருந்தால், இவர்களுடைய வாழ்க்கை, எவ்வாறு ஒழுங்காக நடக்கும். ஓர் மருத்துவ வல்லுநர் உடல் நல்வழிகளைப்பற்றிப் பலவாறு படித்தும் பிறர்க் கெடுத்துரைத்தும் பயனென்! அவர்தமில்லாள் அவர் முறைகளைச் சிறிதேனும் பின் பற்றாளாய்த் தன் முறைப்படி புளிப்பையும் கார்ப்பையும் நனிமிகப் பெய்திட்ட அடிசிலைத்தானே யுண்ணக் கடமைப்பட்டுள்ளார்! அவர் கூறும் வழிகள் அவர் தங்கல்லா மனைவிக்குப் பெருநகைப்பையேயன்றிப் பிறிதொரு பலனையும் பயக்காவென்க எனவே, இருபாலாரும் பயிற்சி பெற்றிருக்க வேண்டுமென்பது நன்கு விளங்குகின்ற தன்றோ? கணவனும் மனைவியும் ஒருங்கே உடற்பயிற்சி செய்துவரின் உடல் வலிமை, அழகு, நீண்ட வாழ்நாள், இவைகளைப் பெற்று வீரக்குழந்தைகளைத் தோற்றுவிப்பார்கள். உடற்பயிற்சி உடலை உள்ளூறக் கழுவி, உடலை வளம் பெறச்செய்கின்றது. இன்று அமெரிக்கா நாட்டில், ஆயிரக் கணக்கான பெண்கள் உடற்பயிற்சியைக் கையாளுகின்றார்கள். எனவே, நாட்டிற்குத் தாயாகிய பெண்கள் முறையே உடற்பயிற்சி செய்துவரின், அவர்களுடைய பிள்ளைகளுக்கு இளமையிலேயே இம்முறைகளை உணர்த்தி நாட்டைப் பண்படுத்துவார்களென்பதற்கு ஐயமில்லை.

---

## கருமை

(கூசும-ம் பக்கத் தொடர்ச்சி)

உள்பொருளு மதற்கெதிர்ப் பொருளும் பொருந்துவதால், அவை யிரண்டிற்கும் வேறாய புதியவை பல தோன்றும் மின்சாரத்தில் வாங்கு மாற்றல், பாயுமாற்றல் என விருவகையுண்டு. 'பாயு மாற்றல்' என்பது உள்பொருள்; 'வாங்கு மாற்றல்' என்பது அதற்கு எதிராயது. ஆங்கிலத்தில் பாயுமாற்றலை positive என்றும், வாங்கு மாற்றலை negative என்றுங் கூறுகின்றனர்.

இவ்விரண்டாற்றல்களுங் கூடுவதாலேயே, மின்சாரத்தாலிக் காலத்திலியற்றப்படும், மிக வியக்கத்தக்க செய்திகள் நிகழ்கின் றன. இவ்வாற்றல்கள் தனித்தனியே யிருந்திடின் ஒரு செய்தி யும் நிகழாது! இவை கூடுவதால் நகரங்களை ஒளிபெறச் செய்யும் நல்ல வெளிச்சமும், மக்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற் கெளிதிற் கொண்டு செல்லும் வண்டிகளை இயக்குஞ் சத்தியு முண்டாகின்றன. பாயுமாற்றல் செல்கின்ற மின் சாரக்கம்பி யின்மேல் சிவப்புநூல் சுற்றுவது வழக்கம். வாங்கு மாற்றல் செல்கின்ற கம்பி கருப்புநூலால் மூடப்படும். பாயுமாற்றல் செல்கின்ற கம்பியைத் தொடுவதால் தீங்கு நேருமென்பதைக் காட்டுதற் பொருட்டுச் சிவப்புநூலை யோரறிகுறியாக வழங்கு கின்றனர்போலும். வாங்குஞ் சத்தியோடுங் கம்பியைக் காட்டக் கருப்பைக் குறியாகக் கொண்டது ,வியக்கத்தக்கதே. கருமை யைப்பற்றிய கட்டுரை இஃதாகலின், இதைக் கருத்தில் வைத் துக்கொள்ளவேண்டும்.

வையகத்திலுள்ள வுயிர்களும் பொருட்களும் வெவ்வேறு தன்மை யுடையனவா யமைந்திருக்கின்றன. இத்தன்மைக ளால் உயிர்களும் பொருட்களும் பாயுமியல்புடையனவாகவும், வாங்கு மியல் புடையனவாகவும் பிரிந்திருக்கின்றன. வன்மை, வெப்பம், உரம், தாக்குந் தன்மை கொண்டனவெல்லாம் பாயு மியல்பினவாம். மென்மையுந் தட்பமுந்தாங்கி, அடங்கி யிருப் பனவெல்லாம் வாங்குமியல்பினவாம். ஒளியும் வெப்பமுமொன் றை யொன்றுபற்றி நிற்பவையாம். அன்றியும், ஒரு நொடிப் பொழுதில் எண்ணுதற்கரிய தூரம் விரைந்து செல்லு மாற்றல் ஒளிக்குண்டு. இதனல், ஒளியைப் பாயுமியல்பின தென்று கூறுவதொக்கும். ஒளி பாயுமியல்பினதாயின், இருள் வாங்கு மியல்பினதென்பது சொல்லாமலே பெறப்படும். ஒளியு மிரு ளுங் கூடுவதாற் கண்ணிற்கினிய பன்னிறங்கள் தோன்றுகின் றன. இருளு மொளியுங் கூடு நேரங்கள் காலையுமாலையுமாம். இவ்விரு நேரங்களிலும் வினடிக்கு விநடி விசும்பில் வெவ்வேறு நிறங்கள் மிளிர்கின்றன. ஒளிக்கு முதலாகிய கதிரவன், இவ்விரு வேளைகளிலுஞ் சிவந்து தோன்றுகின்றான்.

ஒளியாகிய செம்மை, தனக்கெதிராகிய இருள், அல்லது, கருமையுடன் மயங்குகின்ற காலம் உற்றுநோக்கத்தக்கது. கதிரவன் முளைத்தெழு முன்னும், பழுத்து விழுமுன்னும், நாம் விசும்பை நோக்கி, ஆண்டுத்தோன்று மியற்கை யழகுகளை நுகர்தல் கூடும். மற்ற நேரங்களிலவன் கண்ணெடுத்துப் பார்க்க வொட்டாது காய்கின்றான். இந்தியாவிற்கு வருகிற மேனாட்டார், ஈண்டுத தாங்கள் பார்க்குங் காலைக்கதிரவனழகையும், மாலை விண்வனப்பையு மிகப் புகழ்ந்து கொண்டாடுகின்றனர். முகில் மூடிக்கிடக்கின்ற மேனாட்டு விசும்பிலித்தகைய வழகு காண்ட லரிதென்றவர்கள் கூறுகின்றனர். இயற்கை யழகாலீர்க்கப்பட்டவுள்ளம், வணக்கத்திற்கேற்ற நிலையை எளிதிலடைகின்றது. இது கொண்டு, கருமையுஞ் செம்மையுமாகிய விருளுமொளியுங் கூடுங்காலை மாலை வேளைகளை வணக்கத்திற்கேற்ற நேரமாகக் கடவுட்கொள்கையை யுடைய வெல்லோருங் கொண்டனர். இருள் சுருங்கி யொளி பெருகுங் காலையிலும் ஒளி யொடுங்கியிருள் மிகுமாலையிலும், மன்பதையின் சிற்றெண்ணங்கள், பொறாமைகள், சீற்றங்கள், முதலியன தணிந்து, உலகிற் கப்பாலுளஞ் செல்ல விடமுண்டாகின்றது. உலகின் ஆரவார மடங்கி, மலைமுடிகளிற்படுகின்ற ஞாயிற்றினொளி நீங்கி, மாலைப்பொழுதின் மங்கிய வெளிச்சம் படிப்படியாக இருளாக மாறி, அன்றாடக வேலையாகிய கூண்டிலடைப்பட்ட மக்களது மனஞ்சிறிது விடுதலை பெற்று ஓய்ந்திருக்கும் நேரம் வணக்கத்திற்கிசைந்த தென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

தொன்னாளிலே, மக்கள் குறிஞ்சியிலு முல்லையிலு முறைந்த போது, மாலையின் வரவை நோக்கியவர்களஞ்சியிருப்பார்களென்று நினைக்க விடமுண்டு. மலைச்சாரல்களிலுங் காடுகளிலும் வாழ்ந்தோர், பொழுது போமுன் வீடுபோய்ச் சேரவிரைந்திருப்பர். கல்லு முள்ளு நிறைந்த ஒற்றையடிப் பாதைகளில் நடந்து, இருளில் வழியிழந்து தவிக்குமின்னலை யெண்ணினுமவர்கள் நடுங்கியிருப்பர். பாறையும் பள்ளமுந் தெரியாமல் நடந்து விழுந்து, கொடிய நச்சுப்பூச்சிகளுங் கடுவுடைய உயிர் வகைகளுந்திரியு மிடங்களைக் கடந்து, பதுங்கிப் பாய்கின்ற வல்

விலங்குகள் அழல் விழிகளுடனுறமுவதைக்கேட்டு, அவர்கள் மெய் விதிர்ப்படைந்திருப்பர். ஆதலின், ஆடு மாடுகளைப் பொழுது போமுன் பட்டிகளிலடைத்துத் தம்மில்ல மேகி, மனைவி மக்களுடனமர்ந்து, மறுநாட் கதிரவனின் வருகையை யவர்களாவலுடன் எதிர் நோக்கியிருப்பர். இருக்கு வேதத்தை ஆங்கிலப்படுத்திய Max Muller எனும் ஆசிரியர் கூறுமாறு, மறுநாளிற் பகலவன் வருவானோ, இல்லையோ? என்ற ஐயமும் பண்டைக்காலத்து மக்களுக் குண்டாகியிருக்கலாம். இத்தகைய நிலையிலிரவுப் பொழுதைக் கழித்த மக்கள், குருவிகளினின்னிசையுடன் ஞாயிறு கிழக்கிலெழுவதைக் கண்டடைந்த வியப்பையு மின்பத்தையும், ஒன்றோடொன்று நெருக்கிக்கட்டப்பட்ட வீடுகளிருபுறமு மமைந்த வீதிகளில், உள்ளும் புறமும் நல்ல வெளிச்சத்துடன் வாழு நமைப்போன்றவர் எங்ஙனமறிதல் கூடும்? கருமையின் அஞ்சத்தகும் பெற்றியை இவ்வகையிலொருவாறு நாமறிகின்றோம். பழைய நாள் மாந்தர், நன்றி பெருகி வழிகின்ற நெஞ்சுடன் காலை ஞாயிற்றை வாழ்த்தி வணங்கியிருப்பர். மாலையிலுமவர்கள் கதிரவனைத் தொழுது, மறுநாள் வந்து தங்களை மகிழ்விக்க வேண்டுமென்று மன்றாடியிருப்பர். சந்தியா வந்தன மென்ற வணக்க முறையின் தோற்ற மிதுவே யென்று சிலர் கருதுகின்றனர். இஃதெங்ஙனமாயினும், முற்காலத்து மைந்தர் காலையிலு மாலையிலு முறையே ஒளியையு மிருளையும் பற்றி நினைத்த நினைவுகளிலிருந்து கதைகள் பல தோன்றின வென்பது திண்ணம். அரக்கரையுந் தேவரையுங் குறித்தெழுந்த கதைகள் பல இந்த நினைவுகளை யொட்டியவையே.

ஆனல், ஞாயிற்றினொளிபட்ட பின்னரே, பகுதி பகுதியாய் வானிற்றோன்றி, சொல்லரிய மாண்புடனும், எண்ணரிய முறையுடனு மின்னிப் பெயர்ந்து செல்லும் விண்மீன்களுங் கோள்களும் வெளிப்படுகின்றன வென்பதை முன்னோர் கண்டு, இரவுப் பொழுதின் விந்தையைப் பற்றி யாழ்ந்து கருதி யிருப்பர். பகலிற்றோன்றாத வேறொரு வகையான வெளிச்சமு மாட்சியு மிரவிலுண்டாவதை யவர்களுன்னி, அகன்ற விவ்வையகத்தை யாக்கிய

முதல்வனில் இருளுமொளியு மொன்று மென்று நினைத்தனர் போலும். குறிஞ்சியினு முல்லையினு முறைந்த நாளில் இரவின் வரவு கண்டஞ்சியவர், மருதத்தினு நெய்தலினு மரண் பெற வமைக்கப் பெற்ற நகரங்களிலும் பட்டினங்களிலும் வாழப் புகுந்தபின், மாலையிளந் திங்களினழகையும், விண் மீன்கள் கண் சிமிட்டி யொளி காலுஞ் சிறப்பையும், கதிரவ னொடுங்கிய பின் தோன்று மினிய தட்பத்தையு மமைதியையு முணர்ந்து இருளி னச்சந்தவிர்ந்தவராய்க் கருமையினு மொரு கடவுட் டன்மை யுண்டென்று கண்டனர்.

இருளு மொளியு முறையே வாங்கு மாற்றலும் பாயு மாற் றலு முடையவை யென்று முன் கண்டோம். இவை மக்கள் வாழ்க்கையி லெங்ஙனம் பொருந்துகின்றன வென்பதைச் சற் றுக் கருதுவாம். மக்களது வாழ்க்கை இயக்கம், தூக்கம் எனு மிரு கூறுய்ப் பிரிகின்றது. இயக்கமென்பது தொழில் நிகழ் தல்; தூக்கமென்பது தொழிலொடுக்கம். ஆதலின், இயக்க மென்பது பாயு மாற்றலாகின்றது. தூக்கமென்பது வாங்கு வாற்றலாகின்றது. இவ்வாறே ஓசை, அமைதி (Sound and Silence) என்பன பாயு மாற்றலாகவும் வாங்கு மாற்றலாகவும் விளங்குகின்றன. இயக்கமு மொலியு மொரு தன்மையன; தூக்கமு மமைதியு மொரு தன்மையன. ஒலி தூக்கத்தை விலக்கும்; அமைதி இயக்கத்தைக் கெடுக்கும். இயக்கம் நிகழ்வது பகற்பொழுதில். தூக்கம் நிகழ்வது இராப் பொழுதில். ஆதலின் ஒளி, ஒலி, இயக்கம் என்பன தம்மு ளொற்றுமை யுடையன. இருள், அமைதி, தூக்கம் என்பன தம்முளொன்றி நிற்பது சொல்லாமலே பெறப் படும். வன்மையும், வெப்பமு முடையவை பாயு மாற்றல் பெற்றவை யென்றும், மென்மையுந் தட்பமு முடையவை வாங்கு மாற்றல் பெற்றவை யென்று முன்னர் உரைக்கப்பட் டது. வன்மை, எழுச்சி, முயற்சி, இயக்கம் முதலியவை பெரும் பாலும் ஆண் மக்கள் தன்மைகளாகவும்; அமைதி, ஒடுக்கம், மென்மை, தட்பம் முதலியவை பெண் மக்கள் தன்மைகளாகவு மிருக்கின்றன. இதனால், பெண்ணுக்கு மிருளுக்கு மொரு

பற்றும், ஆணுக்கு மொளிக்கு மொரு பற்று முண்டென்பது பெறப்படுகின்றது. பாயு மாற்றல் ஆணுக்கும், வாங்கு மாற்றல் பெண்ணுக்கு முண்மை நிறுவவேண்டிய தொன்றன்று. அமைதியினுற் பிறக்கின்ற தூக்கத்திற் கிசைவாகிய இருளொடு பொருந்தி நிற்கும் பெண்ணுக்குக் கரிய நிறமும், ஒலியினுற் பிறக்கின்ற இயக்கத்திற் கிசைவாகிய ஒளியோடு சேர்ந்திலங்கும் ஆணுக்குச் சிவப்பு நிறமும் அமைதல் இயற்கையாமன்றோ?

---

## நாமகள் திருப்பள்ளி யெழுச்சி

[யாழ்ப்பாணம் திரு. க. சோமசுந்தரம் பிள்ளை]

பன்னிய புறமொழி யிழைவெனுங் கங்குல்
　　பைப்பைய விடிந்தது படரொளி பரப்பி
மன்னிய நின்புக ழாயிரஞ் சுடர்க்கை
　　வானவன் நாவெனும் மலைமுக டுதித்தான்
துன்னிய புறமொழித் தாரகைச் சூழல்
　　சுடரொளி யவிந்தன குவிந்தனர் தொண்டர்
என்னித யத்துறை முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. க

சந்தனச் சிலம்பினி லிசைக்குயில் கூவுந்
　　தருமருட் பாவினச் சங்கொலி மேவுஞ்
செந்தமிழ்த் திருப்புகழ்ச் சேவல்கள் யாவுஞ்
　　சிறைபுடை யடித்தெதிர் சிலம்பிடக் கூவும்
அந்தமில் கலைக்குரு கரற்றிய வொலியும்
　　அடியவர் சயசய வமலையு மலியும்
எந்தமை யாண்டருள் முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. உ

அன்புடை யடியவர் அகப்புனற் றடந்தோ
　　றறிவெனும் தாமரை முகைநெகிழ்ந் தவிழ்ந்த
வன்புடைப் பேதைமை மடுவினிற் பூத்த
　　வஞ்சனை பொய்முதல் மலர்வகை குவிந்த

இன்புடை யறம்பொரு ளின்பமும் வீடும்
　　எய்துதல் விருப்பினில் யாவரு மெழுந்தார்
என்புயிர் பெறவருள் முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந் தரு ளாயே. ௩

புத்தலர் பூங்குழற் புயல்புறந் தவழும்
　　புதுநில வுமிழ்மதி முகமலர் பொழியும்
முத்தன விளநகை முறுவலின் கருணை
　　முந்துறக் கண்டடி முளரிகள் தொழுவான்
பத்திமை யடியவர் கோயிலின் வாயில்
　　பாடின ராடினர் பரவினர் படர்ந்தார்
இத்தரை மதித்திடு முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ௪

மீட்டிய யாழினர் குழலின ரொருபால்
　　வெண்டுகிற் பட்டினர் விரையின ரொருபால்
கூட்டிய சுண்ணத்தர் வண்ணச் செஞ்சாந்தர்
　　குளிர்புனல் மஞ்சனக் குடத்தின ரொருபால்
தீட்டிய செழுந்தமிழ் மாலைய ரொருபால்
　　திருவடி வணங்குபு திறையொடு புகுந்தார்
எட்டினி லெதிர்தவழ் முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ௫

அரன்றனைக் கூடலி லழைத்தமை பாடி
　　அருமறைப் பூட்டினை யவிழ்த்தமை பாடி
சிரந்தனை யறுத்துயிர் கொடுத்தமை பாடி
　　தீயின்மே லாடிய திறமையும் பாடி
வரந்தரு வாரமுங் கோவையும் பாடி
　　வாசகம் பாடிநல் வாய்மொழி பாடி
இரந்தனர் தொண்டர்கள் முத்தமிழ்க் கடலே
　　இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ௬

முப்புர மெரிசெய்த முதுபரம் பொருளும்
　　முருகனு மொருகுறு முனிவனும் பிறரும்

செப்பரு செழுந்தமிழ்ப் பாண்டிநன் ஞட்டில்
திருவொடும் வளர்த்தருள் செய்தவப் பாவாய்
கைப்பிடி புதுமலர் கொண்டுன தடியார்
காமரு சேவடி கைதொழ வடைந்தார்
இப்படி துதித்திடு மூத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. எ

தேனெனப் பாலெனச் செழுங்கரும் பூறுந்
தீஞ்சுவைச் சாறெனத் தெள்ளமு மதனவே
மானன நோக்கிநின் வாய்மொழி கேட்டு
மகிழுபு புறமொழி மாந்தரும் வந்தார்
பூநனே புனேகுழற் பொன்னனே யாளே
பொற்சிலம் பலம்பிடு பூவடிப் பாவாய்
ஈனனே யும்மருள் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. அ

தேவர்கள் பாற்கடற் றீவிடங் கொடுத்தார்
சிவனுக்கு நூற்கடற் செவியமு தளித்தாய்
காவியங் கயல்விழிக் கலைப்பெரு மாட்டி
காசினிக் கேகனி கற்பகக் கனியே
ஆவியை யுருக்கிடு மருமொழிப் பாவாய்
அகத்தியன் மடிமிசை யமர்ந்திடு பூவாய்
ஏவிய புரிகுவம் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. கூ

ஆடினர் பாடினர் ஆர்த்தனர் செறிந்தார்
அம்மையுன் வாய்மொழி யருமையை யறிந்தார்
தேடின ரோடினர் சிறுமையை விடுத்தார்
தெருவெங்குஞ் செந்தமிழ்த் தோத்திர மெடுத்தார்
வாடின ருன்திருக் கோலத்தைக் காண
வந்தனர் செந்துவர் வாய்ப்பெரு மாட்டி
ஏடியல் வெண்மலர் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ய

---

ஓம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீஜ்ஞான ஸம்பந்த ஸ்வாமிகள் அஷ்டோத்தர சத நாமாவளி.

[திரு. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை]

1 ஓம் ஜ்ஞானஸம்பந்தாய நம:
2 ,, வேதாந்தாய நம:
3 ,, பக்தவாத்ஸல்யவாஸிநே நம:
4 ,, பரமாநந்தபத்யாய நம:
5 ,, ஹரிஸேவிதமூர்த்தியே நம:
6 ,, ஜிஹ்வாராஜப்ரியாய நம:
7 ,, புத்தநாசகாரணாய நம:
8 ,, ஸ்ரீபஞ்சாக்ஷரபத்யாய நம:
9 ,, கௌண்டியகுலநந்தநாய நம:
10 ,, நீலநக்ஷவிரயாய நம:
11 ,, அகஸ்த்யகுரவே நம:
12 ,, லோகப்ரக்யாய நம:
13 ,, சிவதுஷ்யபத்யாய நம:
14 ,, குருநாதாய நம:
15 ,, பாலாய நம:
16 ,, பகவதிபுத்ராய நம:
17 ,, பத்மாநநாய நம:
18 ,, புஜத்வயாய நம:
19 ,, ச்வேதாங்காய நம:
20 ,, திவ்யசக்ஷுஷே நம:
21 ,, சிவதுஷ்யாய நம.
22 ,, பதத்வயாய நம:
23 ,, ஸவ்யதர்ஜநிதீர்க்காய நம:
24 ,, பயஃபாத்ரதராய நம:
25 ,, த்ராவிடத்ரிவிதச்ரேஷ்டாய நம:

26 ,, காளீபுரவிநாயகாய நம:
27 ,, தாடங்கப்ரதமாரம்பபத்யாய நம:
28 ,, தவிநேத்ராய நம:
29 ,, குலபக்ஷகமித்ராய நம:
30 ,, ஸ்வர்ணதாளதராய நம:
31 ,, மௌக்திகசிவிகாரூடாய நம:
32 ,, மௌக்திகச்சத்ரதாரிணே நம:
33 ,, மௌக்திகஸிஹ்நதேவாய நம:
34 ,, மதுரகவயே நம:
35 ,, நிஷ்களாபாய நம:
36 ,, நிஷ்கதோஷநாசபத்யாயநம:
37 ,, பத்மமாலாதராய நம:
38 ,, பஞ்சாக்ஷரகண்யாய நம:
39 ,, சிவாங்க்ரிசித்தகுமாராய நம:
40 ,, த்ரோணீபுரவிநாயகாய நம:
41 ,, ஸ்வர்ணும்பரதராய நம:
42 ,, மமசித்தேநிவாஸிநே நம:
43 ,, அபவங்நாவிகத்ரோணீநதீலங்களபத்யாய நம:
44 ,, வீணுகண்டிதபத்யகாயினே நம:
45 ,, ஸ்வரநாதாய நம:
46 ,, கபாடப்ந்தநபத்யாய நம:
47 ,, வித்யாப்ரகாசதீமதே நம:
48 ,, மஹிளாநாயகீஸேவிதாய நம:
49 ,, திவ்யத்ருஷ்டயே நம:
50 ,, சிவாங்க்ரியுகசித்தாய நம:
51 ,, மௌக்திகவிதானினே நம:
52 ,, மஞ்சுளகருணுகராய நம:
53 ,, ஸுந்தராய நம:
54 ,, புருஷச்ரேஷ்டாய நம:
55 ,, ஸுந்தரஸ்துத்யாய நம:
56 ,, ஸத்குணுய நம:
57 ,, பரமாநந்தாய நம:

58 ,, ஸர்வதாசிவசித்தாய நம:
59 ,, பும்ஸ்தாலபேதப்த்யாய நம:
60 ,, தர்மாநாதாய நம:
61 ,, பரமாத்மநே நம:
62 ,, ஆர்ஹதரயே நம:
63 ,, மஹாஜ்ஞாநிநே நம:
64 ,, ச்யாமளகவிவாசகாய நம:
65 ,, நத்யாரோஹணபத்யாய நம:
66 ,, தீர்க்கமாரப்ரியாய நம:
67 ,, ஜ்வரநாசபத்யாய நம:
68 ,, கௌண்டியகுலதீபகாய நம:
69 ,, விஷமோசகவீக்ஷணாய நம:
70 ,, விஷமோசகபத்யாய நம:
71 ,, கணநாதப்ரியாய நம:
72 ,, தப்ரபக்தேநபூஜ்யாய நம:
73 ,, குக்குலுகலசநாதேநபூஜ்யாய நம:
74 ,, குணஸாகராய நம:
75 ,, ஸ்ரீமஹாதேவயஜ்வாஜாமாத்ரே நம:
76 ,, பராத்பராய நம:
77 ,, ஆதரீநாயகாய நம:
78 ,, ச்ரேஷ்டாய நம:
79 ,, ஜ்ஞானும்ருதபானகாய நம:
80 ,, கல்யாணவீக்ஷணஸர்வமோக்ஷதாயிநே நம:
81 ,, ஸ்கந்தநாதப்ரியாய நம:
82 ,, கங்காதரமனோஹராயநம:
83 ,, அபஸ்மாரதோஷநாசாய நம:
84 ,, ஆர்த்ராஜநநாய நம:
85 ,, வித்வஜ்ஜநவிசிஷ்டாய நம:
86 ,, விச்வாதீதகுணாத்மனே நம:
87 ,, கருணாகராய நம:
88 ,, பக்தேசாய நம:
89 ,, கல்யாணகுணமூர்த்தயே நம:

90 ,, காமக்ரோதவிமோசநாய நம:
91 ,, ராகத்வேஷவிநாசிநே நம:
92 ,, லோபமோஹாபிராவிநே நம:
93 ,, லோகேஸத்பிதஸேவ்யாய நமஃ
94 ,, சித்ரகவயே நம:
95 ,, சிதாகாசே சிவதர்சனதீமதே நம:
96 ,, ஜ்ஞானசார்யாய நம:
97 ,, க்ரியாசார்யாய நம:
98 ,, யோகாசார்யாய நம:
99 ,, மனோஹராய நம:
100 ,, அஸ்திகன்யாக்ருதபத்யாய நம:
101 ,, அநேகக்ஷேத்ரதர்சினே நம:
102 ,, சிவே நிஷ்கஸஹஸ்ரலாபவதே நம:
103 ,, நயனாம்புஜாய நம:
104 ,, ஷோட்சஸஹஸ்ரகவிதுலவாசகாய நம:
105 ,, நித்யாநந்தகுணாகராய நம:
106 ,, நீலகண்டபதாசக்ரிதாய நம:
107 ,, ஸாம்யசித்தாய நம:
108 ,, சைவஸித்தாந்தநாயகாய நம:

முற்றிற்று

---

# மதிப்புரை

## முதற் குலோத்துங்க சோழன்

இது கும்பகோணம் வாணாதுறை ஹைஸ்கூல் தமிழாசிரியர் திரு. T. V. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் இயற்றியது. இவர்கள் வெட்டாராய்ச்சியில் நீண்ட நாட்களாகப் பாடுபட்டு பண்டைத் நாட்டு வரலாறுகளின் உண்மைகளைத் தெள்ளத்தெளிய உணர் களாவர். இவர்கள் தமக்குக் கிடைக்கப் பெற்ற கருவிகளைக் கொ கூடிய வரை ஐயவேறு பாடுகளி றி இந்நூலை எழுதி வெளியிட் கின்றார்கள். தமிழ் மக்கள் அனைவரும் இதனை வாங்கிக் கற்றுத் த நாட்டு முன்னோர் வரலாற்றைத் தெரிந்து இறும்பூ தெய்துவார்களாக.

இது நூலாசிரியரிடத்திலும் நமது கழகத்திலும் விலைக்குக்கிடைக் கப்பெறும்.

விலை அணா 12

## இன்னிலை மூலமும் உரையும் (2-வது பதிப்பு)

இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலொன்று. இதனை இயற்றியவர் பொய்கையார். இதற்கு விருத்தியுரை இயற்றியவர் கோயில்பட்டி வழக்கறிஞர், வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள். இதனை முதன் முதல் ஏட்டுப் பிரதியினின்றும் வெளியிட்ட இவ்வுரையாசிரியர்க்குத் தமிழகம் பெரிதும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையது.

இது கழகத்திலே கிடைக்கப் பெறும். இதன் விலை ரூபா ஒன்று.



திருவண்ணமலைக் கோயில்.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு அ } மெய்கண்டான்யாண்டு-எ௱எ ஆவணித் திங்கள் 1930௵ ஆகஸ்டு௴—செப்டம்பர் { பரல் வு

திருச்சிற்றம்பலம்

## திருவாசகம் - திருப்படையாட்சி.

### முதற்றிருவிருத்தமும் உரையும்*

கண்களிரண்டும்மவன் கழல்கண்டு களிப்பன வாகாதே
காரிகையார்கடம் வாழ்விலென்வாழ்வு கடைப்படு மாகாதே
மண்களில்வந்து பிறந்திடுமாறு மறந்திடு மாகாதே
மாலழியாமலர்ப் பாதமிரண்டும் வணங்குது மாகாதே
பண்களிகூர்தரு பாடலொடாடல் பயின்றிடு மாகாதே
பாண்டிநன்னுடை யான்படையாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம்வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலைவீசிய கானவன்வந்து வெளிப்படு மாயிடிலே.

*என்பது செய்யுள் என்னுதலிற்றோ வெனின் படையாட்சியொடு பாசறைக்கட் சென்ற தலைவன் சத்தனுதலால் அவன் வருவலென வுரைத்த பருவமும் வந்தது, அவனும் வருவன் என்றாற்றுவித்த பாங்கிக்குத் தலைவி அவன் வெளிப்படின் றனக்குளதாம் போகானந்தப் பேற்றைக் கூறுதலை யுணர்த்துதனுதலிற்று.*

* இவ்வுரை திருத்தணிகை விசாகப்பெருமாளையாவர்களால் எழுதப் பெற்றது. இஃதோர் பழஞ் சுவடியினின்று மெடுத்துப் பதிக்கப் பெற்றுளது.

(இ - ள்) கலவனுருக்கொடு வலைவீசி மீனினைப் படுத்த சிவ னெனும் தலைவன் வந்து வெளிப்படின் ஆண்டு என்னிரண்டு கண்களும் அவன் திருக்கழல் கண்டு களிப்பனவாகிய நிகழ்ச்சியு முளதாகாது. பிரிவறியாது தன் தலைவருடன் புணர்ந்து நிற்கும் ஏனை மாதர் வாழ்வி னின்றும் என் வாழ்வு கடைப்படுமாறும் ஆகாது. இனி மண்ணுலகங் களின் வந்து பிறந்திடுமாறும் மறந்திடுமாறும் உளதாகாது. திருமாலறி யாத் திருமலர்ப்பாதம் இரண்டினையும் வணங்குது மென்று சொல்லுஞ் சொல் நிகழ்ச்சியும் உளதாகாது. களிப்பினை மிகத்தரும் பண்ணினைப் பொருந்திய பாடலோடாடல் பயின்றிடுமாறும் உளதாகாது. நல்வள நிறைந்த திருப்பாண்டி நாடதனையே திருப்படைவீடாக வுடையான் படையாட்சிகள் பாடுதுமென்று சொல்லுஞ் சொல் நிகழ்ச்சியும் உள தாகாது. இருமலமுடைய பிரளயாகலர் களிகூரத் தக்கதாக மான்மழு சதுர்ப்புயத்தோடு வந்து வெளிப்படுமாறு வெளிப்படுதலும் உளதாகாது.

ஆண்டு யான் சிவபோக மென்னுஞ் சிவாநுபூதி சொரூபியாவே னென்பதாம். ஈண்டுத் தலைவி சீவன் மூத்தன். தலைவன் சத்தனுகிய பரமசிவன். பாங்கி திருவருளென அறிக. சைவாகமத்து முத்தியினும் மும்முதலு முண்டென்பதனுன் முத்தியினும் ஆண்டான் அடிமை இருக்க இவ்வாறு கூறலாகாதெனின், அறியாது கூறினுய், மல மாயா கன்மங்களோடு கூடித் திரோதப்பட்டுச் சனன மரணமுற்று வரு மான்மா இருவினையும் ஒரு காலத்தே வந்து புசிக்கைக்குச் சமமுற்ற எல்லையிற் போன பலகோடி பவங்களிலே செய்துவந்த சரியா கிரியா யோகத் தவப்பயனுன் மலபரிபாகப்பட்டுச் சிவஞானத்தைப் பெற்றுத் திருவருள்தாரகமாக நின்று சீவகரணங்க ளெல்லாஞ் சிவகரணங்களாய்ச் சிவனே டொன்ருய்ச் சாயுச்சியமாவன்; சாயுச்சிய மாமிடத்து வேருய் நின்று கலப்பின் கலத்த லின்மையானும் அப்பொடு கலந்த உப்புப் போல வேறற நின்று சாயுச்சியமாவன்; ஆனவிடத்து மூன்று முதலு மிருக்கினு மவை முன்பு போலச் சீவித்து நிற்பனவுஞ் செய்யாமனிற் கும்; நிற்கவே ஆன்மா சிவனேடு அத்துவிதமாய் நிற்பனுதலால் ஆண்டு சிவனையுஞ் சுட்டி யறியான். இது இதுவென்று சுட்டியறியப்பட்டன வெல்லாம் விடயமாய்ப் பொய்ப்பொருளாமாதலின் அவ்வாறு அவை பொய்ப்பொருளென அறிந்த விடத்தே சுட்டற்ற உண்மையாகிய சிவ சொருபமாவன் ; அங்ஙனஞ் சிவரூபனுன முத்தாத்மாவினுலே இவ்வாறு சுட்டியறிதலின்ருமாதலின் இவ்வாறு கூறுதலாமெனக் கொள்க. இத னைச் சிவஞான போதம் - அ-கூ-ம-மக ஆஞ் சூத்திரங்களாலும் இந் நான்கு சூத்திரங்களின் பொருள்களை விரித்துச் சித்தியார் சிவப்பிர

காசங்களிற் கூறிய திருவிருத்தங்களாலும் அறிக. ஏகாரங்களீற்றசை. தேற்றமெனினும் அமையும். அன்றி வினவாகக் கொண்டா மெனப் பொருள் கொள்ளின் காரிகையார்கள் தம் வாழ்வி லென் வாழ்வு கடைப்படுமோகாதே யென்பதைத் திலதருப்பணஞ் செய்யல் வேண்டும். இது முதலிய பல குற்றங்களுண்டாம். அவற்றை விரிப்பிற் பெருகு மென்றொழிந்தாம்.

இச்செய்யுளிற் கூறப்படு மாகாதென்னு மொழிகட்கு ஆமெனப் பொருள் கூறின் ஆகாதோ வெனின் ஆகாது, என்னெனின், யாண்டும் எதிர்மறையை யுடன்பாடாகக் கூறுதற் கிலக்கண மின்மையின். செய்யா வென்னும் முன்னிலை யொருமை யேவலெதிர் மறை வினைமுற்றை உடன் பாட்டு வினைமுற்றாகப் பொருள் கொள்ளு தல் போல் இதனையும் பொருள் கொள்ளுதல் ஆகாதோ வெனின் ஆகாது; என்னெனின் அதனை எதிர்மறை வினைமுற்றாகப் பொருள் கொள்ளு மிடத்து எதிர்மறை யாகார மிடையிற் புணர்ந்து கெட்டு நின்றதாகவும் உடன்பாட்டு வினை முற்றாகப் பொருள் கொள்ளுமிடத்து அவ்வெதிர்மறையாகாரம் வேண்டாது நிற்பதாகவும் கொள்ளுதலா னும் இதனிடத்தில் எதிர்மறை யாகாரம் புணர்ந்து நிற்ற லுடன்பா டாகக் கொள்ளுதற் கேலாமை யானு மென்க.

கண்களிரண்டாவன - ஞானக் கண்ணும் ஊனக்கண்ணுமாம். ஏனையவற்றை -விரித்துக்கடாவிடைகளாகக் கூறுதற்கிஃ தமையம் அன்றென விடுத்தனம்.

---

# நம்பியாண்டார் நம்பிகள் சரித்திரம்.

[திரு. S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் B.A., L.T.[

சைவத்திற் குயிர்த்துணையாஞ் சமயகுர வரின்மூவர் சாற்று பாவும்
மெய்வைத்த திருத்தொண்டர் வரலாறும், மேதினியில் விளங்க நல்கி,
உய்வைத் தருந்தெய்வத் திருமுறைகள் வகுத்தருளி, உயர்நூல் செய்து
நைவைத் தடுத்தாளு நம்பியாண் டார்நம்பி நற்றாள் போற்றி.

சைவசமய விளக்கத்திற்குப் பெருந்துணை புரிந்த பெரியா ராகிய நம்பியாண்டார் நம்பி என்பவர், இற்றைக்குச் சுமார் 950 ஆண்டுகளுக்கு முன்பு, திருநாரையூரிலே ஆதிசைவகுலத் திலே திருவவதரித்தார். அவர் நாளில் அரசு புரிந்த சோழமன் னர் முதலாவது ராஜராஜ சோழர் (கி. பி. 985 முதல் 1013

வரை). சிவபத்தி சிவனடியார் பத்தியிற் சிறந்த இவ்வரசர் ஆட்சி தொடங்கிய காலத்தில் மூவரருளிய தேவாரப் பதிகங் களில் மிகச்சிலவே அருமையாக உலவி வந்தன. அவர் எல் லாப் பதிகங்களையும் பெறுதற்காகத் தேடியும் காணாது வருந்தி யிருந்தார்.

இது இங்ஙனமாக, நம்பியாண்டார் நம்பி உபநயனஞ் செய்யப்பெற்று வேதாகம முதலிய கலைகளைப் பயின்று வருகை யில் ஒருநாள் அவரது தந்தையார் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசை செய்யும் பொறுப்பை நம்பிகளிடம் ஒப்பித்து ஒரூருக்குச்சென்றார். நம்பிகளும் பிள்ளையாருக்கு நீராட்டு முதலியனசெய்து, நிவேதனத்தைத் திருமுன்பு வைத்து, "எம்பெருமானே! திருவமுது செய்தருளும்" என்று வேண்டினர். பிள்ளையார் சும்மாவிருந்தது கண்டு, நம்பிகள் வருந்தித் தமது தலையை மோதப் புகும்போது, பிள்ளையார் "நம்பி! பொறு" என்று தடுத்து நிவேதனத்தை அமுது செய் தருளினர். பின்னர், நம்பிகள் பள்ளிக்கூடத்திற்குப் போவதைத் தவிர்த்துப் பிள்ளையாரிடமே பாடமோதி வந்தார். அவர்மீது திருவிரட்டை மணிமாலை என்னும் நூலொன்றும் பாடினர்.

இவ் வருமையெல்லாங் கேட்டறிந்த ராஜராஜ சோழர் திருநாரையூருக்குச் சென்று, அவ்வூரிலும் அதைச்சுற்றிப் பத் துக்காத தூரத்தளவிலும் பரவ நிறைத்த நிவேதனப் பொருள் களை யெல்லாம் நம்பிகள் மூலமாகப் பொல்லாப் பிள்ளையாருக் குத் திருவமுதாக்கி, மூவர் தேவாரங்களும் நாயன்மார் வரலாறு களும் உலகத்தில் விளங்கும்படி செய்யவேண்டுமென்று நம்பி களிடம் விண்ணப்பித்தார். நம்பிகள் அவ்வேண்டுகோளைப் பொல்லாப் பிள்ளையாரிடம் செய்யவே, அவர், தேவாரப் பதி கங்கள் சிதம்பரத்திற் கனகசபைக்குப் புறக்கடையின் பக்கத் தில் மூவர் திருக்கரங்களின் அடையாளமுடைய ஓர் அறையில் உள்ளன என்று நம்பிகட்கு உணர்த்தி, நாயன்மார் வரலாறு களையும் கூறியருளினர்.

நம்பிகள் தேவாரமிருக்குமிடத்தை அரசருக்குரைக்க, அவர் நம்பிகளோடு சிதம்பர மடைந்து, பொல்லாப் பிள்ளையார்

அருளிப்பாட்டைத் தில்லை வாழந்தணர்கட்குத் தெரிவித்து, தேவார ஏடுகளை வெளிக்கொண்டு வரவேண்டினர். அவர்கள் சமயகுரவர் மூவர்களே வந்தாலன்றி அறையைத் திறக்க முடியாது என்றார்கள். அரசர், மூவர் திருவுருவங்களுக்குத் திருவிழா நிகழ்த்தித் திருமுறை யிருக்கும் அறையின் முன்னே எழுந்தருளப் பண்ணினர். பின்பு அறை திறக்கப்பட்டது. ஆனால் ஏடுகளில் பெரும்பகுதி செல்லால் பழுதுபட்டுக்கிடந்தது. அரசர் மிகவும் வருந்துகையில், "தேவாரப் பதிகங்களில் இக்காலத்திற்கு வேண்டியவற்றை மட்டும் வைத்துள்ளோம்" என்று ஒரு அசரீரி மொழி பிறந்தது. அரசர் மகிழ்ந்து நம்பிகளைக் கொண்டு தேவார முதலிய திருவருட்பாக்களை யெல்லாம் 11 திருமுறைகளாக வகுப்பித்தார். பின்பு நம்பிகள், நாயன்மார்கள் சரித்திரங்களைச் சுருக்கிக் கூறும் திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் நூலையும் மற்றும் ஒன்பது நூல்களையும் பாடியருளினர். இவை பத்தும் அரசர் வேண்டுகோளின்படி, பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டன.

பின்பு தேவாரப் பதிகங்கட்குப் பண்ணடைவு பெற விரும்பி அரசரும், நம்பிகளும் திருவெருக்கத்தம்புலியூருக்குச் சென்று சிவபெருமானிடம் கருத்தை விண்ணப்பித்தார்கள். உடனே, யாவருங் கேட்க வானத்தில் "திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபின் வழிவந்த பெண்ணொருத்திக்குப் பண்களை அருளிச் செய்தோம்" என்றோர் அசரீரி பிறந்தது. அப்பெண்ணை வரவழைத்துத் தேவாரப் பண்களைக் கேட்டு மகிழ்ந்தார்கள். அப்போது, "இவளைக் கனகசபைக்கு முன் கொண்டு போய்த் தேவாரப் பதிகங்கட்குப் பண்வகுக்க" என்று மற்றோர் அசரீரி வாக்கு எழுந்தது. நம்பிகளும் சோழரும் அவ்வாறே செய்து முடித்தார்கள்.

இவ்வாறு ராஜராஜ சோழருக்கு உறுதுணையாய் நின்று தேவாரத் திருமுறைகளையும் நாயன்மார் சரிதங்களையும் வெளிப்படுத்தியும், திருமுறை வகுத்தும், அருமையான நூல்களியற்றியும், சைவசமயத்திற்குப் பேருதவி புரிந்தருளிய மூர்த்தியாவர், இந்த நம்பியாண்டார் நம்பிகள். இப்பெரியார் ஒரு

வைகாசித் திங்களில் புனர்பூச நன்னாளில் பொன்னம்பலவர் திருவடிநீழலடைந்தார். ஆகையால் ஆண்டுதோறும் அந்நாளை மெய்யன்போடு கொண்டாடுதல் நன்றியறிவுடைய சைவ நன் மக்களனைவருக்கும் உரிய கடமையாம்.

திருநாரையூர், சிதம்பரத்துக்குத் தென்மேற்கே 10 மைல் தொலைவிலுள்ளது. மூவர்களாலருளிச் செய்யப்பட்ட தேவாரப் பதிகங்களின் தொகை 1,30,000. இப்போதுள்ளவற்றின் தொகை 795.

---

# 'கண்ணப்பனொப்பதோர்' என்னுந் திருவாசகத்தின் விரிவுரை

அல்லது

# மணிவாசகரும் கண்ணப்பரும்

(தமிழ்ப்புலவர் திரு. அ. மு. சரவண முதலியாரவர்கள்)

**"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்**
**என்னப்ப னென்னொப்பி லென்னையு மாட்கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்**
**சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ."**

(திருவாசகம்-கோத்தும்பீ)

இஃது, அன்புடன் ஓதுவாரது ஊனை உருக்கி உணர்வைப் பெருக்கி, மனத்தைக் கரைத்து மலத்தைக் கெடுத்துத் தேனும் பாலுந் தீங்கன்னலுமமுதுமாய்த் தித்தித்துக் கருவாசம் போக்குந் திருவாசகமென்னும் ஒப்புயர்வற்ற திப்பிய தேனூற்றின் ஒரு துளியாகும்.

இதன் பொருளை விரித்து 'மணிவாசகனார் கண்ணப்பர் அன்பினை எடுத்துப் பாராட்டியதன் கருத்தென்னை?' என்பதூஉம் பிறவும் ஆய்ந்து முடிவு கட்டுவதே இக்கட்டுரையின் கருத்தாகும்.

**இதன் பொருள் :**—கண்ணப்பன்=கண்ணப்ப நாயனாரின்,

ஓர்=ஒப்பற்ற, (அன்பு உண்மை) ஒப்பது=அன்புண்மை போல்வதாகிய, (என்) அன்பு இன்மை=அடியேனது அன்பின் இன்மையை, கண்டபின்=அறிந்த பின்னும், என் ஒப்பு இல்=(அன்பின்மையில்) எனக்கு ஒப்பாவார் எவரும் இன்மையைப் பெற்ற, என்னையும்=அடியேனையும், ஆள்கொண்டு=(திருப்பெருந்துறையில்) அடிமையாகக் கொண்டு, அருளி=ஞானோபதேசஞ் செய்தருளி, வண்ண=அழகு பொருந்த, என்னை வா என்று பணித்த=அடியேனைத் தில்லைக்கு வரக்கடவாயென்று கட்டளையிட்டருளிய, வான் கருணை=பேரருளையுடைய, என் அப்பன்=எனது உயிர்த் தந்தையாகிய, பொன்=பொன்போலுந் திருமேனியின்கண், சுண்ணம்=பொடியாகிய, வெண்மை நீற்றற்கே=வெண்ணீறணிந்த சிவபெருமானுக்கே, கோத்தும்பீ=அரசவண்டே, சென்று ஊதாய்=நீ போய்ப் பாடுவாயாக; என்றவாறு.

'கண்ணப்பன்' எனவும், 'அன்பின்மை' எனவும் வந்ததனால், 'என்' என்பதும், 'அன்புண்மை' என்பதும் வருவித்து உரைக்கப்பட்டன. 'ஒப்பது' ஈண்டு மறுதலையுவமை; அது, 'அவன் எப்படி நல்லவர்களிற் சிறந்தவனோ, அதுபோலவே யான் தீயவர்களிற் சிறந்தவன்' என்புழிவரும் 'அது போல' என்பது போல்வது; 'கெடுப்பதூஉம்' என்னுந் திருக்குறள் விளக்கவுரையில் 'ஆங்கு, மறுதலையுவமம்' என்றார் பரிமேலழகர். உம்மை தொகுத்தல். 'என்னொப்பில் என மறித்துங் கூறியது', அன்பின்மையில் தமக்கு நிகராவார் யாருமில்லை என்பதை யாப்புறுத்தற்கு. 'என்னையும்' என்ற இழிவு சிறப்பும்மையால், அன்பின்மையால் அவனால் ஆட்கொள்ளப்பெறுந் தகுதியற்ற தமது இழிவைப்புலப்படுத்தினார்; என்னை? 'பத்திவலையிற்படுவோன்' என்றும், 'யாவராயினு மன்பராலன்றி யறியொணு மலர்ச்சோதியான்' என்றும் அம்மணிவாசகரே அருளுதலாலெனக. அங்ஙனம் தகுதியற்ற தம்மை ஆட்கொள்ளுதலே அடாது; எனினும் ஆட்கொண்டான் என்பது தோன்ற 'ஆட்கொண்டு' எனவும், அவ்வாறு ஆட்கொள்ளினும் பன்னிரண்டு ஆண்டுகள் வரையும் தந்தகுதியை நன்கு ஆராய்ந்து, அஃதின்றேல் உளதாக்கி உபதேசிக்க வேண்டுமென்னும் அறிவுநூற் சட்டத்திற்குமாறாக

உடனே உபதேசித்தருளினனென்பது தோன்ற 'அருளி' எனவும் கூறியருளினர். இஃது ஆண்டவன் அந்தணகுலக்குரவனாய் எழுந்தருளித் திருப்பெருந்துறையின்கண் அடிகளை ஆட்கொண்டு திருவைந்தெழுத்தை முறைப்படி உபதேசித்தருளின வரலாற்றைக் குறிப்பதாகும்; இதற்குத் திருவாசகத்தின்கண் அகச்சான்றுகள் நிறைய உள்ளன. ஆண்டுக் காண்க. அழகு அனைத்திலும் சிறந்த பிறவி நீங்குதலாகிய பேரழகினைத் தமக்கு அருளுதற்குத் 'தில்லைக்குவரக் கடவாய்' எனப்பணித்தருளினன் என்பது தோன்ற, 'வண்ணப்பணித்தென்னை வாவென்ற' என்றார்; 'வண்ணமாக' எனற்பாலது 'வண்ண' எனத்திரிந்து நின்றது; "யான் நற்குணமுடையவனுமாறு" எனப் பொருளமைத்துக் கூறினும் கருத்தில் வேறுபாடின்மை அறிக; "தில்லைத்திருக்கூத்தைக்கண்டு யான் பிறவி நீங்கலாகிய பெருநலமுற்றேன்" என அடிகள் கூறுவதைக் 'கண்டபத்'திலும், 'குலாப்பத்'திலும் பரக்கக்காண்க. 'தில்லைக்கு வரக்கடவாய்' என்றதை 'நாயினேனை நலமலிதில்லையுட் கோலமார் தருபொதுவினில் வருக' என்னுந் திருவாசகத்தாலுணர்க; இதுவும் அவர் வரலாறு குறித்ததாகும். 'பணித்து வாவென்ற' என்பது 'வாவென்று பணித்த' என விகுதி பிரித்துக் கூட்டப்பெற்றது. இத்துணைக்கும் அவன் எண் குணங்களுட் சிறந்ததாகிய பேருளுடைமையே காரணமென்பது தோன்ற 'வான்கருணை' என்றார். இங்ஙனம் தம்மை ஆட்கொண்டருளியதற்குக் காரணம் அவன் பெருங்கருணையே அன்றிக்கடமையுமாகும் என்பதைக் குறிக்க 'என்னப்பன்' என்றார்; என்னை? சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய உடற்றந்தையும் நெறியல்லா நெறிசெல்லும் தன் புதல்வனை ஆட்கொண்டு நன்னெறிப்படுத்தித் தன் பொருளை அவனுக்கு அளித்தல் தன் கடமை என்று கருதி அங்ஙனம் செய்தல் கண் கூடாகலின். 'பொன் சுண்ணநீற்றற்கே' என்றது ஆண்டவன் ஆசிரியக்கோலத்துடன் வந்து ஆட்கொண்டருளிய ஞான்று காட்டிய திருவுருவத்தின்கண் ஈடுபட்ட வாதவூர் வள்ளல் இடையறாது அவ்வழகு வடிவத்தைத் தம் முள்ளத்தின்கண் வைத்து வழுத்துவதைக் குறிப்பதாகும்; இவ்வுண்மையை,

ஓர்=ஒப்பற்ற, (அன்பு உண்மை) ஒப்பது=அன்புண்மை போல்வதாகிய, (என்) அன்பு இன்மை=அடியேனது அன்பின் இன்மையை, கண்டபின்=அறிந்த பின்னும், என் ஒப்பு இல்=(அன்பின்மையில்) எனக்கு ஒப்பாவார் எவரும் இன்மையைப் பெற்ற, என்னையும்=அடியேனையும், ஆள்கொண்டு=(திருப்பெருந்துறையில்) அடிமையாகக் கொண்டு, அருளி=ஞானோபதேசஞ் செய்தருளி, வண்ண=அழகு பொருந்த, என்னை வா என்று பணித்த=அடியேனைத் தில்லைக்கு வரக்கடவாயென்று கட்டளையிட்டருளிய, வான்கருணை=பேரருளையுடைய, என் அப்பன்=எனது உயிர்த் தந்தையாகிய, பொன்=பொன்போலுந் திருமேனியின்கண், சுண்ணம்=பொடியாகிய, வெண்மை நீற்றற்கே=வெண்ணீறணிந்த சிவபெருமானுக்கே, கோத்தும்பீ=அரசவண்டே, சென்று ஊதாய்=நீ போய்ப் பாடுவாயாக; என்றவாறு.

'கண்ணப்பன்' எனவும், 'அன்பின்மை' எனவும் வந்ததனால், 'என்' என்பதும், 'அன்புண்மை' என்பதும் வருவித்து உரைக்கப்பட்டன. 'ஒப்பது' ஈண்டு மறுதலையுவமை; அது, 'அவன் எப்படி நல்லவர்களிற் சிறந்தவனோ, அது போலவே யான் தீயவர்களிற் சிறந்தவன்' என்புழிவரும் 'அது போல' என்பது போல்வது; 'கெடுப்பதூஉம்' என்னுந் திருக்குறள் விளக்கவுரையில் 'ஆங்கு, மறுதலையுவமம்' என்றார் பரிமேலழகர். உம் தொகுத்தல். 'என்னொப்பில் என மறித்துங் கூறியது', அன்பின்மையில் தமக்கு நிகராவார் யாருமில்லை என்பதை யாப்புறுத்தற்கு. 'என்னையும்' என்ற இழிவு சிறப்பும்மையால், அன்பின்மையால் அவனால் ஆட்கொள்ளப்பெறுந் தகுதியற்ற தமது இழிவைப்புலப்படுத்தினார்; என்னை? 'பத்திவலையிற்படுவோன்' என்றும், 'யாவராயினு மன்பராலன்றி யறியொணு மலர்ச்சோதியான்' என்றும் அம்மணிவாசகரே அருளுதலாலென்க. அங்ஙனம் தகுதியற்ற தம்மை ஆட்கொள்ளுதலே அடாது; எனினும் ஆட்கொண்டான் என்பது தோன்ற 'ஆட்கொண்டு' எனவும், அவ்வாறு ஆட்கொள்ளினும் பன்னிரண்டு ஆண்டுகள் வரையும் தந்தகுதியை நன்கு ஆராய்ந்து, அஃதின்றேல் உளதாக்கி உபதேசிக்க வேண்டுமென்னும் அறிவுநூற் சட்டத்திற்குமாறாக

உடனே உபதேசித்தருளினனென்பது தோன்ற 'அருளி' எனவும் கூறியருளினர். இஃது ஆண்டவன் அந்தணகுலக்குரவனாய் எழுந்தருளித் திருப்பெருந்துறையின்கண் அடிகளை ஆட்கொண்டு திருவைந்தெழுத்தை முறைப்படி உபதேசித்தருளின வரலாற்றைக் குறிப்பதாகும்; இதற்குத் திருவாசகத்தின்கண் அகச் சான்றுகள் நிறைய உள்ளன. ஆண்டுக் காண்க. அழகு அனைத்திலும் சிறந்த பிறவி நீங்குதலாகிய பேரழகினைத் தமக்கு அருளுதற்குத் 'தில்லைக்குவரக் கடவாய்' எனப்பணித்தருளினன் என்பது தோன்ற, 'வண்ணப்பணித்தென்னை வாவென்ற' என்றார்; 'வண்ணமாக' எனற்பாலது 'வண்ண' எனத்திரிந்து நின்றது; "யான் நற்குணமுடையவனுமாறு" எனப் பொருளமைத்துக் கூறினும் கருத்தில் வேறுபாடின்மை அறிக; "தில்லைத்திருக்கூத்தைக்கண்டு யான் பிறவி நீங்கலாகிய பெருநலமுற்றேன்" என அடிகள் கூறுவதைக் 'கண்டபத்'திலும், 'குலாப்பத்'திலும் பரக்கக்காண்க. 'தில்லைக்கு வரக்கடவாய்' என்றதை 'நாயினேனை நலமலிதில்லையுட் கோலமார் தருபொதுவினில் வருக' என்னுந் திருவாசகத்தாலுணர்க; இதுவும் அவர் வரலாறு குறித்ததாகும். 'பணித்து வாவென்ற' என்பது 'வாவென்று பணித்த' என விகுதி பிரித்துக் கூட்டப்பெற்றது. இத்துணைக்கும் அவன் எண் குணங்களுட் சிறந்ததாகிய பேரருளுடைமையே காரணமென்பது தோன்ற 'வான்கருணை' என்றார். இங்ஙனம் தம்மை ஆட்கொண்டருளியதற்குக் காரணம் அவன் பெருங்கருணையே அன்றிக்கடமையுமாகும் என்பதைக் குறிக்க 'என்னப்பன்' என்றார்; என்னை? சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய உடற்றந்தையும் நெறியல்லா நெறிசெல்லும் தன் புதல்வனை ஆட்கொண்டு நன்னெறிப்படுத்தித் தன் பொருளை அவனுக்கு அளித்தல் தன் கடமை என்று கருதி அங்ஙனம் செய்தல் கண் கூடாகலின். 'பொன் சுண்ணநீற்றற்கே' என்றது ஆண்டவன் ஆசிரியக்கோலத்துடன் வந்து ஆட்கொண்டருளிய ஞான்று காட்டிய திருவுருவத்தின்கண் ஈடுபட்ட வாதவூர் வள்ளல் இடையறாது அவ்வழகு வடிவத்தைத் தம் முள்ளத்தின்கண் வைத்து வழுத்துவதைக் குறிப்பதாகும்; இவ்வுண்மையை,

'எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை யழகமர் திருவுரு
நீற்றுக்கோடி நிமிர்ந்து காட்டியும்'

என வரூஉம் அடிகளின் கூற்றாலே அறிக. அவ்வடிவம் கண் கவர் வனப்பினதாகலின் அடிகள் பின்னும் பல விடங்களிற் கூறியருளுவர்; அவற்றுட் சில,

'நீறுபட்டே யொளிகாட்டும் பொன்மேனி நெடுந்தகையே'

'ஒண்மையனே திருநீற்றை உத்தூளித்தொளி மிளிரும்
வெண்மையனே'

"செய்யா வெண்ணீருடி"

"வெண்ணீற்றர் செம்மேனியர்"

"துப்பனே தூயாய் தூயவெண்ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே"

என்பன. ஆண்டவனது அழகு வாய்ந்த இவ்வொளி வடிவத்தில் ஈடுபடாத பெரியார் யாருமிலர்.

"பவளம்போன் மேனியிற்பால் வெண்ணீறும்"

என்பது ஆளுடைய அரசின் அருளிப்பாடு.

"செம்மேனி வெண்ணீற்றான்"

என்பர் சேக்கிழார் பெருந்தகை.

"அவ்வப்போது ஒரு கண நேரம் சத்தியத்தின் தோற்றத்தைக்கண்டது கொண்டு, அதன் அளவில்லாத ஒளியினியல்பை யாம் அறிந்து கொள்ள முடியாது. நாம் தினந்தோறும் பார்க்கும் சூரியனுடைய பிரகாசத்தைவிடக் கோடி மடங்கு ஜோதியுடையது சத்தியம். அந்தப் பரஞ்சோதியில் நான் கண்டது அணுவிலும் அணுவான ஒளிக்கிரணமேயாகும்" என்பது நிகழ்காலப்பெரியாராகிய 'காந்தியடிகள்' திருவாக்கு.

பொன், உவமையாகுபெயர்; அதனை நீற்றுக்கு அடையாக்கினும் பொருந்தும். ஏகாரம், பிரிநிலை.

சோலை முதலிய பல இடங்களில் இன்னொலி எழுப்பிக்கொண்டு தன்னியல்பிற் பரந்து திரியும் வண்டினை நோக்கி

'வண்டே! நீ பல விடங்களிலும் சென்று சென்று பொருள் சேராத புகழினையுடைய பலரையும் உன் இன்னிசையாற் பாடிவாணாளை வீணாளாக்காது, இசை விருப்பனாகிய எம்பெருமான் திருமுன் சென்று அவன் பொருள்சேர் புகழைப் பாடுவாயாக' என்பார் "சென்றாதாய் கோத்தும்பீ" என்றார்; என்னை? 'நிற்பனவும் இயங்குவனவுமாகிய அனைத்தும் அவ்வவைகட்குரிய கரணங்களால் ஆண்டவனையே வழிபட்டு அழியாத இன்பத்தைப் பெறவேண்டும்' என்னுங் கனிந்த கருணை யுடையவராகலின் என்க. பெரியார் கருத்து அதுவே யாகுமென்பதை "ஞாலநின் புகழேமிக வேண்டுந் தென்னால வாயிலுறையு மெம்மாதியே" என்னும் ஞான சம்பந்தப் பெருந்தகையாரின் நற்றமிழாலறிக. அரசன் எவ்வொழுக்கத்தை மேற்கொண்டொழுகுகின்றானோ அதனையே குடிகளும் மேற்கொள்ளுதல் கண்கூடாகலானும், 'அரசனெவ்வழி குடிகளவ்வழி' 'மன்னவனெப்படி மன்னுயிரப்படி' என்பன பழமொழிகளாகலானும், ஏனைய வண்டுகளையும் அந்நெறிப்படுப்பான் அரசவண்டை நோக்கிக் "கோத்தும்பீ" என விளித்த அருமை அடிகளின் கனிதரு முள்ளத்தை நமக்குக் காட்டிக் களிப்பிக்கின்றது.

இனி, இற்றை நாள் உயிர் நூற்புலவர் 'தேனீக்களில் இராணித் தேனீ என ஒன்று உண்டென்றும், அது யாதொரு அலுவலுஞ் செய்யாது 'கும்' என்று ஒலி செய்து கொண்டே இருக்குமென்றும் ஆய்ந்து முடிவுகட்டி யிருக்கின்றனர். நமது மணிமொழியார் 'கோத்தும்பீ' என விளித்ததை நோக்கின் அவர் உயிர்நூற் புலமையும் வாய்ந்திருந்தார்' என்பது தெற்றென விளங்கும்.

இனி, 'ஒப்பது' என்பதை மறுதலையுவமையாகக் கொள்ளாது 'கண்ணப்பர் அன்புபோலத் தமக்கு அன்பில்லை' என அடிகள் கூறினர்' எனக் கொள்ளிற் போந்த இழுக்கென்னை யெனின், அது கண்ணப்பரினும் சிறிதோ, அன்றிப் பெரிதோ குறைந்த அன்பு தம்மிட மிருப்பதாக அடிகள் கருதினரெனப் பொருள் தருமன்றி, அறவே தம்மிடம் அன்பில்லை

என அவர் கருதினரென்னும் பொருள் தராது; எவ்வாறெனின், பெருஞ் செல்வமுடைய சாத்தனைக் குறித்துக் கொற்றன் "சாத்தனைப்போல என்னிடம் பொருளில்லை" எனக் கூறின், சாத்தன் பொருளினுஞ் சிறிது குறைந்தோ, அல்லது பெரிது குறைந்தோ பொருள் கொற்றனிட மிருக்குமெனப் பொருள் தருமன்றி, 'அறவே பொருளில்லாதவன் கொற்றன்' எனப் பொருள் பயவாமை போல. எனவே ஆளுடைய அடிகள் தம்மிடம் கண்ணப்பர் அன்பினுங் குறைந்த அன்பு இருப்பதாகக் கருதினரென்றால் அது,

"ஆடுகின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை"

"அலவா நிற்கு மன்பிலேன்"

"நெகு மன்பில்லை நினைக்காண"

"இல்லை நின்கழற் கன்ப தென்கணே"

"நான்றனக் கன்பின்மை நானுந் தானுமறிவோம்
தானென்னையாட் கொண்ட தெல்லாருந் தாமறிவர்"

என அடிகள் தம்மிடம் அன்பென்பது சிறிதுமில்லையென அருளிய மணிமொழிகளோடும்,

"நின்றன் வார்கழற் கன்பெனக்கு நிரந்தரமாயருளாய்"

"இடையறா வன்புனக்கென், னூடகத்தே நின்றுருகத்தந்தருள்"

"அன்புநின் கழற்கணே புணர்ப்ப தாக"

"மெய்கலந்த அன்பரன் பெனக்குமாக வேண்டுமே"

"வேண்டும் நின்கழற் கணன்பு"

"மெய்யன்பை யுடையாய் பெறநான் வேண்டுமே"

"தொண்டனேற்கு முண்டாங்கொல் மிக்க வன்பேமேவுதல்"

"பெறவே வேண்டு மெய்யன்பு"

"அடியா ருனக்குள்ளவன்புந் தாராய்"

என அடிகள் ஆண்டவன் திருமுன் 'அன்பு வேண்டும்; அன்பு வேண்டும்.' என்று குறையிரந்து வேண்டிய மணிமொழிகளோடும் மலையுமாறு காண்க.

இனி, 'ஒப்பது' என்பதனை மறுதலையுவமையாகக்கொண்டு,

'கண்ணப்பர் எங்ஙனம் அன்புண்மையிற் றலைசிறந்து நின்றாரோ அங்ஙனமே யான் அன்பின்மையிற் றலைசிறந்து நிற்கின்றேன்' எனக் கருத்தமைப்பின் மேற் காட்டிய மணிமொழிகளோடு மலையாது ஒத்து நிற்றலையுங் காண்க.

எனவே, இச்செய்யுளால் அடிகள் கருத்தாகப் பெறப்படுபவை, கண்ணப்பர் அன்பு உண்மையால் தலைவரானதுபோலத் தாம் அன்பின்மையாற் றலைவரென்பதூஉம், அதனால் ஆண்டவனால் ஆட்கொள்ளப் பெறுந்தகுதி தமக்கு இல்லை யென்பதூஉம், அங்ஙனமிருக்கவும் தம்மை அவன் ஆட்கொண்டதற்குக் காரணம் அவன் பெருங்கருணையே என்பதூஉம் பிறவுமாம். இவற்றை நிரலே எடுத்து ஆராய்வோம். (தொடரும்.)

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

## முதல்வன். (எ)

கடவுளைக் குறிக்கும் பண்டைத் தமிழ்ச் சொற்களில் முதல்வன் என்னும் சொல் ஒன்று. அதில் என்ன கருத்துக்கள் அடங்கியுள்ளன என்று இந்தக் கட்டுரையில் கருதப்படும்.

2. முதல்வன் என்ற சொல் முதன்மை என்னும் பண்புப் பெயர் அடியாகப் பிறந்த உயர்திணை ஆண்பா லொருமைப் படர்க்கைப் பெயர்ச்சொல். முதன்மை என்ற சொல்லில், ஈற்று மை கெட்டு முதல் என நின்று, அத்துடன் வகர ஒற்று எழுத்துப் பேறும் அன் என்ற படர்க்கை ஒருமை ஆண்பால் விகுதியும் சேர்ந்து முதல்வன் என ஆயது. முதன்மை என்பது அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினை முற்றாக வரும்பொழுது முதற்று எனவும், அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்றாக வரும்பொழுது முதல என்றும் வரும். 'அகர முதல வெழுத் தெல்லாமாதி பகவன் முதற்றே யுலகு' என்னும் குறளில், இந்த இரண்டு குறிப்பு வினைமுற்றுகளும் வருதல் காண்க.

3. முதல்வன் எனவே எவருக்கு முதல்வன் அல்லது எவைக்கு முதல்வன் அல்லது எவருக்கும் எவைக்கும் முதல்வன் என்ற கேள்விகள் அச்சொல்லை ஆராய்கிறவனது உள்ளத்திலே தோன்றும். அக்கேள்விகளுக்கு விடைகள் "அகர முதல வெழுத் தெல்லாம்" என்ற திருக்குறள் வசனத்தாலும், "அகர வுயிரின்றேல் அக்கரங்களின்றாம்" என்ற சிவஞான போத வெண்பா வசனத்தாலும் பெறப்படும். இந்த வசனங்களால் அகரமாகிய நாதமானது உயிரெழுத்துக்களுக்கு முதலாயும் மெய்யெழுத்துக்களுக்கு முதலாயும் இருப்பதுபோல, கடவுளும் உயிர்ப் பொருளுக்கு முதல்வனாயும் உயிரில் பொருள்களுக்கு முதல்வனாயும் இருக்கின்றான் என்பதும், அகர நாதம் இல்லையானால் உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் ஒலிக்காதனபோல, கடவுள் உயிர்ப்பொருள்களுக்கும் உயிரில் பொருள்களுக்கும் முதல்வனா யில்லாவிடின், அந்த இருவகைப் பொருள்களும் இயங்கா என்பதும் பெறப்படுகின்றன.

4. கடவுள் உயிர்ப் பொருள்களுக்கு முதல்வனா யிருக்கிறதினாலே, அவன் உயிர்ப் பொருள்களுக்கு ஆண்டவன் என்பதும், உயிர்ப்பொருள்கள் கடவுளுக்கு அடிமைப் பொருள்கள் என்பதும் பெறப்படுகின்றன. ஆண்டவன் அடிமைத் தொடர்பு பற்றிய கருத்துக்கள், சென்ற திங்கள் ஆண்டவன் எனனும் சொல்லைப்பற்றிய கட்டுரையில், சுருக்கமாக விளக்கப்பட்டன. ஆண்டான் அடிமைத் தொடர்பு பற்றிய ஒரு கட்டுரை, முன் விரிவாய்ச் செந்தமிழ்ச் செல்வி இரண்டாவது சிலம்பு கஉஎ-கஙக பக்கங்களிலும், களஙு-களசூ பக்கங்களிலும், உ0அ-உகங பக்கங்களிலும் எழுதப்பட்டுள்ளன. அதனைப்பற்றிய விரிந்த கருத்துக்களை அப்பக்கங்களிற் காண்க.

5. கடவுள் உயிரில் பொருள்களுக்கு (சடஉலகம்) முதல்வனாயிருத்தலால், கடவுளுக்கு உயிரில் பொருள்கள் உடைமைப் பொருள்கள் ஆகின்றன. மண், நீர், தீ, வளி, வெளி ஆகிய அஞ்சு முதற் பொருள்களும் (பஞ்ச பூதங்களும்) கடவுளாலே யே இயங்குகின்றன. அஞ்சு முதற் பொருள்களும் அவைகள

லாகிய தத்துவக் கூட்டங்களும் உலகங்களும் நுகர்வுப் பொருள்களும் கடவுளாலே உயிர்களின் பொருட்டுப் படைக்கப் பட்டிருக்கின்றன. உயிர்கள் உலகில் இப்பொருள்களைக் கை யாண்டு நுகர்ந்து சிற்றின்பம் அடைகின்றன.

6. முதல்வன் என்ற சொல்லில், ஆண்டவன் என்ற சொல்விளக்கக் கட்டுரையிற் குறிக்கப்பட்ட ஆளுதற்கருத்துக் களும், இறைவன் சொல்விளக்கக் கட்டுரையிற் குறிக்கப்பட்ட தங்குதற் கருத்துக்களும் அடங்கியுள்ளன. முதல்வன் என்ற சொல்லானது கடவுளுடைய இயக்கமில்லாமல் உயிர்ப்பொருள் கள் வேட்கை அறிவு செயல்களை நிகழ்த்தவாவது, உயிரில் பொருள்கள் அசையவாவது முடியாது என்னும் கருத்தைச் சிறப்பாக உணர்த்துகின்றது. கடவுளுடைய இயக்கம் கூத்து (நடனம்) என்று கூறப்படும். கடவுள் அக்கூத்தை அண் டத்தினிலங்கும் செயலினும், சிறப்பாகச் சிற்றம்பலத்திலும் (சிதம்பரம்), உயிர்களுடைய நெஞ்சுப் பையினும் (இருதயத்தி லும்) செய்து வருகின்றான். ஆதலின், கடவுள் உயிர்களுக்கு "வாழ்முதலாகிய பொருள்" ஆகின்றான்.

7. தலைவன் என்ற சொல்லும் ஏறக்குறைய முதல்வன் என்ற சொல்லில் அடங்கியுள்ள கருத்துக்களை உணர்த்துகின் றது. கடவுளுக்கு முதல்வன் என்ற பெயருள்ளது போல, தலைவன் என்ற பெயரும் உண்டு. உலகில் எவ்வகைய மக்கட் கூட்டமும் அதற்கு ஒரு தலைவனையின்றி நடவாமலிருத்தலை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். ஆனால், ஒரு கூட்டத்தார் தலை வனை நாம் கடவுளுக்கு ஒரு புடை உவமையாகத்தான் கொள்ள லாம்; ஆதலின், கடவுள் உலகிற்கு முதல்வனுயிருந்தாலன்றி உல கம் நடவாது என்பது தெளிவு. இக்கருத்தைத் திருநாவுக்கரசு அடிகள் தேவாரத்தில் "தானலா துலகமில்லை சகமலா தடிமை யில்லை" என்று கூறியிருத்தல் காண்க.

8. பிரான் என்ற சொல்லும் பெருமான் என்ற சொல் லும் பெருமான் என்பதன் மரூஉச் சொல்லாகிய பெம்மான் என்ற சொல்லும் ஏறக்குறைய முதல்வன் என்ற சொல்லில்

அடங்கியுள்ள கருத்துக்களை உணர்த்துகின்றன வாதலின், அச் சொற்களெல்லாம் கடவுளுக்குப் பெயர்களாய்த் தமிழ் மொழி யில் வழங்கப் படுகின்றன.

---

# நக்கீரனார்

## தெய்வப் புலமைமாட்சி

### [ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்கள்]

(முன் சாஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

இப்புதுமையைக் கண்டு வியந்து அதனை நோக்கி வைகிய நக்கீரனாரைக் கதுமென ஒரு பெரும்பூதந் தோன்றி, உமைமா னிளங்கன்றைக் கவர்ந்த உழுவைபோலக் கவர்ந்துசென்று ஒரு மலை முழைஞ்சினுட் புகுத்துத்தாளிட்டுச் சென்றது. செல்ல, அம்மலை முழைஞ்சினுண் முன்னரேயிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதுமக்களும் நக்கீரனாரை நோக்கிச் சொல் வார்-'ஐய! நீ வருதலால் ஆயிரமென்னுந் தொகை நிரம்பியது, இப்பூதம் நீராடச் சென்றது, திரும்பி வந்ததும் நம்மையெல் லாம் ஒருங்கே செகுத்து உண்ணும், நீ வராவிடில் இவ்விடர் நேராதுகாண்' என்று மிகநொந்து கூறினர். இதுகேட்ட நக்கீர னார் அறிவுமாழ்கிச் சிறிதுமிடர்ப்படாது அவர்க்கு நேரும் ஏதத்தை நீக்குதற்கு முருகக்கடவுள் திருவடித் தாமரைகளை வழுத்தியாறெழுத்தினையுமோதுவலென்றுதெளிந்துஅவ்வாறே யோதித் திருமுருகாற்றுப்படை மொழிந்தார். மொழிதலும் அருள் வள்ளலாகிய அறுமுகக் கடவுள் குறுநகை யிலங்கத் தோன்றி, அணுகிய பூதத்தைக் கதையாலடித்து வீழ்த்தி மலை முழையிலுள்ளோரை விடுவித்தார். இதன்பின், நக்கீரனார் முரு கனைத் தொழுது "மறைமுதல்வ! உமை புதல்வ! ஆலவாயமர்ந்த நீலகண்டனைச் செருக்குரை பகர்ந்தவென் னிழுக்க மொழியக் கயிலைகாணுதி யென்றனன் கண்ணுதல், அண்ணலே! இன்னு மதுகண்டிலேன், இங்கென் விழுமந்தீர்த் ததுகாட்டுதியால்." என்றழுது குறையிரப்பச் செவ்வேளிரங்கிக் "கயிலை யென்று வாளா திசைபுணர்த்தோதாது கூறினனைய;னிதனால், தென்க

முடிப்பாய் என்பதும் நான் நன்கறிந்ததே. ஆயினும் என்னுடைய மிகுந்த பேதமைக்குள் மிகச் சிறிதாய்த் தோன்றும் அற்பமதி, பெண் பிறப்போடுகூடிய தன்மையால் நீ கூறும் அச்செயல் தகுதியுடையது அல்லவென்று நினைக்கின்றதுண்டு, என்றிவ்வாறு கூறினள், எனச் சீதையின் கூற்றாகக் கூறுகின்றார்.

இதில், உரியது அன்று என்று ஒரேமொழியில் கூறாது 'உரியது அன்றுஎன ஓர்கின்றதுஉண்டு'என நீட்டிப்பேசியதாகக் காட்டப்பட்டது. இச்சொல்லைக் கூறுகையில் அவள் மனம் மிகத் கடுமாற்றத்தை அடைந்து அவனது முகத்தை நோக்கிக் கொண்டு தன்வார்த்தைகளால் அவனுள்ளம் கலங்கி முகத்தில் வேறுபாடான குறிகளைக் காட்டுகின்றதா என்று அஞ்சிக்கூறியதாகக் கவி அவ்வியற்கையை நன்கு விளக்குகின்றனர்.

நல்லிசைப் புலவர்களது கவிகள், சொற்கள் சிலவற்றால் பற்பல அரும் பெரும் பொருட்களை நவநவமாய்த் தோற்றுவிக்கும் பெருமை சான்றனவாகும். அவ்வியல்பை நமது புலவர் பெருமானாரே "சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் பயின்று சான்றோர்-கவியெனக் கிடந்த கோதாவரி..." என்றும், "...கற்பக மனையவக் கவிஞர் நாட்டிய—சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது." என்றும் கூறிச்செல்கின்றார். சொற்கள் எளிதாயினும் பொருட்கள் மிக ஆழ்ந்து கிடக்கும். கிடப்பினும் அவை, நுண்மதியாளர்க்கு உவகையூறும் வண்ணம் தனது பெருமையை உண்மையாக உணர்த்தும்தெளிவுமுடையவாகித் துலங்கும். இவற்றுக்கும் பல மேற்கோள்கள் காட்டலாம். இடம் பெருமை கொண்டு தேர்ந்தெடுத்த சில காட்டுவோம்.

சுந்தர காண்டத்தில் ஆஞ்சநேயர் உருவேற்றிய மந்திரத்தினால் சீதையைச் சுற்றிக் காவலிருந்த அரக்கியர்கள் யாவரும் உறங்கிக் கிடப்ப, அது ஒரு கால வாய்ப்பாகக்கொண்டு, பலவாறு தேர்ந்து சிந்தித்தும், கருத்தை மாற்றி மாற்றித் தானே வினாவியும் விடைதந்தும் கடைசியாக "இறத்தலே அறத்தின் ஆறு" என எண்ணித் துணிந்து தற்கொலை செய்துகொள்ளமுற்பட்டு அச்செய்கையைச் செய்துகொள்ளப்புக்க தறுவாயில்

"இராமதூதன் நான்" என்று உரத்த குரலோடு கூவிக் கொண்டு எதிர்தோன்றிய அநுமனை நோக்கி விம்மிதமுற்று மருண்ட சனகி தனக்குள் நினைப்பதாகவரும்,

அரக்கனே யாக வேறோ ரமரனே யாக வன்றிக்
குரக்கினத் தலைவ னேதா னாகுக கொடுமை யாக
இரக்கமே யாக வந்திங் கெம்பிரா னாமஞ் சொல்லி
யுருக்கின னுணர்வைத் தந்தா னுயிரிதி னுதவி யுண்டோ,

என்னுங் கவியை நோக்குவோம்.

அநுமனைத் திடீரென நோக்கிய தொடக்கத்தே சனகிக்கு இவன் ஓரரக்கனோ? அல்லது தேவனோ? அன்றி உள்ளபடியே ஓர் குரங்கோ? என்று முறையாக எண்ணம் தோன்றிற்று; ஏன் எனில் ஓர் சன்யாசிவேடம் பூண்டுவந்த இராவணனால்தான் இத்தகைய துன்பம் அடைய நேர்ந்ததை ஓயாது நினைக்கின்றாளாதலானும் அரக்கர்கள் வாழும் ஊரில் காமரூபிகளாகிய அவர்கள் பற்பல மாயவேடம் பூண்டுவந்து தன்நிலைமையைச் சோதிக்க வருதலும் கூடும் என்று திகில் கொண்டிருக்கின்றாளாதலானும், ஒருவர் தம் எண்ணத்தில் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கும் பொருளாகவே எதிர் தோன்றும் வேறு பொருட்களையும் மயங்கிக் காண்ப தியற்கையின் தன்மையாகலானும் தன்னெஞ்சில் மேலாடியிருந்த எண்ணத்தால் அரக்கனோ? என்றே நினைக்க நேர்ந்தது. ஒருகால் அரக்கன் அல்லனானாலோ, ஓர் தேவனே யாகவேண்டும் எனப் பின்கருதுவாளாயினள். முதலில் வனம் புகுந்தபோது விராதன் என்பான் ஓர் அரக்கன், இவ்வாறு முன்னே தோன்றிப் பின் ஒரு விஞ்சையனாக உருமாறின செய்தியும், தன் கருத்துட் கிடந்து நினைவுக்கு வருதலின் இவனும் தோன்றிய தோற்றம் பொய்த்துப் பின் வேறு சிறந்த உருவங்கொள்ளவும் கூடுமென நினைத்ததால், இவ்விரண்டு வகையும் இல்லையேல் உண்மைத் தோற்றமாகவே மாறாதிருக்கவேண்டும் என்பது நிச்சயமாகலின் குரக்கினத்தலைவனே தானாகுக! என்றுங்கூறி அவ்வெண்ணத்தின் ஐயப்பாட்டை மாற்றினாள். இங்குத் தோன்றும் இவ்வுருவம் மேற்கூறிய மூவகையில் ஒன்றாகவே யிருக்குமன்றி வேறிராதென்கை தேற்றமே. ஆதலின்; அவ்வுருவம் இற்

ருக, இதன் வருகையால் யானெய்தற்பாலது ஒன்று துன்பமாக லாம் அல்லது என் துன்ப பரிகாரமாகலாம் என்றும் துணிவுற்ருள். இத்துணிவினும் முன்னே கொடுமையாக என்று கூறிப் பின்பே இரக்கமேயாக என்றும் கருதினள். "பட்ட காலிலேயே படும்" என்னும் பழமொழிப்படி நாட்டை விட்டுக் காட்டிற் கால் வைத்த நாள் முதல் படிப்படியாய்த் துன்பமேதொடர்ந்து வந்ததை அநுபவித்தபழக்கத்தால் தனக்கு இன்பம்வருமென்ற நம்பிக்கையில் அவள் ஆழ்ந்தாளில்லை. துன்பம் நேராவிடின் ஓர்கால் இன்ப காரணமாகலாம் என்றும் பிற்படக் கருத நேர்ந்தது. ஆயின், அரக்கனேயாக, அமரனேயாக, குரக்கினத்தலைவனேயாக, கொடுமையாக இரக்கமேயாக எனச் சொற்களை விரித்துப் பராமுகமாக்கலின் அவளது உள் நோக்கம் இவற்றை ஓர் பொருளாகக் கொள்ளவில்லையென்றும், அஃது இவற்றினும் மிக முக்கியமான வேருென்றேயா மென்பதும் உணர்த்தப்பட்டது. அதாவது "இங்கு வந்து எம்பிரான் நாமம் சொல்லி உருக்கினன் உணர்வை; தந்தான் உயிர், இதின் உதவியுண்டோ?" என்பதேயாம்.

இங்கு என்பது இடத்தையும் அதனேடு தொடர்புற்ற காலத்தையும் உணர்த்தலால், யாவரும் உறங்கும் இந்நிசி வேளையில், யான் உயிர் துறக்க விருக்குங்கணத்தில் இராவணன் ஆணையின்றி யாவரும் சேர்தற்கொண்ணுத இவ்விடத்தில் வந்தனனே! வந்தவன் வேறு கூருமல் என்னுள்ளம்புக் குறையும் பிராணேசனது திருநாமத்தையே உச்சரித்தனனே! அவனது திருமேனியைத் தீண்டற்கும் காண்டற்கும் எக்குற்று, அருகில் கிடக்கும் இக்கடலின் பச்சையுருவத்தையும் அதிற் படர்ந்து தோன்றும் பவளத்தையும், முத்துக்களையும்கண்டு அப்பெருமானது சிவந்த வாயின் புன்முறுவலைக் கருதிச் சிறிது மகிழ்வுற்றிருப்பேற்குச் செவியிலூட்டிய அமுதம்போல அம்மொழி புகலும் உள்ளங் குளிர்ந்து உவப்பூறுகின்றதன்ருே? என்னுணர்வு ஒரு வழிப் பட்டுப் பரவசமெய்துகின்றதன்ருே? என் துன்பங்கள் வேரோடு தொலைய இன்பக் கடலின் தண்ணிய அலைகள் மீதேறி என் உள்

ளம் களித்தூஞ்சலாடுகின்ற தன்றோ? ஆஹா! இன்பத்தின் முழுப்பேறும் இன்னே பெறச்செய்த இவ்வீரன் யாவன்? அவன் செய்த அளப்பரும் நன்றி இத்துடனமைவதொன்றோ? உடலினின்றும் நீங்கப்புகும் உயிரையு மன்றோதடுத்து உய்வித்தான்? ஒருவர்க்கொருவர் செய்யும் உபகாரம் இவ்விரண்டினும் சிறந்தது பிறிது எங்குண்டு? எனப் பெரிதும் வியந்து களிப்புற்றாள். இங்கு நாம் நினைக்கத் தகுவது ஒன்று, இவ்வுலகில் எவரும் ஏனைஉயிர்க்கூட்டங்கள் பலவும் மிக விரும்பும் விருப்பங்கள் இரண்டே. அவற்றுள ஒன்று உயிர்த்திருத்தல், மற்றொன்று வாழ்க்கைகள் இன்பததையே நுகரப்பெறுதல். எத்துணைவிருப்பப் பகுதிகள் மேன்மேற் கிளம்பினும், இவ்விரண்டனுள் ஒன்றன்பாலதே யாகுமாதலின் அத்துணை உயர்வும் சிறப்புமுடைய இவ்விரண்டையும் தனக்குதவினனாதலின் இதின் உதவியுண்டோ என வினவிக் கூறினள்.

உயிரைத் தருதலைப் பிற்கூறி "உருக்கினன் உணர்வை" என முற்கூறலின், உயிர்வாழ்க்கையும் இன்ப நுகர்ச்சிக்கண் வேண்டுதலல்லது துன்பநுகர்ச்சிக்கண் வெறுக்கப்படும் இயற்கை சுட்டப்பட்டது. ஆகவே உணர்வு உருக்கத்தால் வரும் இன்பம் ஒன்றே பேரின்பமாவதென்றும் அது பெறுதுமென்னும் உயரிய நோக்கத்தாலேயே உயிரு மோம்பப்படற் குரியதென்றும், கண்டாம். உணர்வு உருக்கம், மனம் வேறோர் சிந்தனையுமறத் தனக்கின்பந்தரும் நித்தியப்பொருளை நாடி நின்று அதுவதுவாய் விளங்கப் பெறுதலோ அல்லது அப்பரம் பொருட்குத் தான் அடிமை என்னு முண்மை தேர்ந்து அதற்கேயன் புகூர்ந்து இடையீடின்றி நினைந்துருகுதலோ ஆகிய இவ்விரண்டானும் வாய்ப்பதொன்றுமென்றும் நுணுகி அறிந்துய்யுமாறு அரும் பெரும் பொருள் பொதிந்துள்ளது, இவ்வொரு செய்யுளின் பெற்றி என்க.

(தொடரும்)

---

# கருமை

## [திருக் கபசம் அவர்கள்]

(சசஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

பெண் என்ற சொல்லை வழங்குங்கால் உருவத்தை நீக்கி நினைப்பின், கருமை என்ற கருத்து வெளிப்படும் வகையை யுற்று நோக்கினேம். கரிய பெண்களை உலகிலெவரும் விரும்பு கின்றிலர் என்று சொல்கின்றனர். இதில் எத்துணை உண்மை யுண்டென்பது ஆராய்தற்குரியது. அவ்வாராய்ச்சி நிகழ்தற் கிடமிதுவன்று. கரிய நிறமங்கையரி னழகு, பற்றற்றே மென் பார் கருத்தையும் ஈர்க்கும் பான்மையதென்று கூறுவாருமுளர். நிற்க.

இயக்கம், தூக்கம் என்பன பகலிரவை முறையே கால மாகக் கொண்டு நடக்கின்றன வென்று முன் கூறப்பட்டதை ஈண்டு நினைவிற்குக் கொணர்தல் வேண்டும். பகலு மிரவும் எப்பொழுதும் ஓரளவினவல்ல. பகல் நீடித்திருக்குங் காலமு முண்டு; இரவுப் பொழுது மிகுங் காலமுமுண்டு. சித்திரை, வைகாசியில் பகல் நீண்டு இரவு குறுகுகின்றது; கார்த்திகை மார்கழியில் இரவு நீண்டு பகற்பொழுது குறைகின்றது. பக லின் நீட்டமும் கதிரவன் வடதிசை ஏகலும் (உத்தராயனம்) ஒத்து நடக்கின்றன. இவ்வாறே, இரவு மிகலும் கதிரவன் தென்திசை செல்லலும் (தக்ஷிணாயனம்) ஒன்றி நிகழ்கின்றன. இது குறித்துப் போலும் வடதிசையை நற்றிசை (புண்ணிய திசை) என்றும், தென் திசையை அழிவுதிசை என்றுங் கருதும் வழக்கம் எழலாயிற்று. இருள் மூடிக்கிடக்குங் கூற்றுவன் உலகம் தென்பாலுளது என்ற கொள்கையும் மேற் குறித்தவற்றைத் தொடர்ந்து தோன்றி யிருக்கலாம். தெற்கே செல்கின்ற ஞாயிறு அப்படியே போய்க் கொண்டிருந்தால் பகலென்பதே அற்றுப் போய் உலகம் இருள்வாய்ப் படுமென்ற அச்சம் பண்டைக்காலத்து மக்களுக்குண்டாவது இயற்கையே. ஆதலின், தெற்கே சென்ற ஞாயிறு வடக்கே மீளும் நாளை (ரதசப்தமி) அவர்கள் திருநாளாக்கி மகிழ்ந்தனர். தொன்று

ளில் தமிழுலகத்தில் வடக்கிருத்தல் என்றொரு வழக்கமிருந்த தென்று புறநானூற்றின் 65, 66-ம் செய்யுட்களால் அறிகின்றோம். ஆதலின் அந்நாளிலேயே வடதிசை மிகச் சிறப்புடைய தென்று கருதப்பட்டதென்பது தெரிகின்றது. இந்நாளிலும், தெற்கிருந்து வடக்கே போகலாம், வடக்கிருந்து தெற்கே செல்லலாகாதென்று சொல்வாருளர். குமரி முனைக்குத் தெறகே நீண்டு பரவியிருந்த தமிழ் நாட்டைக் கடல் கொண்ட பெரிய நிகழ்ச்சியின் பயனாக மக்களிவ்வாறு நினைக்கலானரோ என்று ஐயுறக் கிடக்கின்றது.

"எங்கிலத்து வித்திடினும் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுதலால்
தன்னாற்றான் ஆகும் மறுமை வடதிசையும்
கொன்னாளர் சாலப் பலர்" (நாலடியார்)

என்ற செய்யுளை நோக்க, சமணர்க்குள்ளும் தென்றிசை இழிவினதாக எண்ணப்பட்ட தென்பது வெளியாகிறது. இதற்குக் காரணம், போக பூமியை அவர்கள் வடதிசையில் வைத்ததேயாகும்.

பகற்பொழுது நீளும் உத்தராயனம் தைம் மாதத்தில் தொடங்கி ஆனியில் முடிவடைகின்றது. இருட்டு வளர்கின்ற தக்ஷிணாயனம் ஆடி தொட்டு மார்கழி வரையில் நடைபெறுகின்றது. வெளிச்சம் பெருகுகின்ற தைம் முதல் ஆனி வரையிலுள்ள ஆறு மாதங்களையும் பகற்பொழுதென்றும், இருள் மிகும், ஆடி முதல் மார்கழி வரையிலுள்ள ஆறு மாதங்களை இரவுப் பொழுதென்றுங் கொள்வோமாயின், ஓராண்டு ஒரு நாளாகின்றது. ஓராண்டு தேவர்கட் கொருநாள் என்பது பழைய கொள்கை. இக்கொள்கைக் கேற்ப, காலை நேரமாகிய தைத்திங்களில் நீடித்து நிற்குந் தொழில்களைத் தொடங்குகின்றனர்; மாலைப் பொழுதாகிய ஆடித் திங்களில் நற்காரியங்களை ஆரம்பிக்க மக்கள் அஞ்சுகின்றனர். இவ்வச்சம் தகுதியுடைத்தோ, அன்றோ? என்ற கேள்வி இவ்வாராய்ச்சிக்குப் புறம்பானது. பாரதப்போரில், தக்ஷிணாயனத்தில் காயமடைந்த ஒருவர் உத்தராயனம் வருமட்டும் உயிரை விடாது வைத்திருந்

தனர் என்று பார்க்கின்றோம். மணம் நிகழ்ந்த முதலாண்டில் ஆடித் திங்களில் மணமக்களைப் பிரித்து வைப்பது இன்றும் பின்பற்றப் படுமொரு வழக்கமாக விருக்கின்றது.

இயக்கமுந் தூக்கமும் பகலிரவைச் சார்ந்து நடக்கின்றன. ஆண்டில் ஆறு மாதம் பகலாயின் இயக்கத்திற்கேற்ற காலம் அதுவாகின்றது. இப்பகற் பொழுது தைம்மாதத்தில் தொடங்குவதால், அதற்கு முந்திய மார்கழித் திங்கள் விடியற் கால நேரமாகின்றது. ஆடியில் ஆரம்பித்த இருளோடு தோன்றுந் தூக்கம் நீங்குங் காலமிதுவே. தூக்கம் நீங்கி இயக்கந் தொடங்கும் நிலையைத் திருப்பள்ளி எழுச்சி என வழங்குவர். இங்ஙனம், இருள், குளிர்ச்சி, தூக்கம் ஆகிய பெண் தன்மைகள் ஒரு புறமாகவும், வெளிச்சம், வெப்பம், இயக்கம் ஆகிய ஆண் தன்மைகள் மறுபுறமாகவுங் கூடி நிற்கின்றன. இயக்கம் என்ற கருத்திற் கறிகுறியாக முன்னோர் எடுத்துக்கொண்டது தாண்டவமாகும். தாண்டவம் சிறப்பாய்ச் சிவனுக்குரிய தென்பது முடிந்தபொருள். இங்ஙனமே, தூக்கம் திருமாலுக்குரியது. ஆடுகின்றவனாகச் சிவனைப் பெரும்பாலுங் கூறுகின்ற வண்ணமே தூங்குகின்றவனாகத் திருமாலைக் கூறுகின்றனர். பாற்கடலிலும், ஆலிலையிலும் பள்ளி கொள்ளும் நிலையில் மாயவன் தீட்டப்படுதலை அறியார் யார்? இயக்கத்திற்குந் தூக்கத்திற்குமுள்ள தொடர்பே, ஒலிக்கும் அமைதிக்கும் உளதென்று சொன்னோம். கூத்தாடுஞ் சிவன் கையில் உடுக்கை தோன்றுவது இது பற்றியேதான். அமைதியிலிருந்து ஒலி தோன்றிற்றோ, அல்லது, ஒலிக்குப்பின் அமைதி தோன்றிற்றோ?; இயக்கம் முந்தியதோ, தூக்கம் முந்தியதோ? என்ற வினாக்களுக்கு விடை யளிக்க யானருகனல்லன். இயக்கமின்றித் தூக்கமில்லை; தூக்கமின்றி இயக்கமில்லை.

"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே"

என்ற சைவப் பெரியார் மொழி இதுபற்றி எழுந்ததே.

---

# சிவஞான போதக்கருத்து

## இரண்டாவது சூத்திரம்

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B.A.,]

(௪௩௰-ம் பக்கத் தொடர்ச்சி)

15. மேலே சொல்லிய வண்ணம் ஆசிரியர் முதலாவது சூத்திரத்தில் உலகிற்கு நிமித்த காரணங் கூறுமாற்றால் முதல்வனது உண்மை (God's Existence) கூறி, இரண்டாவது சூத்திரத்தில் முதற்காரண துணைக்காரணங்கள் கூறுமாற்றால் கட்டுகளது உண்மை (பாச உண்மை) கூறுகின்றார். ஆசிரியர் முதலாவது சூத்திரத்தில் அழித்தற் கடவுளிடம் ஒடுங்கின உலகமானது அவனிடமிருந்து ஒடுங்கியவாறே மீளத்தோன்றும் என்று கூறி, இரண்டாவது சூத்திரத்தில் அந்த உலகத்தை முதல்வன் மீளப்படைக்கும் முறைமையை (புனருற்பவத்தை)க் கூறுகின்றார்.

16. கட்டுகள் (பாசங்கள், ஐந்து ஆகும். அவை:—ஆணவம், மாயை, வினை, மாயேயம், மறைப்புஅருள்வலி (=திரோதான சத்தி) ஆகும். சுருக்கிக்கூறில் ஆணவம், வினை, மாயை எனக் கட்டுகள் மூன்றாகும். மாயேயம் மாயையிலிருந்து உண்டாகியதால் மாயையில் அடங்கும். மறைப்புஅருள்வலி (=திரோதான சத்தி)யானது ஆணவமலத்தின் வழிநின்று அதனைக் காரியப்படுத்தும் அருள்வலி ஆதலின் ஆணவத்தில் அடங்கும்.

17. இனி, கட்டு (பாசங்)களில் ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள தொடர்பு சிறிது கருதுவாம். மும்மலங்களில் ஆணவமலமே மூலமலம் என்று நூல்கள் கூறுகின்றன. ஆகமங்களெல்லாம் ஆணவத்தை மலம் என்ற சொல்லால் வழங்குகின்றன. எழுநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய சிவஞான போதங்கூட ஓரிடத்திலன்றி பிற இடங்களிலெல்லாம் ஆணவத்தை மலமென்றே கூறுகின்றது. ஆணவம், மாயை, வினைமூன்றும் அநாதியாயுள்ள மலங்கள் என்று ஓரினமாய்ச் சேர்த்துக் கூறப்பட்டாலும் ஆணவ மலத்துக்கும் மாயை வினை மலங்களுக்கும் வேறுபாடு உண்டு. அநாதி என்பது காலவரை

யறைக்குட்படுத்தி அளவை நூல(Logic)ளவைகளைக் கொண்டு பேசி முடிவு செய்ய வொண்ணாதது. ஆணவமலம் உயிருக்கு உடனுள்ள மலம் (சகசமலம்) என்றும், மாயை வினை என்பன இடைவந்த மலங்கள் (=ஆகந்துக மலங்கள்) என்றும் கூறப் படும். நெல் என்று உள்ளதோ அன்றே அதனோடு உமியுஞ் சேர்ந்து உள்ளதுபோல, உயிர் என்று உள்ளதோ அன்றே ஆணவமலமும் அதனோடு சேர்ந்து உள்ளது. உயிர் அழியாது நிலைத்த பொருளாயிருத்தல் போல அதனோடு சேர்ந்துள்ள ஆணவமலமும் அழியாது நிலைத்திருப்பது. விறகுடனே அது வதுவாய் நின்று கேடில்லாதிருக்கும் தீப்போல ஆணவமலத்தில் அதுவதுவாய் நின்று கேடில்லாதிருப்பது உயிர். விறகிலே தீயிருந்தும் அது இருப்பதாகத் தெரிய வொட்டாமல் விறகு மறைத்தல்போல உயிரிருந்தும் அது இருப்பதாகத் தெரிய வொட்டாமல் ஆணவமலம் அதனை மறைக்கும். விறகைக் கடைந்த வழி அதிலிருந்து தீவெளிப்பட்ட பொழுது அதனில் தீயிருக்கிறது என்று அறியப்படுதல் போல உயிரானது ஐம் புலன் மனம் முதலிய கருவிகளோடு கூடி அறிதலினால் அது அவைகளில் உள்ளது என்று அறியப்படுகிறது. ஆணவமலம் அழியாவிட்டாலும் உயிரினது அறிவு வேட்கைச் செயல்களை மறைக்கும் ஆணவமல வலியானது ஒளிமுன் இருள் கெடுதல் போல, முதல்வனது அருளின் முன் கெட்டொழியும். உயிரைப் பற்றியுள்ள ஆணவமலவலி படிமுறையில் தேய்ந்து தேய்ந்து முடிவில் முற்றிலும் கெடச்செய்தலே உலக வாழ்வின் பயனா கும்.

18. நோய் ஒருவனுடைய உடம்பைப் பற்றியிருக்கும் பொழுது அந்த நோயுடம்பிற்கு மருத்துவன் மருந்துகொடுத்து நோயைத் தீர்த்தல்போல ஆணவமலம் உயிரைப் பற்றிக்கொண் டிருக்கும்பொழுது முதல்வன் அந்த உயிருக்கு உடல் உட்கருவி நிலம் நுகர்பொருள்கள் (தனுகரண புவன போகங்கள்) ஆகிய மருந்தைக் கொடுத்து அவைகள் மூலமாய் அறிவு, வேட்கை, செயல்கள் விளங்கும்படிசெய்கிறான். ஆணவமலம் பற்றியுள்ள உயிரிடத்தில் முதல்வன் தனது அருள்வலியைச் செலுத்தி

உயிரை உலகபோகத்தில்அமிழ்த்தி உயிருக்குப் பக்குவஞ்சிறிது சிறிதாக முதிரும்படி செய்கின்றான். உயிருக்குத் தடையின்றி பக்குவ முதிர்ச்சி உண்டாதற்கு இன்னவை செய்பலாம் இன்னவை செய்யக்கூடாது என்ற அறமானது நோயாளிக்குப் பத்தியம் போலுள்ளது. உயிர் போகத்தில் அமிழ்ந்து வினை செய்தால் ஒரு உலகமும் உடலும் நிலையாதிருத்தல் அதற்குத் தோன்றாதிருத்தல் வேண்டும். உயிருக்குப் போகத்தில் அழுந்துதல் (involution) இல்லாது அதனுள்ளே மறைந்துள்ள வலிகள் வெளிப்படுதல் (evolution) செய்யா. (Releasing of souls energies from within) இவ்வாறு ஆணவ மலத்தின் வழி நின்று உயிர் உலக போகத்தில் அழுந்திப் பக்குவம் அடைவதற்குச் செய்யும் மறைப்பானது மறைப்புஅருள்வலி (திரோதானசத்தி) எனக் கூறப்படும். முதல்வனது அருளை (அநுக்கிரகத்தை) நேரே பெறுதற்குத் தகுந்த பக்குவம் உண்டாகும்வரை உயிருக்குமயக்கமாகிய திரிபு உணர்வைக் கொடுத்து உயிரைக் கட்டுறுத்தலால் மறைப்பு அருள் வலியும் (திரோதான சத்தியும்) ஐந்து மலக் கட்டுகளுள் ஒன்றாக வைத்துக் கூறப்படுகின்றது. விரிப்பிற் பெருகும்.

19. குயவனுக்குத் தண்ட சக்கரம் துணைக் காரணமாய் உதவுதல்போல முதல்வனுக்கு மேலேகூறிய மறைப்பு அருள்வலி (திரோதானசத்தி) துணைக்காரணமாகின்றது. முதல்வன் உயிர்களுக்கு உடல் உட்கருவி நிலம் நுகர் பொருள்களை (தனுகரண புவனபோகங்களை)க்கொடுத்தலாகியபடைப்புத்தொழிலை அவைகளுடைய நல்வினை தீவினைகளுக்குத் தக்கவாறு செய்தலினால் வினை மலமும் அந்தமறைப்பு அருள்வலி (திரோதானசத்தி)யின் வழி அவனுக்குத் துணைக்காரணமாகின்றது. நல்வினை தீவினைகள் ஒரு அரசனது ஆட்சிக்கீழ் வாழும் குடிகளுடைய நற்செயல் தீச்செயல்கள் போலும்! மறைப்பு அருள்வலி (திரோதானசத்தி) அந்த அரசனுடைய ஆணைபோலும்.

20. மண்ணிலிருந்து மட்குடம் செய்யப் படுதல் போல மாயையிலிருந்து உயிர்களுக்கு உடல், உட்கருவி, நிலம் நுகர்

பொருள்கள் (தனுகரணபுவன போகங்கள்) முதல்வனால்படைத்துக் கொடுக்கப்படுகின்றன. ஆதலின் மாயை முதற்காரணமாகின்றது. மாயையானது வினைசெய்தற்கும் வினைப்பயன் தங்குதற்கும் பற்றுக் கோடாயுள்ளது. மாயை மலமும் வினைமலமும் ஆணவமலம் போல அநாதியாயுள்ளன என்றாலும் அவைகள் உயிர்கள் தனி நிலை (கேவல நிலை)யிலிருந்து உடல் நிலை (சகல நிலை)யை அடையும்பொழுது முதல்வனாற் கூட்டப்பட்டு வந்து சேர்ந்தன ஆதலால் அவைகள் இடைவந்த மலங்கள் (ஆகந்துக மலங்கள்) என்று கூறப்படும். மாயை வினை மலங்களிரண்டும் இவ்வாறு உயிரை இடையிலே வந்து கூடின காலமுதல் அது தூய்மை நிலை (சுத்த நிலை) அடையும் வரை அதனை விட்டு நீங்காமல் ஆற்றுப்பெருக்கில் முன்னேவந்த நீரோடிப் போகப் பின்னேயும் நீர் ஒழியாமல் வந்துகொண்டிருத்தல்போலத் தொடர்ந்து வருதலால் (பிரவாக நாதியாயுள்ளன) என்று கூறப்படும். மாயா காரியங்களாகிய உடல், உட்கருவி, நிலம் நுகர் பொருள்கள் (தனுகரணபுவன போகங்கள்) ஆணவ மல இருளிற் கிடந்த உயிருக்கு அந்த இருளை ஒருபுடை (ஏகதேசமாய்) நீக்க விளக்குப் போல உதவுவன. அப்படி யிருந்தாலும் எங்கும் நிறைந்துள்ள ஆணவமலமானது அவைகளினூடும் நிறைந்து நிற்றலால் மாயையானது சுட்டி அறிதலாகிய திரிபு அறிவையும் உயிருக்குப்பாய்க்கின்றது. ஆதலின் மாயையும் ஒரு மலமாக வைத்துக் கூறப்படுகின்றது.

21. மேலே கூறியவாறு நிமித்த காரணனாகிய முதல்வன் செய்கின்ற புதிய படைப்பு முறைமையில் (புனருற்பவத்தில்) ஆணவ மலத்தின் வழி நின்று உதவுகின்ற முதல்வனதுமறைப்பு அருள்வலியும் (திரோதான சத்தியும்) அதன் வழித்தாய் உயிர்களுடைய இருவினைகளும் அவனுக்குத் துணைக் காரணங்களாகவும், உடல், உட்கருவி, நிலம் நுகர்பொருள்கள் (தனுகரணபுவன போகங்கள்) நான்கையும் படைத்தற்கு மாயை அவனுக்கு முதற்காரணமாகவும் அமைந்து ஒன்றுக்கொன்று தொடர்புபட்டு மும்மலங்களும் வந்து பொருந்துதலை அறிந்துகொள்க.

22. இனி இவ்வாறு கட்டுகளது உண்மை (பாச உண்மை)

யைக் கூறும் இரண்டாவது சூத்திரத்தில் முதல்வனது இலக்கண இயலிலே கூறத்தக்க முதல்வனுடைய இலக்கணத்தைக் கூறுதல் நுதலிய பொருட் புறம்பு (irrelavant to the subject taken up) ஆகாதோ என்றால் ஆகாது. காரணம் கூறுதும், கட்டுகள் உயிரில்லாதவைகள் அவைகளில் எதுவும் முதல்வனால், இயக்கப் பட்டாலன்றித் தனித்தியங்காது. இரண்டாவது சூத்திரத்தில் ஆசிரியர் கட்டுகளது உண்மையை (பாச உண்மையை)க்கூற எடுத்துக்கொண்டாலும் அவைகளை முதல்வன் எவ்வாறு இயக்கி உயிர்களுக்குப் பயனுண்டாகும்படியான தொழிலைச் செய்கின்றான் என்று கூறினால் அல்லாமல் கட்டுகளது உண்மை அறியப் படமாட்டாது. ஒருவனிடத்தில் யாதாமொரு பொருளிருந்தாலும் அந்தப் பொருளை அவன் தனக்கும் பிறர்க்கும் பயன்படுமாறு வழங்கப்படுதலினால் அன்றோ அவனிடத்து அப்பொருளினது உண்மை தெரியப்படும். படைப்பு முறைமை கூறுங்கால் கூறப்படும் மாயையானது முதல்வனுடைய உடைமையாயும் மறைப்பு அருள்வலி (திரோதானசத்தி) அவனுடைய பண்பாயும் அமைந்து அவைகளைக் கூறுதலானது அவனுடைய பொது இலக்கணத்தின்பால் இடை நிகழ்ச்சியாக (incidentally)ப் படுகின்றதே அன்றி ஆசிரியர் அவ்விலக்கணத்தை மேலீடாக வைத்து இங்கே கூறவில்லை.

23. இரண்டாவது சூத்திரத்தையும் அதன் தொகைப் பொருளையும் நூலிலே ஓதி அறிந்துகொள்க.

24. இரண்டாவது சூத்திரம் நான்கு அதிகரணங்களை உடையது. அவற்றுள் முதலாவது அதிகரணத்தை இனி விளக்கப் புகுவோம்.

---

## பிழைதிருத்தம்.

### சிவஞான போதக் கருத்து.

சிலம்பு அ. பரல் எ.

இரண்டாவது.

| | | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| பாரா க. | வரி ௩௫ | பொருந்து முண்மை | பொருந்து முறைமை |
| பாரா ௫. | வரி ம | காரணமுன் வழி | காரணமுள் வழி |
| பாரா கக. | வரி ௪. | (educationalist) | (educationist) |

# தெளிவுடைமையும் மடியின்மையும்

[காழி. சிவ. கண்ணுசாமி, B. A.]

செல்வமே சிறந்த படைக்கலம் என்பது வழக்காறு. இஃது ஒருபுடை ஏற்றுக் கொள்ளற்பாலதே. ஆயினும் அறிவும் அத் தகைத்தே என்பதையும் ஏற்றுக்கோடல் வேண்டும். எனினும் இவை இரண்டினுங்கும் மதுவருந்தாத் தெளிவுடைமையும், பேருழைப்பும், மடியின்மையுமே ஒருவற்கு உண்மை வலிவளிக் கும் பெற்றிய. என்னை? இம்மூன்று மற்ற அறிவொன்றுமே சாலச்சிறவாது ஒழியுமாகலின். செல்வத்தால் ஒருவன் எய்தும் வலிமை உள்ளீடற்ற விலங்கின் ஆற்றலை யொத்ததேயாகும். செல்வத்தாற் பெறுவது துணைவலியும் படைவலியும், இற்றை நாட் செய்தித்தாள்வலியும் மற்றுமிவை போன்றவையுமேயாம். ஆனல், தெளிவுடைமை, உழைப்பு, மடியின்மை ஆகிய இச் சீரிய பண்புகள் தீர்ந்த அறிவேயன்றி மிதமான அறிவுடன்கூடி வினைப்படுங் காலத்தும் ஒருவற்குப் பெருஞ் சுட்டளிக்க வல் லனவாகின்றன. மேலும் அப்பண்புகளால் ஒருவன் எய்துமாற் றல் கண்கூடாகச் சிறக்கக் காணப்படுவதொன்றும்.குடிகாரனும், மடிகாரனும், இடம்விட்டு இடம் நகர என் செய்வேன் என் றேங்கும் பொதியனையானும், தெளிவும் சுறுசுறுப்பும் உடை யோர் முன் வெள்கி மாழ்கின்றனர். இஃதொரு புறமாக, உழைப்பினல் வரும் உறுதியைக் கைமேற் காட்டவல்ல திறல் வாய்ந்தவர்களையே கருமமேற் கொண்டார் தெரிந்து கொள்கின் றனர். தன்னலங் கருதிய வொருவனுக்கு உயர்வு தாழ்வு என் பது இல்லை. எடுத்த கருமத்தை எத்துறை முயன்றால் முடிக்க லாம் என்று சூழ்வோரை அவன் நாடுவதில்லை; எத்துறை முயன்றேனும் முழக்கம் ஆற்றல் வாய்ந்த வரையே நாடுகின் றான்.

இனி, மடிமிகுந்தும், குடிமிகுந்தும் உள்ளார் பலர் அறி வாற்றலிற் சிறந்து விளங்குவதைக் காண்கின்றோம். எனினும் அவ்வாறு அறிவாற்றல் வாய்ந்திருப்பது கருதி அவர்களை ஒரு கருமமுளுற்ற தெளிந்த அறிவுடைய எவனும் துணைகொளத்

துணியான். எனவே, பெருஞ்சுட்டு வேண்டின் குடியை யொழித்துத் தெளிவைக் கொள்க, உழைப்பைக் கொள்க, கழப்பைத் தள்ளுக, மடியைத் தள்ளுக, சுறுசுறுப்பை மேற்கொள்க.

---

# திருஞான சம்பந்தர்-செந்தமிழ் நாடகம்.

[திரு. S. முத்துக்குமாரசாமியா பிள்ளையவர்கள்]

(கூகஎ-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆறுவது அங்கம்—நான்காம் காட்சி.

நமது பிள்ளையார் வாயைத் திறந்தாரோ இல்லையோ, உடனே, இருந்த அமணர்கள் யாவரும், எழுந்து, வள்ளலாரைச் சூழ்ந்து கொண்டு ஒரே கூக்குரலாகக் கோபாவேசத்துடன் பிள்ளையாரை நோக்கி—

"என் சொன்னீர்— என் சொன்னீர்"

மங்கையர்க்கரசி :—(இவர்கள் நிலையினைக் கண்டு உள் நடுங்கி மன்னரை வணங்கி), என் உயிர் இறைவ,

இப்பிள்ளையார் எளியர், சிறிய வடிவினர். மற்றமணரோ, எண்ணிலார், உமது நோயை வள்ளலார் தீர நல்கும். பின், இவ்வமணர், வல்லராயின் வாது செய்யட்டும். முதலில், நாம் துன்பம் நீங்கின பின்னன்றோ வாது போடவேண்டும்.

மன்னவர் :—என்னுயிர்க் காதலி, (கையமைத்து) வருந்தற்க. (என்று கூறிவிட்டுப் பின் அருகரை நோக்கி)

அருகரே ;

வாதென் கொல்? நீரும், சிவனன்பராம் இவரும், நீங்கள் தேறிய தெய்வத் தன்மை என்னிடம் காட்டுங்கள்.

திருஞானசம்பந்தர் :—(அஞ்சிய அம்மையாரை நோக்கி). நற்றவத் தேவியாரே,

நான் "பாலரு வாயர்" என்று அஞ்சவேண்டாம். இவ்வமணர்கள் ஒரு நிலையில்லாதவர்கள். இவர்களுக்கு யான் எளியேனல்லேன்.

திருச்சிற்றம்பலம்.

"மானினேர் விழிமாதராய் வழுதிக்குமா பெருந் தேவி கேள்
பானல்வா யொருபாலன் ஈங்கிவ னென்றுநீ பரிவெய்திடேல்
ஆனைமாமலை ஆதியாய இடங்களிற் பல அல்லல் சேர்
ஈனர்கட் கெளியே னலேன் றிருவால வாயர னிற்கவே."

திருச்சிற்றம்பலம்.

மன்னவர் :—(மகிழ்ந்தான்) இருவீரும் என்னோய் தீருங்கள். பின் மற்றது.

அமணர்கள் :—அரசே, நாங்கள் உமது இடப்பாகமுற்ற நோயைத் தீர்ப்போம். நாங்களே முதலில் போக்குகின்றோம். (என்று தங்கள் கைப்பீலிகளால் "அருகனே காவாய்" என்று கூறித் தடவினர்.—நோய் மிகுந்தது.)

மன்னவர் :—(நோய் தாங்கமுடியாது, பிள்ளையாரைப் பார்த்தார்).

திருஞானசம்பந்தர் :—(குறிப்பறிந்து திருநீறு கையிற்கொண்டு திருப்பாசுரம் அருளி வலப்பால் பூசினார்).

திருச்சிற்றம்பலம்.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான்
திருநீறே".

திருச்சிற்றம்பலம்.

பாசுரம் கூறி நீறு பூசவும், வெப்பு நீங்கி, இடப்பாலுற்றது. மன்னன் பொறுக்க முடியாத துன்பெய்தினன். அம

னர்கள் கைப்பீலி தீந்தது. நெருங்க முடியாது தள்ளி நின்றார்கள். திகைத்தார்கள். செயலற்று நின்றார்கள்.

மன்னவர் :—ஐயகோ,

இடப்பால், தீ, தாங்க முடியவில்லையே! வலப்பால் இன்ப முற்றேன். இடப்பால் துன்புறுகின்றேன். வீடும், நிரயமும் ஒருங்கே துய்க்கின்றேன். பாலும் நஞ்சும் ஓரிடத்தே கண்டேன்.

தீத்தொழில் அருகரே,
நீவிர் தோற்றீர். என்னைவிட்டுத் தூர ஓடுங்கள்.
(வள்ளலாரைப் பரிந்து நோக்கி)
எனை உய்யக் கொண்ட வள்ளலே!

இந்த, இடப்பால் வெப்பும், அடைய நீங்க, அருள் செய்ய வேண்டும்,

திருஞானசம்பந்தர் :—“மன்னே! அஞ்சல் ஒழிக. இறையருளால் இதோ தீர்க்கின்றேன்.

(என்று மறுபுடையும் திருநீறு பூசித்தீர்த்தல்).

மங்கையர்க்கரசியார் :—(மன்னர் நோய் நீங்கி எழுந்ததைக் கண்டதும் பிள்ளையார் கழலடி பணிந்து).

எங்கள் உயிர் ஈந்த எந்தாய்,

இன்றே பிறந்த பேறு பெற்றனம். மேன்மையும் உற்றோம்.

குலச்சிறையார் :—(அடிவணங்கி)

சிவனார் மகனாரே,

எங்கள் மன்னரும் உய்ந்தனர். எங்கள் நாடும் உய்ந்தது. நாங்களும் பெறலரும் இன்பம் எய்தினோம்.

மன்னவர் :—(கைதலை குவித்து, நின்று வணங்கி)

எம்பெருமானே,

யானும் உய்ந்தேன்?

ஆறுவது அங்கம்—ஐந்தாம் காட்சி.

இடம் :—அரண்மனே. காலம்—பிற்பகல்.

நடர் :—மன்னவர், திருஞான சம்பந்தர் குலச்சிறையார், மங்கையர்க் கரசியார், சமணர்கள் முதலியோர்.

அமணர்கள் இங்கு நடந்தவற்றைப் பார்த்ததும்,

அமணருள் ஒருவர்:—அடிகளே,

இன்று நடந்ததைப் பார்த்தீரா? ஏது? நம்மால் இவனேடு "தர்க்கஞ் செய்து" வெல்ல முடியாது போலுமே.

மற்றவர் :—ஆமாம். நானும் அப்படித்தான் எண்ணுகிறேன். ஒன்று செய்யலாம். தீயிலும் தண்ணீரினும் தர்க்கஞ் செய்யக் கூப்பிடுவோம். (தொடரும்)

---

திருவாளர்

# சிதம்பர புன்னேவனநாத முதலியார் அவர்கட்கு

நெல்லே, சி. எம். கல்லூரி மாணவர்

வாழ்த்து.*

சேந்தமிழா சிரியசிதம் பரபுன்னே வனநாத திருநேல் வேலி [னர்
யிந்துகலா சாலேகூ டலிற்சேளராட் டிரஹைஸ்கூ லிருந்து பின்
வந்துநேல்வே லியில் சி. எம். கல்லூரித் தமிழ்த்தலேமை முறையே
[வாய்ந்தேஞ்
சிந்தையேலா மகிழக்கற் பித்தாய்க் கியாங் கைம்மாறு செய்வ
தேன்னே!

---

[* இவ்வாழ்த்து, நமது செல்வி இதழாசிரியர்களி லொருவரும், தென்னிந்திய தமிழ்ச் சங்க அமைச்சரும், நமது கழக டைரெக்டருமாகிய திருவாளர். பு. சி. புன்னேவனநாத முதலியாரவர்கள் 1923-ம்ஷு அக்டோபர் முதல் 1930 ஜுன் வரை தலேமைத் தமிழாசிரியராய் வேலே பார்த்த திருநெல்வேலி C. M. கல்லூரி மாணவர்களால் 22-8-30-ல் ஷை கல்லூரித் தலேமையாசிரியர் திரு. J. அன்புடையான் B. A., L. T., அவர்கள் தலேமையில் நடாத்திய சிறப்புக் கூட்டத்தில் வாசித்து வழங்கப் பெற்றது. அவ்வமயம் ரூ 40 பெறுமான வெண்பொற்கலங்கள் பரிசளிக்கப் பெற்றன என்பது குறிப்பிடத்தக்கது.]

**படிமுறை தவறாப் பான்மையோய் !**

இதிற்பெரிய கல்லூரி யினிற்சேர்ந்த தாலெமைநீ விட்டகன்ற துன்புடையே மாயினுநின் உயர்முறையை நினைந்தேம்யாம் இன்புடையே மாகியுனக் கன்புடையே மென்பதையு மியம்பு கின்றேம்.

**பாலர்கள் பாலன !**

கற்கும் சிறார்க்குரிய புத்தகங்கள் கற்றார்களுவப்புற நீவரைந்தமைக்குக் களிப்புறார் யார் ?

**அருந்தமிழ்த் தொண்ட !**

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பினின்று செந்தமிழ்த் தேர்வுப் பரீட்சை முதலியன நடாத்தியும், மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சகராக நெடுநாளிருந்தும், சிதம்பரம் யுனிவர்சிட்டி ஓரியண்டல் வித்வான் பட்டப் பரீட்சகராயும் தமிழ்த் தாய்க்கு நீ செய்யும் தொண்டினையாம் எடுத்துரைக்கும் தகுதியேமா ?

**பேரன்புள்ளாய் !**

எம்மாலியன்ற உபசாரம் சிறிதெனினும் ஏற்குமா பிரார்த்திக்கின்றேம். அன்பின் அளவையே கோடல் பெரியார் தங்குணமன்றோ ?

**பெருந்தகையீர் !**

நின்பெருமை முற்றறிய வல்லே மல்லேம். நிற்குமென் மேலும் தமிழ்த்தொண்டு புரிய அரோகதிடகாத்திரமும் பிரபல பெரும்பாக்கியமும் தீர்க்காயுளுந் தந்தருளுமாறு எம்பெருமான் திருவடிகளிறைஞ்சுகின்றேம்.

திருநெல்வேலி,
22—8—1930.

இங்ஙனம்,
சி. எம். கல்லூரி மாணாக்கர்.

---



திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரியசுவாமிகள்.

ஓம
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு அ } மெய்கண்டான்யாண்டு-எாஎ புரட்டாசித் திங்கள் 1930ஆு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ { பரல் கூ

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசனது
உருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை யயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே.

இந்தத் தேவாரப்பாட்டு நாடோறும் சிவவழி பாட்டிற் றீவளர்த்து வழிபடுபவர்களைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

நாடர்=(நமது) நாட்டிலுள்ளவர்கள்;

எரிபெருக்குவர்=சிவ வேள்வித் தீவளர்க்கிற கருமத்தைத் தவறாமற் செய்வார்கள்;

அவ் வெரி=(ஆனால்) அந்தத் தீயானது;

ஈசனது உருவருக்கமதாவது=நம்மை ஆளும் சிவபிரானது வடிவத்தினுடைய இனமாயிருத்தலை,

வருக்கம் - இனம், எட்டுவடிவங்களில் தீ ஒன்றாதலால் இனம் என்றார். அது பகுதிப் பொருள் விகுதி.

உணர்கிலார்=அறிய மாட்டார்கள்

அரி அயற்கு அரியானை=திருமாலும் அயனும் அறிய முடியாத சிவபிரானை

அயர்த்துப் போய்=மனதில் நினையாமல் மறந்து (வாழ்நாளை வீணாய்க் கழித்து)

நரிவிருத்தமது ஆகுவர்=இறந்தபின் தங்கள் உடல் நரிகளுக்கு விருந்தாகும்படி செய்வார்கள்.

விருந்து என்பது விருத்து என வலித்தல் விகாரம் பெற்று அதனோடு அம்சாரியை சேர்ந்தது. அது-பகுதிப் பொருள் விகுதி.

ஊனக்கண்ணாற் பார்க்கக் கூடியதாயும், இருளை நீக்கும் ஒளியோடு கூடியதாயும், அழுக்கு இல்லாததாயிருத்தலுடன் தன்பாலிட்டஎவ்வகை அழுக்கையும் விலக்கித் தூய்மை செய்யும் தன்மை உடையதாயும், சிவத்தினது செந்நிறமும் சத்தியினது நீலநிறமும் ஒருங்கே உடையதாயும், எங்கும் நிறைந்துள்ளதாயும், ஆக்குதல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையும் உடையதாயும், மண்ணும் நீரும் போலொத்த தடிப்பான பொருளல்லாமலு மிருப்பதோடு வளி (=வாயு), வெளி (=ஆகாயம்) ப் பொருள்களைப் போலக் கண்ணுக்குப் புலப்படாத நுண் பொருளல்லாமலிருப்பதாயும், வேண்டுங்கால் எந்த இடத்திலாவது வளர்க்கப்படும் தன்மையையுடையதாயும் உள்ள இயற்கைப் பொருளாயிருத்தலின் தமிழ் முன்னோர்கள் தாங்கள் வணங்கும் அரு உருவப்பொருளாகிய சதா சிவக்கடவுளுக்கு அறிகுறியாக ஓமத்தீவளர்த்து வழிபாடாற்றி வந்தார்கள். சிவதீக்கைபெற்ற பார்ப்பனர்களும் அவ்வாறேகடவுளை ஓமகுண்டத்தில் தீ வளர்த்து வழிபட்டு வந்தார்கள். இவ்வாறு வளர்க்கப்படும் தீயை "வேதவேள்வி" என்றும், "எரியோம்பல்" என்றும்' "தீத்தொழில்" என்றும், "சிவாக்கினி" என்றும், சிவபெருமானை 'ஓமத்தலைவன்' என்றும், 'யாகாதிபதி' என்றும், 'யஞ்ஞபதி' என்றும் தமிழ் மறைகளும் வேதாகமங்களும் கூறுகின்றன. இவ்வாறு தீயில் கடவுளை வழிபட்டு வந்தவர்கள் பிற்காலத்தில் அதன் உண்மையை மறந்து பார்ப்பனர்களும் பிறரும் தீக்கடவுளையே வணங்கி அவன் மூலமாய்ப் பிறதேவர்களுக்கு உலகநுகர் பொருள்களை விரும்பி அவி கொடுத்து வந்தார்கள். பயன் குறியாது செய்யப்பட்டு வந்த முழுமுதற் கடவுள் வணக்கமானது உலகப்பயன் குறித்துச் செய்யப்படும் தேவர்கள் வணக்கமாக அத்தீத்தொழில் (அக்கினி காரியம்) மாறியது. ஆடுகளைக் கொன்றும் பார்ப்பனர்கள் வேள்விசெய்து அதன்புலாலை உண்டுவந்தார்கள். இப்பொழுதும் செய்து வருகின்றார்கள். இவ்வாறு செய்யப்படும் தீத்தொழிலுக்கு (=அக்கினி காரியத்திற்கு) இரங்கி மனம்வருந்தித் திருநாவுக்கரசு சுவாமிகள் இத்தேவாரப் பாட்டை அருளிச்செய்திருக்கிறதாகத் தெரிகிறது. M. V. நெல்லையப்பபிள்ளை.

# மணிவாசகரும், கண்ணப்பரும்

சகூ௰-ம் பக்கத் தொடர்ச்சி.

[தமிழ்ப்புலவர் திரு. அ. மு. சரவண முதலியாரவர்கள்]

அடிகளருளிய திருவாசகத்தின்கண் இங்கு எடுத்துக் கொண்ட 'கண்ணப்பன்' என்னும் பாட்டைத்தவிரக் கண்ணப்பரைப் பற்றிப் பிறிதொரு பாடலுங் காணப்படுகிறது. அது,

"பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடிவாய்க் கலசமூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவாதோ ணோக்கமாடாமோ."

என்பது. ஆனால் இது முன்னையதுபோலன்றி அந்நாயனாரின் வரலாற்றினைச் சுருக்கிக் கூறுவதாக இருக்கிறது.

இங்ஙனமே சமய குரவராகிய ஏனைய மூவரும், மற்றத் திருமுறை ஆசிரியராகிய பலரும் பெரும்பாலும் நாயனார் வரலாற்றைக் குறிப்பனவாகவே பாடியிருக்கின்றனர்; அவை,

வேயனையதோ ளுமையோர் பாகமது வாகவிடையேறி சடைமேல்
தூயமதிசூடி சுடுகாடில் நடமாடிமலை தன்னை வினவில்
வாய்கலசமாக வழிபாடுசெயும் வேடன் மலராகுநயனம்
காய்கணையினாலிடந் தீசனடிகூடு காளத்திமலையே.'

(திருஞான சம்பந்தர்)

"நானலைக் குமவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத்தேவு வைத்தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயற்றென் குடித்திட்டையே." (ஷை)

"கண்ணனு நான்முகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயேந்திரருங்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலாரூராதி யானைக்காவே." (ஷை)

"காப்பதோர் வில்லுமம்புங்கையுடை யிறைச்சிப்பாரம்
தோற்பெருஞ் செருப்புத்தொட்டுத் தூயவாய்க்கலசமாட்டித்

தீப்பெருங்கண்கள் செய்யகுருதி நீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக் கொண்டார் குறுக்கைவீரட்டனரே.''
(திருநாவுக்கரசர்)

"குவப்பெருந் தடக்கைவேடன் கொடுஞ்சிலை இறைச்சிப்பாரம்
துவர்ப்பெருஞ் செருப்புத்தொட்டுத் தூயவாய்க்கலசமாட்ட
உவப்பெருங் குருதிசோர வொருகணை யிடந்தங்கப்பத்
தவப்பெருந்தேவு செய்தார் சாய்க்காடு மேவினாரே." (ஷை )

"கண்ணப்பன் கண்ணப்பக் கண்டுகந்தார்
கழிப்பாலைமேய கபாலப்பனூர்." (ஷை)

"காலாலக்காலனையுங் காய்ந்தான் கண்டாய்
கண்ணப்பர்க்கருள்செய்த காளைகண்டாய்." (ஷை)

"கணைகொள் கண்ணப்பனென்றிவர் பெற்ற
காதலின்னருளா தரித்தடைந்தேன்."
(திருநாவலூர்)

"கற்ற சூதனற்சாக்கியன் சிலந்தி கண்ணப்பன்." (ஷை

"எறிந்தசண்டியிடந்த கண்ணப்பன்." (ஷை)

"கடியார் கணம் புல்லர் கண்ணப்பர்."
(ஒன்பதாந் திருமுறை, பூந்துருத்தி நம்பிகாடநம்பி)

"கானவேடுவன்கண் பரிந்தப்ப வானநாடு மற்றவர்க்கருளியும்."
(11-ம் திருமுறை, நக்கீரர்)

"நேசத்தால், வாயினீர் கொண்டு மகுடத்துமிந்திறைச்சி
யாயசீர்ப் போனகமாவாங் கமைத்துத்—தூயசீர்
கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து
விண்ணுலக மீந்தவிறல் போற்றி." (ஷை)

"சென்று செருப்புக்காலால் செல்லமலர் நீக்கிச்
சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச்—சென்றுதன்
கண்ணிடந் தன்றப்புங் கருத்தற்குக் காட்டினான்
கண்ணிடந் தன்றப்பாமைப் பார்த்து."
(ஷை பாணதேவ நாயனார்)

ஏவு செய்மேரு தடக்கை யெழிற்றில்லை யம்பலத்து
மேவு செய்மேனிப் பிரானன்றி யங்கனர் மிக்குளரே
காவு செய்காளத்திக் கண்ணுதல் வேண்டும் வரங்கொடுத்துத்
தேவு செய்வான் வாய்ப்புன லாட்டிய திறல்வேடுவனே."
(ஷை நம்பியாண்டார் நம்பி).

"கல்லெறிந்தானுந்தன் வாய்நீர் கதிர்முடிமேலுகுத்த
நல்லறிவாளனு மீளாவழிச்சென்று நண்ணினரே." (ஷ)

என்பன.

இவையன்றிப் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தில் அவர் வரலாறு விரித்துக் கூறப்படுகிறது. இவையன்றிப் பதினோராந் திருமுறையில் 'திருக்கண்ணப்பதேவர் திருமறம்' எனப் பெயரிய இரண்டு, *நக்கீரர் தேவராலும் கல்லாடதேவராலும் இயற்றப்பட்டுள்ளன. அவற்றிலும் அவர் வரலாற்றுச் சுருக்கமே காணப்படுகிறது. எனவே, அவர் வரலாறுதன்னைக் கூறுவார்க்கு ஆண்டவன் திருவடிக்கண் அன்பை விளைவிப்பதில் வல்லதெனக் கருதியே அதனை விரும்பி அந்நெறியிற் சென்ற அறிஞர் அனைவரும் அதனைக்கூறி அக மகிழ்ந்தாரென்பது உய்த்துணரத்தக்க தொன்றாகும். இதனை

"வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்
கேளார் கொலந்தோ கிறிபட்டார்—கீளாடை
அண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுண்ணின்ற
கண்ணப்ப ராவார் கதை."

என்னும் நக்கீரதேவர் நல்வாக்கும் வலியுறுத்துதல் காண்க.

இன்னும் தொண்டர் சீர்பரவுவார் அந்நாயனாரின் இரண்டாவது நாள் வேட்டையைக் கூறத்தொடங்கி, அன்பிலழுந்திக் கூறிய,

"இவ்வண்ணம் பெருமுனிவரேகினாரினியிப்பால்
பைவண்ணக்கருங் குஞ்சிவனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக்கான் வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறமொழிவேன் தீவினையின் திறமொழிவேன்."

என்னும் செய்யுளும் அக்கருத்தை ஆதரிப்பது காண்க. கல்லாடதேவர் 'திருக்கண்ணப்பதேவர் திருமற'த்திறுதியில்,

*இவர் சங்ககாலத்தவரென்றும், அல்லரென்றும் வேறுபட்டகருத்துக்களுண்டு; அவரவர் கூறும் ஆதாரவுகளைத் தமிழ்ப்புலமை சான்ற திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தங்கூர்த்தமதியாற் பன்னாளாய்ந்ததின் பயனாக வெளிவந்திருக்கும் 'நக்கீரர்' என்னும் நூலிற் பரக்கக் காண்க.

"திருவேட்டுவர் தந்திருவடிகைதொழக், கருவேட்டுழல்வினைக் காரியங்கெடுமே" எனக் கூறியதூஉம் இங்குக் கருதத்தக்க தாகும். "தித்திக்குந் திண்ணப்பனுஞ் சிறுபேர்" என நக்கீரர் நவின்றது அவர் அந்நாயனாரின் பிள்ளைத் திருநாமமாகிய 'திண்ணனார்' என்பதில் ஈடுபட்டு எண்ணிஎண்ணிச் சுவைத்துமகிழ்ந் தமையை விளக்குதல் காண்க.

இங்ஙனம் பன்னிரண்டு திருமுறைகளில் பத்தாவது நீங்க, ஏனையவற்றிலும் பிறநூல்களிலும் கண்ணப்பர் புகழ் மலிந்து கிடத்தல், திருத்தொண்டத் தொகையில் வரும்.

'கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பன்' என்பதற்குக் 'கலைக ளனைத்திலும் மலிந்துகிடக்கும் புகழினையுடைய கண்ணப்பர்' எனக் கொள்ளும் பிறிதொரு பொருளுக்கு ஆதரவாதல்காண்க.

(தொடரும்)

---

## சைவ சமயம்

[இது யாழ்ப்பாணம் நல்லூர். ஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்களால் பிரபவஸூ மாசிமீ கவ சென்னையில் திருத்தொண்டை நாட்டுப் பதிபுண்ணிய பரிபாலன சபையினது இரண்டாங் கூட்டததில் தலைமையுரையாக நிகழ்த்தப் பெற்றது.]

"இறைவனூற் பயன்"

தமக்கினிமை வஞ்சகரே தாந்தமுதற் சாரார்
தமக்கினியார் தம்முதற் சார்ந்தார்.

"இத்திருக்குறள் தமக்குத் தாம் வஞ்சகராவார் இவரென் பதும் இனியராவார் இவர்" என்பதும் உணர்த்துகின்றது. (இதன் பொருள்) தமக்கு இனிமை தாம் வஞ்சகர் தம்முதற் சாராரே—தங்களுக்கு இனிமையாயுள்ளதிலே தாங்களே வஞ்ச கர்களாயுள்ளவர்கள் தங்கள் நாயகரை அடையாதவர்களே;— தமக்கு இனியார் தம்முதற் சார்ந்தாரே—தங்களுக்கு இனியர் களாயுள்ளவர்கள் தங்கள் நாயகரை அடைந்தவர்களே. எ—று

தாமென்றது பசுக்களாகிய ஆன்மாக்களை, தம்முதலென்றது பசுபதியாகிய சிவபெருமானை. இனிமை இன்பம்.

துன்பத்தின் வெறுப்பும் இன்பத்தில் விருப்பும், ஆன்மாக்களுக்கு இயற்கையேயாயினும், அவர்கள் இன்பம் இது துன்பம் இது துன்பத்தினின்று நீங்கி இன்பம் பெறு நெறி இது என உள்ளபடி அறிதற்கும் துன்பத்தினின்று நீங்கி இன்பத்தைப் பெறுதற்கும் சுதந்திர சக்தியுள்ளவர்களல்லர். சுதந்திரர் சிவபெருமானொருவரே. ஆன்மாக்களோ பரதந்திரர்கள். ஆன்மாக்கள் இவ்வுண்மையையறிந்து சிவபெருமானது திருவருள் வழிபட்டொழுகினன்றி இன்பதுன்பங்களை அறிதலும் துன்பத்தினின்று நீங்கி இன்பத்தைப் பெறுதலும் இயலாவாம். நித்தியமாகிய பேரின்பம் முத்தி யின்பமொன்றே, மற்றையின்பங்களெல்லாம் முட்பூவிற்றேன்போல்வனமாம்.

சிவபெருமானை அடைதலாவது அவரை விதிப்படி சிரத்தையோடு வழிபடுதல். அவ்வழிபாட்டுக்கு மிகமேலாகிய கருவி சிவஞானம். இவ்வழிபாடே முத்திக்கு வாயில். சிவஞானம் ஏழுபகுதிகளையுடையது. அவையாவன அத்துவசுத்தியாகிய நிருவாண தீக்ஷை பெற்றுக்கொண்டு சிவஞான நூல்களாகிய சைவசித்தாந்த சாத்திரங்களை ஓதல், ஓதுவித்தல், அவற்றின் பொருளைக் கேட்டல், கேட்பித்தல், கேட்டதைச் சிந்தித்தல், சிந்தித்ததைப் பின்பு தெளிதல், தெளிந்தபடியே அதன்பின் நிட்டைகூடல் என்பனவாம்.

இச்சிவஞானத்துக்கு ஏதுக்கள் சிவாகமத்தில் விதிக்கப்பட்ட சரியை கிரியை யோகங்களாகிய பதி புண்ணியங்களாம். பதிபுண்ணியமெனினும் சிவபுண்ணிய மெனினு மொக்கும். ஸ்மிருதியில் விதிக்கப்பட்ட யாக முதலியவை பசுபுண்ணியங்களாம். ஞானம் யோகமின்றியும், யோகம் கிரியையின்றியும், கிரியை சரியையின்றியும் சித்தியாவாம், அது "விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞானநான்கு—மரும்பு மலர் காய்கனிபோலன்றோ பராபரமே" என்னுந் தாயுமான சுவாமி பாடலாலறிக.

சரியை சிவசாலோக்கியத்தையும், கிரியை சிவசாமீப்

பியத்தையும் யோகம் சிவசாரூப்பியத்தையும், ஞானம் சிவ சாயுச்சியத்தையுங் கொடுக்கும். யாகமுதலிய பசு புண்ணியங் களோ சுவர்க்கத்தைக் கொடுக்கும். இவைகளெல்லாவற்றை யும் அறிதலும் அநுட்டித்தலும் கல்வி கேள்விகளாலன்றிக் கூடாமையால், வித்தியாசாலைகளைத் தாபித்தலும் சைவப்பிர சாரஞ் செய்வித்தலுமே முக்கியதருமங்களாம். இவைகளினாற் றானே மேற்கூறிய சிவதருமங்களும் சிவஞானமும் அபிவிருத்தி யாகும். இவைகளை விருத்திசெய்தலின் மிக்க புண்ணியமும், விருத்தி செய்யாமையின் மிக்கபாவமும் இல்லை இல்லை. இதற்கு பிரமாணம்:—

சிவதத்துவ விவேக விருத்தியில் உத்தரிக்கப்பட்ட
சுலோகத்தின் மொழிபெயர்ப்பு.

நிகரறுநற் சிவதரும சிவஞா னத்தை
நிறுத்திடுவோ னிலுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி
யகலுமய லானிறுத்தா தொழிந்தோன் யோகி
யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்றேன்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே.

ஆதலினால், இப்பதி புண்ணியங்களை அபிவிருத்தி செய்தற் பொருட்டு இங்குள்ள சைவசமயப் பிரபுக்கள் "திருத்தொண் டை நாட்டுப்பதி புண்ணிய பரிபாலனசபை" எனப்பெயர் கொண்ட ஒரு சமாசந் தாபித்தார்கள். சைவ சாத்திரங்களைக் கற்பித்தலும் சைவப் பிரசாரஞ் செய்வித்தலுமே எல்லாச் சிவ புண்ணியங்களையும் சிவஞானத்தையும் வளர்க்குங் கருவிகளாய்ச் சிறந்துள்ள உத்த மோத்தம சிவபுண்ணியங்களா மாயினும், அவைகள் பரமதருமமென்பது கல்வியறிவுடையவராகிய சில ருக்கு மாத்திரமன்றி மற்றவர்களுக்கு விளங்காமைபற்றி அவை களுக்குப் பொருளுபகரிக்கஉடன்படுவோர் தற்காலத்தில் அரிய ராதலாலும், சிவாலயத் திருப்பணிகள் பரமதருமமென்பது கல்வி யறிவுடையவரும் கல்வியறிவில்லாதவருமாகிய எல்லாருக் கும் விளங்குதல் பற்றி அவைகளுக்குப் பொருளுபகரிக்க உடன்

படுவோர் பலராதலாலும், சைவ சாத்திர படனத்துக்கும் சைவப் பிரசாரத்துக்கும் முக்கிய ஸ்தானங்கள் சிவாலயங்களா மாதலாலும், சிவாலயங்களுள்ளே பல கிலமாயிருத்தலாலும், அவைகளைத் தற்காலத்திலே ஜீர்ணோத்தாரஞ் செய்யாவிடின் விளையுங்கேடு பெரிதாதலாலும், இச்சபையார் முன்னே சிவாலயத் திருப்பணிகளை நடத்துங் கருத்துடையர்களாயினர்கள்.

சிவாலயத் திருப்பணிகளுக்குப் பொருள் கொடுப்பவர்களும் அப்பொருளைவாங்கிச் சிவாலயத் திருப்பணிகளைச்செய்பவர்களும் முத்தியை அடைவார்கள். இதற்குப் பிரமாணம்:—

**சைவசமயநெறி**

**திருப்பணி செய்வார்க்குஞ் சிவனையுன்னிச் செம்பொன்**
**விருப்புடனீவார் பெறுக வீடு.**
**உய்வா ருதவுநிதி வாங்கித் திருப்பணியைச்**
**செய்வார் பெறுக சிவம்.**

சிவபத்தர்கள் தங்களிடத்துள்ள திரவியத்தை மூன்று பாகம் பண்ணி ஒருபாகத்தைத் தங்கள் சீவனத்தின் பொருட்டு வைத்துக்கொண்டு மற்றை யிரண்டு பாகங்களையும் சிவ புண்ணியங்களுக்குக் கொடுத்தல்வேண்டும் என்று சிவாகமங்கள் சொல்கின்றன. இப்படிச் செய்தல் அரிதாயினும், சைவசமயிகளாகிய நம்மவர்களெல்லாரும் உலோபஞ் செய்யாது, இச்சபையார் எடுத்துக்கொண்ட சிவ புண்ணியத்தின் பொருட்டுத் தங்கள் தங்களால் இயன்றபடி சிறிது சிறிதாயினும் திரவியம் உபகரிக்கக்கடவர்கள். இப்படிச் செய்யின் "ஆயிரமாகாணி அறுபத்திரண்டரை" என்றபடியே நம்மவர்களால் உபகரிக்கப்படும் பொருள் மிகப் பெருகி வளர்ந்து, சபையார் உத்தேசித்த சிவ புண்ணியங்களெல்லாம் இனிது நிறைவேறுவதற்குக் காரணமாகும்.

கனம் பொருந்திய பிரபுக்களே, இத்தேசத்தவர் இவ்வூரவர் இவ்வியல்புடையார் என்று உங்களாலே நன்றாக அறியப்படாதவர்களும் தருமத்தை நடத்துவதற்கு அறிவும் ஆற்றலும் இல்லாதவர்களும் தருமத் திரவியத்தின் வரவு செலவு கணக்கை உலகத்தார் அறியும்வண்ணம் வெளிப்படுத்துதற்கு உடன்படா

தவர்களுமாய் உள்ளவர்கள் உங்களிடத்திலே தனித்தனி வந்து தருமத்தின் பொருட்டு யாசிக்கும்பொழுது, நீங்கள் பெரும்பான்மையும் தடைபேசாது உங்கள் உங்களால் இயன்ற மட்டும் திரவியம் உபகரிக்கின்றீர்களே. அத்திரவியத்தைப் பெறுவோர்களுள்ளே தாங்கள் சுட்டிய தருமத்தைத்தொடங்கு வோர் சிலர். அவர்களுள்ளும் பெற்ற திரவியமுழுதையும் அத் தருமத்தில் உபயோகப்படுத்துவோர் மிகச்சிலர். திரவியம் பெறும்பொழுது முழுதையுந் தருமத்தில் உபயோகப்படுத்துங் கருத்துடையவருக்கும் அக்கருத்து அத்தருமம் முடிவுபெறும் வரையில் நிலைபெறுதல் அரிது. ஒருபோது நிலைபெறினும், அவர் காலத்திலே அத்தருமம் நிறைவேருவிடத்து, அவருக்குப் பின் அத்திரவியம் அத்தருமத்திலே சேர்வது மிக அரிது அரிது. பெற்ற திரவியத்தைக்கொண்டு தருமத்தை முடிப்பவருள்ளும் சிலர் தாம் கல்வியறிவில்லாதவராதலாலும், கல்வியறிவுடையவ ரோடு சிறிதும் பரிசயமில்லாதவராதலாலும், எடுத்த தருமத்தை விதிப்படி நடத்தாதொழிகின்றனர். இங்ஙனமாதலின், நீங்கள் வருந்திச் சம்பாதித்த திரவியம் தருமத்தின் பொருட்டுக் கொடுக் கப்பட்ட விடத்தும், தருமத்தில் உபயோகப்படுவது சிறு பான்மை. இதற்குக் காரணம் நம்மவர்களுள் ஒரு தருமத்தை ஒருவரே தனித்து நடத்துதலாம்.

தருமங்களையும் அவைகளின் பலங்களையும் அவைகளைச் செய்யும் முறைமைகளையும் அறியவும் அறிவிக்கவும் வல்லவர் கல்வியுடையவராதலாலும், அவைகளைத் திரவியமுபகரித்து முடிக்க வல்லவர் செல்வமுடையவராதலாலும், இவ்விருதிறத்தா ருள்ளும் பலர்சபையாகத்திரண்டு விதானங்கள்செய்துகொண்டு அவ்விதானங்களின்படியே தருமங்களை நடத்தப் புகுவார்களா யின் அத்தருமங்களெல்லாம் விதிப்படி நிறைவேறும். அவற்றின் பொருட்டுக் கொடுக்கும் பொருண்முழுதும் தருமத்திற்றனே உபயோகப்படும். ஆதலினல், நம்மவர்களுள்ளே தருமஞ்செய்யக் கருத்துடையவர்கள் யாவரும் இச்சபையிற் சேருதலே உத்த மோத்தமம்.

யாவராயினும் ஒரு தருமத்தின் பொருட்டுத் திரவியம்

உபகரிக்கச் சங்கற்பித்தாராயின்,சங்கற்பித்த அக்கணமேஅத்திரவியம் தருமத் திரவியமேயாய்விடும். ஆகவே, அத்திரவியத்தைப் பின்பு கொடாதொழிந்தவர் தருமத் திரவியத்தை அபகரித்த அதிபாதகராகி எரிவாய் நரகத்தில் விழுந்து வருந்துவர். இஃது உண்மைநூற்றுணிவு. ஆதலினால் நீங்கள் தருமத்தின் பொருட்டுச் சங்கற்பித்த பொருளைச் சிறியதாயினும் தடையின்றி அச்சத்தோடும் அன்போடுங் கொடுத்துவிடல் வேண்டும்.

புண்ணியத்தையேனும் பாவத்தையேனும் செய்தல் செய்வித்தல் உடன்படல் என்னும் மூன்றும் தம்முளொக்குமாதலால், நீங்கள் இத்தருமத்துக்கு உபகரித்தன்மாத்திரமன்றி, உங்கள் உங்கள் பெந்துக்கள் இஷ்டர்கள் முதலாயினோருக்கும் சமயம் வாய்க்கும்பொழுதெல்லாம் நல்லறிவுச் சுடர் கொளுத்தி, அவர்களையும் இயன்றமட்டும் இத்தருமத்துக்கு உபகாரர்களாக்க முயலல்வேண்டும்.

தெய்வப்புலமை பொருந்திய ஒளவையாராலே "சான்றோருடைத்து" என்று புகழப்பட்ட இத்திருத்தொண்டை நாட்டின் கண்ணதாகிய இச்சென்னப்பட்டணம் இராஜதானியாயும் கல்வி செல்வம் அதிகாரம் முதலியவற்றினாலே, பிரசித்திபெற்ற தானமாயும் விளங்குதலினால், இப்பட்டணத்திலே ஸ்தாபிக்கப்பட்ட இச்சபையார் எக்காலமும் ஐக்கமும், தருமத்திலே சிரத்தையும், இடையறா முயற்சியும் உடையவர்களாகி எடுத்தகருமங்களை விதிப்படி நிறைவேற்றிக்கொண்டு வருவார்களாயின், மற்றை நாட்டார்களும் தங்கள் தங்கள் நாடுகளில் இப்படியே சபை ஸ்தாபித்துச் சிவ புண்ணியங்களைப் பரிபாலனஞ்செய்து வருவார்கள்; அப்பொழுது, அவைகளுக்கெல்லாம் இச்சபையார்களே மூலகாரணர்களாதலால், அப்புண்ணிய பலங்களினும் இச்சபையார் பாகம் பெறுவார்களென்பதற்குச் சந்தேகம் உண்டோ இல்லை இல்லை.

இப்பொழுது நாம் கூறியவாறே நடத்தப்படின், சிவ புண்ணியங்களும் சிவஞானமும் அபிவிருத்தியாகும். ஆகவே, சபையோர்களாகிய நீங்கள் உங்களுக்கும் பிறருக்கும் பயன்பட்டு உங்

களுக்கு இனியர்களாகி உங்களுக்கு உங்களினும் இனியராகிய சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று வாழ்ந்திருப்பீர்கள். நமக்கு நம்மினும் இனியர் சிவபெருமான் என்பதற்குப் பிரமாணம்:—

திருநாவுக்கரசு நாயனர் தேவாரம்.

என்னில் யாரு மெனக்கினி யாரிலை
யென்னி லும்மினி யாளொரு வன்னுள
னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே.

திருச்சிற்றம்பலம்.

---

# காலத்தின் அருமை

[கோவை. திரு. கு. நடேசகவுண்டரவர்கள்]

உலகத்துள்ள எல்லாப் பொருள்களும் அவற்றிற்குரிய தோன்றுங்காலத்தில் தோன்றி வளருங்காலத்தில் வளர்ந்து அழியுங்காலத்தில் அழிகின்றன. மாந்தளிர் முதலியன இளவேனிற்காலத்தில் தோன்றி வளர்ந்து இலையுதிர்காலத்து உதிர்ந்துவிடுதலும்; முல்லைப்பூ முதலியன கார்காலத்தில் தோன்றி மாறுதற்குரிய காலத்தில் மாறிவிடுகின்றமையும் காண்குமன்றே. உரிய காலம் தவறின் ஒரு பொருள் தோன்றாமையும், காலமல்லாக் காலத்தில் தோற்றுவிக்க முயலினும் அது பெரும்பான்மையும் பயன்படாமையும் கண்கூடே. அதனாலன்றோ நம் செந்தமிழ் மூதாட்டியாராகிய ஔவையாரும், "பருவத்தே பயிர்செய்" என்று மொழிந்தருளினர். ஆதலால் எக்காலத்தில் எதனைச் செய்யவேண்டுமோ அக்காலத்ததனைச் செய்துமுடித்தலே அறிவுடையார்க்கழகாம்.

அங்ஙனமின்றிக் காலத்தை மக்களில் ஒரு சாரார் நல்வழியில் பயன்படுத்திக் கொள்ளாமல் வீணேகழிக்கின்றனர். என்? காலத்தின் அருமையையும் அது கொன்னே விரைவிற் கழிந்து போதலையும் உணராமலேயாம். வினடி, நிமிடம், மணி, முற்

பகல், பிற்பகல், முன் இரவு, பின் இரவு, கடை இரவு, நாள், வாரம், பக்கம், திங்கள், ஆண்டு என்ற பல பெயர்களால் காலமென்னும் பெயற்கரும்பொருள் கழிந்துகொண்டேயிருக்கிறது. எத்துணை நாள் கழிகின்றதோ அத்துணையும் நம் ஆயுளும் குறைந்துகொண்டே போகின்றதென்பதையும் நாம் உணர வேண்டாமா?

"நாளென ஒன்றுபோற்காட்டி உயிரீரும் வாளதுணர்வார்ப் பெறின்."

"தோற்றஞ்சால் ஞாயிறு நாழியாவைகலும்
கூற்றம் அளந்து நும்நாளுண்ணும்."

என்னும் நம் மூதாதையர்கூறிய மொழிகளை நாம் போற்றியுணர்ந்தால் காலத்தின் அருமை புலனாகாமற்போகாது.

இத்தாலிய நாட்டுப் பெரியார் ஒருவர் தம்முடைய வாழ்நாளைத் தம் செல்வமென்று கூறுவது வழக்கமாம். அது மிகவும் பொருத்தமுள்ளதேயாம். "பொருள்தனைப் போற்றிவாழ்" என்னும் அமுதமொழியை மறந்து அதனைப் போற்றாதிருப்பின் எங்ஙனம் அது வீணே கழிந்து செல்வம் என்ற தன் பெயர்க்காரணத்தைப் புலப்படுத்திச் செல்லுமோ அதுபோலவே காலத்தை அவ்வப்போது விழிப்பாயிருந்து பயன்படுத்திக் கொள்ளாவிடின் அது வீணே கழிந்துபோம். செல்வமும் காலமும் கழிந்த பின்னரே, அவற்றை வீணாக்கியவர் அவற்றின் அருமை, பெருமைகளை உணர்வது உலக இயல்பாகவிருக்கிறது.

கல்வி கற்றற்குரிய இளமைக்காலத்தை வீணாக்கிய ஒருவன் கூறியதாக வரும், "துள்ளித் திரிகின்ற காலத்தில் என்றன் துடுக்கடக்கிப் பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே," என்ற செய்யுளையும், "ஏழைத்தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம் பாழுக்கிறைத்தேன் பரம்பரனைப் பரவாதே." என்று மணிவாசகனார் அருளிய திருவாசகப் பாட்டையும் நோக்கின் இது நன்கு விளங்கும்.

சூது முதலிய தீய நெறிகளிற் பொருளைப் பெரிதும் வீண் செலவிட்டுப் பழகியவனும் மடியினால் பொழுதை வீணாக்கிப்

பழகியவனும் அதிலிருந்து மீண்டு நல்வழிப்படுதல் மிகவும் அரிதேயாம்.

இங்ஙனம் சில வகையால் காலமும் செல்வமுந் தம்முள் ஒக்குமேனும், மற்றெவற்றினும் காலம் மிகவும் அருமையுடைத்து. ஒருகால் இழந்த பொருளைப் பெருமுயற்சியானும், மறந்த கல்வியை மீளக்கற்றும், இழந்த உடல் வலிமையை மருந்தானும் பத்தியத்தானும், பின்னரும் பெறக்கூடும். ஆனால் இழந்த காலத்தை மீட்டும் எதனாற் பெறக்கூடும்? வானத்து மீனுக்குத் தூண்டிலிடுவதுபோல் போனதை நினைந்து நினைந்து வீணே யிரங்கவேண்டியதுதான். இரங்கிப் பயனென்ன? விதைப்புக் காலத்து உறங்கிக் கிடந்தவன் அறுப்புக்காலத்தில் அலமரலேன்.

அன்பர்களே, மக்கட்கு வகுத்த வாழ்நாளிற் செம்பாதியும் உறக்கத்தே கழிந்து போகின்றதன்றோ? குழந்தைப் பருவத்தினும், நோயினும், பசியினும், மூப்பினும் கழிகின்ற காலமெவ்வளவு! பின் நமக்குப் பயன்படவுள்ள காலமெவ்வளவு? எண்ணிப் பார்மின் மிகக்குறைவே. இக்குறைந்த காலத்தையும் மடிக்கும், குடிக்கும், சூதுக்கும் வாதுக்குமாகத் தீதிற்கழித்தால் மக்கட் பிறப்புற்ற நாம் செய்யவேண்டிய அரிய பல வினைகளை நிறைவேற்றுவதெவ்வாறு?

பலர் தாம் அரியபல செயல்களைச் செய்யவிருப்ப முள்ளவர்களெனவும், ஆனால் அவற்றைச் செய்ய நேரமில்லாமையே தடையாயிருக்கின்றதெனவுங் கூறுகின்றனர். இது சோம்பலுக்கும் சுயநலத்துக்கும் சார்பாகிய சமாதானமேயாகும். நன்மை பயக்கத்தக்கனவும் செய்து தீரவேண்டுவனவுமாகிய பலசெயல்களைச் செய்யத் தூண்டும் தம் அறிவுக்கு இத்தேறுதல் கூறித் தம்மைத்தாமே ஏமாற்றிக்கொள்ளுகிறார்கள்.

நன்கு உற்று நோக்கின் ஓய்வெனக் கழிக்கும் நேரத்தைப் பயன்படுத்துவோமாயின் பலசெயல்களை எளிதின் முடிக்கலாம். ஓய்வு என்று நேரத்தை வீணாக்க வேண்டியதில்லை. வேலைகளை

மாற்றி மாற்றிச் செய்வதே சிறந்த இளைப்பாறலாகும் என்று அறிஞர் பலர் அறைகின்றனர்.

உலக நன்மையின் பொருட்டு அரும்பெருஞ் செயல்களைச் செய்த அறிஞர்களை நோக்குமின். அவர்கள் பெருஞ்செல்வர்களாயிருந்து, வேண்டிய அளவு காலம் அவற்றிற்கெனப் பிரித்து வைத்துச் செய்தனரோ? இல்லை. சித்திரைமுதல் பங்குனி முடிய ஓயாது வேலைசெய்து வருபவர்களாயிருந்தும், அவ்வேலையினிடையில் வேறு சில அருஞ்செயல்களும் செய்ய வல்லவர்களாயிருந்தனர். ஒவ்வொரு செயலையும் பேரூக்கத்தோடும் காலசிக்கனத்தோடும் செய்துபழகினமையால் அவர்கள் சோம்பனொருவன் செய்வதினும் பன்மடங்கு வேலையைச் செய்ய ஆற்றல் பெற்றிருந்தனர்;

ஊக்கமுடையானொருவன் தனக்கு ஏற்பட்டுள்ள வேலைகளினும் அதிகமாகச் செய்ய விரும்புகிறான். அதனால் செய்கைத் திறத்தை நாடோறும் சிறிது சிறிதாக வளர்த்துக்கொள்ளுகிறானதலின் இயல்பில் ஒருவன் செய்யக்கூடியதினும் பலகூறுவிரைவாகவும் மிகுதியாகவும் திருத்தமாகவும் செய்யும் ஆற்றல்அடைகின்றான். சோம்பனோவெனில் செய்தின்றியமையாதவற்றையும், செய்யாது நாளை பின்னை என்று தவணைவைத்துப் பொழுது போக்குகின்றான்.

ஆசிரியர் ஒரு கட்டுரை எழுதிவரும்படி மாணவர்களுக்குக் கட்டளையிடின் ஊக்கமுள்ள மாணவன் வீடுசென்றதும் அதற்கு வேண்டியவற்றை நினைத்து உடனே விரைவில் எழுதி முடித்து மகிழ்கின்றான். மடியனோ இன்றெழுதுவோம், நாளையெழுதுவோம் எனத் தவணைவைத்துக்கொண்டே யிருந்து, ஆசிரியர் கேட்கும்பொழுது கட்டுரை எழுதிமுடிக்காதவனாகி, "இடிபுரிந்தெள்ளுஞ் சொற்கேட்டுத் துயர்கின்றான்." நடக்கமாட்டாதவனுக்குப் புறக்கடையும் காதவழியன்றோ?" விரைந்து நடப்பவனுக்குக் காதவழியும் புறக்கடை எல்லையேயாம்.

நல்லறன்கள் செய்ய விரும்பிய சிலரும் அதற்கு இன்றை நாளையெனத் தவணை வைத்துக்கொண்டேயிருந்து, கடைசியில்

தம் செல்வத்தை இழந்துபோவதாலோ, மூப்புமிகலாலோ, மற்றெவற்றாலோ தாம், எண்ணியவற்றை நிறைவேற்ற இயலாது வருந்தி மாள்கின்றனர். அவரைக் குறித்தே,

"இன்று நன்று நாளை நன்று என்று நின்ற இச்சையாற்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்."

எனவும்,

"ஒன்றே செய்க ஒன்றும், நன்றே செய்க நன்றும்,
இன்றே செய்க இன்றும், இன்னே செய்க;"

எனவும் ஆன்றோர் பணித்தனர்.

சிலர் 'இத்துணைப்பெருங் காரியம் எம்மாற் செய்ய இயல்வதோ' எனத் தடுமாற்றமெய்திச் சில நற்செயல்களை நழுவ விடுகின்றனர். செய்தன்றியமையாத அக்காரியத்தைச் செவ்வனே முடிப்பதற்குரிய வழியை நன்கு ஆராய்ந்து துணிந்து, நாடோறும் சிறிது சிறிதே செய்துவரினும் நாளடைவில் அது நன்கு முற்றுப்பெறும். "சிறுதுளி பெருவெள்ளம்," "எறும்பூரக் கற்குழியும்," என்ற என்ற பழமொழிகளுக்கேற்ப இக்கடிகை செய்த சிறிதொடு அடுத்த கடிகையிற் செய்வது சிறிதும், அப்படியே ஒவ்வொரு நாளினும், திங்களினும், ஆண்டினும் செய்வனவெல்லாம் சிறிதுசிறிதாகவே ஒன்றுசேர்ந்து ஒரு பெருஞ் செயலாய் முடியும். வானளாவிய மாடமாளிகைகளும் ஒவ்வொரு கல்லாக அடுக்கப்பட்டவைதாமே! "அருமையுடைத்தென்ற சாவாமைவேண்டும் பெருமை முயற்சிதரும்" "படியுடையார் பற்றமைந்தக்கண்ணும் மடியுடையார் மாண்பயனெய்தலரிது," அன்றோ!

நேயர்காள்! எவ்வேலை செய்தற்பொருட்டும் எமக்கு ஒழிவில்லையே என்று குறைகூறன்மின். ஒழிவென்னும் படுகுழியிலாழ்த்தாதருளுதற்கு இறைவனை யேத்துமின். என்? கடுவெயிலில் நெடுவழி நடந்தானொருவன் நீர் வேட்கையுறின் 'எப்பொழுது நீர் உண்போமோ?' என்னும் சிந்தையையே யுடையவனாய் நீர் நிலை கண்டவுடனே ஓடி அள்ளிப் பருகுவான். அதுபோலச் செய்தன்றியமையாத ஒரு நல்ல வேலை நம் உள்ளத்து ஆழ்ந்து

பதிந்து உம்மை ஊக்குமாயின், அதனைச் செய்ய ஓர் ஆண்டே னும், ஒரு திங்களேனும், ஒரு வாரமேனும், ஒரு நாளேனும் தவணைவைப்பீரோ? அந்நாளை எதிர்பார்த்துக் கையைக்கட்டிக் கொண்டு வாளாவிருப்பீரோ? மாட்டீர். அவ்வெண்ணமே உம் மை ஊக்கி எத்தனைப் பிறவேலைகளிடையும் அதனையும் விரைவிற் செய்து முடிக்கும்படி தூண்டும். ஆதலால் நீவிர் செய்யவேண் டிய கடமைகளைச் செவ்வனே உணர்ந்து அவற்றை நிறைவேற்ற வற்ற முறையையும் துணிமின். அவை இனிது முற்றி உயர் வடைவீர்.

"இசையா தெனினும் இயற்றி ஓர் ஆற்றல்
அசையாது நிற்பதன்றே "

ஆண்மையாகும்.

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு"

என்பதை உன்னிப் பார்மின்.

நாணயச்சாலையில் பொற்காசுகள் செய்யும் அறையில், தரைமேல் முழுவதும் கம்பிகள் பரப்பிவைத்து ஆண்டுச் சித றுண்டு வீழும் பொற்பொடிகள் வீணுகாமற்றிரட்டி அவற்றை யும் நாணயமாக்குகின்றனரென்று கூறப்படுகிறது. அதுபோல உமது வாழ்நாளாகிய பொற்கட்டியால் கடமைகளாகிய பணி கள் செய்யுங்கால் வீழும் துகள்களையெல்லாம் புறமே கழிய விடாது அவற்றாலும் ஓர் அரும்பணி செய்துகொண்மின்.

பலர் அவ்வொழிவு நேரமாகிய பொற்றுணுக்குகளைத்திரட் டிக் கொள்ளாது வீணே இழக்கின்றனர். காலத்தில் பற்றுள் ளம் உடையவன் நாளடைவில் பண்ணைப்பணைத்த அறிவுச் செல்வனாவான்.

மேல்நாட்டு ஆசிரியர் (George Stevenson) ஒருவர் தம் முடைய காலத்தின் சிறு துணுக்கையும் ஒரு விலையுயரிய மணி யெனக்கருதி வந்தாரெனவும், ஒரு சிறு துணுக்கும் நல்ல ஒரு வேலைக்குப் பயன்பட்டபோதே மகிழ்வாரெனவும், மற்றோரறி ஞர் (Benjamin Franklin) ஒவ்வொரு நிமிடத்தையும் அறிவு

வளர்ச்சிக்குப் பயன் படுத்தினரெனவும் கூறுகின்றனர்: 'ஓயிட்' (H. G. White) என்பார் தாம் வழக்கறிஞர் வீட்டிற்குப் போய் வருகின்ற நேரத்திலேயே கிரேக்க மொழியைக் கற்றனரென்பர். நெய்துகொண்டிருக்கும் வேளைகளிலேயே இலத்தீன் இலக்கணத்தை ஒருவர் (Henry Stone) தாமே படித்துக் கற்றுக்கொண்டனராம்.

ஒரு கட்டிடத்திலுள்ள பெருங் கற்களேயன்றிச் சிறுசிறு கற்களும் அக்கட்டிடத்திற்கு உறுப்பாகவும் உறுதியாய் நிற்பதற்கின்றியமையாதனவாகவு மிருக்கின்றன. அதுபோலவே பல பெரிய வேலைகளினிடையே வாய்க்கும் சிறியசிறிய ஓழிவு நேரங்களில் ஒருவன் தேடிக்கொள்ளும் அறிவு வளர்ச்சியும், அல்லது அவன் செய்யும் நல்லசெயல்களும் அவனுக்குப் பொருள், புகழ் அறிவு முதலிய நன்மைகளைத் தந்து உறுதிபல பயக்கின்றன.

உங்களுக்கு அறிவு வளர்ச்சியிலேனும் வேறு நல்லகாரியமேதேனும் செய்ய வேண்டுமென்னும் ஆர்வமிருக்குமேல் உங்களுக்கு இயல்பாகவேயிருக்கும் வேலையினிடையே அதற்குச் சிறிது நேரமிருக்கக் காண்பீர், அல்லது நேரம் உண்டாக்கிக் கொள்ளுவீர். எப்படியும் மற்றவேலைகளோடு அதனையும் செய்து முடித்திடுவீர். அங்ஙனம் செய்யாதிருப்பீரேல் அதற்குக் காரணம் உமது ஊக்கக்குறைவேயன்றி நேரமின்மையன்று.

"நீ வாழ்நாளை விரும்புகின்றனையா? விரும்பின் காலத்தை வீணாக்காதே. காலத்தாற்றான் வாழ்நாள் ஆக்கப்பட்டிருக்கிறது," என்று அறிஞர் ஒருவர் (Franklin) மொழிவது கருதற்பாலது.

"நெடுநீர் மறவி மடி துயிலுநான்கும் கெடுநீரார் காமக்கலன்" ஆகையால் அரும்பெறற் காலத்தைப் பாழ்படுத்தும் அத்தீய பண்புகளை நீவிர் பாழ்படுத்தி மடியை மடியாக ஒழுகிக் குடியைக் குடியாகச்செய்து வாழ்வீராக.

---

# நக்கீரனூர் தெய்வப்புலமை மாட்சி

(ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்கள்)

(சஎக-ம் பக்கத் தொடர்ச்சி)

அவ்வாறுயினும் அந்நூலில் அதனுசிரியர் திருப்பரங்குன் றை முதலெடுத்தோதுதலின், அவ்வாற்றுனது திருப்பரங் குன்றிற் செய்யப்பட்டதென்று உய்த்துணர்ந்து கொள்ளாமோ வெனின் ;—கொள்ளாமன்றே, ஆசிரியர் நக்கீரனுர் மதுரையிற் றூன்றி யதனையடுத்துள்ள பரங்குன்றின் மிக்கபற்றுடையரா கலா னதுபற்றி யதனைமுதலெடுத் தோதினுராதலின் ; திருஞான சம்பந்தர் முதலான அருட்டிருவாளருந் தாந்தோன்றிய நகரைச் சிறந்தெடுத் தோதுதலும் இதனோ டொருபுடை யொற்றி யுண ரப்படு மென்பது. இனி ஏட்டுச்சுவடிகளில் திருமுருகாற்றுப் படையின்கீழ்க் "குன்ற மெறிந்தாய்" எனவும் "குன்ற மெறிந்ததுவும்" எனவும் இரண்டு வெண்பாக்க ளெழுதப்பட் டுள்ளன; இவ்விரண்டு வெண்பாக்களின் நடை வளத்தையும், சொல்லமைதி, பொருளமைதிகளையும் உற்று நோக்கும்வழி; அவையிரண்டு மிகப்பழையகாலத்தன வென்பதும், நக்கீரனு ரியற்றியனவேயாமென்பதும் இனிதுவிளங்கும். அல்லதூஉம் பத்துப்பாட்டுக்க ளொவ்வொன்றின்கீழும் அவ்வப்பாட்டுக் களின் கருத்துப்பொருளை விளக்கியும், அவ்வப்பாட்டுடைத் தலைமக்கள் பெரும்புகழ்கிளந்தும் ஒருவாற்றுன் வரலாறு தெரிப் பனவாகிய ஒன்றிரண்டுமூன்று வெண்பாக்களெழுதப்பட்டி ருத்தலின் மற்றவை யவ்வவ் வாசிரியரால் தாம்தாம்பாடிய பாட் டுக்களின்கீழ் எழுதப்பட்டன வென்பது ஐயுறவின்றித் துணி ந்து கொள்ளப்படுமென்பது. இம்முறை வழுவாது அப்பத் துப்பாட்டுக்களின் ஒன்றுகிய திருமுருகாற்றுப்படையினும், அதனுசிரியர் தாமும் அதன் வரலாறுகிளக்கும் இரண்டு செய் யுட்களெழுதினுர். இனி இவ்விரண்டு செய்யுட்களும் ஆசிரி யர்தாம் ஆற்றுப்படை மொழிந்த பொழுதியற்றப்பட்டனவோ, ஆற்றுப்படையை யேனை யொன்பது பாட்டுக்களுடன் கோவை செய்து முறைப்படுத்திய போதியற்றப் பட்டனவோ வென்று

ராயலுறுவார்க்குத் துணிதற்கருவி யின்மையின் அவையும் விளங்கா. ஆயினும், கோவைசெய்து முறைப்படுத்தியபோது ஒருதலையான் அதன்வரலாறு தெரித்தற்பொருட்டு அவையெழு தப்பட்டிருத்தல் வேண்டுமென்பது துணியப்படும். இவ்விரண்டிற் "குன்ற மெறிந்ததுவும்" எனுஞ்செய்யுளில் "இன்றெம் மைக், கைவிடா நின்றமையுங் கற்போதும்பின் மீட்டமையும்" என்று கூறப்படுதலின், நக்கீரனார் மலை முழையுட் சிறைப்பட்ட வாறும், பின் மீட்கப்பட்டவாறும் ஒருதலையான் நிகழ்ந்தன வென்பது பெறப்படும். இனி, "குன்றமெறிந்ததுவும்" என்னுஞ் செய்யுளும் "குன்ற மெறிந்தாய்" என்னுஞ் செய்யுளு மொழிய வேறு எட்டுச்செய்யுட்கள் திருமுருகாற்றுப் படைச் சுவடிகளின்கீழ் எழுதப்பட்டிருக்கின்றன. மற்றிவையும் ஆசிரியர் நக்கீரனாரியற்றியனகொலொன்று ஆராயப்புகுந்தவழி, அச்செய்யுட்களில் 'வீரவேல்' 'தாரைவேல்' 'தீரவேல்' என்றற் றொடக்கத்து விரவியற்சொற்றொடர்களும், 'நம்புகிலேன்' எனுந் தொன்னெறிப்பட்டியலாச் சொல்லமைப்பும், 'கோலப்பா' 'வேலப்பா' முதலிய தொன்றுதொட்டு நடவாவழக்கும் பயிலக்காண்டலானும், அவை தம்முள்ளும் இறுதிக்கணின்ற இரண்டுசெய்யுட்களும் "ஆசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப், பூசையாக் கொண்டே புகல்" எனவும், "நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத், தற்கோல நாடோறுஞ் சாற்றினல்-முற்கோல, மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித், தானினைத்த வெல்லாந் தரும்" எனவும் நக்கீரனாரைப் படர்க்கைப் படுத்துரைத்துத் திருமுரு காற்றுப்படையைச் சிறப்பித்துக் கூறுதலானும், திருஞானசம்பந்தர் முதலான அருட்டிருவாளர் தாமோதிய பதிகத்தின்கீழ்த் தம்பெயரைக் கிளந்துகூறிப் பதிகச் சிறப்பு மமைத்துக் கடைக்காப்பிடுமாறு போல, ஆசிரியர்-நக்கீரனார் தாமுந் தம்பெயரையு நூற்சிறப்பையும் அங்ஙனம் படர்க்கைக் கண்வைத்து வேறுபடுத் தோதினாரென்பார்க்கு "இன்றென்னைக், கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு, மெய்விடா வீரன்கை வேல்" என்று தம்மைத் தன்மைக்கண் வைத்தோதிய ஆசிரியர் தாமே தம்மைப்

பின்படர்க்கையில் வைத்து வேறுபடுத்தா ரென்றல் பொருந்தாமையானும், அன்றியங்ஙனம் வேறுபடுத்தாரெனக் கொள்ளினும் "ஞானசம்பந்தன் உரைசெய்த" என்பது போற்றம்மை "நக்கீரன் ருனுரைத்த" என்றுவைத்துக் கூறுவதன்றி "நக்கீரர் தாமுரைத்த" என்றுயர்த்துக் கூறுதல் ஏலாமையானும், அவர் தம்மையங்ஙனம் உயர்த்துக்கூருரென்பது "சிறியேன் சொன்ன வறிவில்வாசகம்" எனப் பிருண்டும் அவர் கூறு மாற்ருற் றெளியக்கிடத்தலானும் அவை பிற்காலத்தாரால் நூற்சிறப்பாக எழுதப்பட்டனவாமென்பது இனிதுவிளங்கும். அல்லதூஉம், ஆசிரியர், நக்கீரனார் கூறிய இரண்டு செய்யுட்களிலிறுதிச் செய்யுளினிறுதியிற்கிடந்த "மெய்விடா வீரன்கைவேல்" எனுஞ் சொற்ருெடரிலுள்ள 'வீரவேல்' எனுமொழிகளை வேறு பிரித்தெடுத்துக்கொண்டு "வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறை மீட்ட" என்று தொடங்குதலானும், ஏனை யொன்பது செய்யுட்களும் அங்ஙனம் அந்தாதித் தொடைப்பட நிகழாமையானும் முன்னிரண்டு செய்யுட்களும் ஆசிரியர்-நக்கீரனா ரியற்றினவாமென்பதூஉம், பின்னெட்டும் பிற்காலத் தாரியற்றியனவாமென்பதூஉம், தெற்றென வுணரப்படுமென்பது.

இனி, இங்ஙனம் ஆசிரியர்-நக்கீரனார் வரலாறு பலநூல்களில் ஒன்ருெடொன்று மலைவுபட நிகழ்த்தப்படுதலின், மற்றது முழுவதூஉம் பொய்படும் போலுமென நினையற்க. ஆசிரியர் தாம் இறைவன்றந்த "கொங்குதேர் வாழ்க்கை" எனுஞ்செய்யுட்குக் குறை கூறிய தங்குறுமொழியைப் பொறுத்தருளுமாறு 'திருவெழு கூற்றிருக்கை'யிற் "சிறியேன் சொன்ன வறிவில் வாசகம், வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும்" எனவும், 'பெருந்தேவபாணி' யிற் "கூடலால வாய்க் குழகனாவ, தறியா தருந்தமிழ் பழித்தன னடியேன்" எனவும் "எம்பெருமான் வேண்டியது வேண்டா, திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன்" எனவுங்கூறிக் குறையிரத்தலானும், இவை யெல்லா நிகழ்ந்தவிடம் மதுரைமாநகரென்பதூஉம், இறைவன் விழித்த நுதற் கண்வெப்பம் தம்மெய்யிற்பற்றி எரிவு செய்ததென்பதூஉம், 'திருவெழு கூற்றிருக்கை' இறுதிவெண்பாவில் "ஆலவாயிலமர்ந்

தாய்—தணிந்தென்மேன், மெய்யெரிவு தீரப்பணித்தருளுவேதி யனே" எனவும், 'பெருந்தேவபாணி' இறுதி வெண்பாவில் "என் மேற், சிற்றத்தைத் தீர்த்தருளுந் தேவாதி தேவனே, யாற்றவுநீ செய்யுமருள்" எனவும் அவர்தாமே கூறுமாற்றூற் றெளியக் கிடத்தலானும், இறைவன் றமக்குக் கட்டளையிட்ட வாறு கயிலைகாணச்செல்லு நெறியின் மலைமுழையிற் றும்சிறை புகுத்தப்பட்டுப் பின் செவ்வேள் திருவருளால் அதனினின்று மீண்ட முறைமை "இன்றெம்மைக், கைவிடா நின்றதுவுங் கற் பொதும்பின் மீட்டதுவு, மெய்விடா வீரன்கைவேல்" என்றவர் 'திருமுருகாற்றுப்படை' யிறுதிவெண்பாவிற் பொதுப்பட வைத் துரைப்பதன்கட் பெறப்படுதலானும், தாங் கயிலைகாணச் சென் றமை முற்றுப்பெறாது வியத்தகு பரிசாற் காளத்தியையே யதுவாகக்காணும்படி நேர்ந்த பெற்றிநோக்கி யவ்விரண்டற்கும் ஒற்றுமைகொளுத்திக் "கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி" அரு ளிச்செய்ததனு லவ்வுண்மை யறியக் கிடத்தலானும் அவ்வர லாறு முழுவதூஉ மெய்ப்பட நிகழ்ந்ததாமென்பது ஐயுறவின்றி நிலையிட்டுரைக்கப்படு மெனக்கொள்க.

இனி, இறைவன் றிருவுருக்கொண்டு நக்கீரனர் விழியெதிர் தோன்றின னெனவும், பின் அவரோடு வழக்காடி மறைந்தானெ னவுங் கூறுவனவெலாம் யாண்டும் இயற்கையின் நடவாச்செயற் கையாதலின் மற்றிவை யெல்லாம் மெய்த்திறங்கொண்டு நிகழாப் பொய்ப்பொருள்களா மென்று வேறொரு சாரார் தமக்குத் தோன்றியவாறெல்லாம் பிறழக்கூறி நலமுறூர். ஆசிரியர் - நக்கீ ரனர்தாமே அங்ஙன நிகழ்ந்தவற்றையெல்லாம் இனிதெடுத்துக் கூறுதலின், அப்பெற்றியார் கூறும் அறிவில்லுரை வறிதாய்ப் போலிப்படுமென்பது நல்லுணர்வுடையா ருணர்ந்து கொள்வ ரென விடுக்க. அல்லதூஉம், மக்கட்பிறவியின் உறுதியுணர்ந்து உலக வாழ்க்கையி லமரலொழிந்து அவை மாறிமாறிவரு மியல் புணர்ந்து கழித்துத்தம்முயிர்க்கு நீங்காநிலைக்களனுயுள்ள துளக்கறும் பொருளியல்பறிந்து அப்பொருட் செயலினும் அறிவினுந் தஞ்செயலு மறிவுந்தோய்ந்து ஒருபெற்றியே யொரு பேரின்ப நுகர்ந்தமைய நினைந்திருக்கும் அறிவுடை நன்மக்கள்

பண்டைநாட் டொடங்கி யின்றளவும் நிலவப்பெற்ற இச்செந் தமிழ் நாட்டொடு, அப்பிறவியினுண்மைப் பயனறியாது தம் வாணுள் முழுவதூஉம் உலக வாழ்க்கையிலழித்து வேறோ ருறுதி நாடாது, அங்ஙனங் கழித்தலையே தமக்குப்பெருமதிப் பாகக் கொண்டொழுகும் மாக்கள் நிறையப்பெற்ற ஏனை நாடு களை ஒப்பிட்டு, அவ்வொப்புமையாலிச் செந்தமிழ்நாட்டில் நிகழ்ந்த அரும்பேரற்புதங்களைப் பொய்யென்று நினைந்தொழுகு வார்க்கு நல்லறிவு கொளுத்தி யவரைச் செந்நெறிக் கடாவுதல் ஒருவாற்றானுஞ் சாலாததொன்றாமென வொழிக. திருஞானசம் பந்தர் முதலான அருட்டிருவாளருந் தாந்தா நிகழ்த்திய அற்புதங் களையும், இறைவன் றமக்குச்செய்யும் அருட்பாடுகளையுந்தாமே தத்தஞ் செய்யுட்களில் அமைத்துக் கூறுதலும், அதனைப் பிற் காலத்தறிவுடை நன்மக்கள் பலரு * மெய்யெனத் தேறி நன்கு மதித்தலுங் காண்க. இறைவன் தன்னடியார்பொருட்டு இயற்றிய திருவிளையாடல்களும், திருத்தொண்டர் பிறருய்யும்பொருட்டு அவ்விறைவனருள்வழிநின்று நிகழ்த்திய பேரற்புதங்களும் இச செந்தமிழ் நாட்டிற்போல வேறு பிறவற்றில் நிகழக்காணமை யான் வேற்றுநாட்டிலுள்ள மாக்கள் இன்னோரன்னவற்றைக் கேட்டலும் பெருநகைபுரிந்து எள்ளுவர். அதுபற்றியவர்க்கு இரங்குவதேயன்றி யவரை யிகழார் பெரியோ ரென்பது. யாவ ராயினுமாக, இறைவன் ஒரு திருவிளையாடல் புரிந்தானென் றுதல், ஒருதிருத்தொண்டர் ஒரு பேரற்புதம் நிகழ்த்தினு ரென் றுதல் கேட்டுழிக் கதுமென எள்ளி நகையாடாது அங்ஙன நிகழ்ந்ததனுண்மையை யாராய்ந்துணர்தல் அவர்க்கு இன்றி யமையாததா மென்பது கடைப்பிடிக்க.

இனியொரு சாரார் திருவிளையாடற் புராணத்தையே கருவி யாகக்கொண்டு தமிழ்ச் சங்கமென வொன்றில்லை யெனவும், காசியிலிருந்த வடமொழிச் சங்கத்தை நோக்கித் தமிழ்ப்புலவர்

*மாக்ஸ்மூலர், போப், காலஞ்சென்ற சுந்தரம்பிள்ளை முதலான பேரறி வாளர் பலரும் இன்னோரன்ன பேரற்புதங்களைப் பெரிதுந்தேறி நன்கு மதித்தல் காண்க. 'இந்தியா நமக்கென்ன கற்பிக்கும்?' திரு வாசக மொழி பெயர்ப்பு' 'திருஞான சம்பந்தர் கால நிர்ணயம்.'

புனைந்தெடுத்துக்கட்டிய கட்டுரை யதுவாமெனவும், தமிழ்ப் புலவர் பொய்யும்புளுகும் புனைந்து கொண்டு அரசரையிரந்து பரிசுபெற்றுண்டு நாட்கழிக்கும் மிடிபடுவாழ்க்கைக் கையறியா மாந்தரெனவும், அவர் கூறுமாறுபோலத் தமிழ் அத்துணைப் பெருஞ்சிறப்பினதும் தொன்று தொட்டது மன்றுமெனவுந் தமக்குத் தோன்றியவாறெல்லாம் இளிவரக்கூறிப் பெரிதுமார்த் தலின், அவருரை புரைபடுமுகத்தாற் றமிழின்றொன்மையும், தமிழிலிருந்து பல சொற்கள் வேறு பாடைகளில் வழங்குதலும், தலைச்சங்கமிருந்த காலமும் கடைச்சங்கவரலாறும் ஈண்டெடுத் துக்காட்டி நிறுவியவ்வாற்ற ளுசிரியர்-நக்கிரனர் காலமுங் காட்டு தும்.

இனி, இப்போது 'இந்து மகாசமுத்திரம்' என மிகப்பிர சித்தி யுற்று விளங்கும்மாகடல் பல்லாயிர வாண்டுகளுக்கு முன் நிலனுயிருந்ததென்பது ஆங்கிலநூல் வல்லார்க்கு இனிதுவிள ங்கும். அவர், பல வேறுவகைப்பட்ட தேயங்களிலுள்ள மக் களின் உருவமைப்பும் உறுப்பமைவும் ஒத்துநோக்கி யவர்தம் முள் இனங்கண்டுரைப்பதாகிய *மக்களினநூலானும், இயங்கி யற் பொருள் நிலையியற் பொருள்களைப் பகுத்துக்கொண்டு ஆராயும் நூல்களானும், அவ்விந்து மகாசமுத்திரத்திலுள்ள சில தீவுகளிற் கண்டெடுக்கப்பட்ட தமிழெழுத்துக்க ளெழுதிய செப்பேடுகள் கருங்கற்களானும் கிழக்கே சந்தாத்தீவுகள் வரை யினும் மேற்கே மட்காசிகர் தீவுவரையினும் அகன்று கிடந்த இலெமுரியா என்னும் நிலன் ஒருகாலத்தெழுந்த பெருவெள் ளத்தால் ஆழ்ந்து போயிற்றென்றும், இங்ஙனமாழ்ந்துபோன பெருநிலன் இந்நிலவுலக முழுவதற்கும் நடுவிற்கிடந்த பெரும் பரப்பாகலான் இறைவனுற் படைக்கப்பட்ட மக்கள் முதன்முத லிந்நிலத்திலிருந்து பின் நாற்றிசையினும் பிரிந்துபோய் வேறு பட்டனரென்றும், அவ்வாறிதிலிருந்த தொல்லோர் வழங்கிய பாடை தமிழ்ப்பாடையா மென்றும் பொருளினிது விளங்கச் சொல்லுந்தோறும் காரணங்காட்டி நிறுவி விளக்குவர் † இனி

---

* Ethnology. † Professor Haeckel.

வேறொருசாரார் ஆரியர்கள் முதன்முதற் காஸ்பியன்கடலை யடுத்த இடங்களிலிருந்து பின் பன்முகமாகப் பரந்து சென்றார்களென்பர்.* இனிப்பிறிதொரு சாரார் ஆரியர்கள் காஸ்பியன் கடலையடுத்த இடங்களில் முதன் முதலிருந்தார்களென்பார் மதத்தை மறுத்து, **காந்தினேவிய** தீபகற்பத்தின் தெற்கில் முதன்முதலிருந்து பின் பன்முகமாகப்பிரிந்து சென்றார்களென்பர். † அவ்வாறவர் கூறுமாற்றான் ஆரியன் முதன் முதலிருந்து பின் பிரிந்த இடமாத்திரம் பெறப்படுமாமன்றித் தமிழர்களுக்கும் உலகத்திலுள்ள எல்லா மாந்தருக்கும் அஃதேயிடமாமென்பது அதனாற் போதராமையின் யாம் முற்கிளந்துகூறிய **இலெமுரியா** என்னு நிலப்பரப்பே தமிழர்கள் தொன்றுதொட்டுவதிதற்கு இடமாயிருந்த தென்பதூஉம், அந்நிலப்பரப்பழிந்து படவே யதனுடனழிந்தோர் இந்தியா, மலைய தீபகற்பம், சீயம், பலுசிதானம், பாரசிகம், அராபியா, துருக்கி, கிரீசு, இத்தலி முதலான பலவேறு வகைப்பட்ட தேயங்களின் தென்பாகங்களிற் சென்று குடியேறி யங்ஙனங் குடியேறிய தேயங்களின் ஒழுகலாற்றிற்கேற்ப நாடொறும் ஒழுக்கமும் உருவமும் பாடையும் வேறுபட்டு வாழ்ந்தார்களென்பதூஉம் இனிது விளங்கும். அதுவன்றே,‡ கடவுள் : ஒன்று : எட்டு : கொல் : ஈன் : வேறு: சுருங்குமுதற் பலதமிழ்ச்சொற்கள் பலவேறுவகைப்பட்ட பாடைகளில் வழங்கப்படுவதூஉ மென்க. இன்னும் இதனாற் போதரும் உண்மை என்னெனின்; பண்டை நாளில் மக்கட் பரப் பென்பது இரண்டு கூறுபட்டு, ஒன்று வடக்கே **காந்தினேவிய** தீபகற்பமுதலான இடங்களில்வதிய, ஏனையது தெற்கே **இலெமுரியா** என்னும் பெருநிலப்பரப்பில் வதியப் பின் வடக்கிலுள்ள **காந்தினேவிய** முதலான இடங்கள் தட்பமிகுந்து உயிர் வாழ்வதற்கு அரிதாய் மாறினமையால் ஆண்டுறைந்த ஆரியர் தென்றிசைநோக்கிப் பன்முகமாய்ப் பரந்து போந்தும் தெற்கிலுள்ள **இலெமுரியா** என்னு நிலப்பரப்பு வெள்ளங்கொண்டழிதலின் ஆண்டிருந்தோர் வடதிசை நோக்கிப் பன்முகமாய்ச்

---

* Prof. Sayce. † Prof. Penka and Prof. Sayce.

‡God: One: Eight: Kill: Yean: Various: Shrink.

சென்றும் ஒருவரோடொருவர் விராய் ஒருவர்பாடையை யொருவர்கற்று ஒருவர் ஒழுக்கத்தை யொருவர்தழீஇ ஒருவரை யொருவர் வெற்றிகண்டு ஒருவர் ஒருவரை யாண்டு இவ்வாறெல்லாம் ஒன்றுபட்டு வேறுபிரித்துக் காணப்படா நீர்மையராயினு ரென்பதாம். இங்ஙனம் இவ்விருவேறு மக்கட் பகுதிகளும் ஒருங்குகூடி ஒன்றுய்ச்சமைதலின், தாமரை : மீன் : அடவி : நீர்: தீ: காலம் : உலகம் : மணி: முத்து: மென்மை: கருமை : திண்மை: வன்மை: வெண்மை: பசுமை: கருமை: தண்மை : கவான் : ஊன் : அவை : அந்தி : சுண்ணம் : வண்ணம் : பீழை: விழி : பகு : சுடு : கட்டு: தள் : மிகு : சால் : பற முதலிய செந்தமிழ்ச் சொற்கள் வடமொழியினும், சூரியன் : சந்திரன் : அமிழ்தம் : காரணம் : எந்திரம் : சிக்கிரம் : குங்குமம் : சமுத்திரம் : கருமம்: அற்புதம் : பசு : விரோதி ; தேவர் முதலிய வடசொற்கள் செந்தமிழினும் கலந்து வழங்குவனவாயின. இனி, 'இந்து மகா சமுத்திரம்' எனப்பெயரிய மாகடல் பல்லாயிர மாண்டுகளுக்கு முன் பெருநிலப்பரப்பா யிருந்ததென்று நீவி ரோதியது பெரிதும் வியத்தக்க தொன்றுகாண், ஆயினும், அதனை ஆங்கிலநூல் வல்லார் கூறுமாறுபற்றி நீவிரும் எடுத்துக்கொண்டுரைத்தலின் மற்றது எம்மனோராற் றேறப்படுந்தகையதன்றும், என்னை ? தமிழ்நூலிலிருந்து காரண மெடுத்துக் காட்டி நிறுவாமையான் என்னு மெமக்குறுதி பயத்தற்பொருட்டுத் தமிழ் நூன் முகத்தானும் அதனைச் சிறிது விளக்கிக்காட்டுதும்.

தமிழில் மிகப்பழங்காப்பியமென அறிவுடையோர் பலரும் ஒத்தெடுத்த 'சிலப்பதிகார'த்திற் கிளக்கப்படுவனயாவும் உண்மைப் பொருள்களா மென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது. அதில் ஆசிரியர்-இளங்கோவடிகள் *"வடிவேலெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக்கோடுங் கோடுங்கடல் கொள்ள" என்றார் ; இனி வேனிற்காதையில் "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்" என்புழி உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் "அக்காலத்து அவர்நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லை

* காடு காண்காதை.

யாகிய பஃறுளியென்னு மாற்றிற்கு மிடையே *எழுநூற்றுக் காவதவாறும் இவற்றின் நீர்மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும் ஏழ் மதுரைநாடும் ஏழ்முன்பாலை நாடும் ஏழ் பின்பாலை நாடும் ஏழ் குன்றநாடும் ஏழ் குணகாரைநாடும் ஏழ் குறும்பனை நாடு மென்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும் குமரி கொல்ல முதலிய பன்மலை நாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க்குமரி வடபெருங்கோட்டின்காறும் கடல்கொண் டொழிதலாற் குமரிப் பௌவ மென்றார்" என்று கூறினர்.

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.

## பெரியான். (அ)

பெரியான் என்ற பண்டைத் தமிழ்ச்சொல் கடவுளைக் குறிக்கும் பெயர்களில் ஒன்று. இந்தச் சொல்லில் அடங்கி யுள்ள பொருள்களை இக்கட்டுரையில் கருதுவாம்.

2. பெரியான் என்னும் சொல் பெருமை என்னும் பண்புச் சொல்லடியாகப் பிறந்த பெயர்ச்சொல். பெருமை "என்னுஞ்

---

* இதனால், எழுநூற்றுக்காவதம் அகன்று கிடந்த நாற்பத் தொன்பது நாடுகள் கடல் கொள்ளப்பட்டனவென்பது புலனும். இந்நாள் அளவைப்படி ஒரு காவத மென்பது பத்துமைலாக எழுநூறு காவதமும் ஏழாயிரமைலெல்லையளவாம். 'இந்து மகாசமுத்திரம்' இப்போது ஆங்கில நூல்வல்லார் அளந்தறிந்தவாற்றான் இருநூற் றைம்பது இலட்சஞ் சதுரமைலுடைய தென்பதியாருமறிவர். இதனாலது சிறிதேறக்குறைய ஐம்பதுஇலட்சம் மைல் நீளமும ஐம்பது இலட்சம் மைல் அகலமுமுடையதென்பது பெறப்படும். பெறவே, இவ்வைம் பது இலட்சம் மைல் நீளத்தில் ஏழாயிரமைல் நிலனுயிருந்து கடல் கொள்ளப்பட்டதென்பது. இப்போதுள்ள மோரீசுதீவுக்கும் வம்பாய் நகரத்திற்கும் இடையிலுள்ள நீர்ப்பரவை இரண்டாயிரத்தைந்நூறு மைல் நீளத்தது. இனி மோரீசுதீவுக்குத் தெற்கேயுள்ள கேர்கியூலன் என்னுந் தீவுக்கும் மோரீசுதீவுக்கு மிடையிலுள்ள நீளமும் அவ்வளவின தேயாம். ஆகவே நீளத்தில் இப்போதுள்ள குமரிமுனையிலிருந்து கேர்கியூலன் என்னுந் தீவுக்குத் தெற்கிலுள்ளவரையிலும் அகலத்தில் மடகாசிகர் தீவுமுதற் சுமத்திரா, சாவா முதலிய தீவுகளையுள்ளடக்கிய சந்தாதி தீவுகளளவும் நீண்டு விரிந்துகிடந்த குமரிநாடு (இலெமூரியா) கடல்கொண்டொழிந்ததென்க.

சொல்லானது தன்னிடத்துள்ள மைவிகுதி கெட்டு, இடை உகரம் இ ஆகி, பெரிஎன நின்று; அத்துடன் ஆண்பாற் படர்க்கை விகுதி ஆன்சேர்ந்தபொழுது யகர உடம்படு மெய்தோன்றிப் பெரியான் என்று ஆகியது" பெரி என்பதனோடு அன், அர், ஆர் விகுதிகள் சேர்ந்து ; முறையே பெரியன், பெரியர், பெரியார், என வருவனவுமுண்டு. பெரியவன் பெரியவர் என வருவனவுமுள. செய்யுளில், ஆகாரம் ஓகாரமாய்த்திரிந்து பெரியோன் பெரியோர் என வருவனவுமுள.

3. இச்சொற்கள் கடவுளுக்குப் பெயர்களாய் வருவனவற்றைத் தேவாரங்களிலும் திருவாசகத்திலும் பலஇடங்களில் காணலாம். சில இங்கு காட்டப்படும். திருஞான சம்பந்த சுவாமிகள் திருக்கள்ளில் தேவாரப்பதிகம் கூ-வது பாட்டில் "கள்ளின் மேயான் **பெரியா** னென்றறிவார்கள் பேசுவாரே" என்றும், திருப்பாசுரப்பதிகம் உ-வது பாட்டில், '**பெரியரா** ரறிவரவர் பெற்றியே' என்றும்; திருநாவுக்கரசு சுவாமிகள் திரு இன்னம்பர் திருத்தாண்டகப் பதிகம் ௬-வது பாட்டில், 'தம்மிற்பிறர் **பெரியா**ரில்லை போலும்' என்றும், திருமாற் பேறு திருத்தாண்டகப்பதிகம் எ-வது பாட்டில் 'பிறவானைப் பிறவாத பெருமையானைப் **பெரியானை**' என்றும்; மாணிக்கவாசக சுவாமிகள் திருவண்டப்பகுதி அகவலில் 'பிரமன்மால் காணாப் **பெரியோன்** காண்க' என்றும் கூறியிருத்தல் காண்க.

4. பெருமை என்பது, பேரருளுடைமை பேரறிவுடைமை முடிவிலாற்றலுடைமை முதலிய எட்டுப் பண்புகளாலும் நிறைந்த பெருந்தகைமையாகும். அதாவது, அன்பினாலும் அறிவினாலும் செயலினாலும் மிக்க ஆற்றலும் பண்பும் நிறைந்துள்ள தன்மை. இவ்வாற்றல்களையும் பண்புகளையும் உடையவனே பெரியவன் ஆவான். கடவுள், நிறைந்த அன்பு, அறிவு, செயல் ஆற்றல்களையும் பண்புகளையும் உடையவன்; ஆதலின் அவன் அவைகளைத் தனக்கென வழங்கச் சிறிதும் தேவையில்லாதவன். அவைகளை உயிர்களுடைய நலத்தின் பொருட்டே ஓய்வின்றி எப்பொழுதும் வழங்கும் அருட் பெருந்தன்மையுடைய

வன். அவனை ஒப்பாரும் மிக்காரும் ஒருவருமில்லை யாதலின் அவன் பெரியவன் என முற்காலத்தமிழ் அறிஞர்கள் கூறினர் கள்.

5. பெருமை என்னும் சொல், இக்காலத்தில் உலகவழக்கில் செருக்கு என்னும் பொருளில் வழங்கப்படுகின்றது. முற்காலத்தில் அவ்வாறு வழங்கப்படவில்லை. உள்ளச் செருக்கு (Pride) என்னும் பொருளில் பெருமிதம் என்னும் சொல் முற்காலத்தில் வழங்கப்பட்டு வந்தது. திருவள்ளுவ நாயனர், பெருமை என்னும் கூ-அம் அதிகாரத்தில் ஙு-வது பாட்டில், "பெருமை பெருமிதமின்மை சிறுமை பெருமிதமூர்ந்து விடல்" என்று கூறியிருத்தல் காண்க. இத்தகைய பெருமையுடையவனே உயிர்களுக்கெல்லாம் தலைவனு யிருத்தற்குத் தகுதியுடையவனு தலின் பெரியானுயுள்ளவன் தலைவனும் ஆவான். முன்னே தலைவன் என்ற கடவுட்பெயர்ப் பொருளைப்பற்றி எழுதிய கருத்துக்கள் பெரியான் என்ற சொல்லுக்கும் ஒக்கும்.

6. பெரியான் என்றசொல் பண்டைக்காலந் தொடங்கி நூல்வழக்கிலும் உலகப் பேச்சுவழக்கிலும் மக்களுக்கும் வழங்கப்பட்டு வருகின்றது. உயிர்கள் ஒன்றைச் சார்தலும் சார்ந்த வண்ண மாதலுமாகிய இயற்கைப் பண்பு உடையவைகள். மக்களுயிர்க டங்களுடைய கட்டுக் (பந்தம்) காலத்தில், உலகமாகிய பொய்யை (அசத்தை)ச் சார்ந்து அதனைப்பற்றியுள்ள பண்புகளையும், மெய் அறிவு உடையவைகளாய்க் கட்டு நீங்கிய காலத்தில், மெய்ப் பொருளாகிய கடவுளை (சத்தை)ச் சார்ந்து கடவுளுடைய பண்புகளையும் அடைவன எனச் சிவநெறி நூல்கள் கூறுகின்றன. மக்கள் மெய்யுணர்வு அடைந்த காலத்தில் கடவுளைச்சார்ந்து அவனுடைய எட்டுப் பண்புகளையும் உடையவர்களாகின்ருர்கள். ஆதலின், அவர்களையும் கடவுளைப்போலப் பெரியார்கள் என்று முன்னைத்தமிழ் அறிஞர்கள் கூறினர்கள். மக்களும் எட்டுப் பண்புகளையும் உடையராவர் என்னுங் கருத்தைத், திருநாவுக்கரசு சுவாமிகள் தம்மைப்பற்றிக் கூறும் பொழுது "தேவாதிதேவன் சிவனென் சிந்தை சேர்ந்திருந்தான்

தென்றிசைக் கோன்றானே வந்து கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங் குணமாகக் கொள்ளோ மெண்குணத்துளோமே" என்று மறுமாற்றத் திருத்தாண்டகப் பதிகம் ௧0-வது பாட்டிற் கூறியருளினார். ஆகவே, பெரியார் என்ற சொல்லானது உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் விட்டு, மெய் உணர்வு பெற்றுக் கடவுளுடைய அருட்டிருவடிகளை என்றும் மறவாதிருக்கும் உள்ளச் செம்மையுடைய உண்மை அடியார்களையே குறிக்கும். ஆனால் பிற்காலத்தில் அச்சொல்லானது அப்பண்பு சிறிது உடைய மக்களுக்கும், கல்வி செல்வ முதலிய சிறப்பு உடைய மக்களுக்கும் வழங்கப்பட்டுவந்தது. உயர்ந்தார் என்னும் சொல்லும் ஏறக்குறையப் பெரியோர் என்ற சொல்லில் அடங்கியுள்ள கருத்துக்களையே குறிக்கின்றது.

7. மேலே கூறியவாற்றால், கடவுள் தனக்குக் கீழ்ப்பட்ட எல்லா உயிர்களுடைய நலத்தை நாடிச்செய்யும் பொருட்டிறமுடையனாதலின், அவன் எல்லா உயிர்களுக்கும் பெரியான் எனப்பட்டான். மக்களில் அத்துணைப் பொருளுடையவர்கள் இல்லையானாலும் யாதாமொரு பிரிவுமக்கள் தாங்கள் எந்த மக்களுக்குப் பெரியார் அல்லது உயர்ந்தோர் என்று சொல்லுகிறார்களோ அவர்களுடைய நலத்தை உள்ளத்தில் நாடித்தங்கள் பொருளாலும் கல்வி அறிவாலும் இயன்றவரை உடலுழைப்பினால் செயல் செய்கிறவர்களாயிருத்தல் வேண்டும். பிறமக்கட் கூட்டத்தை இகழ்ந்து பேசுகிறவர்களும் அவர்களாற் பயன் பெறுந்தன்னல முடையவர்களும் அவர்களிடத்தில் தாங்கள் சொல்லிக்கொள்கிற உயர்ந்த தகுதியினாலுண்டாகும் கடனைச் செய்யாமல் உரிமை மாத்திரம் பாராட்டித் தங்களுக்குப் பெருந்தன்மை பேசுகிறவர்களும் பெரியார் என்று கூறப்படுதற்குச் சிறிதும் பொருத்தமில்லாத அறியாமை உரையாகும். அவ்வுரையால், பெருமை கற்பனை செய்கிறவர்களுக்கும் கற்பனை செய்யப்படுகிறவர்களுக்கும் தீமையே விளையும். கற்பனை செய்கிறவர்களுக்கு உண்மைப் பெருமை என்பது யாது என்பதைப் பற்றி அறியாமை வளரும்; கற்பனை செய்யப்படுகிறவர்களுக்கு உள்ளச் செருக்கும் அறியாமையும் வளரும். பிறப்பினால் மாத்

திரம் உயர்வு உள்ளது என்று ஒழுகிவரும் போலிச் சாதிக் கருத்து நமது நாட்டில் மக்களுக்கு மிக்க கேடு நெடுங்காலமாக விளைத்து வருகின்றது. அதனை, யாருக்கும் தீங்கு உண்டாகா மல் நீக்கவேண்டுமாற்றால் நீக்குதல் அறிவுடையோர் கடமை யாகும்.

---

# கருமை

(ருஎக-ம் பக்கத் தொடர்ச்சி)

(திருக் கபசம் எழுதியது)

இயக்கமென்பதைத் 'தொழில் நிகழ்ச்சி, புடைபெயர்ச்சி, எழுச்சி என்று பலவகையாகக் கூறலாம்' தூக்கமென்பது அசைவின்மை, வாளாகிடத்தல், தொழிலொடுக்கம் ஆகிய இவையாம். இவற்றிற்குள்ள பொருத்தத்தை ஒரெடுத்துக் காட்டால் விளக்குதும். வளர்ந்து நிற்குமொரு மரத்தைக் கருதுவோமாயின், அதிலியக்கம் நிகழ்ந்துகொண்டே யிருக்கின் றது. வேரிலிருந்து சாறு மேலேறிக் கிளை, தழை முதலியவற் றிற்குச் செல்கின்றது. இங்ஙனமொரு மரத்தில் நடக்கின்ற இயக்கமெல்லாம் எற்றிற்கு? தன்னைப்போலொரு மரத்தைத் தோற்றுவிக்கக்கூடிய விதையை ஈனும் பொருட்டாகத்தானே. விதை என்பது ஒருயிர் ஒடுங்கிக் கிடக்கும் நிலையேயன்றி வேறன்று. நுண்ணிய ஆலவிதையில், மிகச் சுருங்கிய அள வில் நீண்டு கிடக்கும் பெரிய ஆலமரத்தின் உயிர் ஒடுங்கிக் கிடக் கின்றது. இவ்வியற்கை நிகழ்ச்சியைவிடப் பெரியதொரு விந்தையுண்டுகொல்? ஆலமரத்திலியங்குகின்ற உயிர் ஆல விதையில் தூங்குகின்றது. ஏற்ற நிலமும், வேண்டிய ஈரமுங் கண்டுழி விதையில் தூங்குகின்ற உயிர் இயங்கத்தொடங்கும். ஆதலின், இயக்கம் தூக்கத்திற் புகுகின்றது; தூக்கத்திலிருந்து இயக்கம் பிறக்கின்றது. உண்மை இங்ஙனமிருத்தலின் இயக் கங்குன்றிய நிலையைத் தூக்கமாகவும், தூக்கங்குன்றிய நிலையை இயக்கமாகவும் கொள்ளல்வேண்டும்.

இயக்கத்திற்குந் தூக்கத்திற்குமுள்ள தொடர்ச்சியை மற்றொரு முறையிற் காட்டுதும். அரசு, ஆல், பனை, வேம்பு, புளி, மா, புன்கு முதலிய மரங்களின் வளர்ச்சியை யுற்றுநோக்குவார்க்கு, தளிரெடுத்தல், பூத்தல், காய்த்தல் முதலியவை தைம் முதல் ஆனிவரையில் நடைபெறுகின்றன வென்பது இனிது புலப்படும். வேம்பு பங்குனியிற் பூப்பதால் அதன் தொழில் அல்லது இயக்கம் தை மாசியிலேயே தொடங்குகிறதென்று சொல்லுதல் தவறாகாது. வேம்பு காய்க்கும்போது புளியமாம் தளிர் ஈனுகின்றது. பொதுவாக ஆனித்திங்கள் முடியுமுன் நிலைத்திணை உயிர்களெல்லாம் பூத்துக் காய்த்து விடுகின்றன. பழுத்தல் மஃத்திரம் சித்திரை வைகாசி தொட்டுப் புரட்டாசி வரையில் நடக்கும். பழமென்பது விதை யாதலாலும், விதையென்பது உயிரின் தூக்க மாதலாலும், ஆனிக்குப்பின் பழங்கள் தோன்றுவது இயற்கையே. ஈண்டு நாம் கருதுவது இயக்கம். இயக்கத்தைக் காட்டுகின்ற தளிரெடுத்தல், பூத்தல், பிஞ்சு விடுதல் முதலியவெல்லாம் ஆனிக்குள் நடக்கின்றனவென்பது பொதுவகையால் நோக்குங்கால் உண்மையாம். ஆனிக்குப் பின கார் காலமும் (கார்—கருமை) இலை யுதிர்காலமுந் தொடங்குகின்றன. இலை யுதிர்தலாவது இயக்க மொடுங்குதல். ஆதலின் நிலைத்திணை யுயிர்களின் தூக்கம் ஆடிமுதல் மார்கழிவரையாம்.

மேனாடுகளில் இவ்வுண்மை மிகத்தெளிவாகத் தோன்றுகின்றது. இளவேனில், முதுவேனில், கார் என்று நாம் சொல்லும் பெரும்பொழுதுகளுக்கு ஆங்கிலத்தில் **Spring, Summer, Autumn** என்று பெயர். இங்கிலாந்திலும், பொதுவாக எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் மேற்குறித்த மூன்று பெரும்பொழுதுகளுக்குள் தளிர்த்தல், மலரெடுத்தல், பயன்தரல் ஆகிய செய்திகள் நிலைத்திணையுயிர்களுக்கு நிகழ்ந்து விடுகின்றன. அடுத்து வருங்குளிர்காலத்தில் உறைபனி அங்குலக் கணக்காய்த் தரையிற் படிந்து நிலத்தை மூடுவதாற் பசும்புற்றலையுங் காண்பரிதாகின்றது. ஓரிலை தானுமின்றி மரங்கள் வெறுங் கொம்புகளுங் கிளைகளுமாய் நிற்கின்றன. மேனாட்டுக் குளிர்காலக் காட்சிகளைப் படங்களிற் பார்த்தால் இது நன்கு விளங்கும். இதுபற்றி

முதிர்வயதைக் குளிர்காலத்திற்கும், இளவயதை இளவேனிற் காலத்திற்கு மொப்பிடுதல் மேனாட்டார் வழக்கமாயிருக்கின்றது. இயக்கமுந் தூக்கமும் உத்தராயனத்தையுந் தக்ஷிணாயனத்தையும் பொருந்திவருவது மேனாட்டிற் குருடரு முணருமாறு வெளிப்படுகின்றது. இந்நிகழ்ச்சிகள் செடி, கொடி, மரங்களுக்கே யன்றி ஒரு வகையிலுயிர்களுக்கெல்லாம் பொருந்தும். குளிர் காலமெல்லாம் தூங்குகின்ற சில விலங்குகளு மிருக்கின்றன. இவை உணவெடுத்துக் கொள்ளாமலே குளிர் காலத்தைக் கழிக்கின்றனவென்று உயிர் நூலார் அறைகின்றனர். திருப்பள்ளி எழுச்சி என்று தமிழ்நாட்டில் வழங்குமொரு சொற்றொடர் எவ்வளவு பொருளைத் தன்னுளடக்கிக் கொண்டிருக்கின்றதென்பதை யுற்றுநோக்குக. (தொடரும்)

---

# சிறுமணித்திரள்

திரு M. S. பூரணலிங்கம் பிள்ளை அவர்கள், B. A., L. T.

பெரியோர் உரைகளில் இடையிடையே சிறு சிறு மணிகள் மினுங்குகின்றன. அவை அரிய பெரிய பொருள்களை விளக்குகின்றன. அவற்றிற் பெரும்பான்மையும் ஆயுள் நிகழ்ச்சியிற் காணப்பட்டன. சிற்றுயிர்கட்கு உற்றுழித்துணையாயுள்ளன. அதுபற்றியே பின்வருஞ் சிறுமணிகள் திரட்டப்பட்டுத் தரப் பட்டுள.

1. சாதாரணமான விவேகிகள் பொது விதிகளை விலக்கார்கள். சோர்வுடையவர்கட்குப் புகலிடம் சூட்சியேயாம். எக்காரணம் பற்றியும் அவர்கள் சூட்சிக்கு அதிகமாக ஒன்றையும் செய்ய நினையார்கள்.

2. விலங்கனைய மாக்கள் உயிர் நிலைப்பதற்கு இன்றியமையாத வுணவையே நாடுவார்கள். அன்னாருக்கு நூதனமாகப் பொருள்களைக்கண்டு பிடிக்கும் அவா இருப்பதில்லை. ஆனது பற்றிச் சிருட்டியினதிபதிகளென்ற பெருந்தன்மைக்குரிய மினுங்கும் மனவொளியை விருத்தி செய்யத் தக்க மனப்பாங்கு அவர்கட்கு அமைதலில்லை போலும்.

3. சமூக வாழ்க்கை இன்பங்களைப் பெறுவதற்குத் தடையாயுள்ள உலகக் கவலைகளினின்று விலகிப் போகும் வழியை மாக்களறியார்.

4. நாட்டுப் புறங்களிலுள்ள குடிபடைகளுக்குப் பண்டைய சூதுவாதில்லாத இயற்கைத் தன்மையுண்டு. அவர்களிடம் அன்பின் பொழிவும் சேர்க்காளியுணர்ச்சியும், காணப்படும் விருந்தினரை யோம்பும் வழக்கமுமுண்டு.

5. விருந்தோம்புதல் நன்மனதைக் காட்டுங் குறியென்பர்; பாத்திரமறியாத வேள்வியைப் பயிலுதல் மனச் சோம்பலையும் மடமையையும் விளக்கும்.

6. உலகில் ஆசாரம் என்பது பயின்ற மனதின் துலக்கமென்பதில்லாமல் ஓயாமல்கும்பிடுதலும் குழைத்திடுதலுமாகவே யிருக்கின்றது.

7. பொருளீட்டத்தால் ஏற்படும் உபசாரமும் பெருமையும் உண்மையுடையனவாகா. கேடில் விழுச் செல்வமென்ற கல்வியின் பயனாகிய மரியாதையே மாண்புடையது.

8. நள்ளிரவே மாந்திரியவேளை யெனப்படும். அவ்வேளையின் ஆற்றொழுக்கு மக்களின் இசை யொழுக்கினுமிகும்: அப்பொழுது அமைதியாற்றுந் தேவதைகள் வெளிவந்து மக்களின் மனவமளியைச் சாந்தப் படுத்தும். அக்காலம் சந்ததமே என்பர். அந்நேரத்தில் உலக வல்லல்கள் காணுங் கனவுகளாக மாறுகின்றன; காதலின் முதல் நம்பிக்கை போலவும், அநுபவித்த வின்பஞாபகம் போலவும் சாந்தமும் வசீகரமுமான ஆழ்ந்த சிந்தனைகள் தோன்றுகின்றன. விதியற்றவன் வாழ்வு எதிர் காலத்துமுளதாகின்றது. சஞ்சலமுற்ற நெஞ்சு படுந்துயரத்தை உலகச் சந்தடியில் தொலைத்தலியலாது.

9. வேலையாட்களுக்கு மிகக்குறைந்த கூலி கொடுப்பதால் களவு செய்தலவசியமாகின்றது. அடிமைத் தனத்தால் பொய்ம்மையும் மடமையும் ஏற்படுகின்றன. மக்கட் பிறப்பின் பெருமையைப் பாராட்டும் மனிதர்கள் வேலையாட்களிடம் கருணையுடையவர்களாயிருத்தல் நலம்.

10. ஆனந்தமான வாழ்வு போகாறகலுதலால் வாராது. அயலாரினுமதிகமான ஆனந்தமடைய அவாவுவோர் பாடுபடும் பண்ணையாட்களை இன்புறச் செய்வோராவர்.

11. வீட்டுப் பணியாட்களும் திருடர்களாயிருக்கலாம், அவர்கள் வழிப்பறி செய்வோரினுங் கொடியவராயிருக்கலாம். அவர்கள் பெரிய நகரங்களிற் கருவுறுகின்றனர். திரவியப் பெருக்காலுண்டாகும் இச்சைகளின் பயன்களே அவர்கள் நிர்ப்பந்தத்தை விட்டுத் தப்புவதற்குக் கடும்பாடுபடுபவர்கள் அவர்களல்லர்.

12. எதிர்பாராத புதுச் செல்வம் வந்துற்றக்கால் பலதீயொழுக்கங்களும் பிறக்கும். அவற்றால் மக்கள் மாக்களாகின்றனர். பொருளீட்டற்கு அவசியமான உழைப்பிற்குத் தக்கவாறே அச்செல்வரும் ஆனந்த முறுகின்றனர்.

13. பிரஞ்சு தேசத்தில் தலைதடுமாறிய குழப்பத்தால் சில நன்மைகளுமுண்டாயின. முடி மன்னர் யாண்டும் எச்சரிக்கையாயிருத்தல் வேண்டு மென்பதொன்று. பெருந்தகையாளருக்குப் பெருமைக் குறைவு மற்றொன்று. குடிகள் மடமை பொருந்திய மரியாதை செய்தலை யொழித்தனர். அன்றியும் மேலோர் தங்களுக்குச் செய்யும் கொடுமைகளைப் பயமில்லாமல் எடுத்துரைக்கும் ஆற்றலைப்பெற்றனர்.

14. குடித்தல் கூடாது. இதனை உபதேசித்தல் நலம். சாராய ஆலைகள் அதிகப்படுகின்றன. அவற்றால் வரும்பொருள் தொகை அரசியல் வருவாய்களிலொன்றாய் இருக்கின்றது. கள் தீர்வை அதிகப் பட்டால் வருமானம் அதிகம். குடிப்பவர் குடித்தே தீருவர். ஏழைகள் வறியர்களாகின்றனர். அரசியலார்கள் சாராயக்கடை வருவாய்கள் ஒழித்தால் குடிகளும் வறுமை யெய்தாமல் தழைப்பர், நல்லொழுக்க மெய்துவர்.

15. வம்பளப்புக்கு மூலம் சோம்பலேயன்றி தீயஇயற்கையன்று. சோம்பேறிகளே மனதைச் சுருங்கச் செய்யுஞ் சிறிய காரியங்களை விடாமல் கவனிப்பார்கள். அற்ப காரியங்களிற் கவனஞ் செலுத்துவதால் அதிக வுபயோகமான பெரிய காரியங்

களை யாக்குதல் இயலாது. நல்லொழுக்கத்திற்கு அடிப்படைப் போடவு முடியாது.

16. தலை நகாமும் தனித்தவுறைவிடமும் அறிவையும் அன்பையும் பெருக்குவதற்கு மிகச் சிறந்த கருவிகளாம். இரண்டும் நம்மை நாமறிவதற்கும் நாம் உலகை யறிவதற்கும் இயற்கை யமைப்பை யறிவதற்கும் இன்றியமையாதன. உலக மக்களிடங் கலத்தலால் நம்முடைய தப்பான எண்ணங்களைப்பற்றி நாம் ஆராயவும், அவற்றை ஆய ஆய அவை யொழியவும் இயலும் நாட்டுப் புறங்களில் இயற்கை யமைப்புடன் பழகப் பழக மனப்பாங்கிற் கொத்த பல நல்லெண்ணங்கள் சாதாரண மக்களுக்குத் தென்படாமல் நாகரிகர்களுக்குத் தோன்றுகின்றன. அவை விரிந்த ஆன்ம விசாரணைகளுக்கு இடங் கொடுக்கின்றன.

17. மனப் பயிற்சியும் மனச் சுவையும் வளர நாகரிகம் வளர்கின்றது. இயற்கையுணர்ச்சி கட்டுப்படக் கட்டுப்பட ஆவல்கள் வேகமடைகின்றன. அப்பொழுது அவை உறுதியான பொருள்களைப்பற்றி நிற்கும். இலை யெனில் தோன்றியழிவனவற்றையே மேற்கொள்ளும். சுகமும் சோம்பலுமே முறைதிரையற்ற புணர்ச்சிக்கு ஏதுக்களாகும். உடம்பின் வலுவிற்குத் தக்கவாறு மனவுழைப்புச் செய்யாதவனே சோம்பேறி யெனப்படுவான்.

18. இயற்கை நந்தாவனம் தென்னாடேயாம். அதிற்றான் ஆதி மக்கள் வாழ்ந்தனர். ஆங்கு சூரிய வணக்கம் இயற்கைப் பழக்கமாவதில்லை. ஏனெனில் எந்நாளும் கதிரவன் தோன்றுவன். அவன் அற்ப சொற்பமாகத் தோன்றும் வடநாட்டிலுள்ளார்க்குக் காயத்திரி ஜெபம் இயல்பாகும். குளிர்ந்த தேசத்திலுள்ளவர்கள் பருதியைப் புகழ நியாயமுண்டு; பருதி யொளிருந் திசை நோக்கிப் போவார்கள். சூரியோதயத்தைக் கண்டு ஆனந்தக் கூத்தாடுவார்கள். போன விடங்களில் பயிர் செய்து பிழைப்பார்கள். நாகரிக முதிராத மக்களே அபாயத்திற்குப் பயங் கொள்ளாத் துணிவுடையவர்களாயிருப்பார்கள். முகம்மதிய கிறிஸ்தவமதப் போர் வீரர்களே இதற்குத் தக்க சான்றாவர்.

19. மக்களுள் இயற்கை வேற்றுமைகளும் செயற்கை வேற்றுமைகளுமுள. இவ்வேறுபாடுகளைக் கவனிக்கப்படுவதில்லை. சீதோஷ்ண நிலைமையாலுண்டாகும் உற்சாகம் அல்லது யூகம், இன்பமல்லது இன்னா, இவை இயற்கை வேறுபாடுகளாகும். ஆட்சி முறை வகை, சமய முறைவகை இவற்றாலுண்டாகும் வேறுபாடுகள் செயற்கையாலுண்டாவன. அவை பல, நிலையாமல் மாறுவனவாம்.

20. அடிமைகள் சுறுசுறுப்பாயிருப்பதற்குக் காரணமில்லையாதலால் அவர்கள் சுயநயங் கருதிச் சுயபுத்தியைத் தீட்டுவதில்லை. ஆனதுபற்றி அவர்கள் விலங்குகள் போல் திரிவார்கள். அவர்கள் கலைகளைப் பயிலுவதுமில்லை. தொழில்களைக் கற்பதுமில்லை. விருத்தி செய்யும் ஆத்திரமும் ஏற்படுவதில்லை.

21. இந்நூற்றாண்டின் சிறப்பு ஆராய்ச்சி செய்தலேயாம். இதனால் இனி வருந் தலைமுறைகளுக்கு அறிவுதிரளும். இத்திரட்சியால் பொய்யான வழக்க வொழுக்கங்கள் இறுதியுறும். இவை உறுதிப்பாடெய்துவது மடமையின் உறுதியான நிலைமையைப் பொறுத்ததாகும்.

22. பெண்கள் பருவமுறும் பொழுது தங்கள் நெஞ்சைத் தங்கள் கோட்பாடுகளுக்குப் பலியிடவேண்டும், அல்லது தங்கள் கொள்கைகளைத் தங்கள் நெஞ்சிற்குப் பலி கொடுக்க நேரிடும். ஆதலால் சிறுவயதிலேயே நல்லுணர்ச்சியையும் அருமையான கருத்துக்களையும் பயில்விக்கவேண்டும். இல்லெனில் ரோசாப் பூவிற்குச் செந்நிறம்பெருகப் பெருக அதன்முட்களும் வளர்ந்து கை கொல்லுவது போல நெஞ்சைப் புண்படுத்தும்.

23. உறுதியான எண்ணங்கள் உருக்கமான நெஞ்சில் தோன்றினால் அவற்றைக்கெடுத்தலாகாது. உறுதியான வுணர்ச்சிகளே மனக்கிடக்கைகளாகின்றன. தோன்றி மறையும் புலப்பாடுகளை அன்புடன் ஞாபகப்படுத்துவது மனோபாவமே.

24. அரசியற் பேச்சால் அறிவு விரியும், அகம் பெருகும் என்பர்.

25. நம்பிக்கையற்ற மூர்க்கமான செய்கை திருந்தத்

தகாத தீயொழுக்கத்தால் வருவதன்று. இதுசிரசாக்கினை நியாய மென்பதைக் காட்டத்தகும் போலிச் சாக்குப்போக்காகும்.

26. யாக்கையைப் பாதுகாக்குமாசை உலகெங்குங்காணப் படும். தசை, தோல், எலும்பு இவை அழுகாதிருத்தற்பொருட்டு உயர்ந்த உறுப்புகளைப் பாழடையச்செய்கின்றனர். சிலர் சாம்பல் சாம்பலுடன், புழுதி புழுதியுடன் என்ற வாக்கியம் ஆயும் மன திற்குவரும். இயற்கையழிவினுங் கேடானது சமாதி வைத்த லாகும். யாக்கையினிழிதன்மையை மூடிவைக்கும் போர்வை யைப் பிரித்தெடுத்துக் காட்டுதல் பைம்மறியாப் பார்த்தலாகும். அது மனிதத் தன்மைக்கே துரோகமாகும். கூட்டைவிட்டுயிர் போனபின் அதனைக் காப்பாற்றுதல் சாவின் ஆபாசத்தை விளக் குவதாகும். உன்னதப் பொருள்களின் அழிவைச் சிந்தித்தலால் மனத்தையுயர்த்தத் தக்க மனக் கோட்டரவுண்டாகும். முன் னிருந்த மக்களின் முயற்சிகள் அரசாங்கங்கள் அரசர்களின் தலை விதிகள், காலத்தால் விளையும் பெருங் கேடுகள், இவற்றையுன் னும் பொழுது இவை விருத்தியினிமித்தம் ஏற்படும் கால மாறு தல்களாகவே தோன்றும். உன்னுந்தோறும் உன்னுந்தோறும் நம் ஆன்மா அகலுகின்றது. நம் சிறுமையை நாம் மறக்கின்றோம். அழிந்துபோக வேண்டியனவற்றை அழியாமலிருக்குமாறு செய்யு முயற்சிகளால் இத்தகைய துன்புறுத்தும் ஞாபகங்கள் வருகின்றன. உயிரே; நீ யார்? இந்த மூச்சுயாண்டுச் செல்கின் றது? யானென்ற இந்த ஆணவம் எங்கே போகின்றது? எந்தப் பிரகிருதிப் பொருளிற் கலந்து அதனை ஊக்கியும் தானும் ஊக்க மடைகின்றது? கிளர்ச்சியின் மாயத்தையுடைக்க வல்லது எது? நெஞ்சில் சுகந்தமிட்டு அன்புடன் வைத்த எவ்வுருவையும் எவ ரும் அழுகுமாறு வைத்துப் பாரார். இதை நினைக்கில் குடல் குமட்டுகிறது. சமாதியிலுள்ள செல்வரின் சிறப்பு இதுதானே? மேலோர் கீழோர் எல்லோரையுஞ் சமப்படுத்தும் வாளைக் கொண்டு மக்கட் சிறப்பினை அரிதல் நன்றாகும். நாம் மனிதப் பெருமை நிலையாமைக்கு ஞாபகச் சின்னமாக விருத்தலினும் அனைவரும் அனைத்துஞ் சமமே யென்றல் சிறப்பன்றோ?

27. வறுமையே தீ யொழுக்கத்திற்கு மூலம். ஆதலால்

ஒவ்வொரு தொழிலாளிக்கும், கைக்கூலிகள் தவிர, ஊழியத்திற்குப் போதுமான சம்பள மேற்படாத நிலைமையில் நல்லொழுக்க மேற்பட நியாயமேயில்லை. வலிமையுற்றோர் சோம்பேறிகளாகிறார். ஊழியத்திற்குத் தக்க ஊதியங் கிடையாமையால் மக்கட்கு இழிமை நிகழ்கின்றது. முதலாளி, ஊழியக்காரன் என்ற இச் சகப் பெயர்கள் ஏற்படுகின்றன. எவருமறிந்தகேடான கூட்டுறவும் மலிகின்றது.

28. பகுத்தறியாத வேள்வியால் விளையும் மானக்கேடான களியாட்டு நாளடைவில் ஆண்மையாகமாறிச் செவ்விய நடை பெறினும் பெறலாம் இவ்விதமாற்றம் திடீரென்று உண்டாகாது.

29. வக்கீல்கள் வெட்டுக்கிளிகளனையர், மக்களுக்கு அறிவு பெருகப் பெருக இவ்வெட்டுக் கிளிகளும் குறையும், சுயநலம் பாராட்டும் பெரும் பான்மையோர் சிற்சில வழிகளில் தங்களறிவைச் செலுத்துவர், பொதுநன்மைக் குழைக்க அவர் மனஞ் செல்வதில்லை. சட்டநியாயம் பேசுவோர் ஏனையரினும் அதிகமான சூட்சியுள்ளவராய்ச் சுயநலமே கருதுவர். தீயொழுக்கிற் காணப்படும் இக்கூடாமையான அறிவாளிகள் சரி, தப்பு என்ற விபரத்தை யடைய வொட்டாமல் நல்லொழுக்கத்தைக் கீழறுக்கின்றார்கள்.

30. மக்களறிவிலிகளாயிருத்தலால் மன்றாடிகள் கலகங்களை உண்டுபண்ணுகின்றனர். வெகுகாலமாக அவர்கள் பேதை மக்களிடைச் சண்டையை மூட்டி அவர்கள் பொருளைக் கொள்ளையிடுகின்றனர். சரியான பஞ்சாயத்துகள் ஏற்படின் சண்டையும் சச்சரவும் ஓயும். மன்றாடிகளின் தொகையும் குறையும், அன்னார் வாழ்வுந் தாழும்.

31. கைக்கூலிவாங்கத் தெரியாத நீதிபதிகள், கோழைகளெனப்படுவர். இக்கோழைகள் வம்பர்களைக் காணின் கொலை கொலையாகப் பயப்படுவர். ஏனெனில் அவர்களால் தங்களுக்கு இடுக்கண் பெருகுமென்ற பீதி அதிகம். தங்களிடங் குற்றங் காணப்படுமென்ற அச்சத்தால் அவர்கள் ஆண்மை கெட்டுப் போகும். சுயநலம் பாரிப்பார் சீரிய வொழுக்கம் இழப்பர்.

நீதிபதிகள் தம்மனச் சான்றின்படியேனும் தம்மனக் கூர்மைப் படியேனும் நடப்பதற்கு இடமில்லை. ஒன்று அநியாயமென்று தங்களறிவிற்கு விளங்கினும் அவர்கள் அதன்படி நடத்தல் கூடாது. நீதிபதிகள் சாட்சிப் பிரமாணத்தால் மட்டும் தீர்ப்புச் சொல்லக் கட்டுப்பட்டவர்களா யிருக்கின்றனர். (தொடரும்)

---

# கம்பன் கவிச்சுவை யமைப்பு

[ஆசிரியர்* திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை]

(சகூ௯-ம் பக்கத்தொடர்ச்சி)

*இச்சிறப்புப் பெயர், தஞ்சைக்கரந்தைத் தமிழ்ச்சங்கத்துப் பத்தொன்பதாம் ஆண்டு நிறைவிழாவில் (28-9-30) திருவாளர் கா. நமச்சிவாய முதலியார், பிரசிடென்சி காலேஜ் தலைமைத் தமிழ் ஆசிரியர் சென்னை. அவர்களால் நாமக்கல் தாலுக்கா லத்திவாடி மிட்டா சமீன்தார் திருவாளர் R. சின்னசாமி ரெட்டியாரவர்கள் உவந்து செய்தளித்த மெடலுடன், பல பண்டிதமணிகள் பாராட்ட வழங்கப்பெற்றது.

பிறர்க்கு வெளியிடக்கூடாதென்றும், வெளியிட்டால் வெட்கமும் அவமானமும் நேருமென்றும் மறைத்துவைத்த இரகசியங்கள், அறிவுமயக்கத்தாலோ. அதே ஞாபகமான முதிர்ச்சியினாலோ சோர்வுற்று அயர்ந்து வெளியிட நேர்ந்து பின் அறியாது கூறினேமே என்று அஞ்சி அதனை வேறொரு போக்குக் காட்டி மறைத்துச் சமர்த்தித்தல் சிலரிடம் காணப்படுகின்ற இயற்கை. இவ்வாறு இராமாயணத்தில் இரண்டொரு கதாபாத்திரங்கள் நடந்துகொண்டதாகக் கம்பர் ஏற்ற இடத்தில் குறித்திருக்கின்றார். அவற்றை ஈண்டுக் காட்டுவோம்.

சூர்ப்பநகையால் சீதையின் பேரழகைக் கேட்டு மிகவும் மோகங்கொண்ட இராவணன் அக் காமவெப்பத்தைத் தீர்த்தற்குத் தண்ணிய நிலவை வீசும் சந்திரனால் ஆகுமென்று கருதி, “ ஈரமுண்டென்பர் ஓடி இந்துவைக் கொணர்மின் ” என்றுரைத்தனனாக, அவ்வழி ஏவலர் அழைப்ப, உடனே பகல் மறைந்து சூரியன் கரப்பக் கீழ்த்திசைக்கட் பொலிவுடன் மதியமும்

எழுந்தது. அந்நிலவின் தண்மை காமநோயை மாற்றுதற்கு மாருகப் பின்னும் அதிகமாய் வெதுப்பச் செய்தலால் பெரிதும் ஆற்ருணுகிய இராவணன் அம்மதியை நோக்கி (சந்திரோபாலம் பனம்) நிந்தித்தல் செய்கின்ருன்.

"தேயா நின்ருய் மெய்வெளுத்தா யுள்ளங்கறுத்தாய் நிலைதிரிந்து
காயாநின்ரு யொருநீயுங் கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயாநின்ற மலர்வாளி பறியாநின்ரு ரின்மையால்
ஓயாநின்றே னுயிர்காத்தற் குரியார்யாவ ருடுபதியே."

"நட்சத்திரங்களுக்குத் தலைவனுகிய மதியே சீதைகாரணமாக மன்மத பாணங்களால் வருந்துகின்ற என் வருத்தம் உன்னல் நீக்கப்படுமென நம்பி உன்னை வருவித்தேன்; நீயோ என்போலவே காமநோய் கொண்டு மெலிந்திருப்பதாகத் தோற்றுகின்றனை. எங்ஙனமெனின், யானும் நாட்குநாள் உடம்பு குறைந்திளைத்து வெளுத்தும், மனம் சிதையைப் பல்கால் எண்ணி எண்ணிக் கன்றிக் கறுத்தும், நிலைமை மாறுபட்டு மேலெல்லாம் வெதும்பியும் வருத்தம் மிக்குள்ளேன்; நீயும் அவ்வாறே வர வர இளைக்கும் உடம்புவெளுப்பேறினை; உட்பக்கம் கறுத்தனை; தண்ணிய நிலைமாறி வெம்பும் நிலையை அடைந்தனை; இங்ஙனம் நம் இருவர்க்கும் உடல் நிலை ஒரு தன்மைத்தாகலின் அதற்குக் காரணமாகிய நோயும் ஒன்றேயாயிருத்தல் துணியப்படும். படவே யான் காதல்கொண்ட சீதையின்மீது நீயும்காதல்கொண்டனையாதல் விளங்கும். எனக்குச் சூர்ப்பநகையால் சீதையின் அழகு சொல்லப்பட்டாற்போலவே நினக்கும் அவளைக் கண்டோர் யாரேனும் சொல்லியிருப்பார்கள்போலும். ஒருநோயாளி பின்னெரு நோயினனை நோய் தீர்க்கலாகாதவாறேபோல, உன்னல் நான் நோய் தீர்க்கப்படுவேனல்லேனுதலின் மற்றியாவரே என்னுயிர்காக்கவல்லார்? கூறுதி." என்றுரைத்தனன். சந்திரனுக்குப் பல பெயர்களிருப்பவும் 'உடுபதியே' என்று விளித்தது பல மனைவிகளையுடையோரே காமவின்பத்தைப் புதிது புதிதாய் அநுபவிக்க மனவெழுச்சியுடையோராவர்; தானும் பல மங்கையர் போகம் நுகர்ந்த பயிற்சிபற்றிச்சீதையையுந் திளைக்க விருப்பமுற்றதென்றும், மதியும் பல மனைவிகளாகிய நக்ஷத்

திரங்களை மணந்தவனாதலின் அவனும் புதுக்காமவேட்கையுடையவனாதல் இயல்பென்றும் உட்கொண்டு என்க. இங்ஙனம் கூறியபின் கருதுகின்றான் இராவணன் 'அட! என்செய்தோம். என்னால் வெல்லப்பட்டு எனக்கடிமை பூண்டு எனதாணை வழியொழுகும் ஏவலருள் ஒருவனாகிய இச்சந்திரனோடு என்னென்னவோ பேசிவிட்டோம். அந்தோ! இத்தனையும் காமநோய் தந்த மயக்கத்தால் வந்ததன்றோ? மூவுலகமும் ஒருங்கரசாளும் யான் எப்பெண்ணைக் காமுற்றேனோ அப்பெண்ணையே மதியமும் விரும்பினான் என அவன் முன் கூறுவேனானால் என்மதிப்பு என்படும்? அவ்வேவலன் என்னை என் நினைப்பன்? நுணலுந்தன் வாயாற் கெடும் என்பதுபோல் என் வாய் சோர்ந்து வந்த வார்த்தையால் அவன் என்னை அவமதித்து நிந்திக்குமாறு நேர்ந்ததே! இதற் கென்செய்வது? ஆயினும் ஒன்று கூறி இதனை வேறொரு வகையால் மறைக்கவேண்டும்' என்று துணிந்துமீண்டும் அவ்வம்புலியை நோக்கிக் கூறத்தொடங்கினான்:—

> ஆற்றாராகிற் றம்மைக்கொண் டடங்காரோவென் றாருயிர்க்குக்
> கூற்றாய்நின்ற குலச்சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத்
> தோற்றாயதனா னகங்கரிந்தாய் மெலிந்தாய் வெதும்பத்தொடங்கி
> மாற்றார் செல்வங் கண்டழிந்தால் வெற்றி யாக வற்றாமோ.

"ஓ! மதியமே! யான் முற்கூறியவாறு நீயடைந்த நோய் சீதையால் வந்ததாயினும் எனக்கும் உனக்குங்கருத்து வேறுபாடுண்டு. யான் அவளைக்கூடி முயங்க விரும்பிமெலிவேன்: நீயோ அவளது முகமாகிய தாமரைக்குத் தோற்றுவிட்டதால் மெலிகின்றனை; அந்தோ! பாவம்! உன் ஒளி கண்டு இராக்காலங்களில் வாடித் தோற்கும் இயல்பையுடைய தாமரைகட்கு மாறாக இச்சீதையின் முகமாகிய தாமரை ஒன்றும் உன்னை இலட்சியம் செய்யாமல் நின் முகம் வாடுமாறு பொலிந்து விளங்குகின்றது. இச்செயல் நின் நெஞ்சு சுடுதலால் உட்கரிந்து மெலிந்து வெதும்பலுற்றனை. ஆம். செய்வதென்? தம் பகைவரை வென்று மேம்படும்வலியில்லாவிடில், தங்கள் ஆற்றலின்மையை யறிந்து வருந்துகின்ற மனதை வேறொருவழியால் தேற்றிக்கொண்டு அடங்கியிருத்தல் தான் நன்மை. பகைவர் பெருஞ்செல்வத்தைக் கண்டு

பொறாமைகொண்டு பொங்கினல் அஃது வெற்றிதருவதாகுமோ! ஒன்று கேள்: எல்லாத் தாமரைகளும் உன்னல் குவிக்கப்பட்டுப் பொலிவழிய, சனகிமுகத் தாமரைமாத்திரம் அச்செயலுக்குட்படாது வீறுபெற்றிருத்தற்கு மிக நுட்பமாகிய காரணமுண்டு, அதனாலேயே அதனைக் குவிப்பிக்க உன்னலியலாதாயிற்று. நீ அறிவையோ? அறியாயேல் சொல்கின்றேன்கேள். உன்னைக் கண்டலரும் குவளையை (கண்) அம்முகத்தாமரை தன்னுட் கொண்டிருத்தலால், அத்தாமரை நினக்குக்குவிய நேரும்போது அதனுள்ளிருக்கும் குவளை, அதனைத் தான் மலர்தலால் மலர்த்தி இங்ஙனம் அஃது தோல்வியுறாமல் உன்னைத்தோற்கும்படி செய்து வெல்கின்றதனை அறிக" என்று முன் கூறியதனை மாற்றி வேறொரு சூழ்ச்சியால் சமர்த்தித்ததாக உரைத்தனர்.

மற்றோரிடத்தில், இராவணன் சீதையின்மேல் கொண்ட மோகமிகுதியால்மயங்கிக் காணுமிடங்களிலெல்லாம் உருவெளித்தோற்றமாகச் சீதையைக் கண்ணுற்று இத்துணை சீதைகளில் உண்மைச் சீதை ஒருத்திதானுளள். அவள் யாவளென்று தெரிவித்தற்கு நேரிற் கண்டறிந்தவளாகிய சூர்ப்பநகையை ஈங்கு வருவிக்க என்றாணையிட்டனன். அவ்வாறே வந்த அவளோடு தங்காய்! என் பார்வைகள் படுமிடங்களிலெல்லாம் தோன்றும் எண்ணிறந்த இத்துணை சீதைகளுள் மெய்ச்சீதையைக் காட்டுக என வினவினனாக, அச்சூர்ப்பநகையும், அவ்வாறே இராமன் மேற் கொண்ட காமநோய் கைம்மிக்குமயக்குறுத்த யாண்டும் இராமனையே உரு வெளியில் காண்கின்ற நிலையினளாயிருந்தமையால் அண்ணா!

**செந்தாமரைக் கண்ணொடுஞ் செங்கனி வாயினோடுஞ்**
**சந்தார்தடந் தோளொடுந் தாழ்தடக் கைகளோடும்**
**அந்தாரக லத்தொடு மஞ்சனக் குன்றமென்ன**
**வந்தானிவ னாகுமவ் வல்வி லிராமனென்றாள்.**

இங்கே எப்பக்கத்தும் தோன்றும் எழில் நிரம்பிய திருவடிவங்கள், செந்தாமரை யனையகண்கள், செவ்வியகனிபோல் சுவைத்து மகிழ்தற்கேற்றவாய், சந்தனப் பூச்சினவாகிய பெரியதோட்கள், முழங்கால்வரை நீண்டு தாழ்ந்த கைகள், மாலையணிந்த மார்பு

இவற்றோடு ஓர் நீலமலை எதிர் நின்றாற்போலக் காட்டுவனவாக லின் இவனே அவ்விராமன் என்பான் காணுதினனத் தன்னெஞ்சுட் கிடந்த இரகசியத்தை மறதியாக வாய்விட்டுரைத்தனள். உரைத்திடலும், இராவணன் சற்றுத் தெளிந்து: அம்மா! நான் கண்டது முற்றும் பெண்ணுருக்கள், நீ கூறுவது ஆணுருக்களாக விருக்கின்றன. இஃது அம்மனிதர் செய்த மாயமா? என்று விரைந்து வினவ. அதனைக் கேட்டவுடனே சூர்ப்பநகைக்கு மயக்கவுணர்வுதேறி நல்லுணர்வு தலைப்பட்டது. அடடா! என்செய்தேன்! என் பாழ்த்த பேதமை இவ்வளவு இக்கட்டில் காட்டிக்கொடுத்துவிட்டதே, எப்படி என்னை நல்லவளென்று இராவணனுக்கு நம்பிக்கை வரக்காட்டுவேன்; அவன் சீதைபாற் கொண்ட மோகத்தால் அவளையே காண்பவனாகவிருக்க, நானும் இராமனையே காண்பவளாகஉளறிவிட்டேனே. அவன்என்னையும் ஐயுறக்கூடுமே என்று விசாரத்துடன் எண்ணிக் கடைசியில் ஓர் உபாயத்தினால் அக்கருத்தை மாற்றவும், தான் வாய்சோர்ந்து கூறியதைச் சாமர்த்தியமாக மறைக்கவும் தொடங்கி, அண்ணா! நீர் காணும் அப்பெண்ணுருக்கள் மனமயக்கத்தால் வெளித் தோற்றும் உருவம் போலிகள் என்றுரைத்தாள். மீட்டும் இராவணன் நோக்கி, அப்படியாயின் யான் காமமிகுதியால் சீதையை உருவெளியிற்காணல் இயற்கை. நீ அவ்விராமனை அங்ஙனம்காண்பதற்கேதுயாது? என்றனன். அடிவயிற்றைப்பிசைந்துகொண்டு சூர்ப்பநகை ஓர் யுக்தி செய்கிறாள்.

எந்நாளவனென்னை யித்தீர்வரு மின்னல்செய்தான்
அந்நான்முதல் யானுமயர்த் திலனுகுமென்றாள்.

காமமோ கோபமோ ஒருவர்மேல் மிக்கிருக்கும்போது அவரை இடைவிடாது நினைக்கும் தன்மைபற்றி உருவெளித்தோற்றம் புலப்படும். எந்தக் காலத்தில் என் விசேட உறுப்புக்களைக் குறைத்து மானபங்கம் செய்தானே அவ்விராமன், அதுமுதல் அதனை நான் வெகுளிபொங்க நினைத்து இவ்வாறு செய்தனனே என்று ஆத்திரங்கொண்டுள்ளேன். ஆதலின் என்கண்கட்கு அவனுருவமே புலப்படுதற்கும் நியாயமுண்டு என்று பகர்ந்தனள்.

என்று நம் கம்பர் இவ்வியற்கையை வெகு திறம்படக் காட்டிச் சொல்வது கற்போர் வியக்கத்தக்க வளமுடையதன்றோ?

மற்றும், நாமொன்று நினைக்கத் தெய்வமொன்றுநினைக்கும் என்னும் பழமொழிப்படி நன்மை கருதிப்பேசும் பேச்சின் போக்கில் பின் விளைவதாகிய தீமையைக் குறிப்பதாகச் சொற்கள் தெய்வச்செயலாய்ப் பொருள்தரும்படி அமைதலும் உண்டு. இதுவும் நாம் உலகில் அருமையாய்க் காணும் நிகழ்ச்சியே. இவ்வாறு சிற்சில சொற்கள் இராமாயண கதாபாத்திரங்களில் சொல்ல நினைத்ததொன்றும் சொல்லியதால் போந்த கெடுதலை விளக்கும் பொருளொன்றுமாக அமைந்ததென நம் கவியரசர் தெரிவிக்கின்றார்.

இராவணனிடத்தில் சீதையின் வியக்கத்தக்க அழகின் நலங்களைக்கூறி, அன்னவளைப் பெற்றால் நீ இவ்வாறு பாராட்டுவாய் என்று கூறத்தொடங்கும் சூர்ப்பநகை,

> இந்திரன் சசியைப்பெற்றா னிருமூன்று வதனத்தோன்றன்
> றந்தையுமுமையைப் பெற்றான் றாமரைச் செங்கணானும்
> செந்திருமகளைப் பெற்றான்சீதையைப் பெற்றாய்நீயும்
> அந்தரம் பார்க்கினன்மை யவர்க்கில்லை யுனக்கேயையா.

என்று கூறுகின்றாள், "ஐயனே! உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் தத்தம் தகுதிக்கேற்ற கட்டழகும் நற்குணமும் பேரறிவும் வாய்ந்த பெண்மணிகளையே மனைவிகளாக அடைந்திருக்கின்றனர். எப்படியெனில், இந்திரன் தன் தகுதிக்கேற்ற பெருமை வாய்ந்த இந்திராணியையும், சிவபெருமானும் அங்ஙனமே உமாதேவியாரையும் மஹாவிஷ்ணு இலக்குமியையும் முறையே மனையாட்டிகளாக அடைந்துள்ளார் அன்றோ? அஃதேபோல், அவரினும் மிக்க தகுதியும் பெருமையும் ஒருங்கெய்திய நீயும் அவர்கள் மனைவிமார்களினும் அழகு முதலியவற்றால் தனியுயர்ந்தாளாகிய சீதையை அடைதல் நிச்சயம். ஆகையால் அடைந்துவிட்டாயென்றே கூறுவேன். முற்கூறியவர்களுக்கும் உனக்கும் வாய்த்த மனைவிமார்களின் சிறப்பை நோக்குமிடத்து அவர்களைப் பார்க்கினும் நீயே மிகவும் பாக்கியசாலியாகின்றனை."

எனக்கூறிய இக்கருத்து, அவள் எண்ணத்துக்கு மாறாக, அந்த ரம் பார்க்கின் நன்மை அவர்க்கு, இல்லை உனக்கே எனப் பகுக் கப்படுஞ் சொற்களால், எல்லா நலனகளும் அவர்கட்கே! உனக்கு நன்மை சிறிதும் இல்லை. எனப் பொருள் தருமாறும் அமைந்திருந்தது. என்று நயம்படக்கூறிய கம்பர் மதிநுட்பத் தையும் கருத்தின் ஆழத்தையும் சொல்வன்மையையும் உலகிய லறிவையும் கற்போரைப் பரவசப்படுத்தும் புலமையின் மேம் பாட்டையும் என்னென்போம். இவ்வொரு செய்யுளில் மட்டும் இவ்வாறு கருத்தமைத்தாரல்லர். கீழ்ப்போதரும் இரண்டு செய் யுட்களும் இதேவண்ணம் விகற்பப்பொருளையும் உடன்தரு மாறு அமைத்த விசித்திரம் நாமெல்லோரும் உவந்து போற் றிப் பாராட்டத்தக்க அருமைப்பாடுடையதேயாம். அவற்றை யும் காண்க.

பாகத்தி லொருவன்வைத்தான் பங்கயத்திருந்தபொன்னை
ஆகத்தி லொருவன்வைத்தான் அந்தணன் நாவில்வைத்தான்
மேகத்தின் மின்னைமுன்னே வென்றநுண் ணிடையைநீயும்
மாகத்தோள் வீரபெற்றால் எங்ஙனம் வைத்துவாழ்தி.

"வானளாவும் வீரத்தோள்களையுடைய ஐயா! இராவணா! முற் கூறியவாறு வாய்த்த உமை, திருமகள், கலைமகள் முதலிய மங் கையர்களை அவர்கள் மணாளர்கள் அருமை சிறப்பு அறிந்து முறையே ஒருடம்பின் பாகத்திலும், மார்பிலும், நாவிலும் இடங் தந்தேற்று வாழ்கின்றனர். அம்மூன்று கடவுட் பெண்டிர்களி னும் சிறந்தாளாகிய சானகியை நீர் அடைவீராயின் அன்னவளை எங்கே வைத்து வாழ்வீரோ? என்பாற் கூறும்." என வினவிக் காதலை மூட்டுகின்றாள். இச்செய்யுளினும் நீர் எங்கேவைத்து வாழப்போகின்றீர் என்னும் சொற்கள் வாழமாட்டீர் என்று தொனித்துப் பின்வருங் கேட்டைக் குறிப்பதாக வரைந்திருக் கின்றன.

பிள்ளைபோற் பேச்சினாளைப் பெற்றபின் பிழைக்கலாற்றாய்
கொள்ளை போகின்றசெல்வ மவளுக்கே கொடுத்தியைய
வள்ளலே யுனக்குநல்லேன் மற்றுநின் மனையில்வாழுங்
கிள்ளைபோன் மொழியார்க்கெல்லாங் கேடுசூழ்கின்றேனன்றே.

"ஐயா! இராவணு; மழலைச் சொற்போல் இன்பம் வரப்பேசும் அச் சனகியை நீ அடைந்தபின், அவற்கு ஓர் தவறும் இழைக்க நீ துணியமாட்டாய். மிகுந்த நின் செல்வத்தைமுற்றும் அவட்கே கொடுப்பவனுவாய், இன்னணம் பேரழகினளாகிய ஒருத்தியை நீ அடைதற்குக் காரணமாயிருக்கும் நான் உனக்கு நல்லவளே யாகின்றேன். என்றுலும், அவளைக் கண்டகண்கள் நின் காதன்மடந்தைகளை மறந்தும் நோக்காவாகலின், அம்மங்கையர்கள் தமக்கு ஒரு சக்களத்தியைத் தந்து இன்பத்தை அறவே தொலைத்தாளிவளென்று வருந்த ஒரு பெருந்தீமை செய்தவளாக முடிகின்றேனல்லனே? என்று பேசினள்." இதனுள் சீதையைப் பெற்றபின் பிழைக்கலாற்ருய் என்ற சொற்ருெடர், நீ உயிருடனிராது மரிப்பாய் என்றும், 'செல்வம் அவளுக்கே கொடுத்தி,' என்றது அவள் நிமித்தமே உன் செல்வம் அத்தனையும் இழக்கப்படும் என்றும், 'உனக்கு நல்லேன்' என்றது இறுதிக் காலத்து 'இராமா' என்றுரைப்போர்க்கும் வீடு கிட்டுமெனின் அவன் கணையால் முன்னிலையில்மரிக்கும் நினக்கு வீடுபேறு எளிதேகிட்ட யான் காரணமாயிருத்தல்பற்றி நினகசு மிக நல்லவளேயாயினேன் என்றும், நின் மனைவிமார்க்குக் கேடு சூழ்கின்றேன்' என்றது உன்னை யிழந்தபின் அவர்கள் தீமூழ்கி இறப்பார்கள் என்றும், பிறிது பொருளுணர்த்துமாறு அமைக்கப்பட்டிருக்கின்றது. இன்னோரன்ன பல இயல்புகளால் தம் காவியத்தை ஏனைக் காவியங்களினும் முதன்மைபெற வியற்றிய தாலன்றே கவிச்சக்கிரவர்த்தி என்று தமிழுலகம் அவரைப் பாராட்டுவதாயிற்று.

(தொடரும்.)

---

# சிவஞான போதக்கருத்து

## இரண்டாவது சூத்திரம்

### முதலாவது அதிகரணம்.

(ருாகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

**25.** சூத்திரத்திற் கூறியபடி "அவையே தானேயாய்" என்பது முதலாவது அதிகரணம். முதலாவது சூத்திரத்துடன் இரண்டாவது சூத்திரத்துக்குப் பொருளால் தொடர்பு இருத்தலை நாம் மேலே கண்டதுபோலச் சொல்லாலும் அதற்குத் தொடர்பு உள்ளது. முதலாவது சூத்திரம் மூன்றாவது அதிகரணத்தில், 'அந்தம் ஆதி' என்ற மேற்கோளிலுள்ள அந்தம் என்னும் சொல்லானது இச்சூத்திரத்து முதலாவது அதிகரணம் "அவையே தானேயாய்" என்ற சொற்றொடருக்கு எழுவாயாக நிற்கின்றது. அந்தம் என்பது அந்தத்தைச் செய்யுங் கடவுள். அதாவது அழித்தற்கடவுளாகிய முதல்வன் ஆகும். அவை என்ற சுட்டுப் பெயர்ச்சொல் மேற்சொன்ன 'அந்தமாதி' என்பதில் விகாரத்தால் தொக்கி நிற்கிற பிரிநிலையேகாரத்தால் விலக்கப்பட்டு நின்ற உயிருலகத்தை (சேதனப் பிரபஞ்சத்தை)க் குறிக்கின்றது. உயிர்கள் பல, ஆதலின், அவை எனப் பன்மையிற் கூறப்பட்டது. இரண்டு சூத்திரத்துக்குமுள்ள நெருங்கிய தொடர்பு குறித்தற் பொருட்டும், சொற்பல்காமைப் பொருட்டும், ஆசிரியர் இவ்வாறு முறையே பொருளாலும் சொல்லாலும் தொடர்பு அமைத்துக் கூறினர் என அறிக.

**26.** முதலாவது அதிகரணச் சொற்றொடராகிய "அவையே தானேயாய்" என்பதனை இரட்டுற மொழிந்து கொண்டுரைக்க" என்று உரை ஆசிரியர் சிவஞான சுவாமிகள் தமது சிற்றுரையில் ஆணை தருகின்றார். வழி நூலாசிரியரும் சிவஞான சித்தியாரில் "உலகெலாமாகி வேறாயுடனுமாய்" என்று கூறியதனால், இவ்வாறு உரை செய்தலே தகுதி என்பது பெறப்பட்டது. இரட்டுற மொழிதல் என்பது முப்பத்திரண்டு தந்திர உத்திகளுள் ஒன்று, (நன்னூல் பொதுப்பாயிரம் கச-ம் சூத்தி

ரம்) இரட்டுற மொழிதலாவது ஒரு சொற்றொடரை இரண்டு பொருள்படக் கூறுதல் ஆகும். இங்கே 'அவையே தானே யாய்' என்ற சொற்றொடர், அவையே தானே ஆய் என்ற மூன்று சொற்களை உடையது. மூன்று சொற்களில் ஈற்றில் நிற்கிற ஆய் என்னும் ஆக்கப் பொருட்சொல்லை அவையே தானே என்ற சொற்களுடன் தனித்தனியே அவையேஆய், தானேயாய் எனச் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் ஒரு பொருள் படக் கொள்ளுதலாகும். அவையே தானே என்ற இரண்டு சொற்களை யும் ஒன்று சேர்த்து, அப்படிச் சேர்க்கப்பட்ட அவையே தானே என்பதின் ஈற்றில் 'ஆய்' என்னும் சொல்லைவைத்து அவையே தானே ஆய் எனச் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் மற்றொரு பொருள்படக் கொள்ளுதலாகும். இவ்வாறு இரண்டு படப்பொருள்கொள்ளும்பொழுது அவையேதானேயாய் என்ற சொற்றொடர் அவையே ஆய் என்றும் தானே ஆய் என்றும் அவையே தானே ஆய் என்றும் மூன்று சொற்றொடர்களாகப் பிரிகின்றது. இந்த மூன்று சொற்றொடர்களின் பொருள்களைத் தனித்தும் ஒன்று சேர்த்தும் கருதுவாம்.

27. மேலே கூறியபடி முதலாவது சூத்திரத்தில் கூறப் பட்ட முதல்வன் என்ற சொல்லை எழுவாயாக வருவித்தும், அவை என்ற சுட்டுப் பெயர்ச்சொல்லுக்கு அதனாற் குறிக்கப் படுகிற உயிர்களை அதற்குப் பதிலாக வைத்தும் அவையே தானே ஆய் என்ற சொற்றொடரை நாம் கூறுங்கால் அது, முதல்வன் உயிர்களே தானேயாய் எனநிற்கும் இரண்டுபொருள் படக் கூறுதற்காக மேலே கூறியவண்ணம் பிரிக்கப்பட்டஅவை யே ஆய்தானே ஆய் அவையே தானே ஆய் என்ற சொற்றொ டர்கள் முதல்வன் உயிர்களே ஆய் எனவும், முதல்வன் தானே ஆய் எனவும் முதல்வன் உயிர்களே தானே ஆய் எனவும் வரும்.

28. இரண்டாவது சூத்திரத்தில் முதல்வன் தன்னிடத் தில் ஒடுங்கின உலகத்தை மீளப் படைக்கின்றான் என்று கூறும் பொழுது, அவன் உயிர்களோடு ஒன்றாய் நின்று படைப்பனோ வேறாய் நின்று படைப்பனோ உடனாய் நின்று படைப்பனோ

என்னும் ஐயக்கருத்துக்கள் மாணுக்கர் உள்ளத்தில் நிகழும் அன்றே? அவ்வையக் கருத்துக்களை நீக்குதற்கு ஆசிரியர் முதல்வன் உயிர்களேயாய் என்ற சொற்றொடரால் முதல்வன் உயிர்களோடு கலப்பினுல் ஒன்ருய் நின்று படைக்கின்ருன் எனவும், முதல்வன் தானேயாய் என்ற சொற்றொடரால் முதல்வன் பொருட்டன்மையால் உயிர்களுக்கு வேருய் நின்று படைக்கின்ருன் எனவும், முதல்வன் உயிர்களே தானேயாய் என்ற சொற்றொடரால் முதல்வன் உயிர்க்கு உயிராதற்றன்மையால் உயிர்களோடு உடனாய் நின்று படைக்கின்ருன் எனவும் கூறுகின்ருர். ஆகவே முதல்வன் படைப்புத்தொழில் செய்யுங்கால் உயிர்களோடு கலப்பினுல் ஒன்ருயும், பொருட்டன்மைபால் வேருயும், உயிர்க்கு உயிராதற்றன்மையால் உடனாயும் நிற்பன் என்பது முதலாவது அதிகரணத்திற் கூறப்பட்ட மேற்கோளாகும். மேற்கோளின் பொருளை நனி விளக்கப் புகுமுன் அதனைப்பற்றி மாணுக்கர் உள்ளத்தில் எழுகின்ற சில ஐயங்களை நீக்குவாம்.

29. முதலாவது சூத்திரத்தில் ஆசிரியர் **தோற்றம்**, நிலை, ஈறு எனப் படைப்பு, காப்பு, அழிப்பு என்று உலகத்துக்கு முத்தொழில்கள் கூறி, இரண்டாவது சூத்திரத்தில் அவ்வுலகத்தை மீளப்படைக்கும் முறைமையை மாத்திரம் கூறுவதாகச் சொல்லுதலினுல் முன்னொடு பின் முரணுதல் ஆகாதோ வெனின், ஆகாது; இயன்றவாறு காரணங்கூறுதும் முதலாவது. சூத்திரத்தில் உலகங்களெல்லாம் அழிந்து, பெரிய அழித்தற் கடவுள் (மகா சங்காரகாரணன்) மாத்திரம் எஞ்சி நிற்கிற இறுதிக் கண்ணுள்ளதாகிய சாந்தியாதீத கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் அழிப்பு மாத்திரம் கூறப்பட்டது. சாந்தியாதீதகலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் தோற்றம்முதல் அழிப்பு வரையுள்ள காலம், 'மாப்பேரூழிக் காலம்' என்று கூறப்படும் (திருவாசகம் திருவண்டப்பகுதி, ௬-வது வரி) சாந்தியாதீதகலைக்குக்கீழ் சாந்தியா கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் **தோற்றம்** நிலை அழிப்புகள் சிவபெருமானது அருளைக் கொண்டு, அனந்த தேவரால் நடத்தப்படும். அவ்வாறே வித்தியாகலையில்

அடங்கிய தத்துவ புவனங்களின் தோற்றம் நிலை அழிப்புகள் சீகண்டருத்திரனாலும், பிரதிட்டா கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் தோற்றம் நிலை அழிப்புகள் திருமாலினாலும், நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் தோற்றம் நிலை அழிப்புகள் அயனாலும் சிவபெருமானது அருளைக்கொண்டு நடத்தப்படும். இவ்வாறு அனந்ததேவர் முதல் அயன் இறுதி யாகக் கூறப்பட்ட நான்கு தேவர்களும் தத்தங்கால எல்லைகளில் படைப்பு, காப்பு, அழிப்புத் தொழில்களைச் செய்கின்றனர். ஒன்றினொன்று நீண்டதாயுள்ள இந்தக் கால எல்லைகளும் **ஊழிகள்** என்று கூறப்படும். ஒவ்வொரு ஊழிக்காலத்தின் துவக்கத்தில் படைப்பும், இறுதியில் அழிப்பும், இடையில் காப் பும் ஆகிய முத்தொழில்களும் அந்த அந்தத் தத்துவ புவனங் களிலுள்ள உயிர்களுக்கு அந்த அந்தத் தேவரால் முத்தொழில் களும் நடைபெறுகின்றன. கட்டுகளை (பாசங்களை) உடைய எந்த உயிரும் எந்த ஊழிக்காலத்திலும் துவக்கமுதல் ஈறுவரை முதலில் எடுத்த உடலுடன் உலகில் உயிர்வாழ முடியாது. ஆத லின் அத்தகைய உயிர்களுக்கு இடையில் முத்தொழில்கள் நடைபெற வேண்டுதல் இன்றி அமையாதது. இனி, ஊழித் தோற்றம் நிலை அழிப்புகள் அல்லாமல் ஒவ்வொரு நாளிலும் ஒவ் வொரு திங்களிலும் ஒவ்வொரு ஆண்டிலும் பல ஆண்டுகள் சேர்ந்த காலத்திலும் தோற்றம் நிலை அழிப்புகளும் உள என்று **சிவாகமங்களும் திருமந்திர** முதலிய சைவ நூல்களும் கூறுகின் றன. சிவன் திருக்கோயிலில் நாடோறும்நடக்கிற வழிபாட்டுக் காலங்களும், திங்கடோறும் நடக்கிற வழிபாட்டு விழாக் காலங் களும், ஆண்டுகடோறும் நடக்கிற வழிபாட்டு விழாக் காலங்க ளும் முத்தொழில்களையும் அவைகளிலடங்கிய மறைப்பும் அரு ளும் சேர்த்துக் கூறப்பட்ட ஐந்தொழில்களையும் குறிக்கின் றன. முத்தொழில்களும் முதல்வனால் உயிர்கள் பயன் அடை யும் பொருட்டுச் செய்யப்படுகின்றன. காப்பும் அழிப்பும் நிக ழாமல் படைப்பினால் மாத்திரம் குறித்த பயன் உயிர்களுக்கு உண்டாகாது. ஆதலின் ஆசிரியர் இரண்டாவது சூத்திரம் முத லாவது அதிகரணத்தில் முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும்

வேருயும் உடனுயும் நின்று படைக்கின்றுன் என்று கூறுங்கால் ஏனைய காப்பு அழிப்புத் தொழில்களும் இனம்பற்றி படைப் புத் தொழிலோடு சேர்த்துக்கொள்ளப்படும் என அறிக.

30. இனிப் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் என்னும் ஐந்தொழில்களும் செய்தல் முதல்வனுக்கு இலக்கணம் என்று சிவஞானசித்தியார் திருமந்திரம் முதலிய நூல்களிற் கூறப்பட்டிருக்க, ஆசிரியர் முதல் முத்தொழில்கள் மாத்திரம் கூறுதல் என்னவென்று கேட்பின், ஐந்தொழில்களும் முத்தொழில்களில் அடங்கும் என்பதே அக்கேள்விக்கு விடையாகும். படைப்பு என்பது சுருங்கக் கூறுமிடத்து உயிர்களின் பொருட்டு உடல், உட்கருவி, நிலம், நுகர்பொருள்களை (தனுகரண புவனபோகங்களை) உண்டாக்கி உயிர்களுக்குக் கூட்டுவித்தலாகும்; காப்பு என்பது அவ்வாறு உண்டாக்கிக் கூட்டின கருவிகளை நிலைநிறுத்தலாகும்; அழித்தல் என்பது அக்கருவிகளின் பருமை நிலையை (தூல நிலையை) அழித்து நுண்மைநிலை(சூக்கும நிலை)யாக்கி ஒடுக்குதல். இந்தப் பருமம் (தூல) மூன்று தொழில்களும் உயிர்களுக்காக உயிர்களுடைய நான்குவகைக் கருவிகளை (Vehicles)ப் பற்றி முதல்வனுற் செய்யப்படுவன. மறைத்தல் அருளல் ஆகிய இரண்டு தொழில்களும் உயிர்களைப்பற்றி முதல்வனுற் செய்யப்படுவன. மறைப்பானது உயிர்களுக்குச் செல்லுமேயன்றி உயிரில்லாத கருவிப் பொருளுக்குச் செல்லாது. அவ்வாறே அருளலும் உயிர்களுக்கேசெல்லும். ஆதலின் மறைப்பும் அருளலும் உயிர்களைப்பற்றியுள்ளன என்பது கூறப்பட்டது. மறைப்பாவது உயிர்களுக்கு முதல்வனுடைய சிறப்பு இயல்பை உணரும் மெய்யுணர்வு தோன்றும் காலம் வரையும் ஆணவமலத்தின்வழி நின்று வினை நுகர்ச்சிக்கண் சுவைபிறக்கும்படி செய்து அவைகளை நடத்துதலாகும். ஆகையால் இந்த மறைப்புத் தொழிலானது முத்தொழில்களிலொன்ருகியகாப்புத் தொழிலில் அடங்கும். அருளலாவது முதல்வன் தீவிரதர சத்திநிபாதம் அடைந்து பக்குவ முதிர்ந்த உயிர்களைத் தன்னுடன் இரண்டறக் கலந்து மீட்சியின்றிப் பேரின்பம் நுகரும்படி செய்தல் ஆகும். மேலான பேரின்ப நிலை அடையப் பக்குவமில்

லாத உயிர்களுக்கு அவரவர் பக்குவத்திற்குத் தகுந்தபடி அருள லும் அருளலாகும். இவ்வாறு முதல்வன் செய்யும் அருளை அறிந்து பயன் அடைதற்கு ஏற்றகாலம் அவன்செய்கிற அழிப் புத்தொழிலினுல் உயிர்கள் ஒடுக்கம் அடைகிற காலம் ஆதலின் அருளலானது அழிப்புத்தொழிலில் அடங்கும். ஆதலின் முத லாவது சூத்திரத்திற் கூறப்பட்ட முத்தொழில்களில் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் என்னும் ஐந்தொழில்களும் அடங்கும். உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்தல் முதல்வனுக்கு இலக்கணமாகும். ஆகவே முதல்வன் உயிர்க ளின் பொருட்டு ஐந்தொழில் செய்யுங்கால் அவ்வுயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் என்பது முதலாவது அதிகரண மேற்கோளாக நாம் கொள்ளல் வேண்டும்.

3. இந்த ஐந்தொழிலும் முதல்வன் உயிர்களுக்குச்செய்யும் வகை வேறுபாட்டினுல் பருமைஐந்தொழில் (தூலஐந்தொழில்) நுண்மை ஐந்தொழில் (சூக்கும ஐந்தொழில்) மிக்க நுண்மை ஐந்தொழில் (அதிசூக்கும ஐந்தொழில்) என முத்திறப்படும். பருமை ஐந்தொழில் (தூல ஐந்தொழில்) முதலாவது சூத்திரத் திற் கூறப்பட்டது. அது மேலே காட்டப்பட்டது. அது இறைவனுல் உயிர்களின்பொருட்டு உயிர்களுக்குக்கூட்டப்பட்ட கருவிகளிடத்து (Vehicles) நிகழும் நுண்மை. ஐந்தொழிலாவது (சூக்கும ஐந்தொழிலாவது) முதல்வன் உலகத்தை அழிவு செய்து ஒடுக்கியபின் இனிச் செய்யக் கடவதாகிய பருமை ஐந் தொழிற்கு (தூல ஐந்தொழிற்கு) உயிர்கள் தகுதியாகும்படி வேண்டுவனவற்றை அறிந்து நோக்கித் தனி நிலையின்கண் (கேவ லத்தின்கண்) நிகழ்த்தும் ஐந்தொழிலாகும். இது உயிர்களின் பொருட்டு முதல்வனிடத்து நிகழ்வது. இதுவே இந்தச் சூத் திரத்திற் கூறப்படும் ஐந்தொழிலாகும். இந்த ஐந்தொழிலின் வகையைக் கூறுமிடத்து அழிப்புக்குப்பின் உயிர்கள் ஒடுங்கி நிற்கிற நிலையில் உயிர்களுடையபரிபாகத்தை அறிதல் படைப்பு; பரிபாகமில்லாத உயிர்களை ஒடுங்கிய தனி நிலையில் (கேவல நிலை யில்) வைத்தல் காப்பு; பரிபாகமுள்ள உயிர்களை ஒடுக்க நிலை யிலிருந்து (கேவல நிலையிலிருந்து) நீக்குதல் அழிப்பு; ஒடுங்கிய

தனி நிலையில் (கேவலத்தில்) இருக்கும் பரிபாகமில்லாத உயிர்களுக்கு அவைகள் அங்ஙனமிருப்பதாகத் தோன்றுதிருக்கச் செய்தல் மறைப்பு; பரிபாகமுள்ள உயிர்களை ஒடுங்கிய தனி நிலை (கேவல நிலை)யிலிருந்து உடல் நிலையில் (சகல நிலையில்) விடுதல் அருளல். இனி மிக்க நுண்மை ஐந்தொழிலாவது (அதி சூக்கும ஐந்தொழிலாவது) முதல்வன் உயிர்க்குயிராயிருந்து உயிர்களை நனவின்கண் விடயபோக நுகர்ச்சியிற் செலுத்தி விடயங்களிலும் கலந்து விடய நுகர்ச்சியை நிகழ்த்துதலாகும். இது கட்டு இலக்கணம் (பாச இலக்கணம்) கூறுகின்ற ஐந்தாவது சூத்திரத்திற் கூறப்படும். இவ்வாறு கூறப்படும் மூவகை ஐந்தொழில்களில் ஒவ்வொரு வகையிலும் மூவகைகளும் உள்ளன, என நாம் ஊகித்து அறிந்துகொள்ளலாம்.

32. மேலே கூறியவாற்றுல் முதலாவது அதிகரண மேற்கோளான முதல்வன் ஐந்தொழில் செய்யும்பொழுது உயிர்களோடு கலப்பினுல் ஒன்றுகியும் பொருட்டன்மையால் வேருகியும் உயிர்க்குயிராதற்றன்மையால் உடனுகியும் நிற்பன் என்பது ஆகும். இதனை நாம் சுருங்கக் கூறுமிடத்து முதலாவது அதிகரணத்திலுள்ளபடி இவ்வுயிர்கள் (ஆன்மாக்கள்) பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்பது மேற்கோளாகும். இதனை இன்னும் சுருக்கி நாம் கூறினுல் அது சிவஞானபோதச் சூர்ணிக்கொத்திலுள்ளபடி முதல்வன் உயிர்களில் இரண்டற நிற்பன் எனவரும். இது வேதத்திற் கூறப்பட்ட அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருளாகும் என ஆசிரியர் கூறுகின்றுர்.

33. இந்த மேற்கோளை மறுக்கிறவர்கள் வேற்றுமைக் கொள்கையர் (பேதவாதி) ஒற்றுமைக் கொள்கையர் (அபேதவாதி,) வேற்றுமை யொற்றுமைக் கொள்கையர் (பேதாபேதவாதி,) என்னும் மூவர்களாவர். ஒற்றுமைக் கொள்கையரில் (அபேதவாதிகளில்) ஸ்மார்த்தர்கள் முதலிய ஒரு பொருளுண்மை கூறுவோர் அடங்குவர். வேற்றுமைக் கொள்கையரில் (பேதவாதிகளில்) மாத்துவர்கள் அடங்குவர். வேற்றுமை ஒற்றுமைக் கொள்கையர்களில் (பேதாபேத வாதிகளில்) பாஞ்சராத்திரர்கள் (வைணவர்கள்) அடங்குவர். இந்த மூன்று கொள்

கையர்களில் ஒவ்வொருவரும் மேலே சொல்லிய வண்ணம் முதல்வன் உயிர்களோடு ஒன்றாய் நிற்கும் நிலை, வேறாய் நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலை என்னும் மூன்று நிலைகளில் ஒவ்வொரு நிலையை மாத்திரம் கைக்கொண்டு அதுவே தங்கள் தங்கள் கொள்கை என்றும் மூன்று நிலைகளையும் சேர்த்துக்கொள்ளுதல் ஒரு முடிவுக்கூற்று (ஏகாந்தவாதம்) அன்றி பல முடிவுக் கூற்று (அநேகாந்த வாதம்) ஆக முடியும் என்று கூறுகிறார்கள். பல முடிவுக் கூற்று என்பது உடம்பெடுத்தற்கு முன் உயிர் உண்டோ இல்லையோ என ஒருவன் சமணர்களை வினவின், உண்டு என்றாதல் இல்லை என்றாதல் கூறாமல், உண்டுமாம், இல்லையுமாம். உண்டுமாமில்லையுமாம் என அவர்கள் கூறுதல் போல்வது. இந்த மூன்று கொள்கையர்களுடைய கொள்கைகளும் அவைகளை ஏதுக்களுடன் மறுத்தலும் பின் விளக்கமாகக் கூறப்படும்.

34. ஆசிரியர் வேதத்திற் கூறப்பட்ட அத்துவித இலக்கணங் கூறுமாற்றால், ஒற்றுமைக் கொள்கையர் (அபேதவாதி) வேற்றுமைக் கொள்கையர் (பேதவாதி) வேற்றுமை ஒற்றுமைக் கொள்கையர் (பேதா பேத வாதி) என்னும் மூன்று கொள்கையர்களுடைய கொள்கைகளையும் ஏதுக்களுடன் மறுத்து, தாம் எடுத்துக் கொண்ட மேற்கோள் உண்மையை வலியுறுத்துகின்றார். இனி, அத்துவித இலக்கணம் கூறப்படும்.

---

# பரோடாவும் நூல்நிலைய இயக்கமும்

*இது மாடர்ன் ரிவியூவிலிருந்து எடுக்கப்பெற்றது.

பரோடா கெய்க்வார்ட் மகாராஜா அவர்கள் தமது இராசாங்கத்திலுள்ள ஊர்கடோறும் கட்டாய இலவச ஆரம்பக் கல்வியைப் பரவச் செய்தனர். எனினும் அதனால் சிறந்த நன்மையொன்றும் ஏற்படவில்லை என்பதை நாளடைவில் தெரிந்தார். ஆரம்பக் கல்வியைப் பெற்றுப் போன இளைஞர்கள் பின் அக்கல்வி வளர்ச்சிக்கு யாதோரியக்க உதவியின்றிக் கல்லாத மூடர்களாகவே காணப்பட்டனர். மகாராஜா அவர்கள் 1907-வது

ஆண்டிலும் 1910-வது ஆண்டிலும் அமெரிக்கா ஐக்கிய மாகாணத்திற்குப் போய் வந்ததின் பின் ஆரம்ப இலவசக் கல்வியை நிலைபெறச் செய்வதற்கு இலவசப் பொது நூல் நிலையங்களை ஊர்கடோறும் அமைத்தல் வேண்டுமென்பதை அறிந்தார். அதுமுதல் நூல்நிலைய இயக்கம் ஒன்று பரோடாவில் காட்டுத் தீப்போல் பரவுதலாயிற்று.

## நூல் நிலையங்கள்.

நூல் நிலையங்கள் அரசினர், ஜில்லாப் போர்டு, அல்லது முனிசிபாலிட்டி, குடிகள் ஆகிய மூவருடைய கூட்டுறவால் நடைபெறுகின்றன. ஒரு கிராமத்தாரோ, ஒரு நகரத்தாரோ அல்லது ஒரு ஜில்லாவின் தலை நகரத்தாரோ தங்கட்குள்ளே நன்கொடையாக ரூ. 100, ரூ. 300 அல்லது ரூ. 700 வீதம் சேர்க்கின்றனரோ அதே அளவு தொகை அரசினராலும், அதே தொகை ஜில்லாப் போர்டாராலும் கொடுக்கப்படுகின்றது. சில ஊர்களில் முனிஸிபாலிட்டியாரும், ஜில்லாப் போர்டாருமே நன்கொடை வசூல் செய்து நூல் நிலையங்களை அமைக்கின்றனர். அதே மாதிரி லைப்ரேரி கட்டிடங்களுக்கும் குடிகள் சேகரிக்கிற தொகையளவு தனித்தனி அரசினராலும் ஜில்லாப் போர்டாராலும் கொடுக்கப்படுகின்றது.

பரோடாவிலுள்ள மக்களும் நூற் பயிற்சியில் பெரிதும் ஈடுபட்டிருக்கின்றனர். அங்கே 45 நகரங்களிலும், 698 கிராமங்களிலும் இலவச நூல் நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. 194 சமாசாரப் பத்திரிகை வாசிக்குமிடங்களும் ஏற்பட்டிருக்கின்றன. 1928-29 வது ஆண்டு அறிக்கையின் படி மொத்தம் 4,94,654 புத்தகங்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

வாசிப்பவர்களுக்கு ஊர் ஊராக வீடு வீடாகக் கொண்டு கொடுப்பதற்கு 3,07,350 புத்தகங்கள் இருக்கின்றன. அவை 60,789 பேர்கட்குப் பயனாகி வருகின்றன. அதுகாறும் 103 நூல் நிலையக் கட்டிடங்களும் எழுப்பப்பட்டுள்ளன. அரசினரால் நூல் நிலையங்கட்கென ஓர் இலாகா ஏற்படுத்தி அதற்குரிய சட்ட திட்டங்களும் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர்

ஊரிலும் நூல் நிலையங்களை நடத்துவதற்கெனக் கமிட்டிகள் நிறுவப்பட்டிருக்கின்றன. நூல் நிலையங்களை லைப்ரேரி இலாகாத் தலைவரும், பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர்களும் அடிக்கடி பார்வை யிட்டு வருகின்றார்கள். நூல் நிலையங்களை நடத்துவதற்கும் மேன்மேலும் அவற்றை விருத்தி செய்வதற்கும் வேண்டிய வழிவகைகளைச் சில அறிஞர்கள் கற்றுத் தேர்ச்சி பெற்று வருகின்றனர். ஆண்டுதோறும் நூல் நிலையத் தலைவர்களுடைய கூட்டம் ஒன்று நடைபெற்று வருகின்றது. மேற்படி கூட்டத்தைக் கூட்டிவைப்பதற்கு ஓர் கழகம் இருக்கின்றது. அதன் வழி **புஸ்தகாலயம்** என்னும் மாதப் பத்திரிகை ஒன்று குஜராட்டி மொழியில் வெளியிடப்பெறுகின்றது.

### சுற்று நூல் நிலையங்கள்.

நூல்நிலை இலாகா வழி சுற்று நூல்நிலையமொன்றேற்படுத்தப்பட்டிருக்கின்றது. 15 முதல் 20 புத்தகங்கள் அடங்கக் கூடியவாறு 400 மரப் பெட்டிகள் அழகாகவும அழுத்தமாகவும் செய்து அவற்றைப் பொது லைப்ரேரிகட்கும், தொழிற்சாலைகட்கும், லைப்ரேரி இயக்கத்தில் ஈடுபட விருப்பமுடையவர்கட்கும் அனுப்பப்பட்டு வருகின்றன. ஆங்காங்கே படிப்பவர்கட்கும் அப்புத்தகங்கள் கொடுத்து வாங்கப்படுகின்றன. லைப்ரேரி இலாகாவிலுள்ளார் புத்தகங்களைச் சிறந்த காலங்களில் கூட்டங் கூடுமிடங்களில் பார்ப்பவர் கண்ணையும் உணர்வையும் கவரும் வண்ணம் அழகுபட ஒழுங்கு படுத்தி அமைத்துக் காட்டுகின்றார்கள். அதுவேயுமன்றி மேனாடுகளிலுள்ள லைப்ரேரி இயக்கங்களைச் சினிமாவழிக் காட்டி வருகின்றார்கள்.

### பரோடா சேன்ட்ரல் லைப்ரேரி.

பரோடா சென்ட்ரல் நூல் நிலையத்தில் பத்திரிகை வாசிப்பதற்குத் தனியிடமும், பெண்மக்கட்குத் தனி நிலையமும், சிறுவர்கட்குத் தனிநிலையமும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. புத்தகங்களை வாசிக்கும்போது ஒத்திடுவதற்கு உதவியாக அகராதிகள், அபிதான சிந்தாமணிகள் (Encyclopædias)போன்ற நூல்கள், அரிய பெரிய பத்திரிகைகள் முதலியவை தொகுக்கப்

பெற்ற தனி நூல்நிலையம் (Reference Library) ஒன்றும் அமைக்கப் பட்டிருக்கின்றது. அதுவேயுமன்றிப் புத்தகங்களைப் பற்றியும் பல்வகைப் பொருள்களைப் பற்றியும் குறிப்புக்கள் கொடுப்பதற்கு ஒரு டிபார்ட்மெண்ட் நிறுவப்பட்டுளது. அதில் நூலாராய்ச்சியிலும் நூல் நிலையத்திலும் ஆராய்ச்சியும், திறமையுமிக்க அறிஞர் சிலர், வேலை பார்க்கின்றனர்.

1929-30ல் அடியில் கண்டவாறு நூல் நிலையத்திற்கு வரூலாயிருக்கிற தொகையினைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| பரோடா சென்ட்ரல் நூல் நிலையத்திற்கு வைக்கப்பெற்றது | | ரூ. | 56,000 |
| உதவி நூல் நிலையங்கட்காக:— | | | |
| அரசினர் | நன்கொடை | ரூ. | 33,000 |
| ஜில்லாப் போர்டு, முனிஸிபாலிட்டி, பஞ்சாயத் | ,, | ரூ. | 32,000 |
| குடிகள் நன்கொடை | | ரூ. | 34,000 |
| | மொத்தம். | ரூ. | 155,000 |

---

குறிப்பு:—தெலுங்கு ஜில்லாக்களிலும் தெலுங்கு மொழியைப் பரவச் செய்வதற்கு ஓர் சர்வகலாசாலை ஏற்படுத்தப் பட்டிருப்பதோடு நூல் நிலைய இயக்கமும் பரவி வருகின்றது. ஓராண்டிற்கு முன் சென்னையிலும் லைப் ரேரி அசோசியேஷன் ஒன்று ஏற்படுத்தப் பெற்றுள்ளது. ஆனால் அதன் வழி சிறப்பான வேலை ஒன்றும் நடைபெறுவதாகத் தெரியவில்லை.

தமிழ் மக்கள் தமிழ் நூல்களைச் சிறப்பாக வாங்குவதோடு தமிழ்க் கலை வளர்ச்சிக்கு வேண்டிய பிறமொழி நூல்களையும் வாங்குதல் வேண்டும். செந்தமிழ் நாட்டில் செல்வர்களும், ஜில்லாப் போர்டு தலைவர்களும், தாலுகா போர்டு தலைவர்களும், முனிசிபல் சேர்மன்களும், பஞ்சாயத் தலைவர்களும், கூட்டுறவுக் கழகத்தலைவர்களும், கல்லூரித்தலைவர்களும், கல்லூரிக் கமிட்டிகளின் அதிகாரிகளும் நூல் நிலைய இயக்கத்தில் ஈடுபட்டு ஒவ்வொரு ஊரிலும் ஒரு நூல் நிலையம் ஏற்படுத்துவதற்கு வேண்டிய வழிவகைகளை இன்றே, இன்னே, செய்து போதருமாறு வேண்டப்படுகின்றார்கள். இதனைச் செய்யின் தமிழ் நூல்கள் பரவிப் பெருகுவதோடு நம் நாடும் அறிவுடைய நாடாகும். நூல் நிலைய இயக்கத்தாலும், சுயமொழி பேணுதலாலும் மேனாடுகள் அறிவிலும் ஆட்சியிலும் சிறந்து விளங்குகின்றன என்பது உள்ளங்கை நெல்லிக்கனியன்றோ?

தமிழ் மக்களே, தமிழ் நாட்டுப் பல்வகை இலாகாத் தலைவர்களே, இனியும் உறங்காதீர்கள்! உறங்காதீர்கள்!! உடனே விழிமின்! விழிமின்!! செய்யத் தகுவனவற்றைச் செய்மின்! செய்மின்!! இன்றேல் நிலைபெறுவன மடமையும், அடிமையுமே.

# திருஞான சம்பந்தர்-செந்தமிழ் நாடகம்.

[திரு. S. முத்துகுமாரசாமியா பிள்ளையவர்கள்]

(ருகக-ம் பக்கத்தொடர்ச்சி)

இன்னொருவர் :—அதுதான் சரி, இந்தச் சிறுவனோடு பேச முடியாது. செயலில் பார்ப்போம்,

திருஞான சம்பந்தப் பெருமான் :—(அங்குக் குழுமியிருந்த அமணர்களை நோக்கி) மயிற்பீலிக் கையரே,

மன்னன் துன்புறும்போது, என்னைக் கண்டதும், யாவரும் சூழ்ந்து ஒன்று கூடிக் குதித்தீர்களே! இப்போ, மன்னனும் அமைதியுற்றான். உங்கள் வாய்மை பேசுங்கள்.

அமணர்கள் :—உமக்கும் நமக்கும் என்ன பேச்சு இருக்கின்றது. பேச்சை விட்டுவிடும். காட்சியிலே காட்ட வேண்டும். அதுதான் தக்கது.

மன்னவர் :—(வெகுளல் ஒருபாலும், இவர் அறிவின்மை கண்டு, சிரிப்பு ஒருபாலுமாக "எனது உடலுக்குற்ற வெப்பு நோய் தீர்த்தது, காட்சியில் காட்டியது இல்லை போலும்" நல்லறிவுடையீர்! தங்கள் கேள்வி திக நன்று !! என்ன வாது ?

அமணர்கள்:—அரசே!

என்ன வாதா! கூறுகின்றோம். அவ்வவர் சமயக் கொள்கைகுறித்த ஏட்டை நெருப்பிலிடவேண்டும். வேவாது இருப்பது உண்மைச் சமயம் அவரே வெற்றி பெற்றவர்.

திருஞானசம்பந்தர்:—(மன்னரே, இந்த அமணர்கள் தமது குறிப்பறியாது சொன்னதைக் கேட்டு மறுமொழி கூறமுன்னரே)

அன்பர்களே!

உங்கள் வேண்டுகோள் எதுவோ, அதுவே செய்வோம் உண்

மையே வெற்றிபெறும். இப்போ இந்த அரசன் அவைமுன்னரே தீயை வளர்க்கச் செய்வோம், நினைத்ததை முடிப்போம்.

மன்னவர்:—(ஏவலாளரை நோக்கி)

விறகு அடுக்கித் தழல் பெருக்குக.

திருஞானசம்பந்தர்:—(தன்னுடன் பாடல்கள் எழுதிவரும் சம்பந்த சரணலயரை நோக்கி) அன்பரே,
தேவார ஏட்டை இங்கு கொணர்க.
(அதில் கயிறு சாத்திப் பார்த்தல் "போகமார்த்த" பாட்டுக் கிடைத்தல்)

சம்பந்த சரணலயர்:—(கயிறு சாத்திக்கிடைத்த அப்பதிகம் படித்தல்)

திருச்சிற்றம்பலம்.

"போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே."

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர்:—அந்த ஏட்டைக் கயிற்றினின்றும் உருகி, வேறுபெடுத்துத் தானே, தீயின் பக்கம் சென்று "தளிரிள வளரொளி" என்ற பதிகம் பாடி, மகிழ்ந்து தீயிலிட்டார்.

திருச்சிற்றம்பலம்.

"தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலில்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே."

திருச்சிற்றம்பலம்.

ஏடு பசுமையுற்று விளங்கிற்று.

அமணர்கள்:—(கவலையுற்று) தங்கள் எல்லைப் பொருள் எழுதிய ஏட்டைத் தீயிட்டனர். ஏடு உடனே பஞ்சுபோல் பொடியாய்விட்டது.

(கண்டதும் அஞ்சினர். மனஞ்சோர்ந்தார். கைப்பி லிகை விழாது நின்றார்கள்.)

**திருஞானசம்பந்தர்:**—குறித்த நாழிகை கழிந்தது. தானேபோய் பசுமையாய் இருந்த ஏட்டை எடுத்தனர். யாவருங் காணக் காட்டினர். மீண்டும் ஏட்டோடு கோத்துக் கொண்டார்.

**மன்னவர்:**—வியப்புற்றார். கைப்பிலி விழாது வீறுடு நிற்கும் அமணரை நோக்கி அடிகண்மீர்,

மறையவர் தம் ஏட்டை எடுத்துக்கொண்டு வந்துவிட்டார் உங்கள் ஏட்டை இந்த நெருப்பில் காணவில்லையே, எடுத்துக் கொண்டு வாருங்கள் பார்ப்போம்?

**அமணர்கள்:**—இதோ இதோ எடுத்துவருகின்றோம் (என்று தீப் பக்கத்துச் சென்றார்கள்.)

என்ன? இந்தத் தீ மிகுதியாகின்றது. நாம் பக்கத்துப் போகவும் விரைந்து நம்மைச் சுடுவதுபோல், தீ தாவுகின்றதே, நன்று. இச்சிறுவன் ஏதோ மாயஞ் செய்துவிட்டான் (என்று அங்குமிங்கும் போகாது நின்றார்கள்.)

**மன்னவர்:**—அறிவுடை அமணரே,

என்ன? பேசாது நிற்கின்றீர்கள். தீயை அணைக்கச் செய்கின்றேன். பின்னராவது, ஒருவேளை விறகுக்கட்டையோடு கிடக்கின்றதா ? என்று தேடிப்பாருங்கள்.

**காவலாளரை நோக்கி:**

காவலரே, இந்த நெருப்பை நன்றாய் நீரிட்டு அணையுங்கள். இந்தப் பெரியவர்கள், தங்கள் ஏட்டைத் தேடிப்பார்க்கட்டும்.

(அவ்வாறே தீயை நன்றாக அணைத்தல்.)

அறவோர்களே, போய்ப்பாருங்கள். எப்படியும் உங்கள் ஏட்டைப் பாருங்கள். (அமணர்கள் தேடிப்பார்த்தும், சாம்பலைக் கையாற்பிசைந்தும் காணாது நிற்றல்.)

மீண்டும் மன்னவர் அமணரை நோக்கி:

நல்லறிவாளரே,

நன்ருகத் தேடுங்கள். ஒருவேளை அந்தக் கரியோடு சேர்ந்து கிடந்தாலும் கிடக்கலாம். நன்ருக அரித்துப்பாருங்கள்.

அமணர்கள்:— (ஒருவர் மற்றவரைப் பார்த்து,)

நமது மன்னன், நமதுமேல், மிகுந்த கருணையோடுதானிருக்கிருன். பாருங்கள், எப்படியுந் தேடிப்பாருங்கள் என்று நமக்கு வேண்டிச் சொல்லுகின்ருர். என் செய்வது. நம்மால் வெற்றிபெற முடியவில்லையே. மன்னன்தான் என் செய்வான்? அரித்தாவது பார்ப்போம்.

(அரித்துப்பார்த்தும் காணவில்லை. கவலுற்ருர்கள்)

மன்னவர்:—(அமணர்கள் அறியாமைகண்டு சிரிப்புக்கொண்டு:-) துப்புர வுறையீர்,

யான் முன் வெப்புற்று வருந்தும்போது, உங்கள் கைத்திறம் அறிந்தேன். பின்னும், உங்கள் ஏடு இத்தீயிடை இட்டதில் வன்மை யாவுந் தெளிந்தேன். இன்னும், நீங்கள் தோற்றிலீர் போலும்? என்ன?

அமணர்கள்:—(மன்னன் கூறிய குறிப்பறியாது) மன்னே,

இன்னுந் தோற்றிலோம், எதுவும் மும்முறை செய்தல் உலக வழக்கு. இப்போ, இருமுறைதானே ஆயிருக்கிறது. இன்னும் ஒரு முறையும் பார்த்து விடுவோம். இனிச் செய்வதொன்றில் நாங்கள் வெற்றி பெற்ருலும் போதும். அதனையும் காண்போம்.

மன்னவர்:—நன்கு கூறுகின்றீர். குறிப்புச் சிறிதும் உணராகுண்டர்களே, இன்னும் ஒரு வாது வேண்டவும் வேண்டுமோ? இருமுறை தோற்றும் ஆசை நீங்கவில்லையே. இனி, வாதிற்கு நான் இடங்கொடேன். (வெகுண்டார்)

திருஞானசம்பந்தர்:—மன்னவ,

மனம் பொறுக்க! வெகுளுதல் ஒழிக! எப்படியும்

(தொடரும்)

# The History of the Tamil Grammatical Works of which the நன்னூல் is the Chief

(*Extract From Rhenius' Tamil Grammar*).

The Madura Province, including Tinnevelly, is confessedly the seat of the purest Tamil. Towards Madras it becomes mixed with the Teloogoo and other dialects. About 500 years ago, when Pandiya Rajah was reigning at Madura ; Agastier ; the famous Muni of the Hindoos, lived ; who, upon the desire of the King, wrote the first grammar of the Tamil language ; which was called அகத்திய நூல். He had twelve disciples whom he instructed in the language, one of them was Tolkapiyer, who appeared to be the most clever in acquiring it. Soon after, Tolkapiyer prepared a grammatical work, called தொல்காப்பிய நூல், of which the அகத்திய நூல் was the basis. The former gradually sunk into oblivion ; and is now lost, excepting the fragments contained in Tolkapiyer's work.

Sometime after, when Siyagangen Rajah reigned in Madura, பவணந்தி வித்துவான், Pavanandi Vittuvan, a learned man of the Jaina Sect, abridged the Tolkapiya Nul and called it நன்னூல், of the five parts into which the Tolkapiyam was divided, *viz*.. எழுத்ததிகாரம், *i. e.*, the chapter of letters or orthography ; சொல்லதிகாரம், *i. e.*. the chapter of words or Etymology ; பொருளதிகாரம், *i. e.*. the chapter of matter ; இயாப்பு or செய்யுள், *i. e.*, the Chapter of Poetry ; and அலங்கார அதிகாரம், *i. e.*, the chapter on Beauty or Rhetoric, and into which Pavanandi also divided his work, only the two first chapters have been preserved ; the rest are lost ; though they were afterwards supplied by other persons.

After him was a learned man of the சமணர், *i. e.*, the Jaina Sect, who wrote an explanation of the நன்னூல்.

About the same time arose a learned Sivapatti Karen named வயித்தியநாத பண்டாரம், and, pretending to find errors in the text of the நன்னூல், wrote a grammatical work called

இலக்கண விளக்கம், *i.e.*, the light of rules in which he changed some parts of the நன்னூல் ; and added others at his discretion ; but retained the before mentioned division in five parts.

About the year 1770, there was a poet in Tinnevelly, named சங்கர நமச்சிவாயப் புலவர். Upon the request of the Ootamalei Poligar (மருதப்ப தேவன்) he wrote the நன்னூலுரை *i.e.*, an explanation of the text of the நன்னூலுரை made by Pavanandi.

This Sankara Namasivaya Pulavar's master சாமிநாததம்பிரான் (Saminada Tambiran), wrote a grammatical work, which he called இலக்கணக்கொத்து, *i.e.*, a collection of rules; wherein he treats especially on the Tamil declensions and conjugations.

About the same time ; சிவஞானத்தம்பிரான், a learned Sanniyasi, wrote a work, in which he exposes the errors of the இலக்கண விளக்கம், made by the above mentioned Vayittiyanada Pandaram. This work he called இலக்கண விளக்கச் சூறாவளி, *i.e.*, the Blast or Strong Wind on the Light of Rules with which he intended to extinguish the Light of Rules. He wrote also the சூத்திரவிருத்தி, in which he explains the Tolkapiyam, more over ; he undertook to examine and compare the former three works, *viz.*, இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கச் சூறாவளி, and சூத்திர விருத்தி ; made the needful extracts, and embodied them in the நன்னூல், prepared by Sankaranamasivayam. The thus enriched நன்னூல் is now in use among the Tamilians, and held in high estimation as the best classical work. It is called நன்னூலுரை, *i.e.*, an exposition of the Nannul.

முத்துக் குமார சுவாமி யோதுவார், who studied with Saminada Tambiran, died in Tinnevelly in 1809. His chief disciple அம்பலவாணக் கவிராயர், is still living in the same place, with whom, among others, திருப்பாற்கடல் நாதன் கவிராசர், studied, who has since 14 years been a most valuable assistant to me.

Palamcottah, October 1834.    C. T. E. RHENIUS.






First Periodicals Exhibition, Central Library, Baroda (two views.)



Children's Story Hour and Cinema Show, Baroda Central Library.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு<br>அ | மெய்கண்டான்யாண்டு-எ௱அ ஐப்பசித் திங்கள்<br>1930ஆ அக்டோபர்மீ—நவம்பர்மீ | பரல்<br>ம |

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழுங்
கருத்தி னைநினை யார்கன் மனவரே.

திருநாவுக்கரசு சுவாமிகள் தாமிருந்த காலத்தில் மக்களில் ஒரு பகுதியார் வெளியே கண்ணுக்குக் காணப்படுகின்ற ஞாயிற்றினுடைய உருவத்தில் இறைவனை வணங்காமல், அந்த அருக்கனையே இறைவன் என வணங்கும் வழக்கத்தைக் குறித்து அவர்கள்மேல் இரங்கி இந்தத் தேவாரப்பாட்டைப் பாடியருளினார்.

அந்தியில்—(ஒரு பகுதிமக்கள்) மாலைக்காலத்தில்

அருக்கன்பாதம்—ஞாயிற்றினுடைய திருவடிகளை

வணங்குவர்—வழிபடுவார்கள்

அருக்கனாவான்—ஞாயிறு எனப்பட்டவன்

அரனுரு அல்லனோ—இறைவனுடைய உருவம் ஆகமாட்டானோ, அதாவது, இறைவனுடைய உருவம் ஆவான்

கன்மனவரே—அப்பேர்ப்பட்ட கல்லைப்போலும் கடினமான மனத்தை உடைய மக்கள்

இருக்கு நான் மறை ஈசனை=இருக்கு முதலிய நான்கு வேதங்களிலும் தலைவனாகக் கூறப்பட்ட சிவபெருமானை முழுமுதற் கடவுளாக வணங்கும்

கருத்தினை நினையார் =உண்மையான கருத்தைத் தங்கள்மனதில் நினைக்கமாட்டார்கள். ஐயோ இது என்ன அறியாமை !! 'ஐயோ இது என்ன அறியாமை' என்பது குறிப்பெச்சம்.

இறைவன், மண், நீர், தீ, வளி, வெளி, ஞாயிறு (சூரியன்) திங்கள், உயிர் என்னும் எட்டு உருவங்களிலு மிருப்பவன். இந்தஉருவங்களில் அவனுடைய அருள்வலி (அருட் சத்தி) விளங்குகின்றது. ஆனல் அவனுடைய அருள்வலி இந்த எட்டு உருவங்களிலும் அடங்காமல் அவைகளுக்கு அப்பால் சிற்றறிவுடைய நாம் எண்ணக்கூடாத அளவில் உள்ளது. எட்டு உருவங்களிலும் உள்ளக் கண்ணுக்கு மிக்க ஒளியுடன் விளங்குவதான உருவமானது ஞாயிறு. திங்களும் அனலும் ஞாயிறுக்கு அடுத்து ஒளியுடன் விளங்கும் உருவங்கள். மக்கள் அந்த ஞாயிற்றினில் இறைவனிருப்பதாக நினைத்து இறைவனை வழிபடல் வேண்டும் என்று வேதாகமங்கள் கூறுகின்றன. ஞாயிற்றினை இறைவனாக வழிபடுதல் தானாக இயங்குகின்ற உயிரினைவிட்டு அந்த உயிருக்கு இருப்பிடமாயும் உயிராலியங்குவது மாகிய உடலை வழிபடுதல் போலாகும். திருநாவுக்கரசு சுவாமிகள் தாம்பாடிய வேறொரு தேவாரப் பாட்டில் "அங்கதிரோனவனை யண்ணலாக் கருதவேண்டாம்" எனக் கூறுதல்காண்க.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# நால்வர்களும் கல்வெட்டுகளும்

[திருவாளர் அட்வகேட் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் எழுதியன]

## முகவுரை.

நமது நாட்டில் சரித்திர ஆராய்ச்சி மிகக் குறைவு. சமீப காலத்தில்தான் சில புலவர்கள் சரித்திர ஆராய்ச்சியை மேற்கொண்டு நூல் எழுத முற்பட்டிருக்கிறார்கள். வெகுகாலம் வரை பெரியோர்களுடைய வரலாறுகள் தெரிவதற்குக் கர்ணபரம்பரைக் கதைகளும் சில பழையஏட்டுப் பிரதிகளுமே ஆதா

ரமாயிருந்தன. இவைகளை வைத்துக்கொண்டு விநோதரசமஞ்சரி போன்ற காதுக்கினிய கதைகளைச் சரித்திரங்கள்போல எழுதிவிட்டனர். இவ்வகை நூல்களினால் நமது சரித்திரஞானம் எத்துணை தாழ்ந்திருந்தது என்பது அறியலாகும்.

பொதுவாக இது இருக்க, நாம் பொன்னேபோல் போற்றும் நமது அரும்பெரும் சமயாச்சாரியர்கள் நால்வர்களுடைய சரித்திர ஆராய்ச்சி எம்மட்டில் இருக்கிறதென்பதைக் கவனிப்போம். நாளதுவரை பற்பல புலவர்சிகாமணிகள் நால்வருடைய சரிதங்களை எழுதியும் எழுதிக்கொண்டும் இருக்கிறார்கள். எல்லா நூல்களையும் எடுத்துப் பார்த்தாலும் ஒருவர் சொன்னவற்றையே மற்றொருவர் பெருக்கியும் குறுக்கியும் எழுதுகிறார்களே தவிர யாதொரு நூதனஆராய்ச்சியும் புது ஆதாரங்களைத் தேடிக் கண்டுபிடித்தவைகளும் காணமுடியா. மூவர்களுடைய சரித ஆராய்ச்சி செய்த எல்லா நூலாசிரியர்களும் பெரிய புராணத்தையும் அதை ஆதாரமாகக் கொண்டு எழுதப் பெற்ற ஏனைய புராணாதி நூல்களையும்கூட ஆதாரமாகக்கொண்டு எழுதியிருக்கின்றனர். மணிவாசகப் பெருமான் சரிதத்திற்கு, திருவிளையாடல், திருவாதவூரர் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் இவைகளை ஆதாரமாக வைத்துக் கொள்ளுகிறார்கள். தற்காலத்தில் உட்சான்று புறச்சான்று என்றவகைகளிலே ஆராய்ச்சிகள் செய்து வரும் நிபுணர்கள் மேற்கூறிய புராணாதிகளோடு நால்வர்கள் அருளியுள்ள பாசுரங்களிலிருந்து ஆராய்ச்சி மூலமாகப் பெற்ற உண்மைகளை வைத்துச் சரிதங்களைப் புதுக்கியிருக்கிறார்கள். சில புலவர்கள் இவ்வகைகளோடு ஆங்காங்கே வழங்கிவரும் கர்ண பரம்பரைகளையும் ஆடல் பாடல்களையும் ஆதாரமாக வைத்துக்கொண்டு முற்சொன்னவாறு கிடைத்த சரிதபாகங்களை உறுதிப் படுத்துகிறார்கள். இம்மூன்று வகைகளில் மட்டும் சரித ஆராய்ச்சி ஏற்பட்டு வந்திருக்கிறது.

மேலும் நால்வருடைய கால ஆராய்ச்சி ஒன்று புதிதாக எல்லாராலும் எடுத்தாளப்பட்டு வருகிறது. ஏனெனில், நம் புலவர் பெருமக்களுடைய கால அளவு தெரியாத குறைவை மேற்

றிசையாளர்கள் (ஐரோப்பியர்) எடுத்துக் காட்டி அடிக்கடி ஏள னம் செய்ததே நம் நிபுணர்களுக்கு ஏற்ற தூண்டுகோலாக நின் றது. இக்கால அளவிற்கும் நம் பெரும் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் உலகிற்கு உதவியிருக்கும் ஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி ஒன்றே அடிப்படையான ஆராய்ச்சியாக நின்று அதன்பேரில் ஏனைய புலவர்கள் தங்கள் எண்ணங்களைக் கட்டிக் கொண்டு வந்து இருக்கிறார்கள். மணிவாசகப் பெருமானு டைய காலவரையறையைப் பற்றி இன்னமும் வாதப் பிரதிவா தங்கள் ஒழுங்குபெறாமல் நிற்கின்றன. இக்குறைகள் எல்லா வற்றிற்கும் நாம் புது வழிகளில் நம் கண்ணையும் கருத்தையும் திருப்பாமல் இருப்பதே காரணமாகும்.

ஏனைய நாகரீகம் பெற்ற மொழியாளர்களைப் போன்று நம் முன்னோர்களும் சரித்திர ஞானங் கொண்டவர்களே. தாம் அறிந்துகொண்ட பொருள்களும் எண்ணின எண்ணங்களும் தமது பிற்காலத்தினர் அறியவேண்டும் என்ற அவா கொண்ட வர்கள். அதற்காகத் தாம் இயற்றிய நூல்களை ஏடுகளில்எழுதி வைத்தார்கள். ஆனால் ஏடுகள் வெகுகாலம் நில்லாமல் சிதிலம் அடைந்துவிடும் என்பதை அறிந்து நிரந்தரமாக (சந்திராதித்தர் உள்ளவரை நிலைபெறுவதாக) என்றது அவர்கள் வாக்கு இருக்க வேண்டும் என்பவற்றைக் கற்களிலும் செம்புத் தகடுகளிலும் செதுக்கி வைத்தார்கள். இதனாலே 'கல்மேலெழுத்துக்கு நேர்' என்ற பழம் வாக்கும் ஏற்பட்டுவிட்டது. அவ்வித கல் சாச னங்களும் செம்பு சாசனங்களும் ஏராளமாக நமது நாட்டில் கிடைக்கின்றன. எந்தப் பழைய ஆலயம் கண்டாலும் கற்சாச னம் இல்லாமல் போகவில்லை. கற்றறியாத நம் பாமரமக்கள் அவைகளைப் பிரமலிபி என்றும் பூதங்களால் எழுதிவைக்கப்பட் டன என்றும் கொள்கை கொண்டிருக்கிறார்கள். இச்சாசனங் களை ஆதியில் மேற்கத்திய ஜர்மானிய புலவர்கள்தான் பார்வை யிட்டு அவைகளின் பெருமைகளை அறிந்தார்கள். பிறகு நம் நாட்டுப் புலவர்களும் சிறிது சிறிதாக அவைகளின் பெருமை களை அறிந்து, சரிதங்களைத் தொகுக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஆயிரக்கணக்காக இருக்கும் இக்கல்வெட்டுகளில் அருமை

யான புதையல்கள் எவ்வளவோ உண்டு. இதுவரைக்கும் நாம் அறிந்து கொள்ளாத தேச வழக்கம், இராஜரீக முறைகள், ஊர் ஆட்சி, பெரியோர் சரிதங்கள்; அரசர்களின் சரிதங்கள், புலவர் சரிதங்கள், அன்னார் செய்யுட்கள், வகுப்பு வழக்கங்கள், கைத் தொழில் முறைகள் இவை முதலான பல பொருள்களை அறிகிறோம். இவைகளிலே நம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டது நால்வருடைய சரித உண்மைகள். இவைகளைப் பற்றியும் நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் உண்டு. அவைகளைத் தொகுத்து அவைகளிலிருந்து நாம் அடையக்கூடிய பலன்களை எடுத்தெழுதுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

மேலும் நாம் ஆராயக் கிடைத்தவை நாளதுவரையில் அரசாங்கத்தாராலே வெளியிடப்பட்டிருக்கும் சாசனங்களேயாகும். அரசாங்கத்தார் இதற்காகச் சில உத்தியோகஸ்தர்களை நியமித்து ஆலயங்களிலுள்ள கல்வெட்டுகளைத் தேடிப் பிரதிகள் எடுக்கிறார்கள். பிறகு அவைகளைப் பதிப்பிக்கிறார்கள். நாளதுவரை ஆயிரக்கணக்கான பிரதிகள்எடுத்திருக்கிறார்கள். இன்னமும் எடுக்காதவைகள் அநேக ஆயிரம் உண்டு. நாளது (1930) ஆண்டுவரை பல்லாயிரம் எடுத்தும் 1899-ம் ஆண்டுவரை எடுத்த பிரதிகளைமாத்திரம் பதிப்பித்திருக்கிறார்கள். பதிப்பு விஷயம் மிகவும் நிதானமாகி யிருப்பது விசனிக்கத்தக்கதே. அவைகளையும் பதிப்பித்தால் நமது ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படும். ஏனைய வருடங்களுக்குக் குறிப்புகள் மாத்திரம் பதிப்பித்திருக்கிறார்கள். அவைகளிலிருந்து பல விஷயங்கள் எடுத்தாளப் பெற்றிருக்கின்றன.

மேற்கு நாடுகளில் இவ்வித ஆராய்ச்சிகளுக்காக அரசாங்கத்தாரைப் புலவர்கள் எதிர்பார்ப்பதில்லை. புலவர்கள் ஒன்று சேர்ந்து சங்கங்கள் கூட்டிப் பொருள் சேர்த்து அச்சங்கங்கள் மூலமாக வேலை செய்வார்கள். அவ்விதம் நம் நாட்டிலும் ஆராய்ச்சிச் சங்கங்கள் ஏற்பட்டால் அவைகளின் மூலம் நம் நாடு பெரும் பயன் அடையும் என்பதில் ஐயமில்லை. அரசாங்கத் தேர்தல் விஷயத்தில் ஆயிரக்கணக்காகப் பொருள் விரயம் செய்யும் நம் பெருமக்கள் இவ்வித அருமைத் தொழிலில்

ஏன் சிறிதாகிலும் உதவி புரிய மாட்டாதவர்களாய் இருக்கிறார்களோ என்பது அறியக்கூடவில்லை.

## 1. திருஞானசம்பந்த சுவாமிகள்

இப்பெரியாருடைய சரித்திரம் எல்லாத் தமிழ் மக்களுக்கும் தெரிந்ததே. பெரிய புராணத்தில் ஒரு பெரும்பாகம் அவர் சரித்திர வரலாற்றைக் கூறுகிறது. மேலும் திருவிளையாடலில் ஒரு படலம் அவர் சரித்திரத்தில் ஒரு விஷயத்தைக் கூறுகிறது. (வன்னியும் கிணறும் லிங்கமும் அழைத்த படலம்) சீகாழியில் கௌணிய கோத்திரத்தில் சிவபாத இருதயர் என்பவர்க்கும் பகவதியாருக்கும் புதல்வராய் அவதரித்து மூன்றும் ஆண்டில் ஞானப்பால் பெற்றுத் தலயாத்திரை செய்து, தேவாரப் பதிகங்கள் அருளினர். மறுபடியும் சீகாழி வந்து உபநயனம் செய்யப் பெற்றார். அக்காலத்தில் அப்பர் சுவாமிகள் தம்மைத் தரிசிக்க வர இருவரும் சிலநாள் ஒருங்கு இருந்தனர். அப்போது சம்பந்தருக்கு 7-வயதும், அப்பருக்கு வயது முதிர்ந்தும் இருக்கலாம். பிறகு சுவாமிகள் பல தலங்கள் சுற்றிச் சென்று தம் 11, 12 வயதில் திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டரைக் கண்டார். சுவாமிகளைச் சிறுத்தொண்டர் உபசரித்ததை நினைந்து தம் பதிகத்திலும்:

“பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.”

“செந்தணல்பூம் புனல்வாய்ந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்டன் அவன்வேண்ட
வந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே.”

என்று அருளியிருக்கிறார். அக்காலத்தில் சிறுத்தொண்டர் குமாரர் சீராளதேவர்க்கு மூன்று வயது என்பதைப் பெரிய புராணத்தில்:—

"வந்துவளர் மூவாண்டின் மயிர்வினைமங் கலஞ்செய்து
தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்
சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
பந்தமற வந்தவரைப் பள்ளியினி லிருத்தினர்"

"அந்நாளிற் சண்பைநகர் ஆண்டகையார் எழுந்தருள
முன்னாக வெதிர்கொண்டு கொடுபுகுந்து முந்நூல்சேர்
பொன்மார்பிற் சிறுத்தொண்டர் புகலிகா வலனார்தம்
நன்னாமச் சேவடிகள் போற்றிசைத்து நலஞ்சிறந்தார்"

என்பவையால் தெரிகிறது. பிறகு பல தலங்கள் சுற்றிவந்து, தம் ஊர் வந்தனர். அங்கு அப்பரை விட்டு நீங்கி, மங்கையர்க் கரசியாரும் குலச்சிறையாரும் அழைக்க மதுரை சென்று சமணரை வென்று, பாண்டியன் சுரம் நீக்கி, சமணத்திலிருந்து சைவத்திற்குத் திருப்பினர். பிறகு பல தலங்களைத் தரிசித்து, திருப்பூந்துருத்தியில் அப்பரைக்கண்டு, பின் வடநாடுயாத்திரை சென்றனர். பிறகு சீகாழி அடைந்து தம் 16-வது ஆண்டில் மணம் செய்துகொண்டு நல்லூர்ப் பெருமணத்து ஆலயத்தில் சோதியில் கலந்தனர்.

இப்பெரியாரின் காலத்தை முதன்முதலில்; நிலை நிறுத்தினவர் வித்வான் சுந்தரம் பிள்ளை அவர்கள். பல நூல்களிலிருந்தும் ஆதாரங்கள் எடுத்துக் கூறியும் சங்கரர் தம் சௌந்திரியலகரியில் "திராவிட சிசு" என்று அன்னாரைக் கூறியிருப்பதையும் ஆதாரமாகக் கொண்டு முன் சில பெரியோர்கள் கொண்டிருந்த பல அபிப்பிராயங்களையும் கண்டித்து எழுதினர்கள். பிறகு அவ்வியாசத்திற்கு அநுபந்தமாக இரண்டு காரணங்களைக் குறிப்பிட்டிருக்கின்றனர். காஞ்சியில் கைலாச நாதர் ஆலயம் என்ற திருக்கற்றளி கி. பி. 550-ல் இராஜசிம்ஹனால் கட்டப்பட, அதைச் சம்பந்தர் காலத்திருந்த அப்பர் பாடி யிருப்பதினால் அதற்குச் சமீப காலத்தில் சம்பந்தர் இருந்திருக்க வேண்டும் என்பது ஒன்று; சளுக்கிய புலிகேசியினுடைய தலை நகர் வாதாபியைப் பல்லவன் படைத்தலைவராக இருந்த சிறுத்தொண்டர் துகளாக்கியதை முன்னிட்டு, அக்காலத்திற்குப்பிறகு அன்னாரைச் சந்தித்த சம்பந்தர் அதற்கு அடுத்த சில ஆண்டுகளுக்

குள் இருந்திருக்கவேண்டும் என்பது இரண்டாவது. சமீப காலத்து ஆராய்ச்சிகளால் இவ்விரண்டும் உண்மை எனத் தெரிகின்றன.

சிறுத்தொண்ட நாயனுருடைய இயற்பெயர் பரஞ்சோதியார் என்பது. அவர் காஞ்சியில் பல்லவ அரசன் நரசிம்மவர்மனிடத்துச் சேனுதிபதியாயிருந்தனர். பல்லவர்களுக்கும் குந்தள நாட்டுச் சாளுக்கியர்களுக்கும் போர் நடந்து வந்தது. அக்காலத்துச் சளுக்கியன் புலிகேசி II என்பவன். இவன் வெகு பராக்கிரமசாலி. வடநாட்டு ஹர்ஷவர்த்தனனை வென்றவன். அக்காலத்தில் இந்நாட்டிற்கு வந்த யுவான் சங்கு என்ற சீன யாத்திரிகன் 641 கி. பி.-யில் வாதாபி சென்றிருக்கின்ருர். கி. பி. 642-ல் பரஞ்சோதியார், புலிகேசி II யை வென்று வாதாபியைத் தூளாக்கிவிட்டார். இதைச் சேக்கிழார்,

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பட்டினமும் பரித்தொகையும்
இன்னனவெண் ணிலகவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்"

எனக் கூறியுள்ளார்.

பிறகு பரஞ்சோதியாரின் பக்தியைக் கண்டு பல்லவன் அவருக்குத் திரண்ட நிதி கொடுத்தனுப்ப அவரும் திருச்செங்காட்டங் குடியில் திருத்தொண்டு பூண்டு வந்தனர். அக்காலத்தில்தான் அவரைச் சம்பந்தர் கண்டு உபசரிக்கப்பெற்றது. இதைச் சிறுத்தொண்டர் புராணத்தில் விரிவாகக் காணலாம். இச் சந்திப்பு கி. பி. 646-7-ல் இருக்கலாம். வாதாபி நகர வீழ்ச்சி அவ்விடத்துச் சாசனங்களால் நிச்சயமாகத் தெரிகிறது. ஆகவே சம்பந்தர் காலம் 639-முதல் 655 வரைக்குள் என ஊகிக்கலாம்.

திருஞான சம்பந்தர் வாழ்ந்த காலம் பல்லவ மன்னர்கள் உன்னத திசையிலிருந்த காலமாகும். பிறகு ஒன்றிரண்டு நூற்ருண்டுகளில் அவ்வம்சம் நிலை குலைந்தது. அதன்பின்சோழவம்சம் தழைத்தது. சோழவம்சத்தினர் சைவசமய பரிபாலகர்கள்.

அவ்வம்சத்தினர் வெகு உன்னத நிலைமை யடைந்து தமிழர் நாகரீகத்தை வெகு தூரம் பரப்பினார்கள். இந்தியா மட்டுமே யன்றி, இலங்கை, பர்மா, சுமத்ரா முதலான தீவுகளுக்கும் சென்று தம் வெற்றியை ஊன்றினார்கள். சைவ சமயத்தைப் பெரிதும் தழுவிப் பல பெரும் கோயில்களை எழுப்பினார்கள். சைவசமய ஆசாரியர்கள் உலகத்திற்கு உபதேசித்ததைப் பலவாறு விருத்தி செய்தார்கள். அவர்களால்தான் சமயாசாரியார்களின் கீர்த்தியும் அதிகமாகப் பரவலாயிற்று.

மூவர்கள் அருளின தேவாரப் பதிகங்கள் பல சிதிலமாகியும் மறைந்தும் போயின. அக்காலத்தில் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்ற ஒரு பெரியார் இறக்காமல் நின்ற பதிகங்களையெல்லாம் சேகரித்து ஒன்றுசேர்த்துத் திருமுறைகளாக வகுத்து வெளியிட்டனர். அதுமுதல் பதிகங்கள் இறந்துபடாமல் பாதுகாக்கப்பெற்றன. இது நடந்தது 10-ம் நூற்றாண்டு. ஆகவே அக்காலத்தில் சமயப்பற்று அதிகமாகப் பொதுமக்களிடத்தும் அரச குடும்பத்தாரிடத்தும் வேரூன்றியிருந்ததென்று தெரிகிறது. நம்பியாண்டார் நம்பி இறவாமல் நிலைக்கும்படி தேவாரங்களைச் சேகரித்த அதே காலத்து, சில புலவர்கள் சில பதிகங்களைக் கோயில் கற்களிலும் செதுக்கி வைத்தனர் போலும். ஏனெனில் 10 நூற்றாண்டு எழுத்திலே திருவிடைவாய் ஆலயத்தில் சம்பந்தர் பதிகம் ஒன்று எழுதப்பெற்றிருக்கிறது. அப்பதிகம் இப்போது வழங்கி வரும் திருமுறையில் கிடையாது. ஆகவே அக்காலத்தில் பதிகங்களை மறைந்து போகாதபடி சேமிக்கவேண்டுமென்ற எண்ணம் பொதுமக்களுக்கு இருந்தது என அறியலாம். அத்தேவாரம்முதல் இறுதி பாசுரங்கள் இவை,—

"மறியார்கரத் தெந்தையம் மாதுமையோடும்
பிறியாத பெம்மானுறையு மிடமென்பர்
பொறிவாய் வரிவண்டு தன்பூம் பெடைபுல்கி
வெறியார் மலரிற்றுயிலும் விடைவாயே."
ஆறும் மதியும் பொதி வேணிய னூரா
மாறில்பெருஞ் செல்வமலி விடைவாய்

நாறும் பொழிற் காழியர் ஞானசம்பந்தன்
கூறுந்தமிழ் வல்லோர் குற்றமற் றோரே."

இவையே சம்பந்தரைப்பற்றிய ஆதிசாசனமாகும்.

சோழ மன்னர்களிலே மிகப் பிரக்கியாதிபெற்றவன் இராஜ ராஜர் 1 (985-1013.) இவர் சிவபாத சேகரன் என்ற பெயர் பெற்றுச் சைவத்தை மிகவும் பாராட்டினவர். சைவத்திற்குத் தலைமை ஆலயமாகிய சிதம்பரத்தைப்போன்று தன் தலைநகரான தஞ்சையில் தம்பெயரால் இராஜராஜேசுரம் என்று புகழ்பெற்ற ஆலயத்தை நிர்மானித்தவர். எவரும் பிரமிக்கத்தக்க வேலைப்பாடுள்ள இப்பெரும் ஆலயம் இன்னமும் நல்ல நிலைமையில் இருக்கிறது. இவ்வாலயத்தின் சுற்சுவர்களில் தாம் இயற்றிய சகல காரியங்களையும் பதித்து எழுதிவைத்துள்ளார். அவர் செய்துள்ள சகல சிவ கைங்கரியங்களும் அங்கே எழுதப்பட்டிருக்கின்றன. சிதம்பரத்தில் நடராஜர் சந்நிதியைப் போன்று இவ்வாலயத்தில் "ஆடவல்லான்" மூர்த்தியை நிர்மானித்து அதற்குச் சகல வைபவங்களும் நடத்திவந்தார்.

இராஜராஜச் சோழர் அந்திய காலத்திலும் அவர் மகன் இராஜேந்திர சோழர் ஆரம்ப நாளிலும் இராஜராஜேசுவராலயத்தை மேல்பார்வை பார்த்து வந்தவன் பொய்கை நாட்டுத் தலைவனான ஆதித்த சூரியன் என்ற தென்னவன் மூவேந்த வேளான் என்ற ஒரு பிரபு. இவன் இராஜராஜர் கடைசி ஆண்டு அதாவது 1013-14-ல் திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையர், நம்பி ஆரூரனுர், நங்கை பரவையார் முதலான மூர்த்திகளைக் கோயிலில் பிரதிஷ்டை செய்தான். இச்செய்தி தஞ்சை இராஜராஜேசுரன் ஆலயத்தில் (Vol. II No, 38) அடியிற் கண்டபடி செதுக்கப்பட்டிருக்கிறது:—

"ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீராஜராஜேசுரம் உடையார்க்கு ஸ்ரீ கார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனை தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீ ராஜராஜீசுரம் உடையார் கோயிலில் யாண்டு இருபத்

தொன்பதாவது வரை எழுந்தருளுவித்த செப்பு பிரதிமங்கள்.

... ... ... ... ...

பாதாதி கேசாந்தம் இருபத்திரு விரலே இரண்டு தோரை உசரத்து இரண்டு திருக்கை யுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த திருஞானசம்பந்தடிகள் ப்ரதிமம் ஒன்று. இவர் எழுந்தருளி நின்ற இருவிரலே இரண்டு தோரை உசரத்து பத்மம் ஒன்று; இதனொடும் கூடச்செய்த ஒன்பதிற்று விரலே இரண்டு தொரைச் சமசதுரத்து நால்விரல் உசரத்து பீடம் ஒன்று.

இவனே திருஞானசம்பந்தனடிகளுக்குக் குடுத்தன— உருத்திராட்சச்சுரி பொன்னின் நூலிற் கோத்த உருத்திராக்ஷம் ஒன்றுட்பட நிறை அரைக் கழஞ்சே இரண்டு மஞ்சாடிக்கு விலை காசு ஒன்றரை, உருத்திராக்ஷச்சுரி பொன்னின் நூலிற்கோத்த உருத்திராக்ஷம் ஒன்றுட்பட நிறை அரைக் கழஞ்சே மஞ்சாடியும் குன்றிற்கு விலை காசு ஒன்றரை, தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சுரி ஐம்பத்தாறும் உருத்திராக்ஷம் ஐம்பத்தாறும் உட்பட நிறை எண் கழஞ்சே நாலு மஞ்சாடியும் குன்றிற்கு விலை காசு இருபத்தைஞ்சு, திருப்பொற்பூ ஒன்று, பொன் கழஞ்சே குன்றி திருக்கைக்காரை ஒன்று, பொன்கழஞ்சே முக்காலே நாலு மஞ்சாடி, திருப்பட்டிகை ஒன்று, பொன் இருகழஞ்சு.

... ... ... ... ...

இவன் எழுந்தருளுவித்த திருஞானசம்பந்தனடிகளுக்கு இராஜேந்திர சிங்க வளநாட்டு திருவாலி நாட்டு உடையார் ஸ்ரீராஜீசுரமுடையார் தேவதானம் குறுவாணியக்குடி ஆகிய பரகேசரிபுரத்து நகரத்தார் யாண்டு இருபத்தொன்பதாவது வரை குடுத்த ரத்னங்கள் தக்ஷிணமேரு விடங்கன் என்னும்கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னும் கல்லால்நிறை எடுத்தும் கல்லில்வெட்டின உருத்ராக்ஷம் பொன்னின் சுரிகட்டிற்று ஒன்றும்

நாண்படுகண்ணுங் கொக்குவாயும் உட்பட நிறை கழஞ்சே எழுமஞ்சாடிக்கு விலைகாசு மூன்றேகால்"

மேலும் கி. பி. 1014 வருடத்தில் மூவருக்கும் பெரியபெருமாளுக்கும் பல தானங்கள் செய்தவன்—அவ்வாதித்த சூரியன் என்பான். இதற்குக் கல்வெட்டு (Vol ll No. 41 S. I. I.)

"உடையர் ஸ்ரீராஜராஜீசுவரம் உடையார்க்கு ஸ்ரீகார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனை தென்னவன் மூவேந்த வேளான் தான் எழுந்தருளுவித்த நம்பியாரூரனுர்க்கும், திருஞானசம்பந்தனடிகளுக்கும், திருநாவுக்கரைய தேவர்க்கும் உடையார் ஸ்ரீராஜேந்திர சோழதேவர்க்கும் யாண்டு மூன்றாவது வரை குடுத்த தரா நிலை விளக்கு ஒன்று இரும்பு நாராசம் உட்பட நாற்பத்தொரு பலவரை......"

மேலும் இராஜராஜேசுவரர் ஆலயத்தில் திருப்பதிகம் (பதியம்) வாசிப்பதற்கு 48 பேருக்கு ஏற்பாடுகள் செய்தது (Vol. ll No. 65) கல் வெட்டில் காண்கிறோம். ஆகவே அக்காலத்தில் திருமுறைகள் சேகரிக்கப்பட்டுக் கோயில்களில் அவைகள் வழங்கப்பெற்று வந்தன என்பதை அறிகிறோம். மூவருடைய பெருமை அதிகமாகப் பரவியிருந்தது என்பதை இது நிரூபிக்கிறது. அது;

"இராஜகேசரிவர்மரான இராஜராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது வரை உடையார் ஸ்ரீ ராஜராஜேசுரர் உடையார்க்கு திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாக உடுக்கை வாசிப்பான் ஒருவனும்..."

... ... ... ... ...

என அச்சாசனம் கூறுகிறது. இவையெல்லாம் 10-ம் நூற்றாண்டின் இறுதியில் இருந்த இராசராசச் சோழர் காலத்தில் நடந்தவை.

அவர் மகனார் கங்கை கொண்ட சோழர் என்ற இரா ஜேந்திரச் சோழர் ஆவர். இவரும் வெகு கியாதிபெற்றுப் பல தேசங்களையும் பிடித்து ஆண்டவர். இவரும் சிவபக்தியில் சிறந்து தாம் கட்டின தலைநகரான கங்கை கொண்ட சோழ புரத்திலே ஒரு பெரும் சைவாலயம் கட்டி, அதில் சைவ அபிவிருத்திக்கு வேண்டிய சற்காரியங்களைச் செய்தார். (தொடரும்)

———

# மணிவாசகரும் கண்ணப்பரும்

(௩௬அ-ம் பக்கத் தொடர்ச்சி)

[தமிழ்ப்புலவர் அ. மு. சரவண முதலியாரவர்கள் எழுதியது]

இங்ஙனம் ஒரு வரலாறு, தன்னைக் கூறுவார்க்குத் தலைவன் தாளின்கண் தாழா அன்பை விளக்குந் தன்மையதானால் அவ்வரலாறுடையார் (கண்ணப்பர்) ஆண்டவன் அடியின் கண் வைத்த அயரா அன்புடையாரென்பதில் ஐயம் யாதுளது? இதனாலன்றோ கருத்துப் பொருளன்றிக் காட்சிப் பொருளாகாத அன்பிற்கு ஒரு வடிவு கூற வேண்டுமானால் அது கண்ணப்பர் திருவுருவந்தான் எனத் தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருந்தகையார், திருஞான சம்பந்தர் திருக்காளத்தித் தேவ தேவனைக் காணும் பேரவா உந்த அம்மலை மீதேறி இறைவனை இறைஞ்சி, அப்பயனை உடனே நேரிற் கண்டாங்கு, கண்ணப்பரைக் கண்டு வணங்கினாரென்பதை,

இறைவர் திருமுன்பெய்தித் தொழுது தலை மேற் கொண்டு செங்கை போற்றி, வீழ்ந் தெழுவார் கும்பிட்ட பயன் காண்பார் போல் மெய் வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்.

எனக் கூறியருளி, அவ்விருவரையும் அவர் கண்ட காட்சியை,

"உள்ளத்திற்றெளிகின்ற வன்பின்மெய்மை
யுருவினையும் அவ்வன்பினுள்ளே மன்னும்

வெள்ளைச்செஞ்சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையும் உடன்கண்ட விருப்பம் பொங்கிப்
பள்ளத்தி னிழிபுனல்போற்பரந்து செல்லப்
பைம்பொன் மலைவல்லி பரிந்தளித்த செம்பொன்
வள்ளத்தின் ஞானவா ரமுதமுண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்குகின்றார்.''

என்னுஞ் செம்மை சான்ற மொழிகளால் தெருட்டியருளினர். இன்னும் நம்பியாரூரர் அம்மலையை நண்ணுவதை,

'தடுக்கலாகாப் பெருங்காதறலைநின்றருளுங் கண்ணப்பர்
இடுக்கண்களைந் தாட்கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
அடுக்கல் சேரவணைந்து பணிந்து——————'

என்னும் பொன் மொழிகளாற் புகன்றருளுகின்றனர். இவ்வாற்றான் கண்ணப்பர் அன்பின் முடிந்த முடிபுக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறாரென்பது ஒரு தலை.

இப்பெரியார் அன்பினைப் பாராட்டுவான் நாம் இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட 'கண்ணப்பனொப்பதோர்' என்னுந் திருவாசகத்தையே தலைப்பெய்து

'கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக் = கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றாரறியு மன்பன் றது'

என்று கூறுந் 'திருக்களிற்றுப்படியாரும்' இங்குக் கருதத் தக்கதாகும். எனவே அன்பின் ஊற்றுக்கு நிலைக்களனாகி விளங்கிய வாதவூரடிகள் தமக்கு இறைவனிடத்து அன்பில்லை யென்றும், கண்ணப்பர் தாம் அன்பிற் றலைசிறந்தவரென்றுங் கருதியதன் காரண மென்னவென்பதைச் சிறிது ஆராய்வோம்.

சாத்த னென்பானொருவன் தனது வாழ்க்கையில் நேர்ந்த தொன்றைப் பேரின்ப மெனக் கருதுகின்றான்; அதுவே பிறிதொரு கொற்றன் வாழ்க்கையில் அமைந்து கிடக்குமேல் அவனை அடிக்கடி நினைப்பானென்பதும், அவன் ஒரு செல்வன் முன்

'எனக்கு இவை யிவை வேண்டும்' எனக் குறையிரக்கின்றான்,' அவை அவை அக் கொற்றனிடம் அமைந்து கிடக்குமேல் அவனை அடிக்கடி நினைவதுடன் 'அவன் அவற்றைப் பெறுதற்கு முற்றுந் தகுதி வாய்ந்தவன்; யான் அத்தகுதி சிறிதுமில்லாத வன்;' எனச் சிந்திப்பானென்பதும், இன்னும் அவன் அச் செல்வனிடத்துத் தாம் வேண்டும் பொருள்களைக் கொற்றன் அச்செல்வனுக்கே அளிக்க வல்லனாயின் அவனை எண்ணி எண்ணி இன்புறுவானென்பதும் உலகிற் கண்கூடாகக் காண் பதை நாம் நினைவில் வைத்துக் கொள்வோமாக.

அடிகள் குதிரை வாங்கும் பொருட்டுத் திருப்பெருந்துறை எல்லையை அணுகிய வுடனே பல இன்பங்கள் தம்மகத்தே நிகழ்கின்றன. ஒரு பெருஞ் சுமை அவர் முடியின் மீதிருந்து கீழே இறங்கியது போலும் அவர் கண்டார். இதனை,

"பித்திதுவெனப் பிறர் நகைக்கவரு நாலாஞ்
சத்திபதியத் தமது சத்தறிவுதன்னைப்
பொத்தியமலத் தினும்வெரீ இச்சுமை பொறுத்தோன்
ஒத்திழிபிணிப்புறு மொருத்தனையு மொத்தார்."

என்னுந் திருவிளையாடற் புராணத்தால் அறிகின்றோம்.
இனி, கானவர் தலைவன் காளத்தி மலையைக் காண்டலும்,

"ஆவதென்னிதனைக் கண்டிங்கணைதொறு மென்மேற் பாரம்
போவதொன்றுளது போலும்,"

என எண்ணி வியப்புறுகின்றா ரென்பதைத் திருத்தொண் டர் புராணத்தால் தெரிகின்றோம். எனவே தமது வாழ்க்கை யில் நேர்ந்த அதனைப் பெரிய இன்பமெனக் கருதிய அடிகள் அது போன்ற இன்பத்தை முன்னரே நுகர்ந்த கண்ணப்பரைக் கவின்பெறக் கழறல் இயல்பன்றோ?

மணிவாசகனார் தமது திருவாசகத்தின்கண் "சித்தஞ் சிவ மாக்கிச் செய்தனவே தவமாக்கும், அத்தன்" எனவும், "காணுங் கரணங்களெல்லாம் பேரின்ப மெனப், பேணு மடியார்" என வும் கூறுமாற்றால், சீவ கரணங்களனைத்தும் சிவகரணங்களாக

நிகழப் பெற்றவர் செய்யும் எவ்வகை வினையும் தவவினையே யாகுமெனவும், அத்தகைப் பேறு தமக்கு அருள வேண்டி ஆண்டவனை வேண்டினு ரெனவும் புலனுகும். இங்ஙனம் வேண்டி அதனைப் பெற்றமை,

"சித்தமல மறுவித்துச் சிவமாக்கியெனையாண்ட"
"சிந்தைதனைத் தெளிவித்துச்சிவமாக்கி யெனையாண்ட"

என்பன முதலியவற்ரு லுணர்க.

இனி, கண்ணப்பர் இந்நிலையை (சிவகரணமாதல்) அடைந்தவ ரென்பதை,

"திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர்காணுமுன்னே
அங்கணர் கருணைகூர்ந்த அருட்டிரு நோக்கமெய்தித்
தங்கியபவத்தின் முன்னைச் சார்புவிட்டகல நீங்கிப்
பொங்கிய வொளியினீழற் பொருவிலன்புருவமாஞர்"

(கண்ணப்பர் புராணம்)

என வருஞ் செய்யுளா லறிக. அவர் செய்தன அனைத்துந் தவமே யாயின வென்பதை,

"அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்
அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென்றருள் செய்வார்" (ஷை

"அவன்மன நமக்குக் கோயிலவனுரை பலவுமோத்தாம்
அவன் முயல் தொழில்களெல்லாம் அறத்தொழிலையமில்லை"

(சீகாளத்தி புராணம்)

எனச் சிவபெருமான் சிவகோசரியார் கனவின்கண் தோன்றிக் கூறியருளியவாற்ரு லறிக.

இன்னும் நமது அடிகள் இறைவனை நோக்கித் தம் விருப்பத்தைக் கூறுமுகத்தால், 'பெருமானே! நின் திருவடியை என் இரண்டு கைகளாலும் இறுகப் பிடித்து என் முடிமீதிருத்திக்

தொழவும், உன் திருப்பெயர்களை என் வாயார வாழ்த்தவும், உன்னை நினைந்து நினைந்து என் மனம் அழலிற் பட்ட மெழுகு போல் உருகவும் விரும்புகின்றேன்.' என வேண்டி நிற்கின்றார்; இதனை,

"கையாற் றொழுதுன் கழற்சேவடிகள் கழுமத்தழுவிக் கொண்டு
எய்யாதென்றன் றலைமேல் வைத்தெம் பெருமானென்றென்று
ஐயாவென்றன் வாயாலரற்றியழல் சேர்மெழு கொப்ப
ஐயாற்றரசே ஆசைப்பட்டேன் கண்டாயம்மானே"

(திருவாசகம்; ஆசைப்பத்து)

என்னும் செய்யுளாற் காண்க.

(மன மொழி மெய் மூன்றாலும் வழிபட வேண்டும் என்று விரும்பியபடி)

இனி, கண்ணப்பர் காளத்தி மலையிலேறிக் குடுமித் தேவரைக் கண்ட அளவில், பன்னாள்வரையுங் காணாது போய் ஒரு நாள் எதிர்ப்பட்ட சேய் ஒன்றை அதன் தாயானவள் எங்ஙனம் விரைந்து ஓடி இறுகத்தழுவி முத்தமிட்டு உள்ளம் உருகா நிற்க, கண்களில் நீர் பெருக நின்று 'என் கண்ணே! இது வரையும் நீ எங்குச் சென்றிருந்தனை' என அன்புகனிய அகங் கரைய வினவுவாளோ அங்ஙனமே தமது தோள்கள் அழுந்து மாறு அப்பெருமானைக் கட்டித் தழுவி, அழலிற்பட்ட மெழுகு போல உள்ளம் உருகா நிற்க, முத்தமிட்டுத் தமது தூயவாய் திறந்து கண்களில் நீரரும்பச் சில கூறுகின்றார்; இதனை,

"நாள்பலபிரிந்திருந்து நண்ணிய சிறுசதங்கைத்
தாளிள மகனைக்கண்ட தாயெனத் தாழாதோடி
நீளெழுவனையதோள்கள் ஞெமுங்குறத் தழுவிமோந்து
வாளழலரக்கினன்ன மனத்தினன் முத்தங் கொண்டான்."

(சீகாளத்தி புராணம்)

"செய்ய கண்ணீரரும்பச் செறிமயிர் பொடிப்ப ஆதன்
கையகப்பட்ட தெய்வக் கதிர்விடு மணியினையேற்கு
ஐயன் வந்தகப்பட்டானென் றணியெயி றிலங்காக்கு
மெய்யெலா மெய்யன்பாயவிடலை மற்றின்ன சொல்வான்." (ஷை)

என்பவற்ருல் அறிக. எனவே அடிகள் விரும்பியவை எவ் வெவையோ அவையனைத்தும் நாயனுர் நிகழ்ச்சியில் அமைந்து கிடத்தல் காண்க.

இனி, மணிவாசகனுர் 'உற்ருர் முதலிய யாரும் எவையும் எனக்கு வேண்டாம்; நின் திருவடியை நினைந்து நினைந்து, ஈன் றணிமைத்தாய பசு ஒன்று எங்ஙனம் தன் கன்றை நினைந்து நினைந்துருகுமோ, அங்ஙனமே யான் உருக வேண்டுகிறேன்' என்பதை,

"உற்ருரையான் வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்ருரையான்வேண்டேன் கற்பனவுமினியமையும்
குற்ருலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே."

என்னுந் திருவாசகத்தாற் காண்க.

இனி, நமது திண்ணனுரோ, குடுமித் தேவரைக் கண்டது முதல் அருந்தவங் கிடந்து பெற்ற தமது இருமுதுகுரவரையும், மற்றும் உற்ருரையும், மற்றவற்றையும் வேண்டாராகி அக்குடுமித் தேவனுக்கு உணவு கொண்டு வரும் பொருட்டுப் போகத் துணிந்தவர் பிரிந்து செல்ல மனம் ஒருப்படாமல்,

"போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப்போவர்
காதலினேக்கி நிற்பர் கன்றகல்புனிற்றுப் போல்வர்"

ஆனுர். எனவே இங்கும் மணி அண்ணலார் வேண்டியது திண்ணனுரிடம் அமைந்து கிடந்தமை கண்டு களிப்புறுக.

இன்னும் நமது வாதவூர் வள்ளல்,

"இறைவன் திருவடியை இடையருது நினைந்துருகப் பெற்று, கண்டவ ரெல்லாம் 'இவன் மால் கொண்டவன்' என்று சொல்லுமாறு யான் ஆவது என்ஞான்ருே?" எனக் கவல்வார்,

உத்தமனத்தனுடையானடியே நினைந்துருகி
மத்தமனத்தொடு மாலிவனென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும்
தத்தமனத்தன பேசவெஞ்ஞான்று கொல்சாவதுவே"

என்று கூறியருளினர். இனி, வேடர் பெருமானே, ஆண்டவன் அருட்கழலை அணுத் துணையும் மறவாது உன்னியுன்னி உருகியதுடன்,

"என் செய்தாய் திண்ணா நீதானென்னமால் கொண்டாய்"

எனவும்,

"தேவுமால் கொண்டானிந்தத் திண்ணன்" எனவும் முறையே நாணனாலும், நாணன், காடன் என்னும் இருவராலும் கூறப்பட்டனர் எனத் திருத்தொண்டர் புராணத்துத் தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருந்தகை தெரித்த வாற்றால் தெரிகிறோம். எனவே ஈண்டுள்ள ஒற்றுமையும் ஓர்ந்துளமகிழ்க.

(தொடரும்)

குறிப்பு:—சென்ற இதழில் 51-ம் பக்கத்து 9-வது வரியில் 'திருத்தொண்டத் தொகையில் வரும்' என்ற இடத்திலுள்ள முற்றுப் புள்ளியை நீக்கி, அதனை அடுத்த வரியுடன் இணைத்துப் படிக்கக் கடவர்.'

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

## உண்மை, வாய்மை, மெய்மை (௧)

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

1. உண்மை என்னும் சொல்லானது கடவுளைக் குறிக்கும் பண்டைத் தமிழ்ச் சொற்களில் ஒன்று. உண்மை என்னும் சொல்லைப்போல வாய்மை மெய்மை என்னும் சொற்களும் அதே பொருளை உடையனவாய்க் கடவுளைக் குறிக்கும் பெயர்களாம். அவைகள் இக்கட்டுரையில் கருதப்படும்.

2. உண்மை என்னும்சொல் உள் என்ற பகுதியாலும் மை என்ற பண்புப் பெயர் விகுதியாலும் ஆக்கப்பட்டது. உள் என்பது மையுடன் சேர்ந்து மெலி மேவின், னணவும் என்ற நன்னூற் சூத்திர விதியால், ளகர வொற்று ணகர வொற்றாக மாறி, உண்மை என ஆயது.

3. உண்மை என்னும் சொல்லிற்கு உள்ளேயிருக்கிற தன்மை (what is within) என்பது வேர்ப்பொருள் (root-meaning) ஆகும். அஃது உள்ளதாயிருக்குந் தன்மை (what is real) என்றும் பொருள்படும். உள் என்ற தமிழ்ச் சொல்லானது ஒருவனுடைய மனதை (mind)க் குறிக்கிறது. உள் என்ற சொல்லுடன் அம் சேர்த்து உள்ளம் என்று கூறுதலுமுண்டு. அதனால் உள்ளத்தில் விளங்குவது உண்மை (Truth) யாகின்றது. உள்ளதாய் விளங்குவதும் (that which is real) உண்மையாகும். உள் அல்லது உள்ளம் என்ற சொல் ஆன்மாவுக்கு (உயிருக்குப்)ப் பெயராய்ச் சிவஞான போதம் முதலிய தமிழ்ச் சமய நூலில் வழங்கப்படுகின்றது. ஆகவே உண்மை (Truth) என்பது ஆன்மாவில் அல்லது ஆன்மாவினது உட் கருவியாகிய உள்ளத்தில் விளங்குகிறது என்று தமிழ் முன்னோர்கள் அறிந்து, அதற்கு அவர்கள் உண்மை என்ற பெயரை இட்டு வழங்கி வந்தார்களென நாம் அறிகிறோம்.

4. உண்மையானது (truth) ஒருவனுடைய ஆன்மாவின், அல்லது ஆன்மாவினுடைய உட்கருவியாகிய (அந்தக் கரணம்) உள்ளத்தில் விளங்கும். எனவே அது வெளியே விளங்குவது அல்ல என்பது தானே போதரும். நூல்களிலே ஓதப்படும் சொற்கள் அல்லது பிறரொருவர் சொல்லும் சொற்கள் ஒருவனுடைய உள்ளத்தில் ஆழ்ந்து மறைந்து கிடக்கும் உண்மையை மேலே எழுப்பி வெளிப்படுத்துதற்குக் கருவிகளாயிருக்குமே அல்லாமல், அச் சொற்களே அவனுடைய உள்ளத்தில் விளங்கும் உண்மை ஆக மாட்டா. அவன் தான் நூலில் ஓதி அல்லது பிறரிடம் கேட்டு அறிந்த சொற்களை உள்ளத்தில் உய்த்து நினைந்து அறிந்து உணர்ந்து கொள்ளுதலினாலேயே அச் சொற்கள் அவனுடைய உள்ளத்தில் உண்மையாக விளங்குவனவாகும். எம்மட்டில் அவன் அச் சொற்களைத் தனது உள்ளத்தில் அறிந்து உணர்வானோ அம்மட்டில் அச்சொற்கள் உண்மையாக விளங்குகின்றன. இந்தக் கருத்தைக் குமரகுருபரசுவாமிகள் தாம் இயற்றிய நீதி நெறி விளக்கத்தில் "எத்துணையவாயினுங் கல்வியிட மறிந்து உய்த்துணர்வில்லெனி லில்லாகும்" என்று

கூறி அருளினர். உய்த்துணர்வு இல்லாமல் எத்துணை நூல்களைக் கற்றாலும் பயனுடையதாகாது என்பது தமிழ் முன்னோர்களுடையகொள்கை.கல்வி என்ற தமிழ்ச்சொல்லின் வேர்ப்பொருளினாலும் உண்மையானது (Truth) ஒருவனுடைய உள்ளத்தில் ஆழ்ந்து கிடப்பதனால் அதனை உள் நோக்கித் தோண்டி வெளிப்படுத்தல் வேண்டும் என்னும் கருத்து பெறப்படுகின்றது.

5. இனி ஆன்மாவிலும், ஆன்மாவினது உள்ளத்திலும் விளங்குவது கடவுளுடைய அருட்சத்தியாகும் (Divine Force) ஆதலின், ஆன்மாவிலும், உள்ளத்திலும் உண்மையை விளங்கும்படி செய்தற்குக் காரணமாயுள்ளது இந்த அருட்சத்தியேயாம். எவ்வளவுக்கு எவ்வளவு ஆன்மாவும் உள்ளமும், காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும் அறுவகைக் குற்றங்களினின்று நீங்கித் தூய்மையுடையன வாகுமோ அவ்வளவுக்கு அவ்வளவு ஆன்மாவிலும் உள்ளத்திலும் உண்மையானது தெளிவாய் விளங்கித் தோன்றும். அப்பொழுது முன் ஆராய்ச்சியினால் வந்த உய்த்துணர்வு இப்பொழுது தெளிவு அறிவாக (Intuition) மாறும். இக்கருத்தைத் திருஞானசம்பந்த சுவாமிகள் "அகனமர்ந்தவன்பினரா யறுபகை செற்றைம்புலனு மடக்கி ஞானப் புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர்" என்று கடவுளைக் கூறி, அருளினர். இதனால் ஆன்மாவிலும் உள்ளத்திலும் விளங்கும் உண்மைக்குக் கடவுளே பற்றுக்கோடாயுள்ளான் என்பதும் (God is the source of truth) அவ்வாறு தூய்மையுடையாரது உள்ளத்தில் விளங்கும் பொருள் உள்ள பொருளாயுமிருப்பதால் கடவுளே உள்ள பொருள் என்பதும் (God is the truth) பெறப்படுகின்றன. இக்கருத்தைப் பண்டைத் தமிழ்மக்கள் அறிந்து கடவுளுக்கு உண்மை என்று பெயரிட்டனர். உள்ளதாயிருக்கிற பொருளுக்கு அவர்கள் உண்மை என்று பெயரிட்டது அவர்களுடைய அறிவு நுட்பத்தைக் காட்டுகின்றது. கடவுளை உள்ள பொருள் என்று திருஞானசம்பந்த சுவாமிகள்,

"உள்ளதன்றனைக் காண்பன்கீ ழென்றமாமணி வண்ணனும்
உள்ளதன்றனைக் காண்பன்மே லென்றமாமல ரண்ணனும்

உள்ளதன்றனைக் கண்டிலா ரொளியார் தஞ்சடை முடியின்மேல்
உள்ளதன்றனைக் கண்டிலா வொளியார் விளநகர்மேயதே.''

என்ற திருவிளநகர்த் தேவாரப் பாட்டிற் கூறியருளினர். இப்பாட்டில் உள்ளதன் என்ற சொற்றொடர்கள் நான்கும் உள்ள பொருளாயிருக்கிற கடவுளைக் குறிக்கின்றன.

6. இனி உண்மை என்னும் சொல் தூய பெரியாரது உள்ளத்திலே விளங்கும் உண்மைப் பொருளாகிய (உள்ள பொருளாகிய) கடவுளைக் குறித்தல்போல வாய்மை என்னும் சொல் அத்தகைய பெரியார் தமது உள்ளத்திலிருந்து வாயினலே கூறும் உண்மையைக் (truth) குறிக்கின்றது. வாய்மை என்ற சொல் வாய் என்ற பகுதியும் மை என்ற பண்புவிகுதியும் சேர்ந்து ஆகியது. மக்கள் தங்கள் உள்ளத்தில் விளங்கும் கருத்தைப் பிறராறிய வெளிப்படுத்தற்கு வாயே வாயிலாக இருக்கின்றது. திருவள்ளுவ நாயனர் தாம் அருளிச் செய்த திருக்குறள் 30-வது அதிகாரத்தில் வாக்கினல் உண்மை கூறும் அறச்செயலை (Truth Speaking) வாய்மை என்று கூறினர். அவர்,

"தூஉய்மை யென்பதவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்''

என்ற குறளில், வாஅய்மை என்ற சொல்லைக் கடவுளுக்குப் பெயராகக் கூறினர். உரையாசிரியர் பரிமேலழகரும் அச்சொல் விற்குப் பொருளாக "மெய்ம்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மை என்று கூறினர்'' என்று உரைத்தனர்.

7. இனி மெய்ம்மை என்ற சொல்லும் அவ்வாறே மெய்யினற் (உடம்பினற்) செய்யப்படும் உண்மைச் செயலைக் குறிக்கின்றது. அஃது உள்ளதான அல்லது உண்மைக்குப் பற்றுக்கோடாயுள்ள கடவுளைக் குறித்தற்குத் தமிழ் நூல்களில் வழங்கப்படுகின்றது. மெய் என்ற சொல் கடவுளைக் குறிக்கும் பெயராய்ச் சிவநெறி நூல்களில் நாம் காணலாம். திருவள்ளுவரும்,

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்ற குறளில், கடவுளை மெய்யாகிய பொருள் எனப் பொருள் படும் மெய்ப்பொருள் எனக் கூறினர்.

8. மேலே கூறியவாற்ருல் பண்டைத் தமிழ் மக்கள் உள்ளத்தில் விளங்குங் கருத்துக்கு உண்மைஎன்றும், அந்தக்கருத்து வாயினுற் கூறப்படும்பொழுது அதற்கு வாய்மை என்றும், அந்தக் கருத்து உடலினது தொழிலாற் செயற்படும்பொழுது அதற்கு மெய்மை என்றும் பெயரிட்டு வழங்கினர் என்பதும், அவ்வாறு உள்ளத்திலும் வாயிலும் உடற் செயலிலும் விளங்கும் உண்மைக்குப் பற்றுக்கோடாயிருக்கும் பொருளாயும் உள்ள பொருளாயுமிருப்பவன் கடவுள் என்று அறிந்து கடவுளுக்கும் அப்பெயர்களை இட்டு வழங்கினர் என்பதும் நாம் அறிகிருேம்.

9. இனி உள்ளத்தில் விளங்கின கருத்து வாயிருலே கூறப்பட்டு உடலினுற் செய்யப்பட்டு ஒன்றுக் கொன்று முரணுது நேர்மைப் பட்டிருக்குந் தன்மைக்குப் பண்டைத் தமிழ் மக்கள் "செம்மை" என்று பெயரிட்டு வழங்கினர். செம்மை என்ற சொல் நேராயிருக்குந் தன்மை என்று பொருள்படும். பரிமேலழகர் கூருக-வது குறளின் அடியில் "செம்மை - கருத்துஞ் சொல்லும் செயலுந் தம்முண் மாருமை" என்று உரை கூறியிருத்தல் காண்க. செம்மை என்ற சொல்லும் அதனேடு பொருள் என்ற சொல் சேர்ந்து ஆகிய செம்பொருள் என்ற சொற்ருெடரும் கடவுளைக் குறிக்கும் பெயர்களாகத் தமிழ் நூல்களில் பல இடங்களில் வழங்கப்பட்டிருக்கின்றன. ஒன்று இரண்டு காட்டுகிறேன்; திருவள்ளுவர் "சிறப்பென்னும் **செம்பொருள்** காண்பதறிவு" என்றும்; திருஞான சம்பந்த சுவாமிகள் **செம்மை**யாகு சிவன் என்றும் கடவுளுக்குப் பெயராகக் கூறியிருத்தல் காண்க. விரிப்பில் உரை பெருகும்.

10. உண்மை, வாய்மை, மெய்மை, செம்மை என்ற சொற்களின் ஆராய்ச்சியானது பண்டைத் தமிழ் மக்கள் தங்கள் உள்ளம், நா, உடல் என்னும் மூன்று கருவிகளால் முறையே நிகழ்த்தும் நினைப்பும் சொல்லும் செயலும் ஒன்று பட்டு ஒழுகும் செம்மை அறநெறியிற் செல்லும் உயரிய நாகரிக நிலையை

வசைகூறிக் கலாம் விளேத்தல் யாது பயனைப் பெறுதற்கோ! ஆங்கில மொழியையே பயிலுதலால் இவ்வுலகத்திற் பெறும் பயன்களையெல்லாம் மறுத்துத் தமிழை வருந்திக் கற்றதற்குப் பயன் இதுதானே? ஆங்கிலமொழி கற்றவர் தமக்குட் கருத்து வேறுபாடுகள் வந்தக்கால், அவரவர் தாந்தாம் கொண்ட கொள்கைகளை மட்டும் விளக்கிக் காட்டி வழக்கிடுகின்றனரே யல்லாமல், தமிழரைப்போல் இங்ஙனம் ஒருவர்மேலொருவர் வசைகூறி வழக்கிடுதலைக் கண்டிலம். ஆங்கில நன்மக்களிடத் துள்ள உயர்ந்த தன்மைகளையும் உயர்ந்த செய்கைகளையும் பின் பற்றுமல் அவரைப் பழித்துப் பேசிக்கொண்டே அவர் தம் ஊண் உடைகளைமட்டும் விரும்பிக் கைக்கொண்டு உலாவும் நம் தமிழர் சிலர் கண்டது இவ்வளவுதானு? அது நிற்க.

தமிழில் மந்திரங்கள் இல்லை யெனவும், அதனுல் ஞானுேப தேசத்திற்கும் சிவபெருமானை அருச்சித்தற்கும் தமிழ் பயன் படாதெனவும் முன்னெருகால் தெய்வச் செந்தமிழை அளவு கடந்து பழித்துப் பேசியவர் இப்போது தமிழ் நூலாகிய திரு வாசகத்திற்குப் பரிந்துபேச வந்ததும் அதனை மந்திர மொழி என்றதும் புதுமையாகவே காணப்படுகின்றன; திருவாசகத் தினும் மிக்கதெனவும், ஈசுர வாக்கியமெனவும் இவர் நினைக்கும் வேதங்களுக்குங்கூட யாஸ்காச்சாரியார் சாயனுசாரியார் முதலி யோர் உரைகள் எழுதி யிருக்கையில் திருவாசகத்திற்கு மட்டும் உரை யெழுதலாகாதென்று இவர் கூறுதல் என்னையோ! வேதங் களையும் திருவாசகத்தையும் பொருள் தெரியாமல் ஓதினும் வீடுபேறு கிடைக்கும் என்று கூறும் இவர் அங்ஙனம் பொருள் தெரியாமல் ஓதி வீடுபேற்றை அடைந்தவர் எத்தனை பெயரைக் கண்டனரோ; எல்லாத் துன்பங்கட்குங் காரணமான அறியா மையைத் தொலைத்து ஞானத்தாலன்றே வீடு பேற்றை அடைய வேண்டுமென்று அறிவு நூல்கள் வற்புறுத்துரைக்கின்றன! இது

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமஞ்சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞானத்தால்
உறுவதுதான் பந்தம்"

என்று சிவஞான சித்தியாரினும் கூறப்பட்டமைகாண்க. அறிவு நூல்களின் பொருள்களை ஆராய்ந்து உணர உணர அறியாமை தேய, அறிவு விளங்கும். இவ்வுண்மை கற்றறிவில்லாரும் உணர்வர்; அங்ஙனமாகத் திருவாசகம் முதலான மெய்ந் நூல் களைப் பொருள் தெரியாமல் ஓதல் வேண்டுமெனவும், அதன் பொருளை விளக்குதல் குற்றமா மெனவும் கூறுவார் கூற்றுச் சிறுமகாரும் நகையாடற் பாலதாகவே,யிருக்கின்றது! அதுநிற்க.

யாம் திருவாசகத்திற்கு உரை எழுதப்புகுந்த காரணம் இது: யாம் விரிவுரை நிகழ்த்தச்சென்ற பல இடங்களிற் பலர் தேவார திருவாசகங்களைப் பொருள் தெரியாமல் ஓதக்கேட் டேம். அங்ஙனம் ஓதியவர்கள் பாட்டுகளுக்குப் பொருள் அறியாமையினாலும், சொற்றொடர்களைச் சந்திபிரிக்கத் தெரி யாமையினாலும் சொற்களையும் சொற்றொடர்களையும் மிகவும் வழூப்படக் கூறினர். அவர்களை நோக்கி "இங்ஙனம் ஓதுகிறீர் களே, இவற்றிற்குப் பொருள் என்ன?" என்று கேட்டேம். அதற்கு அவர்கள் "தேவார திருவாசகங்களுக்குப் பொருள் சொல்லவுங்கூடாது, கேட்கவுங்கூடாது என்று சொல்லுகிறார் கள். அதனால் நாங்கள் அவற்றைப் பொருள் தெரியாமலே பாராயணம் பண்ணுவது வழக்கம்" என்றார்கள். அதற்கு யாம் "பொருள் தெரியாமையாற் சொற்களையுஞ் சொற்றொடர்களை யுந் தாறுமாறாகப் பிழைபடுத்திச் சொல்வது குற்றமோ, பொருள் தெரிந்து அவற்றைத் திருத்தமாகச் சொல்வது குற் றமோ, என்று வினவினேம். அதற்கு அவர்கள் "பொருள் தெரியாமல் பிசகாகச் சொல்வதுதான் குற்றம்." என்று ஒப் புக்கொண்டு விடை கூறினார்கள். இவ்வாறே யாம் சென்ற இடங்களிலெல்லாம், பொருள் தெரியாமையால் தேவார திரு வாசகச் செழுந் தமிழ்த் தெய்வப் பாடல்களைப் பெரிதும் பிழை பட ஓதுவார் பலரைக் கண்டு வருந்திய வருத்தமே கடைசியாக இதற்கோர் உரை வகுக்க வேண்டுமென்னும் எண்ணத்தை எம் பால் எழுப்பிவிட்டது. அது நிற்க.

இனிப் பேரறிவினரான மாணிக்கவாசகப் பெருமான்

அருளிச்செய்த திருப்பாட்டுக்களின் பொருள் ஆழத்தினைச் சிற்றறிவினராகிய நாம் கண்டுணர்தல் ஏலாதாதலின், இதற்கு நாம் உரை வகுத்தல் ஆகாதெனின்; மாணிக்கவாசகப் பெருமான் இலக்கண இலக்கிய வரம்புக்கும் அறிவுநூல் வரம்புக்கும் அடங்காமல் நூல்செய்தனராயின், அத்தகைய நூற்பொருளைக் கண்டுணர்தல் இயலாததேயாம். மேலும், இலக்கண இலக்கிய அமைதியும் அறிவுநூல் வரம்பும் இகந்து நூல் இயற்றுதல்தான் ஆகுமோ வெனின் அதுவும் ஆகாது; அத்தகைய வரம்புகளுக்கு அகப்படாமற் சொல்லுவன பித்துப்பிடித்துப் பிதற்றுவார் சொற்களே யாகலின், அத்தன்மையவாம் பிதற்றுரைகளே பொருள் அறிதற்கு ஒரு சிறிதும் ஏலாதனவாம். மற்று இலக்கண இலக்கிய அமைதியும் அறிவு நூல் வரம்பும் உடைத்தாய்ச் செந்தமிழ் வளம் நிரம்பித்துளும்பும் திருவாசகச் செழும் பாடல்களுக்குப் பொருள் தெளிதல் முற்றும் அரிதன்று. அவற்றின் சொற்கள் சொற்றொடர்களுக்குப் பொருள் தெளிதற்குப் பண்டை இலக்கண இலக்கியக் கருவி நூல்களும் சிவஞான போதம் முதலான அறிவு நூல்களும் இருக்கின்றன; இவற்றைக்கொண்டு ஆராய்தற்குரிய தன்மையினைத் திருவருளுதவியாற் பெற்று விளங்கிவரும் நமது அறிவும் இருக்கின்றது. இவை அத்துணையுங்கொண்டு அமைதியாய் ஆராயுங்கால் திருவாசகப் பொருள் நமக்கு விளங்காமற் போகாது. என்றாலும், பண்டைக் காலத்து வழங்கி இக்காலத்து முழுதும் வழக்கு வீழ்ந்து ஒருவாற்றானும் அறிதற்கு வாயில் இல்லாத சில சொற்கள் சொற்றொடர்கள் குறியீடுகள் சரித்திரக் குறிப்புகள் சிற்சிலவும், மாணிக்க வாசகப் பெருமான் புறப்பொருள் உணர்வுவிட்டு அகத்தே தமதுணர்வினை மடக்கிச் சிவபெருமான் திருவருளில் இரண்டறக் கலந்துநின்று நுகர்ந்து கூறியவாகலின் நம்மனோர்க்கு இந்நிலையிற் சிறிதும் விளங்காத பேரின்ப வான்பொருள்கள் சிற்சிலவும் திருவாசகத் திருமறையின்கண் ஆங்காங்கு உளவென்பது எவர்க்கும் உடன்பாடேயாம். அவை ஒழிய, மற்று எஞ்சி நின்றவைகள் நம்மனோர்க்குப் புலனாவனவேயாம். ஒருவாற்றானும் நம்மனோர்க்

குப் புலனாகாத ஒரு நூலை இயற்றினர் என்றால் அறிவும் இரக்கமும் அன்பும் நிறைந்த மாணிக்கவாசகப் பெருமானது அருட்பெருந்தகைமைக்குப் பொருந்தாமையின் அங்ஙனங் கூறுதல் பெரியதோர் ஏதமாம் என்க.

அங்ஙனமாயினும், திருவாசகத்தின்கட் பொருள் உணரப்படாதனவும் சிற்சில ஆங்காங்குளவென்று உடன்படுதலின், ஒருநூற்பொருள் முழுதும் உணரப்படுதல் இயலாதிருக்கையில் அந்நூலுக்கு உரை யெழுதப் புகுதல் குற்றமன்றோவெனின்; அற்றன்று. முழுதும் உணரக்கூடாமைபற்றி ஒருநூற்பொருளை ஆராய்ந்து பயன்பெறாதுவிட்டு மடிந்திருத்தலே குற்றமாவதன்றி, நம்மால் இயன்றமட்டும் முயன்று அதனை யறிதல் குற்றமாகாது. திருவாசகம் என்னும் இம் மெய்ந்நூற்பொருளை அறியும் முயற்சியில் இடையிடையே நம்மை யறியாது பிழைபடுவோமாயினும் அதுகண்டு எல்லா இரக்கமும் உடைய நம் ஐயன் நமக்கு இரங்கி அருள்புரிவானே யல்லாமல் நம்மேல் வெகுள்வான் அல்லன். அப்போதுதான் நடை கற்கும் சிறுமகார் தம் தந்தையைக் கண்டு அவன்பாற் செல்லுதற்கு விழைந்து தெற்றித் தெற்றி நடந்து வருதலைப் பார்த்து அவர் தந்தை மகிழ்வனேயன்றி அவர் மேற் சினவான். மக்களுள்ளும் தந்தையாவான் இத்துணையன்பும் இரக்கமும் உடையனாயின், எல்லாவுலகிற்கும் தந்தையாய் எல்லா அருளும் இரக்கமும் உடைய இறைவன் தன்னை யணுகி வழிபடும் பொருட்டு நம்போல்வார் செய்யும் முயற்சிகளின் இடையிடையே நாம் பிழைபடுதல் கண்டு நமக்கு இரங்கி அருளாது நம்மை எரிவாய் நிரயத்தில் இடுவன் என்றால் எவ்வளவு பேதமை! திருவாசகத்தை ஓதலும் அதன் பொருளை உணர்தலும் அதற்கு உரை எழுதலும் எதற்காக? அறிவும் அன்பும் பெற்றுப் பிறவாற்றால் உணரப்படாத முதல்வனை உணர்ந்து பிறவாற்றாற் கரையாத நெஞ்சத்தைக் கரைத்து அவனை வழிபட்டு உய்தற்கன்றோ? திருவாசகத்தின் சொல்லினும் பொருளினும் எந்நேரமும் கருத்து ஈடுபட்டு நின்று உரை எழுதுதற்குப் பயன் எரிவாய் நிரயங் கிடைப்பதென்றால், திருவாசகத்தைப் பொருடெரியாமற் பிழை

பட ஓதி எந்நேரமும் செருக்கினும் அறியாமையினும் உழல் வோர்க்கு எது கிடைக்குமோ அறிகிலம்! "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே யிருக்கப்பெறின் இறைவா" என்று அடிகள் அருளியாங்கே, திருவாசகத்திற்கு உரை எழுதுதலால் நரகம்புகுவதாயின் அதுவும் திருவருளுக்கு இசைவானல் எமக்கும் அஃது இசைவேயாம். ஆனல், அருளே உருவாகவுடைய எம் இறைவனுன சிவபெருமான் எமது இச்சிறு முயற்சியைக் கண்டு உவந்து எமக்கு அருள் வழங்குவன் என்னும் உறுதி உடையோமாதலால் பிறர் யாதுகூறினுங் கூறுக.

---

# இளங்கோவடிகளும் பொருளிலக்கணமும்

[பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் சேரர் பெருமான் மக்களுள் இளவலும் வேத்து முனியுமாகிய இளங்கோவடிகள் முத்தமிழ்ப் புலமையும் நிரம்பிய வித்தகக் கவியரசர் என்பது அவரியற்றிய பழுதற்ற முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தால் நன்கு துணியப்படுவதாகும். இத் தொடர் நிலைச் செய்யுளில் இயற்றமிழின் பகுதியாகிய பொருளிலக்கணத்தை, அடிகள் எங்ஙனம் கையாண்டுள்ளனரெனச் சில எடுத்துக் காட்டுகளால் விளக்குவது இச் சிற்றுரையின் நோக்கம். இக்காப்பிய முழுதும் பொருட் பகுதிகள் பலவும் விரவி அமைந்துகிடத்தலை இதன் பதிகத் தொடக்கத்தே அடியார்க்கு நல்லார் விரித்துள்ள உரையால் இனிதுணரலாகும். அவர் அகப்பொருட் டிணைகளாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் 'ஐந்திணைக்குமுரிய நிலனும், பொழுதுமாகிய முதற் பொருள்களும்,' தெய்வம், உணா, மா, மரம், புள், பறை

தொழில், யாழ், பண், நிலமக்கள், நீர்நிலை, வார்கொடி, பூ என்னும் கருப் பொருள்களும், இருத்தலும் அதன் நிமித்தமும் முதலாகிய உரிப்பொருள்களும் இதன்கண் அமைந்து கிடத்தலை எடுத்துக் காட்டி, அதன் முடிவில், "இச் சொல்லப்பட்ட ஐந்திணையின் முதல் கரு உரிப் பொருளும் பிறவுமாகிய அகத்திணைப் பொருட் பயன் உடம்பொடு புணர்த்தி யுணர்த்திப் புறத்திணைப் பொருட்பயனும் பிறவும் இவ்வாறு உடம்பொடு புணர்த்தி யுணர்த்துங்கால் புனைந்துரைக்கப்பட்டுக் கேட்போர்க்கு இன்பம் பயவாது உணர்வு சலிக்குமாதலின் வந்தன வந்துழிக் காட்டுதலைக் கருதிற்று இவ்வுரை யென்க" எனக் கூறினர். அகப் பொருட்பகுதி பலவும் ஆண்டே அவராற் காட்டப் பெற்றனவாகலின் அவற்றை விடுத்து, அவ்வுழி அவர் காட்டாது விடுத்த புறப்பொருட் பகுதியுள் ஒரு சிலவே ஈண்டுக் காட்ட நிற்பன.

சிலப்பதிகார இந்திர விழவூரெடுத்த காதையில் சோழன் கரிகாற் பெருவளவன் வடதிசைமேற் படையெடுத்துச் சென்ற வரலாறு,

"இருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணியத் திசைமுகம் போகிய வந்நாள்
அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென
இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யேற்றிக் கொள்கையிற் பெயர்வோர்க்கு."

என இளங்கோவடிகளாற் கூறப்பெற்றுளது.

கரிகாலனது இப் படையெடுப்பானது புறத்திணையுள் எதன்பாற் படுமென்பது ஆராய்ச்சிக்குரியது. புறத்திணையிலக்கணப்படி போர்மேற் செல்லுதற்குரிய காரணத்தையேனும், திணைப் பெயரையேனும், திணைக்குரிய அடையாளப் பூவையே

னும் ஆசிரியர் ஈண்டுக் கூறுது, 'வாளும் குடையும் மயிர்க்கண் முரசும், நாளொடு பெயர்த்து' என்னும் துறைக்குறிப்பால் இஃது இன்ன திணையாகுமென்பதனை உய்த்துணர வைத்திருக் கின்றார். நாளொடு பெயர்த்தலாவது நாட் கொள்ளுதல். அஃது இன்னதென்பதனை நாட்கோடலாவது நாளும் ஓரையும் தனக்கேற்பக் கொண்டு செல்வுழி அக்காலத்திற்கு இடையூறு தோன்றிய வழித் தனக்கு இன்றியமையாதனவற்றை அத்திசை நோக்கி அக்காலத்தே முன்னே செல்ல விடுதல்" என நச்சினார்க் கினியர் விளக்கியிருப்பது கொண்டு அறிக. எனவே, கரிகால் வளவன் தான் போர்க்கோலம் பூண்டு, வடதிசைநோக்கிப் புறப் படுமுன் தன்னுடைய வெற்றிவாள், கொற்றக்குடை, வீரமுரசு என்பவற்றை நன்னளின் நன்முழுத்தத்தில் வடதிசை நோக்கிப் புறப்பட விடுத்தான் என்பது பெற்றும்.

இனி இங்ஙனம் வாள்நாட் கொள்ளுதல் முதலியன எத் திணையின்பாற் படுமென ஆராயவுழி ஆசிரியர் தொல்காப்பிய ஞர் கருத்தின்படி உழிஞைப்பாற்படுமெனல் போதருகின்றது. என்னை? அவர் உழிஞைத் திணையின் துறைப்பகுதி கூறும் நூற்பா ஒன்றின் மாத்திரம் "குடையும் வாளும் நாள்கோள்" எனக் குடைநாட் கோளும் வாணுட் கோளும் கூறிப் பிறிதோ ரிடத்தும் கூருமையின் என்க. ஆசிரியர் நச்சினார்க்கினியர் வஞ்சித்திணைக்கும் இவை உரிய வென்னும் கருத்தினராயி னும், உழிஞைக்குப்போல் வஞ்சிக்கு இவை இன்றியமையாதன வல்ல என்பதும் அவர் கருத்தாதல் "இயங்குபடையரவம்" என்னும் சூத்திர வுரையால் அறியப்படும். அவர், இவை வஞ் சிக்கு இன்றியமையாதனவன்மையின் 'இயங்கு படை யரவம்' என்பதனுள் அடங்க வைத்து, உழிஞைக்கு இன்றியமையாமை யின் ஆசிரியர் ஆண்டுக் கிளந்தோதினர் என்பர். பன்னிரு படலத்தின் வழிநூலாகிய புறப்பொருள்வெண்பாமாலை யுடை யாரோ வஞ்சி, காஞ்சி, உழிஞை என்னும் மூன்று திணைக் கண்ணும் குடை நாட்கோளும், வாணுட் கோளும் கூறுவர். இவற்றுட் காஞ்சியை வஞ்சியின்பால் அடக்கினும் வஞ்சி, உழிஞை என்னும் இருதிணைக்கும் அவ்விரு துறையும் உரிய

வென்பது அவர் கருத்தாகும். சிலப்பதிகாரத்திற் போந்த எழுத்தின் றிறனறிந்தும் இன்சொற் பொருளின் அழுத்தந் தனை அறிந்தும் இப்படியார்க்கு நல்லுரை பாலித்த அடியார்க்குநல்லார் 'வாளுங் குடையும்.....நாளொடு பெயர்த்து' என்னுந் தொடர்க்குச் சிறப்புரை கூறுமிடத்து வெண்பாமாலையின் வஞ்சிப் படலத்தில் அவ்விரு துறைக்கும் அமைந்த,

"செற்றார் மேற் செலவமர்ந்து
கொற்றவா ளுட்கொண்டன்று"
"பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக்
கொய்தார் மன்னயன் குடைநாட் கொண்டன்று"

என்னும் கொளுக்களையும்,

"அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்னன்
எறிந்தில கொள்வாலியக்கம்—அறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு
நன்பகலுங் கூகை நகும்."

"மூன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானைத்
துன்னருந் துப்பிற் றொழுதெழா—மன்ன
ருடைநாளு வந்தனவா லோதநீர் வேலிக்
குடைநா ளிறைவன் கொள."

என்னும் வெண்பாக்களையும் மேற்கோளாகக் காட்டி யிருப்பதிலிருந்து அவர் கரிகாலனது போர்ச் செலவை வஞ்சித்திணையின் பாற் படுத்தனர் போலும் எனக் கருத இடனுண்டாகின்றது. அவர் கருத்து யாதாயினும் கரிகாலன் கூடார் மண்கொளல் கருதியோ, அன்றித் தனது மண்ணினைக் கொள்ளுதல் கருதி மாற்றாரோடு பொருதல் குறித்தோ புறப்பட்டானென்பது சிறிதும் பெறப்படாமையின் அதனை வஞ்சி யென்றல் பொருத்தமுடைத்தன்று. இனி, திருமாவளவன் போரிலேமிகு விருப்புடையனாகலின் வடதிசை நோக்கிப்போயினன் என்பதுகொண்டு அதனைத் தும்பைத்திணை என்னலாமெனின், ஆசிரியர் ஒருவரும் வாளுட் கோடல் முதலியவற்றை அத்திணைக்குக் கூறாமையின் அங்ஙன முரைப்பதும் பொருந்துவதன்றாம். இவ்வாற்றால்,

கரிகாலனது வடதிசைப் படையெடுப்பு உழிஞைத்திணையா மென்றலே செவ்விது.

ஆயின், 'முழுமுதலரணம் முற்றலும் கோடலும்' ஆகிய உழிஞையிலக்கணந்தானும் அதன்கட் பெறப்பட்டிலதே யெனின், இமயமலையானது குறுக்கிட்டு விலக்கிற்றென்று அவன் முனிந்து அதன் பிடரிலே தனது புலியைப் பொறித்து மீண்டான் என்று சொல்லப்படுதலின் அதனையே பகைவரது அரணமுற்றிய செயலாகக் கொண்டு உழிஞையிலக்கணம் பொருந்தியுள்ளவாறு காண்க. மற்று, அதனை உழிஞை என்பதற்கு வேறு ஏதுக்களும் உள. ஆசிரியர் தொல்காப்பியனார் குடைநாட்கோளும் வாள்நாட்கோளும் கூறினாரன்றி, முரசு நாட்கோள் என ஒன்று கூறினால்லர். வெண்பாமாலை யுடையாரும் அங்ஙனமே முரசு நாட்கோள் கூறிற்றிலரேனும், உழிஞைப் படலத்தில் வாணாட்கோள் என்னும் துறையை அடுத்து முரசவுழிஞை என்பதோர் துறை கூறியுள்ளார். எனவே, இளங்கோவடிகள் கூறிய முரசு நாட்கோளுக்கு வெண்பாமாலையின் உழிஞைப் படலத்தில் மாத்திரமே ஒருவாறு இலக்கணம் காணப்படுதலானும், செங்குட்டுவனது வடதிசைமேற் செலவை வஞ்சியின்பாற் படுத்துரைக்கக் கருதிய அடிகள் இதனோடு அதனிடை வேற்றுமை புலப்பட

"இருநில மருங்கின் மன்னரெல் லாநின்
திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்
முழுத்த மீங்கிது முன்னிய திசைமேல்
எழுச்சிப் பாலை யேகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென"

என்று கால்கோட் காதையில், செங்குட்டுவற்கு வாணாட்கோளும் குடைநாட்கோளும் கூறி, முரசு நாட்கோள் கூறாமையானும் கரிகாலனது போர்ச்செலவு உழிஞைத்திணையாமென்பது வலியுறுதல் காண்க. இன்னும் முரசு நாட்கோளுக்கு அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டிய "மாசற விசித்த" என்னும் புறப்பாட்டில்,

"மஞ்ஞை ஒலிநெடும் பீலியொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை"

என உழிஞைமாலை கூறப்பட்டிருத்தல் இதனை நன்கு வலியுறுத்துமாறும் காண்க. இதனால் அடியார்க்குநல்லாரும் இஃது உழிஞையன்றென்னும் கருத்தினரெனத் துணிதல் செல்லாதென்க.

இனி, இதுகாறும் காட்டியவற்றிலிருந்து இளங்கோவடிகள் தொல்காப்பியத்தையே யன்றிப் பன்னிரு படலத்தையும் தழுவியுள்ளாரென்பது போதரும். எனினும்,

"பொன்புனை யுழிஞை சூடி மறியருந்துந்
திண்பிணி முரச நிலையுரைத்தன்று"

என்னும் வெண்பாமாலையின் முரச வுழிஞைக் கொளுவானும்.

"குருதி வேட்கை யுருகெழு முரசம்"

என்னும் புறப்பாட்டடியானும் வீரமுரசிற்குப் பலியூட்டுதல் பெறப்படுவதன்றி, அதனை நாட்கொண்டு பெயர்த்தல் பெறப் படாமையின், அடிகள் இவ்விருநூலேயன்றி அக்காலத்து வழங்கிய வேறு நூல்களினும் இலக்கணங் கண்டோ, அன்றித் தங்காலத்து வேந்தரது வழக்கிற்கண்டோ வீரமுரசினை நாட்கொள்ளுமாறும் கூறிப் போந்தனரென்க. இங்ஙனமே, தொல்காப்பியம் முதலியவற்றின் வேறாக அடிகள் தங்கொள்கையை நாட்டிச் செல்லுதல் பிறாண்டும் காணப்படும். (தொடரும்)

---

## தஞ்சை சீனிவாச பிள்ளை

# தமிழ் வரலாற்றின் ஆராய்ச்சி

[இது 26-3-1922ல் தஞ்சை K. S. சீனிவாச பிள்ளையவர்கட்குத் திருவாளர் தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் B. A. எழுதிய கடிதத்தினின்றும் எடுத்துப் பதிப்பிக்கப்பட்டது.]

தமிழ் நாட்டெல்லை கூறுமிடத்து அந்நாட்டிற்குத் தெற்கெல்லை குமரியாறென்றும் "குமரியோராற்றின்குறி என்பதுதமி

மூறிஞர் பலரும் அறிந்ததே'' என்றும் கூறுகின்றீர்கள். குமரி யாறு எனப் பலரும் வழங்குவது மெய் ; ஆயினும் குமரி ஓர் யாற்றின் குறி என்பதற்கு ஆதார மென்னை ? பழைய நூல் களில் குமரி ஓர் யாறு என்று கூறியுள்ளதாக எனக்கு ஞாபக மில்லை. சிலப்பதிகாரத்து வேனிற் காதையில், ''நெடியோன் குன்றமும் தொடியோள் பெளவமும்'' என்றும் காடு காண் காதையில், ''பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும்'' என்றும் கூறியுள்ளது. இவற்றால் குமரி என்பது ஒரு கடற்கரையின் பெயராதல் வேண்டும். கோடு, கரை அல்லது முனை என்று பொருள்படும். ''கொண்டல் பயின் மணற் கோடு சூழ் கோடிக் குழகர் தமை''—பெரியபுராணம், சம்பந்தர், 622 என்று வருதல் காண்க. கோடி ஒரு மணல் முனை— Point Calimere. அது போலவே குமரியும் ஒரு முனை—Cape Comorin. ''பன் மலையடுக்கத்துக் குமரிக்கோடு'' என்னுமிடத்துக் கோடு என் பதை மலை என்று கொள்ளலாம். அவ்வாறு கொண்டால், அது வேனிற் காதையில் 'தொடியோள் பெளவம்' என்றதனோடு மாறுபடும். காடு காண் காதையில்

> ''வடிவே லெறிந்த வான்பகை பொறாது,
> பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள''

என்று கூறியது இங்கே ஆராயத் தக்கது. ஒன்றைப் பஃறுளி யாறென்றும் மற்றொன்றைக் குமரிக் கோடென்றும் விகற்பித்த வதனால், குமரி யென்பது யாறு ஆகாது, மற்றொன்றாதல் வேண்டும். கோடென்பதை மலை யென்று கொள்ளலாகா தென்று மேற் கூறினமையின், கோடென்பது இங்கே கரையை அல்லது முனையையே குறித்ததாதல்வேண்டும். ஆதலால், ''வட வேங்கடம் தென்குமரி'' என்னு மிடத்து ''வடக்கண் வேங்கட மும் தெற்கண் குமரியாறும், என்று பொருள் கொள்ளாது, வடக்கண் வேங்கட மலையும் தெற்கட் குமரிக் கோடும் என்று பொருள் கொள்ளல் வேண்டும்.

தெற்கே குமரி யென்று ஒரு யாறு இருந்த தென்பதற்கு

ஆதார மொன்று மில்லை. தெற்கே தமிழ் நாட்டிலே பல்லாயிர வருடங்கட்குமுன் அப்படி ஒரு யாறு இருந்ததாயின், அதன் பெயர் தமிழ் மொழியாயன்றி அன்னிய பாஷை மொழியாய் இருந்திருக்க மாட்டாது. குமரி யென்பது தமிழ் மொழி யன்று; வடமொழி. இப் பெயர் தென்றமிழ் நாட்டைக் கடல் கொண்ட பின்னரே, ஆரியர் தமிழ் நாடு வந்து ஆரிய மொழி தமிழ் மொழி யோடு கலந்தபின் தோன்றி யிருத்தல் வேண்டும். குமரிக் கோட்டுக்குத் தெற்கே யிருந்த நாடுகளைக் கடல் கொண்டது சரித்திர காலத்தன்று; அது நிகழ்ந்து பல்லாயிர வருடங்களாயின. தொல்காப்பியம் இயற்றியது ஆரியர் தமிழ் நாட்டு வந்து ஆரிய மொழி தமிழ் மொழி யோடு கலந்ததன் பின்; அஃதாவது, ஏறக் குறைய இரண்டாயிர வருடங்களுக்கு முன்; பல்லாயிர வருடங்களுக்கு முன்பன்று. ஆதலால், தொல்காப்பியப்பாயிரத்துக் கூறப்பட்ட தெற்கெல்லையாகிய குமரி யென்பது குமரியாறன்று, குமரிக் கோடே.

## தமிழ் நாட்டின் உட்பிரிவு

இத்தலைப்பின் கீழ்த் தொல்காப்பிய உரையாசிரியர்கள் கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டென்றும் அவற்றின் பெயர்:

"தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா அதன்வடக்கு—நன்றாய
சீதம் மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்"

என்று கூறினர்களென்றும் எழுதுகின்றீர்கள், இது சரியென்று தோன்றவில்லை. செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டென்பதுமெய்யாயினும், அவற்றின் பெயர் தாங்கள் கூறியனவல்ல. "பன்னிரு நிலமாவன பொங்கர் நாடு, ஒளிநாடு, தென் பாண்டி நாடு, குட்ட நாடு, குட நாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவாவட தலை நாடு எனச் செந்தமிழ் நாட்டுத் தென்கிழ்பான் முதலாக வடகிழ்பாலிறுதியாக எண்ணிக் கொள்க" என்று சேனாவரையர் கூறுவர். இதனைப்படியெடுத்து எழுதுவர் நச்சி

ஞர்க்கினியரும். உரையாசிரியரும் இப்பன்னிரண்டனையுமே கூறினர். பேராசிரியரும் கல்லாடரும் கூறுவது யாவை யென்பது தெரியவில்லை. (அவ்வுரைப் பிரதிகள் இப்போது என்னிடத்தில் இல்லை.) இவற்றில் தாங்கள் எடுத்துக்காட்டிய பாட்டினுள்ள வேணாடும், புனனாடும் கூறப்பட வில்லை. அவற்றுக்குப் பதிலாகப் பொங்கர் நாடும் ஒளி நாடும் வருகின்றன. அன்றியும், தாங்கள் எழுதிய படத்தில் பன்றிநாடு மேற்கூறிய முறைக்கு மாருகக் கிழக்கில் காட்டப்பட்டுள்ளது. அதற்கு ஆதாரமென்னை ?

பூழி நாடு தாங்கள் காட்டியபடி குட்ட நாடு குட நாடுகட்கு வடக்கிலன்றித் தெற்கில் உளதாதல் வேண்டும். பூழியன் என்று சேரனுக்கும் பாண்டியனுக்கும் பெயருண்டு.

"பூழிய னுதியன் கொங்கன் பொறையன்"

என்பது பிங்கலம் ;

"பூழியர் கோவே பொலங்தேர்ப் பொறைய"

என்பது பதிற்றுப்பத்து, 84.

இவை யிரண்டும் சேரனைக் குறித்தன.

"பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோ னடி போற்றி"

என்பது சேக்கிழார் புராணம், 6.

"பூழியர் தமிழ்நாட்டுள்ள பொருவில் சீர்ப்பதிக ளெல்லாம்"

என்பது பெரிய புராணம், சம்பந்தர், 601.

"பூழியர் வண்டமிழ் நாட்டு"

என்பதும் பெரிய புராணம், சம்பந்தர், 653.

இவை மூன்றும் பாண்டியனைக் குறித்தன. இவ்விருவருக்கும் பூழியன் என்று பெயர் வந்தது இவர்கள் ஒவ்வொரு காலத்துப் பூழிநாட்டையாண்டமையின். ஒரு காலத்துச் சேரனதாயும், மற்றொரு காலத்துப் பாண்டியனதாயும் இருத்தற்குப் பூழி நாடு அவ்விருவர் நாட்டுக்கும் இடையில் உள்ளதாதல் வேண்டும் ; அஃதாவது பாண்டி நாட்டுக்கும் சேர நாட்டுக்கும் இடையில். திருவெட்டாற்றுத் தாமிரபர்ணிநதி சங்கமத்தி

லிருந்து மூவாற்றுப்புழை வரையிலுள்ள நாடே பூழி நாடு போலும், இங்கே பூழி யென்றோர் ஊர் உளது. அது திருநெல் வேலிக்கும் திருவாங்கூருக்கும் இடையிலுள்ள கடுக்கரைமலைக்கு மேற்கே ஆறுமைல் தூரத்தில் உளது. இந்நாட்டைப் பூழி நாடென்று குறிக்கின்ற சாஸனங்களுமுள போலும். சில வருஷங்களுக்கு முன் அவற்றைப் படித்த ஞாபகம் எனக்குண்டு. அவை எவை யென்பது இப்போது ஞாபகம் இல்லை. இஃது இன்னும் ஆராயத்தக்கது.

"தென் பாண்டிகுட்டம்" என்றற் றொடக்கத்துச் செய்யுள் தொல்காப்பிய உரையாசிரியர்கள் காட்டிய தொன்றன்று; நன்னூலுரையாசிரியர் காட்டியது. மயிலைநாதருரையில் அச் செய்யுள் சில பாடபேதத்துடன் காணப்படும். அது வருமாறு:—

"தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேள்பூழி
பன்றி யருவாள் அதன்வடக்கு—நன்றாய
சீதமலாடு புனனாடு செந்தமிழ் சேர்
ஏதமில்சீர்ப் பன்னிருநாட் டெண்"

இச் செய்யுள் பிற்காலத்ததாதலால், தொல்காப்பியர் குறித்த பன்னிரு நிலத்திற்குத்தக்க ஆதாரமாகாது; தொல்காப்பிய உரை சிரியர்கள் கூறிய பன்னிரண்டு நாடுகளே கொள்ளத்தக்கன.

இனிச் "செந்தமிழ் நிலம்' என்பது வையையாற்றின் வடக்கு மருதயாற்றின் தெற்கு கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்கு என்பர் உரையாசிரியர். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இதனையே கூறுவர். இதில் வேறுபாடில்லை யாயினும் மருதயாறு யாதென்பதும் மருவூர் எங்குள தென்பதும் தெரியா. மருவூர் காரைக்காற் பக்கத்தில் உளதென்பர். இவற்றைத் தாங்கள் ஆராய்ந்து சந்தேகமற இவையென்று தெரித் திருத்தல் வேண்டும். தஞ்சை நாட்டில் உள்ளவரே இதனைத் தெரிவித்தற்குரியர்.

## தமிழ் என்னும் பெயர் தமிழ்மொழியே

இந்தத் தலைப்பின்கீழ் தாங்கள் தமிழ் என்பது வடமொழியின் சிதைவென்பதை மறுத்து "ழகரத்தை உச்சரித்தறியாத

ஆரியர் திரவிடம் அல்லது திரமிளம் என்றதில் நின்றும் தமிழ் என்னும் பெயர் பிறந்தது என்பது சிறிதும் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை'' என்று கூறி, ஸ்ரீமான் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் அச் சொல்லைப்பற்றி எழுதியதை எடுத்துரைத்துள்ளீர்கள். இதனால், அவ்விஷயம் முடிவுபெற்றதாகக் காணவில்லை. தமிழ் என்பதிலிருந்து திரமிளம் என்னும் பதந் தோன்றுவதைப் பார்க்கினும் திரமிளம் என்பதிலிருந்து தமிழ் என்னும் பதம் தோன்றுவதே பொருத்தமுடைத்து. பிரதீகம், பிரவாளம், பிரமரம், சிரேட்டி, குரோதம், பிரணவம் முதலாய வட சொற்கள் தமிழில் பதிகம், பவளம், பமரம், செட்டி, கோதம், பணவம் என்று சிதைந்து வருவது காண்க. அங்ஙனமாயின், திரமிளம் தமிள் என்றன்றோ வருதல் வேண்டும்; தமிழ் என்று ழகரம் வருதற்குக் காரணமென்னை யெனின், சிதைவுக்குக் காரணங் கூறவேண்டியதில்லையன்றே. அன்றியும் தமிழ் என்பது தென்தேசத்தில் தமிள் என்றும் பிரவாளம் என்னும் வடசொல் தமிழ்நாட்டின் வடபாகத்தில் பவழம் என்றும் வழங்குவது திரமிளம் தமிள் என்றாயதற்குப் போதிய சான்றாகும்.

தமிழ் என்னும் பதம் தமிழ்மொழியே என்பதற்கு ஸ்ரீமான் தாமோதரம் பிள்ளையவர்கள் கூறும் நியாயம் ஒன்றும் பொருந்துவதாயில்லை. தமிழில் தமிழ் என்னும் பதந் தோன்றுமுன்னர்ச் சமஸ்கிருதத்தில் திராவிடம் என்னும் மொழி தமிழையே உணர்த்திற்று. உலகத்தில் எஞ்ஞான்றும் பொருளேமுந்தியது. ஆயினும் பொருளுள்ள விடத்திலேயே அதற்குப் பெயர் தோன்ற வேண்டும் என்னும் நியதியில்லை. ஒரு பொருளைப்பற்றி உரையாட நேர்ந்த விடத்தே அதற்கொரு பெயரிடவேண்டி வரும். அல்லாதவிடத்துப் பெயர் தோன்றாது. தம் பாஷைக்குப் பெயரிடவேண்டிய அவசியம் நேராமையால், தமிழர் அதற்குப் பெயரிடாதிருந்தனர். ஆரியர்க்கு அவ்வவசியம் நேர்ந்தமையின், அவர் அதற்குத் திரவிடம், அல்லது திரமிளம் என்று பெயரிட்டனர். அன்றியும் தமிழ் என்பதிலிருந்து தமிழர் என்னும் பதம் வந்ததன்று; தமிழர் என்பதிலிருந்து

தமிழருடைய பாஷை என்னும் பொருளில் தமிழ் என்னும் பதம் தோன்றிற்று. இதுவே முறை. தெலுங்கருடைய மொழி தெலுங்கு; கருநாடருடைய மொழி கருநடம்; மலையாளருடைய மொழி மலையாளம்; ஆரியருடைய மொழி ஆரியம்; அங்கிலருடைய மொழி அங்கிலம் என்பன காண்க. இலக்கணக் கொத்துடையாரும் "தெலுங்கன் சொல்லுதற் றொழிலையுடைய பாடை தெலுங்கன் சொல்லு எனற் பாலது தெலுங்கு எனப் பின் மொழி கெட்ட முன் மொழியீற்றின் விகுதி பொருந்தியது; வடுகுமது" என்று கூறுவர்—சூத்திரம் 117.

## அகத்தியம்

அகத்தியத்தைப் பற்றிக் கூறுமிடத்து அது முத்தமிழிலக்கணமு மடங்கிய தென்றும் பன்னீராயிரம் சூத்திரங்கொண்டதென்றும் கூறுகின்றீர்கள். அகத்தியம் முத்தமிழிலக்கணமுங் கூறுவதென்று பேராசிரியர் முதலியோர் கூறுவர்; மற்று அது பன்னீராயிரஞ் சூத்திரமுடைய தென்று உரையாசிரியர் யாவராவது சொல்வதாய் யானறியேன். அகத்தியம் தொல்காப்பிய உரையாசிரியர் காலத்திலிறந்துவிட்டதென்றால், அதன் சூத்திரத் தொகையை அவரறிவ தெப்படி? உவின்சிலோப் பாதிரியார் அகத்தியம் பன்னீராயிரம் சூத்திரமுடைய தென்று கூறுவர். அக்கூற்றுக்கு ஆதாரம் ஏதேனு முளதாகக் காணவில்லை.

இனி "இலக்கண மென்பதிலக்கிய முறையுற", "இலக்கியமின்றி யிலக்கணமின்றே" என்றற் றொடக்கத்துச் சூத்திரங்கள் அகத்தியச் சூத்திரமல்ல. பிற்காலத்தார் செய்தவை, அகத்தியர் காலத்தில் மாத்திரமன்று, தொல்காப்பியர் காலத்தில்கூட இலக்கணம், இலக்கியம் என்னும் வடமொழிகள் தமிழில் வந்து வழங்கவில்லை. தொல்காப்பியர் இலக்கணத்தை இயலென்றுங் குறியென்றுங் கூறுவர்.

## அகத்தியர் காலம்

அகத்தியர் இராமர் காலத்திலேயே தென்னாட்டுக்கு வந்துவிட்டாரென்று கூறி, அவர் அக்காலத்தில் பொதிய மலையி

லிருந்தா ரென்பதற்கு ஆதாரமாகக் கிஷ்கிந்தாகாண்டம் நாற்பத்தொன்றுஞ் சருக்கத்துச் சுலோகங்களை எடுத்துக் காட்டுகின்றீர்கள். ஆரணிய காண்டம் 11, 12, 13-ம் சருக்கங்களில் அகத்தியருடைய ஆசிரமம் கோதாவரி நதிக்கருகில் பஞ்சவடிக்கு இரண்டு யோசனை தூரத்திலிருப்பதாகக் கூறப்பட்டுளது. இராமர் அங்கே சென்று அகத்தியரைச் சேவித்து அவரிடமிருந்து வில்லும் வாளும் அம்பும் அம்பறாத்தூணியும் பெறுகின்றார். இதனோடு கிஷ்கிந்தாகாண்டத்துச் சுக்கிரீவன் சொல்வது முரணுகின்றது. சுக்கிரீவன் சொல்வது இந்தியாவின் தேசப் பிரிவுகள், யாறுகள் மலைகளைப்பற்றி யாதலால், அது, பின்னர்ப் பூகோள சாஸ்திர வுணர்ச்சி யுண்டாய காலத்துச் சேர்த்ததாதல் வேண்டும்.

அது நிற்க. நமது புராணேதிகாசங்களிற் கூறப்படும் அகத்தியர் ஒருவரா? இருவரா? அன்றேல் பலரா? இருக்கு வேதத்திலுள்ள பல மந்திரங்களுக்கு ஆசிரியரான அகத்தியர் ஒருவருளர். அவர் மைத்திராவருணி என்றும் ஔர்வசியர் என்றும் சொல்லப்படுவர்; மித்திரனுக்கும் வருணனுக்கும் புத்திரனாக ஊர்வசி வயிற்றிற் பிறந்தமையின். இருக்கு வேதத்திற்கு உரை யெழுதிய சாயனர் அகத்தியரை நீர்க்குடத்தில் பிறந்தவரென்று கூறுவர். அதனால் அவருக்குக் கடோற்பவர் என்றும் கும்பயோனி யென்றும் கலசயோனி யென்றும் பெயருண்டு. புராணங்கள் அகத்தியரைப் புலஸ்தியருடைய புத்திர னென்று கூறும். இவருள் எந்த அகத்தியர் நமது தமிழிலக்கணம் செய்தவர்? இருக்குவேத மந்திரம் பாடிய அகத்தியரே தமிழிலக்கணமுஞ் செய்தாரா? அக் காலத்திலே இலக்கணம், இலக்கியம் என்னும் சொற்கள் ஆரிய பாஷையில் தோன்றி விட்டனவா? அகத்தியரைப் பற்றிய ஆக்ஷேபம் இன்னும் பலவுள.

இன்னும் தாங்கள் வால்மீகி ராமாயணத்தை ஆதி காவியமென்றும் அது செய்யப்படுமுன் சமஸ்கிருத பாஷையில் சுலோகங்களே யிருந்ததில்லை யென்றும் கூறுகின்றீர்கள். இருக்கு வேதம் இராமாயணத்துக்கு முற்பட்டதோ? பிற்பட்டதோ?

முற்பட்டதாயின் அதிலுள்ள அநுஷ்டுப்பு முதலிய சுலோகங்கள் எப்போது தோன்றின? இராமாயணத்துக்குப் பின்போ? ஆதிகாவியம் என்பதற் கர்த்தம் முதன் முதல் தோன்றிய காவியம் என்பதன்றி முதன் முதல் தோன்றிய சுலோகமென்பதன்று. இராமாயணம்தான் சமஸ்கிருதத்தில் முதன் முதல் தோன்றிய காவியம்.

## தமிழ்ச் சங்க காலம்

தமிழ்ச் சங்கங்களைப் பற்றிப் பேசுமிடத்து இறையனார் களவியலுரையில் கூறியதை எடுத்துரைத்து "இவர் கொள்கைப் படித் தமிழ்ச்சங்கந் தொடங்கியது இற்றைக்கு 12,000 யாண்டுகளுக்கு முன்னர் என்பது தவறாகாது" என்கின்றீர்கள். இவர் கொள்கை என்பது யார் கொள்கை? களவியலுரையின்படி தொல்காப்பியம் இடைச் சங்கத்தாருக்கு நூலாயிருந்ததன்றோ? அங்ஙனமாயின் அது ஏழாயிரம் வருடங்களுக்குமுன் தோன்றியிருத்தல்வேண்டும். அக்காலத்திலே பொருளதிகாரத்துக் களவியல் நாற்பத்துநான்காஞ் சூத்திரத்தில்வரும் ஓரை என்னும் சொல் சமஸ்கிருதத்தில் வந்துவிட்டதோ? ஓரைஎன்பது கிரேக்க பாஷைச் சொல் என்கின்றார்களே.

இனி, முதற் சங்கத்திருந்த முடிநாகராயரும், நிதியின் கிழவனும், இடைச் சங்கத்திருந்த வெள்ளூர்க்காப்பியனும் சிறுபாண்டரங்கனும் துவரைக்கோமானும் என்னுமிவர்களுடைய பெயர் வடமொழிப் பெயர்களாயுளவே. ஆகவே பன்னீராயிரம் வருடங்களுக்கு முன்னரேயே ஆரியர் தென்னாட்டுக்கு வந்து விட்டனரோ?

கடைசியாகச் சங்கமென்னுஞ் சொல் தமிழில் எப்போது வந்தது? தொல்காப்பியர் காலத்தில் சகர முதன்மொழி தமிழில் இல்லையன்றோ? சங்கநூல்களிலும் அப்பதம் காணவில்லையே. ஆகவே முதற்சங்கம் இடைச்சங்கங்களை அக்காலததார் என்ன பெயரிட்டுக் கூறினர்? (தொடரும்)

---

# நவராத்திரியும் சரஸ்வதி பூசையும் உண்மை விளக்கம்

[இத்தலைப்பிட்டுத் திரு. வேங்கடகுருநாத சாஸ்திரியார் வெளியிட்ட துண்டுத்தாளில் கண்டுள்ள போலி உரைகளின் மறுப்பும் உண்மை நிலையீடும்.]

மெய்கண்டான் யாண்டு 707, நிகழும் பிரமோதூதஸு புரட்டாசிமீ 14உ (30-9-30) செவ்வாய்க்கிழமை யன்று மகா நவமியைப் பலர் கொண்டனர். சிலர் 15உ புதன்கிழமை யன்று கொண்டனர். நமது சைவப் பஞ்சாங்கத்தில் 14உ யன்றுதான் மகா நவமி சரசுவதி பூசை என்று குறித்திருக்கின்றோம். ஆனால் திரு. வெங்கடகுருநாத சாஸ்திரியார் தமது பஞ்சாங்கத்தில் 15உ யன்றுதான் மகா நவமி என்று குறித்ததோடு அமையாமல் தாம் குறித்ததே சரி என ஓர் துண்டுத்தாள் அச்சிட்டு 25-9-30-ல் வெளிப்படுத்தி யிருக்கிறார். ஆகையால் உண்மை இது என விளக்கிக்காட்ட வேண்டியது எமக்கு இன்றியமையாத கடமையாகிறது.

சாத்திரியார், "நாளது பிரமோதூதஸு புரட்டாசிமீ சரஸ்வதி பூஜையை 'நவமிக்கு அஷ்டமியோகம் விசேஷம்' என்றும் 'தசமியோகம் கூடாது' என்றும் ஒரு கிரந்த வசனம் எழுதி அதனால் 14உ செவ்வாய்க்கிழமை என்று சிலர் சொல்லுகிறார்கள். அது சரியல்ல. மஹா நவமி என்பது வடதேசங்களில் பலிஹோமங்களுடன் செய்யப்படுகிற பத்திரகாளி பூஜையைக் குறிப்பிடுவது. புஸ்தகங்களில் சரஸ்வதியை ஆவாஹித்து பூஜிப்பது சரஸ்வதி பூஜை. இதுதான் தென்தேசங்களில் வழக்கமாய் அனுஷ்டிக்கப்படுகிறது. மஹா நவமி பூஜைக்குத்தான் தசமியுடன் சேர்ந்த நவமி கூடாதென்பது கருத்து. மேற்கூறியபடி மஹா நவமி பூஜை இவ்விடங்களில் அனுஷ்டானமில்லை. அதனால் மஹா நவமி என்பதும் சரஸ்வதி பூஜை என்பதும் ஒரே விரதமும் அல்ல; ஒரே பூஜையும் அல்ல........ஆல

யங்களிலும் புஸ்தகங்களில் ஆவாஹித்து ஷை பூஜை செய்யப் படுகிறது.........மேலும் நவராத்திரி மத்தியில் மஹா நவமி பூஜையைப்போல் துர்க்காஷ்டமி என்ற மஹாஷ்டமியில் துர்க்கா பூஜையும், பஞ்சமியில் உபாங்கல்லிதா பூஜையும் ஏற் பட்டிருக்கிறது. நவராத்திரி பூஜைக்கும் மஹாநவமி முத லிய ஷை மூன்று பூஜைகளுக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. ......பிரதமை முதல் நவமி முடிய ஒன்பது நாள் பூஜையே நவராத்திரி எனப்படும்" என்று எழுதியிருக்கிறார். இதனால் நமது சாத்திரியாருக்கு நவராத்திரி, மகா நவமி, சரசுவதி பூஜை என்பவைகளைப்பற்றிய விவரமே தெரியவில்லை என்பது சிறு பிள்ளைகளுக்கும் விளங்கும். ஏனெனில் நவராத்திரி என்பது ஒன்பது இரவு என்றும், ஏனைய மாதங்களில் வரும் நவமியைப் போல் இல்லாமல் உலக மாதாவாகிய பார்வதிதேவியாரை வழி பட்டு விழாக்கொண்டாடும் நாளாக இருத்தலின் அது மகா நவமி என்றும், நவராத்திரியில் தேவியை முதல் மூன்று இரவு களில் துர்க்கையாகவும் இரண்டாவது மூன்று இரவுகளில் இலக்குமியாகவும் மூன்றாவது மூன்று இரவுகளில் சரசுவதி யாகவும் வழிபட்டு வருவதில் ஏனைய எட்டு நாட்களில் வழி படாது போயினும் அனைவரும் கட்டாயம் வழிபடவேண்டிய நாளாகிய மகா நவமியன்று சரசுவதியாகவே பூசிக்கவேண்டிய திருத்தலின் ஒன்பதாவது இரவு சரசுவதி பூசை எனப் பெயர் பெற்றது என்றும் அவர்கள் அறிவர். மகா நவமி என்பதும் சரசுவதி பூசை என்பதும் ஒன்றே. அதுவே நவராத்திரி விழா வின் கடைசி நாள் என்று இந்துக்களால் கொண்டாடப்பெறு கிறது.

நவராத்திரி பூசை என்பது சரசுவதிபூசை தான் என்று கருதுகிற சாத்திரியார் தமது துண்டுத் தாளில் "பிரதமை முத லிய ஒன்பது திதிகளில் ஒன்பது தேவி பூஜை எக்காலத்திலும் ஏற்படவேண்டும்"என்று எழுதுகிறார். ஒன்பது தேவிகள் யாவர்? சரசுவதி பூசைதான் தென்நாடுகளில் நடப்பது, வட நாடு களில் மகா நவமி பூசை நடை பெறுகிறது என்று தப்பாக எண்ணும் அவர் தென் நாடுகளிலும் தென் கோடியாக இருக்

கிற திருநெல்வேலியில் தாம் வெளிப் படுத்தும் பஞ்சாங்கத்தில் சரசுவதி பூசையைக் குறிக்க வேண்டியது இன்றியமையாத தல்லவா ? அவர் ஒன்றிரண்டு ஆண்டுகளில் மட்டும் மகா நவமி சரசுவதி பூசை என்று குறித்திருக்கிறுரே ஒழிய தாம் பஞ்சாங் கம் வெளியிடும் சென்ற சுமார் இருபத்தைந்து ஆண்டுகளிலும் இருபத்து நான்கு ஆண்டுகளில் தமது பஞ்சாங்கங்களிலெல்லாம் மகா நவமி என்று மட்டுமே குறித்திருக்கிறுர். மேலும் அவரு டைய தந்தையாகிய திரு. இராமலிங்க ஜோஸ்யருடைய பஞ் சாங்கங்களிலும் மகா நவமி என்ற பெயரைத் தவிர சரசுவதி பூசை என்ற பெயரைக் காண்டலே அரிதாயிருக்கிறது. இத ஞல் நமது சாத்திரியார் "நவமிக்கு அஷ்டமியோகம் விசேஷம், தசமி யோகம் கூடாது" என்ற வாக்கியத்தின்படி தமது பஞ் சாங்கம் பிழைபடுவதைக் கண்டு அஞ்சித் தமது குற்றத்தை மறைப்பதற்காக "மகா நவமிக்குத்தான் அந்த வாக்கியம், சரசு வதி பூசைக்கு அன்று" என்று கூறி மழுப்பித் தப்பிக்கப் பார்க் கிறுர். அவரே சென்ற விபவ ஹூ "நவராத்திரி விஷயமாய் ஓர் முக்கிய கவனிப்பு" என்று மகுடமிட்டு மீனும்பிகை பிரசில் அச்சிட்டு வெளிப்படுத்திய துண்டுத் தாள் 18, 19-வது வரிக ளில் "மகா நவமி என்ற சரசுவதி பூஜை விரதம்" என்று எழுதி யிருக்கிறுர். எத்தனை நாளேக்குத்தான் உலகத்தை ஏமாற்ற முடியும் ?

நவராத்திரி விழாவில் கோவில்களிலும் புஸ்தகங்களில் ஆவாகித்து நவராத்திரி பூசை செய்யப்படுகிறது என்று நமது சாத்திரியார் எழுதுவது அவர் கோவிலுக்குப் போகும் வழக்க மில்லாதவர் என்பதைக் காட்டுகிறது. ஏனெனில் அவர் எந்தக் கோவிலுக்காவது நவராத்திரியில் போயிருந்தால் தாம் கூறுவது தவறு என்பது அவருக்குத் தெரியாமலிராது. இதனுல் சாத் திரியார் கூறுவனவெல்லாம் முன்னுக்குப் பின் முரணும் பொருந்தாப் போலியுரைகள் என்பதும், அவருடைய கூற்றுப் படியே நவராத்திரியில் கடைசி நாளாகிய மகா நவமிக்குத் தசமி யின் சேர்க்கை கூடாதென்பதும், அட்டமி (யோகம் - சேர்க்கை) சேர்க்கைதான் தலே சிறந்ததென்பதும், அதனுல் 14உ செவ்வா

யன்றுதான் அட்டமியோடு கூடிய நவமி மகா நவமி சரசுவதி பூசை என்பதும், 15உ புதனன்று நவமி தசமிச் சேர்க்கையால் விலக்கப்படுவதால் அன்று மகா நவமி அன்று என்பதும் பெறப் பெற்றன்.

சாத்திரியார், "நவமி திதியானது முதல் நாளில் அதாவது அஷ்டமியுடன் சேர்ந்த நவமியில், மறுநாளில் தசமியுடன் சேர்ந்த நவமியில் எதிலும் பூஜைக்கு உரியதே" என்று எழுதி யிருக்கிறார். இப்படி எழுதுகிறவர் அட்டமியுடன்கூடிய நவமி யில் 14உயன்று பூசை கூடாது என்பதோடு தம்பஞ்சாங்கப்படி 15உதான் சரசுவதி பூசை என்று ஏன் எழுதுகிறார்? இதனை அறிஞர் சிந்தித்து உண்மை தெளிவாராக. மேலும் சாத்திரி யார் "உத்திராட நக்ஷத்திரத்துடன் கூடிய நவமியில் அல்லது ஷை நக்ஷத்திரம் சேராத நவமியில் சரஸ்வதி பூஜை செய்யத் தகுந்தது என்று சொல்லியிருக்கிறபடி நாளதுமீ 15உ நவமி யானது உத்திராடத்துடன்கூடி பூஜைகளுக்கு முக்கிய கால மான மத்தியான்ன காலத்திலும் இருக்கிறது. இவ்விவரம் விரத சூடாமணி முதலிய கிரந்தங்களில் நவமி நிர்ணயத்தில் ஆசுவீஜ சுக்ல நவமி பிரகரணத்தில் தெளிவாய்க் கூறப்பட் டிருக்கிறது." என்று எழுதுகிறார். இதனால் உத்திராட நக்ஷத் திரம் பிரதானமில்லை நவமியே பிரதானம் என்பதுதான் விளங்கு கிறதேயொழிய விரத சூடாமணியில் உத்திராட நக்ஷத்திரத் துடன் கூடிய நவமிக்குச் சிறப்புக் கூறியதாகாதே. 'விரத சூடாமணியில் நவமி உத்திராடத்துடன் கூடியும் இருக்கலாம், கூடாமலும் இருக்கலாம் என்று கூறிய இடத்தைக் காட்டிய சாத்திரியார் கண்ணுக்கு அந்நூலில் இன்ன நக்ஷத்திரத்துடன் கூடிய நவமிதான் சிறந்தது என்று கூறிய இடம் ஏன் புலனாக வில்லை? விரத சூடாமணியில்,

"மூலேத்வாவாகயேத் தேவீம் பூர்வாஷாடாஸு பூஜனம்."

மூலத்தில் ஆவாகனம் செய்து பூராடத்தில் பூசைசெய்க) என்ற விதி காணப்படுகிறது. "பூர்வாஷாடாஸு பூஜனம்" என்றதனாலே பூராடத்தில் பூசை செய்யவேண்டும் என்பதே அவ்விதி. இதனை உலகத்தாருக்கு எடுத்துக் காட்டிப் பூராடத்

தில் அதாவது 14உ செவ்வாயன்று மகா நவமி பூசை என்று எழுதியிருப்பாரானல் நமது சாத்திரியார் உலகத்தாருக்கு நன்மை நாடியவருமாவார்! உண்மைவாதியுமாவார்!! இதனை விடுத்து உலகத்தாருக்குத் தப்பு வழி காட்டுவது முறையன்று. ஈரோடு ஜில்லா ரிஜிஸ்திராராக இருக்கும் திரு. தி. சு. விசுவ நாத சிரௌதிகள் B. A., கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் மடத்துக்குப் பஞ்சாங்கம் கணித்து வெளிப்படுத்துகின்ருர். அவர் நிகழும் பிரமோதூதஞுப் பஞ்சாங்கம் பக்கம் 31-ல் "சரஸ்வதி பூஜை" என்ற குறிப்பில், "இதை இவ்வருஷம் 16உ புதன்கிழமையிலும் கொள்பவர்கள் சிலர் உண்டு. ஆனல் பூர்வாஷாடாஸ– பூஜனம் என்ற விதியின்படி 15உ செவ்வாய்க் கிழமையில் குறிக்கப்பட்டது" என்று எழுதியிருக்கிருர். (இவர் பஞ்சாங்கத்தில் 14உ 15உ என்றும், 15உ 16உ என்றும் மாறி இருப்பது கணித வேறுபாடு. கிழமைகள் ஒன்றே.) இதனுலும் நமது சாத்திரியார் கூறுகிறபடி 15உ புதன்கிழமை மகா நவமி என்பது முற்றிலும் பிழைபடுகின்றமை காண்க. 14உ செவ்வாய்க்கிழமையே உத்திராடத்தோடும் அட்டமியோடும் கூடிய மகா நவமி சரசுவதி பூசை என்பது வெளிப்படை.

அமாவாசையுடன் கூடிய பிரதமையன்று நவராத்திரிகூடாதென்பதற்கு நமது சாத்திரியார் சாத்திரப் பிரமாணங்கள் ஒன்றேனும் காட்டாமல் புராணப் பிரமாணங்கள் இரண்டொன்று காட்டுகிருர். ஆனல் அவர் வாதுளாகமத்தில்,

"குஹூயுக்தா ஸதாத்யாஜ்யா நாசயேச்ச குலம்யதா:"

என்று கூறுகிற பிரமாணம் அறிஞரால் கவனிக்கத்தகுந்ததே. சாத்திரியார் இவ்வசனம் வாதுளாகமத்தில் எந்த இடத்தில் கூறப்படுகிறதென்று ஏன் காட்டவில்லை? இவ்வசனம் மகா சிவராத்திரி நிர்ணயப் படலத்தில்தான் கூறப்பட்டிருக்கிறது. மகா சிவராத்திரிக்குக் கூறிய இவ்விதியை நவராத்திரிக்குக் கூறுவது அழகாகுமா? பொருந்துமா? அறிஞர் ஒப்புவரா? இவ்வாறு பிழைபட எழுதுவதைப்பற்றி உலகத்தார் என்ன நினைப்பர்?

"பகல் நாழிகை 12க்குள் எவ்வளவு காலம் அஷ்டமியிருந்

தாலும் அக்காலத்தில்தான் அஷ்டமியுடன் கூடிய நவமி சரஸ்வதி பூஜைக்கு விசேஷமென்று ஏற்படும்" என்று சாத்திரியார் எழுதுகிறார். இவ்விதியை இவர் எங்கே கண்டார்? இதனை உண்மையாக ஏற்றுக் கொண்டாலும் 15உ புதன்கிழமை சரசுவதி பூசை அன்று என்பது பெறப்படுமல்லவா? ஏனெனில் 15உ புதன் கிழமை அட்டமியே இல்லை. 14உ செவ்வாயன்று பன்னிரண்டு நாழிகைக்குள் மட்டுமே நில்லாமல் பதினேழு நாழிகையின் மேலும் அட்டமியிருந்து அதன் மேல் நவமி தொடங்கித் தேவி பூசாகாலமாகிய சாயான்னத்திலும் இரவு முழுவதிலும் இருக்கிறது. ஆதலின் அவர் கூற்றுப்படியே அன்றுதான் மகா நவமியாகிறது.

"பிரதமை முதல் ஒன்பது நாள் நவராத்திரியைக் கணக்கிடவேண்டுமே தவிர நவமி ஒன்பதாவது நாளாக இருக்க வேண்டுமென்பது எந்த சாஸ்திரத்திலும் சொல்லப்படவில்லை" என்று சாஸ்திரியார் எழுதுகிறார். உலகத்தில் பெரும் பகுதியினர் ஒன்பதாவது நாளாகிய மகா நவமியைத் தான் சிறப்பாகக் கொண்டாடுகிறார்களே ஒழிய பிரதமை முதலிய திதிகளைக் கொண்டாடுவதில்லை. நவமிதான் மகா நவமி என்னப் படுகிறதே ஒழிய பிரதமை மகா பிரதமை என்று எவ்விடத்தும் கொண்டாடப் பெறவில்லை. ஏனெனில் நவராத்திரியில் நவமியே முக்கியம். மேலும் பிரதமைதான் முக்கியம் என்று சொல்லுகிற சாத்திரியார் தமது சுக்கில, சித்தார்த்தி, காளத்தி முதலிய ஆண்டுகளில் துதியையன்று நவராத்திரி ஆரம்பம் என்றும், நள, ராக்ஷச விசுவாவசு, பிலவங்க முதலிய ஆண்டுகளில் அமாவாசையன்று நவராத்திரி ஆரம்பம் என்றும் எழுதியிருக்கிறார். மேலும் அவருடைய தந்தையாகிய திரு. இராமலிங்க ஜோஸ்யர் விளம்பி, சோபகிருது முதலிய ஆண்டுகளில் அமாவாசையன்றே ஆரம்பம் குறித்திருக்கிறார். இங்ஙனமாகவும் நமது வெங்கடகுருநாத சாத்திரியார் தமது தந்தையும் தாமும் அமாவாசையிலும் துதியையிலும்கூட நவராத்திரி ஆரம்பம் குறித்து வந்த வழக்கத்திற்கு மாறாக இப்போது பிரதமையன்றுதான் ஆரம்பம் என்று எழுதியது எது கருதியோ?

மாத்வாச்சாரியாருடைய கால மாத்வத்தில் மேற்கோளாகப் பைடீனச முனிவர் வசனமாக வருகிறது பின் வருவது:

"பஞ்சமீ சப்தமீசைவ தசமீச திரயோதசி
பிரதிபங் நவமீசைவ கர்த்தவ்யா சன்முகாதிதிஃ

இதன் பொருள்: "பிரதமை, பஞ்சமி, சப்தமி, நவமி, தசமி, திரயோதசி யாகிய திதிகள் சூரியாத்தமான சமயத்தில் இருக்கும், அன்றுதான் கொள்ளப்படும்." என்பது. இது பொது விதி. இவ்விதி மகா நவமி, விசயதசமி, திரயோதசி (பிரதோஷம்) முதலிய சிறப்புக்கள் கொண்டாடப்படுவதைத் தீர்மானிக்கப் பயன்படும். இதனை அறியாது, "இது நவராத்திரி கூறும் இடத்தில் கூறப்படவில்லை. அதனால் இது இங்கே எடுத்துக் காட்டத்தகாதது" என்று சாத்திரியார் மொழிவது அறிஞர் ஒப்புமாறில்லை. திரயோதசியின் மாலைப்போது எவ்வாறு பிரதோஷத்திற்குத் தீர்மானிக்கப் பெறுகிறதோ அவ்வாறே மகா நவமி விசயதசமிகளுக்கும் மாலைப்போதே வேண்டும் என்பதை இவ்விதி நிலை நாட்டுகிறது.

"பூசைக்குரிய காலம் மத்தியான்னகாலம். ஆதலின் நவமி மத்தியான்னகாலத்தில் இருக்கவேண்டும்" என்று சிலர் கூறுகின்றனர். அதனையே சாத்திரியாரும் கூறுகின்றார். நவராத்திரி என்பதனாலேயே இரவிலேதான் நவராத்திரி பூசை என்பதைச் சிறுவரும் உணர்வரேனும் சாத்திரங்கள் இதுபற்றி என்ன கூறுகின்றது என்பதை ஆராய்வோம்.

பூசைக்குரிய காலம் பொதுவாக மத்தியான்னம் என்று கொண்டாலும் இன்னின்ன பூசைக்கு இன்னின்ன காலம் உரியது எனச் சிறப்பு விதி இருக்கிறது. மகா சிவராத்திரி பூசையைப் பகலில் செய்வாருளரோ? மகா சிவராத்திரி சிவபெருமானுக்கு உரியது போல நவராத்திரி தேவியாகிய சிவசக்திக்கு உரியது. உலக நாயகராகிய பொன்னம்பலவனாரை மார்கழி மாதத் திருவாதிரை என்னப் பெறும் ஆருத்ரா தரிசன காலத்திலும் ஆனித் திருமஞ்சனத்திலும் விடியுமுன் பூசிக்கும் கண்காட்சி உலகறிந்ததே. மேலும் கன்ம நூல்கள் சிவசக்திக்குரிய

காலம் சாயான்னமாகிய மாலை வேளை என்று கூறுகின்றன. கன்ம நூல்களும் சோதிட நூல்களும் இரவிற் கதிபதி சந்திரன், சந்திரனுக் கதிதெய்வம் சிவசத்தி என்று கூறுகின்றன. ஆதலின் சிவசத்தி பூசையாகிய நவராத்திரி பூசை மாலைப் போதிலிருந்து இரவிலும் வியாபித்திருக்கும் நவமி முதலிய திதிகளிலேயே செய்தற் குரியது. சத்தி பூசை செய்யும் பெரியார் பௌர்ணமியில் சத்தியை இரவிலேயே பூசனை செய்யக் காண்கின்றோமல்லவா? **நிர்ணய சிந்து** பின்வருமாறு நவராத்திரியைப் பற்றிக் கூறுகிறது.

"ஆஸ்வீநமாசி மேகாந்தே பிரதிபத்யாதி திர்பவேத்
தஸ்யாம் நக்தம் பிரகுர்வீத ராத்ரௌ தேவீஞ்ச பூஜயேத்
ராத்ரி ரூபாயதோதேவி திவாரூபொ மகேஸ்வர:
ராத்ரிவிரதமிதம் தேவி சர்வபாப பிரநாசனம்
சர்வகாமபிரதம்நிருணும் சர்வசத்ரு நிபர்ஹணம்
ராத்ரிவிரதமிதம்தஸ்யா ராத்ரௌகர்த்தவ்ய தேஷ்யதே
நக்தவ்ரதமிதம் யஸ்மா தந்யதா நரகேகதி:"

இதனால் சாயான்ன முதல் இராத்திரி வரையும் சத்திகட்குரிய காலமென்பதும், இராத்திரி சத்தி ரூபம், பகல் சிவரூபமாக இருத்தலின் இரவிலேயே சத்தி பூசை செய்தல் வேண்டும் என்பதும், அங்ஙனம் செய்யின் சகலபாவங்களும் நீங்கிச் சகல சத்துருக்களும் நாசமாய் விரும்பியதெல்லாம் கைகூடுமென்பதும், சாயான்னத்தையும் இராத்திரியையும் நீக்கிச் செய்வாராயின் நரகத்தை அடைவர் என்பதும் விளங்குகின்றன. இதைப்போலவே ஸ்காந்தத்திலும்,

"மாஸீசாஸ்வயிதே சுக்லே நவராத்ரி விசேஷத:
ஸம்பூஜ்ய நவதுர்க்காஞ்ச நக்தம்குர்யாத் சமாஹித:
நவராத்ராபிதம்கர்ம நக்தவிரத மிதம் ஸ்மிருதம்"

என்று கூறப்பட்டுள்ளது. இதனாலும் நவராத்ரி என்பது இரவிற் கொள்ளவேண்டிய விரதமென்பதே நிலை பெறுகிறது.

விசய தசமியும் மாலைப் போதில் தசமி இருக்கும் அன்றே என்று முன் பொது விதி வசனத்தில் கண்டோம். இதுபற்றி **விரத சூடாமணிச் சிந்தாமணி**

"ஆஸ்வீநஸ்ய ஸிதேபக்ஷே தசம்யாந்தாரகோதயே
சகாலொ விஜயோநாம சர்வகார்யார்த்தசாதக:" என்றும்,

இரத்நகோசம்

"ஈஷத் சந்த்யாதிக்ராந்த: கிஞ்சிதுத்பிந்நதாரக:
விஜயோ நாம காலோயம் சர்வகார்யார்த்தசாதக:" என்றும்,

ஸ்காந்தம்

"நவமிசேஷ சம்யுக்தா தசம்யாமபராஜிதா
ததாதிவிஜயந்தே விபூஜிதா ஜயவர்த்தநீ
ஆஸ்வீநே சுக்லபக்ஷேது தசம்யாம் பூஜயந்நர:
ஏகாதஸ்யாம் நகுர்வீத பூஜநஞ்சாபராஜிதம்."

மேலே கண்ட பிரமாணங்களினுல் நக்ஷத்திரங்கள் தோன்றும் மாலைப்போதில் தசமியிருக்கும் வேளையே விசயதசமி என்றும், நவமிக்கு மேல் வரும் தசமியே சிறந்ததென்றும், தசமிக்கு மேல் வரும் ஏகாதசி விலக்கப்படுமென்றும் அறியலாம். விரதராஜமும் நக்ஷத்திரோதய காலத்தையே விஜயயோககாலம் என்றும், அக்காலத்திலே தசமிக்குச்சம்பந்தம் இன்றியமையாததென்றும், இராமனும் அருச்சுனனும் அபராஜிதையைப் பூசித்து அவ் விசயயோக காலத்திலே விசய யாத்திரை புறப்பட்டார்கள் என்றும் கூறுகின்றது.

மேலே காட்டப் பெற்ற பிரபல காரணங்களினுலே நிகழும் பிரமோதூத ஆண்டில் நவராத்திரி ஆரம்பம் புரட்டாசிமீ 6௳ திங்கட்கிழமையே (அன்றுதான் பிரதமை இரவில் இருக்கிறது) என்றும், 14௳ செவ்வாயன்று அஷ்டமியின் மேல் நவமி பூராடத்தோடு சம்பந்தப்பட்டு மாலைப் போதிலும் இரவிலும் வியாபித்திருத்தலினுலே அன்றுதான் மகா நவமி சரசுவதி பூசை என்றும், 15௳ புதனன்று நவமியின் மேல்தொடங்கி தசமி நக்ஷத்திரோதய காலமாகிய விசயயோக காலத்திலே இருக்கிறபடியால், விசயயாத்திரைக்குரிய விசயதசமி அன்றே என்றும் நாம் தெளிவாக அறிகிறோம்.

திருநெல்வேலி ஆலயத்தில் தருமகர்த்தர்கள் உண்மை இதுவெனத் தெளிந்து திருவிழாக்களை நடத்துவது நமது வெங்கட

குருநாத சாத்திரியாருக்குக் கட்சிக்காக நடத்துகிறார்களென்று தெரிகிறது. மேலே கண்ட ஆராய்ச்சியினல் உண்மைக்கு மாறாக வீண் கட்சிகளை இழுத்துக் கொண்டு பிடிவாதமாகத் தப்பிதமான காலங்களில் உத்தமமான விரதங்களைக் குறித்து துராக்ஷேபனை செய்து பொருளற்ற வெற்றுரைகள் நிரம்பிய துண்டுத்தாள்கள் வெளிப்படுத்துபவர் நமது சாத்திரியாரே என்பதை இனியாவது உலகத்தார்கள் தெரிந்து கொள்ளாமல் இரார்.

உண்மையைப் பொய்ம்மையால் மறைத்து வைத்தபோதிலும் அதனல் சில காலம் உண்மை மறைந்திருந்தாலும், உண்மை பொய்ம்மையை மிதித்துத் தள்ளி வெளிப்பட்டு உலகத்தார் முன்நிற்கும் என்பது கடவுள் ஆணை. உண்மைக்கு அழிவே கிடையாது.

குறிப்பு:-நவராத்திரி விழா இரவிலேயே நடைபெற வேண்டுமென்பதற்கு கீழே ஆகமப் பிரமாணங்கள் காண்க. அவை தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் அனுப்பி யுதவப் பெற்றவை.

பூர்வகாரணகமம் 598-வது பக்கம்:—

"தூபதீபோப சாரைஸ்ச மந்திர புஷ்பைஸ்ச தாபயேத் இஷ்ட காம்யார்த்த சித்யர்த்தம் ஜனாந்சர் வாந் பிரதர்சயேத் ஹோமகார்யம் துவி காலஞ்ச ராத்திரியாஞ் சோத்சவம் ஆசரேத்." (தூபதீப உபசாரங்களும் மந்திர புஷ்பங்களும் கொடுத்து தங்களுடைய விருப்பம் கைகூடுகிறதற்காக எல்லா ஜனங்களுக்கும் காண்பிக்க வேண்டியது. இரண்டு காலங்களிலும் ஓமம் பண்ணுக. இரவில் உற்சவம் செய்க.)

பூர்வகாரணகமம் 599-வது பக்கம்:—

"பிரதிபத் ராத்திரி மாரப்ய பூஜயேத் சர்வசக்திகா:" (பிரதமையின் இரவு முதற்கொண்டு சர்வ சக்திகளையும் பூசிக்க வேண்டும்.)

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,

20—10—30. சைவப் பஞ்சாங்க கணிதர்.

---

# சிவஞான போதக்கருத்து

## இரண்டாவது சூத்திரம்

### முதலாவது அதிகாரணம்.

(திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.)

(௫௭௬-ம் பக்கத் தொடர்ச்சி)

35. ஆசிரியர் அத்துவித இலக்கணங் கூறுமாற்ருல் முதல் அதிகரண மேற்கோளை எவ்வாறு வலியுறுத்துகின்ருர் என்ற ஐயம் இதனை யோதுகின்ற சிலருடைய உள்ளத்தில் ஒருவேளை நிகழலாம். அத்துவிதம் என்பது முதல்வனுக்கும் உயிர்களுக்கும் அநாதியேயுள்ள பிரிக்க முடியாத கலப்பினுல் உள்ளதாகிய வேற்றுமையில்லாத தொடர்பு. இந்த அத்துவிதத் தொடர்பு பற்றியே, உயிர்கள் பொருட்டு ஐந்தொழிலைச் செய்தல் முதல்வனுக்குக் கடனுய் அமைதலன்றி, அஃது அவனுக்கு இலக்கணமுமாகின்றது. உலகின்கண் சிற்றறிவுடைய தந்தை ஒருவனுக்குத்தன் மகனிடத்துள்ள உடற்றொடர்பு பற்றியன்ருே? அம்மகன் உலகில் நன்கு வாழும் வண்ணம் கல்வி பயிற்றுவித்தல் முதலிய உதவிகளைச் செய்தல் கடனுகின்றது. அவ்வாருயின், அநாதியே மலமின்மையும் முற்றறிவும் பேரருட்டிறனுமுடைய முதல்வனுக்குத் தன் இனமாகிய அநாதியே மலக்கட்டுடைய உயிர்களுக்கு அவர்களுடைய மலத்தை நீக்கித் தன்னைப்போல் எப்பொழுதும் நிலையான பேரின்பம் அடையச் செய்தற்குத் தன் கடனுக ஐந்தொழிலை இயற்றுதல் அவர்களிடத்துத் தனக்கு அநாதியேயுள்ள அத்துவிதத் தொடர்புபற்றியென்பது கூறவும் வேண்டுமா ?

36. அத்துவித இலக்கணம் முதலதிகரண மேற்கோளினது உண்மையை வலியுறுத்துதல் ஒக்கும் ; ஆயினும், முதலதிகரண மேற்கோளுண்மையை நேரே கூருது அத்துவித இலக்கணத்தோடு தொடர்பு படுத்தியதுமல்லாமல், அதனை முதன்மையாக வைத்து ஆசிரியர் கூறுதல் எற்றுக்கு எனின் ; கூறு

தும். முதலாவது சூத்திரத்தில், உலகில் முத்தொழில் நிகழ்ச்சி காணப்படுகையில் அவைகளை இயற்றுதற்கு ஒரு நிமித்த காரணனான முழுமுதற் கடவுளது உண்மை கூறப்பட்டது. இரண்டாவது சூத்திரத்தில், அந்த நிமித்த காரணனாகிய முதல்வன் அந்த முத்தொழில்களில் அடங்கியுள்ள ஐந்தொழில்களையும் முதற் காரணமாகிய மாயையைக் கொண்டும் துணைக்காரணமாகிய அருள் வலியைக்கொண்டும் செய்கின்றான் என்று ஆசிரியர் கூறுங்கால், அந்த ஐந்தொழில்களையும் முதல்வன் மேலே கூறியவாறு அத்துவிதத் தொடர்புபற்றிச் செய்கின்றான் என்று கூறுதல் முறைமையாகின்றது. "சிவஞான போத நூலின் கருத்து என்ன? சுருங்கக் கூறுக" என்று ஒருவன் கேட்பின், "முன் ஆறு சூத்திரத்தில் அத்துவிதப் பொது இலக்கணமும் பின் ஆறு சூத்திரத்தில் அத்துவிதச் சிறப்பு இலக்கணமும் கூறுதல்" என்று நாம் விடை கூறும்படியாய் அத்துவித இலக்கணம் இந்நூலுக்கு அத்துணை முதன்மையாயுள்ளது. பிந்திய ஆறு சூத்திரத்திற் கூறப்படும் அத்துவிதச் சிறப்பு இலக்கண அறிவும், அவ்வறிவின்வழி ஒழுகலாறுமே வீட்டின்பம் அடையச் செய்வனவாகும். அத்தகைய அத்துவிதச் சிறப்பு இலக்கணத்தை அறிதற்குமுன், அத்துவிதப் பொது இலக்கண அறிவு இன்றியமையாது வேண்டப்படுவது. எந்த உண்மையையும் அதன் பொது இலக்கணம் அறிந்து பின் அதன் சிறப்பிலக்கணத்தை அறிதல் அறியும் முறைமையாகலின், அத்துவிதப் பொது இலக்கணத்தை ஆசிரியர் மாணுக்கருக்கு இரண்டாவது சூத்திரத்தில் உணர்த்துதல் கடனாகின்றது. இரண்டாவது சூத்திரத்தில் அத்துவிதப் பொது இலக்கணம் அடிப்படையாகக் கூறப்படாவிடின், ஐந்தாவது சூத்திரத்தில் கட்டுக்களினது (பாசங்களினது) இலக்கணங் கூறுமாற்றால் முதல்வன் மக்களுயிர்களுக்கு அவர்கள் அறியாது அருளினாற் செய்யும் 'காட்டும் உதவி' முறைமை அறிவும், எட்டாவது சூத்திரத்தில் கூறுகிறபடி முதல்வன் உயிர்களுக்கு மானுட வடிவில் குருவாய் வந்து உணர்த்தும் உண்மையைக் கேட்டு அறியும் கேள்வி அறிவும்; ஒன்பதாவது சூத்திரத்திற் கூறுகிறபடி கேட்ட உண்

மையை எண்ணும் (சிந்திக்கும்) அறிவும், பத்தாவது சூத்திரத்திற் கூறுகிறபடி கேட்டு எண்ணிய உண்மையைத் தெளியும் தெளிவு அறிவும், (Intuitional wisdom) பதினோராவது சூத்திரத்திற் கூறுகிறபடி கேட்டு எண்ணித் தெளிந்த அறிவை நிட்டை செய்து அறியும் நிட்டை அறிவும், மாணுக்கருக்கு ஒன்றின் பின் ஒன்ருய் நிகழ்ந்து முடிவில் வீட்டின்பம் அடைதல் கூடாதாம். ஆதலின், ஆசிரியர் இரண்டாவது சூத்திரத்தில் அத்துவிதப் பொது இலக்கணத்தை முதன்மையாக வைத்துக் கூறினர் என்க.

37. வேதத்தில் அத்துவித இலக்கணம் கூறப்பட்டிருக்கின்றது. வேதத்தில் அத்துவித இலக்கணங் கூறப்படும் சில வசனங்கள் உள. ஒற்றுமைக் கொள்கையர்களாகிய ஸ்மார்த்தர்களும் வேற்றுமைக் கொள்கையர்களாகிய மாத்துவர்களும் வேற்றுமை ஒற்றுமைக் கொள்கையர்களாகிய வைணவர்களும், மேலே 33-வது பகுதியிற் கூறியபடி, தாங்கள் தாங்கள் முறையே கூறுகின்ற ஒன்ருய் நிற்கும் நிலை, வேருய் நிற்கும் நிலை உடனுய் நிற்கும் நிலை ஆகிய இந்த நிலைகளை அந்த வேத வசனங்களைப் பிரமாணமாகக்கொண்டு கூறுகின்ருர்கள். அவர்களுடைய ஆசிரியர்களாகியசங்கராச்சாரியார், மாத்துவாச்சாரியார், இராமானுஜாச்சாரியார் மூவர்களும் வேதத்தைச் சார்ந்த ஈஸாவாஸிய உபநிடதம் முதலிய பத்து உபநிடதங்களுக்கும், வியாச முனிவரால் இயற்றப்பட்ட பிரம சூத்திரத்துக்கும், கிருஷ்ணன் அர்ச்சுனற்கு உணர்த்தின பகவத்கீதைக்கும் தாங்கள் தாங்கள் கூறுகிற அத்துவிதக் கொள்கையின் சார்பாகவே உரை செய்திருக்கின்ருர்கள்.

38. நூலாசிரியர் மூன்று கொள்கையர்களுடைய கொள்கைகளையும் மறுத்து வேதத்தில் அத்துவிதம் கூறுகிற வசனங்களின் பொருளும் அத்துவிதம் என்ற வடமொழிச்சொல்லினது பொருளும் தாம் எடுத்துக்கொண்ட முதல் அதிகரண மேற்கோளினது உண்மையை நிறுவுகின்றன என்று கூறுகின்ருர். அவர் அத்துவித இலக்கணங் கூறுகிற பேத வசனங்களைக்

குறிப்பிட்டு, எடுத்துக் காட்டு வெண்பாக்களில், (உதாரண வெண்பாக்களில்)

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதி" என்றும், "அத்துவிதமாத லருமறைகளொன்றென்னு தத்துவிதம் என்றறையுமாங்கு" என்றும் கூறுகின்றார்.

39. முதலாவது, ஆசிரியர் கூறுகிறபடி அத்துவிதம் என்ற வடமொழிச் சொல்லாற் பெறப்படும் பொருளைக் கருதுவாம். அத்விதீயம் (அத்விதீயம்) அத்வைதம் (அத்வைதம்) என்ற வடமொழிச் சொற்கள் சிதைந்து தமிழில் அத்துவிதம் என வந்திருக்கிறது. 'துவிதீய:' (த்விதீய:) என்ற வடமொழிச் சொல் இரண்டு (two) என்ற எண்ணைக் குறிக்கிறது. அதிலிருந்து வருகிற துவிதீயம் (த்விதீயம்) என்ற சொல் இரண்டாவது (second) என்று பொருள் படுகிறது. (த்விதீயம்) துவிதீயம் என்ற சொல் இரண்டாவதான பொருளைக் குறிக்கும். இந்த துவிதீயம் (த்விதீயம்) என்ற சொல்லுக்கு முன் ந (உயிர்மெய்) என்ற உபசர்க்கம் (முன்னடை prefix) வந்து அப்படிச் சேரும்பொழுது வடமொழி இலக்கண முறைப்படி நகர ஒற்றுக் கெட்டு அத்விதீயம் (அத்விதீயம்) என வந்திருக்கிறது. அத்வைதம் (அத்வைதம்) என்ற சொல்லும் இவ்வாறே வந்திருக்கிறது. இந்த அத்விதீயம் (அத்விதீயம்) அல்லது அத்வைதம் (அத்வைதம்) என்ற சொல்லே தமிழில் அத்துவிதம் என வந்திருக்கிறது. இந்த நகர உயிர் மெய்யில் நகர ஒற்றுக் கெட்டு எஞ்சி நின்ற அகரமானது வடமொழி வழக்கின்கண் அன்மை, இன்மை, மறுதலை என்னும் மூன்று பொருள்களை உணர்த்துகின்றது. எடுத்துக் காட்டாக அப்பிராமணன் என்ற வடமொழிச்சொல் பிராமணச் சாதியிலே பிறந்திருந்தும் பிராமணத் தன்மை உடையவன் அல்லாதவனை உணர்த்தும். அது ஏனைய சாதியிலுள்ள ஒருவனை உணர்த்தாது. இவ்வாறு அப்பிராமணன் என்ற சொல்லில் முன் நிற்கிற அகரம் அன்மைப் பொருளை உணர்த்துகின்றது. அமலம் என்ற சொல் மலம் இன்மையைக் குறித்தலால் அதிலுள்ள அகரம் இன்மைப்பொருளை உணர்த்து

கின்றது. அநீதி என்ற சொல் நீதிக்கு மறுதலையை (எதிரிடையை)க் குறித்தலால் அதிலுள்ள அகரம் மறுதலைப் பொருளை உணர்த்துகின்றது. இன்மைப் பொருளுக்கும் அன்மைப் பொருளுக்கும் சிறிது வேறுபாடு உண்டு. கேள்வி கேட்கிறவன் ஒருவன் வேறொருவனைப் பார்த்து மேசைமேலே கண்ணாடியிருக்கிறதா வென்று கேட்டபொழுது அவன் கண்ணாடி இல்லை என்று கூறுதல் இன்மைப் பொருள் ஆகும். (Negation of what is asked by the questioner) இந்த இடத்தில் கேள்வி கேட்கிறவனுக்கு மேசைமேல் பொருளிருப்பதும் இல்லாதிருப்பதும் தெரியாது. மேசைமேல் பொருளிருத்தலை அறிந்த ஒருவன் மேசையினருகே நிற்கும் வேறொருவனைப் பார்த்து மேசைமேலிருப்பது கண்ணாடியா வென்று கேட்டபொழுது விடை கூறுகிறவன் அல்ல அதாவது மேசைமேலிருக்கும் பொருள் கண்ணாடி அல்ல, கத்தி (The object is not glass which is different from "There is no glass" in the other case) என்று கூறுதல் அன்மைப் பொருளாகும். இந்த இடத்தில் கேள்வி கேட்கிறவனுக்கு மேசைமேல் பொருளிருப்பது தெரியும். ஆனால் அஃது இன்ன பொருளென்று தெரியாது.

40. இவ்வாறு அகரம் அன்மை இன்மை மறுதலை என்னும் மூன்று பொருள்களை உணர்த்தும் என்னும் வடமொழி இலக்கண வழக்கிற்கு ஒரு விலக்கு (exception) உளது: அவ் விலக்கு எதுவெனின் எண்ணுப் பெயர் முன்வந்த அகரம் அன்மைப் பொருள் ஒன்றனையே உணர்த்துமன்றி பெயர்ப் பொருள்கள் முன்வந்த அகரம்போல ஏனைய இன்மை மறுதலைப் பொருள்களை உணர்த்தாது என்பதாகும். ஏகம் (**ஏகம்**) துவிதீயம் (**த்விதீயம்**) என்ற இரண்டு எண்ணுப் பெயர்களின் முன்தான் 'அ' என்ற உபசர்க்கம் (முன்னடை, Prefix) வருதல் வடமொழி இலக்கண வழக்கிலிருக்கிறது. அநேகம் (**அநேகம்**) அத்விதீயம் (**அத்விதீயம்**) அல்லது அத்வைதம் (**அத்வைதம்**) என்ற சொற்களன்றித் திருதீயம் **த்ருதீயம்** (Third) சதுர்த்தம் (**சதுர்த்தம்** Fourth) முதலிய எண்ணுப் பெயர்களின் முன் 'அ' என்ற உபசர்க்கம் சேர்ந்த மொழிகள் வட

மொழியில் இல்லை. அநேக (அநேக) என்ற வடமொழிச் சொல் ஒன்று அல்ல அதாவது பல என்னும் பொருளைக் குறித்தல்போல அத்துவிதம் அத்விதீயம் (அத்விதம் அத்விதீயம்) என்ற சொற்களும் இரண்டு அல்ல என்ற பொருளை மாத்திரம் உணர்த்துகின்றது. அத்துவிதம் என்ற எண்ணுப் பெயர்ச் சொல் இரண்டின்மை இரண்டின் மறுதலைப் பொருள்களை உணர்த்துதல் வடமொழி இலக்கண வழக்கின்கண் இல்லை.

41. மேலே கூறிய வடமொழி இலக்கண வழக்குக்குமாறாக ஸ்மார்த்தர்கள் அகரத்துக்கு இன்மைப் பொருள் கொண்டு அத்துவிதம் என்னும் சொல்லுக்கு இரண்டின்மை அதாவது ஒன்று, எனப் பொருள் கொள்வர். அதுபற்றி அவர்கள் பிரமப் பொருள் ஒன்றே உளதென்றும், அந்த ஒரு பொருளும் குண குணிவேற்றுமை தோன்ற நிற்பின் முற்றிலும் ஒன்றாதலின்மை யால் அத்துவிதம் என்பது உபசாரச் சொல்லாய் முடியுமென் றும், ஆதலின் பிரமப்பொருள் குணம் சத்தி சங்கற்ப முதலிய வற்றால் விசேடிக்கப்படுதலின்றி நிர்விசேடமா யிருக்கும் பொரு ளென்றும் கூறுவர். அவர்கள், இவ்வாறு பிரமப் பொருள், தனியே நிற்பதொரு பரம்பொருளென்று கூறுதலால் கேவ லாத்துவிதிகள் என்று கூறப்படுவர். இன்னும் அவர்கள் சித் தாகிய பிரமப்பொருள் ஒன்றினிடமிருந்தே கயிற்றில் அரவு தோன்றினது போலச் சிற்றறிவு சிறு தொழிலுள்ள பலவாறான உயிர்களும் உயிரில்லாத உலகமும் கற்பிதமாய்த் தோன்றின வென்றுங் கூறுவர். அவர்கள் பிரமப் பொருளும் பசுபாசங் களும் (உயிர் உலகங்களும்) இரண்டில்லை ஒன்றே யெனக் கூறு தலால் ஒற்றுமைக் கொள்கையர் (அபேதவாதிகள்) என்றும், ஏகமாகிய ஆன்மாவைப் பிரமப் பொருள் எனக் கூறுதலால் ஏகான்மவாதிகள் என்றுங்கூறப்படுவர். உலக வழக்கில் அவர் கள் "வேதாந்திகள்" என்றும் அழைக்கப்படுவர். அவர்கள் மேலே கூறிய கொள்கைகளையும் பிற கொள்கைகளையும் கார ணங் கூறி மறுக்கப்புகின் உரை அளவு கடந்து விரியும். மறுப் புரை விரிவாய்க் கூறுதற்கு இது இடமுமல்ல.

42. கேவலாத்துவிதிகளாகிய ஸ்மார்த்தர்கள் ஏகமேவாத்விதியம் (பிரமம்) ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம என்ற வேதவசனத்துக்குக் கூறும் பொருளை ஆசிரியர் மறுத்துக் கூறுகிற கருத்துக்களை மாத்திரம் இங்கே கூறப்படும். ஸ்மார்த்தர்கள் அந்த வசனத்தில் ஏகம் (ஏகம்) என்ற சொல்லுக்கு ஒன்று என்று பொருள் கொள்ளுதல் போல பின்னே வரும் அத்விதியம் (அத்விதீயம்) என்ற சொல்லுக்கும் ஒன்று என்றே பொருள் கூறுவர். வடமொழி இலக்கண வழக்குப்படி எண்ணுப் பெயர் முன் வந்த அகரம் அன்மைப் பொருள் உணர்த்துமன்றி இன்மைப் பொருளுணர்த்தாதாதலின் அத்விதியம் (அத்விதீயம்) என்ற சொல்லுக்கு ஒன்று எனப் பொருள் கொள்ளுதல் சொற் பொருளுணர்ச்சி முறைமைக்கு மாருயுள்ளது என்றும், அவ்வாறு மாறுகோட்பொருள் கொள்ளினும், இரண்டாவது பொருளின்றி ஒன்ருயிருக்கிற பிரமப்பொருள் தன்னைத்தானே ஒன்று எனக் கூறிக்கொள்ளுதல் வேண்டப்படுவதொன்றில்லையாதலின் பொருத்தமில்லையென்றும் பிரமப்பொருளை ஒன்று என ஒரு வசனத்தில் அடுக்காக இரண்டு இடங்களில் கூறுதல் வேண்டப்படுவதில்லையென்றும் ஆசிரியர் கூறுகின்ருர். வேதவசனத்தில் ஏகமேவ (ஏகமேவ) என்னும் சொற்கள் முதல்வன் ஒருவனே என்பதையும் அத்விதியம் (அத்விதீயம்) என்னும் சொல்லானது அகரம் அன்மைப் பொருள் உணர்த்துதலினுல் முதல்வன் உயிர்களின் வேருய் இரண்டாம் பொருளா யிருந்தாலும் உயிர்களோடு கலப்பினுல் இரண்டற (பிரிப்பின்றி) நிற்கின்ருன் என்பதையும் விளக்குகின்றன என்று அவர் கூறுகின்ருர். அப்பிராமணன் என்ற சொல்லானது பிராமணன் அல்லாத ஜாதியானைக் குறியாது பிராமணனுயிருந்தும் பிராமணத்தன்மை உடையன் அல்லாத பிராமணனைக் குறித்தற்போல வேதத்திலுள்ள அத்துவிதம் என்ற சொல்லானது முதல்வன் உயிர்களுக்கு இரண்டாவது பொருளாய் வேருயிருப்பினும் கலப்பினுல் உயிர்களோடு இரண்டறக் கலந்து பிரிப்பின்றி நிற்கின்ருன் என்ற பொருளைக் குறிக்கின்றது. உலக வாழ்க்கையிலுங் கூட இரண்டு நண்பர்கள் ஒருவருக்கொருவர் உயிருரிமை நட்புக்கொண்டவர்களா யிருந்தால்

அவர்கள் ஈருடலிலோருயிர் உடையவர்கள்" என்று கூறப்படு தலை நாம் காண்கின்றோம்.

43. இனி, மாத்துவர்கள் அகரத்துக்கு மறுதலைப் (எதிர் மொழி) பொருள் கூறி அத்துவிதம் என்ற சொல்லுக்கு இரண் டின் மறுதலையாகிய ஒன்று எனப் பொருள் கொள்வர். இரண் டின் மறுதலையாகிய ஒன்று கொள்ளுதலினால் இருவேறு பொருள்கள் உண்டென்றும் அநீதியின் மறுதலை கொள்ளவே அதற்கு மறுதலையாகிய நீதியும் கொள்ளக்கிடந்து அவைக ளிரண்டும் வேறு வேறாதல் போல ஒன்றாகிய கடவுளும் இரண் டாவதாகிய உயிர்களும் வேறு வேறு பொருள்களாய் உள்ளன என்றும் அவர்கள் கூறுகின்றார்கள். இன்னும் அவர்கள் உயிர் கள் பலவாறாய் எண்ணில்லாதவைகளாயுள்ள பொருள்கள் என் றும், திருமாலே, மேலான பொருள் (Supreme Being) என் றும் திருமாலும் உயிர்களும் பிரகிருதியும் எப்பொழுதும் வேறு வேறாயிருக்கிற நித்தியப் பொருள்களென்றும் உயிர்களும் பிர கிருதியும் திருமாலுக்கு உட்பட்டவைகளாய் (subordinate) அவ ரைச் சார்ந்திருப்பவைகள் (dependent) என்றும், உயிர்கள் திருமாலுக்குச் செய்யும் உயர்தர அன்பினாலே வீட்டினை அடையும் என்றும் கூறுவர். மாத்துவர்கள் கடவுளும் உயி ரும் எப்பொழுதும் கலந்து சேராமல் வேறு வேறாயிருக்கிற பொருள்களென்றும் உயிர் வீட்டினை அடையும்பொழுது தன் முதற்றன்மை கெடுதலில்லை என்றும் கூறுதலால் அவர்கள் வேற்றுமைக் கொள்கையரென்றும் துவிதிகளென்றும் கூறப் படுவர். இவர்கள் கடவுள் உயிர்களோடு கலவாமலும் உயிர் கள் கடவுளோடு கலவாமலும் இருக்கிற வேறு வேறு பொருள் கள் என்று கூறுதலால், அவர்கள் கொள்கையானது கட வுளுடைய எங்கும் நிறைந்த தன்மை (வியாபகம்) க்கு இழுக்கும் உயிருக்குத் தன்னிடத்தில் கடவுளுடைய நிறைந்த தன்மை யில்லாமல் தனித்து நிற்கும் உரிமை உடைமையும் தந்து நூலறி வோடும் ஆராய்ச்சி அறிவோடும் முரணுகின்றது.

44. இனி, வைணவர்கள் அகரத்துக்கு இன்மைப் பொருள் கொண்டு கடவுள் எங்கும் நிறைந்த பொருள் (வியா

பகப் பொருள்) என்றும் உயிரும் உயிரில்லாத உலகமும், மரமும் கவடும், போலவும் குணியும் குணமும் போலவும் கடவுளின் வேறல்லாத பொருள்களாய் அவரில் அடங்கி நிற்கும் பொருள்கள் என்றும் கடவுளில் அடங்கியுள்ள உயிரும் உயிரில்லாத உலகமும் பலவாறு யிருந்தாலும் கடவுள் பல அல்ல, ஒன்றே எனவும் கூறுவர். வைணவர்கள் கடவுளும் பசுபாசங்களும் (உயிர்களும் கட்டுகளும்) ஒருவகையில் பிரிப்பில்லாத ஒரு பொருள் என்றும் மற்றொரு வகையில் மரமும் கவடும் போல வேறு வேறு பொருள்களென்றும் கூறுதலால் வேற்றுமை ஒற்றுமைக் கொள்கைகள் (பேதாபேத வாதிகள்) என்றும், கடவுள் தன்னோடியைபுடைய பசுபாசங்களாலும் (உயிர்ப்பொருள் உயரில்லாத பொருள்களாலும்) சத்திகுண சங்கற்ப முதலியவற்றாலும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நிற்கின்றான் எனக் கூறுதலால் விசிட்டாத்து விதிகள் என்றும் கூறப்படுவர். சிவாத்துவித சைவரும் தங்களுக்குக் கடவுள் வேறாயினும் வைணவரைப்போன்ற கொள்கையை உடையவர்கள். வைணவர்கள் உயிருக்கு நிறைந்த தன்மை (வியாபகம்) கூறாமல் அணுபரிமாணமும் தங்கள் கடவுளாகிய திருமாலுக்குப் பரிணாமமும் முழுமுதற்றன்மையும் கூறுதலால் உண்மைக்கு மாறுபட்ட கொள்கைகளை உடையவர்களாகின்றார்கள்.

---

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம் திருநெல்வேலி

## தனித் தமிழ்த் தேர்வுகளின் தேர்ச்சிக் குறிப்பு

தமிழகத்திலுள்ள தமிழ் மக்களில், தமிழினது தொன்மையும் தன்மையும் நன்மையும் நாடி அதனை முறையே பயின்று தேர்ந்து பயனுறக் கருதும் அறிஞர்களுக்கு ஆர்வமும் ஊக்கமும் மேம்படுமாறு செய்வான், 1924ல் நெல்லையில் ஏற்படுத்தப் பெற்ற தென்னிந்திய தமிழ்ச் சங்கம் கடந்த ஐந்தாண்டுகளாகத் தனித் தமிழ்த் தேர்வுகளைக் குறித்த சில ஊர்களில் தக்க அறிஞர் மேற்பார்வையில் நடத்தி வருகின்றது.

இவ் யாண்டு, மேற்படி தேர்வுகள், 1930 ஜுன் 25 26 27 (௲௯௱௩௰, ஆனி, ௰௧, ௰௨, ௰௩) புதன், வியாழன், வெள்ளிகளில் திருநெல்வேலி திருவனந்தபுரம் ஆரணி முதலிய நகர்களில் நடைபெற்றன. நிகழ்ச்சியாண்டில் சங்கத்திலேற்பட்டிருக்கும் மூவகைத் தேர்வுகளுக்கும் விண்ணப்பித்தவர்கள் தொகை 18:

தமிழ்த் தேர்வுக்கு விண்ணப்பித்தவர் பன்னிருவர். எழுதியவர் அறுவர். இளந்தமிழ்ப் புலவர் தேர்வுக்கு விண்ணப்பித்தவர் நால்வர். எழுதியவர் இருவர். தமிழ்ப் புலவர் சிறப்புப் பட்டம் பெறுவதற்கு முன்னதாகத் தேறவேண்டிய தமிழ்ப் புலவர் பொதுவுக்கு விண்ணப்பித்தவர் இருவர். எழுதியவர் இருவர். இவர்கள் தேர்ச்சி வகை யடியில் வருமாறு :—

## தமிழ்த் தேர்வு

### இரண்டாம் வகுப்பு

பதிவெண் த. 65. R. வரதையர், பார்வதி அகரம் கிராமம். களம்பூர் P. O. வடஆற்காடு ஜில்லா.

### மூன்றுவது வகுப்பு

பதிவெண் த. 66. G. அண்ணுமலை முதலியார், போர்டு பாடசாலை, சேதரம்பட்டு, களம்பூர் P.O. வடஆற்காடு ஜில்லா.

பதிவெண் த. 63. நாராயண ஸ்ரீனிவாசன், காமக்கூர், களம்பூர் P. O. வடஆற்காடு ஜில்லா.

பதிவெண் த. 62. B. சுந்தரேச முதலியார், ஸ்ரீராமர் வீதி, குண்ணத்தூர், ஆரணி, வடஆற்காடு ஜில்லா.

## இளந்தமிழ்ப் புலவர்

### மூன்றுவது வகுப்பு

பதிவெண் இ. 22. இ. மு. அருணுசலம், சம்பாத் தெரு, தென்காசி, திருநெல்வேலி ஜில்லா.

பதிவெண் இ. 21. நம்பி ரெட்டியார், ஆசிரியர், செந்தமிழ்க் கலாசாலை, திருவனந்தபுரம்.

## தமிழ்ப் புலவர் பொது

### மூன்றுவது வகுப்பு

பதிவெண் த. பு. பொ. 6. ஐ. நடேச பிள்ளை, தமிழ்ப் பண்டிதர், போர்டு ஹைஸ்கூல், உத்தரமேரூர், செங்கற்பட்டு ஜில்லா.

## அறிவிப்பு

இச்சங்கத் தனித் தமிழ்த் தேர்வுப் பாட முறைகள் 1929 ஜூலையில் மாற்றப்பட்டிருந்தும், கிடைத்த குறைந்த காலத்துள் பதினெண்மர் தேர்வுகட்கு விண்ணப்பிக்க முன் வந்தது தமிழ் பயின்று வருபவர்களின் ஆர்வத்தை விளக்குவதாம். தமிழக முழுவதுமுள்ள தமிழ்ப்பற்றுளர்கள் தமிழின் வளர்ச்சி கருதித் தமிழ்ப் பயில்வார்களை ஊக்குவார்களாயின், தமிழகத்தில் செந்

தமிழ்த் தேர்ச்சியுற்ற அறிஞர் கூட்டம் நாளுக்கு நாள் பல்கிப் பெருகி நாட்டிற்கு நலம் பயப்பதாம். இச்சங்கத் தேர்வுகட்கு மாணவர்களை யனுப்பியும், தேர்வுகட்கு வினாத்தாள் குறித்தும் விடைத்தாள் திருத்தும், தேர்வுகளை ஆங்காங்கு நடத்தியும் ஆன்ற உதவி புரிந்த பல அறிஞர்கட்கும் இச்சங்கம் நன்றி பெரிதும் உரித்தாகின்றது. சென்னைத் துரைத்தனத்தாரும், பல்கலைக் கழகத்தாரும் இச்சங்கத் தேர்வுகளை மதித்தொப்புதற்கான முயற்சி விரைவிற் செய்யப்பெறும். தமிழ்ச் செல்வர்கள் உதவி பல்வகையானும் வேண்டப்பெறும்.

திருநெல்வேலி 12-10-1930　　பு. சி. புன்னைவனநாதன், அமைச்சர்.

---

# மதிப்புரை

## இராமலிங்க அடிகள் வரலாறும் திருவருட்பா ஆராய்ச்சியும்

இந்நூல் திருவாளர் T. S. பாலசுந்தரம் பிள்ளையவர்களால் எளிய இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. திருவருட்பாவிலுள்ள அகச்சான்றுகள் கொண்டே அடிகளது வரலாறு கூறப்பட்டிருக்கின்றது. 96 பக்கங் கொண்டது. விலை அணா 9.

கிடைக்குமிடம் : பரங்கிமலை, மறைமலையடிகள் கல்விக்கழகம்

## 2. சுகிர்தா (ஒரு புதுக்கதை.)

இதனை இயற்றியவர் சேலம் கவர்ன்மெண்டு இந்து பெண் பாடசாலையின் தலைமையுபாத்தியாயராகிய ஞான திரவியம் குமரேசன் அம்மாளவர்கள். இதன்கண் இந்துப்பெண் மக்களின் வருந்தத் தக்கதான நிலைமை எடுத்துக் கூறப்படுவதோடு இளமை மணம் கண்டிக்கப்படுகின்றது. இந்நூலின் நடை மிகவும் எளியவாயும், கற்பவர்க்கு மிகுந்த களிப்பூட்டுவதாயும் காணப்படுகின்றது. இதன்கண் ஏறக்குறைய இருநூறுக்கு மேலான அரிய பழமொழிகள் இடநோக்கி அமைக்கப் பெற்றிருக்கின்றன. இதன் கதைப்போக்கும் செவ்விவாய்ந்தது. ஒவ்வொரு பெண்டிரும் ஆடவரும் இதனைக் கற்க வேண்டுவது முதன்மையாகும். 222-பக்கம். இதன் விலை அணா 14.

நமது கழகத்திலும், சென்னை கிறிஸ்டியன் லிட்டெரச்சர் சொஸைட்டியிலும், கிடைக்கப்பெறும்.

## பல்லாவரம் பொதுநிலைக் கழகப் பேரவை.

'சமரச சன்மார்க்க சங்கம்' அல்லது பொது நிலைக்கழகம் என்பது 1911 ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 22 ஆம் நாள் ஆசிரியர் மறைமலை அடிகளால் பல்லாவரத்தின்கண் நிலை நிறுத்தப்பட்டது. பிறப்பு இறப்பு இல்லா எல்லாம் வல்ல முழு முதற்கடவுள் ஒருவரையே அன்பினால் வழிபட்டுப் பிறவியைத் தூய்மை செய்யும் முறைகளும், எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அருளும் பூண்டு ஒழுகும் ஒழுக்கத்தின் உயர்வும் எங்கும் பரவுமாறு செய்தலே இதன் நோக்கம். பண்டைத் தமிழாசிரியராகிய தொல்காப்பியர், திருவள்ளுவர், நக்கீரர், மாணிக்கவாசகர், திருமூலர், திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சுந்தரர், பட்டினத்தடிகள், மெய்கண்ட தேவர், தாயுமான அடிகள், இராமலிங்க அடிகள் முதலான ஞான குரவர்களும் அறிவுறுத்திய அருளுரைகள் அத்துணையும் இறைவனிடத்து அன்பும் உயிர்களிடத்து அருளும் என்னும் இருபேரொழுக்கங்களையே இருகண்களாகக் கொண்டு நிற்றலால், அவர்தந்த அவ்விரு கண்களைக்கொண்டே மக்கள் இறைவனைக் கண்டு அவன் திருவடிப் பேற்றினை எய்துதல் வேண்டுமென்பதே இதன் கோட்பாடு.

எல்லாம் வல்ல அம்பலவாணர் திருவருளால் மேற்குறிப்பிட்ட மூன்றும் வரும் தைத் திங்கள் பூசத்தன்று துவங்கி (1931 பிப்ரவரி, 2,3,4,5) நான்கு நாட்கள் நடைபெறும். தைப்பூசத்தன்று அம்பலவாணர் திருக்கோயிற்றிருக்குடமுழுக்கும் மாணிக்கவாசக நூல் நிலையத் திறப்பும், அந்நாள் மாலையில் அம்பலவாணர் திருக்கூத்தின் உண்மையும், ஞானயோகமும் என்பது பற்றிய மறைமலையடிகளின் விரிவுரையும் நடைபெறும். அதற்கடுத்த மூன்று நாட்களிலும் பொது நிலைக்கழக நிறைவுவிழாப் பேரவை நடைபெறும்; அம்மூன்று நாட்களிலும் கலைவல்ல அறிஞர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் அரிய பெரிய பொருள்களை எடுத்துச் சொற்பொழிவு நிகழ்த்துவார். அந்நாட்களில் மறைமலையடிகளும் 'தமிழும் அதன் பெரும்பயனும்' என்பது பற்றித் தமிழிலும், 'நம் நாட்டவர் முன்னேற்றம்' என்பது பற்றி ஆங்கிலத்திலும் பேருரை நிகழ்த்துவார்கள். அவ்விரிவு பின்னர் வெளிவரும்.

உணவு, வசதி, இருப்பிட வசதி, கட்டணம் முதலியவை கட்கு: பல்லாவரம் பொதுநிலைக் கழகத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.



வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள்.
1846—1901

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு அ | மெய்கண்டான்யாண்டு-எ௱அ கார்த்திகைத்திங்கள் 1930ஆ நவம்பர்௴—டிசம்பர்௴ | பரல் கக |


திருச்சிற்றம்பலம்

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதமவை யைந்தாய்
ஆறார்சுவை யேழோசையோ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிமி ழலையே.

ஈறாய்=எல்லாப் பொருள்களும் அழியும் அழித்தற் காலத்தில் (சங்கார காலத்தில்) அவைகளெல்லாம் தன்னிடம் ஒடுங்கி நிற்கும் முடிவுப் பொருளாகியும்

முதல் (ஆய்)=படைப்புக் காலத்தில் எல்லாப் பொருள்களும் ஒடுங்கினவாறே தன்னிடமிருந்து தோன்றுதற்கு முதற் பொருளாகியும்

ஒன்றாய்=ஒப்பற்ற ஒரே பொருளாகியும்

இருபெண் ஆண் (ஆய்)=காப்புக் காலத்தில் உலகிலே ஆண் உருவமாயும் பெண் உருவமாயும் தோன்றும் எல்லா உயிர்ப் பொருளாகியும்

குண மூன்றாய்=சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்களாகியும்

மாறா மறை நான்காய்=மாறுதலில்லாத இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களாகியும்

வருபூதமவை ஐந்தாய்=பருப் பொருள்களாய் முடிவில் வருகின்ற மண், நீர், தீ, வளி, வெளி என்னும் ஐம்பூதப் பொருள்களாகியும்

ஆறூர் சுவையாய்=ஆறு என்ற எண்ணுடன் பொருந்திய தித்திப்பு, கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு துவர்ப்பு என்னும் ஆறுசுவை களாகியும்,

ஏழோசை (ஆய்)=ச, ரி, க, ம, ப, த, நி, என்னும் எழுவகை இசை யோசைகளாகியும்,

ஓடு=இவைகளோடு

எட்டுத்திசை (ஆய்)=கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என்னும் எட்டுத் திசை களாகியும்

தான் ஆய்=இவைகளிலெல்லாம் இரண்டறக் கலந்து தான் வேறு அவைகள் வேறு என்னும் பிரிப்பின்றி அவைகளெல்லாம் தான் என்று கூறும்படி கலந்து நிற்கிறவனாகியும்,

வேறு ஆய்=இவைகளெல்லாவற்றிலும் இரண்டறக் கலந்து நின்றாலும் தான் அவைகளுக்கு வேறாய் நிற்கும் தனிப் பொருளாகியும்

உடன் (ஆய்)=மேற் சொல்லியபடி ஒன்றாயும் வேறாயும் நிற்பதோடு அவைகளெல்லாம் இயங்குதற்குக் காரணமாய், அவைகளை இயக்கு தற்கு அவைகளுடனுமாய் நிற்கிற பொருளாகியும்

ஆனன்=இம்மூன்று நிலைகளும் சேர்ந்த அத்துவித நிலை ஆனவனாகிய சிவபிரான்

இடம்=உறைகின்ற இடமானது

வீழிமிழலை=வீழிமிழலை என்கிற இடமாகும்.

இந்த வீழிமிழலைத் தேவாரப் பாவானது இறைவன் உயிர்க ளோடும் உயிரில்லாத பொருள்களோடும் கலப்புத் தன்மையால் ஒன்றா யும் பொருட்டன்மையால் வேறாயும் உயிராதற்றன்மையால் அவைகளை இயக்கி உடனாகியும் நிற்கும் அத்துவித இலக்கணம் கூறுகின்றது. இந்தப் பா சிவஞானபோதம் இரண்டாவது சூத்திரம் முதலாவது அதி கரணத்தில் கூறிய பொருளை விளக்குகிறது.

ஈறாய் முதலொன்றாய் - இறைவன் முறையே அழித்தற் காலத்தி

லும் மீளப் படைத்தற்காலத்திலும் தனித்து நிற்கும் நிலைகளைக் கூறுகின்றது.

இருபெண் ஆண் என்பது—படைப்புக் காலத்துக்குப் பின் ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு வரையுள்ள உயிர்களோடும் தேவர்கள் உயிர்களோடும் நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது. பெண் சத்தியையும் ஆண் சிவத்தையும் குறிக்கின்றன.

குணமூன்றாய் மாறுவரு பூதமவை ஐந்தாய் ஆறூர் சுவையேழோசை எட்டுத்திசை ஆய் என்ற சொற்றொடர்கள் இறைவன் உயிரில்லாத உலகப் பொருள்களெல்லாவற்றோடும் கலந்து நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது.

அவை என்பது—இந்த உயிரில் பொருள்களெல்லாம் சுட்டறிவினால் அறியப்படும் பொருளெனக் குறிப்பிடுகின்றது.

மாறு மறை நான்காய்—இறைவன் நான்கு வேதப் பொருள்களிலும் நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது. நான்கு வேதங்களும் பிரணவத்திலிருந்து விரிந்தனவாதலின் இறைவன் நாதப்பொருள் எனக் குறிக்கின்றது.

தானாய் என்பது—இறைவன் மேலே சொன்ன உயிர்ப்பொருள் உயிரில் பொருள் ஆகிய எல்லாப் பொருளினுங் கலந்து ஒன்றாய் நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது.

வேறாய் என்பது—இறைவன் இப்பொருள்களெல்லாவற்றினுங் கலந்து நின்றாலும் அவற்றிற்கு வேறாயுள்ளவன் என்னும் வேறாய் நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது.

உடன் ஆய் என்பது—இறைவன் உயிர்க்கு உயிராதற்றன்மையால் எல்லாப் பொருள்களையும் இயக்கி உடனாய் நிற்கும் அத்துவித நிலையைக் குறிக்கின்றது.

ஆனான் என்று இறந்த காலத்தாற் கூறினது இயல்புபற்றி; தொல்காப்பியம் சொல்லதிகாரம் ௨௪௫-வது சூத்திர விதிபார்க்க.
இடம் எழுவாய், வீழிமிழலை பயனிலை.

மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

# 'மணிவாசகரும் கண்ணப்பரும்'

(கூகூ-பக்கத் தொடர்ச்சி)

[தமிழ்ப்புலவர் திரு. அ. மு. சரவண முதலியாரவர்கள் எழுதியது.]

மேல் வருவனவெல்லாம் முன் காட்டப்பட்டவைகளினும் ஒருபடி சிறந்தனவாகும்; என்னை? அடிகள் எவ்வெவ்வாதரவு தமக்கு அளிக்க வேண்டுமென்று ஆண்டவனை வேண்டுகின்றாரோ, அவற்றை யெல்லாம் அவ்வாண்டவனுக்கு அன்பர் பெருமானாகிய கண்ணப்பர் தமது அன்பின் முதிர்ச்சியால் அளிக்கின்றாராகலின் என்க.

அழுதடியடைந்த அன்பர், "யான் ஒரு துணையின்றி வருந்துகின்றேன்; நீயே எனக்கு உறுதுணையாய் நின்று உதவல் வேண்டும்" என்பார்,

"நைஞ்சேனையேன் ஞானச்சுடரே நானோர் துணைகாணேன்"
"தனித்துணை நீ நிற்க"
"மனத்துணையே"

என அரற்றுகின்றார். கானவர் பெருமானுங் கண்ணப்பரோ இறைவனை இறுகத் தழுவிக்கொண்டு,

"வெம்மறக் குலத்துவந்த வேட்டுவச் சாதியார்போற்
கைம்மலை கரடிவேங்கை யரிதிரி கானந்தன்னில்
உம்முடன் றுணையாயுள்ளா ரொருவரு மின்றிக்கேட்டேன்
இம்மலைதனியே நீரிங்கிருப்பதே யென்றுரைத்தார்"

(பெரியபுராணம்)

"யானையும்புலியுமெங்கும்யாளியு முளவுங்கூர்ங்கோட்
டேனமுந் திரியுங்காட்டு ளெந்தைநீ துணையுமின்றிக்
கூனல்விற் றடக்கைவேடர் குலமென விருப்பதென்னே
ஊனுண வுனக்கியாவ ருண்கெனத் தருவாரந்தோ"

(சீகாளத்தி புராணம்)

என உலகனைத்திற்கும் உறுதுணையாம் ஒப்பற்ற ஒருவனுக்குத் துணையில்லையே எனப் புடைபடக்கவன்று,

"தேனொடு தினையின்பிண்டி தீம்பழங் காய்கிழங்கு
மானொடு முயலெய்கேழல் வல்லுடும்பழுங் கிவற்றின்
ஊனுண வென்றிவ் வெல்லாமுதவுவல் யானேநல்ல
கானவர்துணையுன் டெம்மூர்க் காண்டிவா"

என்றுகவின் பெற்ற அன்பு மொழியால் ஆண்டவனைத் தமது உடுப்பூருக்கு அழைக்கின்றார்.

இன்னும் அடிகள்

"ஆதமிலியான் பிறப்பிறப்பென்னு மருநரகில்
ஆர்தமருமின்றியே அழுந்துவேற் காவாவென்
றோதமலிநஞ்சுண்ட வுடையானே யடியேற்குன்
பாதமலர் காட்டியவாறன்றே யெம்பரம்பரனே"

எனத் தமர் யாருமில்லாத தம்மை அவ்விறைவன் "அஞ்சற்க" என்று ஆண்டருளியதைக் குறிப்பிட்டு, அவன் தமரான வகையை "அன்னை யொப்பா யெனக்கத்தனொப்பாய்" எனவும், "அம்மையே அப்பா" எனவும், "அம்மான்" எனவும், "அண்ணா" எனவும் கூறிய அருள் மொழிகளால் விளக்கியருளினர்.

இங்ஙனம் எல்லா வுலகிற்கும் அப்பனாய் அம்மையாய் அன்புடைய மாமனாய் மாமியாய் அனைத்துமாயுள்ள அருட் பெருந்தகையாய ஆண்டவனுக்குத் 'தமரில்லையே' என வருந்தி,

" ஆர்தமராக நீரிங்கிருப்பதென் றகலமாட்டேன் "

எனக் கண்ணீர் வடிக்கின்றார் கானவர் தலைவர்.

இனி, எதற்கும் அஞ்சாத தன்மையை "யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்" என்னும் வீரமொழிகளால் விளக்கியருளி "அந்தமில் பிறவி யேழுமடு பகையென்ப தோர்ந்தேன்" எனக் கூறுமாற்றால் பிறவி யென்னும் பெரும் பகைக்குத் தாம் பெரிதும் அஞ்சுதலை அறிவுறுத்தருளிய ஆண்டகையாகிய அழுதடி யடைந்த அன்பர், அப்பகையை வேரொடு களைபவனும்

அப்பகை தனக்குச் சிறிதுமில்லாதவனும் "பெரியார் பிறப்பறுப் பானென்றுந் தன் பிறப்பை யறியான்" (அப்பர்) ஆகிய ஆண்ட வன், தம்மை 'அஞ்சேல்' என்றருள் செய்ய அவாவி,

"அஞ்சேலென்ன ஆசைப்பட்டேன் கண்டாயம்மானே"
"அஞ்சேலென் றிங் கருளாய் போற்றி"
"அருளாதொழிந்தா லடியேனை யஞ்சேலென்பார்யார்"
"ஆவா வென்னுவிடி லென்னையஞ்சே லென்பாராரோதான்"
"என்னையப்பா அஞ்சலென்பவ ரின்றிநின் றெய்த்தலைந்தேன்"

எனத் திருவாசகத்திற் பாரித்துக் கூறி,

"உய்ஞ்சே னெம்பெருமானே யுடையானே யடியேனை
அஞ்சே லென்றண்டவாறன்றே யம்பலத்தமுதே"

எனவும்,

"உய்ஞ்சேனு னுடையானே யடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவாருர் பெறுவாரச்சோவே"

எனவும் அப்பெருமான் தம்மை 'அஞ்சேல்' என்றருளினமை யும் விளக்கிப் போந்தார்.

இங்ஙனம் "புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி யறி வழிந்திட்டைம் மேலுந்தி, யலமந்த பொழுதாக அஞ்சேலென் றருள் செய்யும்" கூத்தப் பெருமானைக் குன்றவர் பெருமான்,

"குன்றிடை யெனக்கு வாய்த்த குலமணி விளக்கே எந்தாய்!
உன்றழற் பசிதணிப்ப உறுசுவை யிறைச்சிகொண்டே"

"உழுந்துருள் பொழுதின்மீள்வே னுருகண மேனுந்தாழேன்
வழங்குறு கொடுவிலங்கு வருமென அஞ்சேல் ஐய
எழுந்துமேல்வந்த தாயினென்னை யொய்யெனக்கூவு"

(சீகாளத்தி புராணம்)

என்கின்றார். இந்நிகழ்ச்சிகளனைத்திற்கும் காரணமாயிருந்தது எது? அவரது அன்பின் முதிர்வன்றோ! அவ்வன்பு பரிணமித்த இந்நிகழ்ச்சிகளை யன்றிப் பிற நிகழ்ச்சி இறையும் அவரிடத்து இல்லாமையாலன்றோ அவர் 'அன்பினது உண்மை வடிவம்'

எனச் சேக்கிழார் பிரானுற் செப்பப்பட்டார். (இஃது முன்னரே காட்டப்பட்டது.)

இன்னும் ஒருவர் மாட்டு அன்பு செய்தாரொருவர் அவ்வன்பின் முதிர்ச்சியால் தம்மினும் பன்னூறு மடங்கு எல்லா வகையானுஞ் சிறந்த அவ்வன்பு செய்யப்பட்டாரைத் தம் நிலையில் வைத்து எண்ணி அவருக்கு ஊறு அல்லாதனவற்றையெல்லாம் ஊறு எனக் கருதிக் கவல்வதாகிய அன்பின் இலக்கணமொன்றும் நாயனுர் வரலாற்றில் அமைந்து கிடத்தல் காண்க. இதனை, எல்லாம் வல்ல இறைவனுக்குப் பசிப் பிணி உண்டென்றும், அதை நீக்குதற்பொருட்டுத்தான் சென்று நல்ல ஊனுணவு கொண்டு வரல் வேண்டுமென்றும், அங்ஙனஞ் சென்ருல் அங்கு வாழுங் கொடிய விலங்குகள் வந்து ஐயனுக்கு யாதாயினும் அல்லல் விளைத்துவிடுமென்றும், என்ருலும் இறைவன் மிகப் பசித்திருக்கின்ருனுகலின் விரைந்து சென்று உணவு கொண்டுவரல் வேண்டுமென்றும், "எந்தாய்! உனக்கு உணவு தேடிக்கொண்டு உழுந்து உருளும் பொழுதிற்குள் ஒல்லென வருவல்; நீ 'இங்குள்ள விலங்குகள் வருங்கொல்' என்று அஞ்சற்க; ஒருவாறு வரின் அடியேனை விரைந்து அழைப்பாயாக" என்றுங் கூறியதனுலும் இவற்ருேரன்ன பல நிகழ்ச்சிகளாலும் அறியலாம். 'நன்று நன்று! கண்ணப்பர் நூலாராய்ச்சியால் கடவுளிலக்கணந் தெரிந்துகொள்ளாதவராகலின் இங்ஙனமெல்லாஞ் செய்தார்" எனின், அவ்வறிவு கைவரப் பெற்ருர் மாட்டும் முறுகிய அன்பால் இந்நிகழ்ச்சி நேருதல் இயல்பேயாகும். நுணங்கிய கேள்வி மேலோனும், பொருட் செல்வமிக்குடைய குபேரனை நட்பாகக் கொண்ட கூத்தப் பெருமான் அச் செல்வமுடையான் நட்புக்குத் தகக் கல்விச் செல்வமுடைய ஒருவன் நட்பு வேண்டுமென்று பன்னுள்வரை காத்திருந்து நட்புக் கொள்ளப் பெற்றவனுமாகிய தம்பிரான் தோழன் சேரமான் பெருமாணுயனுருடன் கோடிக் குழகரைக் கும்பிடுதற்குச் சென்று, ஆங்குக் குடிகள் யாவுமின்றி ஆண்டவன் தன்னந் தனியாகக் கடற் காற்று விரைந்து வந்து இடையருது தன் மேல் மோத இருக்குங் காட்சியைக் கண்டு கண்ணும் கருத்தும் புண்ணுகி, அன்

பின் முதிர்வில் அவன் எல்லாம் வல்ல தன்மை மறைய, அவனை நோக்கி,

"கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேற்
குடிதானயலே யிருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீர்
அடிகேளுமக்கார் துணையாக விருந்தீரே"

என வருந்துவதனால் அவ்வுண்மை புலனாகும். ஆயின், அவ் விருவர் தம்முள் வேற்றுமை யாதோவெனின், முன்னவர் அவ் வுணர்ச்சி மயமாகிவிடுவர். பின்னவர் உடனே தெளிந்துவிடுவர் என்க. என்னை? திண்ணனர் அதே நிலையில் நின்று விட்டமை யானும், வருந்திக் கூறிய வன்றொண்டப் பெருந்தகையார் உடனே தமது நாலுணர்வாற் றெளிந்து "ஆ! கெட்டேன்; என் னினைந்து என் கூறினேன்! வரம்பி லின்பமும் முடிவி லாற்றலும் வாய்ந்த நமது மாதேவனைக் காற்று மோதி என் செய்யும்? அவனது இயற்கைத் திருவுருவத்தின் கூறுகளிற் காற்று ஒன் றன்றோ? உயிர்களனைத்திலும் ஊடுருவித் தோன்றாத் துணையாக நிற்கும் அவனுக்கும் ஓர் துணை வேண்டுங்கொல்" என்று கருதி மறந்து கூறியதொன்று தவறாயின் அதை மறைத்தற்கு நகைச் சுவை தோன்றச் சில கூறும் உலகியலை ஒக்கத் தமது தோழனை நகை பொருந்தக் கூறுவார் போன்று,

ஒற்றியூரென்ற வூனத்தினா லதுதானோ
அற்றப்பட வாரூரதென்ற கன்றாரோ
முற்றாமதி சூடிய கோடிக்குழகா
எற்றாற்றனியே யிருந்தா யெம்பிரானே"

எனக் கூறி யருளினமையானுமென்க.

(தொடரும்)

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

## உடையான் (க0)

(திரு. M. V. நெல்லைப்பயப்ப பிள்ளையவர்கள் B. A.)

1. உடையான் என்ற பண்டைத் தமிழ்ச் சொல் கடவுளைக் குறிக்கும் சொற்களில் ஒன்று. உடைமை என்ற சொல்லில் மை என்னும் பண்பு விகுதி கெட்டு எஞ்சி நின்ற 'உடை' என்பதுடன் ஆன் என்னும் உயர்திணை ஆண்பால் விகுதி சேர்ந்து யகர உடம்படு மெய் இடையிலே தோன்றி உடையான் என்ற சொல் வந்தது. உடையவன் உடையவர் உடையாய் என வழங்குதலும் உண்டு.

2. உடையான் என்று சொல்லவே யாரை அல்லது எதை உடையான் என்ற கேள்வி பிறக்கும். யாதாம் ஒரு பொருளை உடையவனையே நாம் உடையான் என்று கூறலாமே தவிர ஒரு பொருளுமில்லாதவனை உடையான் எனக் கூறுதல் பொருத்தமில்லாததாகும். உடையான் என்ற சொல்லின்முன் யாரை அல்லது எதை என்ற கேள்விக்கு விடையாக வரும் பொருளை நாம் வைத்தா லொழியக் கருத்து நிரம்புமாறில்லை. உள்ளனவாயுள்ள பொருள்களாகிய கடவுள், உயிர்கள் உயிரில் உலகம் என்ற மூன்றில் உயிரில்லாத உலகம் ஒன்றையும் உடையதாக மாட்டாது. உயிரில்லாத பொருளுக்கு உடையதாந் தன்மையில்லை. எஞ்சி நின்ற கடவுள் உயிர்கள் இரண்டில் உயிர்கள் சிற்றறிவுடைய எண்ணிறந்த பொருள்களாயும், கடவுள் பேரறிவுடைய ஒரு பொருளாயும் இருப்பதால் பேரறிவுடைய கடவுள் ஒருவனையே உடையான் என்று நாம் கூறலாம். ஆகவே பேரறிவுள்ள கடவுளாகிய ஒரு பொருளுக்குச் சிற்றறிவுடைய பல உயிர்களும் உயிரில்லாத பல உலகப் பொருள்களும் உடைமைப் பொருள்களாயுள்ளன என்பது பெறப்படுகின்றது. கடவுளுக்கு உயிர்களும் உயிரில்லாத பொருள்களும் உடைமைப் பொருள்கள் என்று பொதுவாய்க் கூறப்பட்டாலும் அறிவுடைய உயிர்ப்

பொருள்கள் அறிவில்லாத உலகப் பொருள்களினின்று பிரிக்கப்பட்டுச் சிறப்பாக அடிமைப் பொருள்கள் என்று கூறப்படுகின்றன.

3. இனி, கடவுளுக்கு உயிர்கள் அடிமைப் பொருள்கள் என்று கூறுதலில் அடங்கியுள்ள கருத்துக்களைப்பற்றிக் கருதுவாம். அடிமை என்ற சொல்லினது முதற்பொருள் (Primary Meaning) அடியிலுள்ள தன்மையாகும். ஒருடலில் அடி கீழேயும் தலை மேலேயுமிருத்தலால் அடிமையாயுள்ள ஒருவன் ஒரு தலைவனை உடையான் என்பதும், அத்தலைவனாற் காக்கப்பட்டு அவனுக்குள் அடங்கி நடப்பவன் என்பதும் தலைவனை அன்றித் தான் ஒன்றும் செய்தற்கு உரிமையும் வன்மையும் இல்லாதவன் என்பதும் முதலவாகிய கருத்துக்கள் பெறப்படுகின்றன. இந்தக் கருத்துக்களெல்லாம் சைவசமயத்திற் கூறப்படுகிற ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையில் அடங்கியுள்ளன. ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையைச் சிறப்பாக எடுத்துக் கூறுகிற சைவசமயமானது கடவுளது அருள் விளங்கி மலம் நீங்கப் பெற்ற பெரியார்களை அடியார்கள் என்றும் அடிகள் என்றும் கடவுளை ஆண்டான் என்றும் முதல்வன் என்றும் தலைவன் என்றுங் கூறுகின்றன. உடையான் என்ற சொல்லை வைணவர்களும் தங்கள் கடவுளாகிய திருமாலுக்கு நூல் வழக்கிலும் பேச்சு வழக்கிலும் பண்டைக்காலத்தில் வழங்கி வந்ததுமன்றி இப்பொழுதும் வழங்கி வருகிறார்கள். சைவர்களும் இக்காலத்துப் பேச்சு வழக்கில் "உடையவர் பூசை" "உடையவரை எழுந்தருளப் பண்ணல் வேண்டும்" என்ற சொற்றொடர்களை வழங்கி வருகிறார்கள். ஆகவே உடையான் உடையவன் உடையவரென்ற சொற்களை ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையைப் பின்பற்றி ஒழுகும் சைவர்களும் வைணவர்களுமே பண்டைக்காலத்திலும் வழங்கி வந்ததுமன்றி இக்காலத்திலும் வழங்கி வருகிறார்கள். இந்த இரண்டு சமயங்களைத்தவிர, பிற சமயங்களில் இந்த உண்மை கூறப்படாததால் அச்சமயிகள் இச் சொற்களைத் தனியே வழங்குதலில்லை. ஆனால் உடையான் என்ற சொல்லைப் பொருள், கைத்து, செல்வம் முதலிய சொற்க

ளுடன் சேர்த்துப் பொருளுடையான் கைத்துடையான் செல்வமுடையான் என வழங்குதலுமுண்டு. சில வேளைகளில் முன்னிற்கிற பொருட் பெயர் தொக்கி நிற்ப, உடையான் என்ற சொல்லே பொருளுடையான் என்ற பொருளில் வருதலுமுண்டு. இவ்வாறு ஒரு சொல்லே அதனைப் பேசுகிற மக்கள் பின்பற்றி ஒழுகிவந்த உண்மையைக் குறிப்பிடும் ஆற்றலுடையதாக நாம் காண்கிறோம்.

4. இனி, உடையான் என்ற தமிழ்ச்சொல்லுக்குச் சரியான வடமொழிச் சொல் சுவாமி (**स्वामि**) என்பது. சுவாமி என்ற சொல் இக்காலத்து, தமிழ் பேசுகிறவர்களெல்லாராலுங் கடவுளைக் குறிக்க வழங்கப்படுகிறது. சுவாமி என்ற சொல்லால் ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையை அதனைப் பேசுகிறவர்கள் நினைப்பதில்லை. அச் சொல் கடவுளுக்கு மாத்திரமன்றி மக்களைக் குறிக்கவும் வழங்கப்படுகிறது. உடையான் என்ற சொல் தமிழில் தனிமையாக, கடவுளைக் குறிக்க வழங்கப் படுதலன்றி மக்களைக் குறிக்க வழங்கப்படுதல் நூல் வழக்கிலும் பேச்சு வழக்கிலும் இல்லை. சுவாமி என்ற சொல்லானது இக்காலத்து முன்னிலையிலும் படர்க்கையிலும் பிராமண சாதி மக்களையும் துறவி வேடம் பூண்ட எல்லாச் சாதி மக்களையும் குறிக்க வழங்கப்படுகின்றது. இக்காலத்து, பிராமண சாதியிற் பிறந்தவர்களெல்லாரும் காவிவேட்டி தரித்தவர்களெல்லாரும் அவர்களுடைய அறிவு ஒழுக்கங்கள் முதலியன சிறிதும் கருதப்படாமல் சுவாமிகள் என்று தமிழ்ப் பொது மக்களால் அழைக்கப்படுகிறார்கள். அதனால் அச் சொல் அதனில் அடங்கியுள்ள உண்மைக் கருத்தை இக்காலத்தில் இழந்து விட்டது. இவ்வாறு சொற்கள் அவைகளைப் பேசும் மக்கள் வழங்கும் தன்மையினால் பொருள் மாறுதல்களை அடைகின்றன.

5. ஆளுகிறவன் என்று பொருள்படும் ஈஸ்வரன் (**ईश्वरः**) என்ற சொல்லும் சொத்தாக (அடிமையாக) உடையவன் என்று பொருள்படும் (**स्वम्**-சொத்து) சுவாமி என்ற சொல்லும் வடமொழி நூல் வழக்கில் காணப்படுதலானது சங்கராச்சாரிய

சுவாமிகள் காலத்துக்கு முன்னே பொதுவாக பிராமணர்கள் ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மையைக் கூறும் சைவ சமயத்தை அனுட்டித்து ஒழுகி வந்தார்களென நமக்குப் புலப் படுகின்றது. அப்படியிருந்ததனாலேதான் அக்காலத்தில் பிராம ணர்களிற் சிலர் சைவசமய ஆசிரியர்களாயும் சைவசமய நூலா சிரியர்களாயும் இருந்தார்கள். வேம்பத்தூர் மடத்தைப்போன்ற சில பிராமணச் சைவ மடங்களும் உளவாயின. அக்காலத்தில் சைவசமயம் "சூத்திரர் சமயம்" ஆயிருக்கவில்லை.

---

# நால்வர்களும் கல்வெட்டுகளும்

[திருவாளர் அட்வகேட் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் எழுதியன]

(முன் ௬௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)

சோழ வம்சமானது 10-வது நூற்றாண்டில் பிரபலத்திற்கு வந்து 13-வது நூற்றாண்டு இறுதிமட்டும் செவ்வனே நிலைபெற்றி ருந்து பிறகு நிலைகுலைந்தது. அவ்வம்சத்து மன்னரெல்லாம் சைவ பக்தியில் ஆழ்ந்து பல திருப்பணிகளைச் செய்தவர்கள். இராஜ ராஜர் 1 ஆரம்பித்த திருப்பணிகளை அவருக்குப் பின் வந்த ஒவ் வொருவரும் பெருக்கிக் கொண்டு வந்தார்கள். இதன் காரண மாகப் புது ஆலயங்களும் சமயா சாரியர்களின் பிரதிஷ்டை முத லான பல சின்னங்கள் ஏற்பட்டதோடு அவர்கள் அருளின தேவாராதிகளை ஆலயங்களில் ஓதுவிக்க ஏற்பாடுகளும் நாடெங் கும் நடந்தன. இக் கைங்கரியங்களை மன்னர்களே யன்றி, சிற்றரசர்களும் அரசாங்க அதிகாரிகளும், செல்வவான்களும், வியாபாரிகளும் எடுத்தாண்டார்கள். சைவ ஆசாரியர்களின் பெயர்களையும் தம் மக்களுக்கு இடவும் ஆரம்பித்தார்கள். இவ் விதம் பல வகைகளிலும் சமயம் பெருகிற்று.

இவைகளை நிரூபிக்கும் பல கல்வெட்டுகள் கிடைத்திருக் கின்றன. அவைகளைப் பாகுபடுத்தி அதனால் தெரியும் குறிப்பு களை மாத்திரம் இங்கு எழுதுவோம்.

(a) நாயனார் பெயர்கள்.

(1) ஆளுடைய தேவர்—திருச்சி ஜில்லா வெஞ்சாமாக் கூடல் எண் 31 இது கொங்கு நாட்டு பாடல் பெற்ற தலம். சிலாசாசன இலக்கம்—149/1905. *

(2) ஆளுடைய நாயனார்

(i) தென் ஆற்காடு-72. சிதம்பரம்—நடராஜர் கோயில். 280/13.

(ii) கோயமுத்தூர் 169. பெரிய பாளையம். குரக் குத்தளி என்ற வைப்பு ஸ்தலம்—வடபாரிசார நாட்டு மன்னியூர் ஆளுடைய நாயனார் கோயில்—309/1908.

(3) ஆளுடைய பிள்ளையார்

(i) தென் ஆற்காடு 821. சித்தலிங்க மடம் வியாக்கிர பாதேசுர சுவாமி—418/09.

(ii) திருப்புத்தூர் 252, 196 (ராமநாதபுரம்) திருப்புத் தூர்—114/08

(iii) தஞ்சை—336, 316, 1156—திருவிடை மருதூர். சிகாழி—123/96.

(iv) புதுக்கோட்டை 243—குன்றக்குடி—39/09.

(4) திருஞான சம்பந்தர்

(i) தென் ஆற்காடு 61. சிதம்பரம் 269/13.

(ii) தஞ்சை 1156, 835 சிகாழி 123/26.

(iii) திருச்சி 854 காமரசவல்லி 95/14.

(iv) ராமநாதபுரம் 267 திருப்பத்தூர் 129/08.

(5) திருஞானம் பெற்ற ஆளுடைய பிள்ளையார்

(i) தஞ்சை 485 கோட்டூர் 448/12.

---

* இது முதல் குறிக்கப் பெற்றிருக்கும் எண்கள் எல்லாம் சிலா சாசனப் பரிசோதகர் வெளியிட்ட அறிக்கைகளில் காணும் எண்கள்.

(6) திருஞானம் பெற்ற பிள்ளையார்

(i) தஞ்சை, 487, 1126 கோட்டூர் 450/12.

(7) திருஞானம் பெற்ற நம்பி

(i) திருச்சி 108 இரத்னகிரி 176/14.

(8) திருஞான சம்பந்தனடிகள்

(i) தஞ்சை—இராஜராஜேசுரர் ஆலயம்.

ஆகவே, சுவாமிகளுடைய பெயர்கள் எத்தனை விதங்களாய் வழங்கப்பட்டு வந்தன என்பது இவைகளால் காணக் கிடைக்கின்றது.

(b) நாயனார் ஆலயங்களும் அவைகளுக்கு ஏற்பட்ட தானங்களும் அவற்றின் காலமும்.

(1) 1020 கி. பி. இராஜேந்திர சோழன் 7 ஆண்டு தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுக்கா, திருவிடை வாயில் ஆலயத்து முன் வாசற் சுவற்றில் விடையபுரம் என்ற விருதராஜ பயங்கர புரத்து வியாபாரிகள் சொக்கக் கூத்தர், நாச்சியார், திருஞானம் பெற்ற நம்பி இவர்கள் விக்கிரகங்களை தாபித்து கோயில் பொக்கிஷத்திலிருந்து அவைகளுக்குப் பூஜை ஏற்படுத்துவதைப்பற்றி கூறுகிறது. இவ்வாலயத்தில் தான் சம்பந்தருடைய விடைவாயில் பதிகமும் செதுக்கப் பெற்றிருக்கிறது. மேலே காண்க.

(2) கி. பி. 1033. இராஜேந்திர சோழர் 20-ம் ஆண்டு திருச்சி திருமழவாடி வைத்திநாதர் கோயிலில் "திருமன்னி வளர" என்ற மகுடத்துடன் ஆரம்பித்துள்ளது. திருமாலரங்கன் என்ற திருப்பள்ளித் தாமப் பிச்சன் என்பாரும் அவன் மனைவியும் அக்கோயிலில் தாபித்திருந்த பிள்ளையார் திருஞான சம்பந்தரடிகள், திருநாவுக்கரைய தேவர், நம்பி ஆரூரனார் இவ்விக்கிரகங்களுக்குப் பிரார்த்தனையாக நெல்தானம் அளித்ததைக் குறிக்கிறது.

(3) கி. பி. 1069 மார்ச்சு 12-தேதி வீர ராஜேந்திரர் 6-வது ஆண்டு திருக்கழுமல நாட்டுப் பிரமதேயமான திருக்கழுமலம்

ஆளுடைய பிள்ளையார் கோயிலின் தேவ கன்மிகள் திருநாரையூர் நாட்டு வேலூர் ஊரானுக்கு தம் நிலத்தைப் பரிவர்த்தனை செய்ததைக் குறிக்கிறது. 376/18.

(4) கி. பி. 1090 சீர்காழி குலோத்துங்கச் சோழன் 17-ம் ஆண்டு ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்குக் குலோத்துங்க சோழ சதுர்வேதி மங்களத்துச் சபையோர் நித்தியப்படிக்கும் நந்தவனத்திற்கும் ஆக ஒரு நிலத்தை தானம் கொடுத்தது 378/18.

(5) கி. பி. 1133 ஆலம்பாக்கம் (திருச்சி ஜில்லா) கைலாச நாத கோயில் கிழக்குச் சுவர் விக்கிரம சோழ தேவன் 15-வது ஆண்டு திருபுவன முழுதாளுடையாள் வள நாட்டுப் பொய்கை நாட்டுப் பிரமதேயமான மதுராந்தக சதுர் வேதி மங்களத்து சபையோர் ஆளுடைய பிள்ளையாருக்கு ஒரு நிலம் தானம் செய்தது. அந்த தானம் செய்த காலத்தில் அச் சபையோர் மதுராந்தக தேவர் மண்டபத்தில் சபை கூடி அவ்விதம் தானம் செய்தார்கள். மேற் கூறிய நாட்டின் பெயர் விக்கிரம சோழ தேவனுடைய இரண்டாம் அரசியான தியாக பதாகை என்ற திரிபுவன முழுதாளுடையாள் என்ற அரசியின் பெயரால் இடப்பட்டதென்று தெரிகிறது.

(6) 19-8-1135 குலோத்துங்க சோழன் II, 3-ம் ஆண்டு சீகாழி ஞானசம்பந்தர் ஆலயத்துச் சுவர், திருக்கழுமலத்துச் சபையார் ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்கு ஒரு நிலம் விற்றது 380/18.

(7) கி. பி. 1136 குலோத்துங்கன் II 4-ம் ஆண்டு சில விக்கிரகங்களை ஸ்தாபிக்கவும் சிதிலமான விக்கிரகங்களைப் புதுப்பித்துத் தாபிக்கவும் நிலத்தைத் தானம் செய்தது அதே கோயில் சுவர் 381/18.

(8) கி. பி. 27-1-1143 குலோத்துங்க சோழன் 10-ம் ஆண்டு சீகாழி ஞானசம்பந்தர் ஆலயம் வடச்சுவர் ஜயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு தலைச்சங்காட்டு சபையோர் சீகாழியில் மும்முடிச் சோழன் பேரம்பலத்தில் சபை கூடி ஆளு

(6) திருஞானம் பெற்ற பிள்ளையார்

(i) தஞ்சை, 487, 1126 கோட்டூர் 450/12.

(7) திருஞானம் பெற்ற நம்பி

(i) திருச்சி 108 இரத்னகிரி 176/14.

(8) திருஞான சம்பந்தனடிகள்

(i) தஞ்சை—இராஜராஜேசுரர் ஆலயம்.

ஆகவே, சுவாமிகளுடைய பெயர்கள் எத்தனை விதங்களாய் வழங்கப்பட்டு வந்தன என்பது இவைகளால் காணக் கிடைக்கின்றது.

(b) நாயனர் ஆலயங்களும் அவைகளுக்கு ஏற்பட்ட தானங்களும் அவற்றின் காலமும்.

(1) 1020 கி. பி. இராஜேந்திர சோழன் 7 ஆண்டு தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுக்கா, திருவிடை வாயில் ஆலயத்து முன் வாசற் சுவற்றில் விடையபுரம் என்ற விருதராஜ பயங்கர புரத்து வியாபாரிகள் சொக்கக் கூத்தர், நாச்சியார், திருஞானம் பெற்ற நம்பி இவர்கள் விக்கிரகங்களை தாபித்து கோயில் பொக்கிஷத்திலிருந்து அவைகளுக்குப் பூஜை ஏற்படுத்துவதைப்பற்றி கூறுகிறது. இவ்வாலயத்தில் தான் சம்பந்தருடைய விடைவாயில் பதிகமும் செதுக்கப் பெற்றிருக்கிறது. மேலே காண்க.

(2) கி. பி. 1033. இராஜேந்திர சோழர் 20-ம் ஆண்டு திருச்சி திருமழவாடி வைத்தினதர் கோயிலில் "திருமன்னி வளர" என்ற மகுடத்துடன் ஆரம்பித்துள்ளது. திருமாலரங்கன் என்ற திருப்பள்ளித் தாமப் பிச்சன் என்பாரும் அவன் மனைவியும் அக்கோயிலில் தாபித்திருந்த பிள்ளையார் திருஞான சம்பந்தரடிகள், திருநாவுக்கரைய தேவர், நம்பி ஆரூரனர் இவ்விக்கிரகங்களுக்குப் பிரார்த்தனையாக நெல்தானம் அளித்ததைக் குறிக்கிறது.

(3) கி. பி. 1069 மார்ச்சு 12-தேதி வீர ராஜேந்திரர் 6-வது ஆண்டு திருக்கழுமல நாட்டுப் பிரமதேயமான திருக்கழுமலம்

ஆளுடைய பிள்ளையார் கோயிலின் தேவ கன்மிகள் திருநாரையூர் நாட்டு வேலூர் ஊரானுக்கு தம் நிலத்தைப் பரிவர்த்தனை செய்ததைக் குறிக்கிறது. 376/18.

(4) கி. பி. 1090 சீர்காழி குலோத்துங்கச் சோழன் 17-ம் ஆண்டு ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்குக் குலோத்துங்க சோழ சதுர்வேதி மங்களத்துச் சபையோர் நித்தியப்படிக்கும் நந்தவனத்திற்கும் ஆக ஒரு நிலத்தை தானம் கொடுத்தது 378/18.

(5) கி. பி. 1133 ஆலம்பாக்கம் (திருச்சி ஜில்லா) கைலாசநாத கோயில் கிழக்குச் சுவர் விக்கிரம சோழ தேவன் 15-வது ஆண்டு திருபுவன முழுதாளுடையாள் வள நாட்டுப் பொய்கை நாட்டுப் பிரமதேயமான மதுராந்தக சதுர் வேதி மங்களத்து சபையோர் ஆளுடைய பிள்ளையாருக்கு ஒரு நிலம் தானம் செய்தது. அந்த தானம் செய்த காலத்தில் அச் சபையோர் மதுராந்தக தேவர் மண்டபத்தில் சபை கூடி அவ்விதம் தானம் செய்தார்கள். மேற் கூறிய நாட்டின் பெயர் விக்கிரம சோழ தேவனுடைய இரண்டாம் அரசியான தியாக பதாகை என்ற திரிபுவன முழுதாளுடையாள் என்ற அரசியின் பெயரால் இடப்பட்டதென்று தெரிகிறது.

(6) 19-8-1135 குலோத்துங்க சோழன் II, 3-ம் ஆண்டு சீகாழி ஞானசம்பந்தர் ஆலயத்துச் சுவர், திருக்கழுமலத்துச் சபையார் ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்கு ஒரு நிலம் விற்றது 380/18.

(7) கி. பி. 1136 குலோத்துங்கன் II 4-ம் ஆண்டு சில விக்கிரகங்களை ஸ்தாபிக்கவும் சிதிலமான விக்கிரகங்களைப் புதுப்பித்துத் தாபிக்கவும் நிலத்தைத் தானம் செய்தது அதே கோயில் சுவர் 381/18.

(8) கி. பி. 27-1-1143 குலோத்துங்க சோழன் 10-ம் ஆண்டு சீகாழி ஞானசம்பந்தர் ஆலயம் வடச்சுவர் ஜயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு தலைச்சங்காட்டு சபையோர் சீகாழியில் மும்முடிச் சோழன் பேரம்பலத்தில் சபை கூடி ஆளு

டைய பிள்ளையார் ஆலயத்திற்கு நித்தியப்படிக்காகப் பூமி விற்றது.

(9) கி. பி. 1148 இராஜராஜ தேவ 2-ம் ஆண்டு 219-ம் நாள் கங்கைகொண்ட சோழபுரத்து ஒரு பக்தன் ஆளுடைய பிள்ளையார் ஆலயத்து முதல் பிரகாரத்து திருப்பணிக்காகப் பணம் கொடுத்தது. சீகாழி ஞானசம்பந்தர் ஆலயத்தில் கிழக்குச் சுவர்-388/18.

(10) கி. பி. 1158 இராஜராஜ தேவர் 12-ம் ஆண்டு ஸ்ரீகாழி ஞானசம்பந்தர் ஆலயம் வடச் சுவர் வீரசோழ நல்லூர் பரிக்கிரகத்துச் சபையோர்கள் திருக்கழுமலம் ஆளுடைய பிள்ளையார் ஆலயத்தில் உள்ள மங்கையர்க்கரசி நாச்சியார் கோயிலுக்கு நித்தியப் படிக்காக நிலம் விற்றது. இதனால் சம்பந்தர் ஆலயத்தில் பாண்டியன் தேவி மங்கையர்க்கரசி தேவியாருக்கும் ஆலயம் இருந்ததாகத் தெரிகிறது.

(11) கி. பி. 1182 இராஜாதி ராஜன் 11-ம் ஆண்டு. அதே ஆலயத்து தென் சுவர் வெண்மலித் தலைவனான ஆட்கொண்ட நாயகன் நத்தப் பெருமாள் என்பவன் ஆளுடை பிள்ளையார் ஆலயத்திற்கு நித்தியப் படிக்காக நிலம் தானம் செய்தது.

(12) 22-11-1195 குலோத்துங்கச் சோழன் III - 13-ம் ஆண்டு தஞ்சை ஜில்லா ஆச்சாபுரம் சிவலோக நாயகர் ஆலயத்து மேல் சுவர் பஞ்சவன் மாதேவிக்குச் சேர்ந்த சாத்த மங்கலம் என்ற சிவசரண சேகர நல்லூரில் ஆச்சாபுரத்து ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்காக அக்கிராமத்து அபய மாணிக்கச் சேரியான் ஒருவன் பூமிவாங்கிக் கொடுத்தது.

(13) கி. பி. 1205 குலோத்துங்கச் சோழன் III-27-ம் ஆண்டு சீகாழி ஞானசம்பந்தர் ஆலயம் வடக்குச் சுவர் ராஜராஜ வளநாட்டுத் திருவாலி என்ற எதிரிலிசதுர்வேத மங்கலத்துத் திருமுல்லை வாயிலில் சில நிலங்களை பல தடவைகளில் ஆளுடைய பிள்ளையார் ஆலயத்திற்காக வாங்கினவைகளின் விபரம் 383/18 அதன் கீழ் அதே ஆலயத்திற்கு நித்தியப்படிக்காக நிலம் தானம் கொடுத்தது கண்டிருக்கிறது. வருடம் இல்லை.

385/18-ல் ஆளுடைய பிள்ளையார் கோயிலின் மண்டபத்துத் தூண்களை ஆறனூர் இணைச்சையப்பன், ஆகாரவல்லவன் என்றவர்கள் கொடுத்ததாக அத்தூண்களில் எழுதப்பட்டிருக் கிறது.

386/18-ல் ஆளுடைய பிள்ளையார் கோயிலை சிர்ணோத்தாரம் செய்யவும் நந்தவனம் ஏற்படுத்தவும் திருவாக்கூரில் நிலம் தரு மம் செய்தது கண்டிருக்கிறது. மேலும் 387/18-ல் திருவிசை கற்பிக்கும் உபாத்தியாயர்களுக்காக பூதானம் கொடுத்தது கண் டிருக்கிறது. இவைகளைப் பற்றிக் காலம் எழுதப்படவில்லை. என்றாலும் குலோத்துங்கன் III சாசனத்தின் கீழ் உள்ளதால் அந்தக் காலத்தில்தான் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

(14) கி. பி. 1206 குலோத்துங்கச் சோழன் III-28-ம் ஆண்டு திருவிடைமருதூர் மகாலிங்கச் சுவாமி ஆலயத்து முன் சுவரில் ஜெயங்கொண்ட சோழ வளநாட்டு திருவழுந்தூர் நாட் டில் குலோத்துங்கச் சோழன் பூண்டி என்கிற விக்ரம சோழன் சூரலூர் என்ற ஊரான் வாணுதி ராஜன் என்பவன் ஆளுடைய பிள்ளையாருக்குத் தானம் கொடுத்தது. இந்த சாசனம் வேறொரு விஷயத்தில் முக்கியமானது. சங்கம் தவிர்த்த குலோத்துங்கன் I 16-வது ஆண்டில் நிலத் தீர்வைக்காக நிலம் அளந்த விஷ யத்தை இது கூறுகிறது. (289/1907).

(15) கி. பி. 1219 இராஜ ராஜன் III-2-ம் ஆண்டு 45-வது நாள் ஆச்சாபுரம் ஆலயத்து முதல் பிரகாரத்து வடச் சுவர்.

இராஜராஜ வளநாட்டு வெண்ணையூர் நாட்டில் பஞ்சவன் மகாதேவி என்கிற குலோத்துங்கச் சோழ சதுர்வேதிமங்க லத்து சபையோர் ஆளுடைய பிள்ளைக்கும், சோக்கியாருக்கும் நித்தியப் படிக்காகவும் கைலாசமுடையார் ஆலயத்தில் ஆயிரத் தெண்ணூற்று வன்சந்தி என்ற திருவிழாவில் அபூர்விகளுக்கு உணவு அளிக்கவும் நிலம் தானம் செய்தது 527-18.

(16) கி. பி. 1223 மாறவர்மன் சுந்தர பாண்டியன் 7-வது ஆண்டு. குன்றக்குடி-குன்றில் வெட்டியுள்ள கற்குகையின் முன் மண்டபத்தில் கற்சிலைகளுக்கு அடியிற் செதுக்கப்பட்ட ஒரு

சிதிலமான சாசனத்தில் ஆளுடைய பிள்ளையாருக்குப் பூதானம் செய்தது காணப்படுகிறது. 39/1909.

(17) கி. பி. 1225 இராஜராஜ III-9-ம் ஆண்டு மன்னார் குடி தாலுக்கா கோட்டூர் கொழுந்தீசுவர சுவாமி கோயில் சுவர்-கொழுந்தாண்டார் ஆலயத்தில் திருஞானம் பெற்ற பிள்ளையார் கோயிலுக்கு நாகமங்கலமுடையான் அம்பலவன் கோயில் கொண்டான் என்பவன் பணம் உதவியதும், ஒரு பிராமண ஸ்திரீ நிலம் தானம் செய்ததும் கூறுகிறது. 450/1912.

(18) கி. பி. 1234 இராஜராஜன் III 18-ம் ஆண்டு அதே கோயிலில் கல்வெட்டு கொழுந்தாண்டார் ஆலயத்தில் தாபிக்கப் பெற்ற திருஞானம்பெற்ற ஆளுடைய பிள்ளையார் சந்நிதிக்குப் பூதானம் செய்தது (485/12).

(19) கி. பி. 1240 இராஜராஜன் III-14-ம் ஆண்டு 107-ம் நாள் சிதம்பரம் கோயில் முதல் பிரகாரம் வடச் சுவர் திருநீற்றுச் சோழ மங்கலத்து ஒரு நிலத்தை காளிங்கராயன் என்பான் ஆளுடைய நாயனார் ஆலயத்திற்காக 500 பலாப்பழம், 5000 மாம்பழம், 5000 வாழைப்பழம் தருவதற்காகத் தானம் செய்தது. அவ்வூர் சபையார் அந்நிலத்து வரியை நீக்கி ஊரார் அப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமாறு ஒத்துக்கொண்டனர். அங்கு திருமந்திர ஓலை நெருடைச் சோழ மூவேந்த வேளான் என்பவன் 280/13.

(20) கி. பி. 1267=14-2-1267 இராஜேந்திர சோழன் III-28-ம் ஆண்டு பட்டுக்கோட்டை தாலூக்கா கோவிலூர் ஆலயம் மும்முடிச் சோழபுரத்து வியாபாரி தாபித்த திருஞானம் பெற்ற பிள்ளையார் நித்தியப்படிக்காக பூதானம்-161/1908

(21) கி. பி. 1270 மாறவர்மன் வீரபாண்டியன் 8-ம் ஆண்டு 57-ம் நாள் சிதம்பரம் பெரிய கோயிலில் கல்வெட்டு விக்கிரம பாண்டிய காங்கேயராயன் என்பவனுடைய உத்தரவுப்படி சோழிய சாலியர் தனிமையில் குடியேற இடம் கொடுத்து அவ்வாறு குடியேறிய ஊருக்கு "தெரியவர நின்ற பெருமாள்புரம்" என்ற பெயரிடப்பட்டது. அதற்காக அச்சாலியர்கள் சிவ

காம சுந்தரிக்கு நான்கு புதுச்சிலைகள் "திருப்புதியது" என்ற விழா நாளில் கொடுக்க வேணுமென்றும், திருஞானசம்பந்தருக்கு ஐந்து சிற்றுடைகள் கொடுக்கவேணுமென்றும் நிபந்தனை செய்யப்பட்டது. இவ்வரசனுக்கு "இராசாக்கள் தம்பிரான்" என்ற பெயர் இருந்தது. (269/1913)

(22) கி. பி. 1283—6-3.1283 ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் II-13-ம் ஆண்டு தென் ஆற்காடு சித்தலிங்க மடம் கோப்பெருஞ் சிங்கதேவன் காலத்தில் "அறிந்தவன் பல்லவராயன்" என்பவன் திருக்கோயிலுக்கு அளித்திருந்த 2000 காசுகளை இவ்வூர் ஆலயத்து சிவப் பிராமணர்கள் தம்மிடம்வைத்துக்கொண்டு அதில் வரக்கூடிய வட்டியை ஆளுடைய பிள்ளையார் சந்நிதிக்கு நித்தியபடிக்குக் கொடுப்பதாக ஒப்பந்தம் செய்தது (418/1.909).

(23) கி. பி. 1296 விக்கிரம பாண்டியன் 13-ம் ஆண்டு திருப்பத்தூர் (இராமநாதபுரம் ஜில்லா) ஆலயத்து மடைப் பள்ளிச் சுவர்.

திருப்பத்தூர் கைலாசமுடையார் ஆலயத்தில் ஆளுடைய பிள்ளையார் சந்நிதிக்கு நித்தியப் படிக்குப் பணம் தானம் செய்தது. 114/1908.

இனி காலம் நிர்ணயிக்கக் கூடாதவை இரண்டு உண்டு.

(24) கோனேரின்மை கொண்டான் 21-ம் ஆண்டு திருவிடை மருதூர் ஆலயத்துச் சுவர் சாசனம் ஆளுடைய பிள்ளையாருக்கும் (சம்பந்தர்) ஆளுடைய நம்பிக்கும் (சுந்தரர்) நித்திய பூஜைக்கு நில தானம் செய்தது. 309/06

(25) கோனேரின்மை கொண்டான் 6-வது ஆண்டு 193-வது நாள். சீகாழி பிரமபுரேசுவரர் ஆலயத்துச் சுவர்.

உய்யக் கொண்டார் வளநாட்டு மாத்தூர் நாட்டில், மாத்தூர்கிராமத்து ஒரு நிலத்தை அரசனுடைய உத்தியோகஸ்தரில் ஒருவனான உய்யவந்தான் இராசவிச்சாதிரி என்பவனால் திருக்கோயிலில் ஸ்தாபித்த ஆளுடைய பிள்ளையார் சந்நிதிக்குப் பூஜைக்காகத் தானம் செய்தது 361/18.

(26) 14-9-1341 இராஜ நாராயணன் சாம்பவராயன் 4-வது ஆண்டு.

திருவாமாத்தூர் ஆலயம் சுவர் மூஞ்சி நதியின் வடகரையில் தாவனிப் பாக்கம் என்ற ஊரில் 4 வேலி கொண்ட ஒரு நிலத்தை சீகாழி சம்பந்தப் பெருமாள் நாயனுர் சந்நிதிக்கு பட்ட விருத்திக்காகவும் கோயில் திருப்பணிக்காகவும் வரியின்றிப் பூதானம் செய்தது 48/1922.

மேலே எடுத்துக்காட்டிய கல்வெட்டுகளால் இராஜராஜ சோழருக்குப் பிறகு வந்த மன்னர்கள் வரிசையாக சைவாசாரியர்களுக்குப் பலவிதத்திலும் சமய முன்னேற்றமாகத் திருப்பணி செய்து வந்தார்கள் என்பது மிகத் தெளிவு. கி. பி. 1020 முதல் 1296 வரை, மூன்று நூற்றுண்டுகள் வரை, இப்பெரும் முயற்சியில் மன்னர்கள் சலிப்பின்றி ஈடுபட்டு வந்தார்கள் என்பது காலக் கிரமமாக எடுத்துக் காட்டிய கல்வெட்டுகளால் தெரியவரும். எந்தெந்த அரசர் எதுகாறும் சம்பந்தப் பெருமானுக்கு ஈடுபட்டார் என்பதும் வெளியாகிறது.

| அரசர்கள் | கல்சாசன எண் | காலம் |
|---|---|---|
| இராஜேந்திரன் | 2 | 1013—1045 |
| வீர ராஜேந்திரன் | 1 | 1062—1070 |
| குலோத்துங்கன் I | 1 | 1073—1118 |
| விக்கிரம சோழன் | 1 | 1118—1135 |
| குலோத்துங்கன் II | 2 | 1123—1146 |
| ராஜராஜன் II | 2 | 1146—1178 |
| இராஜாதி ராஜன் II | 1 | 1171—1186 |
| குலோத்துங்கன் III | 6 | 1178—1216 |
| இராஜராஜன் III | 4 | 1216—1248 |
| சுந்தர பாண்டியன் I | 1 | 1216—1235 |
| ராஜேந்திர சோழன் III | 1 | 1245—1267 |
| வீரபாண்டியன் | 1 | 1262— |
| சுந்தர பாண்டியன் II | 1 | 1270— |
| விக்கிரம பாண்டியன் | 1 | 1283— |
| கோனேரின்மை கொண்டான் (பட்டம்) | 2 | |
| இராஜ நாராயணன் | 1 | 1337— |

ஆகவே, சோழ வம்சத்தார் எல்லாரும் பாண்டியரில் பின் வம்சத்தார் சிலரும், சாம்பவராயன் ஒருவனும் இப்பெரும் திருப்பணியில் ஈடுபட்டிருந்தார்கள் என அறியலாம்.

மேலும் சம்பந்தப் பெருமான் அவதார ஸ்தலமாகிய சீகாழியில் ஒரு தனிச் சந்நிதி ஏற்பட்டும் அதற்காக 11 தான சாசனங்களும் அவைகளைக் குறிக்கும் கல்வெட்டுகளும் ஏற்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. மற்றும் சம்பந்தர் முத்தியடைந்த தானமாகிய ஆச்சாபுரம் என்ற நல்லூர்ப் பெருமணத்தில் ஒரு தனி ஆலயமும் அதற்கு 2 கல்வெட்டுச் சாசனங்களும் ஏற்பட்டது அறியத்தக்கது. ஆகவே, அவ்தார முத்தித் தலங்கள் அந்நாளிலேயே மிகவும் முத்தி வாய்ந்த இடங்களாகக் கொண்டாடப் பெற்றும் போற்றப் பெற்றும் வந்தனவென்பது அறியக் கிடக்கின்றது. இவையேயன்றி சிதம்பரம் பெரிய கோயிலில் இரண்டு சாசனங்கள் உள்ளது மிக அருமை, திருவிடைமருதூர், கோட்டூர், திருப்பத்தூர், குன்றக்குடி முதலான தலங்களிலும் சந்நிதிகள் ஏற்பட்டு சோழர் காலத்திலேயே நம் நாயனர் இடத்து அன்பு முதிர்ந்து இருந்தது போற்றத் தக்கது. இன்னமும் காணாத சாசனங்கள் பலவும் கண்டு பிடித்தால் சமயத்தின் வளர்ச்சி எவ்வாறு படர்ந்து வந்தது என்பதை நாம் எளிதில் அறியலாகும்.

அரசர்களே யன்றி, அரச உத்தியோகஸ்தர்களும், வியாபாரிகளும் நாயனரிடத்து ஈடுபட்டுத் தானங்கள் செய்ததும், கிராம சபையோர்கள் தாமாகத் தானம் செய்ததும், பிறரைக் கொண்டு தானம் செய்வித்தும், தானம் செய்வதற்காக வரி நீக்கல், வரி இலகுவாக்குதல் முதலான சாதனங்களைச் செய்தும் சிவபத்தியைப் பெருக்கி யிருக்கிறார்கள்.

சோழ பாண்டிய அரசாட்சிகளுக்குப் பிந்தி வந்த விஜய நகரத்தார், நாயக்கன்மார் ஆட்சிகளில் சமயாசாரிகளின் பத்தி குறைந்துவிட்டதாகத் தெரிகிறது. அவர்கள் காலத்தில் ஆயிரக் கணக்கான கல்வெட்டுக்கள் இருந்தும் சமயாச்சாரிகளின் சாசனங்கள் இல்லாததைக்கொண்டு, அம்மன்னர்கள் இச்சமய அபிவிருத்தியில் ஈடுபட்டவர்கள் அல்லர் எனக் குறிப்பிடலாம்.

## (C) நாயனுர் மடங்கள்

அவைகள் ஏற்பட்ட காலம், தானம் முதலியவைகள்:

1. திருச்சி ஜில்லா உடையார் பாளையம் தாலுக்கா, காமரசவல்லியில் கார்க்கோடேசுரர் ஆலயத்தில் சண்டிகேசுரர் கோயில் சுவர் சாசனம்.

ராஜேந்திர சோழதேவன் 12-வது ஆண்டு—1075 கி. பி.

ஜயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக் காட்டுக் கோட்டம் வூரானும் ஆலயத்து பக்தனுமான குன்றன்கிழான் திருநாவுக்கரசு தேவனென்பவன் திருஞானசம்பந்தன் திருமடத்துக்குப் பூதானம் செய்தது. இதனுல் அவ்வூரில் திருஞானசம்பந்தர் மடம் இருந்ததும் சைவ பக்தர்கள் சமயாச்சாரியார் பெயர்களை தாம் வைத்துக்கொள்ளும் வழக்கம் கொண்டதும் பெறப்படும்.

2. தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலூக்கா திருவீழிமிழலை வீழிநாத சுவாமி ஆலயத்து மேல் சுவர். இராஜேந்திர சோழ தேவன் 23-ம் ஆண்டு—1036 கி. பி.

குலோத்துங்க சோழவளநாட்டு திருநாறையூர் நாட்டு இராஜராஜபுரத்தில் திருச்சத்தி முற்றமுடைய நாயனுர், திருக்காமகோட்டமுடைய பெரிய நாச்சியார் சந்நிதிகளுக்குக் கிழக்கினுள்ள திருஞானசம்பந்தத் திருமடத்து திருச்சத்தி முற்றத்து முதலியாரின் சீடரான ஞானசிவம் என்பவர், திருவீழிமிழலை அழகிய சிற்றம்பலமுடையார் மடத்தில் ஒரு மடத்திற்குப் பூதானம் செய்தது. இதனுல் திருச்சத்தி முற்றம் என்ற பழைய ஊரில் ஒரு மடம் நமது நாயனுர் பேரில் இருந்தது என விளங்கும். (392/08).

3. திருச்சி ஜில்லா, காவிரிக்கு வடபால் திருப்பராய்த்துறை ஆதிமூல நாயனுர் ஆலயத்தில் நித்திய கல்யாணி சந்நிதியில் கிழச்சுவர் இராஜராஜதேவன் 21-ம் ஆண்டு—1167. கி. பி. உத்தமச் சீலி சதுர்வேலி மங்கலத்து, கருமான்கரை என்ற பரகேசரி மங்கலத்தில் உள்ள ஒரு நிலத்தை திருவானைக்காவில்

உள்ள திருஞானசம்பந்தன் திருமடத்தில் உள்ள மாகேசுவர்களுக்கு உணவளிக்கப் பூதானம் செய்தல். இதனால் திருவானைக்காவில் திருஞானசம்பந்தர் மடம் ஒன்று இருந்தது எனப் பெற்றோம்.

4. தஞ்சை ஜில்லா குறுக்கை வீரட்டானேசுவரர் ஆலயத்து சண்டிகேசுரர் சந்நிதியின் சுவர்:

குலோத்துங்கச் சோழன் III 38-ம் ஆண்டு கி. பி. 1216 (2-1-1216) ஜயங்கொண்ட சோழமண்டலத்து மணவிற் கோட்டம் பழையனூர் நாட்டு விடையூர் நென்மலி கிழான் திருவேகம்பமுடையான் கண்டையாபரணன் என்பவன் திருஞான சம்பந்தர் குகைக்காக வரி இல்லாமல் நிலம் வாங்கப்பணம் உதவியும் அதன் வட்டியிலிருந்து மடத்துச் செலவுகளைச் செய்யவும் தானம். இங்கே மடத்திற்குக் குகை என்ற பெயர் குறித்திருப்பது நோக்கத் தக்கது (233/17).

5. இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் ஆலயத்து மேல்சுவர்: மாறவர்மன் சுந்தரபாண்டிய I, 21-ம் ஆண்டு—கி. பி. 1237. தலையூர் நாட்டு செம்பொன் மாரிக்குச் சேர்ந்த மலைய மாணிக்கம் திருக்கானப் பேருடையான் என்பவன் திருப்புத்தூர் திருஞான சம்பந்த மடத்தில் வசிக்கும் ஆசாரியருள் ஒருவரான ஸ்ரீ கண்ட சிவனுருக்கு பூமி விற்றது. (129/08)

6. செங்கற்பட்டு ஜில்லா (சென்னைக் கடுத்த) திருவொற்றியூர் கோபுரத்து வலது புறச்சுவர்: விஜய கண்ட கோபால தேவர். 15-ம் ஆண்டு (2-9-1264) திருநாவலூர் வியாபாரி ஒருவர் காட்டுப் பாக்கத்துப் படுவூர் நாடாழ்வான் என்பவனிடம் விலைக்கு வாங்கிய ஒரு நிலத்தை ஜயங்கொண்ட சோழமண்டலம் புழற்கோட்டம் என்ற விக்கிரம சோழவள நாட்டுத் திருவொற்றியூரில் இருந்த திருஞான சம்பந்த மடத்து மாகேசுவர்களுக்கு உணவளிக்கப் பூதானம் செய்தது. (238/1912)

7. மதுரை சோழவந்தானுக் கடுத்த தென்கரை மூலநாதர் ஆலயத்துச் சுவர்—மாறவர்மன் குலசேகரன் I. 14-ம் ஆண்டு, (21-9-1281) ஆலயத்தில் திருஞான சம்பந்தன் திரு

மடம் இருந்ததாகக் கூறுகிறது. இம்மடத்தின் தலைவர்கள் பாண்டரங்கவாணர் சந்தானத்து முதலியார்கள். அவர்களில் ஒருவர் பெயர் குலசேகரத்து ஆட்கொண்டானென உமையொரு பாகர் என்பது. (126/1910)

8. சீகாழி பிரமபுரீசுவரர் ஆலயத்து வடச்சுவர். 1313 சகம் அதாவது (29-12-1391). அவ்வாலயத்தில் திருஞான சம்பந்தன் மடத்திற்குப் பூதானம் செய்தது.

9. திருவேடகம் பத்திரிகா பரமேசுவரர் ஆலயம். கோனேரின்மை கொண்டான் காலம். திருஞான சம்பந்தன் மடத்து 20 தபசிகளுக்கு உணவளிக்கப் பூதானம் செய்தது. 681/1905.

ஆகவே இக்கல்வெட்டுகளினால் 1025 முதல் கொண்டே சம்பந்தருடைய மடங்கள் தாபிக்கப் பெற்று குருபீடங்களாக விளங்கின என்று தெரிகிறது. அப்பீடங்களிலே ஞானசிவம், ஸ்ரீகண்ட சிவம், உமையொரு பாகர் முதலான ஆசாரியர்கள் விளங்கினார்கள் என்றும் அம்மடங்களுக்குச் சிவபக்தர்கள் பூதானங்கள் செய்து வந்தார்கள் என்றும் அறியக் கிடக்கின்றன. மேலும் சம்பந்தர் மடங்கள்,

(1) காமரசவல்லி
(2) திருச்சத்தி முற்றம்
(3) திருவானைக்கா
(4) குறுக்கை வீரட்டானம்
(5) திருப்புத்தூர்
(6) திருவொற்றியூர்
(7) தென்கரை
(8) சீகாழி

ஆகிய இந்த எட்டு இடங்களில் இருந்தன. தற்போது மதுரையில் ஞானசம்பந்தர் மடம் விளங்கி யிருப்பதை நாம் அறிவோம். இதைப் போல் முற்காலத்தில் பல இருந்தன என்பது இவைகளால் தெரிகிறது.

(d) நாயனார் பெயர்களை மக்கள் இட்டுக் கோள்வது.

1. திருஞான சம்பந்த நல்லூர். கி. பி. 1191 குலோத்துங்கச் சோழர் III, 14-ம் ஆண்டு தென் ஆற்காடு கூகையூர் ஸ்வரணபுரீசுவரர் கோயில் சாசனம். கூகையூர் பொன்பரப்

பின ஈசுவரமுடைய நாயனர் ஆலயத்தில் பங்குனித் திருவிழா நடத்தும் பொருட்டு பொன்பரப்பி நல்லூர் கிராமத்தையும், வடகரை இராஜ சிங்கவள நாட்டு உகளூர் கூற்றம் காற்பூண்டி என்கிற திருஞான சம்பந்த நல்லூர் என்ற கிராமத்தையும் வரி யின்றிக் கொடுத்தது. (94/18)

2. திருஞான சம்பந்த வேளான் கி. பி. 1201 குலோத் துங்கன் III 24-ம் ஆண்டு. தென் ஆற்காடு திருக்கோயிலூர் திருவிக்கிரமப் பெருமாள் ஆலயத்துச் சாசனம்.

காண்டையூர் ஊராளி புகலூர்த்தேவன் என்கிற திருஞான சம்பந்த வேளான் என்பவன் இராஜராஜ வளநாட்டு மலாடு குறுக்கைக் கூற்றத்தில் திருக்கோவலூர் என்ற மதுராந்தக சதுர்வேதி மங்கலத்து திருவிடைக்கழி எம்பெருமானுக்கு நித் தியப்படிக்குப் பூதானம் செய்தது. (344/21)

விஷ்ணு கோயிலுக்கு சைவப்பேர்கொண்ட ஒருவர் தானம் செய்ததை நோக்குமிடத்து அக்காலத்திலிருந்த சமரச பாவ னையைக் காட்டுகிறது.

3. சவனர் ஆளுடைய பிள்ளை. கி. பி. 1237. இராஜராஜ தேவ III 21-ம் ஆண்டு, நெல்லூர் ஜில்லா வெங்கடகிரி தாலூக் கா சாமலபல்லி கிராமம் விஷ்ணு கோயில் சாசனம்.

நாகப்புடோல் என்ற ஸ்ரீ இராஜ மல்ல சதுர்வேதி மங்க லத்து யாதவப் பெருமாளுக்கு மூன்று அந்தி விளக்கு வைக்க ஒரு மாடையை சவனர் ஆளுடைய பிள்ளை என்பவன் தானம் செய்தது. (801/Nellore)

4. திருஞான்சம்பந்த நம்பி: 13-4-1253 ஹாய்சல வீர சோமேஸ்வரன், 21-ம் ஆண்டு—திருச்சி ஜில்லா, இரத்னகிரி மலைமீதுள்ள ஹரான சேகரி ஆலயத்து வடசுவர்.

சிவபாத சேகர புரத்து வியாபாரி திருஞான சம்பந்த நம்பி என்பவன் திருக்காம கோட்டம் உடைய பெரிய நாச்சியாருக்குப் பூஜைக்காக 20,000 காசு தானம் செய்தது—176/1914

5. திருஞான சம்பந்த நாழி (அரசன் பெயர் அழிந்து

விட்டது). 16-ம்ஆண்டு. சைதாப் பேட்டை தாலூக்கா பாடி அல்லது திருவலிதாயம்—இக்கல் வெட்டில்—திருஞான சம்பந்த நாழி என்ற தானிய முகத்தலளவையைக் கூறியிருக்கிறது. (214/1910)

6. சோக்க ஞான சம்பந்தன், தேதியில்லை. தென் ஆற்காடு திருவாமாத்தூர் அபிராமீஸ்வரர் ஆலயம் சோக்க ஞான சம்பந்தர் மகன் செய்யத் திருமேனி மகன் திருக்காளத்தி உடையார் என்பவன் மண்டபங்கள் கட்டினது. (30/22)

இக் கல்வெட்டுகளினல் நமது நாயனர் திருப்பெயரை மக்கள் மாத்திரம் அல்லாது ஊருக்கும் அளவைக்கும் இட்டிருப்பது வியக்கத்தக்கது. அப்பூதியடிகள், திருநாவுக்கரசர் பெயரை தம் இல்லத்துச் சகல பொருள்களுக்கும், அளவைகள், நிறைகோல் முதலியவற்றிற்கும் இட்டாற்போல் இங்கும் நடைபெறுவது காண்க.

7. நாயனர் பெயர்கொண்ட ஈசுவரன். திருஞான சம்பந்தீசுரம் உடையார் கி. பி. 1244 இராஜராஜதேவ III - 28-ம் ஆண்டு—தஞ்சை திருப்பாலாற்றுறை - திருப்பாலாற்றுறை உடையார் ஆலயத்தில் கிழப்பிரகாரத்தில் நீலகங்கரையன் என்பவன் தாபித்த திருஞான சம்பந்தீசுர முடையார் சந்நிதிக்கு திருச்சிற்றம்பல நல்லூர் இராஜகம்பீர நல்லூர் என்ற ஊர்களில் நிலங்களைத் தானம் செய்தது. 437/1912.

ஆகவே நாயனர் பெயரால் தெய்வங்களும் தாபிக்கப் பெறுதல் காண்க. சோழர்கள் தங்கள் பெயரால் ஆலயமும் தெய்வமும் தாபிப்பதுபோல இதுவும் நடைபெற்றிருக்கிறது.

### (e) நாயனர் பதிகங்களை ஓதுவித்தல்

சம்பந்தருடைய திருப்பதிகங்களை ஆலயங்களில் ஓதுதற்கு இராஜராஜர் கட்டளையிட்டதையும் திருவிடைவாயிலில் சம்பந்தர் திருப்பதிகத்தை 10-ம் நூற்றுண்டிலேயே பொறிக்கப்பட்டிருத்தலையும் முன்னமே கூறியுள்ளோம். இனி அக்காலத்திற்குப் பிறகு நாயனர் பதிகங்களை ஓதுதற்கு செய்யப்பெற்ற சாசனங்களை இங்குக் குறிப்போம்.—

1. கி. பி. 1073—அதிராஜேந்திரன் - 3-ம்ஆண்டு கும்ப கோணம் தாலூக்கா, குகூர் ஆம்ரவனேசுவரர் ஆலயம் அரசன் சௌக்கியமடைவதற்காக மாம்பழமுடைய மகாதேவர் சந்நிதியில் திருப்பதியம் ஓதுதற்கு ஒருவர் பூதானம் செய்தது. 280/17

2. கி. பி. 1075—குலோத்துங்கன் I 2-ம் ஆண்டு வேதாரணியம் கோயிலில் திருப்பதியம் பாட உரிமை அளித்தது—422/04.

3. கி. பி. 1225—மாறவர்மன் சுந்தரபாண்டியன் I 9-வது ஆண்டு திருநெல்வேலி கல்லிடைக்குறிச்சி நாகேசுவரமுடையார் ஆலயம் திருமுறை ஓதுதற்காகத் தானம் செய்தது. (92/07)

4. 23—7—1243. இராஜராஜ III. 28-ம் ஆண்டு. தஞ்சை திருக்காறவாசல் (திருக்காறுயில்) அருமொழிதேவ வளநாட்டுப் புலியூர் நாட்டு மூலூர் கிராமத்தார், திருக்காறுயில் ஆலயத்துத் திருக்கைக் கொட்டியில் திருமுறை படிக்கும் ஓதுவார்களுக்கு உணவு அளிக்கப் பூதானம் செய்தது.

5. கி. பி. 1285. ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் 9-ம் ஆண்டு. தஞ்சை திருவீழிமிழலை வீழநாத சுவாமி ஆலயம்-நரசிங்கதேவன் காலத்தில் கட்டின திருக்கைக் கொட்டியில் திருமுறை ஓதுவதன்பொருட்டு பூதானம் செய்தது.

மேற்கூறிய கல்வெட்டுகளினாலே ஆலயங்களில் திருப்பதிகம், திருமுறை இவைகள் ஓதுவதற்காக ஏற்பாடுகள் செய்து வந்தது 10-ம் நூற்றாண்டு முதல் 13-ம் நூற்றாண்டு வரை அநுசரணையில் இருந்து வந்ததாகத் தெரிகிறது. ஏனைய சமயாசாரியார்களைப் போல் பெயர் குறிப்பிடாமற் போனபோதிலும் பொதுவாகத் திருமுறை திருப்பதிகம் என்றிருந்தாலும் சம்பந்தர் பதிகங்களை முதலில் சொல்லுவது சைவ சம்பிரதாய மாதலால் அவ்வாசிரியருடையதாகக் கொள்ளப்பட்டு இங்கு எடுத்தாளப் பட்டது. இதனை மற்ற நாயன்மார் பதிகங்களுக்கும் கொள்க.

பதிகங்கள், திருமுறைகள் தவிர ஏனைய சரித விஷயங்கள் கல்வெட்டுகளில் கிடைக்காதது நம் துர்ப்பாக்கியம் எனலாம். ஆச்சாபுரம் ஆலயத்து 527/18 என்று மேலே குறித்திருக்கும்

சாசனத்தில் ஆளுடைய பிள்ளையாருடன் சோக்கியார் என்ற பெண்மணியின் பெயர் சேர்த்திருப்பதை நோக்கி, சாசன ஆராய்ச்சியாளர் "பெரிய புராணத்தில் சம்பந்தர் மணம்செய்து கொண்டு தம்மோடு ஜோதியிற் கலந்துகொண்ட மணமகளான நம்பியாண்டார் நம்பி புதல்வியின் பெயர் காணுமல் இருந்த போதிலும் இந்த சாசனத்தைக் கொண்டு அப்பெண்மணியின் பெயர் சோக்கியார் என ஊகிக்கலாம்" என்கிருர். இச்செய்தி ஆராயத்தக்கது.

மேற் சொல்லிய கல்வெட்டுகளின் ஆதாரங்களேக்கொண்டு நாம் முடிவாக ஒன்றைக் கூற முடியும். திருஞான சம்பந்த சுவாமிகள் 950 கி. பி. முதல்கொண்டு மூன்று நூற்ருண்டுகளாக நாடு முழுதும் ஆலயங்களில் பிரதிஷ்டை செய்து பூஜிக்கத் தக்க வைபவம் பெற்றவராகக் கொண்டாடப் பெற்றதும், அவர் பெயரைப் பின்பற்றி பிற பெயர்கள் இடப்பெற்றதும், அவர் பெயரால் மடங்கள் நிர்மாணிக்கப் பெற்றதும், அவர் அருளிய பதிகங்கள் ஆலயங்களில் பாடப்பெற்றதும், முதலான காரணங்களேக் கொண்டு அவர் மகிமை நாடெங்கும் எம்மட்டும் பரவிக் கிடந்ததென்றும் அம்மட்டும் ஒருவருடைய மகிமை பரவுதற்குக் குறைந்தது மூன்று நூற்ருண்டுகளாவது அவசியம் என்றும் அதினுலேயே அவர் 7-ம் நூற்ருண்டில் அவதரித்திருக்க வேண்டும் என்றும் ஊகிக்க இடம் இருப்பதை நாம் அறியக் கூடும்.

---

# கம்பன் கவிச்சுவை யமைப்பு

(௩௧௬-ம் பக்கத் தொடர்ச்சி)

[தோரமங்கலம். ஆசிரியர் அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள்]

முற்கூறியவாறு உவந்து கூறும் சொற்கள் அவகுறியாகத் தீமைப் பொருள் பயந்தாற்போலவே கடிந்து கூறும் சொற்களும் உவப்பை உணர்த்தும் நற்பொருள் பயக்குமாறும் அமைந்து விளங்கும்படி நமது கவியரசர் தம் வன்மையைத

தெரிவிக்கின்றார். அவற்றுள் ஒன்றை மாதிரிக்காகக் காட்டுவோம்.

ஆரண்ய காண்டத்தில் விராதன் வதைப்படலத்தில், விராதன் சீதையைத் தாவி எடுத்துக்கொண்டு வானிற் பாய்கின்றான். இராமஇலக்குமணர்கள் அவனைத் தடுத்துப் போர்புரிய முனைந்து நிற்க, அதனைக் கண்ணுற்ற அவ்வரக்கன் அவர்களை நோக்கிச் சில கூறுகின்றான்: என வருமிடத்தில் நம் கம்பநாடர்,

> ஆதிநான்முகன் வரத்தின்எனதாவி யகலேன்
> எதியாவதுவு மின்றியுலகி யாவுமிகலிற்
> சாதியாதனவுமில்லை யுயிர்தக் தனனடா
> போதிர்மாதி வளையுந்தியினி தென்றுபுகல.

என்னும் அருமையும் பெருமையுமிக்க ஓர் செய்யுளை வழங்கியுள்ளார். (தனது ஆற்றல் மிகுதியை யுணராது இச்சிறுவர்கள் எதிர்த்து வீணில் உயிரிழக்கப் போகின்றார்களே என்னும் இரக்கத்தால் விராதன், தனது வரத்தின் பலத்தையும் ஆண்மைச் செய்கைகளையும், தன்னுடன் போர் செய்வதால் நேரும் அபாயங்களையும் இழப்பையும் விளக்கி அவர்கள் உய்ந்துபோவதோர் நல்வழியை உணர்த்துவானாயினன்.) "அட! ஆயுதமேந்தியவனே! என்னை யாரென்று நினைத்தனை! யானோ நான்முகனாகிய பிரமன் தந்த வரப்பிரசாதத்தால் இவ்வுடலினின்றும் ஆவி நீங்கப்பெறேன். நான் உன்னை நோக்கும்போதே எனக்கஞ்சி உன்னுடலில் உயிர் உளதோ இலதோ என்னும் ஐயமுண்டாம்படித் தோன்றுகின்றனையே! அந்தோ! அளியை! நீ அஞ்சற்க, மின்னற் கொடிபோல்வாளாகிய இவளை இங்கு யான் பெறக் கொணர்ந்துதவிய நன்றியின் பொருட்டு உன் உயிரை உனக்கு நல்குகின்றேன். இவளை என்னிடமேவிடுத்து மகிழ்வுடனே திரும்புங்கள். இல்லையெனின், இம்மாதை இழப்பதோடு நில்லாது இவள்போன்ற வேறொருத்தியை மணந்து இன்னும் சில நாள் இவ்வுலகில் வாழ்ந்து இன்பம் நுகரும் உலகசுகத்தையும் ஒருங்கே இழந்து அவிமே இறக்க நேரும்." என்று சொல்ல, என்றொரு பொருளும், மற்ற., ஏது + யாவதுவு

மின்றி + உலகு யாவும் + இகலில் + சாதியாதனவுமில்லை, எனக் கண்ணழித்து, என் ஆண்மையை யறியீர்: கூறக்கேண்மின்! யான் பிறர்க்கு இன்னல் தருவதற்கு ஓர் காரணம் வேண்டு மென்பதில்லை. அவர்களுடைய தீவினை வயத்தால் என் எண்ணம் அவர்களை வருத்தவேண்டும் என்று தூண்டுமாயின் அவ் வழியே நடந்து அவர்களைத் துன்புறுத்துவேன். என்மேல் இவ்வுலகிலுள்ள எல்லா வீரர்களும் படையெடுத்து வரினும் என் தோள்வலியால் எண்ணிய வண்ணம் சாதித்தே தீர்ப்பேன். யான் சாதியாத பெருங் காரியங்கள் யாதுமில்லை. என்று வேறோர் பொருளுங் கூறும்படி யமைந்துள்ளது இக்கவி.

இங்ஙனம் கடிந்து கூறும் விராதன், இப்பிறவியில் அரக்கனயினும் முற்பிறப்பில் ஓர் இயக்கனயிருந்து சாபம் காரணமாக வந்தவனுதலின் அவன் கூறும் இரவலில் நன்மை தொடர்ந்து குறிப்புப் பொருளும் தரவேண்டுமென்று கவிவேந்தர் கருதினுராக, அங்ஙனமும் பொருள் தோன்றும்வண்ணம் இச்செய்யுள் எழுந்தது "உலக முதல்வனுய் நின்ற ஆதிபகவனே! அடியேன் தங்கள் முன்பு வந்ததால் இனி என் உயிர் பிறவிக்கடலில் அகன்று துன்பமுறுது திண்ணமே. யானே ஒரு காரணமுமின்றி உலக மக்களைப் பகைத்துச் செய்யாத தீங்குகள் இல. (தீங்குகள் எனக் குறிக்கப்பட்ட அவ்வளவும் செய்த பாவியேன்) அத்தகையேன் எனதாவியைத் தங்கள் உடைமைப் பொருளாகத் தந்து சரண்புகுந்தேன். இனி நீங்கள் இம்மாதை இனிது நடாத்திக்கொண்டு சுகமே போவீர்களாக. நானும் என் சாபம் நீங்கி மகிழ்வுடனே பரமபத நாட்டிற்குச் செல்கின்றேன்." என்று சொல்ல, என்னும் பொருளும் இதில் அமைந்திருப்பதை அறிக. காண்மினே! கம்பர் வாக்கின் நயம்! வெறுப்பக் கூறும் சொற்கள் உவப்பைத் தோற்றவும், உவப்பக் கூறுவன தீமை சுட்டவும் வேண்டியவாறு செய்யுட்கள் எளிதின் அமைய அவர்க்கு வாய்த்த நல்லூழ் பிறிதொருவர்க்குத் தவம் கிடப்பினும் வாயாதாம்.

பிறர் கூறும் நியாயமான கேள்விகளுக்குத் தக்க விடை

கூறுதற்குத் தமது தவறுபட்ட போலிக் காரணங்கள் ஒவ்வாதாயினும், சொல்லுந் திறமையால் பொருந்துமாறு மெய்ப்பித்துச் சாதிக்கும் ஆற்றல் சிலரிடம் காணபபடுகின்றதன்றோ? அதுபற்றியே, "பொய்யுடை யொருவன் சொல்வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே" என ஆன்றோரும் அறைவாராயினர். இங்ஙனம் போலிக் காரணங்களை மெய்யாக நிரூபித்துக் கேட்போரை மயக்கவல்ல கதா பாத்திரங்களைக் கம்பர் நமக்குக்காட்டுகின்றார். அத்தகையார் பெண்ணொருத்தியும் ஆண் ஒருவருமாகத் தோன்றுகின்றனர்.

அயோத்தியா காண்டத்தில் மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் :—இராம பிரானுக்கு முடிசூட்டப் பெறும் செய்தியைத் தெரிந்த கூனி யென்பாள், கைகேயியின்பால் ஓடிவந்து தசரதன் செய்த வஞ்சனையைப் புகன்று, நின்மகன் பரதனுக்கு முடி சூட்டுமாறு முயல்க, என்று பரிந்துகூற, அதுகேட்ட திருந்திய உள்ளமுடைய கைகேயி, அவளைச் சினந்து, "........நிறந்திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்—திறந்திறம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர், மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ ?" இராமன் மூத்த குமாரன் அவனுக்கே முடிசூடும் உரிமை உண்டு, அது என்றும் எங்குமுள்ள வரன்முறை. ஆதலால் பரதன் இளையனாகலின் நீ கூறுதல் கூடாது என மறுத்து விட்டனள். தன் எண்ணம் பலியாமற் போவதை யுணர்ந்த கூனி, அவட்கு, இளையவன் முடிசூடலும் தகுதியும் வழக்கமும் உடையதே யாகுமென்று பொய்க்காரணங் கொண்டு போதித்துச் சாதிக்கின்றாள்.

மூத்தவற் குரித்தர செனின் முறைமையி னுலகங்
காத்த மன்னன் னிளையனன் றோகடல் வண்ணன்
எத்து நீண்முடி புனைவதற் கிசைந்தன னென்றால்
மீத்தருஞ் செல்வம் பரதனை விலக்குமா றெவனோ?

அம்மா! கேட்டி! 'மூத்தவனிருக்க இளையவன் முடிசூடல் வழக்கமன்று? என்பையாயின், எனக்கோர் ஐயப்பாடு நிகழுகின்றது. அஃதாவது, நம் சக்கரவர்த்தியாாகிய தசரதரைவிட இராமன் மூத்தவனோ? என்று (தகப்பனுக்கு

மகன் மூத்தவனுதல் எங்ஙனம்?) வயதில் மூத்த பிதாவின் கண் முன்னே அவரின் இளைய இராமன் முடிசூட உடன் பட்டானென்றால் அவ்வாறே. மூத்த தமையனாகிய இராமன் முன்பு இளையோனாகிய பரதன் மகுடம் புனைதலில் இழுக்கென்னே? என்று துணிந்துரைக்கின்றாள். இங்கே, மூத்தவன் இளையவன் என்பது உடன் பிறந்தோரைக் குறிப்பதாகவும், அம்முறையில் தான் கூறும் காரணம் முற்றும் முரணுமென்று கருதி, அம்முறைமையைப் பொதுவாகக் கொண்டு தந்தைக்கும் மைந்தனுக்கும் மாற்றிக் குழப்பி, தகப்பனிருக்க மகன் முடிசூடலில் மூத்தவன் இளையவன் என்னும் முறை மாறுபடுவதைக் குறித்துச் சமாதானம் காட்டித் தன் வழியே கைகேயியைத் திருப்பி விட்டனள் அக்கூனி; என அவள் சொற்றிறத்தைத் தமது மதிநுட்பஞ் செறிந்த சொல்வன்மை தோன்ற விளக்குகின்றனர். பின், சுந்தர காண்டத்தில், இராமனால் ஏவப்பட்டு இலங்கைபுக்குச் சீதையோடு கூறுவன கூறித் தெருட்டி அவளுரைத்தவற்றை மனங்கொண்டு திரும்பி அசோக வனத்தை அழித்து அட்சய குமரன் முதலான வீரர்களைக் கொன்று இந்திரசித்தன் பாசத்தாற் பிணிப்புண்டவனாக நடித்து இராவணன் திருமுன்பு வாலை வளைத்துச் சுற்றிய உயர்ந்த அணைமேல் வீரம் பொலிய விளங்க வமர்ந்த அநுமனை நோக்கி, இராவணன், நீ யாவன்? என, யான் இராமதூதன் என்று கூறிய ஆஞ்சநேயன், "தூதனுயின் வந்து தூது கூறுவதன்றோ முறை. அங்ஙனம் செய்யாது, அசோக வனத்தை அழித்தும், என் படைத்தலைவரையும் மகனையும் கொன்றும் பின் பிடிபட்டு இங்கு வருதல் தகுமோ? என வினவிய அவ்விராவணற்கு விடை பொருந்தக் கூற முயல்கின்றவன்,

> காட்டு வாரின்மை யிற்கடி காவினை
> வாட்டினே னெனைக் கொல்ல வந்தார்களை
> வீட்டி னேன்பின்னு மென்மையி னுலுன்றன்
> மாட்டு வந்தது காணு மதியினுல்.

என்று மொழிவானுயினன்.

அரக்கர் அரசே! நன்று வினவினை; யானே இந்நகர்க்குப்

புதியவன். உன்னை என்போன்ற எளியோர் ஊனல் துணை யின்றி அமைவதன்று. நின்னை எனக்கு அறிமுகம் செய்விக்க உதவி வேண்டியும் பெருமையால், அதனைப் பெறுதற்குத் தலைக் கீடாக எதிர்தோன்றிய அசோக வனத்தை அழிக்கத் துணிந் தேன்; அங்குத் தலைப்பட்டவர்கள், நீ யாவன்? ஏன் இவ் வனத்தை யழிக்கின்றனை யெனக் கேட்டாரிலர். என்னோடு போர் புரிந்து என்னை வதை செய்ய முனைந்து சினந்து பல் வகைப் படைக்கலங்களை வழங்கிப் பொருவாராயினர். அட! என்னை வாய்ப்பிறப்பு விசாரித்து இன்னான், இன்ன காரியத் துக்கு வந்தானென்று அறியாது கொல்லவந்த இவருடன் என் வரலாறு கூறுமுன் தலை தடுமாறிப் போமே என்ற அச்சம்பற்றி என் ஆருயிர்காக்குந் தலைக்கடனை மேற்கொண்டு பொருதாரோடு பொருதேன். அவர்களின் ஆராயாமையும், பொறுமை யின் மையும் மடமையுமே கூற்றாக நின்று அவர்களைக் கொன்றது. நல்ல வேளையாக, நின்மைந்தன் இந்திரசித்து, என்னை மிக மெல் லிய பாசமொன்றால் வணக்கிப் பிணித்து நின்பாற்றந்து, "...........சிவனெனச் செங்கணா னென்னச் சேவகன்—இவ னென உனக் கெடுத்துக் கூறி அறிமுகப்படுத்தி உதவி புரிந்தன னாதலானும், நீயும், என் வரலாறு கூறுகென, வினவுதலானும் என் கருத்தை யிப்போது சமயம் வாய்த்ததாகலின் வந்த காரி யத்தை வாய்விட்டுச் சொல்லலானேன். உனது சீரிய கூரிய மதிவன்மையால் என் உண்மையை நேர்பெற அறிவாயாக" என்று மொழிந்து தன்மேற் குற்றமில்லாதவாறு காரணங் கற் பிக்கின்றான், எனக் காட்டுகின்றார். இங்ஙனம் அவ்வக் கதா பாத்திரங்களின் கூற்றுக்களை அவரவர் கருத்தோடு துவக்கிக் கற்போர் அஃது நியாயமே என்று கொள்ளுமாறு திறம்பட மெய்ப்பித்துக் காட்டும் கவிச் சக்கரவர்த்தியின் புலமை தமிழக முள்ளவரையும் பாராட்டப் படுவதோர் தலைப்பாடுடையதே யாமென்க.

(தொடரும்.)

சென்ற திங்கள் வெளியீட்டில் கண்ட பிழைதிருத்தங்கள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 554. | 18. | தொடங்கி | தொடங்கினாய் |
| 556. | 18. | உருவம் போலிகள் | உருவப் போலிகள் |
| 558. | 27. | வரைந்திருக்கின்றன | வமைந்திருக்கின்றன |
| 559. | 2. | அவற்கு | அவட்கு |
| ,, | 16. | கிட்டுமெனின் | கிட்டுமென்பதால் |

என்று திருத்தி வாசிக்க.

# கருமை

(545-ம் பக்கத் தொடர்ச்சி)

(திருக் கபசம் எழுதியது)

ஆண்டின் ஒளிப்பகுதியு மிருட்பகுதியு மாகிய ஞாயிற்றின் வடதிசைச் செலவும் (உத்தராயனம்) தென்றிசைச் செலவும் (தக்ஷிணாயனம்) முறையே இயக்கத்திற்குந் தூக்கத்திற்குங் காலங்களா யமைந்திருப்பதைப்பற்றி இவ்வுரையின் முந்திய பகுதியில் விரித்துரைக்கப் பட்டது. ஒளியுமியக்கமு முயிரு மிணைந்து நிற்பதையும், இருளுந் தூக்கமு முயிரின்மையு மொற்றுமைப் படுதலையும் வேறொரு வகையால் தெளியக்காண லாம். ஞாயிற்றைச் சுற்றிவருகின்ற நிலவுருண்டையின் நடுப் பகுதியில் வேறிடங்களைக் காட்டினு மிகுந்த வொளிபடுகின்றது. ஏனெனின், பகலோன் கதிர்கள் நேராக வீண்டு வந்து படு கின்றன. நிலவுருண்டையின் படங்களில் பரிதிக்கு நேராக விருக்கின்ற இந்நடுப் பகுதியைக் காட்டுதற் கொரு தடிப்பான கோடிட்டிருக்கும். இது வையகத்தை வடபாதி, தென்பாதி யென விருசரி பிரிவாய் வகுத்தலின் நடுக்கோடு (Equator) எனப்படும். இந் நடுக்கோடு தென்னமெரிக்காவின் மேற் பாகம், ஆப்பிரிக்காவின் மையம் ஆகியவற்றினூடே யோடி, இந்தியாவிற்குத் தெற்கே சிறிது சேய்மையிற் செல்கின்றது. செங்கதிரோன் சாலக் காய்கின்ற விப்பகுதியில் நிலைத்திணை யுயிர்களு மியங்குதிணை யுயிர்களு மிகப் பெருகித் தோன்று கின்றன. உயிர்நூல் வல்லார் தமதாராய்ச்சியைச் செவ்வன நிறைவேற்ற நடுக்கோட்டினுள்ள நாடுகளுக்கே செல்கின்றனர். இக்கோட்டை விட்டு வடக்கே செல்லச் செல்லச் சிறிது சிறி தாய் வெப்பங்குறைகின்றது. வெப்பமு மியக்கமு மொன்றே. வெப்பங் குறையக் குறைய உயிர் வகைகளின் பெருக்கஞ் சுருங்கிக் கொண்டே வருகின்றது. கடைசியில் வையகத்தின் வடவிறுதியை (உத்தர துருவம்) அணுகுங்கால், திமிங்கிலம், சீல் (Seal) என்ற நீர் வாழ் விலங்குகளும், வெண்கரடி (Polar

Bear), பனிமான் (Rein-deer) ஆகிய நிலவிலங்குகளும், இரண்டு மூன்று பறவைவகைகளும், நாலடி யுயரமேயுடைய சிறிய மக்களுந் தவிர வேறொன்றுங் காணப்படுவதில்லை. இதற்குமேல் வடக்கே உறைபனிப்பாழ் நிலமே யுளது. நடுக் கோட்டை விட்டுத் தென்முகஞ் சென்று பார்க்கிலும், ஏறக் குறைய முற்கண்டவாறே உயிர்களின் வகையுந் தொகையுஞ் சுருங்குகின்றன. இங்ஙனமே, வெப்ப மிகுந்த மலைகளினடிப் பாகத்திற் பலவகையுயிர்களுள. உயர வேற வேறத் தட்பம் பெருகுவதா லுயிர்வகைகள் குறைகின்றன. இமய மலையின் முடிகளில் வையகத்தின் வடவிறுதியிலுந் தென்னிறுதியிலு முள்ள குளிரு முறைபனியு முயிர்ச்சுருக்கமுந் தோன்று கின்றன. ஒளியும் வெப்பமு முயிரு மொன்றை யொன்று பிரி யாத் தன்மைய வென்பதிதனு லினிது விளங்குகின்றது.

நிலவுருண்டை சுழன்று ஞாயிற்றைச் சுற்றிவரு நெறியில், சில நிலைகளில் மிகுந்த வெளிச்ச மதன்மேல் வீசுகின்றது; சில நிலைகளிற் குறைந்தவொளி யதன்மேற் படுகின்றது. மிகுந்த வொளி வீசுங்காலத்தை நாம் வேனிலென்று சொல்கின்றோம்; குறைந்த வெளிச்சம் படுகின்ற காலத்தைக் குளிர்காலமென்று சொல்கின்றோம். நிலவுருண்டை நேராக நின்று ஞாயிற்றைச் சுற்றாது, சிறிது சாய்ந்து சுற்றுவதால், எல்லா விடங்களிலு மொரேயளவான வேனிலுங் கூதிரு மிருப்பதில்லை. நடுக்கோட் டை நீங்கி வடக்குந் தெற்குமகன்று போகப்போகக் குளிருட னிருளு மதிகரிக்கின்றது. வையகத்தின் வடவிறுதியில் ஆறு திங்களொரே பகலாகவும், ஆறு திங்களொரே இரவாகவும், ஆண்டிற்கிரு பெரும் பொழுதுகளேயுள. வியத்தகு மிந்நிகழ்ச் சியை நாம் உளத்திற் கோடலு மரிது. விசும்பிலுளார்க்கு ஓராண்டு ஒரு நாளாகு மெனுங் கொள்கை யொன்றிந் நாட்டி லுளதென்று முன்னரெடுத்துக் காட்டப்பட்டது. இக்கொள் கையின்படி, ஆறு திங்கட் பகலு மிரவு முண்டாகின்றன. ஆயின், இந்நாட்டிலுள்ளவர் நுண்மதியாலோ, நுகர்ச்சியாலோ வட விறுதியின் ஆறு திங்கட் பகலையு மிரவையும் பற்றி அறிவுடைய வரா யிருந்தாரென்று நாம் கருதவேண்டும். ஆறு திங்களிரவைக்

கருத்திற் கொள்ளக்கூடிய, அல்லது, நுகர்ந்த மக்கள், இருளை யுங் கருமையையு மெவ்வாறு வெறுப்பரென்பது சொல்வதற் கெளிதன்று. நமது நாட்டில், ஆண்டினிருட் பகுதி நீங்கி, ஒளிப்பகுதி தொடங்குங் காலத்தை மிக நுட்பமாகவரை யறுத்து, அதை மகிழ்ச்சியுடன் மக்கள் வரவேற்கின்றனர். தெய்வங்களின் பொருட்டுக் கொண்டாடப்படும் விழாக்களிற் பெரும்பாலன ஒளிப்பகுதியில், அல்லது, அதற்குச் சற்று முன்பின் நடை பெறுகின்றன. நிலவுமறை நாளிலும் (அமா வாசை) திங்களின் நிழல் ஞாயிற்றை மறைக்கு நேரத்திலும் (சூரிய கிரகணம்), வையகத்தின் நிழல் திங்கள் மேல் விழும் பொழுதினும் (சந்திர கிரகணம்) இந்துக்களென்று தம்மைச் சொல்லிக் கொள்வோர் உணவு மறுக்கின்றனர். மேற்குறித்த நிகழ்ச்சிகளெல்லா மிருளின் பகுதிய வாதலால், இருளை யஞ்சி யே இவ்வழக்கங்கள் எழுந்தன வென்று நினைத்தல் கூடும். நினைப்பின், நீண்டவிருள் குடிகொள்ளக்கூடிய வொரு நாட்டிலி ருந்து இந்துக்களென்போர் வந்திருக்க வேண்டுமென்ற கருத்து எழுகின்றது. இதற் கேற்ப, வையகத்தின் வடவிறுதியிலிருந்து ஆரியர் இந்தியாவிற்கு வந்தனரென்ற கொள்கையைச் சிலர் தழுவுகின்றனர். வையகத்தின் வடவிறுதியி லுயிர் தழைத் தோங்குதற் குரிய நிலைமைகளில்லாமையால், விலங்குகளு மங் குத் தோன்றுவதில்லை; இங்ஙனமாக, தொன்மையில் மக்களங் கிருந்தாரெனலும், ஆண்டிருந்தவர்கள் தென்றிசை நோக்கி வந் தாரெனலும் பிழைக் கூற்றென்று மொழிவோருளர். அறிஞர் மாணிக்க நாய்க்கர், நடுக்கோட்டை யடுத்திருந்த, கடலாற் கொள்ளப்பட்ட பண்டைத் தமிழ் நாட்டில் மக்கட் கூட்ட முதலிற்றோன்றி, பெருகப் பெருக வடக்கே சென்று, வட விறுதியின் தாங்கொணுக் குளிரையு மிருளையுமஞ்சி, மீண்டுந் தெற்கு நோக்கி வந்தது, என்ற கொள்கையை நாட்டுதற்குப் பல சான்றுகள் கூறுகின்றனர். ஆராய்ச்சியில் விருப்ப முடை யோர் கருத்தை இத்தகைய கொள்கைகளீர்க்குமென்பது ஒரு தலை.

(தொடரும்)

தஞ்சை சீனிவாச பிள்ளை

# தமிழ் வரலாற்றின் ஆராய்ச்சி

[திரு. தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் B. A., எழுதியது]

(முன் ௬௧அ-ம் பக்கத்தொடர்ச்சி)

## முத்தமிழ்

சங்கந் தோன்றியபின்னர் முத்தமிழிலும் நூலும் செய்யுளும் இயற்றப்பட்டன என்கின்றீர்கள். நமது நாட்டுச் சாதாரணப் புலவர்கள்போல் தாங்களும் மூன்றுவகைத் தமிழ் இருந்தன என்று எண்ணுகின்றீர்கள்போலும். முத்தமிழ் என்பதன் கருத்து அதுவன்று; அது தமிழியல், தமிழிசை, தமிழ் நாடகம் என்பதாம். இவற்றின் பொருள் தமிழ்மொழியினிலக்கணம், தமிழருடைய இசை, தமிழருடைய கூத்து என்பதாம். இவைகள் மூன்றும் ஆரியமொழியினிலக்கணத்துக்கும், ஆரியருடைய இசைக்கும், ஆரியருடைய கூத்துக்கும் வேறு. அவ் வேற்றுமை தெரிவிக்கவே அவை தமிழியல், தமிழிசை, தமிழ்க் கூத்து எனப்பட்டன. அகத்தியம் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று தமிழையும் கூறும் என்னும் தொல்லாசிரியருரையான் இது நன்கு புலனும். அகத்தியம் மூன்று வகைத் தமிழில் எழுதப்பட்டதன்று; ஒரே தமிழில் எழுதப்பட்டு இயல், இசை, நாடகம் என்னும் மூன்றிலக்கணமுங் கூறுவது. அங்ஙனமே, இசைத்தமிழ் நூல், நாடகத் தமிழ் நூல் என்பன முறையே இசைத்தமிழிலும் நாடகத் தமிழிலும் எழுதப்பட்டனவல்ல—அப்படிவேறு இருவகைத் தமிழில்லை—அவை முறையே தமிழிசையினிலக்கணமும் தமிழ்க் கூத்தினிலக்கணமுங் கூறுவன. இஃது இப்போது இறவாதொழிந்துள்ள அந்நூல்களானும் சிலப்பதிகார உரையில் எடுத்துக் காட்டப்பட்ட அந்நூற் சூத்திரங்களானுமறியப்படும். பதினொன்றும் பக்கத்தில் தாங்கள் எடுத்துக் காட்டிய பேராசிரியருடைய வசனங்கட்கும் இதுவே பொருளாகும். இயற்றமிழ் என்பதற்குத் தமிழ்மொழியினிலக்கண மென்பதே பொருளா

தலை—"இவ்வியலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச் செய்யுளை அடிகள் செய்கின்ற காலத்து இயற்றமிழ் தொல்காப்பியமாதலானும் பிறர் கூறிய நூல்கள் நிரம்பா விலக்கணத்தனவாதலானும் அந்நூலின் முடிபே இதற்கு முடிபென்றுணர்க" என்னும் அடியார்க்கு நல்லார் கூற்று நன்கு தெரிக்கும்.

## இசைநாடகத் தமிழ் நூல்கள்

பதினேழாம் பக்கத்துக் கூறிய இசைநாடகத் தமிழ்நூல்களுள் சச்சபுட வெண்பா, தாள சமுத்திரம், சுத்தானந்தப் பிரகாசிகை முதலிய பழந்தமிழ் நூல்களல்ல. அவற்றின் பெயரே அவை ஆரியக் கலப்பின் பின் தோன்றின என்பதை யுணர்த்தும். பஞ்ச பாரதீயம் என்பது ஒரு பழைய நூல்; ஆயினும் அதுவும் ஆரியக் கலப்பின் பின் தோன்றினதே. பதினறு படலம், சொல்லகத்தியம் என்பவற்றின் பெயரும் யான் கேட்டறியேன். நாடகவியல் என்றென்று இக்காலத்துச் செய்யப்பட்டதுளது. பழையதுமொன்றுண்டோ ? ஆசிரியமாலை என்பது இசைத்தமிழ் நூலுமன்று, நாடகத்தமிழ் நூலுமன்று; அது நற்றிணையும் அகநானூறும்போல அகப்பொருளில் வரும் ஆசிரியப்பாக்களின் தொகுதி.

## தமிழ்ப்பண்

மேற்கூறிய பக்கத்தில் தாங்கள் தமிழ்ப் பண்ணுந் திறனும் இப்போது ராகம் என்னும் பெயரைப் பெற்றுள்ளன என்று கூறுகின்றீர்கள். இக்கூற்றும் ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று. பண் தமிழ் நாட்டிசை; ராகம் வடநாட்டது. சங்கராபரணம் என்னுமிராகம் செம்பாலைப் பண்ணன்று; அப்பண்ணோடு ஒருவாறு ஒத்ததாக, அன்றேல், ஒற்றுமை யுடையதாக இக்காலத்தாரால் கருதப்பட்டதாகும். நீலாம்புரியுமதுவே. தமிழ்ப் பண்ணறிந்தார் இக்காலத்து அரியர். திருவாரூரில் சிலருளர் போலும். கீழ்வேளூர்ச் சொக்கலிங்க தேசிகர் அவருளொருவர்.

## அகத்தியர் மாணக்கர்

இந்தப்பக்கத்தில் அகத்தியர் மாணக்கர் பன்னிருவர்

என்று சொல்லி அவரின் பெயரும் கூறுகின்றீர்கள். அகத்தியர் மாணுக்கர் பன்னிருவர் என்பது புறப்பொருள் வெண்பா மாலைப் பாயிரத்தால் தெரியவருகிறது. அவர்கள் பெயர் எங்கே கூறியுள? தாங்கள் கூறிய புலவருள் அவினயர் அகத்தியர் மாணுக்கராகத் தோன்றவில்லை. மயிலைநாதருரையின்படி அவினயர் சமணராவர். சமண சமயம் அகத்தியர் காலத்திற்ருேன்றவில்லை. ஆதலால், அவினயர் அகத்தியர் காலத்தவரல்லர். இன்று வந்த செந்தமிழில் (செந்தமிழ்-vol-xx, no. 3) "பெயர் விழையான்" என்பவர் பல்காயனுரை "தொல்காப்பியனுரோடு ஒரு சாலை மாணுக்கராய் ஆசிரியர் அகத்தியனுரிடத்தில் கல்வி பயின்ற பன்னிருவருள் ஒருவர்" என்கின்றனர். இந்தப் பல்காயனுர் பெயரைத் தாங்கள் கூறிய பன்னிருவர் பெயருள் காணவில்லை. இதனுல் அகத்தியர் மாணுக்கர் பன்னிருவரையும் எந்த நூலேனும் சந்தேகமற எடுத்துக் கூறவில்லை என்று தெரிகின்றது. (பெயர் விழையான் வியாசம் பிழை பல பொதிந்ததாயுளது. அதனை ஆராய்வதற்கு இஃதிடமன்று.) அன்றி அடியார்க்கு நல்லார் தமது உரைப்பாயிரத்துள் இசை நுணுக்க மியற்றிய சிகண்டியாரை அகத்தியர் மாணுக்கர் பன்னிருவருள் ஒருவரென்கின்றனர். அவர் பெயரும் தாங்கள் கூறிய அகத்தியர் மாணுக்கர் பன்னிருவர் பெயருள் வரவில்லை. இனி, காக்கை பாடினியா ரென்பவர் ஆண்பாலாரா? பெண்பாலாரா? பாடினி என்பது பெண் பெயர். அது காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்பதனுன் விளங்கும்.—பதிற்றுப்பத்து, ஆறும்பத்தின் பதிகம்.

## பன்னிரு படலம்.

"வேந்து விடுமுனைஞர் வேற்றுப் புலக்களவினுதந் தோம்பன் மேவற்ருகும்" என்னும் புறத்திணையியற் சூத்திர வுரையில் இளம்பூரணர் பன்னிரு படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியர் கூறினுரென்றல் பொருந்தாதென்று கூறி அதற்கு நியாயமும் பல எடுத்துக் காட்டுவர்.

இனிப் பன்னிரு படலமியற்றியது அகத்தியர் மாணுக்கர்

பன்னிருவரு மென்பதற்குத் தக்க ஆதாரமில்லை. இது, பாயிர விருத்தியில் சிவஞான முனிவர் "பன்னிரு படல முதலிய நூல்களை வழீஇன என்றிகழ்ந்து, பன்னிரு படலத்துள் வெட்சிப் படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியனார் கூறியதன்றெனவும், தொல்லாசிரியர் வழக்கொடு முரணித் தமக்கு வேண்டியவாறே கூறுப" என்பது இதனைக் குறித்ததாகும். பன்னிரு படலத்து வெட்சிப் படல மியற்றியது தொல்காப்பியர் என்பதற்குத் தக்க ஆதாரமில்லையாயின், ஏனைய பதினொரு படலங்களையு மியற்றிய பன்னொருவரும் அகத்தியர் மாணாக்கரே என்பதற்கு என்ன சான்று உளது?

பன்னிரு படலம் வெண்பாமாலை இயற்றிய ஐயனாரிதனார் காலத்தின்பின் இறந்துவிடவில்லை. அஃது இலக்கண விளக்க மியற்றிய வைத்தியநாத நாவலர் காலத்தும் அதற்குப் பின் சிவஞானமுனிவர் காலத்தும் இருந்ததாகத் தெரிகின்றது.

## தொல்காப்பியத்தின் பிரிவு

தொல்காப்பியர் தமது நூலை எழுத்துச் சொற்பொருளென மூன்றதிகாரங்களாகப் பிரித்ததன் கருத்துச் சொற்பொருள், அல்லது பொருள் என்பதில் உலகத்துப் பொருளெல்லாம் அடங்கும் என்பதன்று. தொல்காப்பியர் தமது காலத்துத் தமிழிற் பரந்து கிடந்த இலக்கியங்களை ஆராய்தற்கு வேண்டிய இலக்கணங்களைக் கூற வந்தவரேயன்றி, உலகத்தினுள்ள பொருள்களெல்லாவற்றையும் ஆராய வரவில்லை. இது, அகத்தியத்தில் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் முத்தமிழிலக்கணமும் விரவிக் கூறப்பட்டமையின், இக்காலத்துச் சில்வாழ்நாட் பல்பிணிச சிற்றறிவினோர் அறியுமாறு இயற்றமிழை மாத்திரம் வேறெடுத்துத் தொகுத்தோதினார் தொல்காப்பியர் என்னும் தொல்லாசிரியர் கூற்றினன் இனிது விளங்கும். தொல்காப்பியர் தமது நூலை எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணியென ஐந்தாகப் பகுக்காததற்குக் காரணம் அக்காலத்தில் அவ்வித பாகுபாடு தோன்றாமையே. அஃதாவது அக்காலத்து எழுத்துஞ் சொல்லும் பொருளு

மன்றி, யாப்பும் அணியும் வெவ்வேறு கூறும் நூல்கள் தோன்ற வில்லை. தொல்காப்பியருக்குப் பிற்பட்டோர் தமிழிலக்கணத்தின் எழுத்துச் சொற்பொருள் யாப்பு என்று நான்காகப் பகுத்தனர். அதற்குச் சூத்திரமுமுண்டு. அவருக்கும் பிற்பட்டோர் எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணியென ஐந்தாகப் பகுத்தனர்.

## அணியிலக்கணம்

இனிப் பஞ்ச லக்கணங்களுள் ஒன்ருகிய அணியிலக்கணம் தொல்காப்பியனுர்க்கு உடன் பாடன்று என்பது சில உரையாசிரியர்களின் கொள்கை யென்று கூறுகின்றீர்கள். இஃது உரையாசிரியர்கள் கருத்தே யன்றித் தொல்காப்பியர் கருத்தன்று. தொல்காப்பியர் காலத்தில் அணியிலக்கணம் வேறு தோன்ற வில்லை. தொல்காப்பியத்தின்பின் தோன்றிய அணியிலக்கண விஷயம் தொல்காப்பியத்திலில்லை யென்பது அதற்கொரு குறை யாகாது. அவ்வாறே, தொல்காப்பியர் காலத்திலில்லாமையால் அவர் கூருதொழிந்த பொருள்களைப் பிற்காலத்துத் தோன்றிய நூல்கள் கூறுவதும் அவற்றுக் கிழுக்காகா. உலகத்தில் ஒரு பொருளேனும் தோன்றும்போது முற்றுருவாய்த் தோன்றுவதில்லை. முதலில் ஒவ்வொன்றும் சிறு குழவியாகத் தோன்றிப் பின்னர் முதிர்ச்சியடையும். அவ்வாறே, உலகத்திற் ருேன்றிய நூற்பொருள்களும் வளர்ச்சி யடைந்து வந்துள்ளன. ஒரு பொருளோடு மற்ருெரு பொருளிடையுள்ள நுண்ணிய வேற்றுமை புலப்பட்ட போது, அதனை யுணர்த்த வெவ்வேறு நூல்கள் தோன்றுவதியல்பே. அவ்வாறு செய்யுளில் பயின்றுவரும் அணி வேறு பிரித்தாராயப்பட்டபோது அணி யிலக்கணமொன்று புதிதாய்த் தோன்றியது. ஆரிய முதலிய பிறபாஷைகளிலும் அணியிலக்கணம் இவ்வாறு பின்னரே தோன்றிற்று என்று தாங்களே கூறுகின்றீர்கள்.

செய்யுளினுள்ள அணி (அழகு) வேறு பிரிக்கப் படாதென்பதும் அதனல் அதற்கு அணியென்னும் பெயர் பொருந்தாதென்பதும் ஏற்றுக் கொள்ளத்தக்க கூற்றுக்களல்ல. அணியென்பது செய்யுளின் அணியை யுணர்த்தும்போது உவம

ஆகுபெயர். மக்களணியும் அணிபோன்றலின் அதுவும் அணி யெனப்பட்டது. உவமம் பொருளோடு எல்லாவற்றினும் ஒத் திருக்க வேண்டுமென்னும் நியதி இல்லை. உவமமாவது பொரு ளோடு சிறிதொத்துச் சிறிதொவ்வா தொழிவது. ஆதலால் சாத்தனுல் அணியப்படும் ஆடையாபரணமும் களப கஸ்தூரி முதலியனவும் சாத்தனில் வேருவது போல, செய்யுளின் அணி அதனின் வேருதல் வேண்டுவதன்று.

இனி அணியிலக்கண நூலார் அணிகளை முப்பத்தைந் தென்றும், நூறென்றும், நூற்றிருபத்துநான்கென்றும் பல வாறு கூறுதலும், ஒருவர் அணியென்று கூறியதை மற்றொரு வர் மறுத்தலும், ஒருவர் ஓரணிக்கு ஒரு பெயர் கொடுக்க மற் ருெருவர் அதற்கே வேறு பெயர் கொடுத்தலும் அணியிலக்க ணம் ஒரு நூலாகாதென்பதற்குத் தக்க நியாயமாகா. இவ் வேறுபாடுகளெல்லாம் அணியிலக்கண வளர்ச்சிக்கண் தோன்றி யவை. எழுத்திலக்கணம் சொல்லிலக்கணங்களினும், பெரும் பான்மை பொருளிலக்கணத்தினும் இவ்வகை வேறுபாடுகள் காணப்படும். யாப்பிலக்கணத்தினுமுள வென்பது முன்னர்த் தளையைப் பற்றியும் பாவினங்களைப் பற்றியும் கூறுவதனுல் புல னகும்.

## தோல்காப்பியர் காலம்

"தொல்காப்பியர் கி. மு. மூன்றும் நூற்ருண்டுக்கு முன் இருந்தவர் என்று கொள்ளத்தகுந்த காரணங்களுள" என்று மாத்திரம் சொல்லுகின்றீர்களன்றி அக்காரணங்களை யெடுத் துரைத்தீர்களில்லை. தொல்காப்பியர் கிறிஸ்து பிறக்க இரண் டொரு நூற்ருண்டுகளுக்கு முன் இருந்தவரென்று பலரும் நம்புகின்ருர்கள். ஆயினும் எக்காரணங் கொண்டு அவ்வாறு நம்புகின்ருர்களென்பது அவர்க்கே தெரியாது. ஆகையால், அக்காரணங்களைத் தாங்கள் எடுத்துரைத்திருக்க வேண்டிய தவசியம்.

## செய்யுளுறுப்பு

தொல்காப்பியர் தளையை ஒரு செய்யுளுறுப்பாகக்கொள்ள வில்லையென்று கூறுகின்றீர்கள் "மாத்திரை எழுத்தியலசை

வகை யெனுஅ" என்றற் றொடக்கத்துச் சூத்திரத்தில் தொல் காப்பியர் தளையை யெடுத்துக் கூறுதது மெய். ஆயினும் செய் யுளியல் 33-ம் சூத்திரத்தில் "அடி யுள்ளனவே தலை யொடு தொடையே" என்று தளை கூறி, அவற்றின் பேதங்களாகிய ஆசிரியத்தளை, வெண்டளை, கலித்தளை முதலியவைகளை "ஆசிரி யத் தளை யென்றறியல் வேண்டும்" என்றும், "வெண்டளை விரவி யும் ஆசிரியம் விரவியும் என்றும்" என்றும், "கலித்தளை யடி வயினேரீற்றியற்சீர் நிலைக் குரித்தன்று" என்றும் 56.63,25-ஞ் சூத்திரங்களில் எடுத்தோதினர். இவற்றால் தொல்காப்பியர் தளை கொண்டனரென்பது நன்கு புலப்படும்.

மற்று அவர் தளையை ஒரு முக்கியமான செய்யுளுறுப் பாக எடுத்துக் கூறுததற்கு ஒரு காரணமுண்டு. அஃதியா தெனின், தொல்காப்பியர் காலத்துத்தமிழில் வழங்கிய பாக்கள் ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சியென்னும் நான்குமே. இவைக ளெல்லாம் ஆசிரியச்சீர், வெண்சீர், வஞ்சிச்சீர் என்பனவற்று லாவன. "தன் சீர்தன தொன்றிற்றன்றளையாம்" என்றபடி ஆசிரியச் சீரோடு ஆசிரியச் சீரும், வெண்சீரோடு வெண்சீரும், வஞ்சிச் சீரோடு வஞ்சிச்சீரும் ஒன்றுவது முறையே ஆசிரியத் தளை, வெண்டளை, வஞ்சித்தளை எனப்படும். வெண்சீரோடு வெண்சீரொன்றுமையே கலித்தளையாவது. ஆசிரியப்பா ஆசிரி யச் சீராலாவதென்றும், வெண்பா வெண்சீராலாவதென்றும் வஞ்சிப்பா வஞ்சிச் சீராலாவதென்றும் கொண்டபோது அச்சீர் கள் தளைவதனை வேறுபடுத்து ஆசிரியத்தளை, வெண்டளை, வஞ் சித்தளை யென்று சொல்லல் வேண்டாதாயிற்று. விருத்தந் தோன்றியது தொல்காப்பியர் காலத்துக்குப் பின். விருத்தத் துக்குத் தளை யில்லை. அஃதாவது எல்லாத் தளையும் விருத்தத் தில் வரும். அதுவுமன்றி விருத்தத்தில் இன்ன சீர்தான் வரு மென்ற நியதியுமில்லை. அதனாற் பிற்காலத்தார் ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி முதலியவற்றுக்கு இலக்கணங் கூறு மிடத்துக் குன்றக் கூறல் என்னுங் குற்றம் நிகழாவண்ணம் அவற்றுக்குச் சிறப்பா யுரியதான தளையை விதந்தெடுத்தோதல் வேண்டியதாயிற்று.

செய்யுளில் சந்தம் நோக்கிச் சொற்கள் விகாரமடைவ துண்டாயினும் அவ்விகாரத்தைச் செய்யுளுக் கின்றியமையாத ஒருறுப்பென்று கொள்வது பொருந்தாது. அதனுல் தொல் காப்பியர் விகாரத்தை ஒரு செய்யுளுறுப்பாகக் கொள்ளவில்லை. சொற்களைப் பலவாறு விகாரப்படுத்திச் செய்யுள் செய்தால், அச்செய்யுள் பொருள் புலப்பாடரிதாகிப் பயின்று வழங்காது; உலகத்தாரால் மனமகிழ்ந்து ஏற்றுக் கொள்ளப்படவும் மாட் டாது.

## பாவினம்

இனிப், பாவினம் செய்யுளின் வகையன்றிச் செய்யுளுறுப் பாகாது. இப்பாவினம் பிற்காலத்துத் தோன்றியது. முதலில் தமிழில், ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா வென நான்கு பாக்களே யிருந்தன. விருத்தம் ஆரியத்திலிருந்து தமி ழில் வந்தது. அதனையு மொரு பாவகையாகக் கொண்டு, ஆசிரி யப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, விருத்தப்பா வெனப் பா ஐந்து வகைப்படுமென்று கூருது, இரண்டு சீரான்வரும் விருத்தத்தை வஞ்சித்துறை யென்றும், மூன்று சீரான் வரும் விருத்தத்தை வஞ்சி விருத்தமென்றும், நான்கு சீரான் வரும் விருத்தத்தைக் கலிவிருத்த மென்றும், ஐந்து சீரான்வரும் விருத் தத்தைக் கலித்துறை யென்றும், அறுசீர் முதலியவற்ருன் வரும் விருத்தத்தை ஆசிரிய விருத்தமென்றும் மேற்கூறிய பாக்களின் சீர்நிலைக்கேற்ப அவைகளுக் கினமாக்கினது பிற்காலத்தாசிரியர் செய்த தவறு. அவர்கள் தமிழ்ப்பா நான்கென்று தொல்லா சிரியர் வகுத்த வரையறையைக் கடக்க அஞ்சினர் போலும். இவ்வாறு தொல்லாசிரியர் வகுத்த வரையறையைக் கடக்க வஞ்சி இலக்கணத்திற் றவறியது எழுத்திலக்கணம் சொல்லி லக்கணங்களிலும் பலவுள. பிற்காலத்தாசிரியர் "இனமென்று காட்டிய உதாரணங்கடாம் அவர் சேர்த்த அவ்வப் பாக்கட்கே இனமாகாது ஒழிந்த பாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமாகவும் தாழிசையை விருத்தமாகவும் ஓது தற்கு அவை ஏற்றமையானும், "மூவா முதலா" என்னும் கவி முதலியன தாழம்பட்ட வோசையான் விருத்தமாயும், சீர்வரை

யறையானும் மிகத் துள்ளிய வோசையானுந் துறையாயும் கிடத்தலின் இதனை விருத்தக் கலித்துறை யெனல் வேண்டும்; அது கூறவே, துறையும் விருத்தமும் எனப் பகுத்தோதிய இலக்கணம் நிரம்பாதாமாகலானும் இனமென்றல் பொருத்தமின்று" என்று நச்சினார்க்கினியர் பாவினம் என்னும் பாகுபாட்டின் குறைகளை எடுத்து நன்கு காட்டுவர்.

அகத்தியருக்கும் தொல்காப்பியருக்கும் இனம் உடன்பாடன்று என்று சொல்வது உண்மையாகாது. அவர் காலத்து இப்பாக்களின்மையின் அவர் இவற்றுக்கு இலக்கணங் கூறாராயினர். இதுவே உண்மை. விருத்தங்களைக் கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பாக்களுக்கு இனமென்று கூறுவது முழுதும் தவறு. அன்றியும் இது விஷயத்தில் அகத்தியரைத் தொல்காப்பியரோடு சேர்த்து அவர்க்கும் இது உடன்பாடென்றுவது, உடன்பாடன்றென்றுவது சொல்வதும் தவறு. அகத்தியர் செய்த இலக்கணத்தினை நாமும் கண்டிலம், தொல்காப்பிய உரையாசிரியர்களும் கண்டிலர். அகத்தியர் செய்யுளிலக்கணம் கூறினாரோ என்பதும், கூறினாராயின் தொல்காப்பியர் கூறிய செய்யு ளிலக்கணங்க ளெல்லாம் கூறினாரோ என்பதும் தெரியா. ஆகலான், இவ்விஷயத்தில் அகத்தியர் கருத்து இதுவென்று துணிதல் முற்றவியலாது.

## பாட்டியல்

சங்க காலத்துப் பாட்டியலென்றொரு நூலிருந்ததில்லை. அன்றி அகத்தியர் பாட்டியல் செய்யவுமில்லை. அகத்தியர் மாத்திரமன்று, தொல்காப்பியரும் பாட்டியல் கூறவில்லை. பாட்டியலிற் கூறப்படும் அந்தாதி, கோவை, கலம்பகம், மாலை முதலியன தொல்காப்பியர் காலத்தில் தோன்றவில்லை. அதனால் அவர் அவற்றுக் கிலக்கணங் கூறிற்றிலர். இது "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்ற செய்யுளியற் சூத்திரத்துக்குப் பேராசிரியர் எழுதிய உரையான் நன்கு புலப்படும். பரணர் பாட்டியலென்றொரு நூல் இருந்ததாகத் தெரிகின்றது. அது யாரால் எந்தக் காலத்தியற்றப்பட்டதென்பது தெரியாது. பன்னிரு பாட்டியலென்பது ஒரு தொகை நூல். பன்னிரண்டு

நூல்களிலிருந்து பாட்டுக்களின் இலக்கணங்களை எடுத்துக் கூறும் சூத்திரங்களை ஒன்று தொகுத்தாக்கியது. இதுவும் யாரால் தொகுக்கப்பட்ட தென்பதும் எக்காலத்துத் தொகுக் கப்பட்ட தென்பதும் தெரியா. அச்சிட்ட பன்னிரு பாட்டிய லில் அகத்தியரோடு பதின்மூன்று புலவர்கள் பெயர் காணப்படு கின்றன. அகத்தியர் பெயரும் மற்றையோர் பெயர்போலத் தனியே காணாது அகத்தியர் பாட்டியலென்னும் சொற்றொட ரில் காணப்படுகின்றது. அகத்தியரை நீக்கின், பாட்டியல் கூறிய புலவர் பன்னிருவராவர். இப்பன்னிரு பாட்டியலில் சாதகம் இன்னதென்று கூறும் சூத்திரத்தில் சகாத்தம் என் னும் பதம் வருதலால், இச்சூத்திரம் சகாத்த வருஷம் தமிழ் நாட்டில் வழக்காற்றில் வந்ததன்பின் இயற்றப்பட்டதென்பது நன்கு புலப்படும். சகாத்தம் தமிழ் நாட்டில் வழக்காற்றில் வந்தது ஆறுமேழாம் நூற்றாண்டின் பின் என்ப. இன்னும் பல வடமொழிச் சொற்கள் தொல்காப்பியர் காலத்தில் தமிழில் வந்து வழங்காதன, பன்னிரு பாட்டியற் சூத்திரங்களில் வரு கின்றன. அவை பாலன், குமாரன், அரசன், உதாசினம், பரிதி, இயமன், வருணன், சோமன், அருக்கன், நபுஞ்சகம், நாரணன் முதலாயின. இதனால் பாட்டியல் பிற்காலத்து நூலென்பது நன்கு விளங்கும்.

---

# சிவஞான போதக்கருத்து

## இரண்டாவது சூத்திரம்

### முதலாவது அதிகாரணம்

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B A.]

(சுகுஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

45. இனிச் சித்தாந்த சைவர்கள் அத்துவிதம் என்ற சொல்லின் முன்னுள்ள அகரத்துக்கு வடமொழி இலக்கண வழக்குக்கு இணங்க அன்மைப் பொருள்கொண்டு முதல்வனும்

உயிர்களும் பிரிக்க முடியாத கலப்பின் தன்மைபற்றி இரண்டு அன்று அதாவது ஒன்றாய் நிற்கின்றான் என்றும், அவ்வாறு ஒன்றாய் நிற்பினும் முதல்வனும் உயிர்களும் வெவ்வேறு பொருள்களாதலின் பிரிக்க முடியாத பொருளின் தன்மைபற்றி இரண்டாய் அதாவது வேறாய் நிற்கின்றான் என்றும் கடவுள் உயிர்களுடன் கலந்திருத்தல் மாத்திரமன்றி உயிர்கள் உலகப் பொருளை நுகருதற்கு நுகர்வுப் பொருளிலுங் கலந்து நின்று விளக்கி அவர்களோடு உடன் சென்றியைந்து நுகர்தற் செயலி லும் செலுத்தி நிற்குந் தன்மையால் உடனாய் நிற்கின்றான் என் றும் கூறுவர். அகரத்துக்கு அன்மைப்பொருள் கொள்ளுதல் பற்றி அத்துவிதம் என்னும் சொல்லானது முதல்வன் உயிர்க களோடு கலப்புத் தன்மையால் ஒன்றாய் நிற்கும் நிலையும் பொருட்டன்மையால் வேறாய் நிற்கும் நிலையும் உலகப் பொருள் களை நுகர்தற் செயலிற் செலுத்தி உடனாய் நிற்றலால் உடனாய் நிற்கும் நிலையும் உணர்த்துவ தொன்றாகும். சைவர்கள் இவ் வாறு கூறும் அத்துவிதம் சுத்தாத்துவிதம் என்று கூறப்படும். ஸ்மார்த்தர்கள் தங்கள் அத்துவிதத்துக்குக் கேவலம் என்ற அடைமொழியைச் சேர்த்தும் வைணவர்கள் தங்கள் அத்துவி தத்துக்கு விசிட்டம் என்ற அடைமொழியைச் சேர்த்தும் சைவர்கள் கூறும் அத்துவிதம் கூறப்படாமையால் அஃது அடைமொழி சேர்க்கப்படாத அத்துவிதம் அதாவது சுத்தாத்து விதம் என்று கூறப்பட்டது. சைவர்கள் சுத்தாத்துவிதிகள் என்று கூறப்படுவார்கள். இந்தச் சுத்தாத்துவிதத்தில் கேவ லாத்துவிதிகள் கூறும் ஒன்றாய் நிற்கும் நிலையும் துவிதிகள் கூறும் வேறாய் நிற்கும் நிலையும், விசிட்டாத்துவிதிகள் கூறும் உடனாய் நிற்கும் நிலையும் அடங்கியுள்ளன. இந்த மூன்று கொள்கையர்களும் (வாதிகளும்) சுத்தாத்துவிதிகள் கூறும் மூன்று நிலைகளில் ஒவ்வொன்றையே எடுத்துக் கூறுவர். அவ் வாறு அவர்கள் மூவரும் கூறினும் அவர்கள் கூறும் மூன்று நிலைகளும் சேர்ந்தும்கூட சுத்தாத்துவிதத்துக்கு ஒப்பு ஆகாது. கேவலாத்துவிதிகள் கூறும் ஒன்றாய் நிற்கும் நிலை சுத்தாத்துவிதி கள் கூறும் ஒன்றாய் நிற்கும் நிலைக்குப் பொருந்தி இயைவதா

காது. துவிதிகள் கூறும் வேறாய் நிற்கும் நிலை சுத்தாத்துவிதிகள் கூறும் வேறாய் நிற்கும் நிலைக்குப் பொருந்தி இயைவதாகாது. விசிட்டாத்துவிதிகள் கூறும் உடனாய் நிற்கும் நிலை சுத்தாத்துவிதிகள் கூறும் உடனாய் நிற்கும் நிலைக்குப் பொருந்தி இயைவதாகாது. அவ்வாறு பொருந்தாமை, அம்மூவர்களும் தங்கள் தங்கள் கொள்கையை விளக்கக் கூறும் உவமைகளுக்கும், சுத்தாத்துவிதிகள் கூறும் உவமைகளுக்குமுள்ள வேறுபாடுகளை அறியுமாற்றால் நன்கு விளங்கும். அந்த உவமைகள் கூறி விளக்கப்படும்.

46. கேவலாத்து விதிகள் தங்கள் அத்துவிதக் கொள்கையை விளக்கப் பொற்பணி உவமை கூறுவர். பொன் ஒன்றிலிருந்தே பலவகைப் பணிகள் (ஆபரணங்கள்) செய்யப்படுதல் போல, பிரமப் பொருளொன்றிலிருந்தே உயிர்ப்பொருளும் உயிரில்லாத உலகமும் உண்டாயின என்பது பொற்பணி உவமையாற் பெறப்படும் பொருள். ஒன்பது மாற்றுப் பொன்னிற் செய்யப்பட்ட ஒரு நகையானது ஒன்பது மாற்றுடையதாய் விளங்குமன்றி அதற்குச் சிறிது குறைந்தாவது கூடியாவது விளங்காது. அவர்கள் கூறுகிறபடி நிமித்த காரணாகிய பிரமப் பொருளே முதற்காரணமுமாய் அதனிடமிருந்து உயிர்ப்பொருளும் உயிரில்லாத பொருளும் தோன்றுவனவாயிருந்தால் அந்தப் பிரமப்பொரு ளிடத்திலுள்ள தன்மையை அதன் காரியங்களாகிய உயிரிலும் உயிரில்லாத உலகத்திலும் நாம் காணுதல் வேண்டும். அவ்வாறின்றி பிரமப் பொருள் முற்றறிவுடைய பொருளாயும் உயிர் சிற்றறிவுடைய பொருளாயும் உயிரில்லாத உலகம் அறிவில்லாத பொருளாயும் விளங்க நாம் காண்கின்றோம். மேலும் பொற்பணி உவமை செயற்கைப் பொருள் உவமை இயற்கைப் பொருள் உவமை அன்று. ஆதலின் கேவலாத்துவிதிகள் ஒன்றாய் நிற்கும் நிலைக்குக் கூறும் (உவமை சுத்தாத்துவிதிகள் கூறும்) ஒன்றாய் நிற்கும் நிலைக்குச் சிறிதும் பொருந்தா திருக்கின்றது. ஒன்றாய் நிற்கும் நிலைக்குச் சுத்தாத்து விதிகள் கூறும் உவமை "உடல் உயிர்" என்னும் இயற்கைப் பொருள் உவமை. உடல் உயிர் உவமையானது

உடல் உயிர்கள் இரண்டும் வேறு வேறுயுள்ள தனித்த பொருள்கள் என்பதையும் வேறு வேறு பொருள்களாயிருந்தா லும் பிரிக்க முடியாதபடி ஒன்றுடனொன்று கலந்திருக்கின்றன என்பதையும் நன்கு விளக்குகின்றது. ஆசிரியர் இந்த உவமை யைக் "கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டு" என்ற வெண் பாவில் கூறித் தாம் கூறுகிற ஒன்றாய் நிற்கும் நிலையை நன்கு விளக்குகின்றார்.

47. துவிதிகள் தங்கள் துவிதக் கொள்கையை விளக்க 'இருள் வெளி' என்ற இயற்கைப் பொருள் உவமையைக் கூறு வர். வெளி என்பது ஒளி. முதல்வனும் உயிர்களும் தனித்த வேறு வேறு பொருள்கள் என அவர்கள் கூறுதலை விளக்கு தற்கு இந்த உவமை பொருத்தமாகத் தோன்றினும் முதல் வனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை விளக்குதலில் அது முரண்பாடான கருத்தைக் குறிக்கின்றது. இருள் தோன்றும் பொழுது வெளியும், வெளி தோன்றும் பொழுது இருளும் தோன்றாமலிருத்தல் போல முதல்வனும் உயிரும் ஒருவரோடொரு வர் சேரமாட்டார்கள் என்ற பொருத்த மில்லாத கருத்தை இந்த உவமை குறிப்பிடுகின்றது. அவர்கள் முதல்வனுக்கு உயிர் களிடத்தில் சுத்தாத்துவிதிகள் கூறுகிற நிறைவு (வியாபகம்) கூறுவிடினும் உயிர்கள் முதல்வனுக்குக் கீழ்ப்பட்டும் (Subordinate) அவனைச் சார்ந்தும் (Dependent) உள்ளவர்களென்று கூறுதலால் அவர்கள் கூறுங் கருத்தை விளக்கக்கூட இருள் வெளி என்ற உவமை பொருத்தமுடையதன்று. முதல்வனைச் சார்ந்தன்றி உயிர் தனித்து நில்லாதென்ற கொள்கையுடைய சுத்தாத்துவிதிகள் கூறும் வேறாய் நிற்றல் நிலைக்கும் இந்த உவமை சிறிதும் பொருத்தமுடையதாகாது. ஆதலின் சுத் தாத்துவிதிகள் "கண் அருக்கன்" என்ற உவமையைக் கொள்வர். கண் அருக்கன் உவமையானது கண்ணும் அருக் கனும் (கதிரவனும்) வேறு வேறு பொருள்களாயிருத்தல் போல முதல்வனும் உயிரும் வேறுவேறு பொருள்களென்னும் கருத்தை விளக்குவதோடு கண்ணொளியானது தன்னொளியு டன் அருக்கன் ஒளி கலந்தாலன்றி ஒரு பொருளையும் பார்க்க

இயலாததுபோல உயிர் தன்னுடன் கடவுள் கலந்து இயக்கினு லன்றி இயங்க முடியாதென்ற கருத்தையும் நன்கு விளக்கு கின்றது. ஆசிரியர் "அகரமும் ஏனைய எழுத்துக்களும்" என்ற உவமையைக் கூறிச் சுத்தாத்துவிதிகள் கூறும் வேறாய் நிற்கும் நிலையை விளக்குகின்றார். எவ்வாறு அகரமாகிய நாதம் இயக் கினாலன்றி ஏனைய உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் இயங்காவோ அவ்வாறே முதல்வன் இயக்கினாலன்றி உயிர்களும் உயிரில்லா உலகமும் சிறிதும் இயங்கா என்னும் கருத்தை அகரமும் ஏனைய எழுத்துக்களும் என்ற உவமை நன்கு விளக்கு கின்றது.

48. இனி விசிட்டாத்துவிதிகள் தங்கள் விசிட்டாத் துவிதக் கொள்கையை விளக்க 'சொல்லும் பொருளும்' என்ற உவமை கூறுவர். சொல்லின்றிப் பொருளில்லை, பொருளின் றிச் சொல்லில்லை என்ற காரணத்தால் சொல்லுக்கும் பொரு ளுக்குமுள்ள நெருங்கிய ஒற்றுமையானது தங்களுடைய கடவு ளாகிய திருமாலுக்கும் பசுபாசங்களுக்கும் (உயிர் உலகங்களுக் கும்) உள்ள ஒற்றுமையை விளக்குகிறதற்கும், சொல்லுக்கும் பொருளுக்கும் அத்துணை நெருங்கிய ஒற்றுமை யிருப்பினும், சொல் வேறு பொருள் வேறு என்னும் வேற்றுமையுமிருத்த லால், அந்த வேற்றுமையானது திருமாலுக்கும் பசுபாசங்களுக் கும் உள்ள வேற்றுமையை விளக்குதற்கும் சொல்லும் பொரு ளும் என்ற உவமை பொருத்தமுள்ளதா யிருக்கிறதென்று அவர் கூறுவர். ஒருவன் ஒரு சொல்லைச் சொல்ல அந்தச் சொல்லோடு அதன் பொருளும் உடன் தோன்றுதலால் உடன் றோன்றும் நிலையை அந்த உவமை குறிக்கிறதென்று அவர்கள் கொள்வர். ஆனால், அவர்கள் படைப்புக் காலத்தில் மூலப் பகுதி உருவமாய்த் தோன்றுகிற திருமால் பசுபாசங்களாய்ப் பரிணமிக்கின்றானென்று தங்கள் கடவுளுக்குப் பரிணாமம் **(Materialization)** கூறுதலினால், இந்தச் சொல்லும் பொரு ளும் என்ற உவமை அவர்களுடைய கொள்கையை விளக்கப் பொருந்தியதா யுள்ளது அன்று. ஏனெனில் சொல்லுக்கும் பொருளுக்கும் காரண காரியத் தொடர்பு கூடாது. அதாவது

சொல்லாகிய காரணத்திலிருந்து பொருள் காரியமாய்ப் பிறக்கிறதில்லை. ஒரு சொல்லானது அது குறிக்கிற பொருளை மக்களுக்குப் பழக்கத்தினால் நினைப்பூட்டுதற்குக் கருவியா யிருத்தலன்றிப் பொருளுக்குக் காரணமாக மாட்டாது. இந்த உவமை சுத்தாத்துவிதிகள் கூறும் உடனாய் நிற்கும் நிலைக்குப் பொருத்தமுடையதல்ல. அவர்கள் 'கண்ணொளியும் ஆன்மபோதமும்' (உயிரறிவும்) என்ற உவமை கொள்வர். கண் ஒரு பொருளைப் பார்க்கும்பொழுது அதனுடன் உயிரும் சென்றியைந்து அதனைச் செலுத்தினாலொழிய கண் அப்பொருளைப் பார்க்க இயலாததுபோல ஒரு உயிர் ஒரு நுகர்வுப் பொருளை நுகரும் பொழுது முதல்வன் நுகர்வுப்பொருளை விளக்கியும் அந்த உயிருடன் சென்றியைந்து அதனை அந்த நுகர்வுப் பொருளிற் செலுத்தியும் நின்றாலொழிய உயிர் அந்தப் பொருளை நுகர இயலாது. இந்தக் கருத்தைத்தான் திருமாளிகைத் தேவர் தாம் அருளிச் செய்த கோயில் திருவிசைப்பா பாட்டுக்களில் "நுகருமா நுகரே" "இசையுமா் இசையே" "நணுகுமா நணுகே" முதலிய சொற்றொடர்களாற் குறித்தருளினார். முதல்வன் உயிர்களோடு கலந்து நின்று அறிவிக்கும் வேறு நிலை எல்லா உயிர்களுக்கும் பொதுவாய்ச் செய்யும் பொது நிலையாகும். முதல்வன் ஒவ்வொரு உயிருக்கும் அதனறிவுடன் கலந்து காணும் உடனிலை சிறப்பு நிலையாகும். இந்தக் கருத்துக்களைச் சுத்தாத்துவிதிகள் கூறுகிற கண்ணொளியும் ஆன்மபோதமும் என்ற உவமை நன்கு விளக்குகிறது. ஆசிரியர் 'பண்ணும் ஓசையும்' என்ற உவமையையும் 'பழமும் சுவையும்' என்ற உவமையையும் எடுத்துக் காட்டு வெண்பாவிற் கூறி, தாம் கூறுகிற உடனாய் நிற்கிற நிலையை விளக்குகின்றார்.

50. இனி, முதல்வனுக்கும் உயிர்களுக்குமுள்ள அத்துவிதத் தொடர்பில் ஒன்றாய் நிற்கும் நிலை, வேறாய் நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலை ஆகிய மூன்று நிலைகளும் அடங்கியுள்ளன எனக் கூறுதல் பன்முடிவுக் கொள்கையர் (அநேகாந்த வாதிகள்) கூறுகிறபடி பன்முடிவுக் கொள்கையாக முடியாதா எனில் முடியாது; காரணங் கூறுதும். வழி நூலாசிரியர் தாம் அருளிச்

செய்த சிவஞான சித்தியார் ௧-வது சூத்திரம் ௬௨-வது செய்யுளில் வெளியிட்ட கருத்துகளாவன :—" முதல்வனோடு பிரிப்பின்றி நிற்கின்ற சிவசத்தியின் சொரூபம் யாதெனில், உயிர்கட்கு அனுக்கிரக மாத்திரங் குறித்துப் பொது வகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானம் ஒன்றே யாம். அதுவே பராசத்தி எனப்படும். அந்த ஞானம் உயிர்கட்கு மல பாகம் வருவித்தற் பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்பு வகையான் வியாபாரிக்குங்கால் ஒரு கூற்றானே திரோதான சத்தியென நின்று இச்சாஞானக் கிரியையென முத்திறப்பட்டு வியாபாரிக்கும் ஞானம் எவ்வாறுளதோ அவ்வாறே இச்சை கிரியைகளும் நடத்தலின், இச்சை கிரியைகள், ஞானத்தின் விசேடங்களே யன்றி வேறல்ல. காரியத்தால் அனேகமாகிய சென்னி முதலிய வியாபார சத்திகளெல்லாம் பராசத்தி ரூபமாகிய தடைசெய்யா ஞானம் ஒன்றான் உளவாவன என்க ". இங்ஙனம் கூறியவாற்றால் முதல்வன் தனது மறைப்பு அருள் வலியினது (திரோதான சத்தியினது) மூன்று கூறுகளாகிய வேட்கை வலி (இச்சா சத்தி) அறிவு வலி (ஞான சத்தி) செயல் வலி (கிரியா சத்தி) என்னும் மூன்று வலிகளாலும் உயிர்கள் பொருட்டு அவைகளோடியைந்து நின்று ஐந்தொழில் செய்கின்றான் என்பது பெறப்படுகின்றது. முதல்வன் தனது வேட்கை வலியால் உயிர்களோடு இயைந்து நின்று பேரிரக்கங் கொண்டு அவைகளினுடைய நலத்தின் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு தன்னுள்ளே நோக்கி நிற்றல், ஒன்றாய் நிற்கும் நிலையும், தனது அறிவு வலியால் அவ்வாறு நோக்கி அறிந்தவாறு உடல், உட்கரணம் உலகம் நுகர்பொருள்களை (தனுகரண புவன போகங்களை) மாயையிலிருந்து பருமையாக (தூலமாக) வெளிப்படுத்தி நிறுத்துதலும் அப்படிச் செய்தற்குள்ள தன் கருத்தை உயிர்களுக்கு வேதாகம முதலிய நூல்களின் வழியாய் அறிவித்தும், உயிர்கள் உண்ணின்று அறிவித்தும் நிற்றல் வேறாய் நிற்கும் நிலையும், தனது செயல் வலியால் உயிர்கள் நுகர்வுப் பொருள்களை நுகருமாறு நுகர்வுப்பொருள்களிற் கலந்து நின்று விளக்கியும் உயிர்களுடனியைந்து நின்று

நுகர்வுப் பொருளிற் செலுத்தியும் நிற்றல் உடனுய் நிற்கும் நிலையும் ஆகின்றன. மேலே 31-வது பகுதி (Para.) யிற் கூறப் பட்ட நுண்மை ஐந்தொழில் பருமை ஐந்தொழில் மிக்க நுண் மை ஐந்தொழில் என்ற மூன்றும் முறையே இந்த வேட்கை வலி அறிவு வலி செயல் வலிகளின் தொழில்களென நாம் ஊகித்து அறிந்து கொள்ளலாம். ஆகவே முதல்வன் செய்யுந் தொழில் முத்திறப்பட்டு ஒரு முடிவான பயனையே உயிர்களை அடையச் செய்வதாதலின் அத்துவித இலக்கணமும் பன் முடிவுக் கொள்கை யாதலின்றி ஒரு முடிவுக் கொள்கையாக முடியுமென அறிக.

51. மேலே கூறிய உண்மையை நாம் உலக நிகழ்ச்சிகளி லுங் காணலாம். முதல்வனைப் போல மக்களும் வேட்கை, அறிவு, செயல் வலிகளை உடையவர்கள். ஆனல் முதல்வனுக்கு அவ்வலிகள் மலத்தாற்றடைப்படவில்லை; மக்களுக்கு அவ்வலி கள் மலத்தாற் றடைசெய்யப்பட்டுள்ளன. மக்களும் எந்தக் கருமத்தையும் தங்களுடைய தடைப்பட்ட வேட்கை அறிவு செயல் வலிகளாலேயே செய்கின்ருர்கள். எடுத்துக் காட்டாக ஒரு நாட்டிற்குத் தலைவனுயுள்ள அரசன் ஒருவன் தன் கீழ் வாழுங் குடிகளுக்கு அவர்கள் நிலைமை நோக்கி யாதாமொரு நலஞ்செய்தற் பொருட்டு தன் அமைச்சர்களுடன் செய்யத் தக்கன யாவை எனத் தனக்குள்ளே வகையறச் சூழ்ந்து துணிந் தும், அவ்வாறு சூழ்ந்து துணிந்த கருமங்களை, தன் குடிகளுக்கு நேரேயும் தன் பணியாளர் வழியாயும், பத்திரிகைகள் வழி யாயும் வெளிப்படுத்தி அறிவித்தும் அறிவித்தபடி குறித்த கரு மங்களைக் குடிகளுக்குத் தன் பணியாளர்களால் அவர்களுடன் இயைந்து நின்று செய்யும்படி செய்வித்தும், தன்னுடைய வேட்கை வலியால் குடிகளுடைய நலத்தை அவர்கள் மேலுள்ள அன்பால் தனது நலமாகக் கருதி ஒன்றுபட்டு நிற்கும் ஒன்ருய் நிற்கும் நிலையையும் தனது அறிவு வலியால் அவர்களுக்கு அறி வித்து வேருய் நிற்கும் நிலையையும் தனது செயல் வலியால் அவர்களோ டொருங்கியைந்து நின்று உடனுய் நிற்கும் நிலையை யும் உடையவனுகின்ருன். மேலே, வேட்கையும் செயலும்

அறிவின் சிறப்புகளே (ஞான விசேடங்களே) என்று கூறியபடி வேட்கை வலியால் ஒன்றாய் நிற்கும் நிலையும் செயல் வலியால் உடனாய் நிற்கும் நிலையும் உண்மையில் அறிவு வலியினது சிறப்பு நிலைகளே யாம். அரசனுக்குத் தன் குடிகள் மேலுள்ள வேட்கையும் (அன்பும்) செயலும் அவனுடைய அறிவின் தன்மையைப் பொறுத்தே யுள்ளது. அரசன் இவ்வாறு தன் குடிகள் நலத்தின் பொருட்டு ஒரு கருமஞ் செய்தலினால் மூன்று முடிபுகளைத் தனது உள்ளத்தில் உடையவனாகான் அவனுடைய தொழிலானது இயற்கையா யுள்ளனவாகிய வேட்கை அறிவு செயல்களால் மூன்று திறப்பட்டுக் குடிகளுக்கு ஒரு முடிவான பயனையே அடையச் செய்கின்றன என்பது வெளிப்படை. இந்த முறைமையிலே இக்காலத்தில் அரசியல் சட்டங்களும் செய்யப் படுகின்றன.

52. அத்துவிதத் தொடர்புக்கு மூன்று நிலைகள் கூறப் படுதலால் அது மூன்று முடிவுகளை உடையதாகாது என்னுங் கருத்தை மாணக்கருக்கு நன்கு உணர்த்துதற் பொருட்டே, ஆசிரியர் மூன்று நிலைகளுக்கும் உவமைகளாக வேறு வேறு எடுத்துக் காட்டு (உதாரணம்) கூறினபின், மூன்று நிலைகளுக் குஞ் சேர்ந்து அரக்கும் கற்பொடியும் என்ற ஒரு எடுத்துக் காட்டை உவமையாகக் கூறியருளினர்.

53. மேலும் முதல்வன் உயிர்களுடன் ஒன்றாய் நிற்கும் நிலையினால் அவைகளை நிலைத்திருக்கும்படி செய்கின்றான்; வேறாய் நிற்கும் நிலையினால் அவைகள் அறியும்படி அறிவிக்கின்றான்; உடனாய் நிற்கும் நிலையினால் அவைகளை நுகர்வுப்பொருளை நுகருமாறு நுகர்வுப் பொருளிற் செலுத்துகின்றான். இவ்வாறு உயிர்கள் நிலைத்திருத்தற்கும் அறிதற்கும் நுகர் பொருளிற் செல்லுதற்கும் முதல்வனுடைய உதவி இன்றி அமையாது வேண்டப் படுதலின் இம்மூன்று நிலைகளில் ஒன்று இல்லையாயினும் இரண்டில்லையாயினும் அவை தங்களுடைய தடைப்பட்ட வேட்கை அறிவு செயல்களால் உலகிற் றங்கள் கருமங்களைச் செய்து திருத்தமடைந்து உலகவாழ்வினாலாகிய பயனைப் பெறமுடியாது. இதனால் மூன்று நிலைகளில்

ஒவ்வொரு நிலையை மாத்திரம் தங்கள் கொள்கையாகக் கொள்ளு கிற ஸ்மார்த்தர்களுடைய கேவலாத்துவிதமும் (Monism) மாத்துவர்களுடைய துவிதமும் (Dualism) வைணவர்களுடைய விசிட்டாத்துவிதமும் (Qualified Dualism) எவ்வாறு உண்மைக்குப் பொருந்துவனவல்ல என்பது எளிதில் அறியப்படும்.

54. மூன்று நிலைகளில் ஒவ்வொரு நிலையை மாத்திரம் கொள்ளுதல் பொருத்தமில்லை என்பது ஒக்கும்; மூன்று நிலைகளும் சேர்ந்து சுத்தாத்துவிதக் கொள்கைக்கு ஒப்பாகுமென்று கூறுதல் பொருந்தாதோ எனின் பொருந்தாது. காரணங் கூறுதும். சைவசமயத்திற் கூறப்படும் சுத்தாத்துவிதச் சிறப்பு உண்மையானது முழு உண்மை (Absolute Truth) ஆகும். அது தத்துவங்களில் வைத்து அறியப்படும் உண்மை அல்ல. தத்துவங்களைக் கடந்த நிலையில் (அதீத நிலையில்) வைத்து அறியப்படுவது,

"தத்துவந் தலைநின்ற வர்க்கல்லது
தத்துவ னலன்றன் புகலூரனே"

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுதல் காண்க.

சுத்தாத்துவிதப் பொது உண்மையும் சுத்தாத்துவிதச் சிறப்பு உண்மைக்குப் பொருந்தியுள்ளதாக விருக்கும் தத்துவங்களில் வைத்து அறியப்படும் எல்லாம் குறைவுபட்ட உண்மை (Relative Truth) யாகவே யிருக்கும். தத்துவங்கள் பலவாறுன பருமையும் நுண்மை (Density and Subtility) யுள்ள ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் என மூன்று வகைகளாய்ப் பிரிக்கப்பட்டிருத்தலின் அவைகளில் வைத்து அறியப்படும் உண்மைகளும் பருமை நுண்மைக்குத் தக்கவாறு பலவாறுகக் குறைவுபட்டன வாயிருக்கும் ஒவ்வொரு தத்துவத்திலும் நுண்மை ஏற்றக் குறைவுகளுள்ள பல படிகளுண்டு. தத்துவங்களினது நுண்மை (Subtility) ஏற ஏற அவைகளில் விளங்கும் உண்மையும் ஏற்றமாய் விளங்கும். மேலுள்ள தத்துவமானது அதற்கு அடுத்துக் கீழேயுள்ள தத்துவத்துக்கு உயிராயும் (Life) கீழுள்ள தத்துவமானது அதற்கு அடுத்து

மேலுள்ள தத்துவத்துக்கு உருவமாயும் (Form) இருக்கும். இந்த தத்துவங்களுக்குள் மேலான சிவதத்துவத்தில் வைத்து அறியப்படும் உண்மையே மேலாக விளங்கும் உண்மையாகும். இவ்வாறு, தத்துவங்களில் வைத்து உண்மை அறியப்படுதலின் 'தத்துவம்' (தத்வ) என்ற வடமொழிச் சொல்லானது உண்மை என்ற பொருளிலும் தத்துவதரிசி (தத்வதர்சி) என்ற சொல்லானது தத்துவ ஞானி என்ற பொருளிலும் வழங்கப் படுகின்றன. ஆனால் கேவலாத்துவிதிகளும் துவிதிகளும் விசிட் டாத்துவிதிகளும் மண்முதல் பிரகிருதி (மூலப் பகுதி) யீறாக இருபத்து நாலு தத்துவங்களைக் கொள்ளுகிறார்கள். இந்த இருபத்துநாலு த்துவங்களும் கீழேயுள்ள அசுத்தமாயையாலா கிற ஆன்மதத்துவத்தில் அடங்கும். அசுத்த மாயைக்கு மே லுள்ள சுத்தா சுத்த மாயையாலாகிய வித்தியா தத்துவமும் அதற்குமேல் சுத்த மாயையாலாகிய சிவதத்துவமும் அவர் களுக்கு இல்லை. மூன்று கொள்கையர்களும் ஆன்ம தத்துவத் துக்கு மேல் வித்தியாதத்துவம் சிவதத்துவங்களில் விளங்குகிற உண்மையை அறிய முடியாது. ஆதலின், மூன்று கொள்கையர் களுடைய ஒன்றாய் நிற்கும் நிலையும் வேறாய் நிற்கும் நிலையும் உடனாய் நிற்கும் நிலையும் சேர்ந்த தொகுதி உண்மையும் சுத் தாத்துவிதத்திற்குரிய சிவதத்துவத்தில் விளங்கும் அத்துவிதப் பொதுஇலக்கண உண்மைக்கு ஒப்பாக மாட்டாதென்க.

55. மூன்று கொள்கையர்களும் ஆன்ம தத்துவத்திலடங் கிய இருபத்துநாலு தத்துவங்களில் விளங்கும் உண்மையை அறி கிற காரணத்தால் ஒரே அத்துவித இலக்கணங்கூறவேண்டியது. முறைமையாயிருக்க அவர்களில் ஒவ்வொருவரும் வெவ்வேறு அத்துவித நிலையைக் கொள்ளுதல் எதனால் எனின் அவர்கள் இருபத்துநாலு தத்துவங்களில் வைத்து அறிகிற உண்மையி லும் அவைகளினது ஒவ்வொரு கூறினையே அறிந்து கூறுகிறார் கள். ஒரு மலையினுச்சியில் ஒரு விளக்கு இருக்கிறதாயிருந் தால் அந்த மலையினுச்சிக்கு மூன்று பக்கங்களிலேறிச் செல்லு கிறவர்களும் தங்கள் தங்கள் பக்கத்தில் விளங்குகிற பொருளை மாத்திரம் அறிவார்களே அன்றி, ஒரு பக்கத்தில் ஏறிச் செல்லு

# திருஞான சம்பந்தர் – செந்தமிழ் நாடகம்

[திரு. S. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கள்]

(ஙாசு-ம் பக்கத் தொடர்ச்சி.)

திருஞான சம்பந்தர்:—மன்னவ, மனம் வெறுக்க! வெகுளுதல் ஒழிக! எப்படியும் நன்னெறிப்படுத்தப் பார்ப்போம். நன்றாகக் கற்றிருந்தும், பொறாமையால், தங்களையும் மறந்தன்றோ பேசுகின்றார். அவர்கள் நிலை கண்டு நாம் இரங்க வேண்டுமேயன்றி, வேறென் செய்வது?

அமணர்களை நோக்கி

அன்பர்களே,

இன்னும் உங்கள் விருப்பம் எதுவோ, அதுவே செய்வோம். மனங் கலங்காதீர்கள். ஆர அமரச் செய்வோம். மனதிலுள்ள பொறாமையை விட்டு விடுங்கள். சொல்லுங்கள் உங்கள் எண்ணம்.

அமணர்கள்:—எங்களுக்கென்ன மனக்கலக்கம். என்ன நாங்கள் தோற்றுவிட்டோம். போகட்டும், இன்னும் ஒரு முறை வாது செய்வோம்.

அமணர்கள்:—நாமிருவரும், நம் நம் பொருளுண்மை ஏட்டில் எழுதி, ஓடும் நீராற்றில் இடவேண்டும். ஒழுக்கொடு செல்வது நற்பொருளன்று. எதிரேறிச் செல்லும் ஏடே வெற்றி யுற்றதாகும்.

திருஞானசம்பந்தர்:—நன்று. அவ்வாறே செய்வோம். நீங்கள் எவ்வாறாயினும் மேலேற வேண்டுமென்பதே என் நோக்கம்.

(அமைச்சனார் விரைவில் இவர்கள் நடுவே வந்து நின்று)

குலச்சிறையார்:—(அமணரை நோக்கி) ஐயா,

ஏதாவது ஒரு உடன்படிக்கை செய்துதான், இந்த வாது நிகழ்த்தவேண்டும். ஒன்றுமில்லாது, சும்மா சும்மா இப்படிச் செய்துகொண் டிருந்தால் தெளிவு தான் எப்போ ஆகும்?

அமணர்கள்:—(குலச்சிறையாரை நோக்கி வெகுளியோடு)

ஏ! அறமிலி!

நீ ஏன் கேட்பது? இதோ வேந்தன் இருக்கின்றான்.

உரியது புரிவான். நாங்கள் வாதில் தோற்றால், அவனே உங்களைக் கழுவில் ஏற்றுவன். நீ பேசாது போ.

மன்னவர்:—(வெகுண்டு கூறும் அமணரை நோக்கி)
முடத்தெங்கனையீர்,

வெகுளற்க, சிறிது நினைத்துக்கூறுங்கள். "எண்ணித் துணிவது கருமம்" என்பது மறவற்க. நீங்கள் சீற்றத்தால் இவ்வாறு சொல்லுகின்றீர்கள். மன ஒருமையுற்று, இருந்து, சொல்லுங்கள். (சிறிது நேரங் கழித்து) என்ன உங்கள் எண்ணம்? நீங்கள் சொல்லியபடிதானு? தோற்றால், உங்களைக் கழுவேற்ற வேண்டுவதுதானே? நீங்கள் எப்படியும் வெற்றி பெற்று விடுவீர்கள். இதுவரை தோல்வி இல்லைதானே—

அமணர்கள்:—நாங்கள் சொன்ன சொல் மாற்றுவதன்று. ஒரு சொல்லாளர்கள். இந்தச் சைவர்கள்போல் நிலைமாறல் எங்கட்கில்லை.

மன்னர்:—சரி: பின், எழுங்கள் யாவரும் ஆற்றங்கரை செல்லுவோம்.

## ஆறும் அங்கம் ஆறுங்காட்சி:

இடம் :—வைகையாற்றங்கரை.

காலம் :—மாலைப்போது.

நடர் :—மன்னவர், திருஞான சம்பந்தர், மங்கையர்க் கரசியார், குலச்சிறையார், சிவனடியார்கள், ஊரார்கள், அயலூருள்ளார்கள் முதலியோர்.

திருஞான சம்பந்தர் முத்துச்சிவிகையிலும், மன்னர் குதிரைமீதும், மற்றும் அம்மையார், அமைச்சர் முதலியோர் தத்தம் ஊர்திகளில் ஆற்றங்கரை வந்து நெருங்கினர். ஊர் முழுவதும் மிக்க ஆத்திரத்தோடு வந்து குழுமினர்.

மன்னவர் :—(அமணரை நோக்கி).

அறமறையும் அமணரே,

இது மாரிகால மாதலால், வைகையிலும், பெருக்கு மிகுதியாகத் தானிருக்கின்றது. உங்கள் விருப்பமும், இப்படி நீர் ஓட்டமாக இருக்க வேண்டும் என்பது தானே. நல்லது நீங்

கள் விதித்தபடி உங்கள் ஏட்டை முதலில் இவ்வோட்ட நீரில் விடுங்கள்.

அமணர்கள் :—அப்படியே செய்கின்றோம். (என்று "அத்தி நாத்தி" - எழுதி - விரைவாய் ஒடுகின்ற நீரைக்கண்டும் - ஆசையால் விட்டார்கள். உடனே அந்த ஏடு நீரொழுக் கொடு விரைந்து கடல் நோக்கிச் சென்றது.

மற்றும் அமணர்களை நோக்கி

அடிகளே, என்னே, நம் ஏடுகள் இவ்வாறு ஓடுகின்றன. ஓடிச்சென்று பிடித்தாவது வருவோம். மூல ஏடுகளையல்லவோ இப்படி ஆற்றில் விட்டு விட்டோம். வாருங்கள் ஓடிச்சென்று எப்படியும் பிடிப்போம். (கைக்கெட்டாது - பின் கண்ணுக்குத் தென்படாது ஓடி விட்டது.)

அமணர்களுள் ஒருவர் :—அடிகளே, இனி என் செய்வது? நாம் ஓடுவது முறையன்று. நாமே, முன் சூழ்வும் சொல்லி விட்டோம். மன்னன் ஆணை வழுவாது, சரி மீண்டும் அரசரிடம் சென்று, அந்தச் சிறுவரையும், ஏடு விடச் சொல்லுவோமே.

அமண் குருக்கள் திரண்டு, நெஞ்சில் அஞ்சினரேனும், வெளித் தோற்றத்தில் காட்டாது, மன்னர் முன்னுற்று - நமது சம்பந்தப் பெருமானை நோக்கி—"நீரும் உமது ஏட்டை ஆற்றில் விடும். அஃது என்னவாகின்றது, பார்ப்போம்?

மன்னவர் :—அமணர் மதியின்மை கண்டு, வெகுண்டு, தான் முன் என்னிய தண்டம் புரிய உன்னினர். ஆயினும் பிள்ளையார் திருக்குறிப்பதனை நோக்கினர்.

திருஞானசம்பந்தர் :—மன்னரைப் பழுதற நோக்கினர். (அவர் வினையொப்புக் கண்டு—அவருக்கு அறிவிக்கும் முறையால் பாசுரம் இயற்றினர்.

திருச்சிற்றம்பலம்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசியார் :—(மன்னவரை நோக்கி)
என் உயிர்க் காதல,

பெருந்தவமுடையார் மனம்போல், இந்த ஏடு ஆற்றைக் கிழித்து, எதிரேறிச் செல்வதைப் பார்த்தீர்களா? உங்கள் உடம்பும் நேருற்றது கண்டீர்களா?

மன்னவர் :—மகிழ்ந்து (அமைச்சரை நோக்கி) என்னுயிர்த் தோழ, விரைவில் குதிரைமீது சென்று ஏட்டை எடுத்து வருக.

குலச்சிறையார் :—சரி அப்படியே—(குதிரைமீது ஏறி ஓடல்) பிடிக்க முடியாதது கண்டு—மன்னர்

மன்னவர் :—(திருஞான சம்பந்தரை வணங்கி) எங்கள் தேவே, "ஏடு தங்கும்படி அருள் செய வேண்டும்."

திருஞான சம்பந்தர்:—மன்னர் வேண்டுகோட் கிணங்கி, ஏடு தங்கும்படி "ஏற்றுயர் கொடியினுரைப்" பாடினார்.

திருச்சிற்றம்பலம்

"வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலர் ஏடகத் தொருவனே."
கோடுசந்தனம் அகில்கொண் டிழிவைகை நீர்
ஏடுசென் றணைதரும் ஏடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞான சம்பந்தன்
பாடல் பத்திவை வல்லார்க் கில்லையாம் பாவமே."

திருச்சிற்றம்பலம்

குலச்சிறையார் ஏட்டை எடுத்துத் தலைமேற்கொண்டு வந்து வள்ளல் கழலடி வணங்கி நின்றார்.

திருஞான சம்பந்தர்:—அந்த ஏட்டை எடுத்து யாவருக்குங் காட்டினார். (மன்னன் கூனும் நிமிர்ந்தது.)

மன்னவர்:—(அமைச்சரை நோக்கி)
மதிமிகு அமைச்ச,

இவ்வமணர்கள் - முன்னமே தீ வைத்த பெருங்குற்றமுடையார். பின்னரும் தீங்கு பல ஆற்றினர். தாங்களே

சூழ்வும் கொண்டார்கள். அவர்கள் வாக்குப்படியே முறை செய்து விடுக.

திருஞான சம்பந்தர்:—"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனோடு நேர்."

வேந்தன் முறை செய்தலைத் தடுத்தல் முறையன்று (என்று வாளா இருந்தார்).

குலச்சிறையார்:—அமணம் சூழ்வினை நிறைவித்தார்:

அடிகளே,

நீங்கள் உங்கள் வாயால் கெட்டீர்கள். நீங்கள் சொல்லிய படியே செய்யுங்கள்.

காவலாளரை நோக்கி

தண்டலாளர்பால் இவர்களை ஒப்புவிக்க; அரசன் ஆணைப்படி தண்டனை புரிக.

தண்டலாளர்கள் தண்டம் செய்தல்.

## ஆறும் அங்கம் - ஏழாம் காட்சி

இடம்:—மதுரைக்கோவில்

காலம்—: மாலைப்பொழுது

நடர்:—திருஞான சம்பந்தர் - மன்னவர் மங்கையர்க்கரசியார் முதலியோர்

யாவரும் கோவில் சென்றூர்கள்.

திருக்கோவில் முன்நின்று பெருமான் பாடிய பாசுரம்

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே."

மன்னவர் :—சிவபெருமானை வணங்கி:—

திருவால வாயில் மேவு மன்னனே, அமணர் மாய்கையால் மயங்கி உன்னை அறிந்திலேன். என் பிணி தீர்த்து, ஆட்கொள்ள அருட் பிள்ளையாரைத் தந்தனை. யாவரும் நீறு பூசி நின்றனர். யாவரும் மகிழ்வொடும் தங்கள் தங்கள் இருப்பிடம் சேர்ந்து மகிழ்ந்திருத்தல்.

முற்றும்.

---

Printed by A. Rangaswamy at the Progressive Printers, 2-17, Coral Merchant Street, Madras, & Published by V. Subbiah, for The S. I. S. S. W. P. Society, Tinnevelly, Ltd., Madras.